உ

கணபதி துணை

எட்டுத்தொகையுள் எட்டாவதாகிய

# புறநானூறு மூலமும் உரையும்

**562**



இவை

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி

## டாக்டர் உ. வே. சாமிநாதையரால்

பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்து

நூதனமாக எழுதிய பலவகை ஆராய்ச்சிக்குறிப்புக்களுடன்

சென்னை லா ஜர்னல் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பெற்றன.

மூன்றாம் பதிப்பு

யுவஹு மார்கழி மீ

1935

 [விலை ரூ. 5—0—0.




PRINTED AT
THE MADRAS LAW JOURNAL PRESS,
MYLAPORE, MADRAS.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

---




ட

இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி.

---

அகநா - அகநானூறு.
அடிக் - அடிக்குறிப்பு.
அடியார் - அடியார்க்கு நல்லார்; அடியார்க்கு நல்லாருரை.
அம்பிகாபதி - அம்பிகாபதிகோவை.
அரும்பத - அரும்பதவுரை; அரும்பதவுரையாசிரியர்.
அறநெறி - அறநெறிச்சாரம்.
ஆசார - ஆசாரக்கோவை.
ஆனைக்கா - திருவானைக்காப்புராணம்.
இராசராச - இராசராச சோழனுலா.
இலிங்க - இலிங்கபுராணம்.
இ. வி - இலக்கணவிளக்கம்.
இளம் - இளம்பூரணம்; இளம்பூரணர்.
இறை - இறையனாரகப்பொருள்.
இன்னா - இன்னாநாற்பது.
இனியது - இனியநாற்பது.

குறுந் - குறுந்தொகை.
கூர்ம - கூர்மபுராணம்.
கூவப் - திருக்கூவப்புராணம்.
கேத்திரத் - கேத்திரத் திருவெண்பா.
சங்கர - சங்கரநமச்சிவாயருரை.
சரபேந்திர. குற - சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம்.
சிதம்பரமும்மணி - சிதம்பரமும்மணிக்கோவை.
சிலப் - சிலப்பதிகாரம்.
சிற் - திருச்சிற்றம்பலக்கோவையார்.
சிறப்புப் - சிறப்புப்பாயிரம்.
சிறுபஞ்ச - சிறுபஞ்சமூலம்.
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை.
சீகாளத்தி, சீகாளத்திப் - சீகாளத்திப் புராணம்.
சீவக - சீவகசிந்தாமணி.

ஐங், ஐங்குறு - ஐங்குறுநூறு.
ஐந். எழு, ஐந். எழுபது - ஐந்திணை யெழுபது.
கடவுள் - கடவுள்வாழ்த்து.
கந்த - கந்தபுராணம்.
கம்ப - கம்பராமாயணம்.
கல் - கல்லாடம்; கல்லாடர்; கல்
க. றை - கலித்துறை. [லாடருரை.
கலி - கலித்தொகை.
கலிங்க - கலிங்கத்துப்பரணி.
களவழி - களவழிநாற்பது.
காசிக்கலம் - காசிக்கலம்பகம்.
காஞ்சிப் - காஞ்சிப்புராணம்.
கார் - கார்நாற்பது.
குண்டல - குண்டலகேசி. [பாட்டு.
குறிஞ்சி, குறிஞ்சிப் - குறிஞ்சிப்

சுந்தர - சுந்தரமூர்த்தி நாயனார்.
சூ - சூத்திரம்.
சூடாமணி - சூடாமணிநிகண்டு.
சூளா - சூளாமணி. [யர்.
சே - சேனாவரையம், சேனாவரை
தக்க - தக்கயாகப்பரணி.
தகடூர் - தகடூர் யாத்திரை.
தண்டி - தண்டியலங்காரம். [ணம்.
தணிகை - திருத்தணிகைப் புரா
தணிகையாறு - திருத்தணிகையாற்றுப்படை.
தஞ்சை- தஞ்சைவாணன் கோவை.
தத்துவ - தத்துவராயர் பிரபந்தங்கள். [பது.
திணைமாலை - திணைமாலை நூற்றைம்
திணைமொழி-திணைமொழி ஐம்பது.

---

*நூலுறுப்புக்களின் முதற்குறிப்புக்கள் விரிவஞ்சி விடுக்கப்பட்டன.



தியாக - தியாகராசலீலை.
பரி - பரிபாடல்.

திரி - திரிகடுகம்.
திருக்கண்ணப்பர்- திருக்கண்ணப்ப தேவர் திருமறம்.
திருக்கழுக்குன்ற - திருக்கழுக் குன்றப்புராணம்.
திருக்கழுமலமும்மணி - திருக்கழுமலமும்மணிக்கோவை.
திருச்சந்த - திருச்சந்தவிருத்தம்.
திருச்சிற் - திருச்சிற்றம்பலக் கோவையார்.
திருஞா - திருஞானசம்பந்தர்.
திருநா - திருநாவுக்கரசுநாயனர்.
திருவள் - திருவள்ளுவமாலை.
திருவா - திருவாசகம்.
திருவால - திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்.
திருவானைக்கா - திருவானைக்காப் புராணம்.
திருவிளை - திருவிளையாடல்.
திவ் - திவ்யப்பிரபந்தம்.
தெய்வச் - தெய்வச்சிலையார் உரை.
தே - தேவாரம்.
தொல் - தொல்காப்பியம்.
ந - நச்சினர்க்கினியர், நச்சினர்க்கினியருரை.
நம்பி - நாற்கவிராசநம்பியகப்பொருள்.
நள - நளவெண்பா.
நற் - நற்றிணை.
நன் - நன்னூல்.
நாலடி - நாலடியார்.
நான்மணி - நான்மணிக்கடிகை.
நீதிநெறி - நீதிநெறி விளக்கம்.
நெடுநல் - நெடுநல்வாடை.
நைடத - நைடதம்.
பரிமேல் - பரிமேலழகர், பரிமேலழகருரை.
பழ - பழமொழி.
பாக, பாகவத - பாகவதபுராணம்.
பிங்கலம் - பிங்கலநிகண்டு.
பி - ம் - பிரதிபேதம்.
பிரயோக - பிரயோக விவேகம், பிரயோகவிவேக நூலுடையார்.
பெருமாள் - பெருமாள் திருமொழி.
புறநா - புறநானூறு.
பு. வெ - புறப்பொருள் வெண்பாமாலை.
பெரிய - பெரியபுராணம்.
பெருங் - பெருங்கதை.
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்படை.
பேர் - பேராசிரியம், பேராசிரியர்.
பொருந - பொருநராற்றுப்படை.
மணி - மணிமேகலை.
மதுரை, மதுரைக் - மதுரைக்காஞ்சி.
மயிலை - மயிலைநாதருரை.
மலைபடு - மலைபடுகடாம்.
மாறன் - மாறனலங்காரம்.
மு - முற்றும்.
முத் - முத்தொள்ளாயிரம்.
முதுமொழிக் - முதுமொழிக்காஞ்சி.
முருகு - திருமுருகாற்றுப்படை.
முல்லை, முல்லைப் - முல்லைப்பாட்டு.
மேருமந்தர - மேருமந்தரபுராணம்.
மேற் - மேற்கோள்.
யா. கா - யாப்பருங்கலக்காரிகை.
யா. வி - யாப்பருங்கல விருத்தி.
வாயுசங் - வாயுசங்கிதை.
வி - விசேடவுரை, விருத்தியுரை.
விக்கிரம - விக்கிரமசோழனுலா.
விநாயக - விநாயகபுராணம்.
வி. பா, வில்லி. பா, வில்லி. பாரதம்-

ப, பக - பக்கம்.
பட்டின, பட்டினப் - பட்டினப்பாலை.
பதிற் - பதிற்றுப்பத்து.
வில்லிபுத்தூராழ்வார் பாரதம்.
வீர - வீரசோழியம்.
வெங்கைக் - வெங்கைக்கோவை.

---

உ
கணபதி துணை.

# முகவுரை

திருச்சிற்றம்பலம்.

(தேவாரம்.)

"ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே
அடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே
உருகுவித்தா லாரொருவ ருருகா தாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடா தாரே
பணிவித்தா லாரொருவர் பணியா தாரே
காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே."

அமிழ்திற் சிறந்த தமிழ் மொழியதனை ஒன்பான் சுவை புணர்த் தன்பால் வளர்த்தருள் நச்சும் பெருமை

முச்சங்கத்து

கடைச்சங்கப் புலவர்கள் அருளிச் செய்த *எட்டுத்தொகை நூ

களுள் புறநானூறென்பது எட்டாவதாகும். மற்ற ஏழு நூ

களாவன:—நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்று பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு என்பன.

இவற்றுள் ஒவ்வொன்றும் பலராற் செய்யப்பட்டு

தொழில் அளவு பாட்டு பொருளென்பனவற்றுள் ஒவ்வொ

ரால் தொகுக்கப்பட்டமையின், இவை தொகையென்

பெயர்பெற்றனவென்பர்.

புறநானூறு என்பது கடவுள்வாழ்த்துச் செய்யுள் முதலி

400 அகவற்பாக்களை உடையது. அப்பாக்களுள் முதற் செய்

ளாகிய கடவுள்வாழ்த்துப் பாரதம்பாடிய பெருந்தேவனாரா

மற்ற 399 பாக்களும் முரஞ்சியூர் முடிநாகராயர் முதல் கோவு

கிழார் இறுதியாக வுள்ள புலவர் பலராலும் இயற்றப்ப

டுள்ளன- இதனைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரு இன்னாரின்னாரென்று விளங்கவில்லை. இந்நூலிலுள்ள பாக்க

*இவை எட்டும் அச்சிடப் பெற்றுள்ளன.



னுடைய அடிகளின் சிறுமை பெருமையும் தெரியவில்லை. இது புறப்பாட்டெனவும் புறமெனவும் புறம்புநானூறெனவும் வழங்கும். அகம் புறமென்னும் பொருள்கள் இரண்டனுள் புறத்தால் தொகுக்கப் பெற்றது இது.

அகமாவது ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் தம்முட் கூடுகின்ற காலத்துப் பிறந்து அக்கூட்டத்தின் பின்பு அவ்விருவராலும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய் எப்பொழுதும் உள்ளத்துணர்வாலேயே அநுபவிக்கப்படும் இன்பம்; இன்பம்பற்றி அகத்தே நிகழும் ஒழுக்கத்தை அகமென்றது ஆகுபெயர்; அகம் - உள்.

புறமாவது மேற்கூறிய ஒத்த அன்புடையாராலேயேயன்றி எல்லாராலும் அநுபவித்து உணரப்பட்டு இஃது இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படும் பொருள்; அதில் அறனும்,

பொருளும் அடங்கும்; அறனும் பொருளும் பற்றிப் புறத்தே நிகழு மொழுக்கத்தைப் புறமென்றது ஆகுபெயர்; புறம் - வெளி.

இந்நூல், மேற்கூறிய புறத்தின் பகுதியாகிய வெட்சி முதலிய திணைகளுக்குரிய துறைப்பொருளமைந்த 400 பாக்களையுடைமையின், புறநானூறென்று பெயர் பெற்றது. அத்திணைகளாவன:—வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை யென்பன. திணை - ஒழுக்கம். துறை - மக்களும் விலங்குகள் முதலியனவும் சென்று நீருண்ணும் துறை போலப் பலவகைப்பட்ட பொருளும் ஒருவகைப்பட்டு இயங்குதற்குரிய வழி.

பண்டைக் காலத்தே இத்தமிழ் நாட்டிலிருந்த சேர சோழ பாண்டியர்களாகிய முடியுடை வேந்தர், சிற்றரசர், அமைச்சர், சேனைத்தலைவர், வீரர் முதலிய பலருடைய சரித்திரங்களும் கடையெழு வள்ளல்களின் சரித்திரங்களும், கடைச்சங்கப் புலவர் பலருடைய வரலாறுகளும், அக்காலத்துள்ளாருடைய நடை முதலியனவும், இன்னும் பற்பலவும் இந்நூலால் நன்கு புலப்படும். இந்நூற்செய்யுட்களாற் பாடப்பட்டவர்கள் ஒரு காலத்தாரல்லர்; ஒரு குலத்தாரல்லர்; ஒரு ஜாதியாரல்லர்; ஓரிடத்தாருமல்லர். பாடியவர்களும் இத்தன்மையரே. இவர்

களில் அந்தணர் சிலர்; அரசர் பலர்; வணிகர் பலர்; வேளாளர் பலர்; பெண்பாலாரும் உளர்.

'முன்னா ளிடையே யிந்நா டாண்ட
காவலர் பல்லோர் பாவலர் பல்லோர்
மாசறு தத்தை யாசற விளக்கிச்
சொற்சுவை பொருட்சுவை துவன்றியெஞ் ஞான்றும்
ஒப்புமை யில்லாத் திப்பிய நடையுடைத்
திறப்பா டமைந்தவிப் புறப்பாட் டுக்கள்
தெய்வ வணக்கஞ் செய்யுமி னென்பவும்
அறத்தின் பகுதியை உறத்தெரிப் பனவும்
பாவ வழியை நீவனன் றென்பவும்
இம்மைப் பயனொடு மறுமைப் பயனைச்
செம்மையின் வகுத்துத் தெரிவிப் பனவும்
அந்தண ரியல்பைத் தந்துரைப் பனவும்
அரச நீதியை யுரைசெய் வனவும்
வணிக ரியல்பைத் துணிவுறுப் பனவும்
வேளாண் மாக்களின் றாளாண் மையினை
இயம்பு வனவும் வயம்புரி போர்க்கு
முந்துறு மரசரைச் சந்துசெய் வனவும்
ஒற்றுமைப் பயனைச் சொற்றிடு வனவும்
வீரச் சிறப்பை யாரத் தெரிப்பவும்
இல்லற மாகிய நல்லற முரைப்பவும்
துறவற மதனைத் திறவிதிற் றெரிப்பவும்
மிடித்துன் பத்தை யெடுத்துரைப் பனவும்
வண்மையுந் தண்மையு முண்மையுந் திண்மையும்
என்னு மிவற்றைப் பன்னுகின் றனவும்
அளியையு மொளியையுந் தெளிவுறுப் பனவும்

தம்மைப் புரந்தோர் தாமாய்த் திடவே
புலவர்கள் புலம்பி யலமர றெரிப்பவும்
நட்பின் பயனை நன்கியம் புநவும்
கல்விப் பயனைக் கட்டுரைப் பனவும்
நீர்நிலை பெருக்கென நிகழ்த்து கின்றனவும்
மானந் தன்னைத் தானன் குரைப்பவும்
இளமையும் யாக்கையும் வளமையு நிலையா
என்றே யிசைத்து நன்றேய்ப் பனவும்
அருளுடை மையினை மருளறத் தெரிப்பவும்

b



தாமறிந் தொழுகென் றானுற விதிப்பவும்
அவாவின் கேடே தவாவின் பென்பவும்
இனியவை கூற னனிநல னென்பவும்
உழவின் பெருமையை யழகுற வுரைப்பவும்
நன்றி யறிக வென்றிசைப் பனவும்
கொடுங்கோன் மையினை விடுங்கோ ளென்பவும்
தவத்தின் பெருமையைத் தவப்பகர் வனவும்
மடியெனும் பிணியைக் கடிமி னென்பவும்
கொலையெனும் பகையைத் தொலைமி னென்பவும் நல்லோர்ப் புணர்ந்து
புல்லோர்த் தணந்து
தாழ்வொன் றின்றி வாழ்மி னென்பவும்
சுற்றம் புரக்கு நற்றிற முரைப்பவும்
கற்பின் றிறத்தைக் கற்பிப் பனவும்

மக்கட் பேற்றின் மாண்புரைப் பனவும்
கணவனை யிழந்த மணமலி கூந்தலார்
தீப்பாய் செய்தி தெரிவிப் பனவும்
கைம்மை விரத வெம்மை விரிப்பவும்
இன்னும் பற்பல பன்னு வனவுமாய்ச்
செப்புந ரெவர்க்கு மெய்ப்பிடை வைப்பாய்
அரும்பெறன் மரபிற் பெரும்பயன் றருமே'

என்று ஒருவாறு பொதுப்படத் தொகுத்துக் கூறுவதன்றி இன்ன பாடல் இத்தன்மையது இன்ன பாடல் இத்தன்மைய தென்று தனித்தனியே எடுத்துக்காட்டி இவற்றின் அருமை பெருமைகளைச் சீராட்டிப் பாராட்டுதற்கு ஒரு சிறிதும் வல்லேனல்லேன்.

இச்செய்யுட்கள் நூலாசிரியர் பலருடைய உள்ளத்தையும் உரையாசிரியர் பலருடைய உள்ளத்தையும் தம்வயமாக்கி அவற்றைத் தமக்கு முழுமணிப் பீடிகையாகக் கொண்டு வீற்றிருந்தன வென்பதை, அவரவர் அருளிச்செய்த நூல்களும் உரைகளும் இவற்றின் சொன்னடை பொருணடைகளை இடையிடையே பெரும்பாலுந் தழுவியிருத்தலே தெளிவாகப் புலப்படுத்தும்.

எனக்குக் கிடைத்த ஏட்டுச் சுவடிகளுள் ஒரு பிரதியின் தொடக்கத்தில் 'அறநிலை' என்று வரையப் பெற்றிருந்தது. அப்படியே பொருள்நிலை, இன்பநிலை என்ற பகுதிகள் எந்த எந்தப் பாடலிலிருந்து தொடங்குமோ வென்று தேடிப் பார்த்ததில் ஒரு பிரதியிலும் கிடைக்கவில்லை, ஆனாலும் இந்நூல்

அறநிலை, பொருள்நிலை, இன்பநிலை என்னும் மூன்று பகுதிகளாகப் பகுக்கப் பெற்றிருக்க வேண்டுமென்பது இதனால் ஊகித்தறியப் படுகின்றது.

இந்நூற்கு இலக்கணம் அகத்தியமும் தொல்காப்பியமுமேயென்பதும் இதில் ஒவ்வொரு பாட்டின் பின்னும் எழுதப்பட்டுள்ள திணையும் துறையும் அவ்வப்பாட்டிற்கு ஏற்றனவல்லவென்பதும் நச்சினார்க்கினியர் கருத்து; இது, 'தத்தம் புதுநூல் வழிகளால் புறநானூற்றிற்குத் துறை கூறினாரேனும் அகத்தியமும் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாகலின் அவர்சூத்திரப்பொருளாகத் துறை கூறவேண்டு மென்றறிக' என்று தொல்காப்பியப் புறத்திணையியலில், "கொடுப்போரேத்தி" என்னும் சூத்திர வுரையில் அவர் எழுதியிருத்தலாலும் மேற்கூறிய புறத்திணையியலுரையில் இந்நூற்பாட்டுக்களுட்சிலவற்றை வேறு திணை துறைகளுக்கு உதாரணமாகக் காட்டி அவர் மறுத்தலாலும் துணியப்படும்.

கிடைத்த பிரதிகளுள் ஒன்றிலேனும் இந்நூல் உகூஎ, உகூஅ-ஆம் பாடல்களின் மூலமேனும் உரையேனும் காணப்படவில்லை.

இந்நூற்குக் கிடைத்த உரை பதப்பொருளை இனிது விளக்கி உரிய இடங்களிற் சொற்களை முடித்துக் காட்டி இலக்கணக் குறிப்பையும் திணை துறைகளையும் ஆங்காங்குள்ள பழமொழிகளையும் அணியையும் சொன்னயம் பொருணயங்களையும் புலப்படுத்துவது; இவ்வுரையில் இக்காலத்து வழங்காத சொற்கள் பலவுள்ளன. அன்றியும், இதன் இடையிடையே சிற்சில வாக்கியங்கள் அவ்வவ்விடத்திற்குப் பொருத்தமில்லாதனவாகத் தோற்றும். அவற்றைச் செவ்வை செய்துகொள்வதற்கு இப்பொழுது தக்க சாதனம் கிடையாமையாலும் இனி நல்லபிரதிகள் கிடைப்பின் அவற்றைக்கொண்டு செவ்வை செய்துகொள்ளலாமென்றும் அவற்றை மாற்றாமற் பிரதிகளிலிருந்தவாறே பதிப்பித்தேன். இவ்வுரை, இந்நூலின் முதல்இருநூற்றறுபத்தாறு பாடல்களுக்கு மட்டுமே கிடைத்தது; மேலுள்ள பாடல்களுக்கு ஒரு பிரதியிலும் கிடைத்திலது; 243-ஆம் பாடலுக்கு மேற்பட்டுள்ள சிலவற்றின் உரை இடையிடையே சிதைந்து மாறியிருக்கிறது.



இந்நூலுரையாசிரியர் மேற்கோளாக எடுத்துக் காட்டிய நூல்கள், தொல்காப்பியம், கலித்தொகை, குறுந்தொகை, சீவகசிந்தாமணி, பெரும்பாணாற்றுப்படை யென்பன. இவ்வுரையாசிரியர் இன்னாரென்று தெரியவில்லை. இவர் சில பாடல்களின் விசேட வுரையிலெழுதும் சில செய்திகள் இந்நூற்குப் பழைய வுரை ஒன்று உண்டென்பதைக் குறிப்பிக்கின்றன.

அவ்வுரை இப்பொழுது கிடைக்கவில்லை.

கூ-ஆம் பாட்டின் விசேடவுரையில் இவர், 'யாற்று நீரும் ஊற்று நீரும் மழை நீருமுடைமையால், கடற்கு முந்நீர் என்று பெயராயிற்று; அன்றி முன்னீரென்றோதி, நிலத்திற்கு முன்னாகிய நீரென்றுமுரைப்ப' என்று முந்நீர், முன்னீர் என்பவற்றின் பெயர்க்காரணத்தைக் கூறுகின்றார். சிலப்பதிகார உரையில் அடியார்க்குநல்லார் இவ்விரண்டு காரணங்களையும் மறுத்து, 'முந்நீர் - கடல்; ஆகுபெயர்; ஆற்று நீர் ஊற்றுநீர் மேனீரென இவை யென்பார்க்கு அற்றன்று; ஆற்றுநீர் மேனீராதலானும் இவ்விரண்டுமில்வழி ஊற்றுநீரும் இன்றாமாதலானும் இவற்றை முந்நீரென்றல் பொருந்தியதன்று; முதிய நீரெனின், "நெடுங் கடலுந் தன்னீர்மை குன்றும்" என்பதனால் அதுவும் மேனீ ரின்றி அமையாமையின் ஆகாது; ஆனால் முந்நீர்ப்பொருள் யாதோவெனின் முச்செய்கையையுடைய நீர் முந்நீரென்பது; முச்செய்கையாவன மண்ணைப்படைத்தலும் மண்ணையழித் தலும் மண்ணைக்காத்தலும்' என்று கூறுவர். இம்மறுப்பு முற் கூறிய உரைப்பகுதியை மறுத்ததாகக் கொள்ளின் அடியார்க்கு நல்லார்க்கு இவ்வுரையாசிரியர் முற்பட்டவரென்று கொள்ள இடமுண்டு.

ஏறக்குறைய 55-வருஷங்களுக்கு முன்பு சீவக சிந்தாமணி யை யான் ஆராய்ந்து வருகையில் திருவாவடுதுறை யாதீன

கர்த்தர்களாக விளங்கிய ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள் ஆதீன புத்தக சாலையிலிருந்து அளித்த ஏட்டுப்பிரதிகளுள் மிகப்பழையனவும் பெயரெழுதப்படாதனவுமான மூன்று சுவடிகள் இருந்தன; அவற்றில் முதலுமில்லை; இறுதியுமில்லை; பக்கங்கள் மிகச் சிதைந்தும் தேய்ந்துபோயும் இருந்தன. அந்தக் காலம் பத்துப்பாட்டு இன்னவை எட்டுத்தொகை இன்னவை என்று தெரியாத காலம். சில வருடங்களுக்குப் பின்பு சீவக சிந்தாமணி



யைப் பதிப்பித்துவருகையில் விளங்காத மேற்கோள்களுக்குரிய இடத்தைத் தேடிவரும்பொழுது அந்தச் சுவடிகளுள் ஒன்றை ஒருநாள் பிரித்துப் பார்த்தேன். அப்போது, "கொற்றுறைக் குற்றில" என்னும் தொடர்மொழி காணப்பட்டது. சீவக சிந்தாமணி, கனகமாலையாரிலம்பகம் 309-ஆம் செய்யுளின் உரையில் இத்தொடர்மொழியை நச்சினார்க்கினியர் மேற்கோளாகக் கொடுத்திருத்தலால், இஃது ஏதோ ஒரு பழைய நூலாக இருக்கவேண்டுமென்று மட்டும் தெரியவந்தது. பிறகு படித்துப் பார்க்கையிற் பாட்டும் உரையும் காணப்பட்டன. அப்பால் அந்தப் பாடலின் எண்ணைக் கவனிக்கையில் '௯௫' என்று தெரிந்தது. நற்றிணை முதலியவற்றின் மூலமட்டும் அடங்கிய கையெழுத்துப் பிரதி வேறு இருந்தமையால் அவற்றுள் ஒவ்வொன்

றையும் சோதித்துக்கொண்டுவரும்போது இது புறநானூற்று உரை யென்று தெரிந்தது. அப்போது உண்டான மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. மற்ற இரண்டு குறைச்சுவடிகளுள் ஒன்று பரிபாடலுரை; மற்றொன்று பத்துப்பாட்டுரை.

அக்காலமுதல் இந்நூலைப்பற்றிய செய்திகளைத் தொகுக்கத் தொடங்கினேன். பல இடங்களில் தேடி அன்பர்களுடைய பேருதவியாற் பல கையெழுத்துப் பிரதிகளைப் பெற்று ஆராய்ந்து வரலானேன். இறைவன் திருவருளால் இந்நூலின் முதற்பதிப்பு 1894-ஆம் வருஷத்திலும் இரண்டாம் பதிப்பு 1923-ஆம் வருஷத்திலும் வெளியாயின. இந்நூல் முதற் பதிப்பு வெளிவந்த காலத்தில் அதன் முகவுரையில், 'இத்தமிழ் நாட்டின் பழைய சரித்திரங்களைத் தெரிந்துகொள்ளுதலிலும் தெரிவித்தலிலுமே பெரும்பாலும் காலம் கழித்து உழைத்து வரும் உபகாரிகளாகிய விவேகிகள், இந்நூலை நன்கு ஆராய்ச்சி செய்வார்களாயின், பலருடைய வரலாறுகள் முதலியன தெரிந்துகொள்ளுதல் கூடும்' என்றெழுதி யிருந்தேன். அப் பதிப்பு வெளிவந்த பின்னர் இன்றுவரையில் தமிழ் நாட்டின் சரித்திரச் செய்திகளை அறிவதற்கு இந்நூல் இத்தனை வகையாக பயன்பட்டிருக்கின்றதென்பதைத் தமிழ் நாட்டினர் நன்கு அறிவர். தமிழ்ப் புலவர் வரலாறுகளையும், தமிழ்ப்பேரரசர், சிற்றரசர், உபகாரிகள் முதலியோர்களுடைய சரித்திரங்களையும், பண்டைத்தமிழருடைய ஒழுக்க வழக்கங்களையும் இதிற்

கண்ட ஆராய்ச்சியாளர் பலர் அவற்றைத் தனித்தனியே தொகுத்தும் விரித்தும் விரவுவித்தும் அமைத்துப் பலவகையான சரித்திரங்களையும், ஆராய்ச்சி நூல்களையும், சிறுவர்களுக்குரிய புத்தகங்களையும் வெளியிட்டிருக்கின்றனர். இவ்வொரு நூல் இத்துணை ஆராய்ச்சிகளுக்கு இடங் கொடுப்பதையும் இதனை வெளியிடும்படி நேர்ந்த திருவருட்டிறத்தையும் எண்ணும்போது தமிழ்ப்பணியை இடையீடின்றிச் செய்துவருங்கால் இடை யிடையே பலவகையால் தோன்றும் துன்பங்களை மறந்துவிடற் குரிய பெரிய ஆறுதல் எனக்கு உண்டாகின்றது.

காலஞ் சென்ற ஜி. யு. போப் துரையவர்களுக்குத் தமிழில் அன்பு உண்டாவதற்கு முக்கிய காரணமாக இருந்தவற்றுள் இப்புறநானூறும் ஒன்றாகும். அவர் இப்புத்தகம் வெளிவந்த காலத்தில் இப்புத்தகத்தைப் பாராட்டி அடிக்கடி எனக்கு எழுதுவதுண்டு. இதிலுள்ள சில செய்யுட்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கின்றார். ஒவ்வோர் ஆங்கில வருஷப்பிறப்பன்றும் இந்நூற் செய்யுட்களுள் ஒன்றை மொழி பெயர்த்து எனக்குச் சில வருஷங்கள்வரையில் அனுப்பி வந்தார்.

உரையில்லாத மூலங்கள் எழுத்துஞ்சொல்லும் மிகுந்தும் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு வேறுபட்டிருந்த தன்றி, இவற்றுள் சில பாடல்களின்பின் திணை யெழுதப்படா மலும் சிலவற்றின்பின் துறை யெழுதப்படாமலும் சிலவற்றின் பின் இரண்டு மெழுதப்படாமலும் சிலவற்றின்பின் பாடினோர் பெயர் சிதைந்தும் சிலவற்றின்பின் பாடப்பட்டோர் பெயர் சிதைந்தும் சிலவற்றின்பின் இருவர் பெயருமே சிதைந்தும் சில பாடல்கள் இரண்டிடத்து எழுதப்பட்டு இரண்டெண்களை யேற்றும் வேறு வேறிடத்தில் இருத்தற்குரிய இரண்டு பாடல்கள் ஒருங்கெழுதப்பட்டு ஓரெண்ணையேற்றும் சில முதற்பாகங் குறைந்தும் சில இடைப்பாகங் குறைந்தும் சில கடைப்பாகங் குறைந்தும் சில முற்றுமின்றியும் ஒரு பாடலின் அடிகளுள் ஒன்றும் பலவும் வேறு பாடல்களின் அடிகளோடு கலந்தும் ஓரடியே ஒரு பாட்டுட் சிலவிடத்து வரப்பெற்றும் பொருளுண்மை காணாதவண்ணம் இன்னும் பலவகைப்பட மாறியும் கையெழுத்துப் பிரதிகளில் இருந்தன. இவற்றைப் பரிசோதித்து



வருகையில், இந்நூலிலிருந்து வேறு நூல்களினுடைய பழைய வுரைகளின் இடையிடையே உரையாசிரியர்களால் பூர்ண மாகவும் சிறிது சிறிதாகவும் எடுத்துக் காட்டப்பட்டிருந்த

உதாரணங்களும், புறத்திரட்டென்னும் தொகைநூலும் சிற்சில பாடல்களிலுள்ள வழுக்களை நீக்கிச் செவ்வை செய்துகொண்டு பொருளுண்மை காணுதற்கும், சிற்சில பாடல்களிற் குறைந்த பாகங்களை நிரப்பிக்கொள்ளுதற்கும் பிறழ்ந்துகிடக்கும் சில பாடல்களை ஒழுங்குபடுத்தி வரையறை செய்துகொள்ளுதற்கும் பெருந்துணையாக இருந்தன.

இதன் முதற்பதிப்பிற் காணப்படாத சில திருத்தங்களும் செய்திகளும் இரண்டாம் பதிப்பில் அமைந்துள்ளன. முன் இரண்டாம் பதிப்பைக்காட்டிலும் இப்பதிப்பில் பாடினோர் பெயர், அடிக்குறிப்புக்கள் என்பவற்றில் சில சிறு மாறுதல்களும் சில புதிய செய்திகளும் காணப்படும். உரையின் இயல்பென்ற பகுதியொன்று புதியதாக எழுதி இப்பதிப்பிற் சேர்க்கப் பட்டுள்ளது.

முன்னிரண்டு பதிப்பைப்பற்றிய விரிவான வரலாறுகள் அவ் வப்பதிப்புப் புத்தகங்களிலுள்ள முகவுரைகளால் அறியலாம்.

இரண்டாம் பதிப்பைப் போலவே இப்பதிப்பிலும், இதன் மூலங்களோடு சொல்லாலும் பொருளாலும் ஒத்திருக்கும் இந் நூற் பகுதிகளும் பிறநூற் பகுதிகளும், இந்நூற் செய்யுட்களின் முழுப்பாகமேனும் ஒவ்வொரு பகுதியேனும் மேற்கோளாக வந்துள்ள இடங்களும், பழைய உரையால் விளங்காதவற்றிற்குக்

குறிப்புரையும், உரையில்லாத பாடல்களெல்லாம் பதவுரை யெழுதுவதற்குரிய திருத்தமுறுமலிருந்தமையின் அவற்றின் அடிகளுட் சிலவற்றிற்குமட்டும் அறிந்த அளவு குறிப்புரையும் மூலத்திலும் உரையிலும் கண்ட பிரதிபேதங்களும் ஆராய்ச்சி செய்வோர்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்குமென் றெண்ணி மூலமுள்ள பக்கங்களில் அங்கங்கே அடிக்குறிப்பாகச் சேர்க்கப் பெற்றுள்ளன. மூலத்திலும் உரையிலும் காணப் படும் அரும்பதங்கள், தொடர்மொழிகள், புலவர் பெயர்கள், தலைவர் பெயர்கள், அரியசெய்திகள், உவமைகள் முதலியன தொகுக்கப்பெற்று 'அரும்பத முதலியவற்றின் அகராதி' என்னும் தலைப்பில் அமைக்கப் பெற்றுள்ளன.



கிடைத்த கையெழுத்துப்பிரதிகள் :—

மூலப்பிரதிகள்

| பிரதிக்குரியவர்கள். | பிரதியை உதவிசெய்வ தவர்கள். | பாடல் வரையறை. |
|---|---|---|

| | | |
|---|---|---|
| (1) திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீ சுப்பிரமணியதேசிகரவர்கள் | பிரதிக்குரியவர்களே. | ௧-௪00. |
| (2) திருத்தணிகைச் சரவணப் பெருமாளையரவர்கள் | யாழ்ப்பாணம், ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள். | ௧-௪00. |
| (3) யாழ்ப்பாணத்து நல்லூர், சதாசிவப்பிள்ளையவர்கள். திரு. த. கனகசுந்தரம்பிள்ளையவர்கள். | சென்னை, பா. வாசுதேவ முதலியாரவர்கள். | ௨௧௭-௩௯௯. |
| (4) யாழ்ப்பாணம், வி. கனகசபைப் பிள்ளையவர்கள். | பிரதிக்குரியவர்களே. | ௧-௩௯௯. |
| (5) திருமயிலை வித்துவான், சண்முகம் பிள்ளையவர்கள். | திருவனந்தபுரம், பி. சுந்தரம் பிள்ளையவர்கள். | ௩-௩௯௯. |
| (6) மந்தித் தோப்பிலுள்ள ஸ்ரீ சங்கரசுவாமி ஆதீனகர்த்தர் மஹந்துஸ்ரீமத் சங்கர சுப்பிரமணியதத்த சுவாமிகள். | பிரதிக்குரியவர்களே | ௧-௪00 |
| (7) திருநெல்வேலி ஸ்ரீ கவிராஜ ஈசுவர மூர்த்திப் பிள்ளையவர்கள். | பிரதிக்குரியவர்களே | ௧-௪00 |
| (8) அரியூர் ஸ்ரீ எஸ். சாமிநாதையரவர்கள். | | |

உரைப்பிரதிகள்

| | | |
|---|---|---|
| (1) திருவாவடுதுறை யாதீனத்து, ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரவர்கள். | பிரதிக்குரியவர்களே. | க-உகூ0. |
| (2) ஷை ஆதீனத்து ஸ்ரீ அம்பலவாணதேசிகரவர்கள். | பிரதிக்குரியவர்களே. | க-க0எ. |



| பிரதிக்குரியவர்கள். | பிரதியை உதவிசெய்தவர்கள். | பாடல் வரையறை. |
|---|---|---|

| | | |
|---|---|---|
| (3) ஆழ்வார் திருநகரி, தாயவலந்தீர்த்த கவிராயரவர்கள். | ஸ்ரீவைகுண்டம், சு. சுப்பராய முதலியாரவர்கள். | க-உ௬௧. |
| (4) மிதிலைப்பட்டி, அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள். | பிரதிக்குரியவர்களது பரம்பரையோராகிய அழகிய சிற்றம்பலக் கவிராயரவர்கள். | க-உ௬௬. |
| (5) ,, | ,, | க-௧எ௧. |
| (6) திருநெல்வேலியைச் சார்ந்த வண்ணார்பேட்டை, திருப்பாற்கடலுத கவிராயரவர்கள். | யாழ்ப்பாணம், நாவ்பகதூர், சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள். | க-உ௬0. |
| (7) தென்காசி, சுப்பையாப் பிள்ளையவர்கள். | மேலகரம், திரிகூடராசப்பக் கவிராயரவர்கள். | க-௬அ. |
| (8) ,, [பதவுரைசிதிலம்] | ,, | க-டுஎ. |
| (9) ,, ,, | ,, | எ-௬அ. |
| (10) தூத்துக்குடி, குமாரசாமிப் பிள்ளையவர்கள். | ஆறுமுகமங்கலம், ஏ. சுந்தரமூர்த்தியா பிள்ளையவர்கள் | க-உ௧௬. |
| (11) ,, | ,, | க-௧௬௬. |
| (12) மதுரைத் தமிழ்ச் சங்கம். | | |
| (13) யாழ்ப்பாணத்து வண்ணைநகர் ஸ்ரீ சுவாமிநாதபண்டிதர். | | |

மூலத்திலும் உரையிலுங் கண்ட அளவைப் பெயர்கள் முதலியவற்றுள் தெரிந்தவற்றைத் தொகுத்து வகைப்படுத்திய பகுதியொன்று 'விசேடச் செய்திகள்' என்ற பெயருடன் இதிற்

பதிப்பிக்கப் பட்டுள்ளது.

முதன்முறை இந்நூலை அச்சிட்டு வருகையில் சிலாசாஸனம் முதலியவற்றில் அறிதற்குரிய சிலவற்றைத் தெரிந்துகொள்ளு தற்பொருட்டு நான் வினவியபோது ராவ்பகதூர் வி. வேங்கைய ரவர்களும், ராவ்பகதூர் வி. கனகசபைப் பிள்ளையவர்களும் அனுப்பிய விடைகள் அரும்பத முதலியவற்றின் அகராதியில் உரிய இடங்களில் அடிக்குறிப்பாகச் சேர்க்கப்பெற்றுள்ளன.

C



பாடல்களிலும், அவற்றின்பின்னர்த் திணை துறைகளையும் பாடப்பட்டோர் பாடினோர்களையும் தனித்தனியே தெரி விக்கும் வாக்கியங்களிலும், உரைகளிலும் பிரதிகளிற் சொற் கள் சிதைந்தவிடத்தைப் புலப்படுத்தற்கு (......) இவ் வொற்றைப்புள்ளி நிரைகள் அமைக்கப்பட்டுள்ளன. பிரதி பேதங்களும் எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன.

உரை கிடையாதவிடத்து ஒருவகையாலும் பொருள் காணாதவிதம் சிதைவுற்றிருந்த மூலங்கள் ஏட்டுப்பிரதியிலிருந்த படியே புள்ளியிடுதல் முதலியனவின்றிப் பதிப்பிக்கப் பட்டன.

இதிற் கொடுத்துள்ள பிரதிபேதங்களுள்ளே சிலசிலவற் றிற்குமட்டும் பொருள் புலப்படும்; பலவற்றிற்குப் புலப்படா.

அவை பிழைகளாகவே இருத்தலும் கூடும்; ஆனாலும், வேறு பிரதிகள் கிடைப்பின் அவற்றோடு ஒப்புநோக்கி உண்மையான உருவங்களை அறிந்துகொள்ளுவதற்கு அநுகூலமாக இருக்குமென்றெண்ணியே பிரதிகளிற் காணப்பட்ட பலவகையான பேதங்களும் உள்ளபடியே அங்கங்கே காட்டப்பட்டிருக்கின்றன. ஒற்றுப்புள்ளி முதலியவற்றை நீக்கி அவற்றைப் படித்தல் நலம்.

சில சுவடிகளில் ஈகார ஐகார உயிரீற்றின்பின் யகரம் வரையப் பெற்றிருத்தமையின், அம்மொழிகள் அவ்வாறே உரிய இடங்களிற் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

இந்நூற்பகுதிகளுள் சில சிவஞானபாடியத்தில் மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன; அவை வருமாறு:

(க) "கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை"—கூ-ஆம் சூ. உ-ஆம் அதி.

(உஉ) "தூங்கு கையா னோங்குநடைய" ரு-ஆம் சூ. க-ஆம் அதி.

(கஉச) "நாளன்று போகி" உ-ஆம் சூ. ச-ஆம் அதி.

(நகூரு) "நீர்க்கோழி கூப்பெயர்க் குந்து" அ-ஆம் சூ. க-ஆம் அதி.

இந்நூல் சக, எஅ, கடுக-ஆம் பாடல்களின் உரைகளில் மேற்கோளாக வந்துள்ள "ஏவ விளையர் தாய்வயிறு கரிப்ப" என்பது வேறு பல உரைகளில் "புலைய னெறிந்த பூசற் றண்ணுமை" என்பதனோடு சேர்ந்து வழங்கக்காணப்பட்டும், இன்னா



நூலில் இன்ன பாடலிலுள்ளதென்று புலப்படாமலிருந்தது. பிறகு, தமிழ்நெறிவிளக்கமென்னும் பழைய இலக்கண நூலொன்றில் வந்துள்ள மேற்கோளாகிய,

"நிரையிர் செல்லு மோவென நேர்ந்து
புலைய னெறிந்த பூசற் றண்ணுமை
ஏவ விளையர் தாய்வயிறு கரிக்கும்
இன்னா வருஞ்சுர மென்ப
என்னோ தோழியவர் சென்ற வாறே"

என்னும் செய்யுளின் 4-ஆம் அடியின் பாடபேதமென்று தெரியவந்தது.

இந்நூலிலுள்ள செய்யுட்களைப் பாடிய நல்லிசைப் புலவர்களுடைய வரலாறுகளும், அவர்களால் இந்நூற் செய்யுட்களிற் பாடப்பட்டவர் வரலாறுகளும் தனித்தனியே இதிற் காணப்படும். இவை இரண்டாம் பதிப்பிலுள்ளவாறே அமைக்கப்பட்டன; செய்திகளில் வேறுபாடு இல்லையேனும் சில செய்யுட்

பகுதிகள்மாத்திரம் நீக்கப்பட்டன.

மேற்கூறிய இருவகையார் பெயர்களுட் சில பெயர், கையெழுத்துப் பிரதிகளிற் பலவகைப்பட்ட விசேடணத்தோடு கூடியும் கூடாமலும் வேறுவேறிடத்து வேறுவேறு விதமாக எழுதப்பட்டும் இருந்தன; அவை இன்ன பெயரின் பரியாயங்களெனத் தெரிந்தும் அவற்றை ஒரேவிதமாகத் திருத்திவிடாமல் ஏனைத் தொகைகளிலும் மற்றை நூல்களிலும் உரைகளிலும் வழங்கும் பழைய வழக்கத்தைத் தெரிவித்தற்கு அவை பிரதிகளில் இருந்தவாறே பதிப்பிக்கப்பட்டன. அவற்றுள் ஒன்றற்கு உதாரணம்:—

க. மாந்தரஞ்சேரலிரும்பொறை, உ. சேரமான்மாந்தரஞ் சேரலிரும்பொறை, ௩. யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரலிரும் பொறையார், ௪. சேரமான்யானைக்கட்சேய்மாந்தரஞ்ரேலிரும் பொறை, ரு. கோச்சேரமான் யானைக்கட்சேய்மாந்தரஞ் சேரலிரும்பொறை.

மேற்கூறிய இருவகையோருடைய பெயர்களிற் சிலபெயர்களுக்குக் காரணம் புலப்படுகின்றது; பலவற்றிற்குப் புலப்படவில்லை,

தாம் பாடிய செய்யுட்களிலுள்ள தொடர்மொழிச் சிறப்பால் சில புலவர்களுக்குப் பெயர்வந்திருத்தல் கூடுமென்று தோற்றினும் இந்நூலிலாவது வேறு நூலிலாவது அப்பாடல்கள் அகப்படாமையின் துணிந்து காரணம் எழுதக்கூடவில்லை.

நாளடைவிற்செய்துவந்த ஆராய்ச்சியின் பயனாக இந்நூலிற் கண்ட நல்லிசைப் புலவர், அரசர்கள், உபகாரிகள் முதலியோர் வரலாறுகளுக்குரிய பல செய்திகள் இப்பொழுது விளங்குகின்றன. அவற்றையும் சேர்த்து விரிவாக எழுத எண்ணியிருந்தும் இப்போது போதிய அவகாசமின்மையால் அங்ஙனம் செய்யக் கூடவில்லை. மேற்கூறிய வரலாறுகளைத் தனித்தனியேவிரிவாக எழுதி வெளியிடவெண்டுமென்பது எனது நோக்கமாதலின் அங்ஙனம் வெளியிடுங்கால் அச்செய்திகளைச் சேர்த்துக் கொள்ளக் கருதியிருக்கின்றேன். அம்முயற்சி நிறைவேறும்படி செய்வித்தருளும் வண்ணம் இறைவன் திருவருளைச் சிந்தித்து வந்திக்கின்றேன்.

சிலருடைய விருப்பத்தின்படி புறநானூற்றின்மூலம் மாத்திரம் அதற்குரிய அங்கங்களுடன் தனியே பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

இப்பதிப்புக்கு உடனிருந்து உதவி செய்தவர்கள் சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் சிரஞ்சீவி வித்வான் வி. மு. சுப்பிரமணிய ஐயரும், சிரஞ்சீவி வித்வான் கி. வா. ஜகந்நாதையரும் வேறு சில அன்பர்களும் ஆவர்.

'தியாகராஜ விலாஸம்'
திருவேட்டீசுவரன் பேட்டை
20—12—35.

இங்ஙனம்,

வே. சாமிநாதையர்

—:o:—

௨

# *பாடினோர் வரலாறு

—:o:—

அடைநெடுங்கல்வியார்:—இது கல்வியாற் பெற்ற சிறப்புப் பெயர். எளிதில் அடைந்த மிக்க கல்வியையுடையாரென்பது இதன் பொருள்; பாண்பாட்டு, மகட்பாற்காஞ்சியென்னுந் துறைகள் இவரால் அழகுபெறப் பாடப்பெற்றுள்ளன. இவராற் பாடப் பட்டோரும், இவர்காலத்தவரும் இன்னாரென்று விளங்கவில்லை.

அண்டர்மகன் குறுவழுதி:—தொகைநூல்களில் குறுவழுதியாரென்று ஒரு பெயர் காணப்படுகின்றது. இவ்விருபெயரினரும் ஒருவரோ வேறோ தெரியவில்லை. அண்டர்மகன் குறுவழுதி இயற்றியனவாகப் புறச்செய்யுள் ஒன்றும், குறுந்தொகைச் செய்யுளொன்றும், குறுவழுதியென்பார் இயற்றியனவாக அகநானூற்றுச் செய்யுள் இரண்டும் உள்ளன. இவராற் பாடப்பட்டவர் பெயர் முதலியன விளங்கவில்லை. இவர் வாக்கில் வந்துள்ள, "கல்வி யென்னும் வல்லாண் சிறாஅன்" (புறநா. ௩௪௬) என்பது பாராட்டற்பாலது.

அரிசில்கிழார்:—கொள்ளிடத்தின் வடபால் அரியிலூர் அல்லது அரியில்

என்று வழங்கும் ஓரூரின் பெயர் அரிசில் என்பதன் மரூஉவாகக் கருதப்படுகின்றது; சகர யகரங்கள் தம்முள் மயங்குதல் இயல்பு; “அரிசிற்கரை” என்று மைஸூர் ஸம்ஸ்தானத்திலும் ஓர் ஊர் உள்ளது. கிழார் - உரியவர். கிழாரென்பது வேளாளர்க்கேயுரிய சிறப்புப்பெயராக இருந்ததென்று தெரிதலின், இவர் வேளாண் மரபினராக இருத்தல் கூடும். இஃது, “ஊரும் பேரும்” (தொல். மரபு. 74) என்னும் சூத்திரத்தின் உரையிற் காட்டிய பெயர்களாலும், திருத்தொண்டர்புராண வரலாற்றின் 2-ஆம் செய்யுளில் எடுத்துக்காட்டிய பெயர்களாலும் அறியலாகும். கடையெழுவள்ளல்களுள் ஒருவனாகிய பேகனைப் பாடியிருத்தலின் இவர் அவன்

---

*பாடினோர் சம்பந்தமான புறநானூற்றுச் செய்யுளெண்களை அரும்பதமுதலியவற்றின் அகராதியில் உரிய இடங்களிற் காணலாம்.





காலத்தினராக நினைக்கப்படுகின்றார்; அவனால் துறக்கப்பட்ட கண்ணகி யென்பவளை அவனோடு சேர்த்தல்வேண்டி அவனைப்

பாடினர்; இந்தக் கண்ணகி சிலப்பதிகாரத்திற் கூறப்பட்ட கண்ணகியல்லள். அதியமான் தகடூர்பொருது வீழ்ந்த எழினியின் பிரிவாற்றாது வருந்தி இவர் புலம்பினர்; பதிற்றுப்பத்தில் எட்டாம்பத்தைப் பாடித் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையிடம் ஒன்பது நூறாயிரங் காணம் பரிசில்பெற்று அவன்பால் அமைச்சுத்தொழில் பூண்டு விளங்கியவர். தகடூர்யாத்திரை யென்னும் நூலில் இவராற் பாடப்பட்ட பாடல்களும் சில உள்ளனவென்பது, தொல்காப்பியப் புறத்திணையியலில் 8, 12 - ஆம் சூத்திரமுதலியவற்றிற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையால் விளங்குகின்றது. திருவள்ளுவ மாலையிலுள்ள, "பரந்த பொருளெல்லாம்" என்னும் 13 - ஆம் செய்யுள் இவரியற்றியதாகக் கூறப்பட்டிருத்தலின், திருவள்ளுவர் காலத்தினராகிய கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவராக இவரைச் சொல்லுவதற்கு இடமுண்டு. இவர்பெயர் அரிசில்கிழாரென்றும் வழங்கும். இந்நூலுள் இவராற் பாடப்பெற்ற குதிரைமறம், தானைமறம், பேய்க்காஞ்சி, மகட்பாற்காஞ்சி என்னுந் துறைகள் அறிந்து இன்புறற்பாலன. பதிற்றுப்பத்து, 8 - ஆம் பத்தின் இறுதியில் அமைந்திருக்கும் "பாடிப்பெற்ற பரிசில்: தானும் கோயிலாளும் புறம்போந்து நின்று கோயிலிலுள்ள வெல்லாம் கொண்மினென்று காணம் ஒன்பது நூறாயிரத்தொடு அரசுகட்டிற் கொடுப்ப அவர் யான் இரப்ப இதனை ஆள்க வென்று அமைச்சுப்பூண்டார்" என்னும் வாக்கியத்தால் இவருடைய குணவிசேடங்களும் மேம்பாடும் விளங்கும்; (கோயிலாள் - பட்டத்தேவி; காணம் - ஒருவகைப் பொற்காசு; அரசுகட்டில் - சிங்காதனம்; அமைச்சு - மந்திரி வேலை.) மேற்கூறிய சேரவரசனும் உக்கிரப்பெருவழுதியும் பேகனென்னும் வள்ளலும் அதியமான் தகடூர்பொருதுவீழ்ந்த எழினியும் இவர்காலத்தவர். இவருடனிருந்த புலவர்: கபிலர், பரணர், பெருங்குன்றூர்கிழார், பொன்முடியார் முதலியோர்.

**அள்ளூர் நன்முல்லையார்:**—அள்ளூரென்பது பாண்டிநாட்டில் மருதநிலத்தின்கண்ணதோர் ஊர்; இது, "கொற்றச் செழியன், பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவென், ஒண்டொடி" (அகநா. சசு) என்னும் இவர் பாடலால் விளங்குகின்றது; "கிள்ளை, வளைவாய்க் கொண்ட வேப்ப வொண்பழம், புதிநா ணுழைப்பா னுதிமாண் வள்ளுகிர்ப், பொலங் கல வொருகா சேய்க்கும்" என்னும் உவமையும், "அரும்பனி யச் சிரந் தீர்க்கும், மருந்துபிறி தில்லையவர் மணந்த மார்பே", "அவர் நமக், கன்னையு மத்தனு மல்லரோ" (குறுந். சுஎ, சுஅ, கூங) என்



பனவும் இவருடைய நுண்மாண்புலமை முதலியவற்றைத் தெரிவியாநிற்கும்; இவர் பெயர் அள்ளூர்நன்முல்லையெனவும் வழங்கும்.

**ஆடுதுறை மாசாத்தனார்:**—காவிரி நதியின் தென்பாலொன்றும் வடபாலொன்றும் வடவெள்ளாற்றங்கரையிலொன்றுமாக மூன்று ஊர்கள் ஆடுதுறையென்னும் பெயரினவாக உள்ளன; இவற்றுள் முன்னுள்ள இரண்டும் தேவாரம் பெற்றனவும் பின்னது புராண வரலாறுள்ளதுமான சிவஸ்தலங்கள்; இவை முறையே தென்குரங்காடுதுறை, வடகுரங்காடுதுறை, ஆடுதுறையென வழங்கும்; பின்னுள்ளது எழு துறைகளுள் ஒன்று. தெய்வப்பெயரை மக்கட்கிட்டு வழங்குதல் மரபாதலின் ஐயனாருடைய திருநாமமாகிய மாசாத்தனாரென்பது இவருக்குப் பெயராக அமைந்ததுபோலும்; சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியவராதலால், இவர் சோழநாட்டினரென்றே கொள்வது தக்கது. அவன் இறந்த

பொழுது பிரிவாற்ருமல் வருந்திப் பாடியிருத்தலால் அவன் இறந்தபின்பும் இவர் இருந்தாரென்பதும், அவனைப்பாடிய ஆலத்தூர் கிழார் முதலிய புலவர் ஒன்பதின்மரும் இவர்காலத்தினரென்பதும் தெரிகின்றன; "பகைவர்களையும் அவர்கள் சேனைகளையும் கொன்று உன்பசியை எளிதில் ஒழிக்கும் இந்த வளவனைக் கைக்கொண்டாயே! இனி உன் பசியைத் தீர்க்கும் ஆற்றலுடையார் யாவர்? உனக்கே நீ தீங்கை விளைவித்துக்கொண்டமையின் நீ மிக்க பேதைமையை யுடையாய்!" (புறநா. உஉஎ) என்று கூற்றத்தை நோக்கி இவர் கூறின செய்யுள் பாராட்டற்பாலது.

ஆலங்குடி வங்கனர்:—ஆலங்குடி யென்னும் பெயருள்ள ஊர்கள் பல இருத்தலின் இவர் ஊர் இன்னதென்று நிச்சயிக்கக்கூட வில்லை.

தொகைநூல்களில் ஏழு பாடல்களும், திருவள்ளுவமாலையில் ஒரு செய்யுளும் இவர் செய்தனவாக இப்பொழுது காணப்படுகின்றன.

ஆலத்தூர்கிழார்:—நன்றியறிவும், அரசர்களை இடித்துக்கூறும் மனவலி யும், குறிப்பறிந்தளிக்கும் உபகாரிகளின் இயல்பை வெளிப்படுத்தும் அன்புடைமையும், போர்செய்யும் முறைமையை விளக்கும் இயல் பும், பொருள்களின் இயற்கைநலனைப் புலப்படுத்தும் நுண்ணறிவும் உடையவர் இவர். "நெடுங்காற் கணந்துள் ளாளறி வுறீஇ, யாறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்" (குறுந். கூடுO) எனக் கணந்துட் பறவையின் தன்மையை இவர் தெரிவித்திருக்கின்ருர். இவர் செய்தனவாகத் தொகைநூல்களில் 7 - செய்யுட்கள் காணப்படு கின்றன. இவராற் பாடப்பட்டோர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனும், சோழன் நலங்கிள்ளியுமாவர்.

**ஆலியார்:**—ஆலி என்பது சோழநாட்டின் உள்நாடுகளுள் ஒன்றாகிய ஆலிநாடென்பதன் தலைநகர். இது திருமங்கையாழ்வார் அவதரித்த தலமென்பர். இவ்வூரினராதலால் இவர் இப்பெயர்பெற்றார்போலும்; இவ்வூர்ப்பெயர் திருவாலியென வழங்காநிற்கும். தன்னுடைய தலைவன் தனக்குச் சிறந்த உணவை யளிக்கின்றானேயன்றி, போர் செய்தற்குத் தன்னை முந்திச்செல்லென்று ஏவுகின்றானல்லனென்று ஒரு வீரன் சொல்லியதாக இவர் இயற்றிய பாடலின் (புறநா. உகஅ) பொருள் வீரச்சுவையைப் புலப்படுத்துகிறது. இதனால் இவர் வீரர்குடியிற் பிறந்தவராகவும் கருதப்படுகிறார்; இப்பெயர் சில பிரதிகளில் ஆவியாரென்றும், ஆனியாரென்றும் காணப்படுகிறது.

**ஆலூர்கிழார்:**—ஆலூரென்னும் பெயருள்ள ஊர்கள் பல இருத்தலின் இந்த ஆலூர் இன்ன இடத்திலுள்ளதென்று தெரிந்துகொள்ளக் கூடவில்லை; ஆனாலும், மருதநிலத்தின் வளம் இவர் பாடலிற் கூறப்பெற்றிருத்தலின், இது சோழநாட்டிற் காவிரியின் தென்கரை யிலுள்ள ஆலூராக இருக்கலாமென்று ஊகிக்கப்படுகின்றது. கள்ளியின் முள்ளிற்குக் காளையின் பதனழிந்த கொம்புகளை இவர் உவமை கூறியிருக்கின்றார். இப்பெயர் ஆலூர்மழகியாரென்றும் சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

**ஆலூர் மூலங்கிழார்:**—இப்பெயர் இவருக்கு நாண்மீனால் வந்தது போலும்; மூலம் - ஒரு நக்ஷத்திரம். இவருடைய பாடல்களுள் அடியில் எடுத்துக்காட்டிய கருத்தமைந்த பகுதிகள் சிறந்தவை:—

(க.) 'செங்கோலினனாகிய ஓரரசனது நாடு சுவர்க்கத்தினும் சிறந்தது'; (உ.) 'வேந்தே! நீ இன்சொல்லையும் பிறர் வந்து காணுதற்கு எளியதாகிய சமயத்தையும் உடையை யாவை'; (ரு.) 'பல நாள் தேகம் உலரக் காத்திருந்து பெருஞ்செல்வரிடத்துப் பெற்ற யானை முதலிய பெரும் பரிசில்களைக்காட்டிலும் ஒருவன் அன்புடனளிக்கும் உண

வைக் காலையிற் பனம்பட்டையில் உண்ணல் மிகச் சிறந்தது'; (௪.) 'அரச! கையிலுள்ளதைக் கொடுத்தலும் இல்லாததை இல்லையென்றலும் உலகியற்கை; அங்ஙனமின்றிப் பரிசிலரை அலைக்கழித்தல் உனக்கு நன்றன்று; நான் செல்வேன்'.

இவற்றால் இவருடைய குணவிசேடங்கள் புலனாகின்றன. இன்னும் பரம்பரைத் தொழிலை வழுவின்றிச் செய்துபோதரும் ஓரந்தணனுடைய இயல்பையும், தன் வீரர்க்கு முன்னே போரில் முற்படும் ஓரரசனது இயற்கையையும் யானையின்மேலன்றி ஏனை



யிடங்களில் தன் வேலினை எறியாத ஒரு வீரனது இயல்பையும் இவர் பாராட்டியிருக்கின்றார். ஒருபகாரி இறந்த பின்பு அவன் வீட்டை நோக்கி, 'கணவனை யிழந்து மழித்த தலையையுடைய கழிகலமகடூஉவைப் போல்கின்றாய் நீ' என்று இரங்கிக் கூறியதும் யாவருடைய உள்ளத்தையும் கனியச்செய்யும். இவர் செய்தனவாகத் தொகை நூல்களில் 10 - செய்யுட்கள் காணப்படுகின்றன: அகநா. 2; புறநா. 8. இவராற் பாடப்பெற்றோர்: சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயன், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன், பாண்டியன் கீரஞ்சாத்தன், மல்லி கிழான்காரியாதி முதலியோர். இவர்காலத்திருந்த புலவர்: சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் முதலிய தலைவர் நால்வரைப் பாடிய பதின்மூவராவார்.

இடைக்காடனார்:—இடைக்காடென்னும் ஊரிலுள்ளாராதலின், இவர் இப் பெயர்பெற்றார். இவர் கபிலருடைய தோழர்; மற்றப்புலவர்களிடத்தும் அன்புடையவர்; கவிசெய்யும் ஆற்றலில் மிக்கோர்; இவை, "முன்னமோர் நாளுன் மாட மதுரையின் முழுது ணர்ந்தோன், பின்னமில் கபிலன் றோழன் பெயரிடைக் காட னென்போன், இன்னியல் வாணர்க் கெல்லா மிதவியோன் கவியான் மிக்கோன்", "எனையர் தாதி சொன்னவன் கபிலன் றோழன்" (திருவால. உ0 : 1, 11) என்பவற்றால் அறியலாகும். "கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக், குறுகத் தறித்த குறள்" என்று திருக்குறளினியல்பைப் புலப்படுத்திப் பாடியிருத்தலால், இவர் பெரும்பொருளைச் சிறுகவியில் அடக்கும் இயல்பினரென்பதும், சுருங்கச் சொல்லலென்னும் அழகில் மிக்க விருப்பமுடையரென்பதும் புலனாகின்றன. 'அரச ! மலையினின்றிழிந்து ஆறுகள் கடலை நோக்குவது போலப் புலவர்கள் நின்னையே நோக்கினர்; நீ பகைவேந்தருடைய மண்களை நோக்கினை' (சஉ) என இந்நூலுள்ளும் வேறுவகையாக ஏனைத் தொகைநூல்களிலும் இவர் கூறியிருக்கும் உவமைகள் மதிக்கற்பாலன. இவருடைய செய்யுட்களை உற்றுநோக்குமிடத்துப் பெரும்பான்மையாக முல்லைத்திணை, மழை, இடைச்சாதி என்பவற்றின் இயல்புகளும் சிறுபான்மையாக மருதத்திணை வளமும் அமைந்திருப்பது விளங்கும். சில பாடல்கள் இடைக்காடர் ஊசிமுறியென்று பழைய உரைகளிற் காணப்படுகின்றன; இதனால் ஊசிமுறியெனப் பெயரிய நூலொன்று இவராற் செய்யப்பட்டிருந்ததென்று தெரிகின்றது; ஊசி - எழுத்தாணி. இவர், ஒரு பாண்டியன் மீது சில பாடல்களைப் பாடிக்கொண்டு சென்று அவனைக் கண்டு

தெரிவித்தபொழுது அவன் அவற்றை மதியாதிருந்தமைகண்டு மனம் நொந்து உடனே ஆலவாயடிகளையடைந்து குறையிரந்து நிகழ்ந்த தனை விண்ணப்பித்து வடபாற்சென்று ஓரிடத்திருப்ப, அவரும் சங்கப்புலவர்களும் இவர்பின் சென்று இவருடன் இருந்தாரென் றும், இந்நிகழ்ச்சியை யறிந்த பாண்டியன் மனங்கலங்கி இவரை யடைந்து குறையிரந்து இவர்மனவருத்தத்தைத் தீர்த்தானென்றும் இருவகைத் திருவிளையாடல்களிலும் ஒருசரித்திரம் வழங்குகின்றது; "திருந்திய செல்வ மதுரைச் செழியன்முன் சென்றடியேன், அருந் தமிழ் பாடினன் றள்ளின னேயென் றவன்சொல்லவே, கரும்பன சொல்லி யுடன்வட பாலிடைக் காடனுக்காய், பரிந்துபின் போன சொக் கேபர தேசி பயகரனே" (திருவிளையாடற்பயகரமாலை, 20), "கூறுமிடைக் காடனியற் கவிதை பாடிக் கொடுகோண மன்னிகழ்ந்து தள்ள நொந்தே, வீறுயரா லயத்தணுகிப் பொருமிச் சொல்லுன் மெல்லியெனை மறைபுகலு மிகழ்ந்த தன்னை, மாறகலுன் றேவியைமற் றிலையென் றேத்தி வரைந்தேக யானுமே குவலென் றேகி, எறியசங் கத்தொடிருந் தழைப்பப் போந்தா னிடத்தைவட திருவால வாயென் றூர்கள்" (கடம்பவனபுராணம், இலீலாசங்கிரக அத்தியாயம், 20) என்பவற்றாலும் இவ்வரலாறு அறியப்படும். இவரால் பாடப்பட் டோன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்.

**இடைக்குன்றூர்கிழார்:**—இவருக்கு இப்பெயர் ஊரான் வந்தது. நெடுஞ் செழியனென்பான் தனது மிக்க இளமைப்பருவத்தில், சோணாட் டுள்ள தலையாலங்காடென்னும் ஊரில் முடிமன்னர்களாகிய சேர சோழர் இருவரையும் ஐம்பெருவேளிரையும் பொருதுவென்ற பெருவிறலும் அவனுடைய அடக்கமும் பிற விசேடகுணங்களும் இந்நூலுள் இவர்வாக்கில் நன்கு அறியலாகும். இவரால் பாடப்பட்

டோன் அப்பாண்டியன். இவர்காலத்துப் புலவர் அவனைப் பாடிய கல்லாடனார் முதலியோராவர்.

இரும்பிடர்த்தலையார்:—இவர் சோழன்கரிகாலனுடைய அம்மான்; அவனுக்குப் பெருந்துணையாயிருந்தவர்; "சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும், பிடர்த்தலைப் பேரானைப் பெற்றே - கடைக்கால், செயிரறு செங்கோல் செலீஇயினான்" என்னும் பழமொழி வெண்பாவாலும் அதன் பழைய உரையாலும் உணர்க. யானைப்படைை இரும்பிடர்த் தலை யென்று சிறப்பித்தமைபற்றி இவர் இப்பெயர்பெற்றார்போலும் (புறநா. ௩: 11.) இவருடைய இயற்பெயர் விளங்கவில்லை. தலைவன், இரவலருடைய குறிப்பறிந்து கொடுக்கும் வண்மைநலம் முதலியன இவராற் பாராட்டப் பெற்றுள்ளன; இவராற் பாடப்பட்டோன் பாண்டியன் கருங்கையொள்வாட் பெரும்பெயர்வழுதி.



உலோச்சனார்:—உலோச்சென்பது சைனர்கள் செய்து கொள்ளும் ஒரு கிரியை. அதனால் இவர் சைனரென்று கொள்ளுதற்கு இடமுண்டு. இவர்வாக்கில் எருமைமறமென்னுந்துறை விளக்கக் கூறப்பெற்றுள்ளது; இவராற் பாடப்பட்டோன் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி.

உறையூர் இளம்பொன் வாணிகனார்:—இவர் வணிகர்; ஒரு வீரனுடைய கொடைச்சிறப்பும் போரில் இறந்த பின்பு அவனுக்காக நட்ட வீரக் கல்லின் கோலமும் அவனை இழந்தமையாற் பாணர்கள் படுந்துன்ப

மும் இவராற் கூறப்பட்டிருக்கின்றன.

உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்:—இவர் அந்தணர்; சேரமான் அந்துவஞ்சேரலிரும்பொறையால் ஆதரிக்கப் பெற்றவர்; இவை முறையே "ஊரும்பேரும்" (தொல். மரபு. 74, பேர்) என்பதன் விசேடவுரையாலும், 'சேரமான் அந்துவஞ்சேரலிரும்பொறையோடு வேண்மாடத்திலிருந்து' என்பதனாலும் பெறப்படுகின்றன; போர்க்களத்திற் பகைவரது சேனையைப் பிளந்துகொண்டு வாள்வீரர்க்கிடையே தன்தலைமை தோன்றச்செல்லும் சோழன்களிற்றிற்குக் கடலைக் கிழித்துச்செல்லும் நாவாயையும், விண்மீன்களுக்கு இடையே விளங்கும் திங்களையும் இவர் உவமை கூறியிருக்கின்றார்; புறநா. கரு. ஆய் என்னும் வள்ளலுடைய கொடைச்சிறப்பும் வீரச்சிறப்பு முதலியனவும் இவராற் பலபடியாகப் புனைந்து பாராட்டப்பெற்றுள்ளன; இதுபற்றியே, "திருந்துமொழி மோசி பாடிய ஆயும்" (கருஅ) எனப் பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் இவரைப் பாராட்டியுள்ளார்; இதிலுள்ள 'திருந்துமொழி' என்னும் அடைமொழி இவருடைய சிறந்த புலமையை வெளியாக்குகின்றது; இவராற் பாடப்பெற்றோர் சோழன் முடித்தலைக்கோப் பெருநற் கிள்ளியும், ஆயுமாவார்; ஆய் இறந்த பின்பும் இருந்தவர் இவர். இவர்பெயர் மோசி, ஏணிச்சேரி முடமோசியார் எனவும் வழங்கும்.

உறையூர்மருத்துவன் தாமோதரனார்:—இவர் மருத்துவன்றாமோதரனார் எனவும் வழங்கப்பெறுவர்; மருத்துவர் - மருத்துநூலில் வல்லவர்; வைத்தியர். இது, "சிந்திநீர்க் கண்டஞ் செறிசுக்குத் தேனளாய், மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில் - காந்தி, மலைக்குத்து

மால்யானை வள்ளுவர்முப் பாலாற், றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு" (திருவள். 11) என்னும் வெண்பாவால் விளங்குகின்றது; தாமோதரனாரென்பது தெய்வத்தால் வந்த பெயர்; இதனால், இவர் குடும்பத்தினர் திருமாலின் அடியவராகக் கருதப்படுகின்றனர். இவர் செய்தனவாக 6 - பாடல்கள் கிடைக்கின்றன: அகநா. 2;



திருவள். 1; புறநா. 3. இவரால் பாடப்பட்டோர் சோழன் குராப் பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன், பிட்டங் கொற்றனென் பார். இவர் வாக்கிற் பாலை நிலத்தினியல்பும் ஏற்ற உவமையணி களும் காணப்படுகின்றன; "மூந்நீர் நாப்பட் டிமிற்சுடர் போலச், செம்மீ னிமைக்கு மாக விசும்பு", "கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கும், ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும், உரனுடை நோன் பகட்டன்ன வெங்கோன்", "உலைக்கல் லன்னவல் லாளன்" என்பவை இந்நூலுள் இவர் வாக்கிற் சிறந்த பகுதிகள்.

உறையூர் முதுகண்ணன் சாத்தனார்:—'முதுகண்' என்பது பிராயத்தாலும் அறிவாலும் முதிர்ந்து, அரசர்க்கும் பட்டத்தேவிகளுக்கும் உசாத் துணையாக விருந்து, நீதிகளைச் செவியறிவுறுத்தும் ஆண்பாலார் பெண்பாலார்களுக்குரிய பெயராகச் சிலாசாசன முதலியவற்றிற் காணப்படுகின்றது; "முற்றிழை மகளிர்க்கு முதுக ணாமென" (பெருங். க. 36 : 198) என வருதலும் காண்க; இவர், உறையூர் அரசர்பால் அத்தொழிலை உடையவராக இருந்தார்போலும்; இவரால் பாடப்பட்டோன் சோழன் நலங்கிள்ளி; இவர்காலத்துப்

புலவர் அவனைப் பாடிய ஆலத்தூர்கிழாரும் கோவூர்கிழாரும்; இவர் சிறந்த குடியிற் பிறந்தவருக்குத் தாமரைப்பூக்களையும், வளர்தல் முதலியவற்றையடைந்தபொருள் குறைதல் முதலிய வற்றையடையுமென்பதற்குத் திங்களையும் உவமைகூறியிருத்தலும், அருளுங் கொடையும் வெற்றிக்கும் அவையின்மை தோல்விக்கும் காரணமென்பது புலப்பட, "அருளா வல்லை யாகுமதி யருளிலர், கொடாமை வல்ல ராகுக, கெடாத துப்பினின் பகை யெதிர்ந் தோரே" (உஎ) என விளக்கி யிருத்தலும் நன்கு மதிக்கற்பாலன. இவர் செய்தனவாக 6 - செய்யுட்கள் உள்ளன: குறுந். 1; புறநா. 5.

உறையூர் முதுகூத்தனார்:—இப்பெயர் முதுகூற்றனாரெனவும் சில பிரதிகளிற் காணப்படுகின்றது; "வென்றெறி முரசின் விறற்போர்ச் சோழர், இன்கடுங் கள்ளி னுறந்தை" என இவரே கூறியிருத்தலால் தம்முடைய ஊரில் இவர் அன்புடையரென்பதும், அவ்வூர் அரசராகிய சோழரால் நன்கு மதிக்கப்பெற்றவரென்பதும் வெளியாகின்றன; "உள்ளது, தவச்சிறி தாயினு மிகப்பல வென்றுள், நீவெனும் பந்தருண்முறை யூட்டும், இற்பொலி மகடூஉ" (௩௩௩) எனக் கற்புடை மங்கையினியல்பையும், "தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள் வெண், பாவிற் சிறந்திடுமப் பால்பகரார் - நாவிற், குயலில்லை சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ், செயலில்லை யென்னுந் திரு" எனத் திருக்குறளின் சிறப்பையும் பாராட்டியிருத்தல் மதிக்கற்

பாலது; இவர் வாக்கிற் பெரும்பாலுங் காணப்படுவது பாலைநிலத்தி னியல்பு; இவர் செய்தனவாக 6 - பாடல்கள் தெரிகின்றன: அகநா. 2; குறுந். 2; திருவள். 1; புறநா. 1.

ஊன்பொதி பசுங்குடையார்:— இவராற் பாடப்பட்டோர் சேரமான் பாமுளூரெறிந்த இளஞ்சேட்சென்னி, சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி, சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி யென்பார்; இவர் அரசர்களுக்குத் தருமங்களைக் கற்பிக்கும் முறை மிக அழகுவாய்ந்தது; இராவணன் உயிரோடிருக்கையில் தம்பால் அடைக்கலம்புகுந்த விபீடணனுக்கு இராமர் இலங்காராச்சியமளித்ததை உட்கொண்டு, "ஒன்னார், ஆரெயி லவர்கட் டாகவு நுமதெனப், பாண்கட னிறுக்கும் வள்ளியோய்" (உ0௫) எனக் கூறியிருத்தலையும், மிக்க வறுமையுற்ற கிணைப்பொருநனொருவன் தன் உறவினரோடு சென்றகாலத்தில் ஒருபகாரி அவர்களுடைய நிலைமைக்கு எத்தனையோ மடங்கு மேற்பட்டுள்ளனவாகிய அணிகலங்களைக் கொணர்வித்து அவர்களிடையே சொரிவித்தபொழுது, அவர்கள் அணியு முறையறியாமல் தடுமாற்றமுற்று விரைந்து சென்று அவற்றை அணிந்து கொண்டதற்கு இராவணன் வௌவிச்சென்ற சீதை தான் சென்றவழியை இராமன் அறிந்துகொள்ளுதற்கு அடையாளமாகத் துகிலால் முடிந்து வீழ்த்திய அணிகலங்களைக் கண்ட வானரங்கள் தனித்தனியே விரைந்தெடுத்து அவற்றை அணிந்து கொள்ளுந் தடுமாற்றத்தை உவமித்திருப்பதையும் (௩௭அ) நோக்குகையில், இராமசரித்திரம் இவருடைய ஞாபகத்திலிருந்து வந்ததென்பதும், வறுமையின் இயல்பை விளங்கக் கூறுதலில் இவர் வல்லுநரென்பதும் விளங்குகின்றன.

எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்:—எருக்காட்டூரென்பது திருவாரூர்க்குத் தென்மேற்கில் மூன்றுநாழிகைவழித்தூரத்தில் உள்ளதென்பர்; கண்ணனென்பது க்ருஷ்ணனென்னும் தெய்வப்பெயரின் சிதைவு போலும்; 'கண்ணனென்பது கரியோனென்னும் பொருளதோர் பாகதச் சிதைவு' (திருக்கோவையார், 53, பேர்.) என்பது ஈண்டறியற்பாலது; "செறுவிற் பூத்த சேயிதழ்த் தாமரை, அறுதொழி லந்தண ரறம்புரிந் தெடுத்த, தீயொடு விளங்கு நாடன்" என அந்தணரின் வேள்வித்தீயைப் பாராட்டிக் கூறியிருத்தலால் இவர் அந்தணராகக் கருதப்படுகிறார்; அக்காலத்திருந்த அரசரால் இவருக்கு இவ்வூர் பிரமதாயமாகக் கிடைத்ததென்று தெரிகிறது; தாயம் - உரிமை. இவராற் பாடப்பட்டோன் சோழன்குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்; இவர்காலத்துப் புலவர்கள் அவனைப்





பாடிய ஆலத்தூர்கிழார் முதலியோர்; தாயங்கண்ணனாரென்று ஒரு புலவர் பெயர் தொகைநூல்களிற் காணப்படுகின்றது; அவரும் இவரும் ஒருவரோ வேறோ தெரியவில்லை. இந்நூலிலன்றி, இவர் செய்தனவாக அகநானூற்றில் 3 - செய்யுட்கள் உண்டு.

எருமைவெளியனார்:—எருமைவெளியென்பது ஓரூர். இவராற் குதிரை மறமென்னுந் துறை மிகச் செவ்விதாகப் பாடப்பெற்றுள்ளது. இவரியற்றிய பாடல்கள் - 3: அகநா. 1; புறநா. 2.

ஐயாதிச் சிறுவெண்டேரையார்:—யாக்கைநிலையாமையை அறிவித்தல் வாயிலாக விரைந்து அறஞ்செய்க வென்று இவர் அறிவுறுத்து கின்றார்; சிறுவெண்டேரையாரென்று இந்நூலுள் ஒருவர் பெயர் காணப்படுகின்றது. அவரும் இவரும் ஒருவரோ வேறோ விளங்க வில்லை.

ஐயூர் முடவனார்:—இவருக்கு முடவனாரென்னும்பெயர் சினையாலமைந்தது போலும்; இப்பெயர் ஐயூர்கிழாரெனவும், உறையூர் முடவனாரென வும் சில பிரதிகளில் உள்ளது. இவர் நடந்துசெல்லுதற்கு இயலாத முடவராதலின், தாமான் தோன்றிக்கோனை அடைந்து வண்டியிழுத் தற்குப் பகடுவேண்டுமென்று பாடி, அவன் பகடுகளும் பல பசுக்களை களும் ஊர்தியுங் கொடுக்கப்பெற்று வாழ்ந்தவர்; இறந்தோருடம் பைத் தாழியாற்கவித்தலுண்டென்பதும் வீரச்சிறப்புங் கொடைச் சிறப்பும் இவர்பாடல்களிற் காணப்படுகின்றன. இவராற் பாடப்பட் டோர் ஆதனெழினி, தாமான் தோன்றிக்கோன், சோழன்குளமுற் றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன்வழுதியென்பார். "அறவை நெஞ்சத் தாயர் மறவர் மறவன், மள்ளர் மன்னன் ஒல்லோர் மருகன், இசையிற் கொண்டான்" என்பது இவர் தாமான் தோன்றிக்கோனைப் பாராட்டிய பகுதி. இவர் செய் தனவாக 10 - செய்யுட்கள் தொகைநூல்களிற் காணப்படுகின்றன: அகநா. 1; குறுந். 3; நற். 2; புறநா. 4.

**ஐயூர் மூலங்கிழார்**:—இவருக்கு இப்பெயர் மூலமென்னும் நாண்மீனுள் வந்ததுபோலும்; இவர்பாடலில் வேங்கைமார்பனென்னும் தலைவனாற் பாதுகாக்கப்பட்டுள்ள கானப்பேரென்னும் ஊரில் அமைந்திருந்த அரணின் அமைதி கூறப்பெற்றுள்ளது; இவராற் பாடப்பட்டோன் கானப்பேரெயில்கடந்த உக்கிரப்பெருவழுதி. இவர்காலத்துப் புலவர் அவ்வழுதியைப் பாடியவர்களாவர்.

**ஒக்கூர் மாசாத்தனார்**: — இவர் செய்யுளிற் கணவனை யிழந்த மகளிர் புல்லரிசிக் கூழை அகாலத்திலுண்டு கைம்மைநோன்பு நோற்றிருத்தல்



கூறப்பெற்றுள்ளது. இப்பெயர் எக்கூர் மாசாத்தனாரென்றும் சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

**ஒக்கூர் மாசாத்தியார்**.—இவர் செய்யுளில் ஒரு மறக்குடிமகளின் வீரச் செயல் விசேடித்துப் பாராட்டப்பெற்றுள்ளது. இவர் செய்தனவாகக் கிடைத்த பாடல்கள் - 9: அகநா. 3; குறுந். 5; புறநா. 1.

**ஒருசிறைப் பேரியனார்**:—இவர் நாஞ்சில்மலையின் வளத்தையும் அதன் தலைவனது இயல்பையும் பாராட்டியிருக்கின்றார். இவர் பெயர் 'ஒருசிறைப்பெயரினார்', 'ஒருசிறைப்பெயரியனார்' என்று சில பிரதிகளிற் காணப்படுகின்றது. இவராற் பாடப்பட்டோன் நாஞ்சில் வள்ளுவனென்பான். இவர் இயற்றிய பாடல்கள் - 3: குறுந். 1;

நற். 1; புறநா. 1.

ஒருஉத்தனுர்:—இவர் செய்யுளில், ஒரு வீரன் பகைவர் சேனையைத் தனியே நின்று தடுக்கும் மறச்செயலாகிய எருமைமறம் விளக்கப் பெற்றுள்ளது.

ஒல்லையூர்நந்த பூதபாண்டியன்:—புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்திலுள்ள ஒலியமங்கலமென்னும் ஊரிலுள்ள சாஸனத்தால் ஒல்லையூரென்பது அவ்வூரென்று தெரிகின்றது. தென்னுட்டிலுள்ள பூதபாண்டி யென்னுமோரூர் பண்டைக்காலத்தில் இவன்பெயரால் அமைக்கப் பெற்றதுபோலும். போர்க்களத்தில் இவன் கூறிய வஞ்சினவகைகள் அறியற்பாலன; போரில்வல்லவன்; செய்யுள் செய்தலிலும் திறமை யுடையோன்; இதனை இவன் பாடிய பாடல் புலப்படுத்தும்; இவன் பெயர் பூதபாண்டியனெனவும் வழங்கும்; இவன் நட்பினர்: மைய லென்னும் ஊரிலுள்ள மாவன், எயிலென்னும் ஊரிலுள்ளானுகிய ஆந்தை, அந்துவஞ்சாத்தன், ஆதனழிசி, இயக்கன் என்னும் இவர் கள். இவன் மனைவி இவன் இறந்தவுடனே தீயிற் பாய்ந்து

இறந்

தாள். இவன் இயற்றிய பாடல்கள் - 4: அகநா. 1; புறநா. 3.

ஓரம்போகியார்:—இப்பெயர் ஓரம்போதியாரென்றும், ஓரேர்போகியா

ரென்றும் சிலபிரதிகளில் உள்ளது. இவர் ஐங்குறுநூற்றில் மருதத்தைப்

பொருளாகவுடைய முதலாம் நூறு இயற்றிய ஆசிரியர்; மருதத்திணை

யில் மிகப் பயின்றவர்; தமிழ்நாட்டரசர் மூவராலும் பிற உபகாரி

களாலும் நன்கு மதிக்கப்பெற்றவர்; இவைகள் இவரியற்றிய செய்

யுட்களால் புலனாகின்றன. எட்டுத்தொகையில் ஐங்குறுநூற்றின்

முதல்நூறுபாடலை யன்றி இவர் இயற்றினவாக 8 - செய்யுட்கள்

தெரிகின்றன: நற். 2; குறுந். 4; அகநா. 1; புறநா. 1. இவருடைய

செய்யுட்களில் 106 மருதத்திணையின் வளத்தையே புலப்படுத்துவன.



இவராற் பாடப்பட்டோர் சேரமான் ஆதனெழினி, சோழன் கடுமான்கிள்ளி, பாண்டியன், மத்தி, விராஅன் என்னும் இவர்கள்.

இவர்பாடலில் வந்துள்ள ஊர்கள்: ஆமூர், இருப்பை, கழார், தேனூர் என்பன; நதிகள்: காவிரி, வையை யென்பன; விழவு: இந்திரவிழவு; விரதம்: தைந்நீராடல்.

**ஓரேருழவர்:**—வினைமுற்றி மீளும் தலைமகன் தலைமகளைக் காண்டற்கு விரையும் தன்னெஞ்சிற்கு ஈரச்செவ்வியில் விதைவிதைத்தற்பொருட்டுக் கொல்லையை அடைதற்கு விரையும் ஓரேருழவனை உவமை கூறிய சிறப்பால் இவர் இப்பெயர் பெற்றனர்; "ஆடமை புரையும் வனப்பிற் பணைத்தோட், பேரமர்க் கண்ணி யிருந்த வூரே, நெடுஞ்சேணாரிடை யதுவே நெஞ்சே, ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத், தோரே ருழவன் போலப், பெருவிதுப் புற்றன் றாலோ யானே" (குறுந். க௩க) என்பதனால் உணர்க. இவருடைய இயற்பெயர் தெரியவில்லை. தம்முடைய செய்யுளில் இல்லறத்தை வெறுத்துக் கூறுதலின், இவர் துறவறத்தில் விருப்புடையாரென்று சொல்ல இடமுண்டு.

**ஔவையார்:**—இவர் அதியமான் நெடுமானஞ்சியிடம் அமுதமயமாகிய நெல்லிக்கனி பெற்று அவனைப் புகழ்ந்தார். இவர் அக்கனியைப்பெற்றமை இந்நூல் ௯க - ஆம் பாட்டினாலும், "பூங்கமல வாவிசூழ் புல்வேளூர்ப் பூதனையும், ஆங்கவரும் பாற்பெண்ணை யாற்றினையும்-ஈங்கே, மறப்பித்தாய் வாழதிகா வன்கூற்றி னௌவை, அறுப்பத்தா யாமலகந் தந்து" என்னும் வெண்பாவாலும், 100-ஆம் திருக்குறளுக்குப் பரிமேலழகர், 'இனிய கனிகளென்றது ஔவையுண்ட நெல்விக்கனிபோல் அமிழ்தாவனவற்றை' என்று எழுதிய விசேடவுரையாலும் வெளியாகின்றது. இவரால் பாடப்பட்டோர்: அதியமான் நெடுமானஞ்சி, தொண்டைமான், அதியமான்மகன் பொகுட்டெழினி,

நாஞ்சில் வள்ளுவன், சேரமான் மாவெண்கோ, பாண்டியன் கானப் பேரெயில்கடந்த உக்கிரப்பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி யென்பார். இவரியற்றிய பாடல்கள் புறநானூற்றி லன்றி நற்றிணையிலும், குறுந்தொகையிலும், அகநானூற்றிலும், தொல்காப்பிய உரையிலும், யாப்பருங்கலவிருத்தியுரை முதலியவற்றிலும் காணப்படுகின்றன. ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, அசதிக்கோவை முதலியன இவரியற்றிய நூல்களென்பர். இவர் அவ்வச்சமயத்துச் செய்தனவாகவுள்ள தனிப்பாடல்கள் மிகப் பல. பகைவரை நோக்கிக் கூறுவார்போல, அதியமான்நெடுமானஞ்சி யின் குணங்களை இவர் பாராட்டிக் கூறியிருக்கும் பகுதிகளும் அவ

ளுல் தூதனுப்பப்பட்டுச் சென்றபொழுது தன் மேம்பாட்டைப் புலப் படுத்தற்பொருட்டுத் தொண்டைமான் தன் படைக்கலக்கொட்டிலைக் காட்டக் கண்டு அப்படைக்கலங்களைப் புகழ்வார்போல அதியமானது போர்த்திறத்தை வெளிபடுத்தியிருக்கும் பகுதியும் மிக்க வியப்பைத் தைத் விளைவிக்கும். அதியமான் கோவலூரெறிந்ததனைப் பரணர் பாடியதையும் (புறநா. கூகூ), மூவேந்தரும் சேனைகளுடன் பாரியை வெல்லக் கருதி அவன் நகரைச்சூழ்ந்து புகல்போக்கின்றித் தடுத்த போது பறவைகளால் நெற்கதிரைப் புறத்திருந்து வருவித்து உள் நகரத்தாரைப் பசியால் வருந்தாதபடி பாதுகாத்தளித்த கபிலர் செய் தியையும் (அகநா. ௩0௩), பிரிவாற்றாது வருந்திய வெள்ளிவீதியார் என்னும் புலமைவாய்ந்த பெண்பாலாருடைய துன்பமிகுதியையும் (அகநா. ௧௪௭) புலப்படுத்தியிருத்தல் புலவரிடத்து இவருக்குள்ள பேரன்பை விளக்குகின்றது; பழையனூர்க் காரிக்காகச் சென்று ஆடொன்று கேட்டபோது சேரன் இவருடைய மேம்பாட்டை நினைந்து, பொன்னால் ஓர் ஆடு செய்வித்து அளிக்க, இவர் அதனைப் பெற்று மனமகிழ்ந்து, "சேரா! உன்னாடு பொன்னாடு (உன் நாடு பொன் நாடு)" என்று கூறினரென்றும் அதனால் மலைநாடு இது காறும் சிறப்புற்று விளங்குகின்றதென்றும் ஒரு செய்தி வழங்கு கிறது. தம்முடைய கூற்றாகவன்றிப் பாடியிரத்தற்குரிய விறலி முத லியவர்களின் கூற்றுக்களாகவும் இவர் பாடிய பாடல்கள் இந்நூலி லும் பிறநூல்களிலும் காணப்படும். ஆராய்வோர், அதனைக்கொண்டு இவரை விறலி முதலியவர்களாக நினைந்து விரைந்து முடிவுசெய்து விடுதல் மரபன்று; அங்ஙனம் பாடுதல் கவிமரபெனக் கொள்ளுதல் முறை; பிறபுலவர்கள் பாடல்களிலும் இம்முறை காணப்படும். தொகைநூல்களில் இவர் பெயர் ஔவையெனவும் வழங்கும்.

கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி:—இவர் பாண்டியர் குடியிற் பிறந்தவர்; வழுதியாரென்றபெயரே இதனைப் புலப்படுத்தும். பரிபாடலில் திருமாலுக்குரிய ௧௫ - ஆம் பாடலை இயற்றிய இளம்பெருவழுதியார் என்பவரும் இவரும் ஒருவராகவே கருதப்படுகின்றனர்; பரோபகாரச்செய்திகூறல் முதலிய கருத்துக்களில் இருவர்பாடல்களும் ஒத்திருத்தலும் பெயரொற்றுமையும் பிறவும் இக்கருத்தை வலியுறுத்தும். இளம்பிராயத்திலேயே பேரறிவினராக இருந்தது பற்றி இவர் இப்பெயரை அடைந்தனர்போலும்; ஒரு பெரியார்க்குச் சிறுப்பெரியார் என முற்காலத்திற் பெயர் வழங்கிற்று. 'கடலுண் மாய்ந்த' என்னும் அடை, இறந்த பின்பு இவருடைய பெயரின் முன்னர் அமைக்கப்பெற்றதென்பது சொல்லாமலே விளங்கும்;



'துஞ்சிய' என்பதுபோல. சோலைமலையிலுள்ள திருமாலைப் பாடியிருத்தல்பற்றிச் சமயத்தால் இவர் வைணவராகக் கருதப்பெறுகின்றனர். இவர் பாடிய "உண்டாலம்ம" என்னும் இந்நூற்பாடல் சொல்லாலும் பொருளாலும் இனிமை வாய்ந்தது. இவருடைய ஏனை வரலாறுகளைப் பரிபாடற் பதிப்பிற் பாடினோர் வரலாற்றிற் காணலாகும்.

கண்ணகனார்:—இவர் காலத்தவர் கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார், பொத்தியார் முதலியோர்; பரிபாடலில் செவ்வேள் மேலதாகிய ௨௧ - ஆம் செய்யுளுக்கு இசைவகுத்தவர் இவரே. இதனால் இவரை முருகக்கடவுளின் அடியவராகக் கருதுவதற்கு இடமுண்டு. "என்றும், சான்றோர் சான்றோர் பால ராப, சாலார் சாலார் பாலரா

யானையார்.



வாட்டாற்றெழினியாதன்:—இவன் சிறந்த கொடையாளி; வாட்டாறு என்னும் ஊரிலுள்ளவன். இவனைப் பாடிய புலவர் மாங்குடிகிழார்.

விச்சிக்கோன்:—இவன் சிற்றரசருளொருவன். பாரிமகளிரை மணஞ்செய்து கொள்ளும்படி கபிலரால் வேண்டிப் பாடப்பெற்றோன். இவன் சேரமான் குடக்கோவிருஞ்சேரலிரும்பொறையால் வெல்லப் பட்டான்; பதிற். - க ஆம் பத்தின் பதிகம்பார்க்க.

வேளிமான்:—இவன் சிற்றரசன்; மிக்க கொடையாளி; இவன் காலத்தவரும் இவனிறந்தபின்பு பிரிவாற்றாது வருந்திப் பாடியவரும் பெருஞ்சித்திரனார்.

வேங்கைமார்பன்:—இவன் கானப்பேரெயிலின் தலைவன்; பாண்டியன் உக்கிரப்பெருவழுதியால் வெல்லப்பட்டான். இவன்காலத்துப் புலவர் ஐயூர் மூலங்கிழார்.

வேள்எவ்வி:—இவன், *வேளாளருள் உழுவித்துண்போர் வகையினன்; மிழலைக் கூற்றத் தலைவன்; மிகுந்த கொடையாளி; தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனால் வெல்லப்பட்டோன்; "ஓம்பா வீகை மாவே ளெவ்வி", "எவ்வி தொல்குடி", "போரடு தானை எவ்வி" என இந்நாலினும், "எவ்வி யிழந்த வறுமையாழ்ப் பாணர், பூவில் வறுந்தலை போல" (கக) எனக் குறுந்தொகையினும் சான்றோர் இவனைப் புகழ்ந்து கூறியிருத்தல் காண்க. கடற்கரைக்கணுள்ள நீழலென்னுமூர் இவனுடையது; அகநா. ௩௬௬. இவனைப் பாடியவர்கள் : மாங்குடிகிழார், கபிலர், வெள்ளெருக்கிலையார். இவருள், இவன் இறந்தபின் வருந்திப் புலம்பியவர் வெள்ளெருக்கிலையார்.

வேள்பாரி:—இவன் கடையெழுவள்ளல்களில் ஒருவன்; இவன் வரலாற்றைப் பாரி யென்னும் பெயரிற் காண்க.

---

*'வேளாளர் உழுவித்துண்போரும், உழுதுண்போருமென இருவகையினர். அவருள், உழுவித்துண்போர் மண்டிலமாக்களும், தண்டத் தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும், அழுந்தூரும், நாங்கூரும், நாவூரும், ஆலஞ்சேரியும், பெருஞ்சிக்கலும், வல்லமும், கிழாருமுதலிய பதியிற்றோன்றி வேளெனவும், அரசெனவும் உரிமையெய்தினோரும், பாண்டிநாட்டுக் காவிதிப்பட்ட மெய்தினோரும், குறுமுடிக் குடிப்பிறந்தோர் முதலியோருமாய் முடியுடைவேந்தர்க்கு மகட்கொடைக்குரிய வேளாளராம்' தொல். அகத்திணை. சூ. 30, ந.

வையாவிக்கோப்பெரும் பேகன் :—இவன், கடையெழு வள்ளல்களில் ஒருவன்; மலைநாட்டையுடையவன்; மயிற்பறவைக்குப் போர்வை கொடுத்தோன். இவனது ஊர் நல்லூரென்பது; ஆவியர்குடியிற் பிறந்தவன். இதனை இவன் பெயராலும், சிறுபாணாற்றுப்படையாலும் உணர்க. தனக்குரியவளாகிய கண்ணகியென்பவளைத் துறந்ததனால், 'இவளை அங்கீகரித்துக்கொள்க' என்று கபிலர் முதலிய புலவர்களால் இரந்து பாடப்பெற்றான்; 'கண்ணகிகாரணமாக வையாவிக்கோப்பெரும் பேகனைப் பரணர்பாடிய கைக்கிளைவகைப் பாடாண்பாட்டு" (தொல். புறத்திணை. சூ. 35, ந.) "கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய, அருந்திற லணங்கிய னாவியர் பெருமகன், பெருங்க லாடன் பேகனும்" (85 - 7) என்றார் சிறுபாணாற்றுப்படையிலும். இவன்பெயர் பேகனெனவும் வழங்கும். இவனைப் பாடிய புலவர்கள் : பரணர், கபிலர், வன்பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார்.

—:o:—

# *திணைகளும் துறைகளும்.

—:o:—

**திணைகள்:**—கரந்தை, காஞ்சி, கைக்கிளை, தும்பை, நொச்சி, பாடாண்டிணை, பெருந்திணை, பொதுவியல், வஞ்சி, வாகை, வெட்சி.

திணையிறந்துபோன பாட்டுக்கள்:—உசச - ருo, உசுஎ - அ, உஅஉ, உஅகூ, ௩உ௩ - ரு, ௩உரு, ௩ருரு - சுக.

துறைகள்:—அரசவாகை, ஆனந்தப்பையுள், இயன்மொழி, உடனிலை, உண்டாட்டு, உவகைக்கலுழ்ச்சி, எருமைமறம், ஏர்க்களவுருவகம், ஏறாண்முல்லை, கடவுள்வாழ்த்து, கடைநிலை, கடைநிலைவிடை, களிற்றுடனிலை, குடிநிலையுரைத்தல், குடைமங்கலம், குதிரைமறம், குறுங்கலி, கையறுநிலை, கொற்றவள்ளை, செருமலைதல், செருவிடைவீழ்தல், செவியறிவுறூஉ, தலைத்தோற்றம், தாபதநிலை, தாபதவாகை, தானைநிலை, தானைமறம்,

---

*இவற்றின் விளக்கத்தையும் இவற்றிற்குரிய செய்யுளெண்ணையும் 'அரும்பதமுதலியவற்றினகராதி' என்னும் பகுதியிற் காண்க.



துணைவஞ்சி, தொகைநிலை, நல்லிசைவஞ்சி, நீண்மொழி, நூழிலாட்டு, நெடுமொழி, பரிசில்கடாநிலை, பரிசில்விடை, பரிசிற்றுறை, பழிச்சுதல், பாண்பாட்டு, பாணாற்றுப்படை, பார்ப்பனவாகை, பிள்ளைப்பெயர்ச்சி, புலவராற்றுப்படை, பூக்கோட்காஞ்சி, பூவைநிலை, பெருங்காஞ்சி, பெருஞ்சோற்றுநிலை, பேய்க்காஞ்சி, பொருண்மொழிக்காஞ்சி, மகட்பாற்காஞ்சி, மகண்மறுத்தல், மழபுலவஞ்சி, மறக்களவழி, மறக்களவேள்வி, மனையறந்துறவறம், முதல்வஞ்சி, முதுபாலை, முதுமொழிக்காஞ்சி, மூதின்முல்லை, வஞ்சினக்காஞ்சி, வல்லாண்முல்லை, வாண்மங்க

லம், வாழ்த்தியல், வாழ்த்து, விறலியாற்றுப்படை, வேத்தியல்.

துறையிறந்துபோன பாட்டுக்கள் :—உசச - ரு, உசுஎ - அ, உஅஉ, உஅ௫, ௩உ௩ - ௫, ௩௫௫ - எ, ௩௬௧.

திணை துறையில்லாதபாட்டு :—உஅ௬.

---

# விசேடச் செய்திகள்

---

அளவுகள் :—உறை, நாழி, மா, வேலி.

ஆபரணவகை :—அருங்கலம், அருங்கலவெறுக்கை, ஐம்படைத் தாலி, கம்பியாகச்செய்த நூல், கிண்கிணி, குறுவளை, தாலி, தொடி, நெற்றிப்பட்டம், புலிப்பற்றாலி, பொலங்கலம், பொலங்காசு, பொலந் தாமரை, பொற்கம்பி, பொற்றளிர், பொற்றும்பை, பொன்னுழிஞை, மங்கலியசூத்திரம், முத்தாரம், முத்துவடம், முன்கைக் கடகம், யானை யின் நெற்றிப்பட்டம், வள்ளித்தொடி, வளை, வளைந்தகடகம், வீரக்கழல் (வீரகண்டை), வீரவளை.

ஆயுதவகை :—அடார், அம்பறாத்தூணி, அம்பு, அரம், அரிவாள், ஆயுதக்காம்பு, எஃகு, கண்ணாடிதைத்த கேடகம், கணிச்சிப்படை, கலப்பை, கழிப்பிணிப்பலகை, காழெஃகம், கிளிகடிகருவி (தட்டை), குந்தாலி, குறடு, கேடகம், கோடாலி, சக்கரம், சிறியிலையெஃகம், சேறுகுத்தி, தறிகை, துடுப்பு, நவியம், படைவாள், பூண்கட்டிய தண்டு, மழு, வாள், வில், வேல், வேலுறை.

ஆறுகள் :—ஆன்பொருநை (பொருநை), கங்கை, காரியாறு, காவிரி, குமரி, பஃறுளி, பெண்ணை, வையை.



இடவகை :—அம்பலம், அரண்மனை, அரைமண்இஞ்சி, அரைமலை, அறச்சபை, ஆயுதக்கொட்டில், ஆலை, ஆற்றிடைக்குறை, ஆற்றின்கூடல், இடைகழி, இடைமதில், இளமரச்சோலை, இறைப்புரிசை, ஊர்ப்பொது, ஊருண்மரம், எயில், கட்டூர், கடைமடை, கடைமுகம், கரம்பை (பாழ்நிலம்), கருப்பம் பாத்தி, கருப்பாலை, கல்லணை, கல்வளை, கலிங்கு, கவர்த்தவழி, கழனி, கள்ளிற்கடை, காட்டுவழி, காட்டுவாயில், காலை ஓலக்கம், காவற்காடு, குகை, குடம்பை, குதிரைப்பந்தி, குறியஅரண், குறுநெறி, கூடகாரம், கூற்றம், கொற்றுறைக்குற்றில், கோட்டம்பலம், கோடியரடுப்பு, சதுக்கம், சபை, சித்திரமாடம், சில்குடிச்சீறூர், சிற்றரண், சிற்றூர், சிறுமனை, சுடலை, செண்டுவெளி, சேக்கை, சேனைகளின் வரவைப் பார்த்துக்கொண்டு இருத்தற்குரிய இருப்பு, தாதெருமறுகு, திண்ணை, தெரு, நாளோலக்கம், நெற்கதிர் வேய்ந்தவீடு, நெற்களம், பசுத்தொழு, படைக்கலக்கொட்டில், படைவீடு, பணிக்களரி, பாண்சேரி, பாத்தி, பாழூர், பீலிவேய்ந்த குடம்பை, புக்கில், புல்லால் வேய்ந்த சிறுமனை, புலிபொறித்த கோட்டை, புற்று, புறங்காடு, புன்செய், புனம், பூஞ்சோலை, பெருங்குறும்பு, பொதியில் (அம்பலம்), மணற்குன்று, மதில், மதிற்சூட்டு, மலைநாடு, மலைவழி, மாடம், முரம்புநிலம், முல்லைநிலம், முற்றம், முன்னூர்ப்பொதியில், யாகசாலை, யானைக்கூட்டம், வயல், வழி, வன்புலம், வாய்த்தலை, வாயில், விடுநிலம், வீட்டின்இறப்பு, வீடு, வீதி, வேண்மாடம், வேத்தவை, வேலி.

உடை வகை:—கலிங்கம், காழகஆடை, சிதார், சீரை, தழைகளா

லாகிய ஆடை, தழைகளாலும் பூக்களாலுமாகிய உடை, பழந்துணி, புதுக்காழ்ப் போர்வை, புதுமடி, பூவடிவமைந்த ஆடை.

உணவுவகை:—அரிசி, அல்குபதம், அல்லியரிசி, அவல், அவிப்புழுக்கல், அவிழ், ஆட்டிறைச்சி, ஆமைப்புழுக்கு, ஆமை யிறைச்சி, ஆரன்மீன்சூட்டிறைச்சி, இல்லடுகள், இலைக்கறி, இளநீர், உப்பிலாப் புழுக்கல், உலை, ஊன் சோறு, ஊன்றடி, ஊன்றுவை, கட்கலங்கல், கடுங்கள், கந்தாரம், கருனை, கள், களிகொள்சோறு, காடி, குய்யுடையடிசில், கூழ், சுட்டபனங்கிழங்கு, சுடுகிழங்கு, சோற்றுத்திரளை, துவை, நறுநெய், நனைக்கள், நிணப்புழுக்கு, நிணமூரி, நெய், நெய்ம்மிதி கவளம், நெற்கவளம், பழஞ்சோறு, பனநுகும்பு, பனம்பிசிர், பாகு, பாசவல், பாலுலையில் வெந்ததும் தேனொடு கலந்ததுமான வரகரிசிச்சோறு, புல்லரிசி, புளிங்கறி, புளிங்கூழ், புளிமிதவை, புற்கை, பெருஞ்சோறு, பொரியல், மரையான்பாலுலையில் வெந்த சோறு, மான்வறைக்கருனை, மான்றசைப்புழுக்கல், மானிறைச்சி, முயலின் சூட்டிறைச்சி, முயலின் நிணம், மோர், வரகின்சோறு, வராலிறைச்சி,



வறை, விழுக்கு, விழுக்குநிணம், வீரபானம், வெந்தை, வேளையிலை

வேவை (வேளைவெந்தை.)

உலகவகை:—கீழுலகம், கோலோகம், சுவர்க்கம், நாகம், வீரசுவர்க்கம்.

உலோகவகை:—இரும்பு, செம்பு, பொன், வெள்ளி.

உவமைகள்:—அரசனுக்கு உயிர், அருவிக்குத் துகில், அருளுக்கு நீர், அழகிய இடத்திற்கு ஓவம், அழித்தற்குத் தீ, உபகாரியாகிய

ஒருவனுக்கு அருஞ்சரத்தின் மரம், உசாவினது அகலத்திற்கு ஆகாயம், எருமைக்குக் குண்டுக்கல், எருமைக்கொம்பிற்குப் பயற்றுநெற்று, கர்தைத் துணிக்குப் பாசிவேர், கள்மயக்கத்திற்குத் தேளின் கடுப்பு, கலிங்கவுடைக் குப் பாம்பின் தோல், கிணைப்பறைக்குக் களிற்றின் அடி, குடுமிக்கு மானுளை, குதிரைவேகத்திற்குக் காற்றின் வேகம், சாயலுக்கு நீர், செங்நெலுக்கு வேங்கைப்பூ, சேவற்கோழியின் நெற்றிச்சூட்டிற்கு முள்ளுமுருங்கைப்பூ, சேனைக்குக் கடல், தடாரிப்பறைக்குத் திங்களும் யானைக் காற்சுவடும், தமிழ்நாட்டரசர்மூவர்க்கு முத்தீ, தலைவனுக்குச் சூரியன், நண்பர்க்குக் கண், நரைக்கூந்தற்குக் கொக்கின் றூவி, நிணத்திற்கு நெய்விழுதும் மெழுகடையும், நிமிர்ந்த அவிழுக்குக் கொக்கின் நகம், நிரைக்கு விண்மீன், பகைவர்சேனையைத் தடுத்து நிற்கும் வீரனுக்குக் கடலைத் தடுத்து நிற்கும் கரை, பலவகைப் பூக்களாலாகிய மாலைக்கு இந்திரவில், பன்றித்தலைக்கு உரல், பனையினடிக்கு முழா, பாசறைக்குக் கடல், புகழுக்குத் திங்கள், புகைக்கு இருளும் மங்குலும், புதல்வர் தலைக்கு முனிவர்தலை, பொறு மைக்கு நிலம், மகளிர்நடைக்கு மயில்நடை, மணிக்கு முழவு, மதவைப் பிழிந்தகோதுக்கு யானையுண்ட கவளக்கோது, மதுவிற்கு ஆனெய், முத்தா ரத்திற்குப் பிறை, முயல்விழிக்கு நீர்க்கொப்புள், மேகத்தோற்றத்திற்கு மலை, யானைச் செவிக்கு முறம், யானைத்தாளுக்குப் பணை, வண்மைக்கு மாரி, வலிக்குக் காற்று, வறுமைக்கு அரா, வறுமைத்துன்பத்திற்கு நரகத் துன்பம், வீட்டிற்குக் கயம்(நீர்நிலை), வெள்ளைக்கூந்தலுக்கு விரித்தநூல், வேலுக்குக் கெண்டை, வேள்வித்தீக்குத் தாமரை.

ஊர்கள்:—அம்பர், அரிசில் (அரியிலூர்), அரையம், அழும்பில், அள்ளூர், ஆடுதுறை, ஆமூர், ஆய்குடி, ஆலங்கானம், ஆலங்குடி, ஆலத்தூர், ஆவூர், இடைக்காடு, இடைக்குன்றூர், இலவந்திகைப்பள்ளி, ஈர்ந்தூர், (ஈரந்தூர்), உறையூர், உறையூர் ஏணிச்சேரி, ஊணூர், எக்கூர், எயில், எருக்காட்டூர், எருமைவெளி, எறிச்சிலூர் (எறிச்சி), ஐயூர், ஒக்கூர், ஒல்லையூர், கபிலநகர், கரும்பனூர், கருவூர், கழனிவாயில், கள்ளில், காவிரிப்பூம்பட்டினம், கானப்பேர் (காளையார்கோயில்), குடவாயில், குராப்பள்ளி, குளமுற்றம், குறுங்கோழியூர், குன்றூர், கூடலூர், கோட்டம்பலம், கோவலூர், கோவூர், சிக்கற்பள்ளி, சிற்றரையம், சிறுகுடி, செந்தில், செருப்பாழி,



தகடூர், தங்கால், தலையாலங்கானம், தழும்பனூர், திருப்போர் (திருப்பூர்), துவராபதி, துறையூர், தொண்டி, நல்லூர், நாலை (நாலூர்), *நெய்தலங்கானல், நொச்சிநியமம், பாமுளூர், பிசிர், பிடவூர், புல்லாற்றூர், பூஞ்சாற்றூர், பெருங்குன்றூர், பேரரையம், பொருந்தில், பொறையாறு, போந்தை, மதுரை, †மல்லி, மாங்குடி, மாவிலங்கை (இலங்கை, பெருமாவிலங்கை), முகையலூர், முசுறி, முரஞ்சியூர், முள்ளூர், மையல், வஞ்சி, வல்லார், வாகை, வாட்டாறு, விரிச்சியூர், விரியூர், விளங்கில், வீரை, வெண்குடை, வெண்ணி, வெள்ளைக்குடி, வேம்பற்றூர்.

ஊர்திவகை:—குதிரை, சகடம், தேர், யானை.

ஐதிஹ்யம்:—ஆலமரம், சுடுகாடு, தூண், மலை இவற்றில் தெய்வங்களுண்டென்றல்; மேல்கடல் பழையதென்பது.

[முரசுகட்டில்.

கட்டில்வகை:—அரசுகட்டில், ஆயுதக்கட்டில், கால்கழிகட்டில்,

கதைகள்:—கீழ்கடல் சகரரால் தோண்டப்பட்டது, சிபி புறாவிற்காகத் துலையிலேறியது, சீதை ஆபரணங்களை முடிந்துவீழ்த்தியது, பரமசிவன் முப்புரங்களை எரித்தது, பாண்டவர் நூற்றுவரோடு போர்புரிந்தது.

கூத்துவகை:—அல்லியக்கூத்து, குரவைக்கூத்து.

கூற்றங்கள்:—மிழலைக் கூற்றம், முத்தூற்றுக்கூற்றம் (முத்தூர்க் கூற்றம்.)

கோயில்கள்:—இந்திரன்கோயில், சிவாலயம், முருகக்கடவுள் [கோயில்.

சாதிகள்:—அந்தணர், அரசர், அளவர், இடையர், இயவர், உப்பு வாணிகர் (உமணர்), உழவர், எயிற்றியர், கடம்பர், கடைசியர், கம்மியர், களமர், கிணைஞர், கிணைமகள், குயவர், குறத்தியர், குறவர், குறும்பர், கூத்தர், கொல்லர், கோசர், தச்சர், தேர்ப்பாகர், துடியர், துளையர், பரதவர், பறையர், பாடினி, பாணர், பாணிச்சி, புலையர், பூண்செய்கொல்லர், பூவிலைப்பெண்டு, பொதுவிலைமகளிர், பொருநர், மடையர், மழவர், மறத்தியர், மறவர், மோரியர், யவனர், யாழ்ப்புலவர், யானைப்பாகர், யானைவேட்டுவர், வடவடுகர், வண்ணாத்தி, வணிகர், வலைஞர், விலைப்பெண்டிர், வேடர்.

சிறுதெய்வங்கள்:—கள்ளிநீழற் கடவுள், கூளி, நடுகற்றெய்வம், பேய், பேய்ப்பெண்டிர், பேய்மகள், பேயாயம்.

---

* நெய்தல் வாயில் அல்லது நெய்வாசலென்று காவிரிப்பூம்பட்டினத்துக் கருகே ஓரூருள்ளது.

† இப்பெயருள்ள ஊர்கள் பல.

J

தானியங்கள்:—அவரை, உழுந்து, எள், கடலை, குளநெல், கொள், செந்நெல், தினை, நெல், பயறு, மலைநெல், மூங்கில்நெல், வரகு, வெண்சிறுகடுகு, வெண்ணெல், வெள்ளெள், வெள்ளைவரகு.

துவசவகை:—இடபக்கொடி, கருடக்கொடி, துகிற்கொடி, நாட்கொடி, பனைக்கொடி, புலிக்கொடி, மயிற்கொடி, மீனக்கொடி, விசயக்கொடி (வெண்கொடி.)

தெய்வவகை:—அருந்ததி, இந்திரன், இயக்கன், இராமன், உலகபாலர், கண்ணபிரான், காலன், சிவன், ஞாயிறு, திருமகள், திருமால், தூமக்கோள், பலராமர், பிதிரர், பிரமதேவர், முருகக்கடவுள், யமன், விண்மீன்கள்.

தொகைகள்:—அங்கம் - ச; அங்கம் - ௬; அந்தணர் தொழில் - ௬; அரசர்மூவர்; இலாஞ்சனை - எ; உணா - ச; உலகம் - ௩; உழவர் உழாமலுள வாகும் பயன் - ச; ஊர் - ௩00; எச்சம் - அ; எயில் - எ; ஐம்படைத்தாலி; கடல் - எ; கணம் - கஅ; கழல் - உ; காட்டுப்பசு - எ; குடிகள் - ச; திசை - ச; திதி - கரு; தீ - ௩; துரியோதனுதியர் - க00; நாட்டுப்பசு - எ; நீர் - ௩; பாடற்றுறை - உக; பாண்டவர் ஐவர்; பூக்கள் - ச; பூதம் - ரு; பெருவேளிர் ஐவர்; பொறி - ரு; மருந்து - உ; முரசு - ௩; மூர்த்திகள் - ௩; வருணம் - ச; வள்ளல்கள் - எ; வேதம் - ச; வேள்வி - உக.

நாடுகள்:—காட்டுநாடு, காரிநாடு, கொங்குநாடு, கோனாடு, சோனாடு, பறம்புநாடு, பெண்ணைநாடு, மலைநாடு, மாரோக்கம், முக்காவனாடு, வேங்கடநாடு.

**நார்வகை:**—ஆத்திநார், நறைக்கொடிநார், மரல்நார்.

**நீர்நிலைவகை:**—அருவி, ஆறு, உவர்க்கூவல், ஊருண்கேணி, கடல், கயம், களர்நிலக்கிணறு, கற்கூவல், காட்டாறு, சிற்றாறு, சுனை, நிறைக்குளம், பொய்கை, மடு, வல்லுவர்க்கூவல்.

**நீர்மிதவை:**—அம்பி (ஓடம்), அறத்துறையம்பி, கப்பல், கழித்தோணி, தெப்பம், தோணி, நாவாய், மீன்படகு.

**நீர்வாழ்வன:**—அயிரைமீன், ஆமை, ஆரன்மீன், இறாமீன், கயல், கவடி, கெடிற்றுமீன், கொழுமீன், கோட்டுமீன், சங்கு, சிப்பி, சிறுசின்மீன், சுறாமீன், நத்தை, நந்தினேற்றை, நீர்க்கோழி, நீர்நாய், நுழைமீன், மலங்குமீன், முதலை, வரால், வாளை.

**நூல்கள்:**—அங்கங்கள், அருத்தநூல், தருமநூல், வேதங்கள்.

**நோய்கள்:**—நினைவாலுண்டாகும் நோய், பஞ்சி களையாப் புண், புண்வழலை, மிடற்றுப் பசும்புண், வயாநோய்.



**பண்கள்:**—இரங்கற்பண், காஞ்சிப்பண், குறிஞ்சிப்பண், செவ்வழிப்பண், படுமலைப்பண், மருதப்பண், விளரிப்பண்.

**பந்தர்:**—கூவையிலைப்பந்தர், தழைப்பந்தர், படஞ்செய் பந்தர்.

**பரிசில்:**—ஊர்ப்பரிசில், ஓடைப்பரிசில், யானைப்பரிசில் முதலியன.

**பலி:**—குருதிப்பலி, நாட்பலி.

**பழவகை:**—ஆலம்பழம், களங்கனி, துடரிப்பழம், நெல்லிக்கனி, பலாக்கனி, பனம்பழம், மாங்கனி, விளாங்கனி. [றடிக்கச்செல்லல்.

**பழமொழி :**—கிளியீடுவாய்த்தாற்போல்வது, கொண்டைமேற் காற்

**பறவைவகை:**—அன்னப்பறவை, ஆந்தை, இதல், ஈசல் (செம்புற்றீயல்), கழுகு (கழுகின்சேவல்), காக்கை, காட்டுக்கோழி, கானக்காக்கை, கிளி, குயில், குருவி, குறும்பூழ், கொக்கு, கோட்டான், செவ்வரி நாரை, தும்பி, தூக்கணங்குருவி, தேனீ, நாரை, பருந்து, புதா, புறவு, பூழ், பேராந்தை, பொருவல், மயில், மனைக்கோழி, மிஞிறு, வானம்பாடி.

**பாத்திரங்கள்:**—உண்கலம், கட்குடம், கருங்கலன், கவிக்குந்தாழி, கிண்ணி, குடம், குடை (உண்கலம்), குண்டிகை, கோய், சமைக்கும் பானை, சாடி, சேறுபட்ட தசும்பு, தாலம், தாழி, பனங்குடை, பாற்பானை, பானை, பொற்கலம், மண்டை, மதுக்குடம், மிடா, முதுமக்கட்டாழி, வட்டி, வெண்மண்டை, வெள்ளிக்கலம்.

**பால்வகை:**—கவரிமாவின் பால், பசுப்பால், மரையாவின்பால்.

**பாவைவகை:**—அல்லிப்பாவை, கண்மணிப்பாவை, கொல்லிப் பாவை, தெற்றிப்பாவை, மணற்பாவை, வண்டற்பாவை.

**பின்வருவனவற்றை முன் அறிவிப்பவை:**—உற்பாதம், தீயகனு, பழம்புள் போதல், பறவை நிமித்தம், புதுப்புள்வருதல், விண்வீழ் கொள்ளி. [மீன்சுடுபுகை, யாகப்புகை.

**புகைவகை:**—சூளைப்புகை, துகிற்புகை, நறைப்புகை, நாடுசுடுபுகை,

**புளிவகை:**—களாப்பழப்புளி, துடரிப்பழப்புளி, நாவற்பழப்புளி,

நெல்லிப்பழப்புளி, புளியம்பழப்புளி, மாங்கனிப்புளி.

**பொருள்களின் இயற்கை:**—இடி வெள்ளை நிறத்தது, நிலத்திற்கு நீர் முந்தியது, புலி இடப்பக்கத்தில் வீழ்ந்ததை உண்ணாது, பூமிக்குக் கீழே நீர்நிலையுண்டு, மலையில் ஆவியுண்டாகும், மழைநீர்த் துளி கடலில் வீழ்ந்து முத்தாகும், யானை தன்மேலே ஒருவனெறிந்த கல்லைக் கவுளில் அடக்கிவைத்திருந்து பின்னர்க் காணும்பொழுது அதனை யெறிந்து அவனைக் கொல்லும், யானைப்போர்க்கு வேற்படை



உரித்து, யானைமதம் மணமுடையது, யானையிறைச்சியைப் விரும்பும், விளக்கொளியில் மான் துயிலும்.

புலி

**மணிகள்:**—அரவீன்றமணி, சிப்பிமுத்து, தென்கடன் முத்து, நீலமணி, பவழம், மலைபயந்த மணி, மாணிக்கம், யானைக்கொம்பின் முத்தம்.

மரமுதலியன:—அதிரல், அல்லி, அலரி, அவரை, ஆசினிமரம், ஆத்தி, ஆம்பல், ஆம்பற்கிழங்கு, இரவமரம் (இரமரம்), இருப்பை, இருவாட்சி, இலந்தை, இலைப்பாசி, ஈந்து, ஈரப்பலா, உடை, உழிஞைக் கொடி, உழுஞ்சில், உன்னம், ஊகம்புல், எருக்கு, எள், ஓடு, கடம்பு, கடல்முள்ளி, கண்பு, காந்தை, கருநெய்தல், கரும்பு, கழற்கொடி, கழைக் கரும்பு, கள்ளி, களாச்செடி, காஞ்சி, காந்தள், காரைச்செடி, காளாம்பி, காளான், கீரை, குச்சுப்புல், குமிழ், குரலிக்கொடி, குருந்தமரம், குளநெல், குன்றி, கூதளம், கூவிளை, கூவை, கொற்றானுழிஞை, கொன்றை, கோங்கு, சந்தனம், சிறுகடுகு, சுரபுன்னை, சுரைக்கொடி, செங்கழுநீர், செருந்தி, தகரமரம், தருப்பைப்புல், தாமரை, தாழை, தாளிச்செடி, தில்லைமரம், தினை, துடரி, தும்பை, தெங்கு, தெறுழ்க்கொடி, நரந்தப்புல், நாந்தம், நறும்புல், நாவல், நெட்டி, நெருஞ்சி, நெல்லி, நொச்சி, பகன் றைக்கொடி, பருத்தி, பலா, பனை, பாகல், பாதிரி, பீர்க்கு, புளி, புளிமா, புன்னை, பூவாதுகாய்க்குமரம், மரல், மருதம், மலைமல்லிகை, மிளகு கொடி, முஞ்ஞை, முசுண்டை, முண்முருங்கை, முல்லைக்கொடி, முல்லைப்புதல், முன்னமரம், மூங்கில், மூங்கில்முளை, வடகுன்றத்துச் சாந்தம், வயலைக்கொடி, வள்ளிக்கிழங்கு, வள்ளிக்கொடி, வள்ளைக்கொடி, வாகை, வாழை, விளாமரம், வெட்சி, வெண்காந்தள், வெண்சிறுகடுகு, வெண்ணெட்டி, வெள்ளரி, வெள்ளெருக்கு, வேங்கை, வேம்பு, வேல், வேளை.

மலைகள்:—இமயம், கண்டீரம், குடகமலை, குதிரைமலை, கொண் கானம், கொல்லி, கோடை, தோட்டி, தோன்றி, நாஞ்சில், பறம்பு, பாயல், பூங்குன்றம், பொதியில், பொன்படுநெடுவரை, முதிரம், முள்ளூர் மலை, விச்சிமலை, வேங்கடம்.

[மன்றம்.

மன்றவகை:—இரத்திமன்றம், பலாமன்றம், விளாமன்றம், வேப்ப

மாலைவகை:—அடையாளமாலை, ஆத்திமாலை, ஒருகாழ்மாலை, கடன்முள்ளிப்பூமாலை, கண்ணி, காஞ்சிப்பூமாலை, காந்தட்பூமாலை, சூடர்மாலை, கூவிளங்கண்ணி, சுரபுன்னைப்பூமாலை, செம்பூங்கண்ணி, தழைமாலை, தளிர்மாலை, தளிரும் உழிஞையும் கலந்தமாலை, தும்பை மாலை, நரந்தப்பூமாலை, நூலரிமாலை, பகைமாலை, பல்காழ்மாலை, பனந் தோட்டில் வேங்கைப்பூக்களை வைத்துத் தொடுத்தமாலை, பனமாலை,



பீலிக்கண்ணி, புறத்திணைமாலை, புன்னைமாலை, பூக்களுடன் இலைகளை விரவிக்கோத்தமாலை, வஞ்சிமாலை, வளையமாலை, வேப்பமாலை.

**முடிமன்னர்:**—சேரர், சோழர், பாண்டியர்.

**முள்வகை:**—இடுமுள், உடைமுள், கயல்முள், கழல்முள், கள்ளிமுள், நெருஞ்சிமுள், வேல்முள்.

**யுத்தவகை:**—அறப்போர், கன்னிப்போர், குதிரைப்போர், தேர்ப்போர், நீர்ப்போர், மற்போர், யானைப்போர், வாட்போர், விழவு மேம்பட்ட போர், விற்போர், வேற்போர்.

**வழக்கங்கள்:**—அரைத்த மண்ணால் மதிலமைத்தல், அவலை வாயிலடக்கிக்கொண்டு நீந்துதற்கு மடுவிற்பாய்தல், ஆகுதிசெய்தல், ஆபரணங்களில் அருப்புத்தொழிலமைத்தல், ஆம்பலிலையால் மதுவை யுண்ணல், ஆம்பற்கொடியை வளையாக அணிதல், ஆயுதங்களுக்கு நெய்பூசிப் பீலி யணிந்து மாலைசூட்டல், ஆறலைத்தல், இசைகேட்போர் தலையசைத்தல்,

இறந்தவர்க்குப் பிண்டோதகக் கிரியைசெய்தல், இறந்தவருடம்பைச் சுடுதல், உடலை வெறுத்துத் துறக்கவிரும்பினோர் வடக்கிருத்தல், உடன் கட்டையேறல், உடைப்பை மீனுலடைத்தல், உப்பு முதலிய பண்டங்களை வண்டியிலேற்றிக்கொண்டுபோய் விற்றல், ஊர்காப்பாளர் பறையறைந்து கொண்டு விளக்குடன் யாமந்தோறுஞ் சென்று ஊரைக்காத்தல், ஊர்ப் பொதுவிடத்திற் பரிசிலர் தங்கல், கடாவடித்தல், கடாவிடல், கடிமரந் தடிதல், கழற்கனியாற் கூந்தலை வகிர்தல், கள்ளையுண்டோர் புளிச்சுவையை விரும்பல், களம் வேட்டல் (களவேள்விசெய்தல்), களவேள்வியிற் கூழை இடந்துழந்தடுதல், களைகளைதல், காலையில் மதுவை யுண்ணல், காவற்குத் தீயிடல், குதிரையை இடவாய் வலவாய் செலுத்தல், குழந்தைகளுக்கு அம்புலி காட்டல், கைம்மைநோன்பு நோற்றல், கோலாற் கடைந்து விறகில் நெருப்பெடுத்தல், சூதாடுதல், சூளுறல், தயிர்கடைதல், தருப்பைப்புன்மேல் பிண்டம் வைத்தல், தருமவோடம்விடுதல், தாளித்தல், தாளியடித்தல், தாளைப்பாடல், தானியங்களைக் குத்தல், தீவேட்டல், தூய்மைஇல்லாமகளிர் கலந்தொடாமை, தெய்வதுவே சமுற்று மனிதர் ஆடுதல், தைத்தல், நல்லவேளைபார்த்துப் புறப்படல், நாட்கடாவழித்தல், நாட்சோறளித்தல், நீரில் மூழ்கி மண்ணெடுத்தல், நீலமணியை உச்சியில் தரித்தல், நெய்யை உலையாக வைத்தல், நெல் உகுத்துக் கடவுளைப் பரவுதல், நோயாலிறந்த அரசருடம்பைத் தருப்பையிற் கிடத்தி வாளாற் பிளத்தல், பகைவரிடமிருந்து கவர்ந்தபசுக்களைப் பொதுவிடத்தில் நிறுத்தல், பகைவருடைய அரணிற் கொண்டபொருள்களைப் பரிசிலர்க்குக் கொடுத்தல், பன்னுடையாற் கள்ளைவடித்தல், பனங் குருத்தில் வேங்கைப்பூவைவைத்துத் தொடுத்தல், பாலில் உறையைத்



தெறித்தல், பிணத்தைத்தாழியாற்கவித்துப் புதைத்தல், புதிதுண்ணல்,

புறத்திணைக்குரிய பூக்கள் பொன்னாற் செய்யப்படல், புறத்திணைக்குரிய பூக்களைக் காலத்திற் பறித்தல் அல்லது வாங்கிக்கோடல், பெண்டிர் பருத்திநூற்றல், பொதுவிடத்துள்ள வேப்பந்தளிரைச் சூடல், போர்க்களத்தைத் தமதாக்கிக்கோடல், போர்க்குச்செல்வோர் கயத்தில் மூழ்கிச் செல்லல், மணியை ஒப்பமிடல், மருந்திற்காக மரங்களிலிருந்து பாலெடுத்தல், மழையின்பொருட்டுத் தெய்வத்திற்குப் பலிதூவுதல், மன்றத்திற் பாணர் முதலியோர் முழவைக் கட்டுதல், யானைக்குப் பூணணிதல், யானையின்மீது கொடியெடுத்தல், யுத்தத்தில் இமைத்தவர் முதலியவரோடு போர்செய்யாமை, வஞ்சிபாடல், வயாவுற்றமகளிர் மண்ணுண்ணல், வாழையிலையிலுண்டல், வீரமுரசை நீராட்டல், வெறியாடல், வேட்டையாடல், வேலுக்குப் பீலியணிதல்.

வாணிகம்:—உடைவாணிகம், ஓலைவாணிகம், கள்வியாபாரம், கூலவாணிகம், பொன்வாணிகம்.

வாத்தியங்கள்:—அரிப்பறை, அனந்தற்பறை, ஆகுளிப்பறை, ஆம்பற்குழல், உடுக்கை, ஏற்றுத்தோல்முரசம், ஒருகட்பறை, ஒருகண்மாக்கிணை, கண்விடுதூம்பு, காலைமுரசம், கிணை, சல்லிப்பறை, சாக்காட்டுப்பறை, சிறுகிணை, சிறுபறை, சீறியாழ், செருப்பறை, தடாரிப்பறை, தண்ணுமை, நெய்தற்பறை, பதலை, பலிபெறுமுரசம், பெருவங்கியம், பேரியாழ், போர்ப்பறை, மணப்பறை, மத்தளம், முரசம், முழவு, யாழ், வேய்ங்குழல்.

வாழ்த்துவகை:—ஆற்றுமணலினும் நின் ஆயுள் சிறக்க, கழனியில் விளையும் நெல்லினும் நீ வாழ்க, காவிரிமணலினும் நின் ஆயுள்சிறக்க, நின் தார் வாழ்க, நின் தாள் வாழ்க, நின்நாண்மீன் நிலைத்திடுக, நின்பகடுவாழ்க, நின்புரவிவாழ்க, பொருநை மணலினும் நீ வாழ்க, மழைத்துளியினும் பலநாள் நீ வாழ்க, வாழ்க நின் கண்ணி, விண்மீனினும் உன்னுடைய நாள் பொலிக.

விலங்குமுதலியன :—அணில், ஆடு, ஆமான், ஆமை, ஆவேறு, ஆளி, இரலைமான், ஈர், உடும்பு, எய்ம்மான், எருது, எருமைக்கடா, எலி, எறும்பு, ஐந்தலைநாகம், கடமானேறு, கடுவன், கலைமான், கவரிமா, கழுதை, கறை யான், காட்டுப்பசு, காட்டுப்பூனை, குதிரை, குரங்கு, குரற்பசு, குறுநரி, கேழற்பன்றி, சிங்கம், சிலைப்பேன், செம்மறியாடு, செம்முகக்குரங்கு, தேள், நரி, நாய், பசு, பல்லி, பன்றி, பாம்பு, பார்வைப்பிணை, புலி, புள்ளி மான், பேன், மந்தி (தய்த்தலைமந்தி), மரையா, முசுக்கலை, முயல், முள் ளம்பன்றி, யாளி, யானை, வீட்டெலி, வெண்ணரி, வெருக்குவிடை, வெள் ளாடு.



விழாக்கள் :—கடற்றெய்வ விழா, சிறுசோற்றுவிழா, யுத்தவிழா, வதுவைவிழா.

வேலிகள் :—இடுமுள்வேலி, கழன்முள்வேலி, நெல்விவேலி, பருத்திவேலி, மலைவேலி, முல்லைவேலி, முள்வேலி.

வேள்வி :—அறக்களவேள்வி, சோமயாகமுதலியன, மறக்கள [வேள்வி.

வேறுபெயர்கள் :—அடிக்கும் மணி, அதட்படுக்கை, அமிழ்தம், அரக்கன், அரில், அழற்பள்ளிப்பாயல், அறக்கற்பு, ஆகுதி, ஆணி, ஆயுத இலக்கம், ஆயுதப்பிடி, ஆரக்கால், ஆரநெருப்பு, ஆலம்பொந்து, ஆலம்வீழ், இந்திரவில், இராசசூயம், இலக்கம், ஈமவிளக்கு, உப்பு, உரல், உருளி,

உருளை, உலக்கை, உலைக்கல், உள்ளிடுபெருக்கை, எண்ணெய், எந்திரம், எரிகொள்ளி, எழுத்தாங்கிய கதவு, ஏணி, ஏத்தம், ஏர், ஓடுங்காழ்ப்படலை, ஒத்தல் (தாளம்), ஓலைக்கடை, ஓமகுண்டம், கச்சு, கச்சை, கடகப்பெட்டி, கடல்முத்து, கடற்றூரம், கடிவாளம், கடுந்தெற்றுமூடை, கடைக்கொள்ளி, கண்ணாடி, கண்ணேணி, கணக்காயர், கணையமரம், கதவு, கருங்கல், கப்பற்பாய், கரும்பின்பூ, கரும்பினெந்திரம், கவசம், கவரி, கழிப் பிணிப்பலகை, கற்பகச்சோலை, காம்பு, காமரம், காவற்பெண்டு, காவன் மரம், கிணைப்பறைக்கோல், கிளியீடு, குப்பி, குப்பை, குயவன்சக்கரம், குரல்நரம்பு, கூடு, கைகவரிரும்பு, கொங்கர், கொளுத்து, கொற்றக் குடை, கோல், சக்கரவாளசக்கரவர்த்திகள், சங்கிலி, சித்திரம், சிறுகாடு, சிறுதூறு, சுவர், சுள்ளி, சுளகு, சூடு, சூரபன்மா, சூளை, செருப்பு, சேம வச்சு, தலையடுப்பு, தலையாட்டம் (உளை), தவம், தாள்நிழல், திறை, தீக்கடைகோல், தூண், தூண்டில், தேர்மொட்டு, தொடிமாணுலக்கை, நடுகல், நரம்பு (தந்தி), நல்வினை, நாய் (சூதாடுகருவி), நாராசம், நிறைக் குளப்புதவு, நீலக்கச்சை, நுகம், நூலிழை, நெற்கூடு, நெற்சூடு, நெற்பொலி, நெற்போர், பஞ்சு, படஞ்செய்பந்தர்க்கல், படப்பை, படமடை, படுக்கை, பரிசம், பருக்கைக் கல், பறவைக்கூடு, பன்னுடை, பனிச்சை, பனைப்போழ், பா, பாடை, பாதகம், பாய், பாய்மரம், பின்படை, புலிநிறக் கவசம், புலிப்பொறி, புறச்சமயத்தோர், பூணூல், பொற்றைக்கல், மடல், மத்து, மலைத்தாரம், மறுபிறப்பு, மார்பிற் செம்பொறி, மாலைப்பந்து, மிளகுமூடை, மீப்பாய், மூட்டை, முரசடிக்கும் குறுந்தடி, முருக்கமர இலக்கம், முருகன் யானை, முன்படை, முனிவர், மூதிற்பெண்டிர், மேழி, யாகபத்தினி, யாகம், யானைக்கம்பம், யானைத்தந்தத்தாற் செய்யப்பட்ட துலாக்கோல், யானைத்தந்தப்பூண், யானைமணி, யூபத்தம்பம், வண்டிப் பார், வலை, வளைமுறி, வன்னித்துடுப்பு, வார், வாழைப்பூ, விமானம், விளக்கு, வீரச்செல்வம், வேணுவியோர், வேலுறை.

——: o :——

# உரையின் இயல்பு

---

முகவுரையில் தெரிவித்தபடி புறநானூற்றிற்கு உரை இயற்றிய ஆசிரியர்பெயர் முதலிய வரலாறுகளுள் ஒன்றும் கிடைக்கவில்லை. இவரைப்பற்றி அறிந்துகொள்ளுவதற்குக் கருவியாக இருப்பது இவருடைய உரை ஒன்றே. இவருடைய உரைநடையின் அமைதியும் உரைநயமும், இலக்கணம் கூறும் திறமும், பிறவும் இளம்பூரணர், பேரா சிரியர், நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார் முதலியவர்களுடன் ஒப்பக்கருதும் அறிவுடையவராக இவரைப் புலப்படுத்துகின்றன. தமிழ் நாட்டின் பண்டைக்கால வரலாறுகளையும் தமிழர் ஒழுக்க முதலியவற்றை யும் அறிவிக்கும் கருவூலமாகிய இந்நூலுக்கு உரைவகுக்கப் புகுந்த தொன்றே இவர் பேராற்றலுடையாரென்பதைப் புலப்படுத்தும்.

ஆற்றொழுக்காகச் செய்யுளிற் சொற்கிடக்கை அமைந்தவாறே பொருள் கூறிச்செல்லுதலும், எளியநடையில் உரைவரைதலும், பிறரைக் கண்டியாமல் அவர்கள் கூறும் பலதிறப்பட்ட பொருள் வேறுபாடுகளையும் எடுத்துக் கூறுவதும், இன்றியமையாதவற்றைமட்டும் சுருக்கமாக உரைப் பதும், விளக்கும்பொருட்டு வினைமுடிவு காட்டுதலும் இவ்வுரையாசிரிய ருடைய சிறப்பியல்புகள். இவருடைய உரை பதவுரையாக விளங்கு கின்றது.

ஒவ்வொரு சொல்லுக்கும் மூலத்திலுள்ள முறையிலேயே உரைகூறும் பொழுது சில இடங்களில் கருத்தை விளக்குதற்குரிய சொற்களைப் பெய்து வரைதல் இவருடைய வழக்கம். கடவுள் வாழ்த்துச் செய்யுளில் இறைவனுடைய திருமிடற்றிலுள்ள கறையைப்பற்றி, "அக்கறை மறை நவிலந் தணர் நுவலவும் படுமே" என்று சிறப்பித்துள்ள பகுதிக்கு, 'அக்கறுப்பு, தான்மறுவாயும் வானோரை உய்யக்கொண்டமையின் வேதத்தைப் பயிலும் அந்தணராற் புகழவும்படும்' என்று அது புகழப்படுதற்குரிய காரணத்தையும் உடன்பெய்துரைத்தார். இங்ஙனமே, "அப்பிறை, பதினெண் கணனு மேத்தவும் படுமே" என்றவிடத்து, 'அப்பிறைதான் பெரியோன் சூடுதலால் பதினெண்கணங்களாலும் புகழவும்படும்' என்று உரைகூறினர். "இருநிலத்தன்ன நோன்மை" (கச) என்றவிடத்து 'துளக்கபடாமையின் பெரிய நிலம்போன்ற வலியினையும்' என்று



கூறினர். "நாடனென்கோ ஊரனென்கோ, பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்ப னென்கோ" (சக) என்னும் பகுதிக்கு, 'குறிஞ்சிநிலமுடைமையால் நாடனென்று சொல்லுவேனோ? மருதநிலமுடைமையால் ஊரனென்று சொல்லுவேனோ? நெய்தனிலமுடைமையால்........சேர்ப்பனென்று

சொல்லுவேனோ?' என்று பொருள்கூறினர். "மையன்மாலை" (சுஎ) என்பதற்கு, 'தமியராயினோர்க்கு மயக்கத்தைச் செய்யும் மாலைப்பொழுது' என்றும், "பகைவர், ஓடுகழற் கம்பலை கண்ட" (கஉ௦) என்பதற்கு, 'பகைவரது புறக்கொடுத்தோடும் வீரக்கழலினது ஆரவாரத்தைக் கேட்டு நாணிப் பின்செல்லாது கண்டுநின்ற' என்றும், "பீடின்மன்னர்" (கஅஅ) என்பதற்கு, 'பிறர்க்கீயும் பெருமையில்லாத அரசர்' என்றும் கூறினர்.

இங்ஙனம் பெய்துரைக்கும் முறையிற் சிலவிடங்களில் தாம் அங்ஙனம் கூட்டியுரைத்தமைக்குரிய காரணத்தை வெளியிடுவர்:—

"நின்மதனுடை முழவுத்தோளோச்சித் தண்ணென, வீசியோயே" (ஞ௦) என்பதில், 'வீசியோயே' என்பதற்கு, 'சாமரத்தாற் குளிரவீசினாய்' என்று உரைவகுத்துவிட்டு, 'முழவுத்தோளோச்சியெனவும், தண்ணென வீசியோயெனவும் கூறியவாற்றால், சாமரையென்பது பெற்றாம்' என்று அதற்குரிய காரணமும் காட்டினர். "முன்னுள்ளுவோனைப் பின்னுள்ளினேனே, ஆழ்கென் னுள்ளம் போழ்கென் னாவே, பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே" (கஅஉ) என்னும் பாடப்பகுதிக்கு, 'யாவரினும் முன்னே நினைக்கப்படுமவனைப் பின்பே நினைத்தேன் யான்; அவ்வாறு நினைந்த குற்றத்தால் எனதுள்ளம் அமிழ்ந்திப் போவதாக; அவனையன்றிப் பிறரைப் புகழ்ந்தநாவும் கருவியாற் பிளக்கப்படுவதாக; அவன் புகழன்றிப் பிறர் புகழைக் கூறக்கேட்ட எனது செவியும் பாழ்பட்ட ஊரின்கட் கிணறு போலத் தூர்வதாக' என்று பலசொற்களைப் பெய்துரைத்து அங்ஙனம் உரைத்ததன் காரணத்தை, 'முன்னுள்ளு வோனைப் பின்னுள்ளினேனென உள்ளம் ஆழ்தற்குக் காரணங் கூறினமையால், பிறரைப் புகழ்ந்த நாவெனவும், பிறர்புகழ்கேட்ட செவியெனவும் ஏனையவற்றிற்கும் காரணம் வருவித்து உரைக்கப்பட்டது' என்பதனால் அறிவிக்கின்றார்.

### மாறிக் கூட்டுதல்.

இன்றியமையாத சில இடங்களில் மாறிக் கூட்டியுரைத்தல் இவர் இயல்பு. அங்ஙனம் கூட்டும்பொழுது அதனைத் தனியே எடுத்துக் கூறுவதோடு சில இடங்களில் அதற்குரிய காரணத்தையும் உணர்த்துவர் :—

“வார்கோற், செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர்” (௫௧) என்றவிடத்து, ‘செறிந்த உள்ளிடுபருக்கையையுடைய சிலம்பினையும் நீண்டகோற்றொழிலாற் செய்யப்பட்ட குறிய வளையையுமுடைய மகளிர்’

K



என்று மாறிக்கூட்டி உரைகூறி அங்ஙனம் கூறியதை விசேடவுரையில், ‘வார்கோற் குறுந்தொடியென மாறியுரைக்கப்பட்டது’ என்று அறிவித்தனர். ‘உணவின் பிண்டம் உண்டிமுதற் றூதலான், உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரென மாறிக்கூட்டுக’ (௧௮) எனவும், ‘சுரம்பல கடந்து புள்ளிற் போகி’ (௪௭) எனவும் வேறுபல இடங்களிற் கூறுதலும் காண்க.

**பழஞ்செய்யுட்பகுதியை உரைநடையாக உரைத்தல்.**

இவர் பழையநூல்களிலுள்ள செய்யுட்பகுதிகளை இடையிட்டு எழுதுவர் :—

“நிற்றிறஞ் சிறக்க” (௬) என்பதற்கு, ‘படைகுடி முதலாகிய கூறுபாடுகள் சிறக்க’ என்று உரையெழுதியிருத்தல், “படைகுடி கூழமைச்சு நட்பா ரணறும், உடையா னரசரு ளேறு” என்னும் திருக்குறளின் நிலைவி

விருந்தெழுந்தமை காண்க. "பல்கதிர்ச் செல்வன்" (கூச) என்னும் தொடருக்கு, 'வாழ்நாட்கு அலகாகிய பலகதிரையுடைய செல்வன்' என்று இவர் உரைத்த உரையில், "வாழ்நாட் கலகாய் வயங்கொளி மண்டிலம்" என்னும் நாலடிச் செய்யுட்பகுதி யமைந்திருக்கின்றது. "புரவலர்" (கூகூ) என்ற சொல்லுக்கு, 'ஈத்தளிப்போர்' என்று உரைகூறினர்; இவ்வுரை, "இன்சொலா லீத்தளிக்க வல்லாற்கு" என்னும் குறளே அடியொற்றியது. "கவிழ்ந்தமண்டை" (கூ) என்ற தொடருக்கு 'ஏலாது கவிழ்ந்த என் மண்டை' என்று உரை எழுதுகையில், புறநானூற்றிலுள்ள வேறொரு செய்யுளின் அடியாகிய "ஏலாது கவிழ்ந்தவென் னிரவன் மண்டை" (கஎகூ) என்பது நினைவிலிருந்ததென்றே தோற்றுகின்றது. "உழுத நோன்பக டழிதின் றாங்கு" (கஉரு) என்னும் உவமையை விளக்கி, 'தாளாற்றலாற் செய்தபொருளில் நல்லனவெல்லாம் பரிசிலர்க்கு வழங்கி எஞ்சியது உண்டலான் அழிதின்றாங்கென்றார்' என்றெழுதிய உரையில் "தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு, வேளாண்மை செய்தற் பொருட்டு" என்னும் குறளின் சொல்லும் பொருளும் அமைந்திருக்கின்றன.

## சொன்னடை.

இவர் செயவென்னும் எச்சத்திற்குப் பொருள் கூறும்பொழுது பரிசு என்னும் சொல்லைக் கூட்டி யுரைப்பர்; இதனை, 'தீப்பிறக்கும் பரிசு முறுகி' (கூஎ), 'மாளும்பரிசு......சொல்லும்' (சக), 'கைவிடும் பரிசு......மாறிய' (இஉ), 'தூங்கும்பரிசு தூக்கி' (கoகூ), 'கொள்ளா வாம்பரிசு' (ககசு), 'மூழ்கும்பரிசு குளிர' (ககூo) முதலியவற்றால் அறியலாம்.

*'வைத்து' என்னும்சொல் இவரது உரைநடையில் இடையிடையே வரும்:—"எம்முளும்" (அஎ) என்பதன் உரையில், 'எங்களுள் வைத்தும்'

---

*பரிமேலழகரது உரைநடையிலும் இது காணப்படும்.



என்றும், வேறோரிடத்தில் (க0சு) 'அவை இரண்டினும் வைத்து எண்ணப் படாத' என்றும் இச்சொல்லைச் சொன்னடையாக அமைத்திருத்தலைக் காணலாம்.

பொழிப்புரையின் பின்னர் விசேடவுரையில் முன்னர்க்கூறிய உரையையன்றி வேறுசில உரைகளையும் கூறி 'எனினும் அமையும்' என்று முடிப்பர். பிறர்கூறும் உரைகளையும் எடுத்துக்கூறுவர். பாடபேதங்களைக் காட்டிச் சில இடங்களில் அவற்றிற்கும் உரைகூறுவர். வினைமுடிவுகாட்டுவதும், சிலசில தொடர்களுக்குப் பதசாரம் கூறுவதும், இலக்கணம் உரைப்பதும், துறைப்பொருத்தம் உணர்த்துவதும் இவர் இயல்பு. இரண்டு வகையாகத் துறைகூறுமிடங்களில் அவ்விரண்டிற்கும் செய்யுட்பொருளோடு பொருத்திக் காட்டுவதுண்டு. சில இடங்களில் துறைப்பொருத்தம் காட்டாமற் செல்லுவதும் உண்டு.

## மாறுபாடு நீக்கல்.

செய்யுளிற் கூறப்பட்ட பொருள் சிலவகைகளில் மாறுபாடாகத் தோற்றுவதற்கு இடமிருப்பின் அம்மாறுபாடுநீங்க, இன்னகாரணத்தால் இங்ஙனம் கூறப்பட்டதென்று தெளிவுறுத்துவது இவர் இயல்பு:—

இரண்டாவது பாட்டில் போற்ருர்ப்பொறுத்தல் முதலியவற்றிற்கு உவமையாக ஐம்பெரும்பூதங்கள் கூறப்படுகையில் அவை நிலன், விசும்பு, வளி, தீ, நீர் என்ற முறையில் அமைக்கப்பட்டுள்ளன. அம்முறை ஐம்பூதங் களின் தோற்றமுறையாகவேனும், ஒடுக்க முறையாகவேனும் இல்லை. இம்மாறுபாட்டை இவர், 'போற்ருர்ப்பொறுத்தல் முதலாகிய குணங் களை அரசியலடைவாற் கூறுகின்ருராதலின் பூதங்களின் அடைவு கூருராயினர்' என்று தெளியவைக்கின்ருர். "ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும், உரனுடை நோன்பகட் டன்ன வெங்கோன்" என்றவிடத்து உயர்ந்த தலைவனுக்கு இழிந்த பகட்டை உவமை கூறுவது குற்றமாகுமோ என்னும் மயக்கத்தை, 'இராச்சிய பாரத்தைப் பொறுத்து நடத்துமாறு நோக்கி நோன்பகட்டோடு உவமித்தமையின், இறப்ப இழிந்த ஆனந்த உவமை அன்ருயிற்று' என்பதனுற் போக்குகின்றனர். சோழன் நலங் கிள்ளியின் பாட்டில் (எரு) "மெல்ல வந்தெ னல்லடி பொருந்தி" என்னும் பகுதியில் தனதடியைத் தானே நல்லடியென்று சொல்லுதல் தற்புகழ்ச்சி யென்னும் குற்றமாமோ என்னும் மயக்கத்தை, '*தன், மேம்பாடு கூறுகின்ற இடமாதலின், நல்லடியென்பது தற்புகழ்த லென்னும் குற்றமாகாது' என்று அகற்றுகின்ருர். "மூவரு ளொருவன் றுப்பா கியரென, ஏத்தினர் தரூஉங் கூழே" (கஉஉ) என்றவிடத்து

---

*நன் சூ. 53.

ஒருவன் என்ற ஒருமையும் ஏத்தினரென்னும் பன்மையும் பொருளொடு பொருந்துமாற்றை, 'ஏத்தினர் தரூஉமென்று பன்மையாற் கூறியது, அவ்வேந்தன் அமைச்சரை; மூவருள் யான் ஒருவன், எனக்குத் துப்பாகியரென அம் மூவரும் ஏத்தினர் தரூஉமென்று உரைப்பினும் அமையும்' என்று தெளியவைக்கின்றார். "பயனின் மூப்பிற் பல்சான் றீரே" (கஃடு) என்றதில் பயனின்மூப்பு என்னும் இழிவுக்கு மாறாகச் சான்றீரென்றிருத்தல் பொருந்துமோ என்னும் ஐயுறவை, 'பயனின்மூப்பென்று வைத்துப் பல்சான்றீரேயென்றது இகழ்ச்சிக்குறிப்பு' என்று போக்குகின்றார். "காலன புனைகழல்" (க00) என்றதில் காலன என்னும் பன்மைக்கு வகை, 'காலன புனைகழல் என்பது வீரத்திற்கும் வென்றிக்கும் கட்டின; போர்தொறும் வென்று கட்டினவெனவுமாம்' என்று புலப்படுத்துகின்றார். பிட்டங்கொற்றனை வாழ்த்தவந்த வடமவண்ணக்கன் தாமோதரனார், "மாறுகொண் மன்னரும் வாழியர் நெடிதே" (களஉ) என்று அவன் பகைஞரையும் வாழ்த்துதல் முரண்பாடுடையதுபோலத் தோற்றி மயக்கம் தருதலை, 'மாறுகொண் மன்னரும் வாழியரென்ற கருத்து: இவன் வென்று திறைகொள்வது அவருளராயினென்பதாம்' என்பதனால் தெரிவிக்கின்றார்.

## சொல்வருவித்துரைத்தல்.

அங்கங்கே துறைப்பொருளொடு பொருந்தும்பொருட்டும் பொருள் முடிபின்பொருட்டும் ஒருசொல் வருவித்து முடிப்பர்:—

'வாழ்த்தியலாதல் விளங்க, வேண்டுமென ஒருசொல் தந்துரைக்கப்பட்டது' (ரு), 'கொளீஇ யென்னுமெச்சம் அமைத்த வென்னும் ஒருசொல் வருவித்து முடிக்கப்பட்டது' (கச), 'செரீஇயென்னும் வினையெச்சத்தை ஆடுமென ஒருசொல் வருவித்து அதனோடுமுடிக்க' (உஉ), 'செய்யென ஒரு சொல் வருவித்து உரைக்கப்பட்டது' (சச) முதலிய இடங்களைக் காண்க.

## வகுத்துக் கூறல்.

செய்யுளிற் கூறப்படும் பொருள்களை இன்னவை இன்னவற்றைச் சார்ந்தனவென்று வகுத்து எளிதிலறியும்படி கூறுவர்:—

'நகர்வலஞ்செயற்கு ப்பணியியரென வீடும், வந்துகை யெதிர் இறைஞ்சுகவென அறமும், புகையெறித்தலான் வாடுகவெனப் பொருளும், முகத்தெதிர் தணிகவென இன்பமும் கூறியவாறாயிற்று' (சு), 'கழறைஇயவல்லாளனென்றதனாற் பகையின்மையும், ஒருபிடி படியுஞ் சீறிடமெழுகளிறு புரக்கும் நாடுகிழவோயென்றதனாற் பொருட்குறைவின்மையும் கூறியவாறாயிற்று' (௨0), 'உற்கமுதலிய நான்கும் உற்பாதமாய் நனவிற் காணப்பட்டன; எயிறு நிலத்து வீழ்தல் முதலாயின கனவிற் காணப்பட்டன.'



### கூற்றுவிளக்கல்.

இன்னரால் இன்ன காலத்தில் இது கூறப்பட்டதென்று விளக்குவர்:—

'தாம் நினைந்த நினைவு எவ்வண்ணமாவதென்று தம் நெஞ்சொடு கூறிப் பின் பொலிக நம்புகழேயென அவ்வரசர் கிடந்தவாறு கண்டு கூறியவாறு' (சுஉ), 'உளையக் கூறியதனைத் தம்மிடமிருந்து கூறியதாகவும், சிறுசொற் சொல்லியதனைப் போர்க்களத்து எதிர்ப்பட்டுக் கூறியதாகவும் கொள்க' (எஉ), 'இது, பரிசில்பெறப் போகின்றான் வருகின்றவரைக் கண்டு வினவுவான் பண்ணனது இயல்பு கூறிவாழ்த்தியவாறு' (களூ), 'இவன் நிரைகொள்ளச் செல்கின்றமை கண்டார்கள் விலையாட்

டிக்குக் கூறியது' (உடு அ.)

## குறிப்பாலறிந்த பொருள்.

அகப்பொருட்செய்யுட்களுக்கு உரைவகுக்கும் உரையாசிரியர்கள் உள்ளுறையுவமமாகவும், இறைச்சிப்பொருளாகவும் அறிந்து கூறும் பொருளைப்போன்று பாட்டிற் காணப்படும் இன்ன சொற்களின் குறிப்பினால் இன்னபொருள் தோற்றுகின்றதென்றும், இன்ன நயம் புலப்படுகின்றதென்றும் இவர் எழுதிச்செல்லும் இடங்கள் மிக்க இன்பத்தை உண்டாக்கும்.

'கலை புலிப்பாற்பட்டெனச் சிறுமறி தழீஇய மடப்பிணை பறந்தலை வேளை வெண்பூக் கறிக்குமென்பது, அவன் பகைவரைக் கொன்றவழி அவர்பெண்டிர் தம் இளம்புதல்வரை ஓம்புதற்பொருட்டு இறந்துபடாது அடகு தின்று உயிர்வாழ்கின்றாரென்பதோர் பொருள் தோன்றநின்றது' (உரு), 'நின்மலையிற் குறவர்மாக்கள் கடவுட் பேணி மழைவேண்டிய பொழுது பெற்றுத் தாம் வேண்டுமுணவு நுகருமாறுபோல் இவளும் நின் அருள்பெற்று இன்பம் நுகர்வாளாக வேண்டுமென்பதொரு நயந் தோன்ற நின்றது' (கசரு), 'மடத்தகைமாமயில் பனிக்குமென்றருளிப் படாஅ மீத்த . . . . . பேக என்ற கருத்து: இவ்வாறு ஒரு காரணமின்றியும் அருள்பண்ணுகின்ற நீ நின்னால் வருந்துகின்ற இவட்கு அருளாதொழிதல் தகாதென்பதாம்' (கசசு), *'பலவின் கனிகவர்ந்துண்ட கடுவன் மந்தியோடு சிறந்து சேண்விளங்கிக் கழைமிசைத் துஞ்சுமென்றதனால், நீயும் இவளை வரைந்து கொண்டு இன்புற்று வாழ்தல் வேண்டுமென்பது தோற்றி நின்றது' (உ00), 'வேங்கைவீ தாயதுறுகல் இரும்புலி வரிப்புறங்கடுக்கு மென்ற கருத்து: ஏதம்செய்யாததூஉம் ஏதம்செய்வதுபோலக் கண்டார்க்கு அச்சம்வரத்தோன்றுமென்றுமென்றமையான், இதுவும் இகழ்ச்சி தோன்ற நின்றது'.

---

* சிறு. 99.

## வரலாற்றுச்செய்திகள்.

சில இடங்களில் வரலாற்றுச்செய்திகள் சிலவற்றை இவர் கூறுகின்றார்:—

'தான் பேய்மகளானமை தோன்றப் பரிசில் கடாயினளெனவுங் கூறுவாருமுளர்' (கக) என்று பேய்மகள் இளவெயினியின் வரலாறொன்றைப் புலப்படுத்துகின்றார். 'புட்பகையென்பது இவனுக்கு ஒரு பெயர்' (கூஅ) எனச் சோழன் நலங்கிள்ளியைப் பற்றிக் கூறுகின்றார். 'என்றது, தந்தையுடன் வெறுத்துப் போந்தான் அமருட் புகுந்து இப்போர் செய்தானை அவன் விரும்பின் உவக்கின்றான்; விரும்பாவிடின் அஞ்சுகின்றானென்பதாம்' (அக) என்று சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியைப் பற்றிக் கூறுகின்றார். 'பூவார்கா - வானோர் இவன் முன்னோர்க்கு வரங்கொடுத்தற்கு வந்திருந்ததொரு கா' (கூகூ) என்று அதியமான் நெடுமானஞ்சியைப்பற்றிய வரலாறொன்றும், 'ஆய்க்கு அண்டிரனென்பதும் ஒரு பெயர்' (கஙக) என்று ஆயைப் பற்றிய செய்தியொன்றும், 'நன்னன்மருகனன்றியு மென்றதற்குப் பெண்கொலைபுரிந்த நன்னன்போல, வரையா நிரயத்துச் செலியரோ வன்னை யென்றமையின் அதுவும் வரைதற்கு ஒரு காரணமாக உரைப்பாரும் உளர்' என்று நன்னனைப் பற்றிய வரலாறு ஒன்றும், 'மோரியராவார் சக்கரவாள சக்கரவர்த்திகள்' (கஎரு) என்று மோரியரைப்பற்றிய செய்தியும் கூறப்படுகின்றன.

## கருத்துரைத்தல்.

பல இடங்களில், இங்ஙனம் கூறியதன் கருத்து இதுவென்று பல அரிய செய்திகளைக் கூறுவர்:—

'இதனால் நீயும் நீர்நிலைபெருகத் தட்கவேண்டுமென்பது கருத்தாகக் கொள்க' (௧௮), 'நீலமணிமிடற் றொருவன்போல வென்ற கருத்து, சாதற்குக் காரணமாகிய நஞ்சுண்டும் நிலைபெற்றிருந்தாற்போல நீயும் சாவாதிருத்தல் வேண்டுமென்பதாம்' (௯௧), 'பகைப்புலத்தோனென்ற கருத்து: பகைவர்பால் திறைகொண்ட பொருளுடையனாதலின், நீவேண்டியவெல்லாந் தருதல் அவனுக்கு எளிதென்பதாம்' (௧௦௫), 'நீர்பாடிவரினும் பரிசிலர் முன்னே பெற்றமையின், அது நமக்குக் கிடையாதென்பது கருத்தாகக்கொள்க' (௧௧௦); 'பாடினளாய் வரினென்றகருத்து: அவட்கும் அவ்வாறன்றித்தன் பெண்மையால் வென்று கோடல் அரிதென்பதாம்' (௧௧௧), 'தலைப்பெயர்த்திட்டவேலென்ற கருத்து: படைக்கலமில்லாதாரை ஏதஞ்செய்வாரில்லையாதலின், தம்முயிர்க்கு அரணாகப் பெயர்த்திடப்பட்ட வேலென்பதாம்' (௧௫௦), 'மண்டை அகலம் நோக்கி மலர்ந்தவென்ற கருத்து: கொடுக்கும் பொருள் மார்பின்வலியான்உளதாமாகலின், அகலம் நோக்கினவென்றதாகக் கொள்க' (௧௬௬); ௫௪, ௬௫,



௭௪, ௮௫, ௯௭, ௧௧௪, ௧௨௫, ௧௨௭, ௧௫௧, ௧௫௮, ௧௫௯, ௧௬௨, ௧௮௬, ௧௯௮, ௨௦௧, ௨௦௪, ௨௬௬—ஆம் செய்யுட்களின் உரையையும் பார்க்க.

சில இடங்களில் செய்யுட்களிற் சொற்கிடந்தவாறே பதவுரையிற் பொருள் கூறிவிட்டு இங்ஙனம் கூறினாரேனும் கருதியது இன்னதென்று தெளிவுறுத்துதல் இவர் உரைவகைகளில் ஒன்று:—"எம்மு முள்ளுமோ முதுவா யிரவல, அமர்மேம் படூஉங் காலைநின், புகழ்மேம் படுநனைக் கண்டன மெனவே" (சஅ) என்ற செய்யுட்பகுதியைப் பற்றிய விசேட உரையில், 'கண்டனமென எம்முமுள்ளென்றாரேனும், உள்ளிக்கண்டன மெனச்சொல்லென்பது கருத்தாகக் கொள்க' என்றுரைத்ததையும், "குடிமிய வாகபிறர் குன்றுகெழு நாடே" (கூஅ) என்றவிடத்துச் சொற் கிடந்தவாறே பொருளுரைத்தல் மாறுபாடாதலை நினைந்து, 'குன்றுகெழு நாடென்றதாயினும், கருதியது பிறர் நாட்டுக்குன்றுகளென்றதாகக் கொள்க' என்று அமைத்ததையும், வேறொருசெய்யுளில் (க0கூ) 'நான்கு பயனுடைத்தென்றுவைத்து, நெல்விளையும் பழம் ஊழ்க்கும் கிழங்கு வீழ்க்கும் தேன்சொரியுமென்று அவற்றின் செய்கை தோன்றக் கூறினா ரெனினும், கருதியது நெல்லும் பழனும் கிழங்கும் தேனுமாகக் கொள்க' என்று வரைந்ததையும், உ0சு-ஆம் செய்யுளுரையில் 'காட்டகமென்றா ரேனும் கருதியது அதன்கண் மரமாகக் கொள்க' என்று உரைத்ததையும் காண்க.

## நினைவுரைத்தல்.

இங்ஙனமே, இவ்வாறு கூறியது இன்னநினைவுபற்றி யென்றெழுது வது இவருரைத்திறங்களில் ஒன்று:—அன்னச்சேவலைக் கோப்பெருஞ் சோழன்பால் தூதுவிடும் பிசிராந்தையார் செய்யுளில் (சுஎ) அவ்வன்னத் தைப் பார்த்து, "நின், இன்புறு பேடை யணியத்தன், நன்புறு நன்கல நல்குவ னினக்கே" என்ற பகுதியைப் பற்றிய விசேடவுரையில், 'பேடை யணிய நன்கலம் நல்குவனென்றதனாற் பயன்: மறவாது போதல்வேண்டு மென்னும் நினைவாயிற்று' என்பர். சோழன்போர்வைக்கோப்பெருநற் கிள்ளியைப் பாடிய நக்கண்ணையார் பாட்டில், 'உமணர்வெரூஉம் துறை

யன்னனென்றதனுற்பயன் வருத்துங்கூற்றின் ஆடவரையும் மகளிரையும் ஒக்கவருத்துவதல்லது அருளுமாறு கற்றிலனேவென்னும் நினைவிற்று' (அச) என்பர். வன்பரணர் பாடிய பரிசில்விடைத்துறைச் செய்யுளுரையில் (கருஉ), 'பாடுவல்விறலியோர் வண்ணமென்றது நீயும் ஒன்று பாடுவாயாக வென்னும் நினைவிற்று' என்பர். மூவனென்பான் பரிசில் கொடுக்க நீட்டித்த காலத்துப் பெருந்தலைச் சாத்தனுர் கூறிய செய்யுளின் (உ0௧) உரையில், 'நம்மூட் குறுகணி காண்குவதாகவென்றது: நீ என்மாட்டுச் செய்த அன்பின்மையை அவ்விருக்கையன்றிப் பிறர் அறியாதொழிவா



ராகவென்னும் நினைவிற்று' என்பர். வெளிமான் இறந்ததையறிந்து பெருஞ்சித்திரனுர் வருந்திக்கூறியசெய்யுளில், "அவல மறுசுழி மறுகவிற், றவலே நன்றுமற் றகுதியுமதுவே" (உ௩அ) என்றதுகண்டு, 'யான்அது செய்யப் பெற்றிலேனென்னும் நினைவிற்று' என்றுரைத்தார். இங்ஙனம் உரைகூறுதல் ஆசிரியர்களுடைய உள்ளக்கருத்தை உள்ளியறிந்து உரைக்கும் இவரது ஆற்றலைப் புலப்படுத்துகின்றது.

பயனுரைத்தல்.

இது கருத்தென்றும், இது நினைவென்றும் கூறுவதுபோலவே இது பயனென்று சில இடங்களில் இவர் உரைவகுப்பர்:—

சோழன் நலங்கிள்ளியைப் பாடிய உறையூர்முதுகண்ணன் சாத்தனார் அவ்வரசனுக்கு, "வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி, அருளவல்லை யாகுமதி" (உஎ) என்று அறிவுறுத்திவிட்டு, "அருளிலர், கொடாமை வல்ல ராகுக, கெடாத துப்பினின் பகையெதிர்ந் தோரே" என்று கூறுகின்றார். 'பகைவர் கொடாமைவல்லராதலினால் இவனுக்கு என்ன பயன்?' என்ற வினாவெழுங்கால் அதற்குரிய விடை எளிதிற்றோற்றுவதில்லை. இவ்வினாவை இவ்வுரையாசிரியர், 'அருளிலர்கொடாமை வல்லராகுகவென்றதனாற் பயன், *அவையுடையோர் தத்தம் பகைவரை வெல்வாராதலால், பகையெதிர்ந்தோர் அவை இலராகவென்பதாம்' என்று விடுத்தார். "விரைவளர் கூந்தல் வரைவளி யுளர" (கஙஉ) என்பதற்குப் பயன், 'பிறிதொன்றால் இடையூறில்லை யென்பதாம்' என்றார்.

## பெறப்பட்டவை கூறுதல்.

கூறப்பட்ட செய்திகளைக்கொண்டு இவற்றால் இன்னவை பெறப்பட்டன என்று வேறு சிலவற்றைக் கூறுவர்:—

‘சென்றமர் கடத்தல் யாவதென்றதனானும் வாள்போழ்ந்தடக்கலும் உய்ந்தனரென்றதனானும் வந்தோர் பட்டமை விளங்கும்’ (௯); ‘சந்தனப் புகை வேங்கைமிசைத்தவழும் பறம்பெனவே, இவை யொழிய மரமின்மையும், பகைவர் சுடும் புகையின்மையும் கூறியவாறாயிற்று’ (௧௦௮); ‘பெண்டிரும் தம்பதங் கொடுக்குமெனவே ஆடவரும் தம்தரத்தே களிறு கொடுத்தல் போந்தது’ (௧௫௧); ‘விடர்ப்புலி பொறித்த கோட்டை யென்றதனால், சோழனொடு தொடர்புபட்டு அவனுக்குத் தப்பாதல் தோன்றி நின்றது’ (௧௭௪); ‘யானே பரிசில னென்பதனால் நினக்கு என் குறை முடிக்கவேண்டுமென்பதூஉம், அந்தணனென்றதனால் யான் தருதற் குரியேனென்பதூஉம் கொள்ளப்படும்’’ (௨௦௦); ‘பெருங்கடலுண்ணு ராகுப நீர்வேட்டோ ரென்பதனாற் செல்வரேயாயினும் வள்ளியோரல்

*அருளும் கொடையும்.



லார்பாற் செல்லேனென்பதும், உண்ணீர் மருங்கின் அதர் பலவாகுமென்பதனால் நீ வள்ளியையாகலின் நின்பால் வந்தேனென்பதும் கொள்ளப்படும்’ (௨௦௪) என்பவற்றால் இதனை அறியலாகும்.

## இன்னாமைக் குறிப்பு.

நல்லிசைச்சான்றோர்களாகிய புலவர்கள் இன்னாதவற்றை இயன்ற வரையில் மறைத்துக் குறிப்பாகப் புலப்படுத்தும் இயல்புடையவர்கள். அவ்வியல்பை நன்கு அறிந்தவர் இவ்வுரையாசிரியர் :—

‘கோவதை முதலாயின வாக்காற் சொல்லவும் படாமையின், ஆன்

மூலையறுத்த வெனவும், மகளிர் கருச்சிதைத்த வெனவும், பார்ப்பார்த் தப்பிய வெனவும் மறைத்துக் கூறப்பட்டன' (கூ௪); 'இறந்தவென்று சொல்லுதல் இன்னுமையால் போகியவென்ருர்'; (௨௨0) 'படவென்றல் இன்னுமையிற் கைவைத்துறங்கவும் கண் கிழிந்துருளவும் கால்பரிந்துலறவும் கதியின்றி வைகவுமெனத் தகுதிபற்றிக் கூறப்பட்டன' (௨௨௯.)

வழக்கு.

சில இடங்களில் இன்ன உலகவழக்கைக் குறிக்கொண்டது இது வென்றும் இச்சொல் இன்ன நாட்டார் வழக்கென்றும் புலப்படுத்துவர்:—

'உழிஞை - கொற்ருன்; அது குடநாட்டார் வழக்கு' (௫0); 'விரை வளர்கூந்தல் வரைவளியுளரவென்றது, கொண்டைமேற் காற்றடிக்க வென்பதொரு வழக்குப்பற்றி நின்றது' (௧௬௬); 'கிளி . . . . குரலனைய னென்றது கிளியீடு வாய்த்தாற்போல்வனென்னும் வழக்கைப்பற்றி நின்றது' (௧௬அ); 'ஓசையென்றது ஆகுபெயரான் ஓசையையுடைய நியை; இஃது ஒரு திசைச்சொல்' (௨௬௧).

மரபு.

சிவபெருமான், திருமால், பலதேவர், முருகக்கடவுள் முதலியவர் களைப்பற்றிய செய்திகள் வருமிடங்களில் இவர் அவ்வக்கடவுளின் அன்பர்கள் வழங்கும் மரபு பிழையாமல் உரைவகுக்கின்ருர். இது, சிவபிரானுக்குரிய பொருள்களைத் திருவென்னும் அடைகொடுத்து, 'திருநுதல், திருச்சடை, திருமுடி' என்றும் (௧), திருமால் மேனியைத் திருமேனி யென்றும், பலதேவரை நம்பி மூத்தபிரானென்றும் அவரது நிறத்தைத் திருநிறமென்றும், முருகக்கடவுளைப் பிள்ளையாரென்றும் (௫௬) வழங்குவதனுல் உணரலாம்.

உவமைகளை விளக்கல்.

உவமைகள் வந்த இடங்களில் இன்னதற்கு இஃது உவமையென் பதையும் பொதுத்தன்மை இன்னதென்பதையும் வெளிப்படுத்துவர்;

அங்ஙனம் வெளிப்படுத்தும் முறை சுருங்கிய உருவத்தில் இருப்பினும் விளங்கவைக்கும் திறனுடையதாக இருக்கும்.

L



'களிற்றுக்கு நாவாயோடு உவமை எதிர்ப்படையைக் கிழித்தோடலும், திங்களோடு உவமை வாளோர் சூழத் தன்தலைமை தோன்றச்செல்லுதலுமாகக் கொள்க' (கரு); 'மன்னர்க்கு இடையனும், அவர் படைக்குச் சிறுதலையாயமும், கோதைநாட்டிற்குப் புலிதஞ்சவியன்புலமும் உவமையாகக் கொள்க' (ருச); 'திங்கள் நாள்நிறைமதியத்தனையை யென்றது, அறிவும் நிறைவும் அருளும் முதலாகிய குணங்களால் அமைந்தாயென்றவாறும்' (கOஉ); இங்ஙனம் உள்ள பிற இடங்களையும் கண்டு கொள்க.

வடசொல்லாட்சி.

இவரது உரைநடை பெரும்பாலும் செந்தமிழ்ச்சொல் நிறைந்ததாக இருப்பினும் ஒரோவிடங்களில் சில தமிழ்ச்சொற்களுக்கு வடசொற்களைக் கொண்டு இவர் பொருளெழுதியுள்ளார். கடனென்பதற்குப் பிண்டோதகக் கிரியையென்றும், மருந்தென்பதற்குப் பரிகாரமென்றும், ஒளிறுமென்பதற்குப் பாடஞ் செய்யுமென்றும், அறமென்பதற்குத் தர்மமென்றும், பூண்டென்பதற்குப் பரித்தென்றும், ஓம்புதலென்பதற்குப் பரிகரித்தலென்றும் இடங்களையும் இவற்றைப்போன்ற பிறவற்றையும் காண்க.

குறிப்புமொழி.

அங்கங்கே நல்லிசைப்புலவர்கள் குறிப்பாகப் புலப்படுத்தியிருக்கும் பகுதிகளைச் சுட்டி, 'இது குறிப்புமொழி, இஃது இகழ்ச்சிக்குறிப்பு' என்று தெளிவுறுத்தலை இவர் உரையிற் பல இடங்களிற் காணலாம்:—

பாரிமகளிர் தம் தந்தையின் பகைவராகிய வேந்தரை, "வென்றெறி முரசின்வேந்தர்" (கக௨) என்றதை, 'ஈண்டு இகழ்ச்சிக்குறிப்பாய் நின்றது' என்பர். பரிசில்கொடாமல் நீட்டித்த நன்மாறன்பால் ஆலூ மூலங்கிழார், "நோயில ராக நின்புதல்வர்", "சிறக்கநின் னாயுள்" (ககசு) என்று கூறியவற்றைக் குறிப்புமொழி யென்பர். இங்ஙனமே, 'வாழ்க நின்கண்ணியெனவும் நீடுவாழியவெனவும் நின்றவை குறிப்புமொழி' (ககூஅ), 'வெலீஇயர் நின்வேல் என்றது குறிப்புமொழி' (௨௦௨), 'யான் களிறின்றிப் பெயராநின்றேனென்பது கருத்தாகலின், நோயிலையாகுக வென்பது இகழ்ச்சிக்குறிப்பு' (௨௦௫), 'புலம்பை மூன்றுறத்துக்கொண்டு போகாநின்றேனென இரங்கிக் கூறியவதனால், வாழியர் குருசிலென்பது இகழ்ச்சிக்குறிப்பாயிற்று' (௨௧௦), 'இன்சிறுபிண்டமென்றது இகழ்ச்சிக் குறிப்பு' (௨௩௪) என்ற இடங்களில் உரைத்தல் காண்க.

### இன்ன சிறப்பென்றுரைத்தல்.

சில செய்யுட்களின்பின் இவற்றால் இன்ன சிறப்புக் கூறப்பட்டது என்று பகுத்துக் கூறுதல் இவர் உரைவகுப்பினுள் ஒன்று. **பதிற்றுப் பத்து** உரையாசிரியரும் இங்ஙனம் கூறுவர்:—



'இது கொடைச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் கூறியவாறு' (கூ௫, க௩௦); 'இதனால் அவன் இன்பச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் கூறியவாறு' (கசு) என வரும் இடங்களைப் பார்க்க.

## நயங்கள்.

இவருடைய உரையிலுள்ள நயங்கள் பலபடியாகப் பகுத்து அறிந்து இன்புறுதற்குரியன. சிலசில இடங்களில் இவர் அமைத்திருக்கும் உரை இவருடைய உலகியலறிவையும், பொருளியலறிவையும், கல்விச் சிறப்பையும் புலப்படுத்துகின்றன:—

"எருத்து வவ்விய புலி" (௪) என்பதற்கு, 'கழுத்தைக் கவ்வி உதிரம் உவற்றியுண்ட புலி' என்று விரித்துக்கூறும் உரை இவர் ஒவ்வொரு பொருளின் இயல்பையும் அறிந்து உரையெழுதும் திறலினரென்பதைப் புலப்படுத்துகின்றது.

"வழிபடு வோரை வல்லறி தீயே" (௧0) என்ற விடத்து அதன் கருத்தை, 'அறிந்து அவர்களுக்கு அருள்செய்வை யென்பதாம்' என்று புலப்படுத்தல் பலநூல்களில் வந்துள்ள அத்தகைய பிரயோகங்களுக்கு நல்லுரைகாணத் துணையாகின்றது.

தாமப்பல்கண்ணனார் மாவளத்தானை இகழ்ந்ததற்கு இரங்கிப்பாடிய செய்யுள் அரசவாகையாதலே, 'பொறுத்தற்கரிய பிழையைப் பொறுத்த குணவென்றியான் அரச வாகையாயிற்று' (௪௩) என்று தெளிவுறுத்திய பகுதி இவருடைய நுண்ணறிவைக் காட்டுகின்றது.

"இளைய னிவனென வுளையக் கூறி" (எ௨) என்ற இடத்து இவனென்ற அண்மைச்சுட்டு நெடுந்தூரத்திலுள்ள பகைவர் கூற்றாக அமையுமோ என்ற ஐயத்தை, 'இவனென்றார் தம் கருத்துக்கண் அணுமையால்' என்று நீக்குவதால் படிப்பாருக்கு இன்னதை விளக்கவேண்டுமென்பதை யறிந்து உரையெழுதுபவரென்று அறியலாம்.

'பொய்கூறாமையிற் செந்நாவென்றார்; தற்புகழ்ந்தாராகாமற் சிறு செந்நாவென்றார்' என்ற உரையினால் இவர் நல்லிசைப்புலவரின் சால்பை நன்கறிந்தவரென்பது போதரும்.

"ஆறெனி மறந்த கோடிய ரடுப்பின்" (கசுச) என்றவிடத்து, 'அடுதலை மிகவும் மறத்தலால் தேய்பின்றி உயர்ந்த அடுப்பென்றாராம்' என்றும், "நெடுமொழி மறந்த சிறுபே ராளர்" (களஅ) என்றவிடத்து, 'நெடுமொழி மொழிதலாற் பேராண்மையும், பின் அதனை மறத்தலாற் சிறுமையு முடைமையின் சிறுபேராளர் என்றார்' என்றும், "முழூஉவள்ளூரமுணக்கு மள்ள" (உகக) என்றவிடத்து, 'அரசுதுறந்து வடக்கிருந்து உயிர்நீத்த உள்ளமிகுதியால் மள்ளவென்றார்' என்றும், "வல்வின் மறவ ரொடுக்கங் காணுய், செல்லல் செல்லல் சிறக்கநின் னுள்ளம்" (உடுக) என்றவிடத்து,



'செல்லவென்றது அவரைக்கண்டு பொருது கொன்றன்றிச் செல்லவென்பதாம்' என்றுமெழுதிய பதசாரங்கள் மிக்க இன்பத்தை விளைவிக்கின்றன.

'நட்டோரை யுயர்பு கூறினனென்றது, தான் உயர்த்துக் கூறவே யாவரும் உயர்த்துக்கூறுவரென்பதாம்" (உகூக) என்றது இவருடைய உலகியலறிவை விளக்குகின்றது.

### இலக்கணக்குறிப்பு.

இவர் அங்கங்கே எழுதிச் செல்லும் இலக்கணங்கள் பலவகைப்படும். எச்சத்திரிபுகளையும், அசைநிலைகளையும், விகாரங்களையும், அடுக்கு இடைச்சொல்

முதலியவற்றுற் பெறப்படும் பொருள்களையும் எடுத்துக் கூறுவார். புறப்பொருட்டுறைகளைச் செய்யுட்பொருளோடு பொருத்திக்காட்டுவதன்றிச் சில இடங்களில் சிலதுறைகளுக்குப் புறப்பொருள் வெண்பாமாலையிலிருந்து மேற்கோள்காட்டுவர். அங்ஙனம் இவர் காட்டிய துறைகள், பரிசில்விடை, வல்லாண்முல்லை, ஆனந்தப் பையுள், தாபதநிலை, முதுபாலை,
தோற்றம் என்பன.
உண்டாட்டு, செருமலைதல், தலைத்

சில இடங்களில் இஃது இன்ன அணியெனப் புலப்படுத்துவதுண்டு: இவ்வாறு இவர் கூறியிருக்கும் அணிகள்: உவமை, ஒட்டு, தலைப்பெயலுவமை, தற்குறிப்பேற்றம், நுவலாநுவற்சி, பழித்ததுபோலப் புகழ்தல், புகழ்வதுபோலப் பழித்தல், வெளிப்படை.

இவர் கூறியுள்ள இலக்கணக்குறிப்புக்கள் வருமாறு:—

அசைநிலையும்மை, அசைநிலையோகாரம், அடுக்கு இரங்கற்குறிப் புணர்த்தல், அடுக்கு விரைவின்கண் வருதல், அடை, அத்தையென்னும் அசைநிலை, அம்மவென்னும் அசைநிலை, அம்ம கேட்பித்தற்கண் வருதல், அல்லீற்றுத் தனித்தன்மைவினை, அல்லீற்று வியங்கோள், அல்வழிச் சாரியை, ஆகுபெயர், ஆங்க என்னும் அசைநிலை, ஆங்கதென்பது ஒருசொல், ஆங்சேன்னும் அசைநிலை, ஆசாசேன்னும் இரங்கற்குறிப்புப் படுமொழி, ஆல்என்னும் அசை, ஆலுருபு விரித்தல், ஆற்றலாற் போந்த பொருள், இகழ்ச்சிக்குறிப்பு, இசினேன்பது தன்மைக்கண் வருதல், இசினேன்பது படர்க்கைக்கண் வருதல், இடத்துநிகழ் பொருளின் தொழில் இடத்துமேல் ஏறிநிற்றல், இடவழுவமைதி, இடைக்குறை, இயீற்று வியங்கோள், இருமுறை கூறுதலால் ஆதரவு தோற்றல், இழிவுசிறப்பும்மை, இறப்ப இழிந்த ஆனந்தஉவமை, இன்னென்னும் அசைநிலை, இன்னென்னும் சாரியை, உம் உந்தாய் நிற்றல், உம்மை இசை நிறை, உம்மை எஞ்சிநிற்றல், உம்மை விகாரத்தால் தொகுதல், உயர்திணை ஆறனொருமையில் அதுவெனுருபுகெடக் குகரம் வருதல், உருபுமயக்கம், உருபு விரித்துரைத்தல், உலமரலென்னும் உரிச்சொல், உவமங்கருதாத.

அடை, உவமை, எச்சத்திரிபு, எச்சவும்மை, எதிர்காலச்சொல் இறந்த காலப் பொருட்டாய் நிற்றல், எதிர்மறை வினையெச்சமுற்று, எனவென்னும் அசைநிலை, எனவென்னும் எண்ணிடைச்சொல், ஏ யென்னும் அசைநிலை, ஐ என்னும் அசைநிலை, ஐகாரம் முன்னிலையை யவிளக்கி நிற்றல், ஐகாரம் விகாரத்தால் தொகுதல், ஒட்டன்றி ஒருபெயராய் நிற்கும் தொடர், ஒப்பில்போலி, ஒருசொல்வருவித்து வினையெச்சத்தை முடித்தல், ஒருமை பன்மை மயக்கம், ஒன்றேவென்னும் எண்ணிடைச்சொல், ஓ என்பது அசைநிலைப்பொருளிலும் வியப்புப் பொருளிலும் வினாப் பொருளிலும் வருதல், ஓர் என்னும் அசைநிலை, ஓரிடத்திலுள்ள சொல்லை எங்குந் தந்துரைத்தல், கடைக்குறை, கண் என்னும் அசைநிலை, கருவிகருத்தாவாய் நிற்றல், காலமயக்கம், குடிமை ஆண்மைத்தொடக்கத்தன உயர்திணைபெறுதல், குறிப்பிற்றோன்றல், குறிப்புமொழி, குறிப்பு வினையெச்சம் எதிர்மறைவினையின் முதனிலையோடு முடிதல், குறுகி நிற்றல், கொல்லென்பது அசைநிலையாகவும் ஐயப்பொருளிலும் வியப்புப் பொருளிலும் வருதல், சிறப்பும்மை, சின் என்னும் இடைச்சொல் முன்னிலை வினைச்சொல்லோடு அசைக்கப்பட்டு நிற்றல், சினைவினை முதல்வினை கொள்ளல், செய்தென் வாய்பாட்டு வினையெச்சம் செயவெனத்திரிதல், செய்தெனெச்சம் வினைக்குறிப்பொடு முடிதல், செய்யுள்நோக்கி விரித்தல், செய்யுள்விகாரம், செயவெனெச்சம், செயவெனெச்சம் பிறவினையொடு முடிதல், செயவெனெச்சம் வினைக்குறிப்பொடுமுடிதல், சொற்றொடர் ஒருசொல் நடைத்தாதல், சொற்றொடர் பெயர்மாத்திரையாக நிற்றல், தகுதிபற்றிக் கூறல், தலையென்னும் அசைநிலை, தானென்னும் அசைநிலை, திசைச்சொல், தில்லென்பது அசைநிலையாகவும் விழைவுப்பொருளிலும் வருதல், தொகுதல், தொகுதி ஒருமை, நிரனிறை, படர்க்கைச்சொல் முன்னிலைக்கண் வருதல், பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை, பண்பொட்டு, பன்மை ஒருமை வழுவமைதி, பன்மை பெருமிதந்தோன்ற நிற்றல், பிறவென்

அசைநிலை, பிறவினை தன்வினையாய் நிற்றல், பெயர் மாத்திரையாய் நிற்றல், பெயரெச்சம் பெயரோடு முடிதல், பொதுவினை, பொருணைக் கால் முடிவு பெறுதல், மதியென்னும் அசைநிலை முன்னிலையில் வருதல், மற்று என்னும் அசைநிலை, மறைப்பொருள், மன் ஆக்கப் பொருளிலும் ஒழியிசைப் பொருளிலும் கழிவுப்பொருளிலும் வருதல், மன் என்னும் அசைநிலை, மா என்னும் அசைநிலை, மாதோ என்னும் அசைநிலை, மாறிக் கூட்டுதல், மாறென்னும் ஏதுப்பொருள்தரும் இடைச்சொல், முதற்கேற்ற அடையடுத்த ஆகுபெயர், முற்றுவினைக்குறிப்பு, முன்மொழி நிலையல், முன்னிலைப்பெயரோடு படர்க்கைப்பெயர்கள் விராய் வந்து முன்னிலை வினையால் முடிதல், முன்னிலையேவல், முன்னிலை வினைச்சொல்



மெலிந்து நிற்றல், மோ என்னும் முன்னிலை அசைச்சொல், வகரவீற்றுச் செயவெனெச்சம் வகரங்கெட்டுமுடிதல், வலித்துநிற்றல், வழக்கு, வாய்பாடு, வாழியென்னும் அசைநிலை, விகாரம், வியப்பின்கட்குறிப்பு, வினைக்குறிப்பு ஆக்கம்பெறுதல், வினைக்குறிப்புமுற்று, வினைத்தொகை, வினைமுடிவு, வினையெச்சக்குறிப்பு, வினையெச்சம் குறிப்புவினையோடு முடிதல், வினையெச்சம் பெயரெச்சமறையோடு முடிதல், வினையெச்சம் பெயரெச்சவினையொடு முடிதல், வினையெச்சம் வருவித்துரைக்கும் சொல்லொடு முடிதல், வினையெச்சமுற்று, வினையெச்சவினைக்குறிப்பு முற்று, வெளிப்படை, வேண்டாவென்பது வினைமேனின்றதொருசொல்.

---

# பாட்டு முதற்குறிப்பகராதி.

---

[எண் - செய்யுளெண்.]

அடுநையாயினும்
அடுமகண்முகந்த
அணங்குடைநெடுங்
அணங்குடையவுணர்
அணித்தழைநுடங்க
அத்தநண்ணிய
அதளெறிந்தன்ன
அந்தோவெந்தை

அமரர்ப்பேணியு

அரிமயிர்த்திரண்

அருப்பம்பேணு

அருவிதாழ்ந்த

அருவியார்க்கும்

அருளாயாகலோ

அரைசுதலைவரினு

அலங்குகதிர்சுமந்த

நீர்ப்பெருங்குண்டு
துடியெறியும்புலைய
தூங்குகையான்
தூர்ந்தகிடங்கிற்
தேண்கடல்வளாகம்
தென்குமரிவடபெரு
தென்பரதவர்
தென்பவ்வத்து
தேஎங்கொண்ட

தேஎந்தீந்தொடை

தொடியுடையதோண்

தோஞுதோஞ

நகுதக்கனரே

நஞ்சுடைவாலெல்யிற்

நரம்பெழுந்து

நல்யாழாகுளி

நல்லவுந்தீயவு

நள்ளிவாழியோ

நளிகடலிருங்
நளியிருமுந்நீர்நாவாய்
நளியிருமுந்நீரேணி
நறவுந்தொடுமின்
நறுவிரைதுறந்த
நன்றாய்ந்தநீணிமிர்
நனிபேதையே
நாகத்தன்னபாகார்
நாட்கள்ளுண்டு
நாடனென்கோ

நாடாகொன்றோ
நாளன்றுபோகி
நிரப்பாதுகொடுக்கும்
நிலம்பிறக்கிடுவது
நிலமிசைவாழ்நர்
நிறப்படைக்கொல்காய்
நின்னயந்துறைநர்க்
M

புறவிணல்லல்

பூவற்படுவிற்
பேரிதாராச்

பெருங்களிற்றடி
பெருஞ்சோறுபயந்து
பெருநீர்மேவ
போய்கைநாரை
பொய்யாகியரோ
பொரிப்புறப்பூழின்

பொன்வார்ந் தன்ன
பொன்னுந் திகிரு
போர்க்குரை இ
போற்றுமின்மறவீர்
மட்டுவாய்திறப்பவு
மடங்கலிற்சினை இ
மடத்தகைமாமயில்
மண்கொளவரிந்த
மண்டமரட்ட

மண்டிணிந் நிலனும்

மண்முழா மறப்ப

மணிதுணர்ந் தன்ன

மதிநிலாக் கரப்ப.

மதியேர் வெண்குடை

மதிநுனை ஞாயில்

மயங்கிருங் கருவி

மரைபிரித் துண்ட

மலைவான் கொள்கென

மழைக்கணஞ்

மழையணிகுன்றத்

மன்பதைகாக்கு

மன்றப்பலவின்

மன்றவிளவின்

மன்னுலகத்து

## பாட்டு முதற்குறிப்பகராதி.





முற்றுமில்லாத பாட்டுக்கள் :— ௨௬௭, ௨௬௮.

முதலில்லாத பாட்டுக்கள் :—௩௨௮, ௩௭௦.

இடையிற் சில பகுதிகள் இல்லாத பாட்டுக்கள் :—

௨௮௨, ௨௮௩, ௨௮௫, ௨௮௮, ௩௦௬, ௩௧௭, ௩௨௧, ௩௨௩, ௩௨௮, ௩௩௩, ௩௩௪, ௩௩௫, ௩௩௭, ௩௩௯, ௩௪௦, ௩௪௧, ௩௪௫, ௩௪௭, ௩௫௨, ௩௫௩, ௩௫௭, ௩௬௧, ௩௬௨, ௩௬௬, ௩௭௩, ௩௭௭, ௩௭௯, ௩௮௦, ௩௮௩, ௩௮௪, ௩௮௭, ௩௮௮, ௩௯௦, ௩௯௧, ௩௯௩, ௩௯௫, ௩௯௬, ௩௯௮, ௩௯௯, ௪௦௦.

பிற்பகுதியில்லாத பாட்டுக்கள் :—௨௪௪, ௩௫௫, ௩௬௧.

—:o:—

## பிழையும் திருத்தமும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௨௫ | .. 19 .. | | |
| ௩௪, ௩௫ | .. 32,18 .. | | |
| ௩௭ | .. 7 .. | | |
| ௪௧ | .. 13 .. | | |

| | | | |
|---|---|---|---|
| ௫௪ | .. | 7 | .. |
| ௫௬ | .. | 12 | .. |
| ௭௧ | .. | 8 | .. |
| ௮௯ | .. | 15 | .. |
| ௧௧௪ | .. | 34 | .. |
| ௧௩௦ | .. | 13 | .. |
| ௧௪௬ | .. | 30 | .. |
| ௨௧௫ | .. | 35 | .. |
| ௨௪௧ | .. | 5 | .. |

| | | | |
|---|---|---|---|
| ௫௪௨ | .. | 4 | .. |
| ௫௫௫ | .. | 12 | .. |
| ௫௭௫ | .. | 34 | .. |
| ௫௮௮ | .. | 18 | .. |
| ௬௩௧ | .. | 4 | .. |
| ௬௬0 | .. | 33 | .. |
| ௬௬௪ | .. | 4 | .. |
| ௬௬௮ | .. | 27 | .. |
| ௬௭௧ | .. | 3 | .. |

| | | |
|---|---|---|
| ௫௲ | | ௫௧ |
| பேர். | .. | தேய்வச். |
| வ்வாறு | .. | இவ்வாறு. |
| வண்டுமௗவிலே | .. | வேண்டுமௗவிலே |
| குன்றத்திருந்த | .. | குன்றத்திறுத்த . |
| சென்று உதைத்த | .. | சென்றுதைத்த. |
| நாடு | .. | ஆடு. |
| அவம் | .. | அவலம். |
| ஏரி | .. | எரி. |
| முரசுட்டி | .. | முரசுகட்டி. |
| பேர். | .. | தேய்வச். |
| 3 தட | .. | 2 தட. |
| வமர்கண் | .. | வமர்க்கண் |
| மறியுனனுய் | .. | மறியுநனுய் |

| | | |
|---|---|---|
| வன்மையிற் | .. | வண்மையிற் |
| வேளி | .. | வேளி. [பினும். |
| யென்றுரைப்பினும் | .. | யென் று முரைப் |
| களத்திற்கேற்ப | ... | தாளத்திற்கேற்ப. |
| ஓலிநரம்பால் | ... | ஓலிநிரம்பா |
| உஉகூ | .. | உகூகூ. |
| கழீஅய | .. | கழீஇய. [தாலீ |
| குடித்ததால் | .. | குடித்த மயக்கத் |
| களிறு | .. | களிறுங். |
| காவில் | .. | காவின். |
| காஞ்சிதுஞ்சும் | .. | காஞ்சித்துஞ்சும். |
| ஞூதைத்த | .. | ஞூதைத்த. |
| திரையாக | .. | திறையாக. |
| தியம்ப்ப | .. | தியம்பப் |
| குழே=உகுழு | .. | குழேஉ=குழே. |
| எறிச்சலூர் | .. | எறிச்சிலூர். |

| | | |
|---|---|---|
| வேல்கெழு | .. | வெல்கெழு. |
| போகா | .. | போகாமை. |
| மாறென்னுடைச் | .. | மாறென்னு மிடைச் |

---

உ

கணபதி துணை

# எட்டுத்தொகையுள்

எட்டாவதாகிய

# புறநானூறு

## மூலமும் உரையும்.

(க) கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பிற் றாருங் கொன்றை
யூர்தி வால்வெள் ளேறே சிறந்த

---

1. கண்ணி - ஆடவர் தலையிற் சூடுதற்குரிய மாலை; "பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்" (முருகு. 44); கார்நறும் கொன்றை:

"காரிஞர் மலர்க்கொன்றை தாங்கு கடவுள்", "கார்க்கொன்றை மாலை லந்த துண்டோ" (தேவாரம்); கொன்றைமாலை சிவபெருமானது அடையாள மாலை யென்பர்; கலி. க௫௦: 1; சீவக. 208, ந.

2. தார் - மார்பிலணியுமாலை; "மார்பொடு விளங்க வொருகை, தாரொடு பொலிய வொருகை" (முருகு. 112 - 3); "பொலந்தார் மார்பி னெடியோன்" (மதுரை. 61); "புனை தார்ப் பொலிந்த வண்டுபடு மார்பின்" மலைபடு. 56.

1 - 2. "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த், தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்" அகநா. கடவுள்.

3. "ஒன்றுனுங் குறைவில்லை யூர்திவெள் ளேறு" (தே.); "வால் வெண் சுண்ணம்" (மணி. ௬ : 18); "வால் வெண்டோடு - இளைய வெள் ளிய தோடெனினுமமையும்; 'ஊர்திவால்வெள்ளேறே' என்றாகலின்" சிலப். க௬ : 35, அடியார்.

1 - 3. "கண்ணி......ஏறே யென்புழிக் கொன்றையையும் ஏற்றையும் இடைவந்த சொற்கள் விசேடித்து வந்தன" தொல். எச்ச. சூ. 59, ந.



சீர்கெழு கொடியு மவ்வே றென்ப
கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை
மறைநவி லந்தணர் நுவலவும் படுமே
பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத்
தன்னு ளடக்கிக் கரக்கினுங் கரக்கும்
பிறைநுதல் வண்ண மாகின் றப்பிறை

3 - 4. புறநா. ௬௬ : 1 - 2.

5. "இயங்கலு மியங்கு மயங்கலு மயங்கும்" (சிலப். ௨௨ : 154); "சுழலலுஞ் சுழலு மோடலு மோடும்....நீடலு நீடும்", "தமபெரும் பற்று நீங்கலு நீங்கார்" (மணி. ௩: 111 - 3, அ: 57); "முரிமுரிந்த வென் பதனை, 'அணியலு மணிந்தன்று' என்றாற்போலக் கொள்க" (சீவக. 2310, ந.); "கறைமிட றணியலு மணிந்தன்றென்புழிக் கறை மிடற்றை அழகு பெறுதலையுஞ் செய்ததென....முழுதும் காரியவாசகமாயே நின்றவாறு காண்க" (தோல். வேற்றுமைமயங்கு. சூ. 29, ந.); வேற்று மைக்கண் றகரம் மிகாமைக்கு இவ்வடி மேற்கோள் (நன். மயிலை. சூ. 182; நன். வி. சூ. 183; இ - வி. சூ. 102, உரை); "விடரும்வந் தீசன் கோல மிடற்றினி னீல வண்ண, வடிவுபெற் றணிய தாகி வயங் கிற்றுப் பெரிது மென்றால், கொடியரும் பெருமை யோரைக் கூடின்வெங் கோது நீங்கி, ஒடிவறு நலம்பெற் றுய்த லுரைப்பதெ னுலகி னம்மா" (பாகவதம், அ: கடல்கடைந்த. 24); "அணியலுமணிந்தன்று : ஒரு பொருட் பன்மொழி" (நன். மயிலை. சூ. 397); கறை மறுவெனப் படுதல்: "விண்ணினூர் புக்ழ்தற் கொத்த விழுமியோ னெற்றி போழ்ந்த, கண்ணினன் கண்டந் தன்மேற் கறையையார் கறையன் றென்பார்" (துண்டல.); "பாவகத்தைப் பாவித்தலென்பது, 'கறைமிட றணியலு மணிந்தன்று' என்றது போலக் கொள்க" (சிவஞானபோதம், பொது வியல்பு. சூ. 6, மேற்.); கறை அழகு செய்யு மென்பதை, "கடுக்கவின் பெறு கண்டனும்" (திருவிளை. நகரப்.) என்பதனால் உணர்க.

6. நவிலல் - கூறியடிப்படல்; "நாவிடை நன்னூ னன்கன நவிற்றி" மணி. கரு: 24.

9. புறநா. ருரு : 4 - 5; "பிறைநெற்றி யோடுற்ற முக்கண்ணி ஞர்", "பிறை தாங்கு நெற்றியர்". "பிறைசேர் [illegible] ணைமார் தவனே" தே.

' ஆகின்று - ஆயிற்று; புறநா. கசஅ: 7.



பதினெண் கணனு மேத்தவும் படுமே
எல்லா வுயிர்க்கு மேம மாகிய
நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே.

கடவுள் வாழ்த்து.

பாரதம்பாடிய பெருந்தேவனுர் பாடியது.

இதன்பொருள்.—திருமுடிமேற் *சூடப்படுங் கண்ணி கார்காலத்து மலரும் நறிய கொன்றைப்பூ; அழகிய நிறத்தையுடைய திருமார்பின் மாலையும் அக் கொன்றைப்பூ; ஏறப்படுவது தூய வெளிய ஆனேறு; மிக்க பெருமை பொருந்திய கொடியும் அவ்வானேறென்று சொல்லுவர்; நஞ்சினது கறுப்பு, திருமிடற்றை அழகுசெய்தலும் செய்தது; அக்கறுப்பு, தான் மறுவாயும் வானேரை உய்யக்கொண்டமையின், வேதத்தைப் பயிலும் அந்தணராற் புகழவும்படும்; பெண்வடிவு ஒருபக்கமாயிற்று; ஆய அவ்வடிவுதான், தன்னுள்ளே ஒடுக்கி மறைக்கினும் மறைக்கப்படும்; பிறை, †திருநுதற்கு அழகாயது; அப்பிறைதான் பெரியோன்

சூடுதலால், பதினெண்கணங்களாலும் புகழவும்படும்; எவ்வகைப்பட்ட உயிர்களுக்கும் காவலாகிய, நீர் தொலைவறியாக் குண்டிகையானும்

---

10. பதினெண்கணன்: "ஒன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்" முருகு. 168.

9 - 10. பிறை தொழுதேத்தப்படுதல் : "தொழுதுகாண் பிறையிற் றோன்றி" (குறுந். கஎஅ); "ஒள்ளிழை மகளி ருயர்பிறை தொழூஉம், புல்லென் மாலை" (அகநா. உசுக); "குழவித் திங்க ளிமையவ ரேத்த, அழகொடு முடித்த வருமைத்து" (சிலப். உ: 38 - 9); "அப்பிறை, பதினெண் கணனு மேத்தவும் படுமே யென்றூர் புறப்பாட்டினும்" (சிலப். உ : 38 - 9, அடியார்.); வி. பா. குருகுலச். 6.

11 - 2. ஆசிரியப்பாவில் ஈற்றயலடி முச்சீர்த்தாய் வந்ததற்கு இவ் வடி மேற்கோள்; தொல். செய். சூ. 68, பேர்.

13. அருந்தவத்தோன்: "அருந்தவ முதல்வன்" (கலி. கOO: 7); "நற்றவனைப் புற்றரவ நாணி னானை", "நற்றவனை நான்மறைக ளாயி னானை", "நற்றவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே"; "நற்றவன் காண்", "மாதொர் கூறுடை நற்றவனை" (தே.): "அருந்தவ னதிசயித்து" திருவால. சுக : 6.

பிரதிபேதம். *சூட்டியகண்ணியும். †திருநுதல்து.



தாழ்ந்த திருச்சடையானும் சிறந்த செய்தற்கரிய தவத்தையுடையோனுக்கு.—என்றவாறு.

தன்னுளடக்கிக் காக்கினுங் காக்குமென்பதற்கு அவ்வடிவுதான்

எல்லாப் பொருளையும் தன்னுள்ளேயடக்கி அவ்விறைவன்கூற்றிலே மறையினும் மறையுமென்று உரைப்பினும் அமையும்.

நீரறவறியாக் கரகம் - கங்கையென்பாருமுளர்.

அக்கறை, அவ்வுரு, அப்பிறை என நின்ற எழுவாய்கட்கு நவலவும் படும், கரக்கினுங்காக்கும், ஏத்தவும்படும் என நின்ற பயனிலைகளை நிரலே கொடுக்க. இவ்வெழுவாய்களையும் பிறவற்றையும் அருந்தவத்தோற்கென்னும் நான்காவதனோடு முடிக்க.

ஏமமாகிய (11) அருந்தவத்தோ (13) னென்க; [1]ஏமமாகிய நீரெனினும் அமையும்.

அணியலுமணிந்தன்றென்பது, [2]"உண்ணலு முண்ணேன்" என்பது போல நின்றது.

**பதினெண்கணங்களாவார்:** தேவரும் அசுரரும் முனிவரும் கின்னரரும் கிம்புருடரும் கருடரும் இயக்கரும் இராக்கதரும் கந்தருவரும் சித்தரும் சாரணரும் வித்தியாதரரும் நாகரும் பூதமும் வேதாளமும் தாராகணமும் ஆகாசவாசிகளும் போகபூமியோருமென இவர்; [3]பிறவாறும் உரைப்பர்.

இப்பெரியோனை மனமொழி மெய்களான் வணங்க அறமுதல் நான்கும் பயக்குமென்பது கருத்தாகக் கொள்க. (க)

---

[1]'ஏமமாகிய நீர்' என்றது "நீரின் றமையா துலகு" (குறள், 20) என்பது கருதி.

[2]கலி. உரு. [3]முருகு. 168, ந.; பிங்கலம். 92; தக்க. 136, உரை.

(உ) மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்

---

1. "மண்கெழு ஞாலம்" (பதிற். சுக: 12); "மண்டிணி ஞால மாள்வோன்" (சிலப். உசு : 42); "மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்கு" மணி. கக : 95.

1 - 3. "மண்டிணிந்த...வளியும் என்பது எண்" தொல். இடை. சூ. 7, தெய்வச்.; ந.



வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரு மென்றாங்
கைம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்
வலியுந் தெறலு மளியு முடையோய்
நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்துநின்
வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பி னன்னாட்டுப் பொருந
வான வரம்பனை நீயோ பெரும

4 - 5. "வளித்தலைஇய...நீருமென்று அங்கென நாற்சீரடிக்கு இருசீரும் மூச்சீரும் பொருந்தி ஆசிரியம் வந்தது" தொல். செய். சூ. 115, ந.

1 - 5. "அல்லதூஉம் நேரீற்றியற்சீர் இறுதிக்கண் நிற்றல் பெரும்பான்மையெனப்படும்; மண்டிணிந்த...நீரும்" (தொல். செய். சூ. 26, பேர்.); "மண்டிணிந்த...நீருமென ஈற்றுக்கண்வருதல் பெரும்பான்மையாதலின் இறுதிநில்லாவெனப் பொருள் கூறலாகாமையுணர்க" (தொல். செய். சூ. 26, ந.); "மண்டிணிந்த...நீரும்: இவ்வஞ்சியடியிறுதி நேரீற்றியற்சீர் சிறுபான்மை வந்தது" யா - வி. சூ. 15.

2 - 7. "விசும்பி னன்ன சூழ்ச்சி" தொல். உவம. சூ. 6, பேர். மேற்.

8. பெரும்பாண். 422; "அவை நிகழ்ந்த பொழுதே அவற்றிற்குத் தக்க அளியாகத் தெறலாகச் செய்ய வேண்டுதலின்" குறள், 582, பரிமேல்.

4 - 8. "வளிமிகின் வலியுமில்லை" புறநா. ருக : 3.

3 - 8. "வளியிடைத், தீயெழுந் தன்ன திறலினர்" முருகு. 170-71.

1 - 8. நிரனிறை.

10. "வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப" (புறநா. ருக: 14); "வெண்டலைப் புணரியின் விளிம்புசூழ் போத" சிலப். உசு : 81.

12. "கானக நாடனை நீயோ பெரும" (புறநா. ரு: 3); "வான வரம்பனெனப் பேரினிது விளக்கி" பதிற். ரு - ஆம் பத்தின் பதிகம்.

13. "ஐவர் : குறிப்பினால் தொகைப்பொருள் அறியவந்தது" (நன். மயிலை. சூ. 268); "ஐவரென்னுந் தொகைக்குறிப்புச்சொற் பாண்டவரைக் குறிப்பாலுணர்த்திற்று" (நன். வி. சூ. 269); "ஐவரென்னுந் தொகைச்சொல் அரசகன்முதலிய ஐவரையும் குறிப்பான்

நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது
கொடுத்தோய்
பாஅல்புளிப்பினும் பகலிருளினும்
நாஅல்வேத நெறிதிரியினும்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி *நிலியரோ வத்தை யடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை

---

விளக்கியவாறு காண்க" (இ - வி. சூ. 170, உரை); "அலங்குளை...சினைஇ யென்பது தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகதேவனென்பன கொண்டது" நன். வி. சூ. 360.

14. பொலம்பூந்தும்பை: "பொலந்தோட்டுப் பைந்தும்பை", "பொலந் தும்பை" (புறநா. உஉ : 20, கஎ : 15); "பொலம்பூந் தும்பை" மதுரை. 737.

13 - 5. செய்தெனெச்சம் வினைமுதல்வினைகொண்டு முடிந்ததற்கு 'ஐவரொடு...கொண்ட' என்பது மேற்கோள் (நன். மயிலை. சூ. 343; நன். வி. சூ. 344: இ - வி. சூ. 247, உரை); "ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தவியப், பேரமர்க் கடந்த கொடுஞ்சி நெடுந்தேர், ஆராச் செருவி னைவர்" பெரும்பாண். 415 - 7.

16. "முதியர்ப் பேணிய வுதியஞ் சோல், பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை" (அகநா. உகூ : 8 - 9); "பெருஞ்சோறு பயந்த திருந்துவேற் றடக்கை" (சிலப். உரு : 55); "ஓரைவ ரீரைம் பதின்ம ருடன்றெழுந்த, போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த, சேரன்" (சிலப். உக: ஊசல் வரி.) பெயரின் ஈற்றபலாகாரம் ஓகாரமாக வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; நன். மயிலை. சூ. 352; நன். வி. சூ. 353.

17. இயற்சீர் வெள்ளடியல்லது பிறவடி ஆசிரியத்துள் மயங்கு மென்பதற்கு இவ்வடி மேற்கோள் ; தொல். செய். சூ. 62, பேர்.

17 - 8. "பால்புளித்துப் பகலிருண்டு மாறுபடினும் எக்காலத்தினுந் தப்பா சான்றோர் மெய்ம்மொழி" பு - வெ. 167, உரை.

19. ஈரசைச்சீர் நின்று வேற்றுச்சீரோடு ஒன்றிய சிறப்பில் ஆசிரியத் தளைக்கு இவ்வடி மேற்கோள்; யா - வி. சூ. 19.

20. ரகரமெய்யீற்று வியங்கோள்முற்றிற்கு இவ்வடி மேற்கோள்; நன். மயிலை. சூ. 337 ; நன். வி. சூ. 338; இ - வி. சூ. 239, உரை.

பி - ம். *நிலைபரோ.



அந்தி யந்தண ரருங்கட னிறுக்கும்
முத்தீ விளக்கிற் றுஞ்சும்
பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே.[1]

திணை - பாடாண்டிணை; துறை - செவியறிவுறூஉ; வாழ்த்தியலு மாம்.

[2] சேரமான்பெருஞ்சோற்றுதியஞ்சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் பாடியது.

---

22 - 3. "ஒன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர், முத்தீப் புரைய" (புறநா. ௩௬௭ : 12 - 3); "மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத், திருபிறப் பாளர்" முருகு. 181 - 2.

21 - 3. நெருப்பிற்கு அஞ்சிப் புலி வாராமையின் கவலையின்றி மான்கள் தூங்குமென்பர்; "கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து, மடமான் பெருநிரை வைகுதுயில்" (புறநா. உ௪௭: 2 - 3); "ஞெலிகழை முழங்கழல் வயமா வெரூஉம்" ஐங்குறு. ௩0௭.

24. இமயம் பொற்கோட்டதென்பது: "பொன்படு நெடுங்கோட் டிமயம்" (புறநா. ௩௯: 14 - 5, ௩௬௯: 24; நற். ௩௫௬); யா. கா. அவை. 2. இனமில்லாத பொருள் அடையடுத்த மொழிக்கு இவ்வடி மேற்கோள்; நன். மயிலை. சூ. 400; நன். வி. சூ. 401; இ - வி. சூ. 312, உரை.

20 - 24. இமயம்போலத் தளக்கமின்றி நெடுங்காலம் நிற்பாயாக வென்றல் மரபு; "மின்னுமிழ் வைரக் கோட்டு விளங்கொளி யிமய மென்னும், பொன்னெடுங் குன்றம் போலப் பூமிமே னிலவி வையம், நின்னடி நிழலின் வைக நேமியஞ் செல்வ னாகி, மன்னுவாய் திருவோ டென்று வாழ்த்திநெய் யேற்றி னாரே" (சீவக. 2417); "தளக்க லாகா நிலையுந் தோற்றமும் . . . மலைக்கே" நன். பாயிரம்.

[1] இச்செய்யுள், 'பால்புளிப்பினும் பகலிருளினும் . . . நடுக்கின்றி

நிலியரோ' என்றதனாற் செவியறிவுறூஉவும், 'இமயம் போன்று . . . நடுக்கின்றி நிலியரோ' என்றதனால் வாழ்த்தியலுமாயிற்று; இது, "பகை நிலத்தரசர்க்குப் பயந்தவாறு கூறிப் பின்னர்த் திரியாச் சுற்றமொடு விளங்கி நடுக்கின்றி நிற்பாயென அச்சந்தோன்றக் கூறி ஓம்படுத்தலின், ஓம்படைவாழ்த்தாயிற்று" என்பர்; தொல். புறத்திணை. சூ. 36, ந.

[2]இதன் 16 - ஆம் அடியால் பாட்டுடைத்தலைவன் பெயர்க்காரணம் புலப்பட்டவாறு அறிதற்பாலது; "நாடுகண் ணகற்றிய உதியஞ் சேரற், பாடிச் சென்ற பரிசிலர் போல, உவவினி வாழிய தோழி", "கொடைக் கடனேன்ற கோடா நெஞ்சி, னுதியஞ் சேரல னாட்டில் போல, வொலி யெழுந்து" (அகநா. சுஐ, கசுஅ) என்பவற்றால் இத்தலைவன் குணங்கள் விளங்கும்.



இ - ள்.—அணுச்செறிந்த நிலனும், அந்நிலத்தின் ஓங்கிய ஆகாயமும், அவ்வாகாயத்தைத் தடவிவரும் காற்றும், அக்காற்றின்கண் தலைப்பட்ட தீயும், அத்தீயோடு மாறுபட்ட நீருமென ஐவகைப்பட்ட பெரிய பூதத்தினது தன்மைபோலப் பகைவர் பிழைசெய்தால் அப்பிழையைப் பொறுத்தலும், அப்பிழை பொறுக்குமளவல்லவாயின் அவரை அழித்தற்கு உசாவும் உசாவினது அகலமும், அவரை அழித்தற்கேற்ற மனவலியும் சதுரங்கவலியும், அவ்வாற்றால் அவரை அழித்தலும், அவர் வழிபட்டால் அவர்க்குச் செய்யும் அருளுமுடையோய்! நினது கடற்கட்டோன்றிய ஞாயிறு பின்னும் நினது வெளிய தலைபொருந்திய திரையையுடைய மேல்கடற்கண்ணே மூழ்கும் புதுவருவாய் இடையறாத ஊர்களையுடைய நல்லநாட்டிற்கு வேந்தே! வானவரம்ப! பெரும! நீ, அசைந்த தலையாட்ட மணிந்த குதிரையையுடைய பாண்டவர் ஐவருடனே சினந்து நிலத்தைத்

தம்மிடத்தே கொண்ட பொற்பூந்தும்பையையுடைய துரியோதனன் முதலாகிய நூற்றுவரும் பொருது போர்க்களத்தின்கட் படுந்துணையும் பெருஞ்சோருகிய மிக்க உணவை இருபடைக்கும் வரையாது வழங்கினோய்! பால் தன் இனிமையொழிந்து புளிப்பினும், ஞாயிறு தன் விளக்க மொழிந்து இருளினும், நான்குவேதத்தினது ஒழுக்கம் வேறுபடினும் வேறுபாடில்லாத சூழ்ச்சியையுடைய [1]மந்திரச்சுற்றத்தோடு ஒழியாது நெடுங்காலம் விளங்கித் துளக்கமின்றி நிற்பாயாக; அரைமலையின்கட் சிறிய தலையையுடைய மறிகளையுடையவாகிய பெரிய கண்ணையுடைய மான்பிணைகள் அந்திக்காலத்தே அந்தணர் செய்தற்கரிய கடனுகிய ஆவுதியைப் பண்ணும் முத்தீயாகிய விளக்கின்கண்ணே துயிலும் பொற்சிகரங்களையுடைய இமயமலையும் பொதியின்மலையும்போன்று.—எ - று.

குளிக்குநாடென இயையும்; குளிக்குநாடென இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்துமேல் ஏறிநின்றது. நீயோ; ஓ: அசைநிலை; அன்றி, இதனை வினவாக்கி, ஞாயிறு குளிக்குமென்பதனை முற்றாக்கி, வானவரம்பனென்பதனை அவ்வினவிற்குப் பொருளாக்கி உரைப்பாருமுளர்.

முத்தீயாவன: ஆகவனீயம், காருகபத்தியம், தென்றிசையங்கி.

ஆங்கும், அத்தையும்: அசைநிலை. வானவரம்பனை; ஐகாரம்: முன்னிலையை விளக்கிநின்றது.

நிலந்தலைக்கொண்ட (14) என்பதற்கு நிலங்கோடல் காரணமாகத் தலைக்கட்சூடியவெனினும் அமையும்.

---

[1]கம்ப. அயோத்தி. மந்திர. 71.

போற்றார்ப்பொறுத்தல் முதலிய குணங்களையுடையோய், பொருந, வரையாதுகொடுத்தோய், வானவரம்ப, பெரும, நீ, புளிப்பினும் இருளினும் திரியினும் இமயமும் பொதியமும் போன்று நடுக்கின்றிச் சுற்றமொடு விளங்கி நிற்பாயாகவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

போற்றார்ப்பொறுத்தல் முதலாகிய குணங்களை அரசியலடைவாற் கூறுகின்றாராதலின், பூதங்களின் அடைவு கூறாராயினர்.

இதனாற் சொல்லியது, *தன்கடற்பிறந்தஞாயிறு தன்கடற்குளிக்கும் நாடனாதலாற் செல்வமுடையையாகவென்று வாழ்த்தவேண்டுவதின்மையின், நீடு வாழ்கவென வாழ்த்தியவாறாயிற்று. (உ)

---

பி - ம். *வானவரம்பனாதலாற் செல்வமுடையை யாகவென்று வாழ்த்தவேண்டுவதின்மையின், நீடுவாழ்கவென வாழ்த்தியவாறாயிற்று.

---

(௩) உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை
நிலவுக்கடல் வரைப்பின் மண்ணக நிழற்ற
ஏம முரச மிழுமென முழங்க
நேமி யுய்த்த நேஎ நெஞ்சிற்
றவிரா வீகைக் கவுரியர் மருக
செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ
*பொன்னோடைப் புகரணி நுதற்

---

1. தொல். செய். சூ. 14, 54, 94, பேர். ந.; ஷை. ஷை. சூ. 92, ந. மேற்.

3. "ஏம முரச மிழுமெனச் சிலைப்ப" பெருங். உ. 5: 18.

1 - 5. கலி. கக: 8 - 9.

6. பெண்பாலாரை ஆண்பாலாரோடு சேர்த்து வாழ்த்துதல் மரபாதலின் இங்ஙனங் கூறினர்; "ஒடுங்கீ ரோதிக் கொடுங்குழை கணவ", "ஆன்றோள் கணவ", "பாவை யன்ன நல்லோள் கணவன்", "புரையோள் கணவ" (பதிற். கச, ருரு, சுக, எ0); "மங்கையர் கணவ" (முருகு. 264); "மலர்போன் மழைக்கண் மங்கையர் கணவன்" (மலைபடு. 58); "மக்களுட் பெண்பாலைப் பாடுதல் சிறப்பன்மையின், 'செயிர்தீர்......கணவ' என்றாற்போலச் சிறுபான்மை ஆண்மக்களோடு படுத்துப் பாடுப" தொல். புறத்திணை. சூ. 26, ந.

பி - ம். *பொன்னி ணேடை.

2



துன்னருந் திறற் கமழ்கடா அத்
தெயிறுபடை யாக வெயிற்கத விடாஅக்
கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கிற்
பெருங்கை யானை யிரும்பிடர்த் தலையிருந்து
மருந்தில் கூற்றத் தருந்தொழில் *சாயாக்
கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதி
நிலம்பெயரினு நின்சொற்பெயரல்

8. "துன்னருங் கடாஅம் போல" (புறநா. கச: 4.) கடாம் மணமுள்ளது: "மிஞிறார்க்குங் கமழ்கடாத்து", "வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்து" (புறநா. உஉ: 6, கூ: 12; கலி. உக: 2); "கடுஞ்சினத்த கமழ் கடாஅத்து" மதுரை. 44; தக்க. 3, விசேட.; கம்ப. நகரப். 58.

9. புறநா. ச: 10 - 11. இடாஅ - குத்தி; புறநா. ரூ0ரு: 9; கலி. உச: 10.

9 - 11. கலி. கரூ௫: 2 - 4.

7 - 11. "பொன்னோடை . . . யானை என அடுக்கி வருவனவும் ஒட்டி ஒரு சொல்லாகாமையுமுணர்க" தொல். எச்ச. சூ. 16, ந.

12. "மருந்தில் கணிச்சி" (புறநா. சஉ : 22); "தீன்ற கருமத்த தல்லாத கூற்று" (அறநெறி. 111); "மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையும்" (தொல். புறத்திணை. சூ. 24); "மாற்றே னெனவந்த காலனை" (திருச்சிற். 150); "மாற்றருங் கூற்றம்" மணி. உ௫: 49.

7 - 12. "எயிறுபடையாக . . . சாயா என மாட்டாய் ஒட்டி நின்றது, 'கயிறு பிணிக்கொண்ட' என்பதனோடும் ஒட்டினாற் போலநின்று ஒற்றுமைப்படுத்தது, இன்னோசை பெறுதற்கு" (தொல். புணர். சூ. 9, ந.); "பொன்னோடை . . . சாயாவென்றாற்போல வருவனவெல்லாம் அணுகி வந்த மாட்டென்னுமுறுப்பு" தொல். எச்ச. சூ. 13, ந.

10 - 13. "மணியிலாக் குஞ்சரம் வேந்தூர்த லின்னா" இன்னா. 14.

14. "நிலம்புடை பெயர்வ தாயினும்" (புறநா. கச : 5); "நிலந் திறம் பெயருங் காலை யாயினுங், கிளந்த சொல்நீ பொய்ப்பறி யலையே" (பதிற். சுரு : 6 - 7); "காதலர், நிலம்புடை பெயர்வ தாயினுங் கூறிய, சொற்புடை பெயர்தலோ விலரே" (நற். உஅரு); "இம்மூ வுலகி னிருள் கடியு மாய்கதிர்போல், அம்மூன்று முற்ற வறிதலாற் - றம்மின், உறழா மயங்கி யுறழினு மென்றும், பிறழா பெரியோர்வாய்ச் சொல்" பு - வே. 167.

பி - ம். *சாவாக்.



பொலங்கழற்காற் புல்சாந்தின்
விலங்ககன்ற வியன்மார்ப
ஊரில்ல வுயவரிய
நீரில்ல நீளிடைய
பார்வ லிருக்கைக் கவிகண் ணோக்கிற்
செந்தொடை பிழையா வன்க ணாடவர்
அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கைத்
திருந்துசிறை வளைவாய்ப் பருந்திருந் துயவும்
உன்ன மரத்த துன்னருங் கவலை

---

16. இவ்வடி ஒருபொருட்பன்மொழிக்கு மேற்கோள்; நன். மயிலை. சூ. 397.

19. பார்வல் - பார்த்தல்; "பார்வற் பாசறை" (பதிற். அ௪ : 15); "பருந்துபறக் கல்லாப் பார்வற் பாசறை" மதுரை. 231.

19 - 20. "அற்றம்பார்த் தல்கும் கடுங்கண் மறவர்" கலி. ௪: 3.

21. "வெண்ணுனை யம்பின் விசையிட வீழ்ந்தோ, ரெண்ணுவரம் பறியா வுவலிடு பதுக்கை", "வில்லிட வீழ்ந்தோர் பதுக்கை", "வடிநவி லம்பி னேவ லாடவ, ராளழித் துயர்த்த வஞ்சுவரு பதுக்கை", "கொடுவிற்

கானவர் கணையிடத் தொலைந்தோர், படுகளத் துயர்த்த மயிர்த்தலைப் பதுக்கை" அகநா. ௧0௯, ௧௫௭, ௨௧௫, ௨௯௧.

23. உன்னம் - போர் செய்தற்குச் செல்வோர் நிமித்தம் பார்த்தற் குரிய ஒருவகை மரம்; "புன்கா லுன்னஞ் சாய" (பதிற். ௪0 : 17) என்பதும், 'தன்னொடு பொரக்கருதுவார் நிமித்தம் பார்த்தவழி அவர்க்கு வென்றியின்மையிற் கரிந்து காட்ட' என்னும் அதன் உரையும், "புன்கா லுன்னத்துப் பகைவன்" (பதிற். ௬௧ : 6) என்பதும், "துன்னருந் தானைத் தொடுகழலான் றுப்பெதிர்ந்த, மன்னர் வணங்கார் முரண் முருங்க - மன்னரு, மீடெலாந் தாங்கி யிகலவிந்தார் நீயுநின், கோடெலா முன்னங் குழை" (பு - வெ. 243) என்பதும் இங்கே அறியற்பாலன. உன்னம் - இலவமரமென்பது மலைநாட்டு வழக்கென்பர்.

20 - 23. "இலைமாண் பகழிச் சிலைமா ணிரீஇய, அன்பி லாடவ ரலைத்தலிற் பலருடன், வம்பலர் தொலைந்த வருஞ்சுரக் கவலை, அழல் போற் செவிய சேவ லாட்டி, நிழலொடு கதிக்கு நிணம்புரி முதுநரி, பச்சூன் கொள்ளை மாந்திவெய் துற்றுத், தேர்திகழ் வறும்புலந் துழைஇ நீரயந்து, பதுக்கை நீழ லொதுக்கிடம் பெறாஅ, வஞ்சுவரு கவலை" நற். ௩௫௨.



நின்னசை வேட்கையி னிரவலர் *வருவது
முன்ன முகத்தி னுணர்ந்தவர்
இன்மை தீர்த்தல் வன்மை யானே.

திணையும் [1]துறையும் அவை.

[2]பாண்டியன் கருங்கையோள்வாட் பெரும்பெயர்வழுதியை இரும்பிடர்த்தலையார் பாடியது.

இ - ள்.—உவாநாளின் மதியினது வடிவுபோலும் வடிவினையுடைய உயர்ந்த வெண்கொற்றக்குடை நிலைபெற்ற கடலெல்லைக்கண் நிலத்தை நிழற்செய்ய, காவலாகிய வீரமுரசம் இழுமென முழங்கும் ஓசையையுடைத்தாய் முழங்க, சக்கரத்தைச்செலுத்திய ஈரமுடைய நெஞ்சினையும் ஒழியாத வண்மையையுமுடைய பாண்டியர் மரபினுள்ளாய்! குற்றமற்ற கற்பினையுடைய சேயிழைக்குத் தலைவ! பொன்னானியன்ற பட்டத்தையுடைய புகரணிந்த மத்தகத்தினையும், அணுகுதற்கரிய வலியையும், மணநாறும் மதத்தினையுமுடைய, கொம்பு படைக்கலமாகக் கொண்டு பகைவர் மதிலின்கட் கதவைக் குத்திக் கயிற்றாற் பிணித்தலைச்செய்த கவிழ்ந்த மணியையணிந்த பக்கத்தையும் பெருங்கையையுமுடைய யானையினது பெரிய கழுத்திடத்தே யிருந்து பரிகாரமில்லாத கூற்றத்தினது பொறுத்தற்கரிய கொலைத்தொழிலுக்கு இளையாத வலிய கையின்கண்ணே ஒள்ளிய வாளினையுடைய பெரும்பெயர்வழுதி! நிலம் பிறழினும் நினது ஆணையாகிய சொற் பிறழாதொழியல்வேண்டும்; பொன்னாற் செய்யப்

---

24. "நீர் நசை வேட்கையின்" (மணி. உரு : 112); "பெறனசை வேட்கையி னின்குறி வாய்ப்ப" கலி. கூ: 17.

25. "ஒளிப்பினு முள்ளம், படர்ந்ததே கூறு முகம்", "நோக்கி, முகனறிவார் முன்ன மறிப" (பழ. 41, 301); "முன்ன, முகம்போல முன்னுரைப்ப தில்" (நான்மணி. 50); "அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங், கடுத்தது காட்டு முகம்", "முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங், காயினுந் தான்முந் துறும்" குறள், 706 - 7.

24 - 6. "சாந்தவான் பொழிந்தற்றுச் சூழநின் றியாவர்க்கும்,
இரந்தது நசைவாட்டா யென்பது கெடாதோதான்" கலி. ௧௦௦: 11 - 2.

[1]'நிலம்பெயரினு நின்சொற் பெயரல்' என்றதனுல், இது செவி யறிவுறூஉவாயிற்று.

[2]11-ஆம் அடியாற் புலவரது பெயர்க்காரணமும், 13-ஆம் அடியாற் பாட்டுடைத் தலைவனது பெயரும் விளங்கியவாறறிக.

பி - ம். * வருவதை.



பட்ட வீரக்கழல்புனைந்த காலினையும் பூசிப்புலர்ந்த சந்தனத்தையுடைத் தாகிய குறுக்ககன்ற பரந்த மார்பினையு முடையோய்! ஊரில்லாதனவும், பொறுத்தற்கரிய உயங்குதலையுடையனவும், நீரில்லாதனவும், நீண்ட வழி யனவுமாகிய, வம்பலரை நலியச் சேய்மைக் கண்ணே பார்த்திருக்கும் இருப்பினையும், கையாற் கவிக்கப்பட்ட கண்ணாற் குறித்துப்பார்க்கும் பார்வையையும், செவ்விய தொடைபிழையாத தறுகண்மையையுமுடைய மறவர்தாம் அம்பை விடுதலாற் பட்டோரது உடன்மூடிய புதிய கற் குவையின்மேலே திருந்திய சிறகினையும் வளைந்த வாயினையுமுடைய பருந்திருந்து வருந்தும் உன்னமரத்தினையுடையவாகிய அணுகுதற்கரிய கவர்த்த வழியின்கண்ணே நின்பால் நச்சிய விருப்பத்தால் இரப்போர் வருகுவர்; அங்ஙனம் வருவது, அவர் மனக்குறிப்பை அவர் முகத் தானறிந்து அவருடைய வறுமையைத் தீர்த்தலை வல்ல தன்மையான்.— எ - று.

நுதலையும் திறலையும் கடாத்தையும் மருங்கையும் பெருங்கையையும் உடைய யானைப்பிடர்த்தலையிருந்து எயிறுபடையாக எயிற்கதவிடாக் கூற்றத்துஅருந்தொழில் சாயாப்பெரும்பெயர்வழுதியென மாறிக்கூட்டுக; *காலாலடுதல் கையாலுக்குதலன்றி எயிறுபடையாக எயிற்கதவிடக்கை விடாத பெருங்கையானையென இயைத்துரைப்பினுமமையும்; எயிற் கதவிடாஅக் கயிறுபிணிக்கொண்டவென இயைத்துரைப்பாருமுளர்.

ஊரில்ல உயவரிய நீரில்ல நீளிடையவாகிய உன்னமரத்த கவலையெனவும், பருந்திருந்துயவும் தன்னருங்கவலையெனவும் இயையும்.

மருக, கணவ, வழுதி, மார்ப, இரவலர் வருவர்; அஃது அவர் லூன்மை தீர்த்தல்வன்மையான்; அதனால், நின்சொற் பெயராதொழியல் வேண்டுமெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

வாழ்த்தியலாதல் விளங்க, வேண்டுமென ஒருசொல் தந்துரைக்கப்பட்டது. (ரு)

---

(சா) வாள், வலந்தர மறுப்பட்டன
செவ்வானத்து வனப்புப்போன்றன

---

1 - 2. கோசை கூறும்நின்றதற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். செய். சூ. 48, பேர்.; 49, ந.

பி - ம். * காலிலிடுதல்.

தாள், களங்கொளக் கழல்பறைந்தன
கொல்லேற்றின் மருப்புப்போன்றன
தோல், துவைத்தம்பிற் றுளைதோன்றுவ
நிலைக்கொராஅ விலக்கம்போன்றன
மாவே, எறிபதத்தா னிடங்காட்டக்
கறுழ்பொருத செவ்வாயான்
எருத்துவவ்விய புலிபோன்றன
*களிறு, கதவெறியாச் சிவந்துராஅய்
நுதிமழுங்கிய வெண்கோட்டான்
உயிருண்ணுங் கூற்றுப்போன்றன
நீயே, அலங்குளைப் பரீஇயிவுளிப்
பொலந்தேர்மிசைப் †பொலிவுதோன்றி
மாக்கட னிவந்தெழுதரும்
செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ

3. களத்தைத் தமதாக்கிக் கொள்ளுதல் : புறநா. ௬௯ : 5 அடிக். ; "வென்று களங்கொண்ட வேல்வேந்தே" (பு - வெ. 225) என்பதனுலும், "தேன்மிடைந்த தாரினன் செங்களஞ் சிறந்ததே" (சீவக. 279) என்பதற்கு எழுதப்பட்ட 'இத்தனையும் இவன் வெற்றியாதலின் இவன் களமென்றார்' என்னும் குறிப்புரையாலும் விளங்கும். "பறைதாள் விளவு" (பெரும்பாண். 95.) இவ்வடி பதினேரெழுத் திருசீரடி வஞ்சிப் பாவிற்கு மேற்கோள்; யா - வி. ஒழிபியல், சூ. 95.

5. துவையென்னும் உரிச்சொல் ஓசைப்பொருளில் வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; நன். மயிலை. சூ. 458; நன். வி. சூ. 459.

5 - 6. குறளடியும் சிந்தடியும் வந்தமையான் மயக்கடி வஞ்சிப் பாட்டானதற்கு மேற்கோள்; தொல். செய். சூ. 47, ந.

6. "கம்பமொடு துளங்கிய இலக்கம்" புறநா. உகூ0 : 23.

9. தக்க. 386, மேற்.

10 - 11. "கடிமதிற் கதவம் பாய்தலிற் றொடிபிளந்து, நுதிமுக மழுகிய மண்ணைவெண் கோட்டுச், சிறுகண் யானை" அகநா. உச: 11 - 3.

10 - 12. களிறு...போன்றன : நிரையசை வஞ்சியடியிற் கூனாய் வந்ததற்கு மேற்கோள்; தொல். செய். சூ. சஅ, பேர்.; ந.

13. புறநா. உ : 13.

15 - 6. "பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங், கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி" (முருகு. 2 - 3.) தொல். கிளவி. சூ. 18, தெய்வச். கல். மேற்.) புறநா. உஉஅ: 8 - 9; பு - வெ. 201; சீவக. 2371.

13 - 6. வாழ்த்து வகையில் தோடுத்து வந்ததற்கு இது மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 31, ந.

பி - ம். *களிறே. † பொலிவொடு தோன்றி.



அனையை யாகன்-மாறே

தாயி றாவாக் குழவி போல,
ஓவா து கூஉநின் னுடற்றியோர் நாடே.

திணை - வஞ்சி; துறை - கொற்றவள்ளை.
[1]சோழன் உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னியைப் பரணர் பாடியது.

இ - ள்.—வாள் வெற்றியைத் தருதலாற் குருதிக்கறைபட்டன, செக்கர் வானத்தினது அழகையொத்தன; கால் புடைபெயர்ந்து போர் செய்து களத்தைத் தமதாக்கிக்கொள்ளுதலால் வீரக்கழல் [2]அருப்புத் தொழில் பறைந்தவை, கொல்லும் ஆனேற்றினது கோட்டையொத்தன; பரிசைகள் ஒலித்துத் தைத்த அம்புகளால் துளைதோன்றுவன, நிலையிற் றப்பாத இலக்கத்தையொத்தன; குதிரைகள், எதிரியை எறியும் கால் முடையான் [3]இடவாய் வல்வாயாகிய இடத்தைக் காட்ட முகக்கருவி பொரப்பட்ட செவ்வாயை உடைமையான் மான்முதலாயினவற்றின்

---

17. மு. புறநா. உ0 : 20; பதிற். அ0 : 12. மாறு, மூன்றாம்வேற்றுமைப்பொருட்கண் வருமென்பதற்கும் (தொல். இடை. சூ. 2, சே.; இ - வி. சூ. 251, உரை), காரணப்பொருளுணர்த்தி நிற்குமென்பதற்கும் (தொல். இடை. சூ. 2, ந.), ஆகவென்னும் வினைக்குறிப்புச்சொல் சார்ந்துநின்ற சொற்பொருளையே உணர்த்தி நிற்குமென்பதற்கும்; முச்சீரடி இடைவந்ததற்கும் இது மேற்கோள்; தொல். இடை. சூ. 32, ந.; தொல். செய். சூ. 71, பேர்.

18 - 9. "ஈன்றோ ணீத்த குழவி போல", "தாயி, லூவாக் குழவி போல" (புறநா. உகூ0: 7, கஎக : 14-5); "குழவிகொள் வாரிற் குடிபுறந் தந்து" (பதிற். சு-ஆம்பத்துப் பதிகம்); "தாயிலாக் குழவி போலச், சாதுய ரெய்து கின்றேன்" (சீவக. 1581); "தாயி லூவாக் குழவித்துயர்",

"தாயொழி குழவி போலக் கூஉம்" (மணி. கூ : 11, உ0 : 111); "ஓங்கு குடை நீழ லுலகுதுயின் மடியக், குழவிகொள் பவரி னிகழா தோம்பி" பெருங். ச. 10: 133-4.

15 - 9. வஞ்சிப்பா மண்டில் ஆசிரியத்தான் இற்றதற்கு மேற்கோள்; தொல். செய். சூ. 71, பேர்.

[1] இதன் 14-ஆம் அடியாற் பாட்டுடைத்தலைவனது பெயர்க்காரணம் புலப்படுகின்றது.

[2] கலி. க0ச : 23, ந. [3] கலி. கசO : 14, ந.



[1] கழுத்தைக் கவ்வி உதிரம் [2] உவற்றியுண்ட புலியை யொத்தன; களிறுகள், கதவை முறித்து வெகுண்டு உலாவி நுனைதேய்ந்த வெளிய கோட்டையுடைமையான் உயிரையுண்ணும் கூற்றையொத்தன; நீதான், அசைந்த தலையாட்டமணிந்த கதியையுடைய குதிரையாற் பூட்டப்பட்ட பொற்றேரின்மேலே பொலிவொடு தோன்றுதலாற் கரிய கடலின் கண்ணே ஓங்கியெழுகின்ற செய்ய ஞாயிற்றினது ஒளியையுடையை; அத்தன்மையையாதலால், தாயில்லாத உண்ணாக் குழவிபோல ஒழியாது கூப்பிடும் நின்னைச் சினப்பித்தவருடைய நாடு.—எ - று.

நாடென்றது (19) நாட்டுள் வாழ்வாரை. மாறென்பது (17) ஏதுப்பொருள்படுவதோர் இடைச்சொல்.

கழல்பறிந்தன (3) வென்றேறுதி, வீரக்கழல் நீங்கியவையென்று உரைப்பாருமுளர்.

வாளாகிய மறுப்பட்டவை (1) யெனவும், கழலாகிய பறைந்தவை

யெனவும் (3) தோலாகிய துளைதோன்றுவ (5) வெனவும் கொள்க.

துவைத்துத் தோன்றுவவென இயையும்.

எறிபதத்தா (7) னென்பதற்கு [3]ஒத்தும் காலையுடையானென்று உரைப்பாருமுளர்.

செஞ்ஞாயிற்றுக் கவினை (16) யென்றதுணையும் மன்னவன் புகழும், ஓவாது கூஉநின் உடற்றியோர் நாடெனா (19) ஒன்னார் நாடழிபிரக்கலு மோதலான், இது [4]கொற்றவள்ளையாயிற்று. (சு)

---

[1]'எருத்துவ்விய' எனப்பாடங்கொண்டு, எரு, இறைச்சியென பொருள் கூறுவர் தக்கயாகப்பரணி உரையாசிரியர்; 386.

[2]உவற்றி - ஊற்றி; "ஒண்செங் குருதி யுவற்றியுண் டருந்துபு புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை" அகநா. ரு.

[3]ஒத்துதல் - அழுத்தல்; "ஒத்திந் தாளத் தொக்கத் தத்தித், தத்தும் பரிதன் ருள்வைத் ததுவே" திருவால. உஅ : 53. [4]பு - வே. 43.

---

(ரு) எருமை யன்ன கருங்கல் லிடைதோ
றானிற் பரக்கும் யானைய முன்பிற்

---

1. "மேதி யன்ன கல்" மலைபடு. 111.

2. "ஆபரக் தன்ன செலவிற்பல், யானை", "ஆபரக் தன்ன யானை யோன் குன்றே" பதிற். எஎ : 11 - 2; எஅ : 14.

கானக நாடனை நீயோ பெரும
நீயோ ராகலி னின்னொன்று மொழிவல்
அருளு மன்பு நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொ டொன்றாது காவல்
குழவி கொள்பவரி னோம்புமதி
அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே[1].

திணை - பாடாண்டிணை; துறை - செவியறிவுறூஉ; பொருண் மொழிக் காஞ்சியுமாம்.

சேரமான் கருவூரேறிய ஒள்வாட்கோப்பெருஞ்சேரலிரும்பொறையைக் கண்டஞான்று நின் உடம்பு பெறுவாயாகென அவனைச் சென்று கண்டு தம்முடம்பு பெற்றுநின்ற நரிவெரூஉத்தலையார் பாடியது.

இ - ள்.—எருமைபோலும் வடிவையுடைய கரிய கற்பொருந்திய இடந்தோறும் பெற்றம்போலப் பரக்கும் யானையையுடையவாய் வலியையுடைய காட்டிற்குள்ளாகிய நாட்டினையுடையாய்! பெரும! நீ இங்ஙனம்

3. "வான வரம்பனை நீயோ பெரும" புறநா. உ : 12. தொல். இடை. சூ. 8, தெய்வச். மேற்.

1 - 3. "எருமை...பெருமவென்பது, நரிவெரூஉத்தலையார் தம் உடம்பு பெற்று வியந்து கூறிய பாட்டாகலின், இது தன்கட்டோன்றிய ஆக்கம் பற்றி வியப்புப் பிறந்ததாயிற்று" தொல். மெய். சூ. 7, பேர். ; ''. வி. சூ. 578.

6-7. புறநா. ௬: 18-9-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க. மக்கட்கணின்ற இளமைப்பெயர்க்கு இது மேற்கோள்; தொல். மரபு. சூ. 23, பேர்.

8. "அளிதோ...குரைத்தே : இஃது இசைநிறை" (தொல். இடை.

சூ. 24, சே. தெய்வச். ந.; இ. வி. சூ. 278); "என்றிசினோர், பெறலருங் குரைத்து என்பன போலச் செய்யுண் முடிபு பெற்று நின்றதென்றலே பொருத்த முடைத்து" (தொல். எச்ச. சூ. 1, சே.); குரையென்னும் அசைநிலையிடைச்சொல் வந்துள்ள தொடர்மொழிக்கு இது மேற்கோள் (நன். மயிலை. சூ. 440; நன். வி. சூ. 441.) "கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி, புண்ணியத்தின் பாலதே" (நீதிநெறி. 28) என்பது இங்கே அறியற்பாலது.

[1]"எருமை...குரைத்தே : இதனுள் நிரயங்கொள்பவரொடொன்றாது காவலையோம்பென வேம்புங் கடுவும்போல வெய்தாகக் கூறி அவற்கு உறுதி பயத்தலின், வாயுறைவாழ்த்தாயிற்று" தொல். புறத்திணை. சூ. 35, ந.





பகைவரான் அணுகப்படாத இயல்பாகிய பெருஞ்செல்வத்தையுடையா னாதலால், நினக்கு ஒரு காரியஞ் சொல்வேன்; அதனைக் கேட்பாயாக; அருளையும் அன்பையும் நீக்கிப் பாவஞ்செய்தாரை நீங்காத நரகத்தைத் தமக்கிடமாகக் கொள்பவரோடு பொருந்தாது நீ காக்கப்படும் தேயத்தைக் குழவியை வளர்ப்பாரைப்போலப் பாதுகாப்பாயாக; அளிக்கத்தக்க தொன்று அக்காவல்; அது பெறுதற்கரிது.—எ - று.

காவலென்றது (7) ஆகுபெயர். நாடனை: ஐகாரம் (3), முன்னிலைக்கண் வந்தது. ஓவும், ஒரும்: அசைநிலை.

[1]அருளாவது:—ஒன்றின் துயர்கண்டாற் காரணமின்றித் தோன்றும் இரக்கம்.

[2]அன்பாவது:—தன்னாற் புரக்கப்படுவார்மேலுளதாகிய காதல்.

இனி, ஓகாரத்தைப் பிரித்து வினாவாக்கிக் கோப்பெருஞ்சோலிரும் பொறையைக் கண்டஞான்று நின்னுடம்புபெறுவாயெனத் தம்முடம்பு பெற்றமை தோன்ற, நீயோவென வினாவினாராக்கியுரைப்பாருமுளர்.

காவல் குழவிகொள்பவரினோம்பென்றமையாற் செவியறிவுறூஉவும், அருளும் அன்பும் நீக்கி நீங்கா நிரயங்கொள்பவரொடொன்றாதென்றமை யாற் பொருண்மொழிக்காஞ்சியுமாயிற்று. (ரு)

---

[1]தொல். பொருளியல், சூ. 53, ந.

[2]ஷை ஷை ஷை

---

(சா) வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅ துருகெழு குமரியின் றெற்கும்

---

1. கட்டளை ஒரூஉ மோனைக்கு இது மேற்கோள்; தொல். செய். சூ. 92, ந.; ஆசிரியத்தில் அடிமுதற்கண், 'வடாஅது' என உகரவீறுய நேரீற்றியற் சீர்க்கூன் அருகி வந்ததற்கு மேற்கோள்; யா. வி. சூ. 94.

2. "தெனாஅ துருகெழு குமரி யென்னுங் குறிப்பு வினைச்சொல் குறிப்பினானன்றி வினையறியலாகாமையின், வினைக்குறிப்புமொழி" நன். மயிலை. சூ. 268.

1-2. “வடாஅது, தெனாஅதென்பனவும் ஏழாம்வேற்றுமைப் பொருண்மைக்கண் வந்த வினைக்குறிப்பு; பெயருமாம்”, “வடாஅது, தெனாஅதென்பன ஏழனுருபின் பொருள்பட வந்தன” தொல். வினை. சூ. 23, சே. ந.



குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்
கீழது, முப்புண ரடுக்கிய முறைமுதற் கட்டின்
நீர்நிலை நிவப்பின் கீழு மேல
தானிலை யுலகத் தானு மானா
துருவும் புகழு மாகி விரிசீர்த்
*தெரிகோன் ஞமன் போல வொருதிறம்
†பற்ற லிலியரோ நிற்றிறஞ் சிறக்க
செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர் தேஎத்துக்
கடற்படை குளிப்ப மண்டி ‡யடர்புகர்ச்

---

3. சகரரால் தோண்டப்பட்டமையின் கீழ்கடலைத் தொடுகட லென்றார்; “தொட்ட பைங்கடற் சூரியன் றோன்றுமுன் றோன்றி” வி. பா. நிரைமீட்சி. 24.

4. மேல்கடல் பழையதாதலின், தொன்றுமுதிர் பௌவமெனப்பட்டது.

1 - 4. "தென்குமரி வடபெருங்கல், குணகுடகட லாவெல்லை" புறநா. கஎ : 1 - 2; மதுரை. 70 - 71.

7. ஆனிலையுலகம் - கோலோகம். இதனியல்பை, சிவதருமோத்தரத் துள்ள கோபுரவியலாலும், "விளங்குநம் முலகின் மேலாம் வைகுந்த மதன்மேற் கந்தன், வளங்கெழு முலகம் வெற்பின் மாதுல கதனின் மேலாம், களங்கனி யனைய கண்ட னுலகதன் மேலாம் பாங்கர், உளங் கவர் வனப்பின் மேவுங் கோவின துலக மாமே" (காசிகாண்டம், உ: 29) என்னுஞ் செய்யுளாலுமுணர்க.

8. இவ்வடி அகலக்கவியைக் கொண்டோர் பெறும் பயனுக்கு உதாரணமாகக் காட்டப்பட்டது; இ. வி. சூ. 940, உரை.

9. "வாண்ஞமற்கு" சீவக. 251.

9 - 10. குறள், 118; "செம்பொற்றுலைத், தால மன்ன தனிநிலை தாங்கிய, ஞால மன்னற்கு" (கம்ப. மந்தரை. 19); "ஓர்வுற் றொருதிற மொல்காத நேர்கோல், அறம்புரி நெஞ்சத் தவன்" கலி. சஉ : 14 - 5.

12. 'கடற்படை குளிப்ப மண்டி' என்பது, பின்னின்ற மொழி முன்னே மாற்றப்பட்டதற்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. 13, ந.

11 - 2. "விரிகடல் வியன்றானையொடு, முருகுறழப் பகைத்தலைச் சென்று" மதுரை. 180 - 81.

பி - ம். *தெரிகோற்சமன். †பற்றிலியரே. ‡யடர்ப்புகர்ச்.



சிறுகண் யானை செவ்விதி *னேவிப்

பாசவற் படப்பை யாரெயில் பலதந்
தவ்வெயிற் கொண்ட செய்வுறு நன்கலம்
பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கிப்
†பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை ‡முனிவ ரேந்துகை யெதிரே
வாடுக ||இறைவநின் கண்ணி யொன்னார்
நாடுசுடு கமழ்புகை யெறித்த லானே

---

16. "வரிசை யறிதலோ வரிதே" (புறநா. கஉக: 3); "வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்" சிறுபாண். 217.

15 - 6. "ஆண்டுநீர்ப் பெற்ற தார மீண்டிவர், கொள்ளாப் பாடற் கெளிதினி னீயும்" (பதிற். சஅ : 5 - 6); "அங்கட் கிணையன் றுடியன் விறலிபாண், வெங்கட்கு வீசும் விலையாகும் - செங்கட், செருச்சிலையா மன்னர் செருமுனையிற் சீறி, வரிச்சிலையாற் றந்த வளம்" (பு. வெ. 16); "கலந்தோ ருவப்ப வெயிற்பல கடைஇ, மறங்கலங்கத் தலைச்சென்று, வாளுழந்ததன் றாள்வாழ்த்தி, நாளீண்டிய நல்லகவர்க்குத், தேரோடு மாசிதறி" (மதுரை. 220 - 24); "பலர்புறங் கண்டவ ரருங்கலந் தரீஇப், புலவோர்க்குச் சுரக்குமவ னீகை மாரியும்" மலைபடு. 71 - 2.

11 - 6. "விறல்வேன் மன்னர் மன்னெயின் முருக்கி, நயவர் பாணர் புன்கண் டீர்த்தபின்" சிறுபாண். 247 - 8.

17-8. "நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி, உலகுபொதி யுருவத் துயர்ந்தோன் சேவடி, மறஞ்சேர் வஞ்சி மாலை யொடுபுனைந், திறைஞ்சாச் சென்னி யிறைஞ்சிவலங் கொண்டு" சிலப். உசு : 54- 7.

20. "முனிவர்......வாழ்கெனப் பரவிப் பாணியை *விரித்தனர் நிற்ப" கந்த. சூரனரசிருக்கை. 19.

19 - 20. "பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே" பதிற். சரு : 1.

17 - 20. இவ்வடிகள், செவியுறைவாழ்த்திற்கு மேற்கோள்; தொல். செய். சூ. 114, பேர்.

22. "ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக், கொள்ளை மேவலை", "ஏம நன்னா டொள்ளெரி யூட்டினை", "வினைபுனை நல்லில் வெவ்வெரி நைப்பக், கனையெரி யுரறிய மருங்கும்" (புறநா. எ: 8 - 9, கசு : 17, உரு:

பி - ம். *னேஎய்ப். †பணீஇயாத்தை. ‡முதல்வர். ‖வியவுணின்.



செவிய ரத்தைநின் வெகுளி வாலிழை
மங்கையர் துனித்த வாண்முகத் தெதிரே
ஆங்க, வென்றி யெல்லாம் வென்றகத் தடக்கிய
தண்டா வீகைத் தகைமாண் குடுமி
தண்கதிர் மதியம் போலவுந் தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்
†மன்னிய பெருமநீ நிலமிசை யானே.[1]

திணையும் துறையும் அவை; துறை வாழ்த்தியலுமாம்.

[2]பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் பாடியது.

10 - 11); "யாண்டுதலைப் பெயரா வேண்டுபுலத் திறுத்து, முனையெரி பரப்பிய துன்னருஞ் சீற்றமொடு", "பசும்பிசி ரொள்ளழ லாடிய மருங்கு", "ஊரெரி கவர வுருத்தெழுந் துரைஇப், போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப" (பதிற். சஉ : 1 - 2, உகூ : 7, எக : 9 - 10); "செருமிகு சினவேந்தன் சிவந்திறுத்த புலம்போல, எரிமேய்ந்த கரிவறல்" (கலி. கங: 1 - 2); "நாடுகெட வெரிபரப்பி" மதுரை. 126.

23. அத்தை என்னும் இடைச்சொல், முன்னிலையசையாய் வருமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். இடை. சூ. 47, தெய்வச்.; இ. வி. சூ. 276, உரை.

24. "துனிநீங்கி யாட லொருடங்கு துனிநனி, கன்றிடிற் காமங் கெடுஉம்" பரி. சு: 97 - 8.

25. வென்று அகத்தடக்கல்: புறநா. எஎ : 10 - 13.

26. "தண்டாக் களிப்பு" மணி. சு : 126.

29. இது, யகரவீற்றுவியங்கோளுக்கு மேற்கோள்; தொல், உயிர். சூ. 8, இளம்; நன். மயிலை. சூ. 337; நன். வி. சூ. 338; இ. வி. சூ. 239, உரை; மன்னுமை நிலையாமையை உணர்த்துமென்பதற்கு மேற்கோள்; தொல். கிளவி. சூ. 34, ந.

[1]மு. "இதனுள் இயல்பாகிய குணங்கூறி அவற்றோடு செவியுறையும் கூறினன், செவியுறைப்பொருள் சிறப்புடைத்தென்று அவன்கருதி வாழ்தல் வேண்டி" தொல். புறத். சூ. 35, செய். சூ. 144, ந.

[2]பாட்டுடைத்தலைவன் பெயரின் ஒருபகுதி இப்பாட்டின் 26 - ஆம் அடியில் அமைந்திருத்தல் காண்க.

பி - ம். *சொலிகவத்தை. †மன்னுக.

இ - ள்.—வடக்கின்கண்ணது பனிதங்கிய நெடிய இமயமலையின் வடக்கும், தெற்கின்கண்ணது உட்குந்திறம் பொருந்திய [1]கன்னியாற்றின் தெற்கும், கீழ்க்கண்ணது கரையைப்பொருகின்ற சகரரால் தோண்டப் பட்ட சாகரத்தின் கிழக்கும், மேல்கண்ணது பழைதாய் முதிர்ந்த கடலின் மேற்கும், கீழதாகியநிலமும் ஆகாயமும் சுவர்க்கமுமென மூன்றுங்கூடிய புணர்ச்சியாக அடுக்கப்பட்ட அடைவின்கண் முதற்கட்டாகிய நீர்நிலைக் கண் ஓங்கிய நிலத்தின்கீழும், மேலதாகிய கோலோகத்தின்கண்ணும் அமையாது உட்கும் புகழுமாகப் பரந்த அளவையுடைய பொருள்களை ஆராயும் துலாக்கோலின்கட் சமன்வாய்போல ஒருபக்கம் கோடா தொழிக; நினது [2]படை குடிமுதலாகிய கூறுபாடுகள் சிறக்க; போர் செய்தற்கு மாறுபட்ட பகைவர் தேயத்தின்கண்ணே நினது கடல் போலும் படை மேல்விழுந்து உள்புக மிக்குச் சென்று அடர்ந்த புகரினை யுடைய சிறுகண்யானையைத் தடையின்றி நேரே ஏவிப் பசிய விளைநிலப்

பக்கத்தையுடைய அரிய மதிலரண் பலவற்றையுங் கொண்டு அவ்வர ணின்கட் கொள்ளப்பட்ட அழகுபடச் செய்த நல்ல அணிகலங்களைப் பரிசிலர்க்கு வரிசையின் வழங்கி நினது கொற்றக்குடை முனிவரால் பரவப்படும் மூன்று திருநயனத்தையுடைய செல்வரது கோயிலை வலம் வருவதற்குத் தாழ்க; பெரும! நினது முடி, மிக்க நான்கு வேதத்தினை யுடைய அந்தணர் நின்னை நீடுவாழ்கவென்றெடுத்த கையின்முன்னே வணங்குக; இறைவ! நினதுகண்ணி, நின்பகைவரது நாட்டைச் சுடும் பலமணம் நாறும் புகையுறைத்தலான் வாடுக; நினது சினம், வெளிய முத்தாரத்தை யுடைய நின் தேவியருடைய துனித்த ஒளியையுடைய முகத்தின் முன்னர்த் தணிக; வென்று வென்றிமுழுதையும் வியவாது நின்மனத்தே உட்கொண்ட தணியாத வண்மையையுடைய தகுதிமாட்சி மைப்பட்ட குடுமி! குளிர்ந்த சுடரையுடைய திங்களையொப்பவும் சுடு கின்ற ஒளிபொருந்திய ஒள்ளிய கதிரையுடைய ஞாயிற்றையொப்பவும் நிலைபெறுவாயாக, நீ உலகத்தின்மேல்.—எ - று.

வடாதென்னும் (1) முற்றுவினைக்குறிப்பைப் பெயர்ப்படுத்தி, பனி படு நெடு வரையொடு பண்பொட்டாக்கி, அதன்வடக்குமென்க; ஒழிந் தனவு மன்ன.

மேலது துறக்கத்தின் மேலுமென்பார், அதற்கு மேலதாகிய ஆனிலை யுலகத்தானு (7) மென்றார். உருவென்பது (8), இஃதுணையாற் பிறாஞ்சும் உட்குடைமை.

---

[1]கன்னியாறு: பாண்டி நாட்டைக் கன்னி நாடென்பது இதனாலும் இருத்தல் கூடும்; வேறு கூறுவாருமுளர்; திருவிளை. தடாதகைப். 61.
[2]குறள், 381.

அத்தையும் (23), ஆங்கவும் (25) அசைநிலை.

குடுமி! பெரும! உருவும் புகழும் ஆக ஒருதிறம் பற்றுதொழிக; நிற்றிறஞ் சிறக்க; பணிக; இறைஞ்சுக; வாடுக; செல்லுக; பரிசின்மாக் கட்கு நல்கி மதியம்போலவும், ஞாயிறுபோலவும் நீ நிலத்தின்மிசை மன்னுக வெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

தேஎத்தென்பதனுள் (11), அத்தை அசைநிலையாக்கி, தேயம் கடற் யடைக்குள்ளே குளிப்பவென்றுரைப்பாருமுளர்.

ஞமன் (9) - யமனெனினுமமையும். அடற்புகர்ச் சிறுகண் யானை (12) யென்று பாடமோதி, கொலையைச்செய்யும் புகரையுடைய யானை யெனினும் அமையும்.

ஆகி (8), ஆகவெனத் திரிந்துநின்றது; ஆகியென்பதனைத் திரியாது,
நிற்றிறஞ் சிறக்க (10) வென்பதனோடு இயைத்துரைப்பாரும் உளர். நின்றிறம், நிற்றிறமென வலிந்துநின்றது.

நகர்வலஞ்செயற்குப் பணியியரென வீடும், எந்தையெதிர் இறைஞ் சுகவென அறமும், புகையெறித்தலான் வாடுகவெனப் பொருளும், முகத் தெதிர் தணிகவென இன்பமும் கூறியவாறாயிற்று.

இஃது, இவ்வாறு செய்கவென அரசியல் கூறலிற் [1]செவியறிவுறூஉ வும், மதியமும் ஞாயிறும்போல மன்னுகவென்றமையான் வாழ்த்தியலு மாயிற்று.
(சு)

---

[1]ஒருவுதல், ஒரூஉதலெனவும் ஒரூஉவெனவும் கூறப்படுதல் போல உறுதலும் உறூஉதலெனவும் உறூஉவெனவும் கூறப்படுமென்பர்; தொல். புறத்திணை. சூ. 35, ந.

(எ) களிறு கடைஇயதாட்
கழலுரீஇய திருந்தடிக்
*கணைபொருது கவிவண்கையாற்
கண்ணொளிர்வரூஉங் கவின்சாபத்து
மாமறுத்த மலர்மார்பிற்

1. மூ. பதிற். எ0 : 1.
5. மாவென்பது இடத்தால் திருவை விளக்கியதென்பதற்கு இது மேற்கோள்; நன். மயிலை. சூ. 389; நன். வி. சூ. 390; இ. வி. சூ. 320, உரை.
பி - ம். *கணைக்கால் பொருத.



தோல்பெயரிய வெறுழ்முன்பின்
எல்லையு மிரவு *மெண்ணாய் பகைவர்
ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக்
கொள்ளை மேவலை யாகலி னல்ல
இல்லவா குபவா லியறேர் வளவ
தண்புனல் பரந்த பூசன் மண்மறுத்து
மீனிற் செறுக்கும் யாணர்ப்
பயன்றிகழ் வைப்பிற்பிற ரகன்றலை நாடே.[1]

திணை - வஞ்சி; துறை - கொற்றவள்ளை; மழபுலவஞ்சியுமாம்.

சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கருங்குழலாதனார் பாடியது.

இ - ள்.—களிற்றைச் செலுத்திய தாளையும், வீரக்கழலுரிஞ்சிய இலக்கணத்தாற்றிருந்திய அடியினையும், அம்பொடு †பொருது இடக் கவிந்த வள்ளிய கையுடனே கண்ணிற்கு விளங்கும் அழகினையுடைய வில்லையும், திருமகள் பிறர்மார்பை மறுத்தற்கு ஏதுவாகிய பரந்த மார்பினையும், யானையைப்பெயர்த்த மிக்க வலியினையுமுடைய, பகலுமிரவும் எண்ணாது பகைவரது ஊரைச் சுடுகின்ற தீயினது ஒளியின்கண்ணே தம்சுற்றத்தை அழைத்தலுடனே அழுகின்ற கூவுதலையுடைய ஆரவாரத்தோடுகூடிய கொள்ளையை விரும்புதலுடையை; ஆதலான், நல்ல பொருள்கள் இல்லையாகுவனவால்; இயற்றப்பட்ட தேரையுடைய வளவ! குளிர்ந்த நீர்பரந்த ஓசையையுடைய உடைப்புக்களை மண்மறுத்தலான் மீனடைக்கும் புதுவருவாயினையுடைய பயன் விளங்கும் ஊர்களையுடைய மாற்றாரது அகன்ற இடத்தையுடைய நாடுகள்.—எ - று.

திருந்தடி (2) யென்பதற்குப் [2]பிறக்கிடாத அடியெனினும் அமையும்.

கணைபொரு (3) தென்றது, அதனொடு மருவுதலை.

தாளையும், அடியையும், கையுடனே சாபத்தையும், மார்பையும், முன்பையுமுடைய வளவ! நீ கொள்ளைமேவலையாதலின், யாணரையும் வைப்பினையுமுடைய பிறர்நாடு, நல்ல இல்லாகுபவெனக் கூட்டுக. நாடு நல்ல

---

6. எறுழ் முன்பு: ஒருபொருட் பன்மொழி.

12. செறுக்கும் - அடைக்கும்; "செறுத்தோ றுடைப்பினுஞ் செம்புனலோ டோர்" நாலடி. 222.

[1]இப்பாட்டினை வஞ்சித்திணைக்குரிய எரிபரந்தெடுத்தலென்னுந் துறைக்கு உதாரணமாகக் காட்டினர்; தொல். புறத். சூ. 8, ந.
[2]பிறக்கு - பின்; "நசைபிறக் கொழிய" புறநா. கடு : 15.
பி - ம். *மென்னுய். †பொருத.



இல்லவாகுபவென இடத்துநிகழ்பொருளின் தொழில் இடத்துமேலேறி நின்றது.

இனித் தாளாலும் அடியாலும் கையாலும் சாபத்தாலும் மார்பாலும் முன்பாலும் கொள்ளைமேவலையாகலினென ஆலுருபு விரித்துரைப்பினும் அமையும்.

இது, பிறாகன்றலைநாடு நல்ல இல்லவாகுப வென்றமையிற் கொற்ற வள்ளையும், ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலையென்றமையின் மழ புல வஞ்சியுமாயிற்று. (எ)

---

(அ) வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅ
திடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப
ஒடுங்கா வுள்ளத் தோம்பா வீகைக்
கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்கன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்
பொழுதென வரைதி புறக்கொடுத் திறத்தி

மாறி வருதி மலைமறைந் தொளித்தி

---

1. "தொன்றுபட்டு வழிமொழிய" புறநா. கஎ : 4.

2. புறநா. ருரு: 4 - 5; "பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளுஞ் செல்வர்க்கு" (கலி. கூஅ); "அரசன் போகம் வேண்டிப் பொதுச் சொற் பொருளுய்" (நெடுநல். அவதாரிகை); "கொடியு முரசுங் கொற்ற வெண் குடையும், பிறர்கொளப் பொருஅன் றூனே கொண்டு" சிதம்பர மும்மணி. 25.

4. "ஓம்பா ஈயு மாற்ற லெங்கோ" (புறநா. உஉ : 33); "ஓம்பா வீகையின் வண்மகிழ் சுரந்து" பதிற். சஉ : 13.

5. "ஒன்னாதார்க் கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற, வென் வேலான்" கலி. உஎ: 15 - 6.

6. யாங்கனம்: "ஈங்கு கென்றியான் யாங்கன மொழிகோ" (அகநா. கூ0 : 8); "யாங்கனம் வந்தனை" (மணி. ரு : 41.) ஒக்குமெனக் கூறுமல் ஒவ்வாதெனக்கூறலும் உவமையாமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். உவம. சூ. 33, பேர்.

7. "மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்ப" (அகநா. ச : 5); "அழிகுநர் புறக்கொடை" பு. வெ. 55, கொளு.

8. புறநா. சுரு: 6 - 8.

4



அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே.[1]

---

10. புறநா. கஎச : 17 - 8.

[1]ழ. "ஒரீஇக் கூறலும்" (தொல். உவம. சூ. 35, இளம்.) என்பதற்கு மேற்கோள்; "'வையங் காவலர்...பல்கதிர் விரித்தே' என்னும் பாட்டினுள், 'கடந்தடு தானைச் சேரலாதனை' என்னுந்துணை உவமத்திற்கு வந்த அடையினைப் பொருட்கு மறுத்துக் கொள்ளவைத்தா னென்பது. என்னை ? வெஞ்சுடர் வழியென்னுந்துணை உவமத்திற்குரிய அடையினைப் பொருட்கு மறுத்துக் கொள்ளவைத்தானென்பது. இனி, 'பொழுதென வரைதி' என்பது தொடங்கிப் பாட்டு முடிகாறும் பொருட் குரிய அடையினை உவமத்திற்கு மறுத்துக் கொள்ளவைத்தானென்பது. என்னை? வெஞ்சுடர் வழித்தோன்றிய அரசனைத் தண்சுடரோடு உவமிப் பான், 'பொருளே யுவமஞ் செய்தனர் மொழியினும்' என்றதனாற் பொரு ளினை உவமைபாகக்கூறாது உள்ளுறையுவமம் போலக் கொள்ளவைத்துப் பின்னர் உவமத்திற்கு அடையாயவற்றுள், 'வையங்காவலர் வழிமொழிந் தொழுக' என்றான். வழிமொழிதலென்பது வேற்றரசர்க்குத் தம் தன்மை யென வேறின்றித் தன்னகப்படுத்தல்; ஆகலால் தத்தம் ஒளியொடுபடுத்து ஒழிந்தகோளுஞ் செல்லத் தானுஞ் செல்லும் மதியமென்று எதிர்மறுத் துக் குற்றங்கூறும் குறிப்புப்படவைத்தானென்பது. 'போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅது' எனவே இன்பநுகர்வு முற்றுச்சிறப்பில்லாக் கட்டுரை பெய்தானெனவும் அவனோடு உவமிக்கின்ற மதியமாயின் இருபத்தெழுவர்மகளிரொடு போகந்துய்த்துச் சிறப்பில்லாத கட்டுரை புனையுமென்று எதிர்மறுத்துக் கொள்ளவைத்தான். சிறப்பின்மையென் பது, எல்லார்க்கும் ஒத்தவாற்றான் அறஞ்செய்யாது உரோகிணிமேற் கழிபெருங்காதலனெனப்படுதல் போல்வன. 'இடஞ் சிறிதென்னு மூக்கந்துரப்ப' எனவே, எஞ்ஞான்றுந் தன்னெல்லைக்கண்ணே வரும், மதிமண்டிலமென்று எதிர்மறுத்துக்கொள்ளப்படும். 'ஒடுங்கா வுள்ளம்' எனவே, மதியம் தேய்ந்தொடுங்கு மென்பது கொள்ளப்படும். 'ஓம்பா வீகை' எனவே, நாடோறும் ஒரோவோர் கலைபாகப் பல்லுயிர்க்கும் இன்பம் பயக்குமாற்றால் தருவதல்லது தானுடையதெல்லாம் ஒருகாலே

கொடாது மதியமெனப்படும். 'கடந்தடுதானை'யெனவே மதிக்குத் தானையாகிய தாரகையெல்லாம் பகைக்கதிராகிய பருதிமண்டிலத்துக்குத் தோற்குமென்றாலும். இவ்வாற்றான் உவமான அடையெல்லாம் எதிர்மறுத்துக்கொள்ளப்பட்டன. இனி, பொருட்குரிய அடையும் அவ்வாறே எதிர்மறுத்துக் கொள்ளப்படுமென்றவாறு. 'விலங்குசெலன்மண்டிலம்'



திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி; பூவைநிலையுமாம்.
சேரமான்கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியது.

இ - ள்.—உலகத்தைக் காக்கும் அரசர் வழிபாடு சொல்விடக்க நுகரும் இன்பத்தை விரும்பிப் பூமி பிறவேந்தருக்கும் பொதுவென்னும் வார்த்தைக்குப் பொறாது தன் நாடு இடஞ்சிறிதென்னும் [1]மேற்கோள் செலுத்த மடியாத உள்ளத்தையும் பொருளைப் பாதுகாவாது வழங்கும் வண்மையையும் வஞ்சியாது எதிர் நின்று கொல்லும் படையையுமுடைய சேரலாதனை எவ்வாறொப்பை? மிக்க செலவையுடைய மண்டிலமே! நீ பகற்பொழுதை நினக்கெனக் கூறுபடுப்பை; திங்கள் மண்டிலத்திற்கு முதுகிட்டுப் போதி; தெற்கும் வடக்குமாகிய இடங்களில் மாறிமாறி வருவை; மலையின்கண்ணே வெளிப்படாது காப்பை; அகன்ற பெரிய ஆகாயத்தின்கண்ணும் பகற்பொழுது விளங்குவை, பல கிரணங்களையும் பரப்பி.—எ - று.

மாறிவருதி (8) யென்பதற்கு இராசிதோறும் மாறிவருதி யெனினு மமையும்.

வீங்குசெலன்மண்டிலமே! வரைதி; இறத்தி; வருதி; ஒளித்தி; நீ விசும்பினானும் பகல் விளங்குதி; இக்குறைபாடெல்லாமுடைய நீ சேரலாதனை யாங்கனமொத்தியோவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

ஒழுகவென்னுமெச்சம் (1) நுகருமென ஒருசொல் வருவித்து அதனோடு கூட்டி முடிக்கப்பட்டது; ஒழுகவும் போகம்நுகரவும் வேண்டி

---

எனவே, கடையாயினர் கதியிற்செல்லு மதியமென்று பாட்டுடைத் தலைவன் தலையாயினர் கதியிற்செல்லுமென்றான். 'பொழுதென வரைதி' எனவே, நாடோறும் நாழிகை வேறுபட்டு எறித்தியென்றதனான் இவன் பொழுது செய்யானெனவும், 'புறக்கொடுத்திறத்தி' எனவே, தோற்றார் போன்று ஒளி மழுங்கிச் செல்கின்றாயென்பதனால் சுடர்போல விளங்கிப் பிறர் தோற்றோடக்காயும் இவனெனவும், 'மாறிவருதி' எனவே, திங்க டோறுமாறிப் பிறத்தியென்பதனான் இவன் நிலைபெற்றானெனவும், 'மலைமறைந்தொளித்தி' எனவே மலைசார்ந்தவழித் தோன்றாயென்பதனான் இவன் தன்னாட்டு மலைமீக்கூறுமெனவும், 'அகலிரு விசும்பினானும்' எனவே, இவன் இவ்வுலகத்து நிலைபேறுடையனெனவும், 'பகல்விளங் காய்' எனவே, இவன் இருபொழுதும் விளங்குமெனவுங் கொள்ளப்படும். முற்பகுதியும் பிற்பகுதியும் வேறுபட வருதலின் இது வேறுபட வந்ததாயிற்று'' தொல். உவம. சூ. 32, பேர்.

[1]மேற்கோள் - பிரதிஞ்ஞை.



யெனினும் அமையும். வேண்டி, பொரூது, தரப்ப என நின்ற வினையெச்சங்கள் ஒடுங்காவென்னும் பெயரெச்சமறையோடு முடிந்தன.

இனி, 'பகல்விளங்கலை' என்னும் பாடத்திற்குத் [1]திங்கண்மண்டில மாக்கி, 'மாறிவருதி' என்பதற்குத் தேய்ந்தும் வளர்ந்தும் வருதியெனவும் பிறவும் அதற்கேற்ப [2]வுரைப்ப. (அ)

---

[1]புறநா. உள: 11 - 4; "மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும், தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்" (சீவக. 2932); "உலகினர் செல்வநந்த லுரைப்பொரு ளிரண்டுங் கோடல், இலகுவெண் மதியங் காட்ட வென்றுமோர் நகைத்தாய்ச் சேறல், விலகுதஞ் செல்வ மெங்கள் விழுப்பொரு ளாய வண்ணல், அலகில்செஞ் சோதிப்பின்ன லணி மதி யுணர்த்த வாழ்வார்" (கூவப். நைமிசா. 14); "அகன்மதி வளர்ந்து தேய்ந்தற் றச்சக போகத் தன்மை, நகலுறக் காட்ட" திருவாத. நைமிச. 16.

[2]உரைப்பவர் இளம்பூரணர்.

---

(௯) ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடு தும்மரண் சேர்மினென

1. சிறிதும் தீங்குசெய்யத்தகாத சாதியாகலின், பசு முற்கூறப் பட்டது; "ஆவு மாவுங் கொண்டுகழி கென்றே" மணி. கூ: 25.

1 - 2. தொல். விளி. சூ. 8, தெய்வச். மேற்.; "ஆவு மானியற்.... ..பிணியுடையீரும்' என்றாற் போலும் அண்மைவிளியும் இதனுட் கொள்க" தொல். விளி. சூ. 12, ந.

4. "பொன்போற் புதல்வனோ டென்னீத் தோனே" (ஐங்குறு. உசுடு : 4.) புதல்வன் செல்வமென்பது: கலி. அகூ : 34 - 6, ந.

5. "எம்மம்பு...சேர்மி னென்பது விரைவு" நன். மயிலை. சூ.

456 ; நன். வி. சூ. 457.

1 - 5. "மண்டமர் மேல்கொடு வந்தன மின்னே, தண்டக நாட் டுறை தாபதர் சேரயோர், பெண்டிரு நம்மா ணேகுதிர் டெட்டென், றெண்டிசை யார்ப்ப விசைப்பறை சாற்றி" (சாஞ்சிப். நாடு. 21.) "ஆவும் ...சேர்மினெனத் திணைவிராய்வந்த முன்னிலை வினைகோடல் எற்றாற் பெறுதுமெனின்,—அந் நிகரன செய்யுண்முடிடெனப்படும்; அவற்றை



அறத்தாறு நுவலும் பூட்கை மறத்திற்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த

---

அதிகாரப்புறனடையாற் கொள்க" (தோல். கிளவி. சூ. 45, சே.); "ஆவு மானியற் பார்ப்பன மாக்களுமென எண்ணி 'நம்மரண்சேர்மின்' என முன்னிலைவினைகோடல் செய்யுண்முடிபென்பது அதிகாரப் புறனடையாற்கொள்க" (தோல். கிளவி. சூ. 45, ந.); "ஆவு மானியற் பார்ப்பனமாக்களும்...சேர்மின் என எகரவீற்று உயர்திணைப்பெயர் அண்மைக்கண் இயல்பாயிற்று" இ. வி. சூ. 207, உரை.

6. "அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்" (புறநா. கூஉ : 7.) "சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாம், சொல்லிய வண்ணஞ் செயல்" (குறள், 664) என்பதும், "சிறப்புடை அரசியலாவன:

மடிந்த
உள்ளத்தோனையும் மகப்பெறுதோனையும் மயிர்குலைந்தேனையும் அடி
பிறக்கிட்டோனையும் பெண்பெயரோனையும்
படையிழந்தோனையும்
ஒத்தபடையெடாதோனையும் பிறவும்
இத்தன்மையுடையோரையும்
கொல்லாது விடுதலும் கூறிப்பொருதலும் முதலியனவாம்''
(தோல்.
புறத்திணை. சூ. 10, ந.) என்பதும் இங்கே அறியற்பாலன.

1 - 6. "இருபெருவேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர்,
ஒருவர்
நாட்டுவாழும் அந்தணரும் ஆவும் முதலியன தீங்கு செய்யத்தகாத
சாதி [illegible]களை ஆண்டு நின்றும் அகற்றல் வேண்டிப் போதருகவெனப்
புகறலும்,
அங்ஙனம் போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினால்
தாமே
கொண்டு வந்து பாதுகாத்தலும் தீதெனப்படாது
அறமேயாமென்றற்கு
'ஆதந் தோம்பல்' என்றான்; அஃது, 'ஆவும்...மறத்தின்' எனச்
சான்
றோர் கூறியவாற்றா னுணர்க; மன்னுயிர்காக்கும் அன்புடை
வேந்தற்கு
மறத்துறையினும் அறமே நிகழுமென்றற்கு, 'மேவற்றாகும்'
என்றான்''
(தோல். புறத்திணை. சூ. 2, ந.; இ. வி. சூ. 602, உரை)
என்பனவும்,
"நன்பால் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர்பார்ப்பார்,
என்பாரை

யோம்பே னெனின்யா னவனுக வென்றான்" (சீவக. 443) என்பதும்

இங்கே அறியத்தக்கவை.

7. மீமிசை: "ஓங்குயர் சமந்தத் துச்சி மீமிசை" (மணி. கக: 22.) யானைமேற் கொடி: பதிற். ௰உ: 1, சுக: 1 - 2, அஅ: 17; நெடுநல். 87;

கம்ப. சம்புமாலி. 26.

9. செந்நீர்ப் பசும்பொன் - நால்வகைப் பொன்னுட் கிளிச்சிறை

யென்பது; "செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை" மதுரை. 410.



10 முந்நீர் விழவி னெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே.[1]

திணையும் துறையும் அவை.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியை நெட்டிமையார் பாடியது.

இ - ள்.—ஆவும், ஆனினதியல்பையுடைய அந்தணரும், மகளிரும், நோயுடையீரும், பாதுகாத்துத் தென்றிசைக்கண் வாழ்வோராகிய நுங் குடியில் இறந்தோர்க்குச் செய்தற்கரிய பிண்டோதகக்கிரியையைப் பண்ணும் பொன்போலும் பிள்ளைகளைப் பெறாதீரும் எம்முடைய அம்பை விரையச் செலுத்தக்கடவேம், நீர் நுமக்கு அரணாகிய இடத்தை அடையு மென்று அறநெறியைச் சொல்லும் மேற்கோளினையும் அதற்கேற்ற

மறத்தினையுமுடைய, சொல்யானைமேலே எடுக்கப்பட்ட கொடிகள் ஆகாயத்தை நிழற்செய்யும் எம்முடைய வேந்தனாகிய குடுமி வாழ்வானாக;

---

10. முன்னொருகாலத்தில் மதுரையை அழித்தற்கு வந்த கடலை உக்கிர குமார பாண்டியனென்டவன், ஸ்ரீ சோமசுந்தரக் கடவுள் அருளிய வேலை யெறிந்து வற்றச்செய்து, அக்கடல் தன்னுடைய காலின் வடிம்பை யலம்பும்படி உயர்ந்து நின்றமையால், அவனுக்குக் கடல்வடிம் பலம்பநின்றபாண்டியனென்பது பெயராயிற்று; இதனைத் திருவாலவா யுடையார் . திருவிளையாடற்புராணத்தில் உக - ஆவதிலுள்ள 6 - ஆம் விருத்தமுதலியவற்றாலுணர்க; "அடியிற் றன்னளவரசர்க் குணர்த்தி வடிவே லெறிந்த வான்பகை பொறாது, பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக், குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள" (சிலப். கக: 17 - 20), "ஆழி வடிம்பலம்ப நின்றானும்" (நள. சுயம். 137), "கடல்வடிம் பலம்ப நின்ற கைதவன்" (வி. பா. கரு - ஆம் போர். 18) எனவும் வருபவை இதனை வலியுறுத்தும். நெடியோன்: "பொலந்தார் மார்பி னெடியோ னும்பல்" (மதுரை. 61); "உரைசால் சிறப்பி னெடியோ னன்ன, வரைச பூதம்" சிலப். உஉ: 60 - 61.

11. பஃறுளியாறு : சிலப். கக. 19.

8 - 11. ஓர் அரசரை வாழ்த்துகையில் அவரை அவர்க்குரிய ஆற்று மணலினும் வாழ்கவென்றல் மரபாகலின் இங்ஙனம் கூறினார்; புறநா. சகூ: 21 - 3; "மண்ணாள் வேந்தே நின்வா ணாட்கள், தண்ணான் பொருநை மணலினுஞ் சிறக்க" சிலப். உஅ : 125 - 6.

1இச்செய்யுள், பொருளின்றுய்த்த பேராண்பக்கத்திற்கும், இயன் மொழிவாழ்த்திற்கும் (தொல். புறத். சூ. 7, 29, இளம்.) உதாரணமாக முறையே காட்டப்பட்டுள்ளது.

தம்முடைய கோவாகிய, சிவந்த நீர்மையையுடைய போக்கற்ற பசிய பொன்னைக் கூத்தர்க்கு வழங்கிய முந்நீர்க் [1]கடற்றெய்வத்திற்கெடுத்த விழாவினையுடைய *நெடியோனால் உளதாக்கப்பட்ட நல்ல நீரையுடைய பஃறுளியென்னும் ஆற்றின்மணலினும் பலகாலம்.—எ - று.

எங்கோவாகிய குடுமி, பஃறுளியாற்றின் மணலினும் பலகாலம் வாழியவெனக் கூட்டுக.

கொடி விசும்பு நிழற்று (6) மென்பது, சினைவினைப்பாற்பட்டு எங்கோ வென்னும் (7) முதலொடு முடிந்தது; கொடியால் விசும்பு நிழற்றுமென் றுரைப்பினும் அமையும்; மீமிசைக்கொடி விசும்புநிழற்றும் களிற்றினையு மென மாறிக்கூட்டுவாருமுளர். தங்கோச் செந்நீர்ப் பசும்பொனென்ப தற்குத் (9 - 10) தமதரசாட்சியினது செவ்விய நீர்மையாற்செய்த பசும்பொ னென்பாருமுளர்.

முந்நீர்க்கண் வடிம்பலம்ப நின்றானென்ற வியப்பால், நெடியோ னென்றாரென்ப. யாற்றுநீரும் ஊற்றுநீரும் மழைநீருமுடைமையால், கடற்கு [2]முந்நீர் என்று பெயராயிற்று; அன்றி, முன்னீரென்றோதி, [3]நிலத்திற்குமுன்னாகிய நீரென்றுமுரைப்ப.

பிணியுடையீரும் புதல்வர்ப்பெறாதீருமென்னும் முன்னிலைப் பெய ரோடு ஆவும் பார்ப்பனமாக்களும் பெண்டிருமென்னும் படர்க்கைப் பெயர்கள் விராய்வந்து, நும்மரண் சேர்மினென்னும் முன்னிலைவினை யான் முடிதல், [4]"செய்யுண் மருங்கினும் வழக்கியன் மருங்கினும்" என்னும் அதிகாரப்புறனடையாற் கொள்ளப்படும். (க)

---

[1]"கடற்றெய்வங் காட்டிக் காட்டி" சிலப். கானல்வரி.

[2]"முந்நீர் - கடல்; ஆகுபெயர்; ஆற்றுநீர் ஊற்றுநீர் மேனீரென இவையென்பார்க்கு அற்றன்று; ஆற்றுநீர் மேனீராதலானும் இவ்விரண்டு மில்வழி ஊற்றுநீரும் இன்றாமாதலானும் இவற்றை முந்நீரென்றல் பொருந்தியதன்று; முதிய நீரெனின், "நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றும்" (குறள், 17) என்பதனால் அதுவும் மேனீரின்றி அமையாமையின் ஆகாது; ஆனால் முந்நீர்க்குப்பொருள் யாதோவெனின் முச்செய்கையையுடையநீர் முந்நீரென்பது; முச்செய்கையாவன மண்ணைப் படைத்தலும் மண்ணையழித்தலும் மண்ணைக்காத்தலுமாம்" என்பர் அடியார்க்குநல்லார் (சிலப். கஎ: முந்நீரின்); பெரும்பாண். 441; சீவக. 5, ந. பாரகக.

[3]இங்ஙனங் கூறியது பூதங்களின் தோற்ற முறைபற்றி.

[4]தொல். எச்ச. சூ 67.

பி - ம். *உயர்ந்தோனல்.



(௧௦) வழிபடு வோரை வல்லறி தீயே
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே
நீமெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி யத்தக வொறுத்தி
வந்தடி பொருந்தி முந்தை நிற்பிற்
றண்டமுந் தணிதிநீ பண்டையிற் பெரிதே
அமிழ்தட் டானாக் கமழ்குய் யடிசில்
வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை

மகளிர் மலைத்த லல்லது மள்ளர்
மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப
செய்திரங் காவினைச் சேண்விளங் கும்புகழ்

---

3 - 4. "முறையெனப் படுவது கண்ணோடா துயிர் வௌவல்' (கலி. கருரு: 13); "எங்க ணினைய ரெனக்கருதி னேதமால், தங்கண்ண ராயினுந் தகவில கண்டக்கால், வன்கண்ண னாகி யொறுக்க வொறுக் கல்லா, மென்கண்ண னாளா னரசு" (பழமொழி, 322); "தண்டமாவது, அவ்வொழுக்கநெறியினும் வழக்குநெறியினும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்துதற்பொருட்டு ஒப்ப நாடி அதற்குத் தகவொறுத்தல்" குறள், பரிமேல். உரைப்பாயிரம்.

5 - 6. "அஞ்சினர்க் களித்தலும்" சிறுபாண். 210.

8. வாழ்க்கை: ஐங்குறுநூற்றின் முதற்பத்தால் விளங்கும்.

10. போகிய: "மக்கள் போகிய வணிலாடு முன்றில்" குறுந். சக.

9 - 10. "சிலைத்தா ரகல மலைக்குந ருளரெனிற், றாமறி குவர்தமக் குறுதி யாமவன், எழுவுறழ் திணிதோள் வழுவின்று மலைந்தோர், வாழக் கண்டன்று மிலமே", "மலைப்பரு மகல மதியார் சிலைத்தெழுந்து" (புறநா. சுக: 14 - 7, எஅ: 4); "வணங்குசிலை பொருதநின் மணங்கமழ் ழகல, மகளிர்க் கல்லது மலைப்பறி யலையே" (பதிற். சுரு: 4 - 5.) "இளை யோர்க்கு மலர்ந்த மார்பினை" (சிறுபாண். 232, ந.) என்பதற்கும், "சோலைமயிலார்கடுணை வெம்முலைக டுஞ்சுங், கோலவரைமார்பு" (சீவக. 283, ந.) என்பதற்கும் இவ்வடிகள் மேற்கோள்; "மள்ளர்...மார்ப: இது தாரடுத்தது" தொல். புறத்திணை. சூ. 31, ந.

11. செய்திரங்காவினை: "செய்துபின் னிரங்கா வினையொடு (அகநா. உகூஅ : 13); "எற்றென் றிரங்குவ செய்யற்க" (குறள், 655); "கற்றூர்முற் றோன்றா கழிவிரக்கம்" (நான்மணி. 10.) "செய்திரங்கா வினையென இரங்கல் இசையேயன்றிப் பொருளது கழிவாகிய குறிப்பும்

நெய்தலங் கான னெடியோய்
எய்தவந் தனம்யா மேத்துகம் பலவே.

திணையும் துறையும் அவை.

சோழன் *நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் பாடியது.

இ - ள்.—நின்னை வழிபட்டொழுகுவோரை விரையஅறிவை; பிற ருடைய குற்றஞ்சொல்லுவாரது வார்த்தையைத் தெளியாய்; நீ மெய்
யாக மனத்தான்ஆராய்ந்து அறுதியிடப்பட்ட கொடுமையை ஒருவன்பாற் காணின், அதனை நீதிநூற்குத் தக ஆராய்ந்து அத்தீமைக்குத் தகத் தண் டஞ்செய்வை; வந்து நின்பாதத்தை யடைந்து
முன்னேநிற்பாராயின்,
அவர் பிழைசெய்வதற்குமுன் நீ செய்யும் அருளினும் அருள் பெரிதாக அவரைச்செய்யுந் தண்டமும் தணிவை; அமிழ்தத்தைத் தன்சுவையால்
வென்று உண்ண உண்ண அமையாத மணங்கமழும்
தாளிப்பையுடைய அடிசிலை விருந்தினர்க்கு மிகுதிகுறைபடாமல்
வழங்கும் பழிதீர்ந்த மனை
வாழ்க்கையையுடைய பெண்டிர் முயக்கத்தால் மாறுபடுத்தலல்லது வீரர்
போரால் மாறுபடுத்தலொழிந்த இந்திரவிற்போலும்

மாலையையுடைய

மார்ப!

ஒரு தொழிலைச் செய்து பின் பிழைக்கச்செய்தேமென்று கருதாத

செய்கையையும் சேய்மைக்கண்ணே விளங்கும்

புகழினையுமுடைய

நெய்தலங்கானலென்னும் ஊரையுடைய நெடியோய்! அணுகவந்தேம்

யாம்; நின் பலகுணங்களையும் புகழ்வேமாக.—எ - று.

வழிபடுவோரை வல்லறிதியென்றது, [1]அறிந்து அவர்களுக்கு

அருள்

செய்வையென்பதாம்.

---

உணர்த்திற்று" (தொல். உரி. சூ. 63, சே.); "இரங்கல், இசையே யன்றி ஒரு பொருளது கழிவாற் பிறந்த வருத்தமாகிய குறிப்பும் உணர்த்தும்; 'செய்திரங்கா...புகழ்' எனவரும்" (ஷை. ஷை. ஷை. 61, ந.); "செய்து......புகழென இரங்கலென்னுமுரிச்சொல்......ஒருபொருளது கழிவாற்பிறந்த வருத்தமாகிய குறிப்புப் பொருளுணர்த்தலும் பொருந்தும்" (இ. வி. சூ. 286, உரை.) சேண்விளங்கும்புகழ்: "விண் பொருபுகழ்" (புறநா. கக: 6); "சேணுறு நல்லிசைச் சேயிழை கணவ" (பதிற். அஅ: 36); "கெடாது நிலைஇயர்நின் சேண்விளங்கு நல்லிசை" மதுரை. 209.

[1]'அறிதி' என்றதற்கு இங்கே எழுதிய உரையும், "ஒருவாரண மழைப்ப நீயோவந் தேனென்றாய்" (கம்ப. விராதன். 49), "எங்கை மீரேனென்கிலீர்" (தக்க. 298), "என்னென்ற னெங்கட்கிறை" (நள. காப்பு) என்பவற்றிலுள்ள 'ஏனென்றாய்', 'ஏனென்கிலீர்', 'ஏனென்றான்' என்பவற்றிற்கு இன்னவாறு பொருள்செய்யவேண்டுமென்பதை நன்கு புலப்படுத்துகின்றது.

பி - ம். *நெய்தலங்காலை.

பெரிதென்பது (6) வினையெச்சக்குறிப்பாகலின், ஆகவென ஒரு சொல் வருவித்து உரைக்கப்பட்டது. பண்டையிற்பெரிது தணிதியென்பதற்கு நீ பண்டுசெய்த கோபத்தினும் பெரிதாகத் தணிதியென்றுரைப்பினும் அமையும். அடப்பட்டமையாத அமிழ்துபோலும் அடிசிலென்றுரைப்பினும் (7) அமையும்.

நெடியோய்! பல ஏத்துவேமாக எய்தவந்தனமெனக்கூட்டுக. (௧0)

---

(௧௧) அரிமயிர்த் திரண்முன்கை
வாலிழை மடமங்கையர்
வரிமணற் புனைபாவைக்குக்
குலவுச்சினைப் பூக்கொய்து
தண்பொருநைப் புனல்பாயும்
விண்பொருபுகழ் விறல்வஞ்சிப்
பாடல்சான்ற விறல்வேந்தனும்மே
வெப்புடைய வரண்கடந்து
துப்புறுவர் புறம்பெற்றிசினே
புறம்பெற்ற வயவேந்தன்
மறம்பாடிய பாடினியும்மே

ஏருடைய விழுக்கழஞ்சிற்
சீருடைய விழைபெற்றிசினே

---

1. " அரிமுன்கை " (கலி. கசள : 36.) அரியென்பது ஐம்மைப் பொருளில் வருமென்பதற்கு இவ்வடிமேற்கோள்; தோல். உரி. சூ. 59, இளம்.; சூ. 60, சே.; சூ. 58, ந.; இ. வி. சூ. 290, உரை.

5. "புல்லிலை வஞ்சிப் புறமதி லலைக்கும், கல்லென் பொருநை" புறநா. ௩அஎ: 33 - 4.

2 - 5. "மணற், செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத், தண் கய மாடு மகளிர்" புறநா. உசரு : 1 - 3.

6. பொருவென்பது, பயவுவமைபற்றி வருமென்பதற்கு இவ்வடி மேற்கோள்; தோல். உவம. சூ. 14, பேர்.; இ. வி. சூ. 642, உரை.

7 - 9. சின்னென்பது பால்காட்டும் எழுத்தோடு அடுத்து வருமென்பதற்கு மேற்கோள்; தோல். இடை. சூ. 26, பேர்.

11 - 3. தோல். எச்ச. சூ. 53, பேர்..மேற்.



இழைபெற்ற பாடினிக்குக்
குரல்புணர்சீர்க் கொளைவல்பாண் மகனுமே
எனவாங்
கொள்ளழல் புரிந்த தாமரை
வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே.[1]

திணை - பாடாண்டிணை; துறை - பரிசில்கடாநிலை.

சேரமான் பாலைபாடியபெருங்கடுங்கோவைப் *பேய்மகள் இள

வேயினி பாடியது.

இ - ள்.—ஐய மயிரையுடைய திரண்ட முன்கையினையும் தூய ஆபரணத்தையுமுடைய பேதைமகளிர் வண்டலிழைத்த சிற்றிற்கட் செய்த பாவைக்கு விளைந்த கோட்டுப்பூவைப்பறித்துக் குளிர்ந்த ஆன்பொருந்தத்து நீரின்கட் பாய்ந்து விளையாடும் வானை முட்டிய புகழினையும் வென்றியையுமுடைய கருவூரின்கட் பாடுதற்கமைந்த வெற்றியையுடைய அரசனும், பகைதெறும் வெம்மையையுடைய அரணை அழித்து வலியோடு எதிர்ந்தவருடைய புறக்கொடையைப் பெற்ருன்; அப்புறக்கொடையைப்

---

16. "அழல்புரிந்த வடர்தாமரை" புறநா. உக: 1.

15 - 7. எனவும் ஆங்கும் அசைநிலையாயின வென்பதற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. 47, பேர்.

14 - 7. "இழைபெற்ற...பெற்றிசினே: இஃது, ஈற்றயலடி முச்சீர்த்தாகிவந்து செந்தூக்கியற்ருகி இற்ற வஞ்சிப்பா" தொல். செய். சூ. 71, பேர்.

11 - 7. பாடினி இழைபெறுதல், பாணன் பொற்ருமரை பெறுதல்: கலி. இச: 2, அடு: 2; புறநா. கஉ : 1; உக: 1 - 5; சுக: 4 - 21 ; கஉசு: 1 - 3 ; ௬கக: 9 - 15; ௬சுச: 1 - 3 ; "எரியகைந் தன்ன வேடி ருமரை, சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி, நூலின் வலவா நுணங்கரின் மாலை, வாலொளி முத்தமொடு பாடினி யணிய" (பொருந. 159 - 62); "தலைவன் ருமரை மலைய விறலியர், சீர்கெழு சிறப்பின் விளங்கிழை யணிய" மலைபடு. 569-70.

[1]மு. "மகிழ்செய்தற்கட் காமம் நறவினும் சிறந்ததேயெனினும் இவன் குறிப்பு ஆராய்ந்தறியாமையின் யான்து பெற்றிலேனெனக் குறிப் பெச்சம் வருவித்துரைக்க, 'அரிமயிர்த்திரண்முன்கை' என்னும் புறப்

ப்பாட்டிற்குறிப்புப்போல" குறள், 1090, பரிமேல்.
ஞ - ம். *பேய்மகள் இளவினி.



பெற்ற வலிய அரசனது வீரத்தைப் பாடிய பாடினியும், தோற்றப் பொலிவுடைய சிறந்த பலகழஞ்சாற் செய்யப்பட்ட நன்மையையுடைய அணிகலத்தைப்பெற்றாள்; அவ்வணிகலத்தைப்பெற்ற விறலிக்கு முதற் றானமாகிய குரலிலே வந்து பொருந்தும் அளவையுடைய பாட்டைவல்ல பாணனும், விளங்கிய தழலின்கண்ணே ஆக்கப்பட்ட பொற்றாமரை யாகிய வெள்ளிநாராற்றொடுத்த பூவைப் பெற்றான்.—எ - று.

பாடினி இழைபெற்றாள், பாணன் பூப்பெற்றான், யான் அதுபெறு கின்றிலேனெனப் பரிசில்கடாநிலையாயிற்று; இனி, இவள் பேயாயிருக்கக் கட்புலனாயதோர் வடிவுகொண்டு பாடினுளொருத்தியெனவும், 'இக் களத்து வந்தோர் யாவரும் பரிசில் பெற்றார்கள்; ஈண்டு நின்னோடு எதிர்ந்து பட்டோரில்லாமையான், எனக்கு உணவாகிய தசை பெற்றி லேன்' எனத் தான் பேய்மகளானமை தோன்றப் பரிசில்கடாயினு ளெனவுங் கூறுவாருமுளர்.

'பாடினிக்கு...பாண்மகன்' என்பது, [1]அதுவெனுருபுகெடக் குகரம் வந்தது; உயர்திணையாகலின். [2]பாடினிபாடலுக்கேற்பக் கொளைவல் பாண்மகனெனினும் அமையும். எனவும், ஆங்கும்: அசைநிலை; பெற்றிசின் மூன்றும் படர்க்கைக்கண் வந்தன. (கக)

---

[1]தொல். வேற்றுமைமயங்கு. சூ. 11.
[2]"பாடினி, பாடின பாணிக் கேற்ப" பொருந. 47 - 8.

(கஉ) பாணர் தாமரை மலையவும் புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
அறனோ மற்றிது விறன்மாண் குடுமி
இன்னா வாகப் பிறர்மண்கொண்
டினிய செய்திநின் னார்வலர் முகத்தே.[1]

---

1. இந்நூல் கக-ஆம் பாட்டின் 11 - 7-ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.

3 - 5. "அறனோ . . முகத்தே . . இவை சொல்லுவான் குறிப்பினாற் பொருளறிய வந்தன" நன். மயிலை. சூ. 268; நன். வி. சூ. 269.

[1]இச்செய்யுள், கொடுத்தலெய்திய கொடைமைக்கு மேற்கோளாகக் காட்டப்பட்டது; தொல். புறத்திணை. சூ. 7, இளம்.



திணை - அது; துறை - இயன்மொழி.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியை நெட்டிமையார் பாடியது.

இ - ள்.—பாணர் பொற்றாமரைப்பூவைச் சூடவும், புலவர் பட்டம் பொலிந்த மத்தகத்தையுடைய யானையுடனே அலங்கரிக்கப்பட்ட தேரினை ஏறுதற்கேற்ப அமைக்கவும், அறனோ இவ்வாறு செய்தல்? வென்றிமாட்சிமைப்பட்ட குடுமி! வேற்றரசருடைய நிலத்தை அவர்க்கு இன்னாவாகக் கொண்டு நின்னுடைய பரிசிலரிடத்து இனியவற்றைச்

செய்வை.—எ - று.

குடுமி! பிறர்மண் இன்னாவாகக்கொண்டு, மலையவும் பண்ணவும் நின் ஆர்வலர் முகத்து இனியசெய்வை; இது நினக்கு அறனோ? சொல்லுவா யாகவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

மற்று: அசைநிலை.

இது, பழித்ததுபோலப் புகழ்ந்ததாகக் கொள்க. (கஉ)

---

(கங) இவனியா ரென்குவை யாயி னிவனே
புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய
எய்கணை கிழித்த பகட்டெழின் மார்பின்
மறலி யன்ன களிற்றுமிசை யோனே

---

1. "இவன் யார்...இவனேயென்னும் புறப்பாட்டினுட் சேரனை முன்னிலையாக்கி முடமோசியார் கூறுகின்ற காலத்து இவனென்பது முன்னிலைப்படர்க்கையாய் நின்றது" (தொல். எச்ச. சூ. 67, ந.); "இவன் யார் . . . . இவனே யென்னும் புறப்பாட்டினுள் இவனென்பது முன்னிலைப்படர்க்கையாய் நிற்றலும் இன்னோரன்ன பிறவும் இப்புற னடையானே அமைத்துக்கொள்க" இ. வி. சூ. 372, உரை.

2. "புலிப்பொறிப் போர்வை நீக்கி" சீவக. 266.

3. எழில் - எழுச்சி; "நுண்மா ணுழைபுல மில்லா னெழில்" குறள், 407.

2 - 4. "தன்மையென்பது சாதியியல்பு; பார்ப்பார் அரசர் இடையர் குறவரென்று இன்னோர் மாட்டு ஒருவரை யொருவர் ஒவ்வாமற் கிடக்கும் இயல்பு; அது மெய்த்தன்மையின்கண் வேறுபட்டு வருதலின் மெய்ப்பா

டாயிற்று;.....'புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய...களிற்று மிசை யோனே' எனவும்......வரும்" தோல். மெய்ப். சூ. 12, இளம்.



களிறே, முந்நீர் வழங்கு நாவாய் போலவும்
பன்மீ னாப்பட் டிங்கள் போலவும்
சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப
மரீஇயோ ரறியாது மைந்துபட் டன்றே
நோயில னாகிப் பெயர்கதி லம்ம
பழன மஞ்ஞை யுகுத்த பீலி
கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்
கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலி நாடுகிழ வோனே.

திணை - பாடாண்டிணை; துறை - வாழ்த்தியல்.

சோழன்முடித்தலைக்கோப்பெருநற்கிள்ளி கருவூரிடஞ்செல்வானைக் கண்டு சேரமானந்துவஞ்சேரலிரும்பொறையோடு [1]வேண்மாடத்து மேலிருந்து உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது.

இ - ள்.—இவன் யாரென்று வினவுவாயாயின், இவன்றான், புலியினது தோலாற் செய்யப்பட்ட மெய்புகுக்கருவிபொலிந்த கொளுத்தற

5. களிற்றிற்கு நாவாயுவமை: கலி. ௯௨: 5 - 7; "நளிகட லிருங்

குட்டத்து, வளிபுடைத்த கலம்போலக், களிறுசென்று களனகற்றவும்" (புறநா. உக: 1-3); "வீங்கு நோன்கயிறு...கடாஅயானையும்" (மதுரை. 376 - 83); "நீயா னடுங்க......கால வேகங் களிமயக்குற்றென" மணி. ச: 29 - 44.

6. புறநா. ககக : 25 - 7; பதிற். கo : 17 - 8.

7. "எறிசுற விளையவர்", "கோட்டுமீன் குழாத்தின் மள்ள ரீண்டி னர்", "தூத்திரட் சுறவினந் தொக்கபோன் மறவரும்" (சீவக. 1446, 1845, 2325.) பலபொருளோடு பலபொருள்கள் உவமையாய் வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; இ. வி. சூ. 639, உரை.

5 - 8. பலபொருளோடு பலபொருள் உவமையாய் வந்ததற்கு மேற்கோள்; தண்டி. சூ. 30, உரை.

11. சூடு - நெல்லரி; "சூடுகோ டாகப் பிறக்கி" பொருந. 243.

10 - 11. "எல்வளை மகளிர் தெள்விளி யிசைப்பிற், பழனக் காவிற் பசுமயி லாலும்", "கழனி யுழவர் தண்ணுமை யிசைப்பிற், பறுன மஞ்ஞை மழைசெத் தாலும்" பதிற். உஎ: 7 - 8; கo : 41 - 2.

12. கொழுமீன்: ஒரு சாதிமீன்; திருச்சிற். 188, பேர்.

13. நாடுகிழவோன்: "காவிரி புரக்கு நாடுகிழ வோனே" பொருந. 248.

[1]"வேளா விக்கோ மாளிகை காட்டி" சிலப். உஅ: 198.



எய்த அம்புகள் போழப்பட்ட பரந்துயர்ந்த மார்பினையுடைய கூற்றம் போன்ற களிற்றின்மேலோன்; இக்களிறுதான், கடலின்கண்ணே

இயங்கும் மாக்கலத்தையொப்பவும் பலமீனினது நடுவே செல்லும் மதியத்தை யொப்பவும் சுறவினத்தையொத்த வாண்மறவர் சூழத் தன்னை மருவிய பாகரையறியாது மதம்பட்டது; இவன் நோயின்றிப் பெயர்வானாக; வயலிடத்து மயிலுதிர்த்த பீலியை ஆண்டுள்ள உழவர் நெற்சூட்டுடனே திரட்டும் கொழுவிய மீனையும் விளைந்த கள்ளையுமுடைய மிக்கநீராகிய வேலியையுடைய நாட்டையுடையோன்.—எ - று.

களிற்றுமிசையோனாகிய இவன் யாரென்குவையாயின், நாடுகிழவோன்; இவன் களிறு மதம்பட்டது; அதனால், இவன் நோயின்றிப் பெயர்கவெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

களிற்றுக்கு நாவாயோடு உவமை எதிர்ப்படையைக் கிழித்தோடலும், திங்களோடு உவமை வாளோர் சூழத் தன் தலைமைதோன்றச் செல்லுதலுமாகக் கொள்க.

தில் : விழைவின்கண் நின்றது.

பெருநற்கிள்ளி களிறு கையிகந்து பகையகத்துப் புகுந்தமையான் அவற்குத் தீங்குறுமென்று அஞ்சி வாழ்த்தினமையால், இது வாழ்த்தியலாயிற்று; இவற்குத் தீங்குறின் நமக்குத் தீங்குறுமென்னுங்கருத்தால் நோயிலனாகிப் பெயர்கவென்றாராயின், வாழ்த்தியலாகாது; துறை, பாட்டுடையானது என்றுணர்க. (கரு)

---

(கசு) கடுங்கண்ண கொல்களிற்றாற்
காப்புடைய வெழுமுருக்கிப்
பொன்னியற் புனைதோட்டியான்
முன்புதுரந்து சமந்தாங்கவும்

பாருடைத்த குண்டகழி

1. "கடுஞ்சினத்த கொல்களிறும்" (புறநா. ௫௫ : 7); "கடாஅஞ் சென்னிய கடுங்கண் யானை" (பதிற். உ௫: 2); "கடுஞ்சினத்த களிறு" மதுரை. 179.

3. "விளங்குபொன் னெறிந்த நலங்கிளர் பலகை" (புறநா. க௫: 12); "மின்னும் தமனியமும் வெற்றிரும்பு மொன்றாகப், பொன்னென் பெயர்படைத்தாற் போலுமே" பெரும்பொருள்விளக்கம்.



நீரழுவ நிவப்புக்குறித்து
நிமிர்பரிய மாதாங்கவும்
ஆவஞ் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
*சாவ நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்
பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்
வலிய வாகுநின் றாடோய் தடக்கை
புலவுநாற்றத்த பைந்தடி
பூநாற் றத்த புகைகொளீஇ யூன்றுவை
கறிசோ றுண்டு வருந்துதொழி லல்லது
பிறிதுதொழி லறியா வாகலி னன்றும்
மெல்லிய பெரும தாமே நல்லவர்க்
காரணங் காகிய மார்பிற் பொருநர்க்

8 - 9. இது, படைதடுத்ததற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 31, ந.

11. "தாட்டாழ் தடக்கைத் தனிமதி வெண்குடையான்" பு. வெ. 52.

10 - 11. இவ்வடிகள், ஆக்கக்கிளவி காரணம் பெற்று வந்தமைக்கு மேற்கோள்; தொல். கிளவி. சூ. 22, சே.

8 - 11. "மாண்வினைச் சாப மார்புற வாங்கி, ஞாண்பொர விளங்கிய வலிகெழு தடக்கை" (பதிற். ௩0: 33 - 4) என்றதையும் அதன் உரையையும் பார்க்க.

13 - 4. "மற்று, ஊன்றுவை கறிசோறுண்டு வருந்துமென வந்ததால் எனின், அது பாடமறிந்து திருத்திக்கொள்க" (தொல். கிளவி. சூ. 46, இளம்.); "அஃதேல், ஊன்றுவை...அல்லது என்புழி உண்டென்பது ஒன்றற்கே உரிய வினையாகலின் வழுவாம் பிறவெனின், உண்டலென்பது உண்பன தின்பன வெனப் பிரித்துக் கூறும்வழிச் சிறப்புவினையாம்; பசிப்பிணி தீர நுகரப்படும் பொருளெல்லாம் உணவெனப்படுமாகலிற் பொதுவினையுமாம்; அதனான் அது வழுவன்றென்பது" (ஷை. ஷை. ஷை. 47, சே.; இ. வி. சூ. 319, உரை); "ஊன்றுவை......அல்லதென்புழி நுகரப்படும் பொருள் எல்லாவற்றிற்கும் உண்டற்றொழில் வந்தவாறு காண்க" (தொல். கிளவி. சூ. 47, ந.); உண்டல் பொதுவினை யென்பதற்கு மேற்கோள் (ஷை. ஷை. ஷை. 42, தெய்வச்.); பல பொருள் விரவின, சிறப்பினால் ஒன்றற்கேற்ற வினை கொண்டதென்பதற்கு மேற்கோள்; நன். மயிலை. சூ. 377.

பி - ம். *சாப.

கிருநிலத் தன்ன நோன்மைச்
செருமிகு சேஎய்நிற் பாடுநர் கையே.[1]

திணை - அது; துறை - இயன்மொழி.

சேரமான் செல்வக்கடுங்கோவாழியாதன் கபிலர் கைப்பற்றி, 'மெல்லியவாமால் நுங்கை' எனக் கபிலர் பாடியது.

இ - ள்.—வன்கண்மையையுடைய கொலையானையாலே காவலையுடைய [2]கணையமரத்தை முறித்து இரும்பாற்செய்யப்பட்ட அழகுசெய்த அங்குசத்தால் முன்னர்க் கடாவி அதுசெய்யும் வினையைப் பின்வேண்டுமளவிலே பிடிக்கவும், வலிய நிலத்தைக் குந்தாலியால் இடித்துச்செய்த குழிந்த கிடங்கின்கண் நீர்ப்பரப்பினது ஆழமாகிய உயர்ச்சியைக் கருதி அதன்கட் செல்லாமல் மிகைத்த செலவினையுடைய குதிரையைக் குசை தாங்கி வேண்டுமளவிலே பிடிக்கவும், அம்பறாத்தூணிபொருந்திய முதுகையுடையையாய்த் தேர்மேலே நின்று வில்லினது வலியநாணுற்பிறந்த வடுப்பொருந்தும்படி அம்பைச் செலுத்தவும், பரிசிலர்க்குப் பெறுதற்கரிய அணிகலங்களை அளிக்கவும், தலைவ! வலியவாகும் நின் முழந்தாளைப் பொருந்திய பெரிய கைகள்; புலானாற்றத்தை யுடையவாகிய செவ்வித்தடியைப் பூநாற்றத்தவாகிய புகையைக் கொளுத்தி அமைத்த ஊனையும் துவையையும் கறியையும் சோற்றையும் உண்டு வருந்துஞ் செயலல்லது வேறுசெயலறியா வாகலான், அவைதாம் பெரிதும் மெல்லியவாயின; பெரும! பெண்டிர்கட்கு ஆற்றுதற்கரிய வருத்தமாகிய மார்பினையும் பொருவார்க்குத் துளக்கப்படாமையிற் பெரிய நிலம்போன்ற வலியினையும் உடைய, போரின்கண்ணே மிக்க சேயையொப்பாய்! நின்னைப் பாடுவாருடைய கைகள்.—எ - று.

கொளீஇயென்னுமெச்சம் (13) அமைத்தவென்னும் ஒருசொல் வருவித்து முடிக்கப்பட்டது; கொளுத்தவெனத் திரித்து, அவ்வூனென ஒரு சுட்டு வருவித்து அதனோடு முடிப்பினும் அமையும்.

உண்டென்பது (14) பொதுவினையன்றேனும் கறியொழிந்தவற்றிற் கெல்லாம் சேறலின், பன்மைபற்றி அமைத்துக்கொள்ளப்படும். ஊன்

---

19. "செருமிகு சேஎயொ டுற்ற சூளே" அகநா. உகூகூ : 21.

[1]"கடுங்கண்ண கொல்களிற்றால் என்னும் புறப்பாட்டுட் படைக்கலங்கூறியவதனாற் காத்தல் கூறியவாறுங் காண்க" தொல். புறத்திணை. சூ. 16, இளம்.; ஷை. ஷை. சூ. 20, ந.

[2]கணையமரம் - கதவின் உட்புறத்தே குறுக்காகப் போடப்படும் மரம்; "முழுவிறற் கணையம்" சிலப். கடு : 215, அடியார்.





துவை கறியொடுகூடிய சோற்றை உண்டென உரைப்பினும் அமையும்; இதனைப் பொதுவினையென்று உரைப்பாருமுளர்.

குரிசில் ! பெரும ! சேஎய் ! வலியவாகும் நின்கை; நிற்பாடுநர்கை தாம் மெல்லியவாகுமெனக் கூட்டுக.

இனி, மா தாங்கவுமென்பதற்கு (7) அகழியைக் கடக்கப்பாய்தற்குக் குதிரைக்குசையைத் தாங்கி எடுத்துவிடவுமென்றுரைப்பாருமுளர்.

பாடுநரெனத் (19) தம்மைப் படர்க்கையாகக் கூறினர்.

தம் கையின் மென்மையது இயல்பு கூறுவார், அரசன்கையின் வலிய இயல்புங் கூறினமையான், இஃது இயன்மொழியாயிற்று. (கச)

---

(கரு) கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
*வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்
புள்ளின மிமிழும் புகழ்சால் விளைவயல்
வெள்ளுளைக் கலிமான் கவிகுளம் புகளத்
தேர்வழங் கினைநின் றெவ்வர் தேஎத்துத்

---

1. மூ. அகநா. ௩உ௬ : 4; பெரும்பாண். 397. கடியென்னும் உரிச்சொல் விரைவுப் பொருளை உணர்த்துமென்பதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 85, ந.; இ. வி. சூ. 282, உரை.

1 - 3. பகைவர் மதிலையழித்துக் கழுதையேரால் உழுது வெள்ளை வரகும் கொள்ளும் வித்துதல் மரபு; புறநா. ௩௯உ: 9 - 11; "எழுதெழின் மாடத் திடனெலா நூறிக், கழுதையேர் கையொளிர்வேல் கோலா-உழுத தற்பின், வெள்வாகு கொள்வித் திடினும் விளியாதாற், கள்விரவு தாரான் கதம்" (பு. வெ. 120); "வடதிசை மன்னர் மன்னெயில் முருக்கிக், கவடி வித்திய கழுதையே ருழவன்" (சிலப். உஎ: 225 - 6); "இடித்துவெளி செய்துநக ரெக்கணு நுழைந்தாங், கடுத்தமட வார்வயி றலைத்தன ரிரங்கக், கொடுத்திடு வளங்கள்பல கொள்ளைகொடு மண்ணின், எடுத்து வரு வெள்வரகு கொள்ளுட னிறைத்து" (காஞ்சிப். நாடு. 28.) இவ்வடிகளை மக்கட்பாடாண்டிணைக்குரிய துறையாகிய மண்ணுமங்கலத்திற்கு உதாரணமாகக் காட்டுவர்; தொல். புறத்திணை. சூ. 36, ந.

3 - 5. புறநா. கரு: 1-4.

பி - ம். *பேழ்வாய்.

துளங்கியலாற் பணையெருத்திற்
பாவடியாற் செறனோக்கின்
ஒளிறுமருப்பிற் களிறவர
காப்புடைய கயம்படியினை

அன்ன சீற்றத் தனையை யாகலின்
விளங்குபொன் னெறிந்த நலங்கிளர் பலகையொடு
நிழல்படு நெடுவே லேந்தி யொன்னார்
ஒண்படைக் கடுந்தார் முன்புதலைக் கொண்மார்
நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய
வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் புரையில்
நற்பனுவ னால்வேதத்

தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி

யூப நட்ட வியன்களம் பலகொல்
யாபல கொல்லோ பெரும வாருற்று
விசிபிணிக் கொண்ட மண்கனை முழவிற்

---

8 - 10. புறநா. கசு : 6; உரு : 1 - 2.

12. புறநா. கச : 3. 14. கொண்மார்: முருகு. 173.

15. 'பிறக்கு' என்பது அசைநிலையாக வருமென்பதற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. 30, தெய்வச்.; ஷை. ஷை. சூ. 31, ந.; இ. வி. சூ.

277, உரை.

18. கண்ணுறை: புறநா. கக: 5; கசO: 4.
19 - 20. புறநா. கசுசு: 22-3.

1 - 21. "'கடுந்தேர்......எயில்' என எயிலழித்தவாறு கூறி, 'வீயாச் சிறப்பின்...நாட்டி' எனவே ஒருவாற்றான் மண்ணியவாறுங் கூறியவாறு காண்க" தொல். புறத்திணை. சூ. 36, ந.

22. "காழி லாவறு பத்துநான் கெனுங்கலை யானும், வாழி வென்று வென் றலைகடல் வரைப்பெலா நாட்டும், கேழில் வாகைய மதலையுங்கிளர் மறை முறையான், வேழ்வி யாற்றிய யூபமும் விறந்தன வனேகம்" காஞ்சிப். நகரேற்றுப். 183.

15 - 22. சிறப்பினுன் அஃறிணைமுடிபேற்றதற்கு மேற்கோள்; நன். மயிலை. சூ. 377; நன். வி. சூ. 378; இ. வி. சூ. 298, உரை.



பாடினி பாடும் வஞ்சிக்கு
25 நாடல் சான்ற மைந்தினேய் நினக்கே.

திணையுந் துறையும் அவை.

[1]பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடியது.

இ - ள்.—விரைந்த தேர் குழித்த தெருவின்கண்ணே வெளிய வாயையுடைய கழுதையாகிய புல்லிய நிரையைப் பூட்டி உழுது பாழ்படுத்தினே அவருடைய அகலிய இடத்தையுடைய நல்ல அரண்களை; புள்ளினங்கள் ஒலிக்கும் புகழமைந்த விளைகழனிக்கண்ணே வெளிய தலையாட்டம் அணிந்த மனஞ்செருக்கிய குதிரையினுடைய கவிந்த குளம்புகள் தாவத் தேரைச் செலுத்தினை நின்னுடைய பகைவர் தேயத்துக்கண்; அசைந்த

தன்மையோடு பெரிய கழுத்தினையும் பரந்த அடியோடு வெகுட்சி பொருந்திய பார்வையினையும் விளங்கிய கோட்டினையுமுடைய களிற்றை அப்பகைவருடையனவாகிய காவலையுடைய வாவிக்கட் படிவித்தனை; அப்பெற்றிப்பட்ட சினத்துடனே அதற்கேற்ற செய்கையையுடையை; ஆதலான், விளங்கிய இரும்பாற் செய்யப்பட்ட ஆணியும் பட்டமும் அறைந்த அழகு மிக்க பலகையுடனே நிழலுண்டாகிய நெடிய வேலை எடுத்துப் பகைவர் ஒள்ளிய படைக்கலங்களை யுடைய நினது விரைந்த தூசிப்படையின் வலியைக் கெடுத்தல்வேண்டித் தம் ஆசை கொடுவர வந்தோர் அவ்வாசை பின் ஒழிய வசையுண்டாக உயிர்வாழ்ந்தோர் பலரோ? குற்றமில்லாத நல்ல தருமநூலினும் நால்வகைப்பட்ட வேதத்தினுஞ் சொல்லப்பட்ட எய்தற்கரிய மிக்க புகழையுடைய சமிதையும் பொரியும் முதலாகிய பெரிய கண்ணுறையோடு நெய்மிக்க புகை மேன்மேற் கிளரப் பல மாட்சிமைப்பட்ட கெடாத தலைமையையுடைய யாகங்களை முடித்துத் தூண் நடப்பட்ட அகன்ற வேள்விச்சாலைகள் பலவோ? இவற்றுள், யாவையோ பல? பெரும! வார்பொருந்தி வலித்துக் கட்டுதலைப் பொருந்திய மார்ச்சனை செறிந்த தண்ணுமையையுடைய விறலி பாடும் மேற் செலவிற்கு எற்ப, ஆராய்தலமைந்த வலியையுடையோய்! நினக்கு.—எ-று.

பூட்டி (2) என்னும் வினையெச்சத்திற்கு உழுதென்னுஞ்சொல் தந்துரைக்கப்பட்டது. நற்பனுவலாகிய நால்வேத (17) மென்பாருமுளர். நற்பனுவல் நால்வேதத்து வேள்வியென இயையும்.

பெரும! மைந்தினோய்! பாழ்செய்தனை; தேர் வழங்கினை; கயம் படியினை; ஆகலின், நினக்கு ஒன்றாகிய வசைபடவாழ்ந்தோர்

---

24. புறநா. ௧௫ : 10.

[1]இப்பாட்டின் 20 - 21 - ஆம் அடிகளால் தலைவனுடைய பெயர்க் காரணம் புலப்படுகின்றது.

பலர்கொல்? யூபம் நட்ட வியன்களம் பலகொல்? இவற்றுள், யா பல கொல்லோ எனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

விளங்குபொன்னெறிந்த (12) வென்பதற்குக் கண்ணுடிதைத்த எனினும் அமையும். தார் முன்பு தலைக்கொண்மா (14) ரென்பதற்குத் தாரைவலியால் தலைப்படவெனினும் அமையும்.

புரையுநற்பனுவ (16 - 7) லென்பதூஉம் பாடம்.

யா பலவென இவ்விரண்டின் பெருமையும் கூறியவாறு.

இவை எப்பொழுதுஞ்செய்தல் இயல்பெனக் கூறினமையின், இஃது இயன்மொழியாயிற்று.

(கரு)

---

(கசு) வினைமாட்சிய விரைபுரவியொடு
மழையுருவின தோல்பரப்பி
முனைமுருங்கத் தலைச்சென்றவர்
விளைவயல் கவர்பூட்டி
மனைமரம் விறகாகக்
கடிதுறைநீர்க் களிறுபடீஇ
எல்லுப்பட விட்ட சுடுதீ விளக்கம்
செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்றப்
புலங்கெட விறுக்கும் வரம்பி றானைத்
துணைவேண்டாச் செருவென்றிப்
புலவுவாட் புலர்சாந்தின்

2. கேடகத்திற்கு மேகம் உவமை: புறநா. கஎ : 34; “மன்ன ரெயிலூர் பஃறோல் போலச், சென்மழை” (நற். ககஎ: 10 - 12); “மழை யென மருளு மாயிரும் பஃறோல்” (பதிற். சுஉ: 2); “மழைமருள் பஃறோல்” மலைபடு. 377.

4. புறநா. ருஎ : 6.     6. புறநா. கரு : 8 - 10.

10. “கூட்டொரு வரையும் வேண்டாக் கொற்றவ” (கம்ப. வாலி வதை. 81.) “துணைவேண்டாச் செருவென்றி நாடகவழக்கு” தொல். புறத். சூ. 8, ந.

9 - 10. “மன்னர், உவப்ப வழிபட் டொழுகினுஞ் செல்வம், தொகற்பால போழ்தே தொகும்” (பழ. 120); “ஊக்க முரண்மிகுதி யொன்றிய நற்சூழ்ச்சி, யாக்க மவன்க ணகலாவால் - வீக்க, நகப்படா வென்றி நலமிகுதாராற், ககப்படா வில்லை யரண்” பு. வே. 100.



முருகற் சீற்றத் துருகெழு குருசில்
மயங்குவள்ளை மலராம்பற்
பனிப்பகன்றைக் கனிப்பாகற்
கரும்பல்லது காடறியாப்
பெருந்தண்பணை பாழாக
ஏம நன்னா டொள்ளெரி யூட்டினை
நாம நல்லமர் செய்ய

ஓராங்கு மலைந்தன பெரும நின் களிறே.[1]

திணை - வஞ்சி; துறை - மழபுலவஞ்சி.

சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாண்டரங் கண்ணனார் பாடியது.

இ - ள்.—போரிற்கு நன்மையையுடையவாகிய விரைந்த குதிரையுடனே முகில்போலும்நிறத்தையுடைய பரிசையைப் பரப்பி, முனையிடங் கலங்க மேற்சென்று, அவரது நெல்விளைகழனியைக் கொள்ளையூட்டி, மனையிடத்து மரமே விறகாகக் காவற் பொய்கைகளின் நீரிலே களிற்றைப் படிவித்து, விளக்கமுண்டாக இடப்பட்ட நாடுசுடுநெருப்பினது ஒளிதான் விடுகின்ற கதிரையுடைய ஞாயிற்றினது செக்கர்நிறம் போலத் தோன்ற இடமில்லையாகச் சென்று விடும் எல்லையில்லாத படையினையும், துணைப் படை வேண்டாத போர்வெற்றியினையும், புலால்நாறும் வாளினையும், பூசிப்புலர்ந்த சாந்தினையும், முருகனது வெகுட்சிபோலும் வெகுட்சியினையுமுடைய உட்குப்பொருந்திய தலைவ! ஒன்றோடொன்று கலந்த வள்ளையையும் மலர்ந்த ஆம்பலையும் குளிர்ச்சியையுடைய பகன்றையையும் பழத்தையுடைய பாகலையும் உடைத்தாகிய கரும்பல்லது பிறிதுகாடறியாத பெரிய மருதம் பாழாகக் காவலையுடைய நல்ல நாட்டை ஒள்ளிய தீயை ஊட்டி அஞ்சத்தக்க நல்ல போரைச் செய்ய, நின்கருத்திற்கேற்ப ஒரு பெற்றிப் படப் பொருதன, பெரும! நின்னுடைய களிறுகள்,—எ - று.

---

12. மு. பொருந. 131; "முருகி னன்ன சீற்றத்து" அகநா. கஙஅ.

14. பகன்றை - சிவதை; குறிஞ்சி. 88; ஐங்குறு. சஙிசு; கலி. எரு.

15 - 6. "கரும்பலாற் காடொன் றில்லாக் கழனி" சீவக. 2902.

16 - 7. புறநா. சு: 21 - 2, எ: 7 - 8, உரு: 10 - 11; "இழிபறியாப் பெருந்தண்பணை, குரூஉக்கொடிய வெரிமேய, நாடெனும்பேர் காடாக...

பாழாயினநின் பகைவர் தேஎம்" (மதுரை. 154-76); கலி. கக: 1 - 2.

[1]இப்பாட்டினை, எரிபரந்தெடுத்தலென்னும் துறைக்கு உதாரண மாகக்காட்டுவர்; தோல். புறத்திணை. சூ. 7, இளம்.; ஷை. ஷை. சூ. 8, ந.



தோல்பரப்பி (2) யென்பது முதலாகிய வினையெச்சங்களை இறுக்கு (9) மென்னும் பெயரெச்சவினையொடு முடித்து, அதனைத் தானையென்னும் (9) பெயரோடு முடிக்க. பாகற் (14) றண்பணை (16) யென இயையும். எல்லுப்பட இட்ட சுடுதீ (7) யென்றதனைத் தானைக்கு அடையாக்குக.

கவர்பூட்டி (4) யென்பதற்கு விரும்பிக் கொள்ளையூட்டியெனவும், புலங்கெட (9) வென்பதற்கு நாடழியவெனவும், புலவுவா (11) ளென்பதற்குப் புலாலுடைய வாளெனவும் உரைப்பினும் அமையும்.

குருசில்! பெரும! நீ அமர்செய்ய, நின் களிறு ஓராங்குமலைந்தன வென வினைமுடிவுசெய்க.

பாகல் - பலாவென்று உரைப்பாருமுளர்.

ஏம நன்னாடு ஒள்ளெரியூட்டி யென்றதனால், இது மழபுலவஞ்சி யாயிற்று. (கசு)

---

(கஎ) தென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாவெல்லை
குன்றுமலை காடுநா

டொன்றுபட்டு வழிமொழியக்
கொடிநுடங்குங் கோறிருத்திப்
படுவதுண்டு பகலாற்றி
இனிதுருண்ட சுடர்நேமி
முழுதாண்டோர் வழிகாவல
குலையிறைஞ்சிய *கோட்டாழை
அகல்வயன் மலைவேலி
நிலவுமணல் வியன்கானற்

1. செய்யுளில் இனமில்லாத இடப்பெயர் அடையடுத்து வந்ததற்கு மேற்கோள்; நன். மயிலை. சூ. 400. 1 - 2. புறநா. சு: 1-4.

1 - 4. "தென்குமரி வடபெருங்கல், குணகுட கட லாவெல்லைத், தொன்று மொழிந்து தொழில் கேட்ப" மதுரை. 70 - 72.

11. "நிலவெக்கர்" (பொருந. 213, அடிக்.); குறுந். கஉ௦ : 3; கலி. கஙக: 17. நிலவுமணல் வியன்கானலென்பது வஞ்சியடிக்கு மேற்கோள்; தொல். செய். சூ. 14, பேர்.; ந.

10 - 11. இயற்சீர் தூங்கிவந்ததென்பதற்கு மேற்கோள்; தொல். செய், சூ. 216, பேர்.; ந.

பி - ம். *காய்த்தாழை.



றெண்கழிமிசைச் சுடர்ப்பூவிற்
றண்டொண்டியோ ரடுபொருந

மாப்பயம்பின் பொறைபோற்றாது
நீடுகுழி யகப்பட்ட
பீடுடைய வெறுழ்முன்பிற்
கோடுமுற்றிய கொல்களிறு
நிலைகலங்கக் குழிகொன்று
கிளைபுகலத் தலைக்கூடியாங்கு
நீபட்ட வருமுன்பிற்
பெருந்தளர்ச்சி பலருவப்பப்
பிறிதுசென்று மலர்தாயத்துப்
பலர்நாப்பண் மீக்கூறலின்
உண்டாகிய வுயர்மண்ணும்
சென்றுபட்ட விழுக்கலனும்
பெறல்கூடு மிவனெஞ் சுறப்பெறி னெனவும்
ஏந்துகொடி யிறைப்புரிசை
வீங்குசிறை வியலருப்பம்
இழந்துவைகுது மினிநாமிவன்
உடன்றுநோக்கினன் பெரிதெனவும்
வேற்றரசு பணிதொடங்குநின்
ஆற்றலொடு புகழேத்திக்
காண்கு வந்திசிற் பெரும வீண்டிய
மழையென மருளும் பஃறோன் மலையெனத்
தேனிறை கொள்ளு மிரும்பல் யானை

13. தொண்டி - (இங்கே) சோநாட்டிற் கடற்கரைக்கண்ணதொரு பட்டினம்.

14 - 9. "அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று, பெருங்கை யானை பிடிபுக் காங்கு" பட்டின. 223 - 4.

33. செய்கென்னும் வாய்பாட்டு வினைமுற்று வினைகொண்டு முடிந்ததற்கு மேற்கோள்; தொல். வினை. சூ. 7, ந.

34. புறநா. ௧௧ : 2 - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க. 'தோல்' என்பது பரிசை என்னும் பொருளில் வந்ததற்கு மேற்கோள்; சிலப். இ: 81, அடியார்.



உடலுந ருட்க வீங்கிக் கடலென
வானீர்க் கூக்குந் தானை யானாது
கடுவொடுங் கெயிற்ற வரவுத்தலை பனிப்ப
இடியென முழங்கு முரசின்
வரையா வீகைக் குடவர் கோவே.

திணை - வாகை; துறை - அரசவாகை; இயன்மொழியுமாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனாற் பிணியிருந்த யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை வலிதிற் போய்க் கட்டிலெய்தினானைக் *குறுங்கோழியூர்கிழார் பாடியது.

இ - ள்.—தென்றிசைக்கட் கன்னியும் வடதிசைக்கண் இமயமும் கீழ்த்திசைக்கண்ணும் மேற்றிசைக்கண்ணும் கடலும் எல்லையாக நடுவு பட்டநிலத்துக் குன்றும் மலையும் காடும் நாடும் என இவற்றையுடையோர் ஒரு பெற்றிப்பட்டு வழிபாடு கூறத் தீத்தொழிலைப் போக்கிக் கோலைச் செவ்விதாக்கி ஆறிலொன்றாகிய இறையை உண்டு நடுவுநிலைமையைச் செய்து தடையின்றாக உருண்ட ஒளியையுடைய சக்காத்தால் நில முழுதையும் ஆண்டோரது மரபைக் காத்தவனே! குலைதாழ்ந்த கோட் புக்க தெங்கினையும் அகன்ற கழனியையும் மலையாகிய வேலியையும் நிலாப்போன்ற மணலையுடைய அகன்ற கடற்கரையையும் தெளிந்த கழி யிடத்துத் தீப்போலும் பூவினையுமுடைய குளிர்ந்த தொண்டியிலுள்ளோ ருடைய அடுபொருந! யானை படுக்குங்குழிமேற் பாவின பாவைத் தன் மனச்செருக்காற் பாதுகாவாது ஆழத்தால் நெடிய குழியின்கண்ணே அகப்பட்ட பெருமையையுடைத்தாகிய மிக்கவலியையுடைய கொம்பு முதிர்ந்த கொல்லுங்களிறு அதன் நிலைசரியக் குழியைத்தூர்த்துத் தன் னினம் விரும்பத் தன்னினத்திலே சென்று பொருந்தினாற்போல, பொறுத்தற்கரிய வலியாற் பகையை மதியாது நீயுற்ற பெரியதளர்ச்சி நீங்கப் பிறிதொரு சூழ்ச்சியாற் போய்ப் பலரும் மகிழப் பரந்த உரிமையை யுடைய இடத்தின் நின் சுற்றத்தார் பலர்க்கு நடுவே உயர்த்துச் சொல்லப்படுதலால், நீ செழியனாற் பிணிப்புண்பதற்கு முன்பு நின்னால்

---

36 - 7. "படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி" முல்லை. 28.

38 - 9. பாம்பு இடிக்கு அஞ்சுதல் : புறநா. உகக : 1 - 4; "விரிநிற நாகம் விடருள தேனு, முருமின் கடுஞ்சினஞ் சேணின்று முட்கும்" நாலடி. 164.

40. "ஓம்பா வீகையின்" பதிற். சஉ.

பி - ம். *குறுங்கோளியூர்.

அழிக்கப்பட்டுப் பின்பு தம்மாசுவெளவாது நின்வரவு பார்த்திருந்த அரசர் நமதாய் இவனாற்கொள்ளப்பட்டு உண்டு அடிப்பட்டுப்போந்த மேம்பட்ட நிலமும் இவன்பாற் சென்றுற்ற சீரிய அணிகலமும் கிடைத்தலுண்டாம், இவனது நெஞ்சு நமக்கு உரித்தாகப்பெறினென நினைந்தும், நின்வரவு பார்த்திராது தம்மாசுவெளவிய பகைவர்எடுத்தகொடியையுடைய உயர்ந்த மதிலையும் மிக்க காடும் அகழும் முதலாய காவலையுடைய அகலிய அரணினையும் நாம் இனி இழந்து தங்குவேம், இவன் நம்மை வெகுண்டு பார்த்தான் மிகவென நினைந்தும் பகைவேந்தர் ஏவல் செய்யத்தொடங்குதற்குக் காரணமாகிய நினது வலியுடனே புகழை வாழ்த்திக் காண்பேனாக வந்தேன்; பெரும! திரண்ட முகிலெனக் கருதி மயங்கும் பல பரிசைப் படையினையும், மலையென்று கருதித் தேனினந் தங்கும் பெரிய பல யானையினையும், மாறுபடுவோர் அஞ்சும்படி பெருத்தலாற் கடலெனக் கருதி மேகம் நீர்முகக்க மேற்கொள்ளும் படையினையும், அமையாது நஞ்சுகரக்கும் பல்வினையுடையவாகிய பாம்பினது தலைநடுங்கும் பரிசு இடியென்று கருத முழங்கும் முரசினையும், எல்லார்க்கும் எப்பொருளும் வரையாது கொடுக்கும் வண்மையையும் உடைய குடநாட்டார் வேந்தே! —எ - று.

காவல! (8) பொருந! (13) பெரும! (33) கோவே! (40) ஏத்திக் காண்கு வந்தேனெனக் (32 - 3) கூட்டி வினைமுடிவு செய்க.

குன்றென்றது (3), சிறுமலைகளை; அன்றி, மணற்குன்றென்று நெய்தல் நிலமாக்கி ஏனை மூன்றொடுங் கூட்டி, நானிலத்தோருமென்று உரைப்பாருமுளர்.

அடுபொருந (13) வென்றது, வேந்தற்கு வெளிப்படையாய் நின்றது. தளர்ச்சி (21) யென்பதன்பின் நீங்கவென ஒருசொல் தந்தது.

'அருமுன்பிற் . . பிறிது சென்று' (20 - 22) என்பதற்கு முன்போலே தளர்ச்சி பிறிதாகப் பலருவப்பச் சென்றெனினும் அமையும்; அன்றி முன்பின் தளர்ச்சி பிறிதாகச் சென்றென்று உரைப்பாருமுளர்.

ஆனாது முழக்கும் முரசென்க. (கஎ)

---

(கஅ) முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்துபட்ட வியன்ஞாலம்
தாளிற் றந்து தம்புகழ் நிறீஇ

1. 'முழக்கு' என்பது ஒலித்தற்றொழிற்பண்பை உணர்த்துதற்கு மேற்கோள்; நன். மயிலை. சூ. 458; நன். வி. சூ. 459.



ஒருதா மாகிய வுரவோ ரும்பல்
ஒன்றுபத் தடுக்கிய கோடிகடை யிரீஇய
பெருமைத் தாகநின் னாயு டானே
நீர்த்தாழ்ந்த குறுங்காஞ்சிப்

பூக்கதூஉ மினவாளை
நுண்ணாற் பருவராற்
*குரூஉக்கெடிற்ற குண்டகழி
வானுட்கும் வடிநீண்மதில்
மல்லன்மூதூர் வய்வேந்தே
செல்லு முலகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி
ஒருநீ யாகல் வேண்டினுஞ் சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினு மற்றதன்
தகுதி கேளினி மிகுதி யாள
நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே
உண்டி முதற்றே யுணவின் பிண்டம்

---

5. "பல்வெள்ள மீக்கூற வுலக மாண்ட வுயர்ந்தோர் மருக" (மதுரை. 23 - 4); "அடையடுப் பறியா வருவி யாம்ப, லாயிர வெள்ள வூழி, வாழி யாத வாழிய பலவே" பதிற். சுரு : 19 - 21.

10. கெடிறு: "இன்கெடிறு சொரிந்த வகன்பெரு வட்டி", "காக்கை, இருங்கழி யினக்கெடி றுருந் துறைவன்" ஐங்குறு. சஎ, கசுஎ.

11. வடி - திருத்தம்; "வடித்தேர்த் தானை" மணி. கடு: 62.

14 - 5. "வார்சான்ற கூந்தல் வரம்புயர வைகலு, நீர்சான் றுயரவே நெல்லுயருஞ் - சீர்சான்ற, தாவாக் குடியுயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயரும், ஓவா துரைக்கு முலகு" சிறுபஞ்ச. 46.

16. புறநா. ௫௦: 14 - 5.

18. "நீரின் றமையா துலகு" குறள், 20.

18 - 9. "மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்,

உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே" மணி. கக: 95 - 6.

20. "மக்கள் யாக்கை யுணவின் பிண்டம்" (மணி. கO : 90.) "இசைபடவாழ்தற்குக் கல்வி ஆண்மை முதலிய பிறகாரணங்களும் உளவேனும் 'உணவின் பிண்ட முண்டி முதற்று' ஆகலின் ஈதல் சிறந்தது என்பதற்கு ஞாபகமாக ஈதலென்றார்" குறள், 231, பரிமேல்.

பி - ம். *குறூஉக் கெடிற்றுக்குண்டகழி.



உணவெனப் படுவது நிலத்தொடு நீரே
நீரு நிலனும் புணரி யோரீண்
டுடம்பு முயிரும் படைத்திசி னோரே
வித்திவா னோக்கும் புன்புலங் கண்ணகன்
வைப்பிற் றாயினு நண்ணி யாளும்
இறைவன் றாட்குத வாதே யதனால்
அடுபோர்ச் செழிய விகழா து வல்லே
நிலனெளி மருங்கி னீர்நிலை பெருகத்
தட்டோ ரம்ம விவட்டட் டோரே
தள்ளா தோரிவட் டள்ளா தோரே.

திணை - பொதுவியல்; துறை - *முதுமொழிக்காஞ்சி.

பாண்டியன் நெடுஞ்செழியனைக் குடபுலவியனார் பாடியது.

இ - ள்.—ஒலிக்கின்ற கடலானது முழுதுஞ் சூழப்பட்டுப் பரந்து கிடக்கின்ற அகன்ற உலகத்தைத் தமதுமுயற்சியாற் கொண்டு தம் முடைய புகழை உலகத்தின்கண்ணே நிறுத்தித் தாமேயாண்ட வலியோ ருடைய வழித்தோன்றினோய்! ஒன்றைப் பத்துமுறையாக அடுக்கப் பட்டதாகிய கோடி என்னும் எண்ணினைக் கடையெண்ணாக இருத்திய [1]சங்கு முதலாகிய பேரெண்ணினை உடைத்தாக நினது வாழ்நாள்; நீரின் கண்ணே உறத்தாழ்ந்த குறியகாஞ்சியினது பூவைக் கவரும் இனமாகிய வாளையினையும் நுண்ணிய ஆரலினையும் பரிய வராலினையும் நிறமுடைய கெடிற்றினையும் உடைத்தாகிய குழிந்த கிடங்கினையும் வானமஞ்சும் திருந் திய நெடிய மதிலையும் உடைத்தாகிய வளவிய பழைய ஊரினையுடைய வலியவேந்தே! நீ போகக்கடவ மறுமையுலகத்தின்கண் நுகருஞ் செல் வத்தைவிரும்பினும், உலகத்தைக் காப்பாரது தோள்வலியைக் கெடுத்து நீ ஒருவனுமே தலைவனுதலைவிரும்பினும், மிக்க நல்லபுகழை இவ்வுலகத்தே நிறுத்துதலை விரும்பினும், அவ் வேட்கைக்குத் தக்க செய்கையைக் கேட்பாயாக, இப்பொழுது; பெரியோய்! நீரை இன்றியமையாத உடம்பிற்கெல்லாம் உணவு கொடுத்தவர்கள் உயிரைக்கொடுத்தார்; உணவை முதலாகவுடைத்து அவ்வுணவால் உளதாகிய உடம்பு; ஆதலால், உணவென்று சொல்லப்படுவது நிலத்தோடுகூடிய நீர்; அந்நீரையும்

---

24. "வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன், கோனோக்கி வாழுங் குடி" குறள், 542.

28 - 9. குளந்தொட்டு வளம்பெருக்கி" பட்டின. 284.

[1]"சங்குதரு நீணிதியஞ் சாலவுடை நாய்கன்" சீவக. 493.

பி - ம். *பொருண்மொழிக்காஞ்சி.

நிலத்தையும் ஒருவழிக் கூட்டினவர்கள் இவ்வுலகத்து உடம்பையும் உயிரையும் படைத்தவராவர்; நெல் முதலாயவற்றை வித்தி மழையைப் பார்த்திருக்கும் [1]புல்லிய நிலம் இடமகன்ற நிலத்தை உடைத்தாயினும் அது பொருந்தியாளும் அரசனது முயற்சிக்குப் பயன்படாது; ஆதலால், கொல்லும்போரையுடைய செழிய! இதனைக் கடைப்பிடித்து விரைந்து நிலங்குழிந்தவிடத்தே நீர்நிலைமிகும்பரிசு தளைத்தோர், தாம் செல்லும் உலகத்துச் செல்வம் முதலாகிய மூன்றினையும் இவ்வுலகத்துத் தம் பேரோடு தளைத்தோராவர்; அந்நீரைத் தளையாதவர், இவ்வுலகத்துத் தம் பெயரைத் தளையாதோர்.—எ - று.

இதனால், நீயும் நீர்நிலைபெருகத் தட்கவேண்டுமென்பது கருத்தாகக் கொள்க.

மற்றும் (16), அம்மவும் (29) அசைநிலை.

உணவின்பிண்டம் உண்டி முதற்றுதலான், உண்டிகொடுத்தோர் உயிர் கொடுத்தோரென (19 - 20) மாறிக்கூட்டுக.

தள்ளாதோர் இவட்டள்ளாதோராதலால், செழிய! இதனை இகழாது வல்லே செய்யென ஒருசொல் வருவித்துரைப்பாரும் உளர். தட்டோர் என்பதற்குத் தம்பெயரைத் தளைத்தோரெனினும் அமையும்.

நீரும் நிலனும் புணரியோர் உடம்பும் உயிரும் படைத்தோரெனவே செல்லுமுலகத்துச் செல்வமும், வித்திவானோக்கும் புன்புலம் இறைவன் றாட்கு உதவாதெனவே நீர்நிலைபெருகத்தட்டலால் வானோக்கவேண்டாத நன்புலம் இறைவன்றாட்கு உதவி ஞாலங்காவலர் தோள்வலிமுருக்குதலும், நிலனெளிமருங்கின் நீர்நிலைபெருகத் தட்டோர் இவட்டட்டோரெனவே நல்லிசை நிறுத்தலும் கூறப்பட்டன.

நீர்நிலைபெருகத்தட்கவே [2]அறன்முதன்மூன்றும் பயக்குமென்பது கூறினமையான், இது முதுமொழிக்காஞ்சியாயிற்று. (கஅ)

[1]புல்லியநிலம் - புன்செய். [2]புறநா. உஅ : 15.

---

(க௯) இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடக்கைத்
தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து

1. ‘இமிழ்’ என்பது ஒலித்தற்றொழிற்பண்பில் வந்ததற்கு மேற்கோள்; நன். மயிலை. சூ. 458; நன். வி. சூ. 459.

1 - 2. “இமிழ்கடல்.........தலையாலங்கானத்து என்றவழித் தலையாலம் என ஆசிரியவடியுள் இன்சீர் இயைய வெண்சீர் வந்தது” தொல். செய். சூ. 30, பேர்.; ந.



மன்னுயிர்ப் பன்மையுங் கூற்றத் தொருமையும்
நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய
இரும்புலி வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய

பெருங்கல் லடாரும் போன்மென விரும்பி
முயங்கினே னல்லனோ யானே மயங்கிக்
குன்றத் திருந்த குரீஇயினம் போல
அம்புசென் றிறுத்த வரும்புண் யானைத்
தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து
நாஞ்சி லொப்ப நிலமிசைப் புரள

---

4. பெயரெச்சத்திற்கு முடிபாகிய பெயரை இடைவருஞ்சொற்கள் விசேடித்து நின்றதற்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. 59, ந.

3 - 4. "எருமைக் கடும்பரி யூர்வோ னுயிர்த்தொகை, ஒருபக லெல்லையி னுண்ணு மென்ப, தாரிய வரச ரமர்க்களத் தழிய, நூழி லாட்டிய சூழ்கழல் வேந்தன்", "கூற்றுக்கண் ணோடா வரிந்துகளங் கொண்டோர்" சிலப். உசு : 215 - 8; உஎ : 40.

5 - 6. "தினையுண் கேழ விரியப் புனவன், சிறுபொறி மாட்டிய பெருங்கல் லடாஅர், ஒண்கேழ் வயப்புலி படூஉ நாடன்" (நற். ககக); "புழைதொறு மாட்டிய விருங்க லரும்பொறி" (மலைபடு. 194); "கொல்புலி படுக்கும் பெருங்கனீ ளடார்வெங் குறவர்வீழ்த் திடுதலும்" (கூர்ம சம்புத்தீவின். 29); "பண்ணேறு சிறுகுதலைக் கொடிச்சியருட் பதை பதைத்து நடுங்க வெய்ய, திண்ணேறுங் கொடுஞ்சினத்த செங்கண்வா லுளைமடங்கற் சிதர்ந்து வீழ, விண்ணேறு மமாருளம் வியப்பூரக் கல்லதரின் வீழ்த்தி விண்டு, தண்ணேறு மலர்த்தொடையற் குறவருறை வாமனமாந் தகைசால் குன்றம்" இலிங்க. பிலக்கமுதலானதீவு. 54.

8 - 9. யானையின்மேல் தைத்த அம்புகளுக்கு மலைமீது தங்கிய குருவிகள் உவமை ; "யானை மேல் யானை நெரிதர வானாது, கண்ணோர் கடுங்கணை மெய்ம்மறைப்ப வெவ்வாயும், எண்ணருங் குன்றிற் குரீஇயினம் போன்றனவே" (களவழி. 8); "கணைமொய்ப்பக் கதஞ்சிறந்து, குருவி சேர் வரைபோன்ற குஞ்சரம்" (சீவக. 2237); "கோல்பொரக் குளித்த யானை குருவிசேர் குன்ற மொத்த" மேருமந்தர. பலதேவர். 15.

11. "உறழூறு கமழ்கடாத் தொல்கிய வெழில்வேழம், வறனுழு நாஞ்சில்போன் மருப்பூன்றி நிலஞ்சேர" (கலி. அ); "பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சில்" பெரும்பாண். 199, அடிக்.



எறிந்துகளம் படுத்த வேந்துவாள் வலத்தர்
எந்தையொடு கிடந்தோரெம் புன்றலைப் புதல்வர்
இன்ன விறலு முளகொ னமக்கென
மூதிற் பெண்டிர் கசிந்தழ நாணிக்
கூற்றுக்கண் ணோடிய வெருவரு பறந்தலை
எழுவர் நல்வலங் கடந்தோய்நின்

---

9 - 12. "மின்னவி, ரோடையொடு பொலிந்த வினைநவில் யானை, நீடிர டடக்கை நிலமிசைப் புரளக், களிறுகளம் படுத்த" நெடுநல். 168 - 71.

14. 'இன்ன' என்பது உவமவுருபாக வந்ததற்கு மேற்கோள்; நன். மயிலை. சூ. 366.

15. மூதிற் பெண்டிர் - மறக்குடிமகளிர்; "மூதிற் பெண்டி ரோதையிற் பெயா" (சிலப். ௫ : 75); "கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளோடு, முற்றோன்றி மூத்த குடி" பு. வெ. 35.

13 - 6. புறநா. உஎஅ; மறக்குடிமகளிர், தம்முடைய தந்தை முதலியவர்கள் போர்க்களத்தில் இறந்ததுகண்டு இன்புறுதல், "கன் னின்றா னெந்தை கணவன் களப்பட்டான், முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர் - பின்னின்று, கைபோய்க் கணையுதைப்பக் காவலன் மேலோடி, எய்போற் கிடந்தானென் னேறு" (பு. வெ. 176) என்ப தனாலும் அறியப்படும்.

14 - 6. "இன்னவிறலும்......பறந்தலை என்புழி மூதிற்பெண்டிர் இழவுபற்றி அழுதாராயிற் கூற்றுக்கண்ணோடாதாகலின் அவர் உவந்தனர் என்பது பெற்றாம்; அதனானே அஃது உவகைக்கலுழ்ச்சியாமென்பது" தொல். மெய். சூ. 5, பேர்.

17. புறநா. எசு : 12 - 3; "கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன், ஆலங் கானத் தகன்றலை சிவப்பச், சேரல் செம்பியன் சினங் கெழு திதியன், போர்வல் யானைப் பொலம்பூ ணெழினி, நாரி நறவி

னெருமை யூரன், தேங்கம ழகலத்துப் புலர்ந்த சாந்தின், இருங்கோ வேண்மா னியறேர்ப் பொருநனென், றெழுவர் நல்வல மடங்க வொரு பகல், முரைசொடு வெண்குடை யகப்படுத் துரைசெலக், கொன்று", "காலிய னெடுந்தேர்க் கைவண் செழியன், ஆலங் கானத் தமர்கடந் துயர்த்த, வேலினும் பல்லூழ் மின்னி", "தென்னர் கோமான், எழுவுறழ் திணிதோ ளியறேர்ச் செழியன், நேரா வெழுவ ரடிப்படக் கடந்த, ஆலங் கானத் தார்ப்பினும் பெரிது" (அகநா. ருக, கஎரு, உ0க); "இருபெரு வேந்தரொடு வேளிர் சாயப், பொருதவரைச் செருவென்று", "ஆலங்



*கழூஉவிளங் காரங் கவைஇய மார்பே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

அவனை அவர் பாடியது

இ - ள்.—ஒலிக்குங் கடலாற் சூழப்பட்ட அணுச்செறிந்த அகன்ற உலகத்துக்கண் [1]தமிழப்படை கைகலந்த தலையாலங்கானத்துக்கண் நிலை பெற்ற உயிரது பன்மையையும் அவ்வுயிரைக் கொள்ளுங் கூற்றினது ஒருமையையும் நின்னுடனே சீர்தூக்கிக்காட்டிய வென்றிவேலையுடைய செழிய! பெரும்புலியைப் படுக்கும் வேட்டுவன் எந்திரமறிந்து கொளுத்திய பெரிய கல்லையுடைய அடாரையும் போலுமென்று விரும்பிப் புல்லினேனல்லனோ யான்? கலங்கி மலைக்கண்ணே தங்கிய குருவி யினம்போல அம்புசென்று உதைத்த பொறுத்தற்கரிய புண்ணையுடைய யானையினது துளையையுடைய பெருங்கை வாயுடனே துணிந்து வீழ்ந்து கலப்பையையொப்ப நிலத்தின்மேலே புரள வெட்டிப் போர்க்களத்தின் கண்ணே வீழ்த்த எந்திய வாள்வெற்றியையுடையோராய் எந்தலைவரோடு கிடந்தார், எம்முடைய புல்லிய தலையையுடைய மைந்தர்; இப்பெற்றிப் பட்டவென்றியும் உளவோ நமக்கென்று சொல்லி முதிய மறக்குடியிற் பிறந்த பெண்டிர் இன்புற்று உவகையால் அழ, அதுகண்டு நாணிக் கூற்றம் இரங்கிய அஞ்சத்தக்க போர்க்களத்தின்கண்ணே இருபெரு வேந்தரும் ஐம்பெருவேளிருமாகிய எழுவரது நல்லவலியை வென்றோய்! நினது கழுவி விளங்கின முத்தாரம் அகத்திட்ட மார்பை.—எ - று.

---

கானத் தஞ்சுவரவிறுத், தாசுபட வமருழக்கி, முரசுகொண்டு களம் வேட்ட, அடுதிறலுயர் புகழ்வேந்தே" மதுரை. 55 - 6, 127 - 30.

17 - 8. "பொன்மா மௌலி புனைந்து பொய்யிலான், றன்மா னக்கழ ரூழும் வேலையி, னன்மார் பிற்றழு வுற்ற நாயகன், சொன்னான்" கம்ப. கிட்கிந்தா. அரசியல். 26.

7 - 18. கவவு என்னுஞ்சொல் அகத்திடென்னும் பொருளுணர்த்து மென்பதற்கும் (தொல். உரி. சூ. 61, சே.); எச்சமாங்கால் திரிந்துவரு மென்பதற்கும் மேற்கோள் (தொல். உரி. சூ. 59, ந.); செய்யுட்கண் 'கழூஉவிளங் காரங் கவைஇய மார்பே' என இறுதிக்கண் இரண்டாவது தொக்கது, 'முயங்கினேனல்லனோ' எனவரும் முடிக்குஞ் சொல்லோடு ஒட்டி ஒருசொல்லாகாதென்பதற்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. 16, ந.

[1]"தலைப்பெருஞ் சேனைத் தமிழச்சேரி" பெருங். ௩. 4 : 10 - 11.

பி - ம். *கழுவிளங்.



தமிழ்தலைமயங்கியவென்புழி, தலை, அசைநிலை; இடமுமாம்.

செழிய! கடந்தோய்! நின்மார்பை யான் விரும்பி முயங்கினேனல்லனோவெனக் கூட்டுக.

பெருங்கல்லடாருமென்ற உம்மை, எமக்கு விருப்பஞ் செய்தலே யன்றி நின்பகைவர்க்கு வருத்தஞ் செய்தலான், நின்மார்பு கல்லடாரும் போலுமென எச்சவும்மையாயிற்று; சிறப்பும்மையுமாம்.

மூதிற்பெண்டிர் கசிதலால் நாணியெனவும் அழுதலாற் கண்ணோடிய எனவும் நிரனிறையாகக்கொள்க.

போர்முடிதலாற் போயினகூற்றை நாணியும் கண்ணோடியும் போயிற்றுப்போலக் கூறியது, [1]ஓரணி கருதிநின்றது.

இனி, அம்பு தைத்த யானையை வெட்டிப்படுத்தல் மறத்திற்கிழி

பென்று பெண்டிர் இரங்கியழுதலின், கூற்றுக் கண்டு நாணிக் கண்ணோடியதென்று உரைப்பாருமுளர். (கக)

[1]ஓரணியென்றது தற்குறிப்பேற்றத்தை.

---

(உ0) இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத் தகலமும்
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமும், என்றாங்
கவையளந் தறியினு மளத்தற் கரியை
அறிவு மீரமும் பெருங்க ணோட்டமும்
சோறுபடுக்குந் தீயோடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே
திருவி லல்லது கொலைவில் லறியார்

---

1. புறநா. உகூ: 1 ; "கடற்குட்டம் போழ்வர் கலவர்" நான்மணி. 18.

1 - 5. புறநா. ரு0 : 1 - 6; "நிலநீர் வளிவிசும் பென்ற நான்கின், அளப்பரி யையே" பதிற். கச.

10. திருவில் - இந்திரவில்; “தேர்செல வழுங்கத் திருவிற் கோலி, ஆர்கலி யெழிலி சோர்தொடங் கின்றே” (ஐங்குறு. ௪௨௮); “திருவில் வீழ்ந், தொருக்குலாய் நிலமிசை மிளிர்வ” (சீவக. 1903); “திருவி
8



நாஞ்சி லல்லது படையு மறியார்
திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்
பிறர்மண் ணுண்ணுஞ் செம்மனின் னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது
பகைவ ருண்ணா வருமண் ணினையே
அம்புதுஞ்சுங் கடியரணால்
அறந்துஞ்சுஞ் செங்கோலையே
புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற வறியா வேமக் காப்பினை

விட்டுத் திகழ்தரு மேனியன்” (சிலப். ௧௫: 156; மணி. ௯: 10); “நாமவே னாபதி யுலகங் காத்தநாட், காமவேள் கவர்கணை கலந்த தல்லது, தாமவேல் வயவர்தந் தழலங் கொல்படை, நாமநீர் வரைப்பக நலிவ தில்லையே” சூளா. நகர. 18.

13. “பொருவார், மண்ணெடுத் துண்ணு மண்ணல் யானை, வண்டேர்த் தொண்டையர்” குறுந். ௨௬௦.

14. வயவு - வயா; கருப்பமுற்ற மகளிர்க்கு நுகரப்படும் பொருள் மேற்செல்லும் வேட்கை; அதனால் அவர்கள் புகையுண்ட மண்ணை யுண்பர்; "மனைபுகை யுண்ட கருமண் ணிடந்து, பவள வாயிற் சுவை காணாது" (கல்லாடம், எ); "வயாநோ யெய்தி மண்ணினை நுகர்தல் தேன்சோர், முருகவிழ் துளவத் தண்டார் முகுந்தனை மல்ல லோங்கு திருமகள் சேரு முன்னஞ் சேர்ந்திட வேண்டு மென்ன, இருநில மங்கை முன்போ யெய்துதல் போன்ற தன்றே" (கூர்ம. கண்ணனவதரித்த. 21); "பொருதடந்தோண் மகன்பழகப் புகையுண்ட கருமண்ணும்..... உவந் தருந்தும் வயாநிறைந்த" (திருவானைக்கா. கோச்செங்கணர். 171.) 'வயா' என்னுஞ்சொல் 'வயவு' எனத் திரிந்துநின்று வேட்கைப் பெருக்கமாகிய குறிப்பையுணர்த்துதற்கு மேற்கோள்; தோல். உரி. சூ. 75, சே.; ஷை. சூ. 73, ந.

18. "புதுப்புள் வருதலும் பழம்புள்போதலும் பொழுதன்றிக் கூகை குழறலும் போல்வன புள்ளின்கட்டோன்றிய நிமித்தம்" தோல். புறத் திணை: சூ. 36, ந.

19. 'விதிர்ப்பு' நடுக்கமாகிய குறிப்புணர்த்துமென்பதற்கு மேற் கோள்; தோல். உரி. சூ. 20, சே.; ஷை. ஷை. சூ. 18, ந.; இ. வி. சூ. 281, உரை.

18 - 9. மணி. கஉ: 94.



20 அனையை யாகன் மாறே
மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே.[1]

திணையும் துறையும் அவை.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையைக் குறுங்கோழியூர்கிழார் பாடியது.

இ - ள்.—பெரிய கடலினது ஆழமும், அகன்ற உலகத்துப் பரப்பும், காற்றியங்குந் திசையும், வடிவின்றி நிலைபெற்ற ஆகாயமும் என்று சொல்லப்படும் அவற்றை வரையறுத்தறியினும் வரையறுத்தற்கு அரியை, அறிவும் அன்பும் மிக்க கண்ணோட்டமும்; ஆகலால், சோற்றை ஆக்கும் நெருப்புடனே செஞ்ஞாயிற்றினது வெம்மையல்லது வேறுவெம்மையறியார், நின்குடை நிழற்கண்வாழ்வோர்; இந்திரவில் அல்லது பகைவாரது கொலைவில்லை அறியார்; கலப்பை அல்லது வேறுபடைக்கலமும் அறியார்; போர் செய்யும் கூறுபாட்டை யறியும் வீரருடனே பகைவர் மாய அம்மாற்றாருடைய [2]மண்ணைக்கொண்டு உண்ணுந் தலைவ! நின்னுடைய நாட்டின்கண் வேட்கைநோயுற்ற பெண்டிர் விரும்பி உண்ணினல்லது பகைவர் உண்ணப்படாத பெறுதற்கரிய மண்ணை யுடையை; அம்பு தங்குங் காவலையுடைய அரணுடனே அறம் தங்கும் செவ்விய கோலை யுடையை; புதுப்புள் வரினும் பழையபுள் அவ்விடத்தைவிட்டுப் போகினும் அவற்றால் நடுக்கமுறுதல் அறியாத சேமமாகிய காவலை யுடையை; அத்தன்மையை யுடையையாதலான், உலகத்து நிலைபெற்ற உயிரெல்லாம், தத்தம்காதலால் நினக்கு ஏதம் வருங்கொலென்று அஞ்சும்.—எ - று.

அறிவும் ஈரமுங் கண்ணோட்டமுமென்பன சினைவினைப்பாற்பட்டு அளத்தற் கரியை யென்னும் முதல்வினை கொண்டன. (உ0)

---

20. புறநா. ௪ : 17.

21. சீவக. 957, ந. மேற்.

18 - 21. புட்களைப்பற்றி வந்ததற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. 30, இளம்.

[1] மு. "குடியோம்புதல் வருமாறு:—'இருமுந்நீர்......அஞ்சும்மே' என வரும்" (தொல். புறத்திணை. சூ. 16, இளம்.); புள்நிமித்தத்தால் பாடாண்டலைவற்குத் தோன்றிய தீங்குகண்டு அஞ்சி ஓம்படைகூறியதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 36, ந.

[2] இப்பொருள்பற்றியே வடமொழியிலும் 'பூபுக்' என்று அரசனைக் கூறுவர்.



(உக) புலவரை யிறந்த புகழ்சா லோன்றல்
நிலவரை யிறந்த குண்டுகண் ணகழி
வான்றோய் வன்ன புரிசை விசும்பின்
மீன்பூத் தன்ன வுருவ ஞாயிற்
கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை
அருங்குறும் புடுத்த கானப் பேரெயில்
கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய
இரும்பு ணீரினு மீட்டற் கரிதென
வேங்கை மார்ப னிரங்க வைகலும்
ஆடுகொளக் குழைந்த தும்பைப் புலவர்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே
இகழுந ரிசையொடு மாயப்

புகழொடு விளங்கிப் பூக்கநின் வேலே.

திணையும் துறையும் அவை.

[1] கானப்பேரெயில்கடந்த உக்கிரப்பெருவழுதியை ஐயூர் மூல கிழார் பாடியது.

---

1. புலவரை - அறிவின் எல்லை; "புலவரை யிறந்தோய் போகுத பொறேஎன்" (சிலப். உஅ: 174); "புலவரை யிறந்த புகாரெனு பூங்கொடி" மணி. ஒ : 109.

2. "மண்ணுற வாழ்ந்த மணிநீர்க் கிடங்கின்" மதுரை. 351.

4. ஞாயில் - சூட்டு; என்பது மதிலின்மீதுள்ள ஒரு சிற்றுறுப்பு எப்புழைக்கு நடுவாய் எய்துமறையும் சூட்டெனன்பர்; சீவக. 105, ந.

5. "வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்" (பெரும்பாண் 374; மணி. ச: 5); "வெயிலொளி யறியாத விரிமலர்த் தண்காவில்' கலி. ரு0 : 7.

2 - 6. மதுரை. 64 - 7; பதிற். உ0 : 17 - 9.

7. புறநா. ருசு : 6; "கருங்கைக் கொல்லர்" (சிலப். ரு: 29) என்பதையும் அதனுரைகளையும் பார்க்க.

7 - 8. "கனலிரும் புண்ட நீரின் விடாது" (பெருங். ரு. 25 : 71); "இரும்புண்டநீர் மீள்கினு மென்னுழையிற், கரும்புண்டசொன் மீள்கிலள் காணுதியால்" கம்ப. சடாயு. 104.

12 - 3. "பிறந்திறந்து போய்ப் பெறுவது மிழப்பதும் புகழேல்" கம்ப. மந்தரை. 66.

[1] இப்பாட்டின் 5 - 6 ஆம் அடிகளில் கானப்பேரென்னும் பெயர்க் காரணம் வந்திருத்தல் காண்க.

இ - ள்.—நின்னைப் பாடுவாரது அறிவின் எல்லையைக் கடந்த புகழமைந்த தலைவ! நிலவெல்லையைக் கடந்த பாதலத்தேயுற ஆழ்ந்த இடத்தையுடைய அகழியினையும் உயர்ச்சியான் வானைப்பொருந்துவதுபோன்ற மதிலையும் அவ்வானிடத்து மீனைப்பூத்தாற்போன்ற வடிவையுடைய சூட்டினையும் வெயிற்கதிர் நுழையாத மரஞ்செறிந்த காவற்காட்டினையும் உடைத்தாய் அணுதற்கரிய சிற்றரண்களாற் சூழப்பட்ட கானப்பேரென்னும் அரண், வலிய கையையுடைய கொல்லனாற் செந்தீயின்கண்ணே மாட்டப்பட்ட இரும்புண்ட நீரினும் மீட்டற்கரிதெனக்கருதி வேங்கை மார்பன் வருந்த நாடோறும் வென்றிகொளக் குழைத்த தும்பையையுடைய, புலவர் பாடப்படுந் துறைகளைமுடித்த வெற்றியினையுடைய வேந்தே! நின்னை மதியாத பகைவர் தம்முடைய புகழுடனே பொன்ற வெற்றிப் புகழுடனே விளங்கிப் பொலிவதாக நின் வேல்.—எ - று.

கானப்பேரெயில் மீட்டற்கரிதென வேங்கைமார்பன் இரங்கப் பாடுதுறை முற்றிய கொற்றவேந்தே! நின்வேல் பூக்கவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

குழைத்தவென்பது குழைந்தவென மெலிந்துநின்றது. (௨௧)

---

(௨௨) தூங்குகையா னோங்குநடைய
உறழ்மணியா னுயர்மருப்பின
பிறைநுதலாற் செறனோக்கின
பாவடியாற் பணையெருத்தின
தேன்சிதைந்த வரைபோல

மிஞிறார்க்குங் கமழ்கடாத்

1. மூன்றாம் வேற்றுமைவிரியைக்கூறும் சூத்திரத்தில் 'அன்ன பிறவும்' என்பதற்கு மேற்கோள்; தொல். வேற்றுமை. சூ. 13, சே.; ஆனுருபு சகார்த்தமாய் வந்ததற்கு மேற்கோள்; பிரயோக. காரக. 16, உரை.

2. ஆன் ஒடுவொதற்கு மேற்கோள்; தொல். வேற்றுமை. சூ. 13, ந.

1 - 2. "தூங்கு.....மருப்பின என்பனபோல்வனவெல்லாம் ஆன் ஒடுவாயின" (இ. வி. சூ. 200, உரை); "தூங்குகையா னோங்குநடைய, உறழ்மணியா னுயர்மருப்பின...இவை உடனிகழ்ச்சி; ஆன்உருபோடும் இவ்வாறே ஒட்டிக்கொள்க" நன். மயிலை. சூ. 296; நன். வி. சூ. 297.

6. யானைமதம் மணமுடையதென்பதையும் அதில் வண்டுமொய்க்கு மென்பதையும், "வரிவண் டார்க்கும் வாய்புகு கடாஅம்" (புறநா. கக:



தயறுசோறு மிருஞ்சென்னிய
மைந்துமலிந்த மழகளிறு
கந்துசேர்பு நிலைஇவழங்கப்
பாஅனின்று கதிர்சோரும்
வானுறையும் மதிபோலும்
மாலைவெண் குடைநிழலான்
வான்மருங்கிலோர் காப்புறங்க
அலங்குசெந்நெற் கதிர்வேய்ந்த
ஆய்கரும்பின் கொடிக்கூரை

சாறுகொண்ட களம்போல
வேறுவேறு பொலிவுதோன்றக்
குற்றானு வுலக்கையாற்
கலிச்சும்மை வியலாங்கட்
பொலந்தோட்டுப் பைந்தும்பை

---

12 - 3), "ஈர்நறுங் கமழ்கடாஅத் தினம்பிரி யொருத்தல்", "வரிவண், டோங்குய ரெழில்யானைக் கனைகடாங் கமழ்நாற்றம், ஆங்கவை விருந் தாற்ற" (கலி. உக : 2, சுசு : 2 - 4), "வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடா அத்துப், பொறிநுதற் பொலிந்த வயக்களிற் றொருத்தல்" (அகநா. எஅ : 3 - 4), "பூநாறு கடாஞ் செருக்கி" (மணி. கக : 22), "புணர்மருப் பியானை யின் புயல்கொண் மும்மத, மணமகள் கதுப்பென நாறும்" (சீவக. 1621), "பாத்த யானையிற் றங்களிற் படுமத நாறக், காத்த வங்குச நிமிர்ந்திடக் கால்பிடித் தோடிப், பூத்த வேழிலைப் பாலையைப் பொடிப்பொடி யாகக், காத்தி ரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோர் களிறு" (கம்ப. வரைக். 6), "விழிமலர்ப்பூ சனையுஞற்றித் திருநெடுமால் பெறு மாழி மீள வாங்கி, வழியொழுகாச் சலந்தரன்மெய்க் குருதிபடி முடை நாற்ற மாறு மாற்றாற், பொழிமதநீர் விரையேற்றி" (காஞ்சிப். கடவுள். 5) என்பவற்றால் அறிக.

6 - 9. "கமழ்கடாஅத், தளறுபட்ட நறுஞ்சென்னிய, வரைமருள முயர்தோன்றல" மதுரை. 44 - 6.

10 - 12. புறநா. சுO : 3 - 12.

15. "கொடி - ஒழுங்கு; 'கொடிக்கூரை' என்றார்" சீவக. 1976.

16. "சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி" முருகு. 283.

20. புறநா. கஎ : 15; "செய்பொன் வாகை" மணி. உக : 90.

மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇச்
சினமாந்தர் வெறிக்குரவை
ஓத நீரிற் பெயர்பு பொங்க
வாய்காவாது பரந்துபட்ட
வியன்பாசறைக் காப்பாள
வேந்துதந்த பணிதிறையாற்
சேர்ந்தவர் *கடும்பார்த்தும்
ஓங்குகொல்லியோ ரடுபொருந
வேழ நோக்கின் விறல்வெஞ்சேஎய்
வாழிய பெருமநின் வரம்பில் படைப்பே
நிற்பாடிய வலங்குசெந்நாப்
பிறரிசை நுவலாமை
ஓம்பா தீயு மாற்ற லெங்கோ
மாந்தரஞ் சேர லிரும்பொறை யோம்பிய நாடே

---

20 - 21. அரசர் தமக்குரிய அடையாளப்பூவொடு புறத்திணைப் பூக்களையும் விரவித் தொடுப்பித்துத் தாம் சூடிக்கொள்ளுதலும், வீரர்க்குச் சூட்டுதலும் மரபு; புறநா. எசு : 4 - 5 ; எஎ : 2 - 3, க௦௦ : 3 - 6; "குடைநிலை வஞ்சியும்......வட்கர் போகிய வான்பனந் தோட்டுடன், புட்கைச் சேனை பொலியச் சூட்டி" (சிலப். உ௬: 141 - 7); "இளவரிக் கவட்டிலை யாரோ டேர்பெறத், துளவிய நும்பையுஞ் சுழியச் சூடினன்" கம்ப. முதற்போர். 115.

28. "கொல்லிப் பொருந" (பதிற். ௭௩); "முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி, செல்லா நல்லிசை நிறுத்த வல்வில், ஓரிக் கொன்று சேரலற் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா. ௨௦௯), "கொல்லி யாண்ட குடவர் கோவே" (சிலப். ௨௯) என்பவற்றாற் கொல்லிமலை சேரபரம்பரையினர்க்குரித்தாதல் காண்க.

30. படைப்பு - செல்வம் ; புறநா. ௧௮௮.

31-3. புறநா. ௯௮: 19; "செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம், பெருமான் முகம்பார்த்த பின்னர் - ஒருநாளும், பூதலத்தோர் தம்மைப் பொருணசையாற் பாராவாம், காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்" (தண்டி. சூ. 21, மேற்.) என்பதும், "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்" என்னும் திருக்குறளின் (223) பொருள் விசேடங்களும் இங்கே அறிதற்குரியன.

பி - ம். *கடும்பருத்தும்



புத்தே ளுலகத் தற்றெனக் கேட்டுவந்
தினிது கண்டிசிற் பெரும முனிவிலை
வேறுபுலத் திறுக்குந் தானையொடு
சோறுபட நடத்திநீ துஞ்சாய் மாறே.

திணையும் துறையும் அவை; துறை - இயன்மொழியுமாம்.

[1]சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறையைக் குறுங்கோழியூர்கிழார் பாடியது.

இ - ள்.—அசைந்த பெருங்கையுடனே தலையெடுத்து நடக்கும் உயர்ந்த நடையையுடையனவும் அந்நடைக்கேற்ப ஒன்றற்கொன்று மாறு பட்டொலிக்கும் மணியுடனே உயர்ந்த கோட்டினையுடையனவும் பிறை வடிவாக இடப்பட்ட மத்தகத்துடனே சினம்பொருந்திய பார்வையை யுடையனவும் பரந்த அடியுடனே பரிய கழுத்தையுடையனவும் * தேன ழிந்த மலைபோலத் தேனீயொலிக்கும் மணம் நாறும் மதத்துடனே புண் வழலைவடியும் பெரிய தலையையுடையனவுமாகிய வலிமிக்க இளங்களிறு கம்பத்தைப் பொருந்தித் தான் நின்றநிலையிலே நின்று அசையப் பக்கத்தே நின்று கிரணத்தை விடுகின்ற வானத்தின்கண்ணே தங்கும் திங்கள் போலும் முத்தமாலையையுடைய வெண்கொற்றக் குடையினது நிழற் கண்ணே தம்பக்கத்து வாளில்லாதோர் அக்குடையேகாவலாக உறங்க அசைந்த [2]செந்நெற்கதிரால் வேயப்பட்ட மெல்லிய கரும்பாற்கட்டப்பட்ட ஒழுங்குபட்ட கூரை விழாவெடுத்துக்கொள்ளப்பட்ட இடம்போல் வேறு வேறாகப் பொலிவுதோன்றக் குற்று அமையாத உலக்கையொலியுடனே

---

34 - 5. "மீக்கூறு மன்ன னிலம்" (குறள், 386) என்பதும், 'மீக்கூறு தல்:—இவன் காக்கின்ற நாடு பசி பிணி பகைமுதலியவின்றி யாவர்க்கும் பேரின்பந் தருதலின் தேவருலகினும் நன்றென்றல்' என்னும் அதன் உரையும் இங்கே கருதற்பாலன.

[1]"கோச்சேரமான்யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை என்றவழி அரசனென்பதொரு சாதியும், சேரமானென்பதொரு குடியும், வேழநோக்கினையுடையானென்பதொரு வடிவும், சேயென்பதோர் இயற் பெயரும், மாந்தரஞ்சேரலிரும்பொறையென்பதொரு சிறப்புப்பெயரும் ஒரு பொருளின்கட் கற்பனை" (குறள், 355, பரிமேல்.) இச்செய்யுளின் 29, 34-ஆம் அடிகளில் தலைவன்பெயர் அமைக்கப்பெற்றுள்ளது.

[2]ஒரு சமயத்தில் கம்பருக்காகச் சடையப்பவள்ளல் விரைவில் வீடொன்று கட்டுவித்து அதனை நெற்கதிரால் வேய்ந்தளித்தமையின் கதிர்வேய்மங்கலமென்று அவ்வீடுள்ள ஊர் பெயர்பெற்றதென்ற பழஞ் செய்தி இங்கே கருதற்குரியது.

மிக்க ஆரவாரத்தையுடைய அகன்றவிடத்துப் பொன்னாற் செய்யப்பட்ட இதழையுடைய பசிய தும்பையுடனே மிசையே அசைந்த தலையினையுடைய பனந்தோட்டைச் செருகிச் சினத்தையுடைய வீரர் வெறியாடும் குரவைக் கூத்தொலி ஓதத்தையுடைய கடலொலிபோலக் கிளர்ந்து பொங்கப்[1] படைப்பெருமையாற் பகைவருட்கும் மதிப்புடைமையின் இடங்காவாது பரந்துகிடக்கின்ற அகன்ற பாசறையிடத்துக் காவலாள! மாற்றரசர் பணிந்துதந்த திறையால் தம்மை அடைந்தவருடைய சுற்றத்தை நிறைக்கும் உயர்ந்த கொல்லிமலையோருடைய அடுபொருந ! யானையினது நோக்குப்போலும் நோக்கினையுடைய வெற்றியை விரும்பும் சேயே ! வாழ்க, பெருமானே ! நினது எல்லையில்லாத செல்வம்; நின்னைப் பாடிய விளங்கிய செவ்விய நாப் பின்னைப் பிறருடைய புகழைச் சொல்லாமற் பாதுகாவாது கொடுக்கும் வலியையுடைய எங்கோவே ! மாந்தரஞ்சேரலிரும்பொறை பாதுகாத்த நாடு தேவருலகத்தை யொக்குமென்று பிறர் சொல்லக் கேட்டு வந்து கட்கினிதாகக் கண்டேன்; பெருமானே! முயற்சி வெறுப்பில்லையாய் வேற்றுநாட்டின்கட் சென்று விடும் படையுடனே சோறுண்டாக நடப்பை; நீ மடியாயாதலான்.—எ - று.

கதிர்சோருமதியெனவியையும்; கதிர்சோருமென்னும் வினைவினை மதி யென்னும் முதலொடு முடிந்தது; கதிர்சோருமாலையென இயைப்பினும அமையும்.

பாய்ந்தின்றென்று பாடமோதுவாரும் உளர்.

கூடரை பொலிவுதோன்றவென இடத்துநிகழ்பொருளின் தொழில் இடத்துமேல் ஏறிநின்றது.

செரீஇயென்னும் வினையெச்சத்தை ஆடுமென ஒருசொல் வருவித்து அதனோடு முடிக்க.

நிலைஇ வழங்கக் காப்புறக் பொலிவுதோன்றப் பெயர்புபொங்க என்னும் செயவெனெச்சங்களும், வாய்காவாதென்னும் எதிர்மறை வினையெச்சமும் பாந்துபட்டவென்னும் பெயரெச்சவினையொடு முடிந்தன.

காப்பாள! பொருந! சேஎய்! பெரும! எங்கோ! பெரும! நீ துஞ்சா யாதலாற் சோறுபட நடத்தி; அதனால் இரும்பொறை ஓம்பியநாடு புத்தேளுலகத்தற்றெனக் கேட்டுவந்து இனிது கண்டிசின்; நின்படைப்பு வாழிய வெனக் கூட்டி வினைமுடிவுசெய்க; அன்றி, எங்கோவே! நீ துஞ்சாதபடியாலே, இரும்பொறையோம்பியநாடு புத்தேளுலகத்தற்றெனப் பிறர் சொல்லக்கேட்டு நிற்பாடிய அலங்குசெந்நாப் பிறரிசை நுவலாதபடி வந்து இனிது கண்டேன்; நினது படைப்பொடு வாழ்வாயாகவென இயைப்பினும் அமையும்.

---

1 "தானை, படைத்தகையாற் பாடு பெறும்" குறள், 768.

9



இசின், தன்மைக்கண் வந்தது.

சோறுபடநடத்தி யென்பதனை வினையெச்சமாக உரைப்பினும் அமையும்.

உயர்மருப்பினென்பதூஉம், செறநோக்கினென்பதூஉம், பணை யெருத்தினென்பதூஉம் பாடம். (௨௨)

---

(௨௩) வெளிறி னோன்காழ்ப் பணைநிலை முனைஇக்
களிறுபடிந் துண்டெனக் கலங்கிய துறையும்
கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியற்
சூர்நவை முருகன் சுற்றத் தன்னநின்
கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்
கொள்வது கொண்டு கொள்ளா மிச்சில்
கொள்பத மொழிய வீசிய புலனும்
வடிநவில் நவியம் பாய்தலி னூர்தொறும்
கடிமரந் துளங்கிய காவு நெடுநகர்
வினைபுனை நல்லில் வெவ்வெரி நைப்பக்

---

1. வெளிறு - வயிரமின்மை; "இரும்பனை வெளிற்றின் புன்சாயன்ன" மூநத. 312.

1 - 2. புறநா. ௧௬: 9-ஆம் அடி முதலியவற்றைப் பார்க்க.

3 - 4. புறநா. ௩௬: 12 - 3 ; "மறுவில் கற்பின் வாணுதல் கணவன்... மாஅத், துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்", "செங்கான் மாஅத்த வாலிண ரிடையிடுபு, சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை" (முருகு. 6 - 11, 202 - 3); "காரலர் கடம்பன்" (மணி. ௪: 49); "கார்க்கடப் பந் தாரெங் கடவுள்" சிலப். ௨௪: 'நேரிழை'.

5. கூளியர், ஏவல் செய்வோரென்பதற்கு இவ்வடி மேற்கோள்; முருகு. 282, ந.; "கொடுவிற் கூளியர் கூவை காணின்" மலைபடு. 422.

8 - 9. பகைவருடைய காவன்மரத்தை அரசர் வெட்டுவிப்பர்; புறநா. ௩௬ : 6 - 9 ; ௫௭ : 10 ; "கடிகாவி னிலைதொலைச்சி" (மதுரை. 153) ; "பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின், முழாரைை முழுமுத றுமியப் பண்ணி" (பதிற். ௫-ஆம் பத்து, பதி.); "பழையன் காக்குங் குழைபயி னெடுங்கோட்டு, வேம்புமுத றடிந்த வேந்துவாள் வலத்துப், போந்தைக் கண்ணிப் பொறைய" சிலப். ௨௭: 124 - 6.



கனையெரி யுரறிய மருங்கு நோக்கி
நண்ணார் நாண நாடொறுந் தலைச்சென்
றின்னு மின்னபல செய்குவன் யாவரும்
துன்னல் போகிய துணிவி னோனென
ஞால நெளிய வீண்டிய வியன்படை
ஆலங் கானத் தமர்கடந் தட்ட
கால முன்பநிற் கண்டனென் வருவல்
அறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டெனச்
சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை
பூளை நீடிய வெருவரு பறந்தலை

வேளை வெண்பூக் கறிக்கும்
ஆளி லத்த மாகிய காடே.

திணையும் துறையும் அவை; துறை - நல்லிசைவஞ்சியுமாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைக் கல்லாடனார் பாடியது.

இ - ள்.—வெண்மையில்லாத வலிய வயிரக்கம்பத்தையுடைய கூடத்தில் நிற்றலை வெறுத்துச்சென்று யானை படிந்து நீருண்டதாகக் கலக்கமுற்ற துறையையும் கார்காலத்து நறிய கடம்பினது பசிய இலையோடு விரவிய மாலையையுடைய சூரபன்மாவைக்கொன்ற முருகனது கூளிச்சுற்றத்தை யொக்கும் நின்னுடைய கூரிய நல்ல அம்பினையும் வளைந்தவில்லினையுமுடைய மறவர் தம்மாற் கொள்ளலாவதனை முகந்துகொண்டு கொள்ளாத ஒழிபொருளை மாற்றார் முகந்து கொள்ளப்படும் உணவாக்காமற் சிதறிய நிலங்களையும் வடித்தல்பயின்ற கோடாலிவெட்டுதலான் ஊர்தோறும்

---

11. "கனையெரி பொத்தி" மணி. உ: 42.

10 - 11. புறநா. சு: 21 - 2, அடிக்.

15. "கார்விளை மேக மன்ன கவுளழி கடாத்த வேழம், போர்விளையிவுளித் திண்டேர் புனைமயிர்ப் புரவி காலாள், வார்விளை முரசம்விம்ம வானுலாப் போந்த தேபோல், நீர்விளை சுரிசங் கார்ப்ப நிலநெளி பரந்த வன்றே" சீவக. 433.

16. "ஆலங் கானத் தஞ்சுவர விறுத்த, வேல்கெழு தானைச் செழியன்" நற். ஙஅஎ: 7 - 8.

17. புறநா. கக: 3; சக: 1 - 3; "மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி" (பொருந. 140); "ஆற்றல், காலனோ டொக்கும்" (பெருங். க. 36: 100 - 101); "எண்மரின் வலியனு யமன்" கம்ப. மிதிலை. 107.

காவல்மரங்கள் நிலைகலங்கிய காவையும் நெடிய நகரின்கண் தொழில் புனைந்த [1]நல்ல மனைகளிடத்து விரும்பும் அடுதீயைக்கெடுக்க மிக்க தீ முழங்கிய பக்கத்தையும் பார்த்துப் பகைவர் நாண நாடோறும் அவரிடத்துச் சென்று இன்னமும் இத்தன்மையன பலவுஞ் செய்குவன், யாவரும் தன்னை அணுகவொண்ணாத சூழ்ச்சித் தெளிவினையுடையோனெனக்கருதி உலகம் பொறையாற்றாது நெளியத் திரண்ட பரந்த படையினையுடைய தலையாலங்கானத்தின்கட் போரை எதிர்நின்று கொன்ற காலன்போலும் வலியையுடையோய்! நின்னைக் கண்டேனாய் வந்தேன்; அற்ற கோட்டையுடைய பெரிய கலை புலியின்கண்ணே அகப்பட்டதாகச் சிறிய மறியை அணைத்துக்கொண்ட துள்ளிய நடையையுடைய மெல்லிய மான்பிணை பூளையோங்கிய அஞ்சத்தக்க பாழிடத்து வேளையினது வெளிய பூவைத் தின்னும் ஆளற்ற அருஞ்சுரமாகிய காட்டுவழியே.—எ - று.

காலமுன்ப! துறையும் புலனும் காவும் மருங்கும் நோக்கி இன்னும் இன்னபல செய்குவன் துணிவினோனென உட்கொண்டு காட்டின்கண்ணே நின்னைக் கண்டு அக்காட்டுவழியே வந்தேனெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

வருவலென்பது, ஈண்டு இறந்தகாலப்பொருட்டாய் நின்றது.

இவனைக் காணாமுன்னே கண்டு வந்தேனென்றான், இவன்செய்த வென்றியெல்லாம் கண்டமையின்.

பாசிலைத்தெரியல் முருகனென இயையும்.

நவியம்பாய்தலென்பது, கருவி கருத்தாவாய் நின்றது.

கலை புலிப்பாற்பட்டெனச் சிறுமறி தழீஇய மடப்பிணை பறந்தலை வேளைவெண்பூக்கறிக்குமென்பது, அவன் பகைவரைக் கொன்றவழி அவர் பெண்டிர் தம் இளம்புதல்வரை ஓம்புதற்பொருட்டு இறந்துபடாது அடகு தின்று உயிர்வாழ்கின்றாரென்பதோர் பொருள்தோன்ற நின்றது.

இனித் துணிவிலேனென்று பிறர்சொல்லவெனவும், கண்டனென் வருவலென்பதனைக் காலமயக்கமாக்கிக் கலங்கியதுறைமுதலாயினவற்றை நோக்கி இன்னும் இவ்வாறு பகைவர் நாட்டின்கண் மேற்செல்வனென நினைந்து காட்டிடத்தே நின்னைக் காணியவந்தேனெனவும் உரைப்பாரும் உளர். (௨௩)

---

[1]"நல்லிற் சிதைத்ததீ நாடொறு நாடித்தம், இல்லத்தி லாக்குதலால்" நாலடி. 225.



(௨௪) நெல்லரியு மிருந்தொழுவர்
செஞ்ஞாயிற்று வெயின்முனையிற்
றெண்கடற்றிரை மிசைப்பாயுந்து
திண்டிமில் வன்பரதவர்
வெப்புடைய மட்டுண்டு
தண்குரவைச் சீர்தூங்குந்து

*தூவற் கலித்த தேம்பாய் புன்னை
மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்
எல்வளை மகளிர் தலைக்கை †தரூஉந்து
வண்டுபட மலர்ந்த தண்ணறுங் கானல்

---

1. புறநா. உ0௬: 2; தொழுவர் - தொழில்செய்வார்; மதுரை. 89.

3. உம்மீறு உந்தாய்த் திரிந்ததென்பதற்கு, 'பாயுந்து' என்பது மேற்கோள்; இ. வி. சூ. 244, உரை.

1 - 3. "நெல்லரியும் . . . . . .பாயுந்து; இதிற் 'பாயும்' எனற்பாலது 'பாயுந்து' என வந்தது" (தோல். இடை. சூ. 7, தெய்வச்.) உம் உந்தாயிற் றென்பதற்கு மேற்கோள்; நன். வி. சூ. 341.

1 - 4. உம்மீறு உந்தென்றாயதற்கு மேற்கோள்; நன். மயிலை. சூ. 340. 5. புறநா. உ௧: 15.

4 - 6. குரவை: புறநா. ௧௨௩: 1 - 3; கலி. ௧0௬: 32 - 3; அகநா. உ0 : 7.

3 - 6. 'பாயுந்து', 'தூங்குந்து' என வருவன பெயரெச்சவினைத் திரிசொல் என்பர்; தோல். எச்ச. சூ. 61, ந.

7. "புன்னை, உடைதிரைத் திவலை யரும்புந் தீநீர்" (குறுந். ௫: 2 - 3.) 'கலித்தல்' தழைப்பென்னும் பொருளில் வந்ததற்கு மேற்கோள்; தோல். உரி. சூ. 93, தெய்வச்.

9. " எல்லென்பது உரிச்சொனீர்மைத்தாயினும், ஆசிரியர் இடைச்சொல்லாக ஓதினமையான் இடைச்சொல்லென்று கோடும்; 'எல்வளை' என எல்லென்பது இலங்குதற்கண் வந்தவாறு" தோல். இடை. சூ. 21, சே.

தலைக்கை: கலி. ௭௩: 16, ந.

8 - 9. "மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன், முழவுறழ் தடக்கையி னியல வேந்தி, மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து" முருகு.

214 - 6. பி - ம். *திவலையிற் கவித்த. †தழூஉந்து.



முண்டகக் கோதை யொண்டொடி மகளிர்
இரும்பனையின் குரும்பைநீரும்
பூங்கரும்பின் றீஞ்சாறும்
ஓங்குமணற் குவவுத்தாழைத்
தீநீரோ டுடன்விராஅய்
முந்நீ ருண்டு முந்நீர்ப் *பாயுந்
தாங்கா வுறையு ணல்லூர் கெழீஇய
ஓம்பா வீகை மாவே ளெவ்வி
புனலம் புதவின் மிழலையொடு கழனிக்
கயலார் நாரை †போர்விற் சேக்கும்
பொன்னணி யானைத் தொன்முதிர் வேளிர்

---

11. "மணிப்பூ முண்டகத்து மணன்மலி கானற், பரதவர் மகளிர் குரவையொ டொலிப்ப" (மதுரை. 96 - 7); "அணிமலர் முண்டகத் தாய்பூங் கோதை, மணிமரு ளைம்பால் வண்டுபடத் தைஇ" (நற். ௧௨௫: 2 - 3); "முண்டகக் கோதை நனையத், தெண்டிரைப் பௌவம் பாய்ந்து நின் றோளே" ஐங். ௧௨௧.

1 - 17. "நெல்லரியும்.........கெழீஇய என்ற வழி உம் உந்தாயிற்று" (தொல். இடை. சூ. 43, தெய்வச்.); பெயரெச்ச வினை அடுக்கி வந்து ஒரு பெயர் கொண்டதற்கு மேற்கோள்; நன். மயிலை. சூ. 354.

1 - 19. "நெல்லரியுமிருந்தொழுவர் என்னும் புறத்தோகைப் பாட்டினுள் 'தெண்கடற்றிரை மிசைப்பாயுந்து' எனவும், 'தண் குரவைச் சீர்தூங்குந்து' எனவும், 'எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து' எனவும், 'முந்நீர்ப்பாயும்' எனவும் செய்யுமென்னும் பெயரெச்சம்அடுக்கி, 'ஓம்பா வீகை மாவேள் எவ்வி, புனலம் புதவின் மிழலை' என்னும் ஒருபொருள் கொண்டு முடிந்தவாறு கண்டுகொள்க; ஆங்குத் 'தாங்கா விளையு ணல்லூர் கெழீஇய' என்னும் பெயரெச்சம் இடைநிலையாய் வந்தது" தொல். வினை. சூ. 36, சே.; ந.; இ. வி. சூ. 328, உரை.

20. மூ. ஐங்குறு. ௯: 4.

21. தொன்முதிர்வேளிர்-அகத்தியமுனிவரால் கொண்டுவரப்பட்ட பழமை முதிர்ந்தவேளிர்; இது, "துவராபதிப்போந்து நிலங்கடந், நெடுமுடி யண்ணல்வழிக்கண் அரசர் பதினெண்மரையும், பதினெண்குடி வேளிருள்ளிட்டாரையும்..........கொண்டுபோந்து", "மலய மாதவன் நிலங்கடந்த நெடிமுடியண்ணலுழை நரபதியருடன் கொணர்ந்த பதினெண்வகைக் குடிப்பிறந்தவேளிர்" (தொல். பாயிரம், ந.; ஷை. அகத். சூ. 32, ந.) எனப் போந்துள்ள வாக்கியங்களால் விளங்குகின்றது.

பி - ம். *பாயுந்து. †போரிற்.

குப்பை நெல்லின் முத்தூறு தந்த
கொற்ற நீள்குடைக் கொடித்தேர்ச் செழிய
நின்று நிலைஇயர்நின் னாண்மீ னில்லாது
படாஅச் செலீயர்நின் பகைவர் மீனே
நின்னொடு, தொன்று மூத்த வுயிரினு முயிரொடு
நின்று மூத்த யாக்கை யன்னநின்
நாடுகுடி மூத்த விழுத்திணைச் சிறந்த
வாளின் வாழ்நர் தாள்வலம் வாழ்த்த
இரவன் மாக்க ளீகை நுவல
ஒண்டொடி மகளிர் பொலங்கலத் தேந்திய
தண்கமழ் தேறன் மடுப்ப மகிழ்சிறந்
தாங்கினி தொழுகுமதி பெரும வாங்கது
வல்லுநர் வாழ்ந்தோ ரென்ப தொல்லிசை

---

22. 'தரல்' படர்க்கைக்கண்வந்ததற்கு மேற்கோள்; நன். மயிலை. சூ. 380.

24. "'நெல்லரியு மிருந்தொழுவர்' என்னும் புறப்பாட்டினுள், 'நின்று நிலைஇயர் நின்னாண்மீன்' என அவன் நாளிற்குமுற்கூறியவாற்றான் ஓர் இடையூறுகண்டு அவன்கண் அன்பால் அஞ்சி ஓம்படை கூறியது." (தொல். புறத். சூ. 36, ந.) 24-5. புறநா. உஉக: 10 - 12.

29. "அஞ்சினர்க் களித்தலும் வெஞ்சின மின்மையும், ஆணணி புகுதலு மழிபடை தாங்கலும், வாண்மீக் கூற்றத்து வயவ ரேத்த" (சிறுபாண். 210 - 12); "ஒன்னா ரோட்டிய செருப்புகன் மறவர், வாள் வலம் புணர்ந்தநின் றாள்வலம் வாழ்த்த" (மதுரை. 726 - 7); "தாள்

வலம்படவென்று" கலி. ௬௧: 13.

30. "வரையாது கொடுத்தலும், பரிசில் வாழ்க்கைப் பரிசில ரேத்த" சிறுபாண். 217 - 8.

32. தண்கமழ்தேறல்: "தண்கமழ் நறுந்தேறல்" (கலி. எ௩: 4); "தண்ணற வுண்களி" சிற். 122.

31 - 3. புறநா. ௯௬: 18 - 21; ௬௬எ: 6 - 7; "மகிழ்.......மகளிர், போக்கில் பொலங்கல நிறையப் பல்கால், வாக்குபு தாத்தர" (பொருந. 84 - 7); "இலங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய, மணங்கமழ் தேறன் மடுப்ப நாளும், மகிழ்ந்தினி துறைமதி பெரும" (மதுரை. 779 - 81); "பூங்குழை மகளிர் பொலங்கலத் தேந்திய, தேங்கமழ் தேறலொடு தெளிமது மடுப்பினும்" பெருங். உ. 14: 60 - 61.



35 மலர்தலை யுலகத்துத் தோன்றிப்
பலர்செலச் செல்லாது நின்றுவிளிந் தோரே.

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக்காஞ்சி
அவனை *மாங்குடிகிழார் பாடியது.

இ - ள்.—நெல்லையரியும் பெரிய உழவர் செஞ்ஞாயிற்றினது வெயிலை வெறுப்பின் தெளிந்த கடற்றிரையின்மேலே பாயும் திண்ணிய திமிலையுடைய வலிய நுளையர் வெம்மையையுடைய மதுவையுண்டு

மெல்லிய குரவைக்கூத்திற்கு ஏற்ற தாளத்தையாடும் கடற்றுவலையாலே தழைத்த் தேன்பரந்த புன்னையினது மெல்லிய பூங்கொத்தாற் செய்யப் பட்ட மாலையைச் சூடிய ஆடவர் விளங்கிய வளையையுடைய மகளிர்க்கு முதற்கைகொடுக்கும் வண்டுமொய்ப்ப மலர்ந்த குளிர்ந்த நறிய கானலிடத் துக் கடன்முள்ளிப்பூவாற் செய்யப்பட்ட மாலையையுடைய விளங்கிய வளையையணிந்த மகளிர் பெரிய பனையினது நுங்கின் நீரும் பொலிவினை யுடைய கரும்பினது இனியசாறும் உயர்ந்தமணலிடத்துத் திரண்ட தெங்கினது இனிய இளநீருடனே கூடக் கலந்து இம்மூன்று நீரையும் உண்டு மூன்று நீரையுடைய கடற்கண்ணே பாயும் பரிக்கவொண்ணுத பலமக்களும் வாழ்தலையுடைய நல்ல ஊர்கள்பொருந்திய பொருளைப் பாது காவாத வண்மையையுடைய பெரிய வேளாகிய எவ்வியது நீர்வழங்கும் வாய்த்தலைகளையுடைய மிழலைக்கூற்றத்துடனே வயலிடத்துக் கயலை மேயும் நாரை போரின்கண்ணே உறங்கும் பொன்னணிந்த யானையை யுடைய பழைய முதிர்ந்த வேளிரது திரண்ட நெல்லினையுடைய முத்தூற் றுக் கூற்றத்தைக்கொண்ட வெற்றிபொருந்திய உயர்ந்த குடையினையுய கொடியாற்பொலிந்த தேரினையும்உடைய செழிய! நின்றுநிலைப்பதாக நினது நாளாகியமீன்; நில்லாது பட்டுப் போவதாக நின்பகைவருடைய நாளாகியமீன்; நின்னொடு பழைதாய் முதிர்ந்த உயிரினும் உயிருடனே நின்று முதிர்ந்த உடம்புபோன்ற நினது வெற்றிக்குடியோடு மூத்த சீரிய குடியின்கட் சிறந்த வாட்போராலே வாழ்வார் நினது முயற்சிவலியை வாழ்த்த இரக்கும் பரிசிலர் நின்வண்மையைச் சொல்ல ஒள்ளிய வளையை யுடைய மகளிர் பொற்கலத்தின்கண் ஏந்திய குளிர்ந்த நறுநாற்றத்தை யுடைய மதுவை மடுப்ப அதனையுண்டு மகிழ்ச்சிமிக்கு அப்படி இனிதாக

---

34 - 6. புறநா. ௧௬௮: 1 - 5, ௬௬௬: 1 - 5; "மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா, தேந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய், வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனும், ஈந்தவ ரல்ல திருந்தவர் யாரே" கம்ப. வேள்வி. 30.

நடப்பாயாக; பெரும! அவ்வொழுக்கம்வல்லவரை வாழ்ந்தோரென்று சொல்லுவர் அறிவுடையோர்; பழைய புகழ்தான், பரந்த இடத்தையுடைய உலகத்தின்கண்ணே பிறந்து பரக்க ஒழுகாது நின்றுமாய்ந்தோர் பலர்; அவர் வாழ்ந்தோரெனப்படாராதலான்.—எ - று.

மேல் எண்ணப்பட்ட பெயரெச்சமூன்றும் மிழலையென்னும் பெயர் கொண்டன; அவை உம் உந்தாய் நின்றன.

முந்நீர்ப்பாயும் நல்லூரென்க.

உயிரினும் சிறந்த, ஆக்கையன்ன வாளின்வாழ்நரெனக் கூட்டி உயிர்க்கு யாக்கைபோலவும் யாக்கைக்கு உயிர்போலவும் இன்றியமையாது இரண்டுமாயிருக்கின்ற வாளின் வாழ்நரென்க.

நின்குடியொடுமூத்த நின்யாக்கையன்ன விழுத்திணைக்கண் உளராய் நின்னுயிரினுஞ்சிறந்த வாளின்வாழ்நரெனக் கூட்டினும் அமையும்.

செழிய! நின் நாண்மீன் நின்றுநிலைஇயர்; நின்பகைவர்மீன் படாஅச்செலீஇயர்; உலகத்துத் தோன்றி இசைசெலச் செல்லாது விளிந்தோர் பலர்; அவர் வாழ்ந்தோரெனப்படார்; ஆதலால், பெரும! வாழ்த்த நுவல மடுப்ப மகிழ்சிறந்து இனிது ஒழுகு; அது வல்லுநரை வாழ்ந்தோரென்பவெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

தாங்காவிளையுளென்பதூஉம் பாடம்.

ஆங்கது: ஒருசொல்; ஆங்கு, அசைநிலையுமாம்.

இனி, தொல்லிசையையுடைய உலகத்துத் தோன்றி மேற்சொல்லப்பட்ட நன்மைகள் தமக்குப் பரக்க ஒழுகாது நின்று விளிந்தோர் பலரென உரைப்பாரும் உளர்.

இது, நிலையாமை கூறி, இனிது ஒழுகென்றமையாற் பொருண்மொழிக்காஞ்சி. (௨௪)

---

(௨௫) மீன்றிகழ் விசும்பிற் பாயிரு ளகல
ஈண்டுசெலன் மரபிற் றன்னியல் வழாஅ
துரவுச்சினந் திருகிய வுருகெழு ஞாயிறு
நிலவுத்திகழ் மதியமொடு நிலஞ்சேர்ந் தாஅங்

---

3 - 4. சேர சோழர்க்கு ஞாயிறும் மதியமும் உவமை; புறநா. ௫௬: 4 - 6; ௧௬௭: 13 - 4.





குடலருந் துப்பி னொன்றுமொழி வேந்தரை
அணங்கரும் பறந்தலை யுணங்கப் பண்ணிப்
பிணியுறு முரசங் கொண்ட காலை
நிலைதிரி பெறியத் திண்மடை கலங்கிச்
சிதைதலுய்ந் தன்றோ நின்வேல் செழிய
முலைபொலி யாக முருப்ப நூறி

மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்
ஒண்ணுதன் மகளிர் கைம்மை கூர
அவிர றல் கடுக்கு மம்மென்
குவையிருங் கூந்தல் கொய்தல் கண்டே.

---

5. ஒன்றுமொழி: புறநா. எக - ரு; "தன்பான் மனையா ளயலான் றலைக் கண்டபின்னும், இன்பா லடிசிற் கிவர்கின்றகைப் பேடி போலாம், நன்பால் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர்பார்ப்பார், என்பாரை யோம்பே னெனின்யானவ னாகவென்றான்" (சீவக. 443); "நின்னையறி வன்பெரிது நின்முறையு ளாய, கன்னியையொர் காளை பிற னெய்துவது கண்டு, மன்னுமண வில்லுள்வயி றாவயில் இன்றாய்க், கின்னுமுள வோபுதிய வென்றுமிக நக்கான்" (சூளா. அரசியல். 156); "வினையிலென் மகன்றனுயிர் வேறுசெய் வித்தோனைக், குனிசிலையி னாயுயிர் கோறல்புரி யேனேல், மனைவியய லான்மருவல் கண்டுமவன் கையாற், றினையளவு மோர்பொழுது தின்றவனு மாவேன்" வி. பா. பதின்மூன்றாம்போர். 184.

5 - 7. வென்ற அரசர் பகைவருடைய முரசைக் கவர்ந்து கொள்ளு தல் மரபு; புறநா. உசு : 6 - 7, எஉ : 8 - 9, களக: 4; "அரசுபட வமருழக்கி, முரசுகொண்டு களம்வேட்ட........வேந்தே", "வேந்தர், இன்னிசை முரச மிடைப்புலத் தொழிய.........புறம்பெற்று" (மதுரை. 128 - 30, 348 - 50); "எழுவர் நல்வல மடங்க வொருபகல், முரசொடு வெண்குடை யகப்படுத்து" அகநா. ௬௬.

8. மடை - மூட்டுவாய்; புறநா. கடும.

8 - 9. தலைவனது வேலினைப் புகழ்ந்ததற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ௫. 17, இளம்.

10. உருப்ப: புறநா. உ௬எ: 10.

11. மெய் - அறிவு; "விதமுறு வடிவங் கண்டே மெய்யொருப்

பட்ட தில்லை" (திருவால. ௬௦: 31.) பூசல் - அழுகையாரவாரம்; "கரையா தேனிடு பூசல் கண்டுமொன், றுரையா" கம்ப. கிட்கிந்தா. அரசியல். ௮.



திணை - வாகை; துறை - அரசவாகை.

அவனைக் கல்லாடனார் பாடியது.

இ - ள்.—மீன்விளங்கும் வானத்தின்கண் பரந்த இருள் நீங்க ஓங்கிச் செல்லுதல் முறைமையையுடைய தனது தன்மையிற் பிழையாது வலிய வெம்மை [1]முறுகிய உட்குப்பொருந்திய ஞாயிறு நிலாவிளங்கும் திங்களுடனே நிலத்தைப் பொருந்ினாற்போலப் பகைத்தற்கரிய வலியையுடைய வஞ்சினங்கூறிய இருவேந்தரை வருத்துதற்கரிய போர்க்களத்தின்கண்ணே மாயப் பொருது அவருடைய வாரார்ப் பிணிப்புற்ற முரசத்தைக் கொண்டகாலத்து நின்றநிலையிலே நின்று நின்னைச் சூழ்ந்துகொண்ட வீரரைப் புரிந்தெறிதலால் திண்ணிய கொளுத்துக்கலங்கிக் கெடுதல் பிழைத்தது, நினது வேல்; செழிய! மூலைபொலிந்தமார்பம் அழல அறைந்துகொண்டு அறிவுமயங்கியுற்ற அளவற்ற அழுகையாரவாரத்தையுடைய ஒண்ணுதல்மகளிர் கைம்மைநோன்பிலே மிக விளங்கும் அறலை யொக்கும் அழகிய மெல்லிய குவிந்த கரிய மயிரினைக் கொய்த பரிசைக் கண்டு.—எ - று.

செழிய! மகளிர் கூந்தல்கொய்தல்கண்டு நின்வேல் சிதைதல்உய்ந்ததெனக் கூட்டுக.

ஈண்டுச் செலன்மரபெனவும், ஐம்பாற்குவையிருங்கூந்த லெனவும் பாடமோதுவாருமுளர்.

உய்ந்தன்றே ; ஓ : அசைநிலை. (உடு)

---

[1]முறுகிய - மிகுத்த; சீவக. 1503; காஞ்சிப். திருநகர். 1.

---

(உகூ) நளிகட லிருங்குட்டத்து
வளிபுடைத்த கலம்போலக்
களிறுசென்று களனகற்றவும்
களனகற்றிய வியலாங்கண்
ஒளிறிலைய வெஃகேந்தி
அரைசுபட வமருழக்கி

---

1. புறநா. உ0: 1.

1 - 3. புறநா. கரு: 5, அடிக்.; கலி. கருஉ: 5 - 8.

5. ஒளிறுதல் - விளங்குதல் ; புறநா. களஎ: 1 ; "ஒளிறுவா விழுப்புண்" (நெடுநல். 172) ; "ஒளிறுவாண் மறவரும்" மணி. க:

6. மு. மதுரை. 128.



உரைசெல முரசுவௌவி
முடித்தலை யடுப்பாகப்

புனற்குருதி யுலைக்கொளீஇத்
தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சியின்
அடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய
ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்ற மாக
மன்ன ரேவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே
நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு

---

7. புறநா. உ௬: 5 - 7, அடிக்.

8 - 10. "ஆண்டலை யணங்கடுப்பின், வயவேந்த ரொண்குருதி, சினத்தீயிற் பெயர்புபொங்க........தொடித்தோட்கை துடுப்பாக, ஆடுற்ற வூன்சோறு" (மதுரை. 29 - 35); "முடித்தலை யடுப்பிற் பிடர்த் தலைத் தாழித், தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன்சோறு" சிலப். உ௬ : 242 - 3.

11. களம் வேட்டலென்பது, பலிகொடுத்தலென்றும் களவேள்வி செய்தலென்றும் வழங்கும்; புறநா. ௩௭உ: 12; "கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே" (முருகு. 100); "அரசுகெட....களம் வேட்ட, வடுதிற லுயர் புகழ்வேந்தே" (மதுரை. 128 - 30;) "பாண்டியன் சோழற்காய்ந்து, பெருங்கள வேள்விசெய்த பீடுடைக் காட்டு நாட்டு" (திருவால. சச: 54); "பிடித்தாடி யன்ன பிறழ்பற்பே யாரக், கொடித்தானை மன்னன் கொடுத் தான் - முடித்தலைத், தோளொடு வீழ்ந்த தொடிக்கை துடுப்பாக, மூளையஞ் சோற்றை முகந்து" (பு. வெ. 160.) அரசன் வேட்டதற்கு மேற்கோள்; தொல். மரபு. சூ. 72, பேர்.

12. கொள்கை - விரதம்; "தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்" முருகு. 89.

13. புறநா. கள: 1 - 4, அடிக்.

12-5. "களிகட லிருங்குட்டத்தென்ற புறப்பாட்டில், ஆன்றகேள்வி ......வாள்வேந்தே என வரும் அடிகளில், பார்ப்பார் வேட்பித்தவாறும் அரசன் வேட்டவாறும் கண்டுகொள்க" (தொல். புறத்திணை. சூ. 16, இளம்.); "களிகடலிருங்குட்டத்து என்னும் புறப்பாட்டினுள் அந்தணன் வேட்பித்தலும் அரசன் வேட்டலும் வந்தது" ஷை. ஷை. ஷை. 20, ந.

16. "நோற்றோர் மன்ற தோழி" குறுந். ௬௪௪.



மாற்றா ரென்னும் பெயர்பெற்
றாற்றா ராயினு மாண்டுவாழ் வோரே.[1]

திணையும் துறையும் அவை.

அவனை மாங்குடிகிழார் பாடியது.

இ - ள்.—பெரிய கடலின்கட் பெரிய ஆழத்திடத்துக் காற்றாற் புடைக்கப்பட்ட [2]மரக்கலம் நீரைக் கிழித்து ஓடுமாறுபோலக் களிறு சென்று போர்க்களத்தை இடமகலச்செய்ய அவ்வாறு களமகலச்செய்த பரந்த இடத்தின்கண் விளங்கிய இலையையுடைய வேலையேந்தி வேந்துபடப் போரைக் கலக்கிப் புகழ் பரக்க அவர்முரசைக் கொண்டு முடித்தலையை அடுப்பாகக்கொண்டு குருதிப்புனலாகிய உலையின்கண் தசையும் மூளையுமுதலாயினவற்றைப்பெய்து வீரவளையையுடைய தோளாகிய துடுப்பால் துழாவி அடப்பட்ட உணவால் அடுகளத்தின்கட் களவேள்விவேட்ட

கொல்லும் போரையுடைய செழிய! அமைந்த கேள்வியையும் ஐம்புலனும் அடக்கிய விரதங்களையும் நான்கு வேதத்தையுமுடைய அந்தணர் சுற்றமாக வேந்தர் அதற்கேற்ப ஏவல் செய்ய நிலைபெற்ற வேள்வியைச் செய்து முடித்த வாய்த்தவாளினையுடைய வேந்தே! தவஞ்செய்தார், யாவர்க்குந் தெளிவாக, நின்னுடைய பகைவர்; நினக்குப் பகைவரென்னும் பெயரைப் பெற்று நின்னொடு போர்செய்தற்கு மாட்டாராயினும் அத்துறக்கத்து வாழ்வோர்.—எ - று.

களனகற்றவுமென்னும் உம்மை, அசைநிலை.

மன்னியவேள்வியென்றது, களவேள்வியொழிந்த வேள்விகளை.

செழிய ! வேந்தே ! ஆற்றாராயினும், ஆண்டுவாழ்வோராகிய நின் பகைவர் மாற்றாரென்னும் பெயர்பெற்ற நோற்றோரெனக் கூட்டுக. (உசு)

---

16 - 8. "புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க மென்னுமீ தருமறைப் பொருளே" கம்ப. நகர. 5.

[1] மு. அரசன் களவேள்வி வேட்டதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 17, இளம்.; "நளிகடலிருங்குட்டத்து என்னும் புறப் பாட்டுப் பலிகொடுத்தது" ஷை. ஷை. சூ. 21, ந.

[2] "வங்கம்போழ் முந்நீர்" பு. வெ. 185.

---

(உஎ) சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ்

நூற்றித ழலரி னிரைகண் டன்ன

வேற்றுமை யில்லா *விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந் தோரை யெண்ணுங் காலை
உரையும் பாட்டு முடையோர் சிலரே
மரையிலை †போல மாய்ந்திசி னோர் பலரே
புலவர் ‡பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவ னேவா வான வூர்தி
எய்துப வென்பதஞ் செய்வினை முடித்தெனக்

---

3. 'விழுமம்' சிறப்பாகிய குறிப்பையுணர்த்துதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 57; சே.; டை. டை. டை. 55, ந.; இ. வி. சூ. 282, உரை.

1 - 4. சாதிக்கேற்ற உவமையென்பர்; தண்டி. சூ. 88, உரை; இ. வி. சூ. 639, உரை.

5. புறநா. கசுரு: 1 - 3; "நல்லிசை நிலைஇ", "நல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்து" (பதிற். கச, அசு); "தொலையா நல்லிசை யுலக மொடு நிற்ப", "செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட" (மலைபடு. 70, 388); "மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும்......சாவாவுடம்பெய்தினார்" (திரி. 16); "ஒருவன திரண்டி யாக்கை யூன்பயி னரம்பின் யாத்த, வுருவ மும் புகழு மென்றாங் கவற்றினுழ்காத்துவந்து, மருவிய வுருவ மிங்கே மறைந்துபோ மற்ற யாக்கை, திருவமர்ந் துலக மேத்தச் சிறந்துபின் னிற்கு மன்றே", "பொன்று மிவ்வுட லின்பொருட், டென்று நிற்குமிரும் புக, ழின்று நீர்கழிக் கீர்களாற், குன்றின் மேற்குடை வேந்திர்காள்" (சூளா. சீயவதை. 204; டை. அரசியல். 226.) இவ்வடியை, "புகழ்தான் உரையும் பாட்டுமென இருவகைப்படும்; அவற்றுள், உரைப்பார் உரைப்

பவையென எல்லார்க்குமுரிய வழக்கினையே எடுத்தாராயினும் இனம் பற்றிப் புலவர்க்கேயுரிய செய்யுளும் கொள்ளப்படும்; படவே, பாடுவோர் பாடுவனவெல்லாம் புகழாமென்பதூஉம் பெற்றாம்'' (குறள், 232) என உரைநடையாக அமைத்தருளினர் பரிமேலழகர்.

6, ''மரையிலையின் மாய்ந்தார் பலர்'' நாலடி. 359.

8. ''ஊரா நற்றேர்'' மணி. சு : 39.

7 - 9. புறநா. ௫௦ : 14 - 5; ''புகழுடம்பான் இவ்வுலகும் புத்தே ளுடம்பான் அவ்வுலகும் ஒருங்கே எய்தாமையின் 'புலவரைப் போற்றாது' என்றார்; அவன் இரண்டுலகும் ஒருங்கெய்துதல், 'புலவர் பாடும்... முடித்து' எனப் பிறாலுஞ் சொல்லப்பட்டது; ''புலவர் பாடும் புகழுடை யோர்...எய்துவாராதலின் துறக்கச்செலவு சொல்லவேண்டாவாயிற்று'' குறள். 234, 970, பரிமேல்.

பி - ம். *விழுக்குடிப். † போன்மாய்ந்திசினோர். ‡ பாடுபுகழ்.



கேட்ப லெந்தை சேட்சென்னி நலங்கிள்ளி
தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும்
அறியா தோரையு மறியக் காட்டித்
திங்கட் புத்தே டிரிதரு முலகத்து
வல்லா ராயினும் வல்லுந ராயினும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி

அருள வல்லே யாகுமதி யருளிலர்
கொடாமை வல்ல ராகுக
கெடாத துப்பினின் பகையெதிர்ந் தோரே.

திணை - பொதுவியல் ; துறை - முதுமொழிக்காஞ்சி.

[1]சோழன்நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணன்சாத்தனார் பாடியது.

இ - ள்.—சேற்றின்கண்ணே வளரும் தாமரைபூத்த ஒள்ளிய நிறத்தை உடைத்தாகிய நூறுகிய இதழையுடைய மலரினது நிரையைக் கண்டாற்

---

11 - 4. புறநா. அ-ஆம் செய்யுளின் அடிக்குறிப்பைப் பார்க்க. "அங்கண்மா ஞாலத்தை விளக்கு மாய்கதிர்த், திங்களு மொருமுறை வளருந் தேயுமால்" கம்ப. சடாயுவுயிர். 196.

15. புறநா. ௯௪: 1.

17 - 8. அருளும் கொடையுமுடையோர் தம்பகையை வெல்வாரென்பதை, "திருமகற் பெற்றெனச் செம்பொற் குன்றெனப், பெருநல நிதிதலை திறந்து பீடுடை, யிருநிலத் திரவலர்க் கார்த்தி யின்னணஞ், செருநிலம் பயப்புறச் செல்வன் செல்லுமே" (சீவக. 331.) என்னுஞ்செய்யுளாலும், அதனுரையில், நச்சினார்க்கினியர் 'அருளிலர், கொடாமை வல்லராகுக' என மேற்கோள்காட்டியிருத்தலாலும் அறிக. இது ககரவீற்று வியங்கோள் பலர்பாலில் வருதற்கும் (நன். சூ. 337, மயிலை.), வியங்கோள் வாழ்த்துதற்பொருளில் வருதற்கும் (இ. வி. சூ. 239, உரை) மேற்கோள்.

18 - 9. கலி. கக : 1 - 4.

[1]இப்பாட்டின் 10-ஆம் அடியில், தலைவன்பெயர் அமைந்திருத்தல் காண்க.

பி - ம். *அருளி.



போன்ற ஏற்றத் தாழ்வில்லாத, சிறந்த குடியின்கட்பிறந்து [1]வீற்றிருந்த வேந்தரை எண்ணுங்காலத்துப் புகழும் பாட்டும் உடையோர் சிலர்; தாமரையினது இலையையொப்பப் பயன்படாது மாய்ந்தோர் பலர்; புலவராற் பாடப்படும் புகழையுடையோர் ஆகாயத்தின்கண் பாகனாற் செலுத்தப்படாத விமானத்தைப் பொருந்துவாரென்று சொல்லுவார் அறிவுடையோர், தாம் செய்யும் நல்வினையைமுடித்தென்று சொல்லக் கேட்பேன்; என்னுடைய இறைவ! சேட்சென்னி! நலங்கிள்ளி! வளர்ந்த தொன்று பின் குறைதலுண்டாதலும், குறைந்ததொன்று பின் வளர்தலுண்டாதலும், பிறந்ததொன்று பின் இறத்தலுண்டாதலும், இறந்த தொன்று பின் பிறத்தலுண்டாதலும் கல்விமுகத்தான் அறியாத மடவோரையும் அறியக்காட்டித் திங்களாகிய தெய்வம் இயங்குகின்ற தேயத்தின்கண் ஒன்றை மாட்டாராயினும் வல்லாராயினும் வறுமையான் வருத்தமுற்று வந்தோரது உண்ணாத மருங்கைப் பார்த்து அவர்க்கருளி வழங்க வல்லையாகுக; அருளிலராய்க் கொடாமையை வல்லராகுக, கெடாத வலியையுடைய நினக்குப் பகையாய் மாறுபட்டோர்.—எ - று.

நூற்றிதழலரின் நிரைகண்டன்ன உரையும் பாட்டும் உடையோர் சிலரென இயையும்.

நிரைகண்டன்ன விழுத்திணையென்றுரைப்பினும் அமையும்.

அருளிலர் கோடாமைவல்லாருக வென்றதனாற் பயன், அவை யுடையோர் தத்தம் பகைவரை வெல்வாராதலால், பகையெதிர்ந்தோர் அவை இலராக வென்பதாம்.

செய்வினை முடித்து வானவூர்தி எய்துபவென இயையும். (உஎ)

---

[1]வீற்றிருத்தல் - கவலையின்றியிருத்தல்; "வீற்றிருந் தவருங் கற்றார்" (சீவக. 1676); "தமிழ்ப்புலவ, ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்" திருவள்ளுவமாலை, 16.

---

(உஅ) சிறப்பில் சிதடு முறுப்பில் பிண்டமும்
கூனுங் குறளு மூமுஞ் செவிடும்
மாவு மருளு முளப்பட வாழ்நர்க்
கெண்பே ரெச்ச மென்றிவை யெல்லாம்

---

2. மு. சிலப். ௫ : 118; மணி. கஉ : 97.

1 - 4. "கூனொடு வெதிரே பங்கு குருடுபே ரூமை யானோ, டூனம தடைந்த புன்மை யாக்கையோ டொழியு மம்மா" (கந்த. பானுகோபன்



பேதைமை யல்ல தூதிய மில்லென

முன்னு மறிந்தோர் கூறின ரின்னும்
அதன்றிற மத்தையா னுரைக்க வந்தது
வட்ட வரிய செம்பொறிச் சேவல்
ஏனல் காப்போ ருணர்த்திய கூஉம்
கானத் தோர்நின் றெவ்வர் நீயே
புறஞ்சிறை மாக்கட் கறங்குறித் தகத்தோர்
புய்த்தெறி கரும்பின் விடுகழை தாமரைப்
பூம்போது சிதைய வீழ்ந்தெனக் கூத்தர்
ஆடுகளங் கடுக்கு மகநாட் டையே
அதனால், அறனும் பொருளு மின்பமு மூன்றும்
ஆற்றும் பெருமநின் செல்வம்
ஆற்றா மைநிற் போற்றா மையே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—மக்கட்பிறப்பிற் சிறப்பில்லாத குருடும், வடிவில்லாத தசைத்திரளும், கூனும், குறளும், ஊமும், செவிடும், மாவும், மருளும் உளப்பட உலகத்து உயிர்வாழ்வார்க்கு எட்டுவகைப்பட்ட பெரிய எச்ச

---

வதை. 24); "குறளொடு செவிடு மூங்கை கூன்மருள் குருடு மாவே, உறுமுறுப் பில்லாப் பிண்ட மோதிய வெண்மெய் யெச்சம்" சூடாமணி. கஉ : 94.

10. "சூழிருஞ் சடைக டாங்கிச் சுடர்முடி துறந்து கான்போய், வீழ்சரு கருந்தி நீவிர் மெய்த்தவம் புரிதல் வேண்டும்" நைடதம், போர் புரி. 3.

12. புய்த்தல்: "புய்ந்துகால் போகி" (களவழி. 39); "கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள்" (கலி. ௬அ); "கோட்டினிற் குத்திக் குடர் புய்த் துறுத்து" மணி. கரு : 47.

13. பூ என்பது பொலிவினை உணர்த்தலால் 'பூம்போது' பண்புத் தொகையுள் அடங்குமென்பர்; நன். சூ. 397, மயிலை.

12 - 4. "நீலத் தன்ன பைம்பயிர் மிசைதொறும், வெள்ளி யன்ன வொள்வீ யுதிர்ந்து, சுரிமுகிழ் முசுண்டையொடு முல்லை தாஅய், மணி மருணெய்த லுறழக் காமர், துணிநீர் மெல்லவற் றொய்யிலொடு மலர, வல் லோன் றைஇய வெறிக்களங் கடுப்ப" (மதுரை. 279 - 84); "பல்லிதழ் தாஅய், வெறிக்களங் கடுக்கும் வியலறை" மலைபடு. 149 - 50.





மென்று சொல்லப்பட்ட இவையெல்லாம் பேதைத்தன்மையையுடைய பிறப்பாவதல்லது இவற்றாற் பயனில்லையென முற்காலத்தும் அறிந்தோர் சொன்னார்; இன்னமும் அவ்வூதியத்தின் பாகுபாட்டை யான் சொல்ல வந்தது, வட்டமாகிய வரியையுடைத்தாகிய செம்பொறியையுடைய காட்டுக்கோழிச்சேவல் தினைப்புனங் காப்போரைத் துயிலுணர்த்துவ தாகக் கூவும் காட்டின்கண் உள்ளோர், நின்னுடைய பகைவர்; நீதான் வேலிப்புறத்து நின்று வேண்டிய மாக்கட்கு அறத்தைக் கருதி, அகத்துள் ளோர்தாம் பிடுங்கியெறியும் கரும்பாகிய போகடப்பட்ட கழை வாவி யகத்துத் தாமரையினது பொலிந்த பூச் சிதற வீழ்ந்ததாக, அது கூத்தர் ஆடுகளத்தையொக்கும் உள்ளாகிய நாட்டையுடையை; ஆதலான், அறனும்

பொருளும் இன்பமும் என்னப்பட்ட மூன்றும் செய்வதற் குதவும் பெரும! நினது செல்வம் உதவாதொழிதல் நின்னைப் பாதுகாவாமை.—எ - று.

பிண்டமென்பது, மணைபோலப் பிறக்குமது. மாவென்பது, விலங்கு வடிவாகப் பிறக்குமது. மருளென்பது, அறிவின்றியே மயங்கியிருக்கு மது.

ஊதியமென்பது, அறம்பொருளின்பங்களை; அன்றி அறமென் பாரும் உளர்.

நிற்போற்றாமையென்ற கருத்து, சிதடுமுதல் அறிவின்மை பிறப் பொடு கூடாதவாறுபோல நின்செல்வமும் அறமுதலியன செய்தற்கேற் றிருப்பச் செய்யாமையாகிய அறிவின்மை, மக்கள் யாக்கையிற் பிறந்தும் பயனில்பிறப்பாகப் பண்ணுதலால் நின்க்கு வரும் பொல்லாங்கைப் போற்றாமையென்பதாம்.

கானத்தோர் நின்பகைவரென்றவதனாற் பகையின்மை தோற்றி நின்றது.

மாவும் மருளும் உளப்படச் சிதடுமுதலாகப் பிறப்பொடுகூட்டப்படாத பெரிய எச்சமெனப்பட்ட எட்டுமெனக் கூட்டியுரைப்பினும் அமையும்.

இஃது அறஞ்செய்யாதானை அறஞ்செய்கவெனக் கூறியவாறு.

அதன்திறமென்பதற்கு அப்பேதைமையென்றாக்கி, அஃது உண்டா னால் வரும் பொல்லாங்கும், அதுபோனால் வரும் நன்மையுமென் றுரைப் பாரும் உளர். (உஅ)

---

(உகூ) அழல்புரிந்த வடர்தாமரை
ஐதடர்ந்த நூற்பெய்து

---

1. புறநா. கக : 16.

புனைவினைப் பொலிந்த *பொலநறுந் தெரியல்
பாறுமயி ரிருந்தலை பொலியச் சூடிப்
பாண்முற் றுகநின் னாண்மகி ழிருக்கை
பாண்முற் றொழிந்த பின்றை மகளிர்
தோண்முற் றுகநின் சாந்துபுல ரகலம், ஆங்க
முனிவின் முற்றத் தினிதுமுரா சியம்பக்
கொடியோர்த்தெறுதலுஞ் செவ்வியோர்க்களித்தலும்
ஒடியா முறையின் மடிவிலை யாகி
நல்லத னலனுந் தீயதன் றீமையும்
இல்லை யென்போர்க் கினனா கிலியர்
நெல்விளை கழனிப் படுபுள் ளோப்புநர்
ஒழிமடல் விறகிற் கழிமீன் சுட்டு
வெங்கட் டொலைச்சியு மமையார் தெங்கின்
இளநீ ருதிர்க்கும் வளமிகு நன்னாடு
பெற்றன ருவக்குநின் படைகொண் மாக்கள்
பற்றா மாக்களிற் பரிவுமுந் துறுத்துக்
கூவை துற்ற நாற்காற் பந்தர்ச்

---

3. பொலமென்னுஞ் சொல் பிறகணத்து மகரங்கெட்டு முடிதலுக்கு மேற்கோள்; தொல். புள்ளிமயங்கு. சூ. 61, ந.

5. நாண்மகிழிருக்கை - காலையில் யாவரும் தன்னைக் காணும்படி

நாட்சிக்கு எளியனாய் வீற்றிருக்கை; இது நாளவையென்வும் கூறப்படும்; புறநா. ௫௪ : 3; ௧௨௬ : 1.

1 - 5. புறநா. ௧௧ : 11 - 7, அடிக். ௬௧௧ : 14 - 5; ௬௬௪: 1 - 3; "எரியகைந் தன்ன வேடி ருமரை, சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி, நூலின் வலவா நுணங்கரின் மாலை, வாலொளி முத்தமொடு பாடினி யணிய" பொருந. 159 - 62, அடிக்.

11 - 2. இல்லையென்போர் - நாஸ்திகர்; இவ்வடிகளை, 'சிறியவினை மாவது நல்லத னலனுந் தீயதன் றீமையு மில்லென்போரும்.. உள்ளிட்ட குழு' (குறள். ௪௬ - ஆம் அதிகார அவதாரிகை) என உரைநடையாக அமைத்தனர் பரிமேலழகர்; 'அறிவாவது: நல்லதனலனுந் தீயதன் றீமையு முள்ளவாறுணர்தல்' தொல். பொருளியல், சூ. 53, ந.

15. புறநா. ௨௪ : 5.

19. கூவை - மஞ்சளைப்போல்வதொரு புதல்; இது தென்னாட்டுள்ள தி - ம். *பொலனறுந்.



சிறுமனை வாழ்க்கையி னொரீஇ வருநர்க்
குதவி யாற்று நண்பிற் பண்புடை
ஊழிற் றாகநின் செய்கை விழவிற்
கோடியர் நீர்மை போல முறைமுறை
ஆடுநர் கழியுமிவ் வுலகத்துக் கூடிய
நகைப்புற னாகநின் சுற்றம்

இசைப்புற லாகநீ யோம்பிய பொருளே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—எரியால் ஆக்கப்பட்ட தகடாகச் செய்த தாமரைப்பூவுடனே ஐதாகத் தட்டிக் கம்பியாகச்செய்த நூலின்கண்ணேயிட்டு அலங்கரித்த தொழிலாற் பொலிந்த பொன்னானியன்ற நல்லமாலையைப் பாறிய மயிரையுடைய கரியதலை பொலிவுபெறச் சூடிப் பாண்சுற்றம் சூழ்வதாக, நினது நாட்காலத்து மகிழ்ந்திருக்கும் ஓலக்கம்; பாண்சுற்றம் சூழலொழிந்த பின்னர் நினது உரிமைமகளிருடைய தோள் சூழ்வதாக, நின் சாந்து புலர்ந்த மார்பம்; எப்போதும் வெறுப்பில்லாத அலங்காரத்தையுடைய கோயின்முற்றத்தின்கண்ணே இனிதாக முரசு ஒலிப்பத் தீயோரைத் தண்டஞ் செய்தலும் நடுவுநிலைமையுடையோர்க்கு அருள்பண்ணுதலுமாகிய இடையறாத முறைமையாற் சோம்புதலையுடையை யல்லையாகி நல்வினையினது நன்மையும் தீவினையினது தீமையும் இல்லையென்று சொல்லுவோர்க்கு இனமாகாதொழிவாயாக; நெல்விளைந்த வயலிடத்துளதாகிய புள்ளை ஓட்டுவார் வீழ்ந்த பனங்கருக்காகின்ற விறகாற் கழிக்கண் மீனைச் சுட்டு அதனுடனே வெய்ய மதுவை உண்டுதொலைத்தும் அமையாராய்த் தெங்கினது இளநீரை உதிர்க்கும் செல்வமிக்க நல்லநாட்டைப் பெற்று மகிழும் நின்னுடைய படைக்கலம்பிடித்த மாந்தர் நின்னுடைய

---

மலைப்பக்கங்களிற் காணப்படுகின்றது; "நூறொடு குழீஇயின கூவை" (மலைபடு. 137); "பொலிகூவை" மதுரை. 142.

23 - 4. "கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம், போக்கு மதுவிளிந் தற்று" (குறள். 332) என்பது இவ்வடிகளுடன் ஒப்பிடற் பாலது.

22 - 4. விழாக்காலத்துக் கூத்தர்கள் வருதலும் அது முடிந்தபின்பு அவர்கள் வேறிடஞ் செல்லுதலும், "அறாஅ யாண ரகன்றலைப் பேரூர்ச், சாறுகழி வழிநாட் சோறுநசை யுறாது, வேறுபுல முன்னிய விரகறி பொருந" (பொருந. 1 - 3) என்பதனாலும் அறியப்படும்.



பகைவரைப்போல இரக்கத்தை முன்னிட்டுக்கொண்டு கூவையிலேயால்

வேயப்பட்ட நான்குகாலேயுடைய பந்தராகிய சிறிய இல்லின்கண் வாழும் வாழ்க்கையினின்று நீங்கி நின்பால் வருவார்க்கு உதவிசெய்யும் நட்போடு கூடிய குணத்தையுடைய முறைமை யுடைத்தாக, நினது தொழில்; [1]விழவின்கண் ஆடும் கூத்தரது வேறுபட்ட கோலம்போல அடைவடைவே தோன்றி இயங்கி இறந்துபோகின்ற

இவ்வுலகத்தின்கண்

பொருந்திய மகிழ்ச்சியிடத்ததாக, நின்னுடைய கிளை; புகழிடத்ததாக, நீ பாதுகாத்த பொருள்.—எ - று.

நின் நாண்மகிழிருக்கை பாண்முற்றுக; அதன்பின் அகலம் தோள் முற்றுக; நீ மடிவிலையாய் இனனுகாதொழிவாயாக; நின் பற்ருமாக்களைப் போல முற்காலத்துச் சிறுமனை வாழும் வாழ்க்கையின்நீங்கி இப்பொழுது நின்னூடு பெற்று உவக்கும் நின் படைகொண்மாக்கள் வருநர்க்கு உதவி யாற்றும் நண்போடுகூடிய பண்புடைத்தாகிய முறைமையையுடைத்தாக, நின் செய்கை; நகைப்புறனுக நின் சுற்றம்; இசைப்புறனுக நீ ஓம்பிய பொருளெனக் கூட்டுக.

ஒரீஇ (20) யென்பதனை ஒருவவெனத் திரிப்பினும் அமையும்.

நறுமை பொன்னிற்கு இன்றெனினும் தெரியற்கு அடையாய் நின்றது; நன்மையுமாம்.

ஆங்க: அசை.

நகைப்புறனுகவென்று உரைப்பாரும் உளர்.

இதனுற் சொல்லியது: படைகொள்மாக்களும் முறைமுதலாயின தப்பாமற் செய்து இன்புற்றிருக்கும்படி சிறப்புச்செய்யவேண்டுமென்பதாயிற்று.

(உகூ)

---

[1]"ஆடுங் கூத்திய ரணியே போல, வேற்ருே ரணியொடு வந்தீ ரோவென" (மணி. கஉ : 51- 2); "ஆடுங் கூத்தர்போ லாருயி ரொருவழி, கூடிய கோலத் தொருங்குநின் றியலாது" (சிலப். உஅ : 165 - 6) என்பவை இங்கே கருதற்குரியன.

(௩௰) செஞ்ஞா யிற்றுச் செலவுமஞ் ஞாயிற்றுப்
பரிப்பும் பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்
வளிதிரிதரு திசையும்
வறிது நிலைஇய காயமு மென்றிவை

---

4. ஆகாயமென்பது முதற்குறைந்தமைக்கு மேற்கோள்; நன். சூ. 268, மயிலை.



சென்றளந் தறிந்தோர் போல வென்றும்
இனைத்தென் போரு முளரே யனைத்தும்
அறிவறி வாகாச் செறிவினை யாகிக்
களிறுகவு ளடுத்த வெறிகற் போல
ஒளித்த துப்பினை யாதலின் வெளிப்பட
யாங்கனம் பாடுவர் புலவர் கூம்பொடு
*மீப்பாய் களையாது மிசைப்பரந் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலந் தகாஅர்
இடைப்புலப் பெருவழிச் சொரியும்

கடற்பஃ றூரத்த நாடுகிழ வோயே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—செஞ்ஞாயிற்றினது வீதியும், அஞ்ஞாயிற்றினது இயக்கமும், அவ்வியக்கத்தாற் சூழப்படும் பார்வட்டமும், காற்றியங்கும் திக்கும், ஓர் ஆதாரமுமின்றித் தானே நிற்கின்ற ஆகாயமும் என்று சொல்லப்பட்ட இவற்றை ஆண்டாண்டுப் போய் அளந்தறிந்தவர்களைப்போல நாளும் இத்துணையளவை உடையனவென்று சொல்லும் கல்வியையுடையோரு முளர்; அப்பெரியோர் அச்செலவுமுதலாயின அறியும் அறிவாலும் அறியாத அடக்கத்தையுடையையாகி யானை தன் கதுப்பின்கண் அடக்கிய ஏறியுங் கல்லைப்போல மறைத்த வலியையுடையையாதலான், நின்னை விளங்க எப்பரிசு பாடுவர் புலவர்? கூம்புடனே மேற்பூரிக்கப்பட்ட பாயை மாற்றாமல் அதன் மேற்பாரத்தையும் பறியாமல் ஆற்றுமுகத்துப் புகு

---

1 - 6. புறநா. உ0 : 1 - 5 ; "நிலநீர் வளிவிசும் பென்ற நான்கின், அளப்பரி யையே" பதிற். கச : 1 - 2.

8 - 9. "தாய்த்தெறி கடுங்கற் றன்னைக் கவுட்கொண்ட களிறு போல, ஆய்ந்தறி வுடைய ராகி யருளொடு வெகுளி மாற்றி, வேந்தர்தாம் விழைப வெல்லாம் வெளிப்படார் மறைத்தல் கண்டாய்" (சீவக. 2910) என்பதும், 'களிறுகவு ளடுத்த வெறிகற் போல, ஒளித்த துப்பினை என்றார் பிறரும்' (ஷை. ஷை. உரை) என இவ்வடிகளை நச்சினார்க்கினியர் மேற்கோள் காட்டியிருத்தலும், "வேற்றுவ னெறிந்த கல்லைக், காந்தியங் கந்த தாகக் கவுட்கொண்ட களிறு போலச், சேந்தவ ருரைத்த மாற்றஞ் சிந்தையு ளடக்கி வைத்து, காந்தகக் கிழவர் கோமா னயந்தெரி மனத்த னானன்" (சூளா. சியவதை. 94) என்பதும் இங்கே அறியத்தக்கவை.

11. மீமுன் வலிமிக்கதற்கு மேற்கோள்; நன். சூ. 177, மயிலை.

பி - ம். *மிசைப்பாய்.



பெரிய மரக்கலத்தைப் பாதவரும் அளவருமுதலாகிய தகுதியில்லாதோர் தம்புலத்திற்கு இடையாகிய பெருவழிக்கண்ணே சொரியும் கடலால்வரும் பலபண்டத்தையுடைய நாட்டையுடையோய் !—எ - று.

செலவென்றது, செல்லப்படும் வீதியை.

பரிப்பென்றது, இத்துணை நாழிகைக்கு இத்துணையோசனை செல்லுமென்னும் இயக்கத்தை.

பாய் களையாது பரந்தோண்டாதென்பதனால், துறைநன்மைகூறியவாறும்.

பெருங்கலத்தினின்றென ஐந்தாவதாக உரைப்பினும் அமையும்.

துப்பினையாதலிற் புலவர் யாங்கனம் பாடுவரெனக் கூட்டுக. (௩0)

---

(௩௧) சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்
அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல
இருகுடை பின்பட வோங்கிய வொருகுடை
உருகெழு மதியி னிவந்துசேண் விளங்க
நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீயொல் லாயே

நுதிமுக மழுங்க மண்டி யொன்னார்
கடிமதில் பாயுநின் களிறடங் கலவே

1 - 2. குறள், ச - ஆம் அதிகாரத்தின் அவதாரிகையில் இவ் வடிகள் மேற்கோளாகப் பரிமேலழகராற் காட்டப்பட்டுள்ளன.

3 - 4. கலி. க௦௦ : 3 - 4.

1 - 4. "குன்றுயர் திங்கள்போற் கொற்றக் குடையொன்று, நின்றுயர் வாயிற் புறநிலைப்ப - ஒன்றார், விளங்குருவப் பல்குடைகள் வெண்மீன்போற் றோன்றித், துளங்கினவே தோற்றந் தொலைந்து" பெரும்பொருள்விளக்கம்.

5. வேட்டம் - விரும்புதல்; புறநா. ௨௧௪ : 6.

5 - 6. "வென்றே புகழ்புனை வேலண்ண லேயிந்த வெற்பினுள்ள, தன்றே யெனினு மரிவையை யானடி வீழ்ந்திறைஞ்சி, யின்றே திருத்தி யிருந்தழை வாங்குவ னிற்றைக்குநீ, சென்றே வருக சிறுகான் முடியுநின் சிந்தனையே" அம்பிகாபதி. 117.



போரெனிற் புகலும் புனைகழன் மறவர்
காடிடைக் கிடந்த நாடுநனி சேய
செல்வே மல்லே மென்னார் கல்லென்
விழவுடை யாங்கண் வேற்றுப்புலத் திறுத்துக்
குணகடல் பின்ன தாகக் குடகடல்
வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப
வலமுறை வருதலு முண்டென் றலமந்து

*நெஞ்சுநடுங் கவலம் பாயத்

துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே.[1]

திணை - வாகை; துறை - அரசவாகை; மழபுலவஞ்சியுமாம்.

அவனைக் கோவூர்கிழார் பாடியது.

இ - ள்.—சிறப்புடைமுறைமையாற் பொருளும் இன்பமும் அறத்தின்பின்னே தோன்றும் காட்சிபோலச் சேரபாண்டியருடைய இரண்டு குடையும் பின்னாக ஓங்கிய நினது ஒன்றாகிய வெண்கொற்றக்குடை நிறம்

---

9. வீரர்கள் போரின்கண் மிக்க விருப்பமுடையவரென்பது, புறநா. கூஅ: 11 - 3, அகூ : 7 - 9, என்பவற்றாலும், "மண்டமர் நசையொடு கண்படை பெறாஅது" (முல்லை. 67), "செருவேட்டுச் சிலைக்குஞ் செங்கணாடவர்" (அகநா. கஙஎ : 4), "உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன், செறினுஞ்சீர் குன்ற விலர்" (குறள். 778) என்பவற்றாலும், 'போர்பெற்றறியாமையின், அது பெற்றால் அரசன்றடுப்பினும் நில்லாரென்பதாம்; பிறரும், 'போரெனிற் புகலும் புனைகழன் மறவர்' என்றும்......கூறினார்' என்னும் பரிமேலழகருரையாலும் விளங்கும்.

14. புறநா. உ : 10, அடிக்.

15. "வங்க மறிகடல் சூழெழு பார்வலம் வந்தமனுகுல சோழனே" வி. பா. 17 - ஆம் போர். 66.

17. "பகைமுக ஊரிற் றுஞ்சலோ விலளே" (குறுந். உகூஉ : 8.) உயர்திணை அஃறிணையாகக் கூறப்பெற்ற வழுவமைதிக்கு மேற்கோள் ; நன். வி. சூ. 410.

16 - 7. 'நெஞ்சுநடுங் கவலம்......அரசே: அஃறு அரசியற் றன்மையை யுணர்த்தற்பாலது அத்தன்மையையுடைய மக்களையுணர்த்தி உயர்திணையாய் ஈண்டு அஃறிணையான் முடிதலின் வழுவாயிற்று இவ்வாறு வருவனவும் பிறவும் அமைத்துக்கொள்க' நன். சூ. 409, மயிலை.

1பு. வஞ்சித்திணைக்குரிய இயங்குபடையரவமென்னும் துறைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 7, இளம்.; ஷை. ஷை. சூ. 8, ந.

பி - ம். * நெஞ்சநடுங்கியவலம், நடுங்கவவலம்.



பொருந்திய கலைநிறைந்த திங்கள்போல ஓங்கிச் சேய்மைக்கண்ணே விளங்க நல்ல புகழ்வேட்கையை விரும்பி வெல்லும்போரினைச்செய்யும் வீட்டின்கண்ணே யிருத்தலல்லது நின்நகரின்கண் இருத்தலை உடம்படாய் நீ; கோட்டினது நுனைமுகந் தேய மடுத்துப் பகைவரது காவலை யுடைய மதிலைக் குத்தும் நின்னுடைய யானைகள் அடங்கா; பூசலென்று கேட்பின் விரும்பும் அணிந்த வீரக்கழலையுடைய மறவர், காடு நடுவே கிடந்த நாடு மிகவும் அரியவாதலால், யாம் போவேமல்லேமென்று கருதார்; ஆதலான், ஓசை உண்டான விழாவினையுடைய அவ்விடத்துப் பகைப்புலத்தின்கண்ணே தங்கிவிட்டுக் கீழ்கடல்பின்னதாக மேல்கடலினது வெளிய தலையையுடைய திரை நினது குதிரையினது குளம்பை யலைப்ப வலமாக முறையே வருதலுமுண்டாமென்று சுழன்று நெஞ்சம் நடுங்கும் அவலம் பாயத் துயிலாத கண்ணையுடையவாயின, வடநாட்டுள்ள அரசுகள்.—எ - று.

அவலம் பாயவென்பதூஉமாம். (௩௧)

---

(கூஉ) கடும்பி னடுகல நிறையாக நெடுங்கொடிப்
பூவா வஞ்சியுந் தருகுவ னொன்றோ
வண்ண நீவிய வணங்கிறைப் பணைத்தோள்
ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகென
மாட மதுரையுந் தருகுவ னெல்லாம்

---

2. "பூவா வஞ்சியிற் பூத்த வஞ்சி, வாய்வா ணெடுந்தகை மணிமுடிக் கணிந்து" (சிலப். உசு: 50 - 51); "பூத்த வஞ்சி பூவா வஞ்சியிற், போர்த்தொழிற் றானை குஞ்சியிற் புனைய" மணி. உசு: 78 - 9.

3. "வணங்கிறைப் பணைத்தோள்" நற். கூசுசு.

5. "மாடமலி மறுகிற் கூடல்" (முருகு. 71); "மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்" (மதுரை. 429); "மாடக் கூடல்" (பரி. உ0: 106); "மாட மதுரை", "மாட மதுரையும்" (சிலப். பதி. 20, அ: 3, கூ: 76, கஙு: 112); "நான்மாடக் கூடன் மகளிரு மைந்தரும்" (கலி. கஉ) என்பதும், 'நான்கு மாடங் கூடலின் நான்மாடக்கூடலென்றாயிற்று; அவை திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர்; இனி, கன்னி, கரியமால், காளி, ஆலவாயென்றுமாம்' என்னும் அதன் விசேடவுரையும், "அம்புத நால்களா னீடு கூடல்" (திருநள்ளாறும் திருவாலவாயும்; தே.) என்னுந் திருவாக்கும், "மதிமலி புரிசை மாடக் கூடல்" (திருமுகப் பாசுரம்) என்பதும், "ஈசனூர் மகிழ்ந்த தானம்" (திருவால. நகர. 12)
12

பாடுகம் வம்மினோ பரிசின் மாக்கள்
தொன்னிலக் கிழமை சுட்டி னன்மதி
வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த
பசுமட் குரூஉத்திரள் போலவவன்
கொண்ட குடுமித்தித் தண்பணை நாடே.

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—நமது சுற்றத்தினது அடுகலத்தை *நிறைக்கும் பொருட்டு விலையாக நெடிய துகிற்கொடியினையுடைய பூவாத வஞ்சியையும் தருகுவன்; நிறமுடைய கலவை பூசப்பட்ட விளங்கு சங்கினையுடைய முன்கையினையும் வேய்போன்ற தோளினையும் ஒள்ளிய நுதலினையுமுடைய விறலியர் பூவிற்கு விலையாகப் பெறுகவென்று மாடத்தையுடைய மதுரையையும் தருகுவன்; ஆதலால், யாமெல்லாம் அவனைப் பாடுவேமாக வாரீர் பரிசின்மாக்கள்! பழைய நிலவுரிமையைக் குறிப்பின், நல்ல அறிவையுடைய குயக்குலத்திளையோர் கலம் வனைதற்குத் திகிரிக் கண்ணே வைத்த பச்சைமண்ணாகிய கனத்த திரள்போல அவன் கருத்திற்கொண்ட முடியையுடைத்து, இக்குளிர்ந்த மருதநிலத்தையுடைய நாடு.—எ - று.

பூவாவஞ்சியென்றது, கருவூர்க்கு வெளிப்படை.

[1]ஒன்றேயென்றது, எண்ணிடைச்சொல்.

தேர்க்காலென்றது, தேர்க்கால்போலும் திகிரியை.

அவன் கொண்ட குடுமித்து, இந்நாடு; ஆதலால், வஞ்சியையுந் தருகுவன்; மதுரையையுந் தருகுவன்; ஆதலால், பரிசின்மாக்கள்! நாமெல்லாம் அவனைப் பாடுகம் வம்மினோவெனக் கூட்டுக.

தொன்னிலைக்கிழமையென்று பாடமோதுவாருமுளர். (௩௨)

---

என்பது முதலிய திருவிருத்தங்கள் நான்கும், "கன்னிதிரு மால்காளி யீசன் காக்கும் கடிமதில்சூழ் மாமதுரை" (ஷை. பயன்முதலியன. 5) என்பதும் இங்கே கவனிக்கத்தக்கவை.

5-6. "உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன், றீவார்மே னிற்கும் புகழ்" (குறள். 232) என்பதனாலும் அதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையாலும் ஈவார் புகழப்படுதல் அறியலாகும்.

9. சீவக. 786, ந. மேற்.

1"பொய்படு மொன்றோ" குறள், 836.

பி - ம். * நிறைக்கும் பொருளாக.



(௩௩) கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்
மான்றசை சொரிந்த வட்டியு மாய்மகள்
தயிர்கொடு வந்த தசும்பு நிறைய
ஏரின் வாழ்நர் பேரி லரிவையர்
குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்

முகந்தனர் கொடுப்ப வுகந்தனர் பெயரும்
தென்னம் பொருப்ப னன்னாட் டுள்ளும்
ஏழெயிற் கதவ மெறிந்துகைக் கொண்டுநின்
பேழ்வா யுழுவை பொறிக்கு மாற்றலை
பாடுநர் வஞ்சி பாடப் படையோர்
தாதெரு மறுகிற் பாசறை *பொலியப்

---

2. வட்டி - கடகப்பெட்டி; ஆவது பனை அகணியாற்செய்த பெரிய பெட்டி; "ஊனுர் வட்டியர்" (மலைபடு. 152.) ஆய் - இடைச் சாதி; சீவக. 426, ந.

5. சீவக. 355; நாலடி. 191; நான்மணி. 83.

6. பலர்பாற்படர்க்கை வினைமுற்று வினையெச்சமானதற்கு மேற்கோள்; நன். சூ. 350, மயிலை.; நன். சூ. 351, வி.

1 - 6. "முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த, வகன் பெரு வட்டி நிறைய மனையோ, ளரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர", "வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள், வரா அல் சொரிந்த வட்டி யுண் மனையோள், யாண்டுகழி வெண்ணெ னிறைக்கு மூர" ஐங்குறு. சஎ, சஅ.

7. மு. புறநா. உகூ : 6.

8. ஏழெயிற்கதவம் - (பகைவருடைய) ஏழுமதிலின்கணுள்ள கதவுகள் ; பாண்டிநாட்டில் ஏழுபொன்கோட்டையென்று ஒரூருளது; சிவகங்கையைச் சார்ந்தது; அஃது இங்கேகூறிய ஏழெயிலிருந்த இடமாக

ஊகிக்கப்படுகின்றது; இந்தவூர், பல சிற்றரண்கள் வாய்ந்திருந்ததாக இந்நூல் ௨௧-ஆவது செய்யுளிற் கூறப்பட்டுள்ள கானப்பேருக்குச் சமீபமாக இருத்தல் இக்கருத்தை ஒருவாறு வலியுறுத்தும்.

9. பகைவருடைய இடங்களைக் கைப்பற்றியவுடன் அவற்றில் அவர்களுடைய முத்திரைகளைச் சிதைத்துத் தம்முடைய பொறிகளை அமைப்பது மரபு.

11. புறநா. ௩௧௧ : 3, அடிக். "தாதெருத் ததைந்த முற்றம்" மலைபடு. 531.

பி - ம். * மலிய.



புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த
மலரா மாலைப் பந்துகண் டன்ன
ஊன்சோற் றமலை பாண்கடும் பருத்தும்
செம்மற் றம்மநின் வெம்முனை யிருக்கை
வல்லோன் றைஇய வரிவனப் புற்ற
அல்லிப் பாவை யாடுவனப் பேய்ப்பக்
காம விருவ ரல்லது யாமத்துத்
தனிமகன் வழங்காப் பனிமலர்க் காவின்
ஒதுக்கின் றிணிமணற் புதுப்பூம் பள்ளி
வாயின் மாடந்தொறு மைவிடை வீழ்ப்ப
நீயாங்குக் கொண்ட விழவினும் பலவே.

திணை - வாகை; துறை - அரச வாகை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—காட்டின்கண்ணே தங்கும் வாழ்க்கையையுடைய சினம் பொருந்திய நாயையுடைய வேட்டுவன் மானினது தசையைச் சொரிந்த கடகமும் இடைமகள் தயிர்கொண்டுவந்த மிடாவும் நிறைய ஏரானுழுது உண்டு வாழ்வாரது பெரிய மனையின்கண் மகளிர் குளத்துக்கீழ் விளைந்த களத்தின்கட் கொள்ளப்பட்ட வெண்ணெல்லை முகந்துகொடுப்ப உவந்து மீளும் தென்றிசைக்கட் பொதியின்மலையையுடைய பாண்டியனது நல்ல நாட்டுள்ளும் ஏழாகிய அரணின்கட் கதவத்தை யழித்துக் கைக்கொண்டு நினது பெரிய வாயையுடைய புலியைப் பொறிக்கும் வலியை ; ஆதலான் நின்னைப்பாடும் புலவர் நினது மேற்செலவைப் பாடப் படைக்கலத்தினை யுடையோர் தாதாகிய எருப்பொருந்திய மறுகினையுடைய பாசறைக்

---

12. 'செய்பு' என்னும் வாய்பாட்டு வினையெச்சம் வினைமுதல் கொண்டதற்கு மேற்கோள் ; நன். மயிலை. சூ. 343 ; நன். வி. சூ. 344.

13. "மாலைப் பந்தும் மாலையு மேந்தி" சீவக. 2928.

12 - 3. புறநா. உரு : 3.

14. புறநா. கஎஎ : 14 - 5; "கோழூன்குறைக் கொழுவல்சி" மதுரை. 141.

'ஊணமலைச் சிறுகுடி' (கலி. ([illegible])) என்பதற்கு 'ஊன்சோற் றமலை பாண்கடும் பருத்தும்' என்பது மேற்கோள்.

16. வரிவனப்பு : மணி. ரூ : 8.

16 - 7. வல்லோன் றைஇய...பாவை : கலி. ([illegible]) : 7.

20. பள்ளி : மணி. உசு : 72.

21. மைவிடை வீழ்த்தல் : புறநா. [illegible]

கண்ணே பொலிவுபெறப் புலராத பசிய இலையை இடையிட்டுத் தொடுக்கப்பட்ட மலராத முகையினையுடைய மாலையினது பந்தைக் கண்டாற் போன்ற தசையோடு கூடிய பெருஞ்சோற்றுத்திரளையைப் பாண் சுற்றத்தையூட்டும் தலைமையையுடைத்து, நினது வெய்யமுனையாகிய இருப்பிடம்; கைவல்லோனாற் புனைந்துசெய்யப்பட்ட எழுதிய அழகு பொருந்திய அல்லிப்பாவை [1]அல்லியமென்னும் கூத்தையாடும் அழகையொப்ப அன்பினையுடைய துணைவனும் துணைவியுமாகிய இருவரல்லது இடையாமத்தின்கண் தனிமகன் வழங்காத குளிர்ந்த மலரையுடைய காவின்கண் இயங்குதற்கு இனிய செறிந்த மணலையுடைய புதிய பூவையுடைய சாலையினது வாயிலின்கண் மாடந்தோறும் செம்மறிக்கிடாயைப் படுக்க நீ அவ்விடத்து எடுத்துக்கொண்ட விழவினும் பல.— எ - று.

நன்னாட்டுள்ளுமென்ற உம்மை, சிறப்பும்மை.

அல்லிப்பாவை யாடுவனப்பென்றது, ஆண்கோலமும் பெண்கோலமுமாய அவ்விருவருமாடுங் கூத்தை. படையோர் பாசறை பொலிய வென்பதற்குப் படையோரது பாசறை பொலிவுபெறவென்று உரைப்பினும அமையும.

பாசிலை மலையவென்று பாடமோதுவாரும் உளர்.

தனிமகன்வழங்காவென்றது, [2]தனித்து வழங்கின் அப்பொழில் வருத்துமென்பது.

களத்துக்கொள் வெண்ணெலென்பது, களக்கொள் வெண்ணெலெனத் தொக்கது.

முகந்தனர் கொடுப்ப, உகந்தனர் பெயருமென்பன வினையெச்ச முற்று.

உழுவைபொறிக்குமாற்றலையாகலின், பாண்கடும்பருத்தும் நின் வெம்முனையிருக்கை நீ கொண்ட விழவினும் பல செம்மற்றெனக்கூட்டுக.

விழவென்பது, [3]சிறுசோற்றுவிழவினை; வேள்வியென்றுரைப்பினும் அமையும். (௩௩)

---

[1]அல்லியக்கூத்து : சிலப். சு: 48, அடியார்.

[2]'தனியவரை முனிவு செய்யும் பொழில்' இறை. சூ. 2, உரை.

[3]சிறுசோற்றுவிழவு - சோற்றைத் தயிர்முதலியவற்றோடு கலந்து உருண்டைகளாக்கி அவற்றை வருவோர் ஒவ்வொருவருக்கும் கொடுத்து மகிழ்தல்.



(௩௪) ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு *முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
†அறம்பா டிற்றே யாயிழை கணவ
காலை யந்தியு மாலை யந்தியும்
புறவுக் கருவன்ன புன்புல வரகின்

1. "குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்றூ, மடி கொன்று பால்கொளலு மாண்பே" நீதிநெறி. 29.

1 - 3. இவ்வடிகளிற் கூறப்பட்டவற்றை, 'பெரிய அறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலையறுத்தலும் மகளிர் கருவினைச் சிதைத்தலும் பார்ப்பார்த் தப்புதலுமுதலிய பாதகங்களைச் செய்தல்' (குறள், 110) என உரைநடையிலமைத்தனர் பரிமேலழகர்.

4. கழுவாயுமுள: குறள். 948, பரிமேல். மேற்.

1 - 4. "கொலைகளிற் கொடுமை சான்ற பார்ப்பனக் கொலைவல் வீரக் ,கொலைகருக் கொலைதாய் தந்தைக் கொலைகவைக் கோட்டு நல்லான், கொலைமுதற் பிறவு நீக்கும்" காஞ்சிப். சருவதீர்த்த. 14. [கூஉ: 6.

5. நற். உ௮௯ : 2; "நிலந்திறம் பெயருங் காலை யாயினும்" பதிற்.

6. உய்தி - பிழைத்தல்; "உய்திக் கால முரையீ ரோவென" (சிலப். ௯௦ : 240); "சார்பறுத் துய்தியும்" மணி. உ௫ : 5.

1 - 7. "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந் நன்றி கொன்ற மகற்கு" (குறள். 110); "சிதைவகல் காதற் றாயைத் தந்தையைக் குருவைத் தெய்வப், பதவியந் தணரை யாவைப் பாலரைப் பாவை மாரை, வதைபுரி குநர்க்கு முண்டா மாற்றலா மாற்றன் மாயா, உதவிகொன் றார்க்கென் றேனு மொழிக்கலா முபாய முண்டோ" (கம்ப. கிட்கிந்தை. 62) என்பன இங்கே அறியத்தக்கவை.

5 - 7. 'பாட்டு' என்னும் உரிச்சொல் சொல்லுதற்றொழிற் பண்பின்மேல் வருதற்கு மேற்கோள்; நன். மயிலை. சூ. 457; நன். வி. சூ. 458.

6 - 7. "நன்றி, செய்குநர்ப் பிழைத்தோர்க் குய்வில வென்னும், குன்றா வாய்மை" கல்லாடம், 4.

பி - ம். * உளவே. †அறம்பாடின்றே.



பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கிக்
குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலொ
டிரத்தி நீடிய வகன்றலை மன்றத்துக்
கரப்பி லுள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
அமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்
ககலாச் செல்வ முழுவதுஞ் செய்தோன்
எங்கோன் வளவன் வாழ்க வென்றுநின்
பீடுகெழு நோன்றாள் பாடே னாயிற்
படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன்
யானோ தஞ்சம் பெருமவிவ் வுலகத்துச்
சான்றோர் செய்த நன்றுண் டாயின்
இமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக்
கொண்டன் மாமழை பொழிந்த
நுண்பஃ றுளியினும் வாழிய பலவே[1].

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர்கிழார் பாடியது.

இ - ள்.—ஆனினது முலையாற் பெறும்பயனைக் கெடுத்த தீவினையாளர்க்கும் மாட்சிமைப்பட்ட ஆபரணத்தையுடைய பெண்டிரது கருப்பத்தை அழித்தோர்க்கும் பார்ப்பாரைப் பிழைத்த கொடுந்தொழிலை

12. “இரத்தி மன்றமும்” மணி. ௬ : 89.

14. “பெருஞ்சோற் றமலே” மணி. கஎ : 2.

19. ஒருசொல்முன் ஒருசொல் வருங்கால் தொகைநிலைவகையானும், எண்ணுநிலைவகையானும், பயனிலைவகையானும் வருதலேயன்றி எச்சவகை, அடுக்குவகை, பொருள்கோள்வகை, ஆக்கவகை, இடைச்சொல்வகை, உரிச்சொல்வகை என்றாற்போலப் பிறவகையாலும் வருதலுண்டென்று கூறி இவ்வடியை இடைச்சொல்வகையான் வந்ததற்கு மேற்கோள் காட்டினர்; தொல். கிளவி. சூ. 1, கல்.

20 - 23. புறநா. கஉரு: 5-6; ருOஉ: 11; ருஅ௫: 10-12; “நனந்தலை புலகஞ் செய்தநன் றுண்டெனின்......வாழிய பலவே” பதிற். சுரு:18-21.

[1]மு. ‘வாழ்த்து’ என்னுந் துறைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 29, இளம்.

ஞ - ம். * பாடபேரி.



யுடையோர்க்கும் அவர்செய்த பாதகத்தினை ஆராயுமிடத்து அவற்றைப் போக்கும் வழியுமுளவெனவும், நிலம் கீழ்மேலாம் காலமாயினும் ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்தோர்க்கு நரகம் நீங்குதலில்லையெனவும் அறநூல் கூறிற்று; தெரிந்த ஆபரணத்தையுடையாள் தலைவ! காலையாகிய அந்திப்பொழுதும் மாலையாகிய அந்திப்பொழுதும் புறவினது கருவாகிய முட்டைபோன்ற புல்லியநிலத்து வரகினது அரிசியைப் பாலின்கட் பெய்து அடப்பட்ட சோற்றைத் தேனோடு கலந்து உண்டு குறிய முயலினது கொழுவிய சூட்டிறைச்சியைத் தின்ற என் சுற்றத்தோடுகூட

இலந்தைமரமோங்கிய அகன்ற இடத்தையுடைய பொதியிற்கண் ஒன்றனையும் மறைத்தலில்லாத உள்ளத்துடனே வேண்டிய வார்த்தைகளைப் பலகாலுங் கூறிப் பெரிய கட்டியாகிய கொழுவியசோற்றை அருந்திய பாணர்க்கு நீங்காத செல்வமெல்லாவற்றையும் செய்தோன் எம்முடைய வேந்தனாகிய வளவன் வாழ்வானாகவென்று சொல்லி நினது பெருமை பொருந்திய வலிய தாளைப் பாடிற்றிலேனாயின், [1]வாழ்நாட்கு அலகாகிய பலகதிரையுடைய செல்வன் தோன்றுதலறியான்; யானோ எளியேன்; பெரும! இந்தவுலகத்தின்கண் நற்குணங்களால் அமைந்தோர் செய்த நல்வினையுண்டாயின், இமயமலையின்கண்ணே திரண்டு இனிய ஓசையைப் பயிற்றிக் கீழ்காற்றான் வரும் பெரிய முகில் சொரிந்த நுண்ணிய பலதுளியினும் பலகாலம் வாழ்வாயாக.—எ - று.

நிலம்புடைபெயர்வதாயினுமென்பதற்கு [2]ஊழி பெயருங்காலத்து யாவருஞ் செய்த இருவினையும் நீங்குதலின், அக்காலத்தும் செய்தி கொன்றோர்க்கு உய்தியில்லென்றும், நிலத்துள்ளார் யாவரும் இவர் கூற்றிலே நிற்பாராயினுமென்றும் உரைப்பாரும் உளர்.

புன்கம் இவன்பாற் செல்வதற்குமுன்பு பெற்ற உணவாகவும், அமலைக்கொழுஞ்சோறு இவன்பாற் பெற்ற உணவாகவும் கொள்க; அன்றிச் சென்ற இடந்தோறும் பெற்ற உணவாகவுரைப்பினும் அமையும்.

மன்றத்துச் சூடு கிழித்த ஒக்கலொடுகூட வேண்டுமொழிபயிற்றி ஆர்ந்த பாணர்க்கெனக் கூட்டுக.

பாணர்க்கெனத் தம்மைப் பிறர்போலக் கூறினார்.

ஆயிழைகணவ! செய்திகொன்றோர்க்கு உய்தியில்லென அறம் பாடிற்று; ஆதலால், பாணர்க்குச் செல்வமுழுவதுஞ்செய்தோன், எங் கோன் வளவன் வாழ்கவென்று காலையந்தியும் மாலையந்தியும் நின் தாள்

[1]'வாழ்நாட்கலகாகிய' என்பது, "வாழ்நாட் கலகாய் வயங்கொளி மண்டிலம்" (நாலடி. 22) என்பதனைத் தழுவியது.

[2]கம்ப. கடல்காண். 2.



பாடேனாயின், பல்கதிர்ச்செல்வன் படுபறியான்; பெரும! யானோ தஞ்சம்; சான்றோர் செய்த நன்றுண்டாயின், நுண்டுளியினும் பலகாலம் வாழ்வா யாக வெனக் கூட்டுக.

கோவதை முதலாயின வாக்காற்சொல்லவும்படாமையின், ஆன்முலை யறுத்தவெனவும், மகளிர்கருச்சிதைத்தவெனவும், பார்ப்பார்த்தப்பிய வெனவும் மறைத்துக் கூறப்பட்டன.

இது, பரிசில்பெற்றுப் போகின்றானை நீ எம்மை நினைத்து வருவையோ என்றாற்கு இவ்வாறு செய்த நின்னை வளவன்வாழ்கவென்று பாடேனாயின், யானிருக்குமிடத்துப் பல்கதிர்ச்செல்வன் படுதலறியான், அதனால் இம்மையின்பம் பெறேனெனவும், செய்ந்நன்றிகொன்றோர்க்கு உய்தியில்லையெனவே மறுமையின்கண் நரகம்புகுவேனெனவும் கூறியதாகக் கொள்க. (௩௪)

---

(௩௫) நளியிரு முந்நீ ரேணி யாக
வளியிடை வழங்கா வானஞ் சூடிய

மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்
முரசுமுழங்கு தானை மூவ ருள்ளும்

---

1. 'எணியில் - எல்லையில் ; நளியிரு முந்நீ ரேணி யாக வென்றோர்' சிலப். உரு : 165, அரும்பத. 3. புறநா. உ : 1, அடிக்.

2 - 3. "வான்கவிந்த வையகம்" நாலடி.

4. மு. பொருந. 54; பெரும்பாண். 33; "முடியுடை வேந்தர் மூவருள்ளும், தொடிவிளங்கு தடக்கைச் சோழர்" சிலப். ப. 267.

3 - 4. "முரசுமுழங்கு தானை......நினதே பெரும என்புழி மூவி ருள்ளுமென முன்னிலையாகற்பாலது மூவருள்ளுமெனப் படர்க்கையாய வழி அமைதலும்", "முரசு முழங்குதானை...............பெரும என்புழி மூவிரென்னாதது என்னையெனின் புலவன் கூறுகின்ற இவனை ஒழிந்த இருவகைக் குலத்தோரும் இவன் முன்னுள்ளோரும் படர்க்கைய ராதலின், அம்மூவகைக் குலத்துள்ளோரையுங் கூட்டி முரசுமுழங்கு தானை மூவர் அரசுள்ளும் அரசென்று ஈண்டுச் சிறப்பித்துச் சொல்லப் படுவது அச்சோழர்வழித்தோன்றிய நின்னரசே யென்றானெனப் பொருள் கூறுக" தொல். எச்ச. சூ. 67, சே. ந. 4 - 5. அரசனது தன்மையெனப் பாவத்தன்மையை யுணர்த்தும் உகரவீற்றுப் பாவதத்திதன் என்று கூறி இப்பகுதியை மேற்கோள்காட்டினர்; பிரயோக. 34.

13



அரசெனப் படுவது நினதே பெரும

அலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினும்
இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்
அந்தண் காவிரி வந்துகவர் பூட்டத்
தோடுகொள் வேலின் றோற்றம் போல
*ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்
நாடெனப் படுவது நினதே யத்தை, ஆங்க
நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே
நினவ கூறுவ லெனவ கேண்மதி
அறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து
முறைவேண்டு பொழுதிற் பதனெளி யோரீண்

---

6 - 8. புறநா. ககஎ : 2, ஙஅஅ : 1 - 2; "கல்காயுங் கடுவேனிலொ, டிருவானம் பெயலொளிப்பினும், வரும்வைகன் மீன்பிறழினும், வெள்ளமா றாது" (மதுரை. 106 - 9), "வசையில்புகழ் வயங்கு வெண்மீன், றிசைதிரிந்து தெற்கேகினுந், தற்பாடிய தளியுணவிற், புட்டேம்பப் புயன்மாறி, வான்பொய்ப்பினுந் தான்பொய்யா, மலைத்தலைய கடற்காவிரி" (பட்டின. 1 - 6), "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும், விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்......காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை" (சிலப். கo : 102 - 8), "காவிரி யென்னத் தப்பாக் கருணையான்" (வி. பா. அருச்சுனன்றவநிலை. 24), "வற்றாத காவிரி" தக்க. 812.

9 - 10. "கரும்பின், வேல்போல் வெண்முகை பிரிய" (நற். ௩௬௬); "வேலீண்டு தொழுதி யிரிவுற் றென்ன" மலைபடு. 116.

11. "தண்ணீரும் காவிரியே தார்வேந்தன் சோழனே, மண்ணாவதுஞ்சோழ மண்டலமே" என்னுஞ் செய்யுள் இங்கே அறியத் தக்கது.

1 - 11. "நளியிரு முந்நீ ரேணி யாக என்னும் புறப்பாட்டினுள், 'முரசுமுழங்கு......பெரும' எ - ம், 'ஆடுகட்....அத்தை' எ - ம் சிறப்புப் பற்றிப் புணர்த்தார் சான்றோர்" யா. வி. எழுத். 1.

13. "எனவ கேண்மதி" அகநா. ௩௭௧ : 5.

"நினவ கூறுவலெனவ கேண்மதி என்றாற்போல ஆறுவதற்குரிய அகரவுருபின் முன்னரும் ஓர் அகரவெழுத்துப்பேறு நிலைமொழிக்கண் வருதலுளதாகக் கருதினார்" தொல். புணர். சூ. 13, ந.

பி - ம். *ஆடுகழைக்கரும்பு.



டுறைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே
ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பி னடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய
குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ
வெளிற்றுப்பனந் துணியின் வீற்றுவீற் றுக் கிடப்பக்

களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்

---

15 - 6. "முறைவேண்டு நர்க்குங் குறைவேண்டு நர்க்கும், வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி" (பெரும்பாண். 443 - 4); "காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேன், மீக்கூறு மன்ன னிலம்" (குறள். 386), 'முறைவேண்டினார்க்குங் குறைவேண்டினார்க்குங் காண்டற் கெளியனாய்' (ஷை. பரிமேல்.) என்பவற்றில் இவ்வடிகளின் சொல்லும் பொருளும் அமைந்திருக்கின்றன; "முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி, யொல்லாது வானம் பெயல்" (குறள். 559), "வெஞ்சின வேந்தன் முறைநெறியிற் சேர்தலும்......திங்கண்மும் மாரிக்கு வித்து" (திரி. 98) என்பவை இங்கே அறியற்பாலன.

18. மாகவிசும்பு: பரி. க : 47; அகநா. உடுரு : 24; மதுரை. 454.

19 - 21. புறநா. சுo : 11 - 2; "உலகுடன் னிழற்றிய தொலையா வெண்குடை" (அகநா. உoச); "திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதுங், கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ், வங்க ணுலகளித்த லான்" (சிலப். க : 1 - 3); "ஏமவெண்குடை", "வெயி லழல் கவியாது வியலக வரைப்பி, னுயிரழல் கவிக்கு முயர்ச்சித் தாகிப், பூந்தா ரணிந்த வேந்தல் வெண்குடை" பெருங். க. 36 : 104; 42 : 44 - 6.

"தீதுதீர் மதுரை" (சிலப். கடு : 9 - 10) என்பதன் விசேடவுரையில் அடியார்க்குநல்லாரால் இப்பகுதி மேற்கோள் காட்டப்பெற்றுள்ளது. இங்ஙனம் குடையை உயர்த்துக் கூறுதல், 'நடைமிகுத்தேத்திய குடைநிழல் மரபு' என்னுந் துறையின் பாற்படுமென்றும், இங்ஙனம் புகழ்தல் குடியைப் புறங்காத்தற்கு அறிகுறியாக இக்குடையை யான் கொண்டேனென்று அரசனாற் குறிக்கப்படுதலின் என்றுங் கூறுவர் (தொல். புறத்திணை. சூ. 36) நச்சினார்க்கினியர்.

22. வெளிற்றுப்பனை : உயிர்த்தொடர்க்குற்றியலுகரத்தின்முன்

அல்வழியில் வல்லின றகரம் இரட்டினமைக்கு மேற்கோள்; நன். சூ. 182, மயிலை.

24. “ஒன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்து” பெரும்பாண். 419,



பொருபடை தரூஉங் கொற்றமு முழுபடை
ஊன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
*இயற்கை யல்லன செயற்கையிற் றோன்றினும்
காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞாலம்
அதுநற் கறிந்தனை யாயி னீயும்
நொதும லாளர் †பொதுமொழி கொள்ளாது
பகடுபுறந் தருநர் பார மோம்பிக்
குடிபுறந் தருகுவை யாயினின்
அடிபுறந் தருகுவ ரடங்கா தோரே1.

---

25 - 6. வீரர்கள் அரசனுக்கு வெற்றிதருதற்குக் காரணம்

உழவென்பதை, “பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப, ரலகுடை நீழலவர்” (குறள். 1034), “குடைநீழலென்பதூஉம் ஆகுபெயர்; ‘ஊன்று சான் மருங்கி னீன்றதன் பயனே’ என்றதனால் தம்மரசனுக்குக் கொற்றம் பெருக்கி மண்முழுதும் அவனதாகக்கண்டிருப்பரென்பதாம்” (ஷை பரிமேல்.), “இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும், உழவிடை விளைப்போர்” (சிலப். ௧௦ : 149 - 50) என்பவற்றாலும் உணர்க.

30. ஒ. புறநா. கஉக : 5.

32. பகடுபுறந்தருதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 16, இளம்.

33. "சாலக், குடியோம்பல் வல்லா னரசன்" (திரி. 13); "கண்ணிற்- சொலிச் செவியி னோக்கு மிறைமாட்சி, புண்ணியத்தின் பாலதே யாயினுந்- தண்ணளியான், மன்பதை யோம்பா தார்க் கென்னும்" நீதிநெறி. 28.

32 - 3. "குடிபுறந் தருநர் பார மோம்பி" பதிற். கரு : 24. "வீழ்குடி - காணியாளர்; 'பகடு.........தருகுவையாயின்' என்றார் பிறரும்" (சிலப். ு : 43 - 5, அடியார்.); வேளாளர் உழுதுண்டற்கு மேற்கோள்: தொல். அகத்திணை. சூ. 30, ந.

32 - 4. "உற்றதற் கெல்லா முரஞ்செய்தல் வேண்டுமோ, கற்றறிந் தார் தம்மை வெகுளாமை காப்பமையு, நெற்செய்யப் புற்றேய்ந்தாற் போல நெடும்பகை, தற்செய்யத் தானே கெடும்" (பழ. 83); "வகைய றிந்து தற்செய்து தற்காப்ப மாயும், பகைவர்கட் பட்ட செருக்கு" குறள். 878.

1ழ. "களியிரு முந்நீர்......அடங்காதோரே: இஃது இஞ்ஞாலம் இயற்கை யல்லது தமது செயற்கையிற்றோன்றினும் காவலனைப் பழிக் ஷ - ம். * இயற்கையல்லது. † பொய்ம்மொழி.



திணை - அது; துறை - செவியறிவுறூஉ.

அவனை வெள்ளைக்குடி நாகனார் பாடிப் பழஞ்செய்க்கடன் வீடுகொண்டது.

இ - ள்.—நீர்செறிந்த பெரிய கடல் எல்லையாகக் காற்று ஊடு

போகாத வானத்தைச்சூடிய மண்செறிந்த உலகத்தின்கட் குளிர்ந்த தமிழ் நாட்டிற்கு உரியராகிய முரசொலிக்கும் படையினையுடைய மூவேந்தருள்ளும் அரசென்றற்குச் சிறப்புடையது, நின்னுடையஅரசே; பெரும! விளங்கிய சுடரையுடைய ஞாயிறு நான்குதிக்கினுந் தோன்றினும், விளங்கிய கதிரையுடைய வெள்ளிமீன் தென்றிசைக்கட் செல்லினும், அழகிய குளிர்ந்த காவிரி வந்து பலகாலாயோடி ஊட்டத் தொகுதிகொண்ட வேலினது காட்சியை யொப்ப அசைந்த கண்ணினையுடைய கரும்பினது வெளிய பூ அசையும் நாடென்று சொல்லப்படுவது, நின்னுடைய நாடே; அந்நாடு பொருந்திய செல்வத்தையுடைய பெருமைபொருந்திய வேந்தே! நின்னுடையன சில காரியஞ்சொல்லுவேன்; என்னுடையன சிலவார்த்தை கேட்பாயாக; அறக்கடவுள்மேவி ஆராய்ந்தாற்போன்ற செங்கோலான் ஆராயும் ஆராய்ச்சியையுடைய நீதியைக் கேட்கவேண்டுங்காலத்துச் செவ்வியெளியோர் இவ்விடத்துத் துளிவேண்டுங்காலத்து மழைபெற்றவரே; ஞாயிற்றைத் தன்மேற்கொண்ட பக்கந்திரண்ட முகில் மாகமாகிய உயர்ந்த வானத்தினது நடுவுநின்று அதன் வெயிலை மறைத்தாற்போலக் கண்ணொளியோடு மாறுபட விளங்குகின்ற நினது வானைமுட்டிய பரந்த வெண்கொற்றக்குடை வெயிலைமறைத்தற்குக் கொண்டதோவெனின், அன்று; வருத்தமுற்ற குடியை நிழற்செய்தல்காரணத்தாற் கொள்ளப்பட்டது; கூரிய வேலினையுடைய வளவ! இளைய பனையினது துண்டம் போல வேறுவேறு கிடப்பக் களிற்றுத்திரளைப் பொருத இடமகன்ற போர்க்களத்தின்கண் வருகின்றபடையை எதிர்நின்று பொறுத்து அது சரிந்துமீளும் புறக்கொடைகண்டு ஆர்த்துக்கொண்டு நின்போர் செய்யும் படை தரும்வெற்றியும் உழுகின்ற கலப்பை நிலத்தின்கண்ணே ஊன்று சாலிடத்து விளைந்த நெல்லினதுபயன்; மழை பெய்யுங்காலத்துப் பெய்யாதொழியினும், விளைவு குறையினும், இயல்பல்லாதன மக்களது தொழி

கும்; இதனையு முணராதே நீ வேற்றரசர்க்குப் பெறுதற்கரிதாகிய சிறந்த நாட்டினை நினதாகப் பெற்றுவைத்தும் அதனை யழிக்கின்றது நினக்கு அரசியலன்றென்று அவனாட்டை யழித்தமை கூறுதலில், தகவொடு புணர்வும், குடிபுறந்தரின் நினக்குச் செல்வம் முதலிய சிறத்தலிற் பகைவர் நின்னை வணங்குவரெனப் பொருளொடு புணர்வும், வெளிப்படக் கூறலிற் செம்பொருட்செவியுறை அங்கதமாயிற்று" தொல். செய். சூ. 128, ந.



லிலே தோன்றினும் காவலரைப் பழித்துரைக்கும், இவ்விடமகன்ற உலகம்; அதனை நன்றாக அறிந்தனையாயின், நீயும் குறளைகூறுவாரது உறுதியில்லாத வார்த்தையை உட்கொள்ளாது ஏரைப் பாதுகாப்பாருடைய குடியைப் பாதுகாத்து அக்காவாலாலே ஏனைக் குடிகளையும் பாதுகாப்பாயாயின், நின் அடியைப் போற்றுவர், நின் பகைவர்.—எ - று.

வளியிடை வழங்கா மண்டிணி கிடக்கையென இயையும்; அன்றி, வாயுபதத்துக்கு மேலான வானமெனக் கிடந்தவாறே உரைப்பினும் அமையும்.

அரசென்றது, அரசர்தன்மையை.

முறைவேண்டுபொழுதிற் பதனெளியோர் ஈண்டு உறைவேண்டு பொழுதிற் பெயல்பெற்றோரென்ற கருத்து: நீயும் பதனெளியை யாதல் வேண்டும், அவ்வாறு பெயல்பெறுதற்கென்றவாறும்; அன்றி, இதற்கு முறைவேண்டுபொழுதிற் பதனெளியோர் ஈண்டு உறைவேண்டு பொழுதிற் பெயல் பெற்றோரோ டொப்பரென்று உரைப்பாருமுளர்.

அத்தையும், ஆங்கவும், மதியும் அசைநிலை. நினவ எனவவென ஈற்று நின்ற அகரங்கள், செய்யுள்நோக்கி விரிக்கப்பட்டன.

நாடுகெழுசெல்வத்துப் பீடுகெழுவேந்தே! நினவ கூறுவல்; எனவ கேண்மதி; குடை வருந்தியகுடி மறைப்பதுவாகும்; கூர்வேல்வளவ ! பதனெளியோர் உறைவேண்டுபொழுதிற் பெயல்பெற்ரோராவர்; ஆகையால், நீயும் அவ்வாறு காலம் எளியையாய்க் கொற்றமும் ஈன்றதன் பயனென்று கருதிக் காவலர்ப்பழிக்கும் இக்கண்ணகன்ஞாலமென்று கொண்டு பொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது பாரமோம்பிப் புறந்தருகுவையாயின், நின்னடி புறந்தருகுவர், அடங்காதோரென்றமையால், செவியறிவுறூஉவாயிற்று. (கூரு)

---

(ஙரு) அடுநை யாயினும் விடுநை யாயினும்
நீயளந் தறிதிநின் புரைமை வார்கோற்
செறியரிச் சிலம்பிற் குறுந்தொடி மகளிர்
பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடும்

---

1 - 2. "ஒல்லை யாயினுங் கொல்லை யாயினு, நீயளந் தறிவைநின் புரைமை" குறுந். உ௫௲.
3 - 4. "மகளிர்,.....முத்த வார்மணற் பொற்கழங் காடும்" பெரும் பாண். 327 - 35.



தண்ணான் பொருநை வெண்மணல் சிதையக்
கருங்கைக் கொல்ல னரஞ்செ யவ்வாய்

நெடுங்கை நவியம் பாய்தலி னிலையழிந்து
வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறும்
கடிமரந் தடியு மோசை தன்னூர்
நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப
ஆங்கினி திருந்த வேந்தனொ டீங்குநின்
சிலைத்தார் முரசங் கறங்க
மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே[1].

திணை - வஞ்சி; துறை - துணைவஞ்சி.
அவன் கருவூர் முற்றியிருந்தானை ஆலத்தூர்கிழார் பாடியது.

இ - ள்.—கொல்வாயாயினும் கொல்லாது ஒழிவாயாயினும் அவற்றால் நினக்கு வரும் உயர்ச்சி யாம் சொல்லவேண்டா ; நீயே எண்ணியறிவை; செறிந்த உள்ளிடு பருக்கையையுடைய சிலம்பினையும் நீண்ட

---

5. புறநா. ௧௧ : 5, அடிக்.
6. வாய் : "வலம்படு திகிரி வாய்நீ வுதியே" கலி, ௭.
9. 'கடி' என்னும் உரிச்சொல் காப்பு என்னும் பொருளில் வந்ததற்கு மேற்கோள் ; தொல். உரி. சூ. 85, ந.
6 - 9. புறநா. ௨௫ : 8 - 9, அடிக்.

8 - 9. 'கடி' என்னும் உரிச்சொல் காவலென்னும் பொருளில் வந்ததற்கு மேற்கோள்; இ. வி. சூ. 282, உரை.

9 - 10. இயம்பலென்னும் உரிச்சொல் இசைப்பொருளுணர்த்தற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 62, சே.; ஷை. ஷை. சூ. 60, ந.; இ - வி. சூ. 285, உரை.

12. சிலைத்தார்: புறநா. கo : 10; "அகலிரு வானத்துக் குறைவிலேய்ப்ப, அரக்கிதழ்க் குவளையொடு நீல நீடி, முரட்பூ மலிந்த முதுநீர்" பெரும்பாண். 292 - 4.

'சிலை' என்னும் உரிச்சொல் ஒலித்தற்றொழிற் பண்பில் வந்ததற்கு மேற்கோள் ; நன். மயிலை. சூ. 458; நன். வி. சூ. 459.

13. "நாப்புடை பெயராது நாணுத்தக வுடைத்தே" மணி. உரு : 16.

1ய. 'உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்' என்னுந்துறைக்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. 10, இளம்.); "அடுநையாயினும்... ...நாணுத்தகவுடைத்தே: இது புறத்துழிஞையோன்கண் தூதன் அவன் சிறப்பு எடுத்துரைத்தது" ஷை. ஷை. 12, ந.



கோற்றொழிலாற் செய்யப்பட்ட குறிய வளையையுமுடைய மகளிர் பொன்னாற் செய்யப்பட்ட கழலான் வேதிகை போல உயர்ந்த எக்கர்க்கண்ணே இருந்து விளையாடும் அணுமையையுடைய குளிர்ந்த ஆன்பொருந்தத்தினது வெளிய மணல் சிதற வலிய கையையுடைய கொல்லன் அரத்தாற் கூர்மைசெய்யப்பட்ட அழகிய வாயினையுடைத்தாகிய நெடிய கையையுடைய கோடாலிவெட்டுதலான் நின்றநிலைகலங்கி வீழும் பூ நாறுகின்ற நெடிய கொம்புகள் தனிப்பக் காக்கள்தோறும் காவன்மரங்களை வெட்டு மோசை தன்னுடைய ஊரின்கண் நெடியமதிலெல்லையில் தனது காவலை

யுடைய கோயிற்கண்ணே சென்றொலிப்ப அவ்விடத்து மானமின்றி இனி தாகவிருந்த வேந்தனுடன் இவ்விடத்து நினது இந்திரவிற்போலும் மாலை யையுடைய முரசொலிப்பப் பொருதாயென்பது கேட்டார்க்கு நாணும் தகுதியை யுடைத்து; ஆதலால், அப்போரை ஒழியத்தகும்.—எ - று.

வார்கோற் குறுந்தொடியென மாறியுரைக்கப்பட்டது.

இனிதிருந்தவென்றது, குறிப்புமொழி.

கடிமரந்தடியுமோசை தன்மனையியம்ப இனிதிருந்த வேந்தனொடு மலைத்தனையென்பது நாணுத்தகவுடைத்து; அதனால் அடுகையாயினும் விடுகையாயினும் நின் புரைமை நீ அளந்தறிதியென மாறிக்கூட்டி வினை முடிவு செய்க.

மகளிர் தெற்றியாடும் பொருநை யென்ற கருத்து: இங்ஙனம் இளமகளிர் கழங்காடும் அணுமையதாயினும் புறப்பட்டுப் போர்செய்யாத அவன் வலியின்மை தோற்றிநின்றது.

தெற்றியாடும் தன்னூரென இயைப்பினும் அமையும்.

மேற்சென்றோனைச் சந்துசெய்து மீட்டலின், இது துணைவஞ்சி யாயிற்று. (௩௬)

---

(௩௭) நஞ்சுடை வாலெயிற் றைந்தலை சுமந்த
வேக வெந்திற னாகம் புக்கென
விசும்புதீப் பிறப்பத் திருகிப் பசுங்கொடிப்
பெருமலை விடரகத் துருமெறிந் தாங்குப்

4. புறநா. கக : 8; கலி. கOக : 19.

1-4. புறநா. உகக : 1-4; "பானாட், பாம்புடை விடர வோங்கு மலை மிளிர, உருமுச்சிவந் தெறியும் பொழுது" நற். கOச.



புள்ளுறு புன்கண் டீர்த்த வெள்வேற்
சினங்கெழு தானைச் செம்பியன் மருக
கராஅங் கலித்த குண்டுகண் ணகழி
இடங்கருங் குட்டத் துடன்றொக் கோடி
யாமங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉம்
கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சிச்
செம்புறழ் புரிசைச் செம்மன் மூதூர்

---

5-6. புள் - புறா; அஃதுற்றபுன்கணைத் தீர்த்தோன் சிபி; புறநா. ருக, சரு, சசு; "எள்ளறு சிறப்பி னிமையவர் வியப்பப், புள்ளுறு புன்கண் டீர்த்தோன்", "அறனறி செங்கோன் மறநெறி நெடுவாட், புறவுநிறை புக்கோன்", "புறவுநிறை புக்குப் பொன்னுலக மேத்தக், குறைவி லுடம்பரிந்த கொற்றவன்" (சிலப். உO : 51-2, உரு : 57-8, உகூ : "அம்மானை வரி"); "உடல்கலக்கற வரிந்துதசை யிட்டுமொருவ னொருதுலைப் புறவொ டொக்கநிறை புக்கபுகழும்" (கலிங்க. இராச. 13); "புக்கால், மருணிறை யென்று சரணடைந்த வஞ்சப், புறாநிறை புக்க புகழோன்" (இராசராசசோழனுலா, 5-6); "கொலையே றடம்படையக் கொய்தாலு மெய்தாத், துலையேறி வீற்றிருந்த சோழன்" (குலோத்துங்கசோழனுலா, 17); "உலகறியக், காக்குஞ் சிறுபுறவுக் காகக் களிகூர்ந்து, தூக்குந்

துலைபுக்க தூயோனும்" (விக்கிரமசோழனுலா, 10 - 11); "புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை", "இவர்குலத்தோன் மேற்பறவை, மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாக வழங்கினனால்", "பிறந்த நாட் டொடங்கி யாருந் துலைபுக்க பெரியோன் பெற்றி, மறந்தனாளுண்டே", "புக்கடைந்த புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க, மைக்கடங்கார் மதயானை வாள்வேந்தன்" (கம்ப. திருவவதார. 65, குலமுறை. 7, விபீடண னடைக்கல. 110, கும்பகருணன்வதை. 355); 'என்பும் உரியாதல், தன்னகம்புக்க குறுநடைப் புறவின் றபுதியஞ்சிச் சீரைபுக்கோன் முதலாயினோர்கட் காண்க' குறள். 72, பரிமேல்.

7. "காராஅங் கலித்த கண்ணகன் பொய்கை" பட்டின. 242.

9. கலி. கசஉ : 32 - 3.

7 - 10. 'முதலையும் இடங்கரும் காராமும் தம்மின் வேறெனப்படுமோவெனின், காராஅங் கலித்த......இலஞ்சியென வேறெனக் கூறப்பட்டனவென்பது' தொல். மரபு. சூ. 41 - 3, பேர்.

11. புறநா. உ0க : 9; "செம்பியன் றன்ன செஞ்சுவர்" (மதுரை. 485); "செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்" (நெடுநல். 112); "செம்புறழ் புரிசை" (அகநா. ரூஎ௫); "செம்மைச்சே ரிஞ்சி", "செம்





வம்பணி யானை வேந்தகத் துண்மையின்
நல்ல வென்னாது சிதைத்தல்
வல்லையா னெடுந்தகை செருவத் தானே1.

* திணை - வாகை ; துறை - அரசவாகை; முதல்வஞ்சியுமாம்.
அவனை †மாறேக்கத்து நப்பசலையார் பாடியது.

இ - ள்.—நஞ்சுடைத்தாகிய வெளிய பல்லினையுடைய ஐந்துபடம் பொருந்திய தலையைச்சுமந்த [2]சினம் பொருந்திய வெய்ய திறலையுடைய பாம்பு புக்கதாக வானம் தீப்பிறக்கும்பரிசு முறுகிப் பசிய கொடியினை யுடைய பெரிய மலைமுழையின்கண்ணே இடியேறு எறிந்தாற்போல, புறவுற்ற துயரத்தைக் கெடுத்த வெள்வேலோடு சினம்பொருந்திய படை யையுடைய செம்பியன்மரபிலுள்ளாய்! காராம்செருக்கிய குழிந்த இடத்தை யுடைய அகழியினையும், இடம் கரிதாகிய ஆழத்தின்கட் சேரத்திரண் டோடி இடையாமத்து ஊர்காப்பாருடைய விளக்குநிழலைக் கவரும் கடிய மாறுபாடுபொருந்திய முதலையையுடைய நீர்மிக்க மடுவினையும், செம்பு பொருவும் மதிலையும் உடைய தலைமைபொருந்திய பழைய ஊரினுள்ளே கச்சணிந்த யானையையுடைய அரசுண்டாகலின், அவற்றை நல்லவென்று பாராது அழித்தலைவல்லையாயிருந்தாய் பெருந்தகாய்! போரின்கண். எ-று.

இலஞ்சியையுடைய அகழியென மாறிக்கூட்டினும் அமையும்; இப்பொருட்கும் காராம் கலித்தலை அகழிக்கு அடையாக்குக.

காராம் - முதலையுள் ஒருசாதி.

செம்பியன்மருக! நெடுந்தகாய்! விடரகத்து நாகம்புக்கென உரு மெறிந்தாங்கு மூதூரகத்து வேந்துண்மையின், செருவத்துச் சிதைத்தல் வல்லையென மாறிக்கூட்டுக.

புள்ளுறு புன்கண் தீர்த்த போருளிஞேன் மருகனுயும் செருவின் கண் இவற்றை நல்லவென்று பாராது அழித்தல் வல்லையாயிருந்தாயென அவன் மறம் வியந்து கூறியவாறு.

ஐந்தலையென்றதற்கு ஐந்துதலையெனினும் அமையும்.

---

படுத்த செழும்புரிசை'', ''செம்புகொப் புனைந்த மூன்றுமதில்'' (தே); ''செம்புகொண் டன்ன விஞ்சித் திருநகர்'' சீவக. 439.

[1]மு. முரணியபுறத்தோ னணங்கியபக்கமென்னுந் துறைக்கு மேற் கோள்; தொல். புறத்திணை. சூ. 10, இளம்.

[2] "விரிநிற நாகம் விடருள தேனும், உருமின் கடுஞ்சினஞ் சேணின்று மூட்கும்" நாலடி. 164.

பி - ம். *திணை - உழிஞை; துறை - குற்றுழிஞை. †மாரோகத்து.



இடங்கருங்குட்டமென்பதனுள், உம்மையை அசைநிலையாக்கி, இடங்கரையுடைய குட்டமென்று உரைப்பாரும் உளர்.

இடங்கரீட்டத்தென்று பாடம் ஓதுவாரும் உளர். (௩௭)

---

(௩௮) வரைபுரையு மழகளிற்றின்மிசை
வான்றுடைக்கும் வகையபோல
விரவுருவின கொடிநுடங்கும்
வியன்றானை விறல்வேந்தே
நீ, உடன்றுநோக்கும்வா யெரிதவழ
நீ, நயந்துநோக்கும்வாய் பொன்பூப்பச்
செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்
வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்

---

1. இவ்வடி முதற்கு முதலேவந்த உவமைக்கும் (தொல். உவம. சூ. 6, பேர்.), 'ஒப்பு' புறப்பொருட்கண்வந்ததற்கும் (தொல். பொருளியல், சூ. 53, ந.), 'மழ' என்னும் உரிச்சொல் இளமைப்பொருளில் வந்ததற்கும் (தொல். உரி. சூ. 15, சே.; ஷை. ஷை. சூ. 14, ந.; இ. வி. சூ. 281,

உரை) மேற்கோள்.

4. வியலென்னும் உரிச்சொல் வியனென்று திரிந்துநிற்றற்கு மேற்
கோள்; தொல். உரி. சூ. 66, ந.

5 - 6. புறநா. உ௬௧ : 4 - 5, அடிக்.; "மலர்ந்தோர் தேஎ மன்றம் பாழ்பட, நயந்தோர் தேஎ நன்பொன் பூப்ப" பெரும்பாண். 423 - 4.

7 - 8. புறநா. ௬௦ : 1; "அகப்படு பொறியி னுரை யாக்குவா
ரியாவ ரம்மா, மிகைப்படு பொறியி னுரை வெறியராச் செய்ய லாமோ,
நகைக்கதிர் மதியம் வெய்தா நடுங்கச்சுட் டிடுத லுண்டோ, பகைக்கதிர்ப்
பருதி சந்து மாவியும் பயத்த லுண்டோ" வளையாபதி.

"இனப்பொருளைச் சுட்டுதலின்றிப் பண்படுத்து வழங்கப்படும் பெயர்
வழக்குநெறியல்ல செய்யுணெறி யென்றவாறு; உ - ம். 'செஞ்ஞாயிற்று . . வேண்டினும்' எனவரும்; பலபொருட்குப் பொதுவாகிய சொல்லன்றே ஒரு
பொருட்குச் சிறந்த பண்பான் விசேடிக்கப்படுவது; ஞாயிறு திங்க
ளென்பன பொதுச்சொலன்மையிற் செஞ்ஞாயிறென்றும் வெண்டிங்க
ளென்றும் விசேடிக்கப்படாவாயினும், செய்யுட்கண் அணியாய் நிற்றலின்
அமைக்கவென்றார்", "செஞ்ஞாயிற்று நிலவு......வெயில் வேண்டினும்" என இவை கருஞாயிறும் கருந்திங்களுமாகிய இனமின்மையின்

விசேடிக்கப்படாவாயினும் செய்யுட்கு அணியாய் நிற்றலின் அமைத்தார்”
(தொல். கிளவி. சூ. 18, சே. ந.); செம்மை வெண்மை; இங்கே



வேண்டிய துவிளைக்கு மாற்றலை யாகலின்
நின்னிழற் பிறந்து நின்னிழல் வளர்ந்த
எம்மள வெவனோ மற்றே யின்னிலைப்
பொலம்பூங் காவி னன்னாட் டோரும்
செய்வினை மருங்கி னெய்த லல்லதை
உடையோ ரீதலு மில்லோ ரிரத்தலும்
கடவ தன்மையிற் கையற வுடைத்தென
ஆண்டுச்செய் நுகர்ச்சி யீண்டுங் கூடலின்
நின்னா டுள்ளுவர் பரிசிலர்
ஒன்னார் தேஎத்து நின்னுடைத் தெனவே.[1]

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.

அவன் ‘எம்முள்ளீர் எந்நாட்டீர் ?’ என்றற்கு ஆவூர்மூலங்கிழார் பாடியது.

இ - ள்.—மலையையொக்கும் இளங்களிற்றின்மேல் ஆகாயத்தைத் தடவும் கூறுபாட்டை யுடையனபோல விரவின பலநிறத்தை யுடையன வாகிய கொடிகள் அசைந்து தோன்றும் பாந்த படையையுடைய விறல் வேந்தே! நீ முனிந்து பார்க்குமிடம் தீப்பாக்க, நீ அருளிப்பார்க்குமிடம் பொன்பொலியச் செஞ்ஞாயிற்றின்கண்ணே நிலவுண்டாகவேண்டினும், வெளிய திங்களின்கண்ணே வெயிலுண்டாகவேண்டினும் நீ வேண்டிய பொருளை உண்டாக்கும் வலியையுடையையாகலின், நினது நிழற்கண்ணே பிறந்து நினது நிழற்கண்ணே வளர்ந்த எமது நினைவெல்லை சொல்ல வேண்டுமோ? வேண்டாவன்றே; இனியநிலையையுடைத்தாகிய பொற்பூப்

---

இனமில்லாதவற்றிற்கு அடையாக வந்தனவென்பர்; நன். சூ. 400, மயிலை.; நன். சூ. 401, வி.; இ. வி. சூ. 312, உரை; பிரயோக. 23.

12 - 5. ஈதல் ஏற்றல் முதலியன இல்லாமையால் தேவருலகம் அவமதிக்கப்படுதலை, "ஈண்டுச் செய்வினை யாண்டுநுகர்ந் திருத்தல், காண்டகு சிறப்பினுங் கடவுள ரல்ல, தறஞ்செய் மாக்கள் புறங்காத் தோம்புநர், நற்றவஞ் செய்வோர் பற்றற் முயல்வோர், யாவரு மில்லாத் தேவர்நன் னாட்டுக், கிறைவ னாகிய பெருவிறல் வேந்தே" (மணி. கச: 38 - 43), "ஈவாரு மேற்பாருமின்றி எல்லாரும் ஒரு தன்மையராதலின் (ஒப்புரவு) புத்தேளுலகத்து அரிதாயிற்று", "ஈவாருங் கொள்வாரு மில்லாத வானத்து, வாழ்வாரே வன்க ணவர்" (குறள். 213, 1058, பரிமேல்.) என்பவற்றாலும் உணர்க.

[1]ழ. புகழ்ச்சிக்கண் வந்த செந்துறைப் பாடாண்பாட்டிற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 27, ந.

பொருந்திய கற்பகக்காவையுடைய நல்ல விண்ணுலகத்தவரும் தாம் செய்த நல்வினையாலுள்ள இன்பத்தின் பக்கத்தைப் பொருந்துவதல்லது, செல்வமுடையோர் வறியோர்க்கு வழங்குதலும் வறியோர் செல்வமுடையோர்பாற் சென்றிரத்தலும் ஆண்டுச் செய்யக்கடவதல்லாமையான், அது செயலறவுடைத்தெனக் கருதி, அவ்விடத்துநுகரும் நுகர்ச்சி இவ்விடத்தும் கூடுதலான், நின்னாட்டை நினைப்பர் பரிசிலர்; பகைவர்தேயத்திருந்தும், நின்னாடு நின்னையுடைத்தென்று கருதி ஆதலால்.—எ - று.

மற்று : அசை.

வேந்தே! நீ வேண்டியது விளைக்கும் ஆற்றலையாகலின், விண்ணுலகத்து நுகர்ச்சி ஈண்டுங்கூடலின், ஒன்னார் தேயத்திருந்தும், பரிசிலர், நின் நாடு நின்னையுடைத்தென்று நின்நாட்டையுள்ளுவர்; ஆதலான், நின்னிழற் பிறந்து நின்னிழல் வளர்ந்த எம்மளவு எவனோவென மாறிக்கூட்டுக.(௩௮)

---

(௩௯) புறவி னல்லல் சொல்லிய கறையடி
யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக்
கோனிறை துலாஅம் புக்கோன் மருக
ஈதனின் புகழு மன்றே சார்தல்
ஒன்னா ருட்குந் துன்னருங் கடுந்திறற்
றூங்கெயி லெறிந்தநின் னூங்கணோர் நினைப்பின்

1. சொல்லிய - களைய; புறநா. ௪௦ : 7; "துணைவனுக் குற்ற

துன்பஞ் சொல்லிய தொடங்கி ஞளே'' சீவக. 1146.

1 - 3. புறநா. ௬எ : 5 - 6, அடிக்.

5 - 6. செம்பியன் பகைவருடைய தூங்கெயிலெறிந்தமை பின்வருவனவற்ருலும் விளங்கும்:—"ஒன்ஞ, ரோங்கெயிற் கதவ முருமுச்சுவல் சொறியும், தூங்கெயி லெறிந்த தொடிவிளங்கு தடக்கை, நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்'' (சிறுபாண். 79 - 82); "வீங்குதோட் செம்பியன் சீற்றம் விறல்விசும்பிற், றூங்கு மெயிலுந் தொலைத்தலால்'' (பழ. 49); "வெயில்விளக்கு மணிப்பூண் விண்ணவர் வியப்ப, எயில்மூன்றெறிந்த விகலவேற் கொற்றமும்'', "தூங்கெயின் மூன்றெறிந்த சோழன்காணம்மானை'' (சிலப். உஎ : 164 - 5, உக : "வீங்குநீர்''); "தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்'' (மணி. க : 4); "திறல்விளங் கவுணர் தூங்கெயி லெறிந்த, விறன்மிகு முரசின் வெல்போர்ச் சோழன்'' (தொல். களவு. சூ. 11, ந. "கண்ணே''); "தேங்குதூங்கெயி லெறிந்தவவனும்'' (கலிங்க. இராச. 17); "வாங்குந் திருக்கொற்ற வாளொன்றின் வாய்



அடுதனின் புகழு மன்றே கெடுவின்று
மறங்கெழு சோழ ருறந்தை யவையத்
தறநின் று நிலையிற் ருகலி னதனால்
முறைமைநின் புகழு மன்றே மறமிக்
கெழுசமங் கடந்த வெழுவுறழ் திணிதோட்
கண்ணார் கண்ணிக் கலிமான் வளவ

யாங்கன மொழிகோ யானே யோங்கிய
வரையளந் தறியாப் பொன்படு நெடுங்கோட்
டிமயஞ் சூட்டிய வேம விற்பொறி
மாண்வினை நெடுந்தேர் வானவன் றொலைய
வாடா வஞ்சி வாட்டுநின்
பீடுகெழு நோன்றாள் பாடுங் காலே.

திணையும் துறையும் அவை.

அவனை மாறோக்கத்து நப்பசலையார் பாடியது.

இ - ள்.—புறவினது வருத்தத்தைக் களையவேண்டிக் கறைபொருந்திய அடியினையுடைய யானையினது வெளிய கோட்டாற் கடைந்து செறிக்கப்பட்ட வெளிய கடையினையுடைய கோலாகிய நிறுக்கப்படும் துலாத்தின்கண்ணே துலைபுக்க செம்பியனது மரபினுள்ளாயாதலான், இரந்தோர்க்குக் கொடுத்தல், நினக்கு இயல்பாவதல்லது புகழுமல்லவே; அசுரர்க்குப் பகைவராகிய தேவர்கள் கிட்டுதற்கு வெருவும் அணுகுதற்கரிய மிக்க வலியையுடைய ஆகாயத்துத் தூங்கெயிலை அழித்த நின்னுடைய முன்னுள்ளோரை நினைப்பின், ஈண்டுள்ள பகைவரைக் கொல்லுதல் நினது புகழுமல்லவே; கேடின்றி, மறம்பொருந்திய சோழரது உறையூர்க்கண் அவைக்களத்து அறம்நின்று நிலைபெற்றதாதலால், முறைமை

---

வாய்ப்பத், தூங்கும் புரிசை துணித்தகோன்" (இராசராச. 13); "கூடார்தந், தூங்கு மெயிலெறிந்த சோழனும்" விக்கிரம. 8 - 9.

8 - 9. புறநா. ௫௮ : 9; "மறங்கெழு சோழ ருறந்தை யவையத், தறங்கெட வறியா தாங்கு" (நற். ௪00); "ஆரங் கண்ணி யடுபோர்ச் சோழர், அறங்கெழு நல்லவை யுறந்தை" அகநா. கூ௩.

12. "கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்" பொருந. 148.

15. "விடர்ச்சிலை பொறித்த வேந்தன்" (சிலப். உரு : 82; மணி. உஅ : 104); "விடர்ச்சிலை பொறித்த விறலோன்" சிலப். உஅ : 136.

14 - 5. புறநா. உ : 24, அடிக்.



செய்தல் நினக்குப் புகழுமல்லவே; அதனால், மறம் மிக்கெழுந்திருந்த போரை வென்ற கணையமரத்தோடு மாறுபடும் தசைசெறிந்த தோளினையும், கண்ணிற்கு ஆர்ந்த கண்ணியையும், மனஞ் செருக்கிய குதிரையையுமுடைய வளவ! எவ்வாறு கூறுவேனோ யான்? உயர்ந்த எல்லை அளந்தறியப்படாத பொன்படுகின்ற நெடிய சிகரங்களையுடைய இமயமலையின்கட் குட்டப்பட்ட காவலாகிய விற்பொறியையும், மாட்சிமைப்பட்ட தொழில் பொருந்திய நெடிய தேரையுமுடைய சேரன் அழிய அவனது அழிவில்லாத கருவூரை அழிக்கும் நினது பெருமைபொருந்திய வலியதாளைப் பாடுங்காலத்து.—எ - று.

நின்னைப்பாடுங்காலென்பார், அவனது சிறப்புத்தோன்றத் தாள் பாடுங்காலென்றார்; தாளை முயற்சியெனினும் அமையும்.

நிறைதுலாம் புக்கோன் மருக! நீ அவன் மருகனாதலால், ஈதல் நின் புகழுமன்று; தூங்கெயிலெறிந்த நின் ஊங்கணோர் நினைப்பின், அடுதல் நின்புகழுமன்று; உறந்தை அவையத்து அறம் நின்றுநிலையிற்றாதலின், முறைமை நின் புகழுமன்று; அதனால், கலிமான்வளவ! நின் தாள் பாடுங்கால், யான் யாங்கனம்மொழிகோவெனக் கூட்டுக.

அதனால், யாங்கனம் மொழிகோவென இயையும்.

மருகவென்புழி, ஆதலானென்பது ஆற்றலாற் போந்தபொருளெனக் கொள்க.

1 கறையடியென்பதற்கு உரலபோலும் அடியென்பாருமுளர். (௫௧)

1பெரும்பாண். 351, ந.

---

(௪௦) நீயே, பிற *ரோம்புறு மறமன்னெயில்
ஓம்பாது கடந்தட்டவர்
முடிபுனைந்த பசும்பொன்னின்
அடிபொலியக் கழறைஇய
வல்லாளனை வயவேந்தே
யாமேநின், இகழ்பாடுவோ †ரெருத்தடங்கப்
புகழ்பாடுவோர் பொலிவுதோன்ற

1 - 3. "புலவர் பூண்கட னாற்றிப் பகைவர், கடிமதி லெறிந்து குடுமி கொள்ளும், வென்றி" பெரும்பாண். 450 - 52.

2. கடந்தடுதல்: புறநா. ௮ : 5, ௨௫ : 16, ௮௦ : 9, ௧௪௦ : 1; கலி. ௨ : 4, ௨௭ : 15.

பி - ம். *ரோம்புற்றமன். †ரெருத்தமடங்க.



இன்று கண்டாங்குக் காண்குவ மென்றும்
இன்சொலெண் பதத்தை யாகுமதி பெரும
ஒருபிடி படியுஞ் சீறிடம்
எழுகளிறு புரக்கு நாடுகிழ வோயே.

திணை - அது; துறை - செவியறிவுறூஉ.

அவனை ஆவூர் மூலங்கிழார் பாடியது.

இ - ள்.—நீ, பகைவரது பாதுகாத்த மறம் நிலைபெற்ற அரண்களைப் பாதுகாவாது எதிர்நின்று அழித்து அவரைக்கொன்று அவர் மகுடமாகச் செய்யப்பட்ட பசும்பொன்னால் நினது அடிபொலிய வீரக்கழல் செய்து புனைந்த வலிய ஆண்மையையுடையை; வயவேந்தே! யாங்கள், நின்னை இழித்துரைப்போர் கழுத்திறைஞ்சப் புகழ்ந்துரைப்போர் பொலிவுதோன்ற இன்று கண்டாற்போலக் காண்போம்; எந்நாளும் இனிய மொழியோடு எளிய செவ்வியை யாகுக; பெரும! ஒருபிடி கிடக்கும் சிறிய இடம் எழு களிற்றியானையைப் பாதுகாக்கும் நாட்டையுடையோய்.—எ - று.

நாடுகிழவோய்! இன்சொல் எண்பதத்தை ஆகுமதி; அதனால், நின் இகழ்பாடுவோர் எருத்தமடங்கப் புகழ்பாடுவோர் பொலிவுதோன்ற யாம் இன்றுகண்டாங்குக் காண்குவமெனக் கூட்டுக.

வல்லாளனையென்பதனுள் ஐகாரம், முன்னிலை விளக்கிநின்றது; அசைநிலையுமாம். மதி: முன்னிலையசைச்சொல்.

'கழறைஇய வல்லாளன்' என்றதனாற் பகையின்மையும், 'ஒருபிடி படியுஞ் சீறிட மெழுகளிறு புரக்கும் நாடுகிழவோய்' என்றதனாற் பொருட்குறைவின்மையுங் கூறியவாறாயிற்று. (௪0)

---

9. "காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல், மீக்கூறு மன்ன னிலம்" குறள். 386.

8 - 9. செவியறிவுறுத்தற்கு மேற்கோள்; தொல். செய். சூ. 114, ந.

---

(௪க) காலனுங் காலம் பார்க்கும் பாராது

வேலீண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே

1 - 3. “செயிரிற் குறைநாளாற் பின்சென்று சாடி, உயிருண்ணுங் கூற்றமும் போன்ம்” (கலி. ௧0௫ : 37 - 8); “உண்ணுந் துணைக்காக்குங் கூற்று” (பழ. 89); “ஞாலத் தின்னுயிர் வாழ்வோர் நாப்பட், காலம் பார்க்குங் காலன் போல” (பெருங். க. 37 : 204 - 5); “சாற்றுநா ளற்ற



திசையிரு நான்கு *முற்க முற்கவும்
பெருமரத், திலையி னெடுங்கோடு வற்றல் பற்றவும்
வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவும்
அஞ்சுவரத் தகுந புள்ளுக்குர லியம்பவும்
எயிறுநிலத்து வீழவு மெண்ணெ யாடவும்
களிறுமேல் கொள்ளவுங் காழக நீப்பவும்
வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்
கனவி னரியன காணா நனவிற்
செருச்செய் முன்பநின் வருதிற னோக்கி
மையல் கொண்ட வேமமி லிருக்கையர்
புதல்வர் பூங்கண் முத்தி மனையோட்
கெவ்வங் கரக்கும் பைதன் மாக்களொடு
பெருங்கலக் குற்றன்றாற் றானே காற்றோ

தெரிகிழ்ந் தன்ன செலவிற்
செருமிகு வளவநிற் கிணை இயோர் நாடே.[1]

---

தெண்ணித் தருமம்பார்த், தேற்றும் விண்ணென்ப தன்றி யிவளைப்போல், நாற்றங் கேட்டலுந் தின்ன நயப்பதோர், கூற்றுண்டோ'' கம்ப. தாடகைவதை. 64.

'அடல்வேண்டிஞற்றுபவர்கண்' என்பதற்கு வேற்றுவேந்தரைக் கோறல் வேண்டியவழி அதனை அப்பொழுதே செய்யவல்ல வேந்தர் மாட்டு எனப் பொருள்கூறி இப்பகுதியை மேற்கோள்காட்டினர்; குறள். 893, பரிமேல்.

9 - 10. களிறென்றது பன்றியை உணர்த்திவருதற்கு இப்பகுதி மேற்கோள்; சிலப். கூ : 95 - 106, அடியார்.

"மிக்க வெயிற்றின கொம்பின பன்றி விறற்குரங்கு, தொக்கன தம்மைக் கனவினிற் காணிற் சுடர்மகுடச், சக்கர வர்த்திக ளாற்பய முண்டெனுந் தம்முயிர்க, ளுக்கன வாதல்செய் தாற்பொரு டேயும் பயமுடைத்தே'' கனநூல், 15.

14 - 5. மனைவியர்க்குத் தமது வருத்தம் தோன்றாமல் கணவர் மறைத்தலை, "கருங்கய னெடுங்கட் காதலி தன்னை...வருபனி கரந்த கண்ண னாகி'' (சிலப். கசு : 94 - 7) என்பதனாலும் அறிக.

6 - 16. "பிறவும்...தானே'': தோற்றோர் தேய்விற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 7, இளம்.

1மு. நிமித்தம்பற்றிவந்ததற்கும் (தொல். புறத்திணை. சூ. 30, இளம்.), பாடாண் கொற்றவள்ளைக்கும் (ஷை. ஷை. சூ. 34, ந.) ஓம்படை வாழ்த்திற்கும் (ஷை. ஷை. 36, ந.) மேற்கோள்.

பி - ம். *முற்கவும்.

திணை - வஞ்சி; துறை - கொற்றவள்ளை.

அவனைக் கோவூர்கிழார் பாடியது.

இ - ள்.—கூற்றும் தன்னால் உயிர்கொள்ளலாங்காலம் வருந்துணையும் பார்க்கும்; அவ்வாறு காலம்பாராது வேல்நெருங்கிய படையினையுடைய பெரியோர் மாளும்பரிசு நீ வேண்டியவிடத்தே கொல்லும் வெல்லும் போரையுடைய வேந்தே! எட்டுத்திசையும் எரிகொள்ளி எரிந்து வீழவும், பெரியமரத்தின்கண்ணே இலையில்லாத நெடியகோடாகிய வற்றல் பற்றவும், வெய்யசுடரையுடைய ஞாயிறு பலவிடத்தும் செறிந்துதோன்றவும், மற்றும் அஞ்சத்தகுவனவாகிய புட்கள் குரலிசைப்பவும், பல்லு நிலத்தின் கண்ணே வீழவும், எண்ணெயை மயிரின்கண்ணே வார்க்கவும், [1]பன்றியேற்றை ஏறவும், ஆடையைக் களையவும், வெளிதாகிய வலிய படைக்கலம் தானிருந்த கட்டிலுடனே மறியவும், இங்ஙனம் கனவினும் மெய்ம்மையினும் பொறுத்தற்கரியவற்றைக் கண்டு போர்செய்யும் வலியையுடையோய்! நின் மேற்செலவின் கூறுபாட்டைக்கருதி, மயக்கம்பொருந்திய காவலில்லாத இருத்தலையுடையராய்த் தம் பிள்ளைகளுடைய பூப்போலும் கண்ணை முத்தங்கொண்டு தம்மனைவியர்க்குத் தமது வருத்தந்தோன்றாமல் மறைக்கும் துன்பத்தையுடைய ஆடவரோடு மிக்க கலக்கமுற்றது; காற்றுடன் எரி நிகழ்ந்தாற்போன்ற செலவையுடைய போரின்கண்ணே மிக்க வளவ! நின்னைச் சினப்பித்தோருடைய நாடு.—எ - று.

உற்கலென்றது, வீழ்தலை. உற்கமுதலியநான்கும் உற்பாதமாய் நனவிற் காணப்பட்டன; எயிறுநிலத்து வீழ்தல் முதலாயின கனவிற் காணப்பட்டன.

வரு திறன் : ஈண்டுச் செலுந்திறனென இடவழுவமைதியாய் நின்றது.

'மனையோட் கெவ்வங் காக்கும்' என்பது, [2]"ஏவ விளையர் தாய்வயிறு கறிப்ப" என்றாற்போலப் பன்மைக்கேற்ப நின்றது.

தான் : ஈண்டு அசைநிலை.

பெருமரத்துப் பற்றவுமென இயையும்.

இலையினெடுங்கோடு வற்றல்பற்றவுமென்பதற்கு நெடுங்கோட்டின் கண்ணே இலையில் வற்றற்றன்மைபற்றவுமென உரைப்பினும் அமையும்.

வேந்தே! முன்ப! வளவ! நீ இத்தன்மையையாதலால், நிற்சினைஇயோர்நாடு, பைதன்மாக்களொடு பெருங்கலக்குற்றதெனக் கூட்டுக.

காற்றோடு எரி நிகழ்ந்தன்ன செலவிற் செருமிகு வளவவென மன்னவன் புகழும், நிற்சினைஇயோர் நாடு பைதன்மாக்களொடு பெருங்கலக்

[1]களிறு - பன்றி; தொல். மரபு. சூ. 34.
[2]தமிழ்நெறிவிளக்கம், மேற்.



குற்றன்றென ஒன்னார்நாடு அழிபிரங்கியதும் கூறுதலால், இது கொற்றவள்ளை யாயிற்று. (சுக)

---

(சஉ) ஆனா வீகை யடுபோ ரண்ணனின்
யானையு மலையிற் றோன்றும் பெருமநின்
தானையுங் *கடலென முழங்குங் கூர்நுனை

வேலு †மின்னின் விளங்கு முலகத்
தரைசுதலை பனிக்கு மாற்றலை யாதலிற்
புரைதீர்ந் தன்றது புதுவதோ வன்றே
தண்புனற் பூச லல்லது நொந்து
களைக வாழி வளவ வென்றுநின்
முனைதரு பூசல் கனவினு மறியாது
புலிபுறங் காக்குங் குருளை போல
மெலிவில் செங்கோ னீபுறங் காப்பப்
பெருவிறல் யாணர்த் தாகி யரிநர்
கீழ்மடைக் கொண்ட வாளையு முழவர்
படைமிளிர்ந் திட்ட யாமையு மறைநர்
கரும்பிற் கொண்ட தேனும் பெருந்துறை
நீர்தரு மகளிர் குற்ற குவளையும்

---

1. புறநா. ௯௪ : 7.

2. யானைக்கு மலை: புறநா. ௯௮ : 1; பெரும்பாண். 352; மதுரைக். 46; மலைபடு. 572.

6. புறநா. எ௪ : 2.

9. இவ்வடியை மனத்துட் கொண்டு சிலப்பதிகார உரையில் 'பகைவர் தெறுதலைக் கனவிலுநினைந்தறியாதவெனவுமாம்' (சிலப். க௪: 200, உரை) என அடியார்க்குநல்லார் எழுதியுள்ளார்.

7 - 9. 'நீரழி பாக்கமென்றது வெள்ளத்தான் அழிவுபடினல்லது பகைவரான் அழியாத பாக்கமென்றவாறு' பதிற். கரு : 12, உரை.

10. "குட்டியைத் தின்ன லாமோ கோட்புலி புறத்த தாக" (சீவக.

1134); "புலிதானே புறங்காக்கக் குட்டிகோட் படாதென்ன, ஒலியாழி புலகுரைக்கு முரைபொய்யோ", "புன்புற மயிரும் பூவாக் கட்புலம் புறத்து நாறு, வன்பறழ் வாயிற் கவ்வி வல்லிய மிரிந்த" கம்ப. சூர்ப்ப நகை. 102, கடறுவு. 7.

பி - ம். * கடலி னொலிக்கும் வைந்நுதி. † மின்போ லவிர்வரு ஞாலத்து.



வன்புலக் கேளிர்க்கு *வருவிருந் தயரும்
மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந
மலையி னிழிந்து மாக்கட னோக்கி
நிலவரை யிழிதரும் பல்யாறு போலப்
புலவ ரெல்லா நின்னோக் கினரே.
நீயே, மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்துக்
கூற்றுவெகுண் டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்ணோக் கினையே.[1]

---

17 - 8. 'வன்புல..............பொருந : என்றக்கால் பகைவேந்தரை வென்றிகொள்ளுங்கால் அவர்தாமே தத்தம் பொருள் பிறர்க்களிப்பாரென் னுபொருள் தோன்றினுந்தோன்றுமென்பதல்லதும் ஒருதலையாக உள்ளுறையுவமங் கோடல் வேண்டுவதன்று; என்னை ? 'தாய்சாப்பிறக்கும்...அவனூர்' என்றாற்போலக் கூறாது அந்நாட்டுக்கருங்களமர்முதலாயினர் வருந்தாமற் பெறும் பொருள் பிறநாட்டார்க்கு விருந்துசெய்யத்

தருமென்று அந்நாட்டினது வளமை கூறினமையினென்பது' தொல். உவம. சூ. 31, பேர்.

19 - 21. "கல்வீ ழருவி கடற்படர்ந் தாங்குப், பல்வேறு வகையிற் பணிந்த மன்னர்" (பெரும்பாண். 427 - 8); "தூமலர் துவன்றிய கரை பொரு நிவப்பின், மீமிசை நல்யாறு கடற்படர்ந் தாஅங்கு, யாமவ ணின் றும் வருதும்" (மலைபடு. 51 - 3); "கடுவரை நீரிற் கடுத்துவர" (பு. வே. 11); "பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம்போய், மொய்கொள் வேலைவாய் முடுகு மாறுபோல்" கம்ப. கைகேயி. 15.

22. புறநா. ௩: 12 - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க; "கூற்று வெகுண்டு வரினு மாற்றுமாற் றலையே" பதிற். ௧௪ : 10.

23 - 4. 'கூற்று......நோக்கினையே : என்பது வெகுளியுவமம்' தொல். உவம. சூ. 19, பேர்.

24 - 4. புறநா. ௨௦௩; "நெருந லென்பது சென்றது நின்ற, இன்றுஞ் செல்லா நின்றது முன்சென்று, வருநாள் கண்டா ரியாரே யதனால், ஒருநா ளகப்படுத் துடையோ ரின்மையின், நல்லது நாடமி னுள்ளது கொடுமின், வழாஅ வின்பமும் புணர்மி னதாஅன்று, கீழது நீரகம் புகினு மேலது, விசும்பின் பிடர்த்தலை யேறினும் புடையது, நேமி மால்வரைக் கப்புறம் புகினுங், கோள்வாய்த்துக் கொட்குங் கூற்றத்து, மீளி கொடுமோ விலக்குதற் கரிதே" ஆசிரியமாலை.

[1]மு. கொள்ளார்தேஎங்குறித்த கொற்றமென்னுந் துறைக்கு மேற் கோள்; தொல். புறத்திணை. சூ. 10, இளம்.; ஷை. ஷை. சூ. 12, ந.

பி - ம். * வருவிருந்தமரும்.



திணை - வாகை; துறை - அரசவாகை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—அமையாத வண்மையையும், பகையைக்கொல்லும் பூசலை யுமுடைய தலைவ! நினது யானையும் மலைபோலத் தோன்றும்; பெரும! நின்படையும் கடல்போல முழங்கும்; கூரிய நுனையையுடைய வேலும் மின்போல விட்டுவிளங்கும்; இங்ஙனம் உலகத்தின்கண் வேந்து தலை நடுங்குதற்கு ஏதுவாகிய வலியையுடையையாதலால், குற்றம் தீர்ந்தது; அது நினக்குப் பழையதாய்வருகின்றது; குளிர்ந்த நீராலுள்ளதாகியபூசலல்லது வருந்தி 'எமது துயரத்தைத் தீர்ப்பாயாக வாழி வளவ!' என்று சொல்லி, நினது முந்துற்றுச் செல்லும் படையுண்டாக்கும் பூசலைக் கனவின்கண் ணும் அறியாது, புலி பாதுகாக்கும் குட்டிபோலக் குறைவில்லாத செவ்விய கோலால் நீ பாதுகாப்பப் பெரியவிசேடத்தையுடைய புதுவரு வாயையுடைத்தாய் நெல்லறுப்பார் கடைமடைக்கட் பிடித்துக்கொள்ளப் பட்ட வாளையும், உழுவார் படைவாளால் மறிக்கப்பட்ட ஆமையும், கரும் பறுப்பார் கரும்பினின்றும் வாங்கப்பட்ட தேனும், பெரிய துறைக்கண் நீரை முகந்துகொள்ளும் பெண்டிர் பறித்த செங்கழுநீருமென இவற்றை வன்புலத்தினின்றும் வந்தசுற்றத்தார்க்கு விருந்தாக விரும்பிக்கொடுக்கும் மென்புலத்தூர்களையுடைய நல்ல நாட்டுக்கு வேந்தே! மலையினின் றிழிந்து பெரிய கடலைநோக்கி நிலவெல்லையினின்று இழியும் பல யாறுகளை யொப்பப் புலவர்யாவரும் நின்னை நோக்கினர்; நீதான் அவர்க்குப் பரிசில் கொடுத்தற்பொருட்டுப் [1]பரிகாரமில்லாத கணிச்சி யென்னும் படைக்கலத்தை உயிர்வருந்தச் சுழற்றிக் கூற்றம் சினந்தாற் போலும் வலியுடனே நினக்கு மாறுதலையாகிய இருவேந்தருடைய நிலத்தைக் கொள்ள நோக்கினாய்.—எ - று.

அறியாதென்பதனை அறியாமலெனத் திரிப்பினும் அமையும்.

வன்புலம் - குறிஞ்சியும், முல்லையும். மென்புலம் - மருதமும், நெய்தலும்.

கணிச்சியைக் குந்தாலியென்றும், மழுவென்றும் சொல்லுவர். யாணர்த்தாகி விருந்தயரும் நன்றுடென்க.

பொருந ! புலவரெல்லாம் நின்னோக்கினர்; நீ அரசுதலைபணிக்கும் ஆற்றலை யாதலின், இருவேந்தர் மண்ணோக்கினை; அதனால், இச்செய்தி புரைதீர்ந்தது, நினக்குப் புதுவதன்றாகலினெனக் கூட்டுக.

---

[1] மருந்து - பரிகாரம்; புறநா. ரு : 12; கலி. அக : 10.



புரைதீர்ந்தன்றென்பதற்கு உயர்ச்சி தீர்ந்ததெனப் பொருளாக்கி, பொருந! நீ ஆற்றலையாதலின், இருவேந்தர் மண்ணோக்கினை; புலவரெல்லாம் பரிசில் பெறுதற்பொருட்டு நின்னோக்கினர்; இச்செய்தி நினக்குப் புதிதன்று; ஆகலின் உயர்ச்சி தீர்ந்ததென்றுரைப்பினும் அமையும். (சஉ)

---

(சங) நிலமிசை வாழ்ந ரலமர றீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
காலுண வாகச் சுடரொடு கொட்கும்
அவிர்சடை முனிவரு மருளக் கொடுஞ்சிறைக்
கூருகிர்ப் *பருந்தி னேறுகுறித் தொரீஇத்
தன்னகம் புக்க குறுநடைப் புறவின்

†தபுதி யஞ்சிச் சீரை புக்க
வரையா வீகை யுரவோன் மருக

---

2 - 4. "விண்செலன் மரபி னையர்" (முருகு. 107) என்பதற்கு 'ஞாயிற்றின் வெம்மையைப் பல்லுயிரும் பொறுத்தலாற்றாவென்று கருதித் தமதருளினாற் சுடரொடு திரிந்து அவ்வெம்மையைப் பொறுக்கின்ற முனிவர்' என்று நச்சினார்க்கினியர் விசேடவுரை யெழுதி இவ்வடிகளை மேற்கோள்காட்டியிருத்தலும், "சுடரொடு திரிதரு முனிவரும்" (சிலப். கஉ) என்பதும், 'ஆதித்தன் வெப்பந்தணிதல் காரணமாக அவனுடனே கூடித் திரியும் முனிவரும்', 'கதிரவனுடைய வெம்மை உயிர்களை வருத்தா மல் அதனைத் தாங்கி அவனுடனே சுழன்று திரிதலைச்செய்யுந் தெய்வ விருடிகளும்' என்னும் அதன் உரைகளும் இங்கே அறிதற்பாலன.

6 - 7. 'என்புமுரியாதல், தன்னகம்புக்க.........சீரைபுக்கோன் முதலாயினார்கட் காண்க' குறள். 72, பரிமேல்.

6 - 8. இவ்வடிகளாற் கூறிய அவ்வரசன்பெருமை கொடையால் உண்டாகிய வீரச்சுவைக்குதாரணம்; தொல். மெய்ப்பாடு. சூ. 9, பேர்.

4 - 8. புறநா. ருஎ: 5 - 6, அடிக்.; "சேர்ந்த புறவி னிறைதன். திருமேனி, ஈர்ந்திட் டியர்துலைதா னேறினன்—நேர்ந்த, கொடைவீர மோமெய்க் நிறைகுறையா வன்கட், படைவீர மோசென்னி பண்பு" தண்டி. மேற்.

பி - ம். * பருந்தி னெறி. † தபுதிகண் டஞ்சி.



நேரார்க் கடந்த முரண்மிகு திருவிற்

நேர்வண் கிள்ளி தம்பி வார்கோற்
*கொடுமர மறவர் பெரும கடுமான்
கைவண் டோன்ற லைய முடையேன்
ஆர்புனை தெரியனின் முன்னோ ரெல்லாம்
பார்ப்பார் நோவன †செய்யலர் மற்றிது
நீர்த்தோ நினக்கென வெறுப்பக் கூறி
நின்யான் பிழைத்தது நோவா யென்னினும்
நீபிழைத் தாய்போ னனிநா ணினையே
தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்குஞ் செம்மல்
இக்குடிப் பிறந்தோர்க் கெண்மை காணுமெனக்
காண்டகு மொய்ம்ப காட்டினை யாகலின்
யானே பிழைத்தனென் சிறக்கநின் னாயுள்
மிக்கு ‡வரு மின்னீர்க் காவிரி
எக்க ரிட்ட மணலினும் பலவே.[1]

திணையும் துறையும் அவை.

சோழன் நலங்கிள்ளிதம்பி மாவளத்தானும் தாமப்பல்கண்ணனும் வட்டுப்பொருவுழிக் கைகரப்ப வெகுண்டு வட்டுக்கொண்டெறிந்தானைச் சோழன்மகனல்லையென நாணியிருந்தானைத் தாமப்பல்கண்ணனார் பாடியது.

இ - ள்.—நிலத்தின்மேல் உயிர்வாழ்வார்க்கு வெம்மையான் உளதாகிய சுழற்சி நீங்கச் சுடுகின்ற கதிரையுடைய ஞாயிற்றினது வெப்பத்தைத் தாம் பொறுத்துக் காற்றை உணவாகக் கொண்டு அச்சுடருடனே சூழவரும் விளங்கிய சடையையுடைய அருந்தவரும் வியப்பான் மயங்க, வளைந்த சிறகினையும் கூரிய உகிரினையுமுடைய பருந்தினது எறிதலைக்

கருதி அதனைத் தப்பித் தன்னிடத்தை யடைந்த குறிய நடையையுடைய புறவினது அழிவிற்கு அஞ்சித் தன்னழிவிற்கு அஞ்சாது துலாத்தலையுட் புக்க வரையாத வண்மையையுடைய வலியோனது மரபினுள்ளாய்! பகை வரை வென்ற மாறுபாட்டான் மிக்க செல்வத்தையுடைய தேர்வண்

---

[1] மு. 'நிலமிசைவாழ்நரென்னும் புறப்பாட்டுப் புலவன் அரசனை வைது ஆறி அது நன்குரைத்தல்; அஃது இயற்கைவகையானன்றிச் செயற்கைவகையாற் பரவலும் புகழ்ச்சியுந் தொடர்ந்த முன்னோர் கூறிய குறிப்பு' தொல். புறத்திணை. சூ. 27, ந.

பி - ம். * கொடுவின் மறவர். † செய்யார். ‡ வருநீர்க்.



கிள்ளிக்குத் தம்பி! நீண்ட அம்பினையும் வளைந்த வில்லினையுமுடைய மறவர்க்குத் தலைவ! விரைந்த குதிரையையுடைய கைவள்ளியதோன்றல்! நினது பிறப்பின்கண் ஐயப்பாடுடையேன்; ஆத்தியாற் செய்யப்பட்ட தாரையுடைய நினக்கு முன்னுள்ளார் யாவரும் பார்ப்பார் வெறுக்கத் தகுவன செய்யார்; மற்று இவ்வெறுக்கத்தக்க செய்கை நினக்கு நீர்மையை யுடைத்தோவென்று நீ வெறுக்கச்சொல்லி நினக்கு யான் செய்த தவற்றிற்கு வெருயென்னினும், நீ தவறுசெய்தாய்போல மிக நாணினாய்; இவ்வாறு தம்மைத் தப்பியவரைப் பொறுக்குந் தலைமை இக்குலத்தின்கட் பிறந்தோர்க்கு எளிமையுடைத்துக்காணுமெனக் காணத்தக்க வலியை யுடையோய்! நீ அறிவித்தாய்; ஆகலின், யானே தவறுசெய்தேன்; பெருகி வரும் இனிய நீரையுடைய காவிரி கொழித்திடப்பட்ட மணலினும் பலவாக நின் வாழ்நாள் சிறப்பதாக.—எ - று.

முனிவரென்றது, வேளுவியோரை; அன்றி, சுடர் திரிந்தவழித் திரிந்து தவஞ்செய்யு முனிவரென்றும் உரைப்ப.

சீரை - துலாக்கோற்றட்டு.

'மற்றிது, நீர்த்தோ நினக்கென வெறுப்பக் கூறி' என்றது, சூதுபொருவுழிக் கையாற் கவறுபுதைப்ப வெகுண்டு [1]வட்டுக்கொண் டெறிந்தானை 'இவ்வாறு செய்தல் நின்பெருமைக்குப் பொருந்துமோ? அதனால் நின்பிறப்பிலே ஐயமுடையேன்' என்ற சொல்லை.

இது, பொறுத்தற்கரிய பிழையைப் பொறுத்த குணவென்றியான் அரசவாகையாயிற்று. (சரு)

---

[1]இச்செயல் தருமபுத்திரர்மீது கோபத்தால் விராடவரசன் கவறு கொண்டெறிந்த செய்தியை நினைப்பூட்டுகின்றது.

---

(சச) இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு *நெய்ம்மிதி பெறாஅ

---

2. நெற்கவளம் : புறநா. கஅச : 1; ருளஎ : 14; "காய்நெற் கற்றையின், பிடிநலந் தழீஇவரும் பெருங்கைக் குஞ்சரம்" (சீவக. 81.) நெய்ம்மிதி : "நெய்ம்மிதி கவளம்" (பெரும்பாண். 394); "நெய்ம்மலி கவளங் கொள்ளாது" (சீவக. 1076); "நெய்ம்மிதி கவளந் தெவிட்டிநின் றடர்க்கு நிழல்சுளி தறுகண்மால் யானை", "கைம்முகந் தெடுத்த நெய்ம்மிதி கவளங் களித்தெறி மும்மதக் களிறு" கூர்ம. சூரியன்மரபு. 8, 22.

பி - ம். * நெய்மிகுதி.



திருந்தரை நோன்வெளில் வருந்த *வொற்றி

நிலமிசைப் புரளுங் கைய வெய்துயிர்த்
தலமரல் யானை யுருமென முழங்கவும்
பாலில் குழவி யலறவு மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவு நீரில்
வினைபுனை நல்லி லினைகூஉக் கேட்பவும்
இன்னா தம்ம †வீங்கினி திருத்தல்
துன்னருந் துப்பின் வயமான் றோன்றல்
அறவை ‡யாயி னினதெனத் திறத்தல்
மறவை யாயிற் போரொடு திறத்தல்
அறவையு மறவையு மல்லை ╪யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவின்
நீண்மதி லொருசிறை யொடுங்குதல்
நாணுத்தக §வுடைத்திது காணுங் காலே.[1]

திணையும் துறையும் அவை.

அவன் ஆவூர்முற்றியிருந்த காலத்து அடைத்திருந்த நெடுங்கிள்ளியைக் கோவூர்கிழார் பாடியது.

இ - ள்.—கரிய பிடியினது ஈட்டத்தோடு பெரிய கயத்தின்கட் படியாவாய் நெல்லையுடைய கவளத்துடனே நெய்யால் மிதித்துத் திரட்டப்

---

4. பலவின்பாற் படர்க்கைவினைக்குறிப்புமுற்று வினையெச்சக் குறிப்பானதற்கு மேற்கோள்; நன். சூ. 350, மயிலை; நன். வி. சூ. 351; இ. வி. சூ. 250.

9. புறநா. ருசு : 11.

10. வயவென்னும் உரிச்சொல் 'வலி' என்னும் பொருளில் வந்ததற்கு மேற்கோள்; இ. வி. சூ. 290, உரை.

11 - 2. புறநா. கூகo : 1 - 2; "மறவையா மென்னுயிர்மேல் வந்தவிம் மருண்மாலை" சிலப். எ : 42.

16. புறநா. கூசு : 13.

11 - 6. "அறவை...காணுங்காலே" என இது செம்பொருட்செவியுறை; தொல். செய். சூ. 128, பேர்.

[1]ழ. அகத்தாசற்கு அழிந்து கூறியதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 10, இளம்.

பி - ம். *வெற்றி. †ஈண்டினிதிருத்தல். ‡ஆயினிற்றெனத் திறவைதன். ‡யாகித். §உடைத்தது.





பட்ட கவளமும் பெறுவாய்த் திருந்திய மருங்கையுடைய வலிய கம்பம் வருந்தச் சாய்த்து நிலத்தின்மேலே புரளும் கையையுடையவாய் வெய்தாக உயிர்த்துச் சுழலும் யானை உருமேறுபோல முழங்கவும், பாலில்லாத குழவி அழவும், மகளிர் பூவில்லாத வறிய தலையை முடிப்பவும், நீரில்லாத தொழில்புனைந்த நல்ல மனையிடத்துள்ளார் வருந்திக் கூப்பிடும் கூப்பீட்டைக் கேட்கவும், இவற்றிற்கு நாணுது இவ்விடத்து நீ இனிதாக இருத்தல் இன்னுது; நண்ணுதற்கு அரிய வலியையுடைய வலிய குதிரையை யுடைய தோன்றல்! அறத்தை உடையையாயின், இது நினதன்றே என்று சொல்லித் திறத்தல் செய்வாயாக; மறத்தையுடையையாயின், போரால் திறத்தல் செய்வாயாக; அவ்வாறன்றி, அறத்தையும் மறத்தையுமுடையையல்லையாகத் திறவாது அடைக்கப்பட்ட திண்ணிய நிலையை உடைத்தாகிய கதவினையுடைய நீண்டமதிலுள் ஒருபக்கத்தே ஒதுங்குதல் நாணுந் தன்மையையுடைத்து, இஃது ஆராயுங்காலத்து.—எ - று.

செய்யென ஒருசொல் வருவித்து உரைக்கப்பட்டது.

திறத்தலென்பதனை இது திறக்கவென வியங்கோளாக உரைப்பினும் அமையும்.

[1]அம்ம, கேட்பித்தற்கண் வந்தது.

'அறவியு மறவியு மல்லை யாயின்' என்று பாடமோதுவாரும் உளர்.

படியா, பெறு என்பன எதிர்மறைவினையெச்சமுற்று.

கையவென்பது, வினையெச்ச வினைக்குறிப்புமுற்று. (சச)

---

[1]"அம்ம கேட்பிக்கும்" தொல். இடை. சூ. 28.

---

(சரு) இரும்பனை வெண்டோடு *மலைந்தோ னல்லன்
கருஞ்சினை வேம்பின் றெரியலோ னல்லன்
நின்ன கண்ணியு மார்மிடைந் தன்றே, நின்னொடு
பொருவோன் கண்ணியு மார்மிடைந் தன்றே
ஒருவீர் தோற்பினுந் தோற்பதுங் குடியே
இருவீர் வேற லியற்கையு மன்றே, அதனாற்

---

1. 'தோடு' என்பது புல்லுறுப்பையுணர்த்துதற்கு மேற்கோள்; தொல். மரபு. சூ. 86, பேர்.

2. புறநா. எக : 4.

3 - 6. முன்னிலைகூடிய படர்க்கையும் முன்னிலைமுடிபேற்றதற்கு மேற்கோள்; நன். சூ. 333, மயிலை.

பி - ம். *மிலைத்தோனுமல்லன்.

குடிப்பொரு ளன்று நுஞ் *செய்தி கொடித்தேர்
நும்மோ ரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி யுவகை செய்யுமிவ் விகலே.

திணை - வஞ்சி; துறை - துணைவஞ்சி.

சோழன் நலங்கிள்ளி உறையூர்முற்றியிருந்தானையும் அடைத்திருந்த நெடுங்கிள்ளியையும் கோவூர்கிழார் பாடியது.

இ - ள்.—பெரிய பனையினது வெளிய தோட்டைச் சூடினோனல்லன்; கரிய கோட்டினையுடைய வேம்பினது தாரையுடையோனல்லன்; நின்னுடைய கண்ணியும் ஆத்தியாற் செறியக் கட்டப்பட்டது; நின்னுடன் பொருவானுடைய கண்ணியும் ஆத்தியாற் செறியக் கட்டப்பட்டது; ஆதலால், நும்முள், ஒருவீர்தோற்பினும் தோற்பது நுங்குடியன்றோ? இருவீரும் வெல்லுதல் இயல்புமன்று; ஆதலால், நுங்குடிக்குத் தக்கதொன்றன்று, நுமது செய்கை; கொடியாற் பொலிந்த தேரையுடைய நும்மைப் போலும் வேந்தர்க்கு உடம்பு பூரிக்கும் உவகையைச் செய்யும், இம் மாறுபாடு; ஆதலான், இது தவிர்தலே நுமக்குத் தக்கது.—எ - று.

நினகண்ணியுமென்பது, நின்னகண்ணியுமென விகாரமாயிற்று.
அதனுலென்பதனை ஒழித்தும் பாடமோதுப.
இது, சந்துசெய்தலால் துணைவஞ்சியாயிற்று. (சுடு)

---

9. மெய்ம்மலியுவகை : குறுந். ௩௬௮ : 7; கலி. ௪௦: 32.
பி - ம். *செய்கை.

(சகா) நீயே, புறவி னல்ல லன்றியும் *பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை
இவரே, புலனுழு துண்மார் புன்க ணஞ்சித்
தமதுபகுத் துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்
களிறுகண் டழூஉ மழாஅன் மறந்த
புன்றலைச் சிறாஅர் †மன்றுமருண்டு நோக்கி
விருந்திற் புன்கணோ வுடையர்

---

1 - 2. புறநா. ருஎ : 5 - 6, அடிக்.
3. புலனுழுதுண்மார்: புறநா. உ0சு : 2 - 5, அடிக்.
பி - ம். *பிறவும் பலவும். †மன்றமருண்டு.



கேட்டனை யாயினீ வேட்டது செய்ம்மே.[1]

திணையும் *துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலயமான் மக்களை யானைக்கிடுவுழிக் கோவூர்கிழார் பாடி உய்யக்கொண்டது.

இ - ள்.—நீதான், புறவின் அல்லலன்றியும் பிறவும் உற்ற துன்பம் பலவற்றையும் தீர்த்த சோழனுடைய மரபிலுள்ளாய்; இவர்தாம், அறிவான் உழுதுண்ணுங் கற்றோரது வறுமையை யஞ்சித் தம்முடைய பொருளைப் பகுத்துண்ணும் குளிர்ந்த நிழலையுடையாராய் வாழ்வாரது மரபினுள்ளார்; இவர், இப்பொழுது களிற்றைக் கண்டு தம் இளமையால் தாம்

முன்பு வெருவியழுகின்ற அழுகையை மறந்த புல்லிய தலையையுடைய சிறுபிள்ளைகள்; மன்றை வெருவிப்பார்த்து முன்பு அறியாத புதியதோர் வருத்தத்தையுடையர்; இது கேட்டாயாயின், நீ விரும்பியதைச் செய்வாயாக.—எ - று.

தண்ணிழல்வாழ்நர் சிறு அரென இயைப்பினும் அமையும்.

அழாஅல் களிறுகண்டு மறந்தவெனக் கூட்டுக.

நீ புறுமுதலாயினவற்றின் துயர்தீர்த்தற்கு உயிர்க்கொடை பூண்டோன் மருகனாதலானும், இவர் கற்றோர் வறுமையஞ்சிப் பகுத்துண்ணும் தண்ணிழல்வாழ்நர் மரபினுள்ளாராதலானும், இவர், நின்னால் அருளத்தகினல்லது முனியத்தகாரென்பதாம்.

இதுவும், இவரைக் கொல்லாமற் சந்துசெய்வித்தலின் துணைவஞ்சி ஆயிற்று.

---

1மு. துணைவஞ்சியென்னுந் துறைக்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. 7, இளம்.); இப்பாட்டு மேற்செலவின்கண் அடங்காமையின் துணைவஞ்சியன்றென்றும், பாடாண்டிணையென்றும் கூறுவர்; ஷை. ஷை. ஷை. 8, ந.

பி - ம். திறை இயன்மொழி.

---

(சஎ) வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய வென்னாது சுரம்பல கடந்து

---

1. புறநா. ளஎ0 : 11; "பழுமர முள்ளிய பறவையின்...புக்கு"

(பொருந. 64 - 7); "பழுமரந் தேரும் பறவை போல..பாண" (பெரும்பாண். 20 - 22); "பழந்தேர் வாழ்க்கைப் பறவை போல.....துவன்றி" (மதுரைக்.



வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி
ஓம்பா துண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் *தீதறிந் தன்றோ வின்றே, திறப்பட
நண்ணார் நாண வண்ணாந் தேகி
ஆங்கினி தொழுகி னல்ல †தோங்குபுகழ்
மண்ணாள் செல்வ ‡மெய்திய
நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே.[1]

திணையும் துறையும் அவை.

சோழன் நலங்கிள்ளியுழைநின்று உறையூர்புகுந்த ǂஇளந்தத்தனென்னும் புலவனைக் காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றுவந்தானென்று §கொல்லப்புக்குழிக் கோவூர்கிழார் பாடி உய்யக்கொண்டது.

---

576 - 80); "கனிபொழி கானங் கிளையொ டுணீஇய, துனைபறை நிவக்கும் புள்ளின மான்...நன்னற் படர்ந்த கொள்கையொடு" மலைபடு. 54 - 64.

'படர்' என்பது உள்ளுதலாகிய குறிப்புணர்த்துதற்கு இவ்வடிமேற்கோள்; தொல். உரி. சூ. 44, சே.; தெய்வச்; இ. வி. சூ. 282, உரை.

3. "வல்லாங்குச் செய்து" மணி. உரு : 44.

6. மூ. புறநா. உ0சு : 4.

குவ்வுருபு பொருட்டுப்பொருண்மைக்கண் வந்ததற்கு 'வரிசைக்கு வருந்தும்' என்பது மேற்கோள்; சிலப். பதி. 5, அடியார்.; நன். சூ. 297, மயிலை.

[1]மு. துணைவஞ்சியென்னுந் துறைக்குமேற்கோள் (தொல். புறத்திணை. சூ. 7, இளம்.); இப்பாட்டு மேற்செலவின்கண் அடங்காமையின் துணைவஞ்சியன்றென்றும், பாடாண்டிணை யென்றும் கூறுவர் (ஷை. ஷை. ஷை. 8, ந.); "வள்ளியோர்ப் படர்ந்து......செம்மலு முடைத்தே: இது சோழன் நலங்கிள்ளியுழைநின்று உறையூர்புக்க இளந்தத்தன் என்னும் புலவனைக் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றுவந்தானென்று கொல்லப்புக்குழி அவ்வரசற்கு வருகின்ற துகளினைக் கோவூர்கிழார் புலப்படாமற் செய்யுள்செய்து, தமது சொல்லை அரசன் கேட்டு அஞ்சினானென்னும் பொருளை நிறுத்துதலிற் பழிகரப்புச்செவியுறையங்கதமாயிற்று; இவ்வாறே புறத்தினுட் செவியுறைச்செய்யுட்கள் பலவும் வருவனவுள; அவ்வேறுபாடுணர்ந்துகொள்க" ஷை. செய். சூ. 128,

பி - ம். *நீங்கறிந்தன்றே. † ஓங்கிய. ‡ எய்தினை இளந்தத்தனைக். §கொலைபுகுவழிச்.



இ - ள்.—வண்மையையுடையோரை நினைத்துப் பழுமரந்தேரும் பறவைபோலப் போகி நெடியவென்றுகருதாது அரியவழி பலவற்றையுங் கழிந்து [1]திருந்தாத நாவால் தாம்வல்லபடி பாடி ஆண்டுப்பெற்ற பரிசிலான் மகிழ்ந்து சுற்றத்தையூட்டித் தாமும் பொருளைப்பாதுகாவாது உண்டு உள்ளம் மலர்ந்து வழங்கித் தம்மைப் புரப்போராற்பெறும் சிறப்பு ஏதுவாக வருந்தும் இப்பரிசிலான் வாழும் வாழ்க்கை,பிறர்க்குச் செய்யும் கொடுமையறிந்ததோவெனின், இல்லை; கூறுபடக் கல்விமுகத்தால் தம்மொடு மலைந்தோர் நாணத் தமது கல்வியான் வென்று தலையெடுத்துநடந்து அவ்

விடத்து இனிதாக ஒழுகினல்லது, உயர்ந்த புகழுடைய நிலமாளும் திருப் பொருந்திய நம்மை யொக்கும் தலைமையுமுடைத்து.—எ - று.

ஓங்கியவென்பதூஉம், செல்வமுமுடைத்தென்பதூஉம் பாடம்.

சுரம்பல கடந்து புள்ளிற் போகியென மாறிக் கூட்டுக.

பரிசில்வாழ்க்கை, நம்மோரன்ன செம்மலுமுடைத்து; ஆதலால், நண்ணார் நாண *இனிதொழுகினல்லது, பிறர்க்குத் தீதறிந்தன்றோ? இன்றெனக் கூட்டுக.

இக்கோவூர்கிழார் தாமும் பரிசில்வாழ்நருள் ஒருவராதலான், 'வடியா நாவின் வல்லாங்குப் பாடி' எனப் பணிந்துகூறினாரென்க. (சஎ)

---

[1]வடியாநாவென்பதற்கு இங்கே எழுதியுள்ள உரையோடு, "வடிநா" (கலி. கஎக : 18) என்பதற்கு, 'வழுவின சொற்கள் சொல்லாதபடி தெள்ளிய நா' என நச்சினார்க்கினியர் எழுதிய உரை கருதற்குரியது.

பி - ம். * இனிதொழுகின்நல்லது.

---

(சஅ) கோதை மார்பிற் கோதை யானும்
கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்
மாக்கழி மலர்ந்த நெய்த லானும்
கண்ணா றும்மே கானலந் தொண்டி
அஃதெம் மூரே யவனெம் மிறைவன்
அன்னோற் படர்தி யாயி னீயும்

1 - 2. மோனைத்தொடைக்கும் (தொல். செய். சூ. 92, பேர்.), பிறவடிதொடுத்த கட்டளையடிமோனைக்கும் (ஷை. ஷை. ஷை. ந.) மேற்கோள்.

4. தொண்டி: புறநா. கஎ : 13; ஐங்குறு. கஎஅ.



*எம்மு முள்ளுமோ முதுவா யிரவல
அமர்மேம் படூஉங் காலைநின்
புகழ்மேம் படுநனைக் கண்டன மெனவே.

திணை - பாடாண்டிணை; துறை - புலவராற்றுப்படை.

1சேரமான் கோக்கோதைமார்பனைப் பொய்கையார் பாடியது.

இ - ள்.—கோதையுடையமார்பிற்கு அணிந்த கோதையானும், அக்கோதையைப் புணர்ந்த மகளிர்சூடிய கோதையானும், கரியகழியின்கண் மலர்ந்த நெய்தற்பூவானும் தேன் நாறுநிற்கும் கானலையுடைய தொண்டி; அஃது எம்முடைய ஊர்; அவன் எம்முடைய தலைவன்; அத்தன்மையோனிடத்தே போகின்றாயாயின், நீயும் எம்மையும் நினைப்பாயாக; முதிய வாய்மையையுடைய இரவல! நீ அமரின்கண் மேம்படுங்காலத்து நினக்கு உளதாகிய புகழை மேம்படுத்துமவனைக் கண்டேம் யாமெனச் சொல்லி.—எ - று.

இரவல ! நீயும் அன்னோற் படர்குவையாயின்,

நின்புகழ்மேம்படு நனைக் கண்டனமென எம்மையும் உள்ளெனக் கூட்டுக.

கண்டனமென எம்முமுள்ளென்றுரேனும், உள்ளிக் கண்டன மெனச் சொல்லென்பது கருத்தாகக் கொள்க.

மோ: முன்னிலை அசைச்சொல். நீயுமென்பதூஉம், எம்முமென்ப தூஉம் எச்சவும்மை.

தலைவனது இயல்பையும் ஊரையுங் கூறி, முதுவாயிரவல! எம்மும் உள்ளெனத் தன் தலைமைதோன்றக் கூறினமையால், இது புலவராற்றுப் படை ஆயிற்று.

(சஅ)

---

7. முதுவாயிரவல: புறநா. கஅ0 : 9; பதிற். கூகூ; சிறுபாண். 40.

1இப்பாட்டின் முதலடியில் தலைவன்பெயர் அமைந்துள்ளது.

பி - ம் * எம்மையு முள்ளுமோ.

---

(சகூ) நாட னென்கோ வூர னென்கோ
பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்ப னென்கோ
யாங்கன மொழிகோ வோங்குவாட் கோதையைப்

---

2. "பாடிமிழ் பனிக்கடல்" முல்லைப். 4.

1 - 3. சோனது நாடு நானிலவளமுடையது : "திரைசெய்
கடலின் பெருவளனுந் திருந்து நிலனின் செழுவளனும்,
வரையின்

வளனு முடன்பெருகி மல்கு நாடு மலைநாடு." பெரிய. எ : 1.



புனவர் தட்டை புடைப்பி *னயல
திறங்குகதி ரலமரு கழனியும்
பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழுமே.

திணையும் துறையும் அவை; துறை - இயன்மொழியுமாம்.
அவனை அவர் பாடியது.

இ - ள். —குறிஞ்சிநிலமுடைமையால், நாடனென்று சொல்லுவேனோ? மருதநிலமுடைமையால், ஊரனென்றுசொல்லுவேனோ? நெய்தனிலமுடைமையால், ஒலிமுழங்குகின்ற குளிர்ந்த கடலையுடைய சேர்ப்பனென்று சொல்லுவேனோ? எவ்வாறுசொல்லுவேன் மேம்பட்ட வாளையுடைய கோதையை? புனங்காப்போர் கிளிகடிகருவியைப் புடைப்பின், அப்புனத்திற்கு அயலாகிய விளைந்த நெற்கதிர்சுழலும் வயலின்கண்ணும், மிக்கநீரையுடைய கடற்கரையின்கண்ணும் உளவாகிய புட்கள் சேர எழுமாதலான்.—எ - று.

'புனவர்தட்டைபுடைப்பின்' எனக் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் ஏற்பக் கூறினமையான், நாடனென்பதூஉம், அவ்விரண்டு நிலத்துக்கும் கொள்ளப்படும்; எனவே முல்லைநிலமும் உடையனென்றவாறும்.

புனவர் தட்டைபுடைப்பின், கழனியிலும் சேர்ப்பினும் புள்ளெழு மாதலால், கோதையை யாங்கனம் மொழிகோவெனக் கூட்டுக.

இது, நானிலமுமுடையனுதலிற் பெருஞ்செல்வமுடையன்; நீ அவன்பாற் செல்லென ஆற்றுப்படுத்தவாறு; அவனது இயல்பைப் புகழ்ந்தமையான் இயன்மொழியுமாயிற்று. (சக)

---

4. தட்டை: "வெதிர்புனே தட்டையேன்" (நற். கசஎ); "தழலுந் தட்டையு முறியுந் தந்து" (குறுந். உஉங); "தழலே வாங்கியுந் தட்டை யோப்பியும்" (அகநா. கஅஅ); "ஒலிகழைத் தட்டை புடையுநர் புனந்தொறும்" (மலேபடு. 328); 'தட்டையாவது:—மூங்கிலேக் கண்ணுக் குக்கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதொரு கருவி' குறிஞ்சி. 43, ந.

4 - 6. திணைமயக்கத்திற்கு மேற்கோள்; தொல். அகத். 12, ந; திருச்சிற். 63, பேர்.

பி - ம். அயலினிரங்கு.

---

(ருo) மாசற விசித்த வார்புறு *வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை

---

பி - ம். * வளப்பின், வள்ளின்.



ஒலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்

பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை யெண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய வென்னைத் தெறுவர
இருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
அதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறிதல்
அதனொடு மமையா தணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென
வீசி யோயே வியலிடங் கமழ
இவணிசை யுடையோர்க் கல்ல தவண
துயர்நிலை யுலகத் துறையு ளின்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குருசினீ யீங்கிது செயலே.[1]

---

3. புறநா. உஎச: 2.

5. "குருதி வேட்ட, மயிர்புதை மாக்கண் கடிய கழற" (பதிற். உக); "கூற்றுக்கண் விளிக்குங் குருதி வேட்கை, முரசு" மணி. க: 30 - 31.

1 - 5. "விரவிய சந்தமென் சேறு மட்டித்துப், பிரவியந் தழை யொடு பிணையல் வேய்ந்தன, பரவிய பலிபெறு முரசம் பன்மையி, லரவியக் கதிர்கொள வதிர்ந்த றைந்ததே" (சூளா. சுயம். 210); பெருங். உ. 2: 26 - 30.

7. ழ. அகநா. கூ : 13.

14-5. புறநா. உஎ : 7 - 9, அடிக்; "புகழ்வெய் யோர்க்குப் புத்தேளு
டெளிது" முதுமொழிக். 71.

14 -6. 'ஒருவர்க்கு இம்மை மறுமைகட்கு இன்பத்தைத் தந்து
பூமியுள்ளளவும் நிற்பது புகழெனலுமாம்; ஒன்றுவுலகத் . . . தொன்றிலெ
னவும், இவணிசையுடையோர்க் . . . . . . . . . . . மாறுகொலெ்னவும்
கூறினாராகலின்' சிலப். கக: 112-7, அடியார்.

15. உயர்நிலையுலகம்: மதுரைக். 197; கலி. கஈக: 36

[1]ழ. முரசநாட்கோட்டலுக்கும் (சிலப். ௫: 89 - 94, அடியார்.), இயன் மொழிக்கும் (தோல். புறத்திணை. சூ. 35, ந.) மேற்கோள்.





திணை - அது; துறை - இயன்மொழி.

சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை முரசுகட்டில் அறியாதேறிய *மோசிகீரனைத் தவறுசெய்யாது அவன் துயிலெழுந் துணையும் கவரிகொண்டு வீசியானை மோசிகீரனூர் பாடியது.

இ - ள்.—குற்றந்தீர வலித்துப் பிணித்த வாரப்பட்ட வாரையுடைய கருமரத்தாற் செய்தலான் இருட்சிபொருந்திய பக்கம் பொலிவுபெற மயிலினது தழைத்த நெடிய பீலியால்தொடுக்கப்பட்ட ஒள்ளிய பொறியை யுடைத்தாகிய நீலமணிபோலும் நிறத்தையுடைய தாரைப் பொற்றளிரை யுடைய உழிஞையுடனே பொலியச் சூட்டப்பட்டுக் குருதிப்பலிகொள்ளும் விருப்பத்தையுடைய உட்குப்பொருந்திய வீரமுரசம் நீராடிவருவதன் முன்னே எண்ணெயினது நுரையை முகந்தாற்போன்ற மெல்லிய பூவை யுடைய கட்டிற்கண்ணே இதனை முரசுகட்டிலென்பதறியாது ஏறிக்கிடந்த என்னை வெகுட்சிதோன்ற இருகூறாக்கும் நின்னுடைய வாளை வாயை மாற்றியதாகிய அதுவும் அமையும், நல்ல தமிழ்முழுதும் அறிந்தமைக்கு; அவ்வெகுட்சியொழிந்து அதனாலும் அமையாதே குறுக வந்து நினது வலியையுடைய முழவுபோலும் தோளையெடுத்துச் சாமரத்தாற் குளிர வீசினாய்; இவ்வகன்ற உலகத்தின்கண்ணே பரக்கும்பரிசு இவ்வுலகத்துப் புகழுடையோர்க்கல்லது, அவ்விடத்ததாகிய உயர்ந்த நிலைமையையுடைய உலகத்தின்கண் உறைதலில்லாமையைத் தெரியக்கேட்ட பரிசாலேயோ வெற்றி பொருந்தப்பட்ட தலைவா ! நீ இவ்விடத்து இச்சாமரையை வீசுதல்? அதற்குக் காரணம் சொல்லுவாயாக.—எ - று.

சூட்டியென்பதனைச் சூட்டவென்று திரிப்பினும் அமையும்.

உழிஞை - கொற்றான்; அது குடநாட்டார் வழக்கு.

முழவுத்தோளோச்சியெனவும், தண்ணெனவீசியோயெனவும் கூறிய வாற்றால், சாமரையென்பது பெற்றாம்.

கமழ்தல் ஈண்டுப் பரத்தற்பொருட்டாய் நின்றது.

1தமிழெனபதற்குத் தமிழ்நாடெனினும் அமையும்.

குருசில்! நீ இதுசெய்தல், இசையுடையோர்க்கல்லது உறையுளின்மை கேட்ட மாறுகொலெனக் கூட்டுக.

எண்ணென்பது, கருதெனவுமாம்.

எண்வளியென்று பாடமாயின், கருதியென்க. (௬௦)

---

[1]"மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்", "தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன்" புறநா. ௩௫ : 3, ௫௧: 5.

பி - ம் * மோசகீரனார்.



(௫௧) நீர்மிகிற் சிறையு மில்லை தீமிகின்
மன்னுயிர் நிழற்று நிழலு மில்லை
வளிமிகின் வலியு மில்லை யொளிமிக்
கவற்றோ ரன்ன சினப்போர் வழுதி
தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன்போரெதிர்ந்து
கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கெனக்
கொடுத்த மன்னர் நடுக்கற் றனரே
அளியரோ வளியரவ னளியிழந் தோரே
நுண்பல சிதலை யரிதுமுயன் றெடுத்த
செம்புற் றீயல் போல
ஒருபகல் வாழ்க்கைக் †குலமறு வோரே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன்வழுதியை ‡ஐயூர் முடவனார் பாடியது.

1. "ஒலித்துடன், நீர்மிகி னில்லை சிறை" (பழ. 190); "சிறையு ழுண்டோ செழும்புனல் மிக்குழீஇ" (மணி. ௫: 19); "சிறையென்ப தில்லை செவ்வே செம்புனல் பெருகு மாயின்" சூளா. கல்யாண. 155.

3. ஒளியாவது: அரசர்பாலுள்ள தெய்வத்தன்மை; அதனை, "இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற, ஒளியோ டொழுகப் படும்" (குறள். 698); "உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" (சீவக. 248) என்பவற்றால் அறிக.

5. புறநா. ௮: 2, அடிக். 'ஞாலம் பொதுவெனப் பொருவரசர்' (குறள். 492, பரிமேல்.); "வையம்பொதுக் கடிந்து", "பூவலயம் பொது நீக்கி யாண்டருளி" (பெரிய. மனுநீதி. 33, கோச்செங்கட். 17); 'தனி கோலுகையாவது பூசக்கரம் பொதுக்கடிதல்' தக்க. 2, உரை.

6. கொண்டி - கொள்ளப்படுவது; ஆவது திறை; "கட்கொண்டிக் குடிப்பாக்கத்து" மதுரை. 137.

8. "அளியளோ வளியளென் னெஞ்சமர்ந் தோளே" குறுந். ௫௬:5.

10. செம்புற்றீயல் : புறநா. ககக : 3.

9-10. "சிறுபுன் சிதலை சேண்முயன் றெடுத்த, நெடுஞ்செம் புற்றத்து" அகநா. கசக.

9-11. "மண்ணுள்வாழ் சிதலைச் சாதி மற்றவை வாழுநாள்கள், எண்ணியாங் கிகந்த பின்னை யிறகுபெய் தெழும்" சூளா. அரசியல். 316.

ழ - ம் * தண்டமிழ்ப். † கலம்வருவோரே. ‡ஐயூர் கிழார்.

இ - ள்.—நீர் மிகுமாயின், அதனைத்தாங்கும் அரணுமில்லை; நெருப்பு மிகுமாயின், உலகத்து நிலைபெற்ற உயிர்களை நிழல்செய்யும் நிழலுமில்லை; காற்று மிகுமாயின், அதனைப்பொறுக்கும் வலியுமில்லை; விளக்கம் மிக்கு அவற்றையொத்த சினம்பொருந்திய போரையுடைய வழுதி குளிர்ந்த தமிழ்நாடு மூவேந்தர்க்கும் பொதுவென்று கூறப் பொருளாய்ப் போரை யேற்றுத் திறையை வேண்டுவனாயின், கொள்கவென்றுசொல்லி முன்னே கொடுத்த மன்னர் நடுக்கந் தீர்ந்தார்; கொடாமையின், யாவராலும் மிக இரங்கத்தக்கார், அவனது அருளையிழந்த அரசர், நுண்ணிய பல கறையான் அரிதாக உழந்தெடுக்கப்பட்ட செம்புற்றினின்றும் புறப்பட்ட ஈயலைப்போல ஒருபகற்பொழுதின்கண் வாழும் உயிர்வாழ்க்கையின் பொருட்டுச் சுழல்வோர்.—எ - று.

வழுதி, தமிழ்பொதுவெனப் பொருளாய்க் கொண்டு வேண்டுவனாயின், கொடுத்தமன்னர் நடுக்கற்றனர்; கொடாமையின் அவன் அளியிழந்தோர், ஒருபகல் வாழ்க்கைக்கு அலமருவோர்; ஆதலான், அவர் அளியரோ அளியரெனக் கூட்டி வினைமுடிவு செய்க; அவன் அளியிழந்தோராகிய அலமருவோர் அளியரெனக் கூட்டியுரைப்பினும் அமையும்.

அளியரோ அளியரென இரங்கற்குறிப்புத் தோன்ற அடுக்கிநின்றது. (௫௧)

---

(௫௨) அணங்குடை நெடுங்கோட் டளையக முனைஇ
முணங்குநிமிர் வயமான் முழுவலி யொருத்தல்
*ஊனசை யுள்ளந் துரப்ப யிரைகுறித்துத்
தான்வேண்டு மருங்கின் வேட்டெழுந் தாங்கு
வடபுல மன்னர் வாட வடல்குறித்

தின்ற வெம்போ ரியறேர் வழுதி
இதுநீ கண்ணிய தாயி னிருநிலத்
தியார்கொ லளியர் தாமே யூர்தொறும்

1. அணங்குடை நெடுங்கோடு: "அணங்குடை நெடுவரை" அகநா. உஉ: 1.

1-4. புறநா. எஅ: 1-4; திருப்பாவை, உரு: 1-5.

7-8. "இதுநீ கருதினை யாயி னேற்பவர், முதுநீ ருலகின் முழுவது மில்லை" சிலப். உ௫: 166-7.

பி -ம். *ஊன்மிசையுள்ளக்.



மீன்சுடு புகையின் புலவுநா றுநெடுங்கொடி
வயலுழை மருதின் வாங்குசினை வலக்கும்
பெருநல் யாணரி னொரீஇ யினியே
*கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்
பலிகண் மாறிய பாழ்படு பொதியில்
நரைமூ தாளர் நாயிடக் குழிந்த
வல்லி னல்லக நிறையப் பல்பொறிக்
கான வாரண மீனும்
காடாகி விளியு நாடுடை யோரே.

திணையும் துறையும் அவை.

அவனை †மருதனிளநாகனார் பாடியது.

9. "கொழுமீன் சுடுபுகை மறுகினுள் மயங்கி" (நற். ருகக); "தூமக் கொடியும்" மணி. சு: 64.

12. "மாஞ்சேர் மாடத், தெழுதணி கடவுள் போகலிற் புல்லென், றொழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணை", "கடவுள் போகிய கருந்தாட் கந்தம்" (அகநா. கசுஎ, ருOஎ); "கந்துடைப் பொதியில்" (பட்டினா. 249); "அருந்திறற் கடவுட் டிருந்துபலிக் கந்தமும்", "இலகொளிக் கந்தமும்" மணி. சு: 60, உசு: 162.

'கலி' என்பது ஒலித்தற்றொழிற் பண்பில் வந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 458, மயிலை.

14. நாய் - சூதாடுகருவியுளொன்று; "பளிக்குநாய் சிவப்பத் தொட்டு" கம்ப. மிதிலைக்காட்சி. 17.

16. கானவாரணம்: புறநா. ருஉO: 11, ருகூ: 10.

15-6. பல்பொறிக்கானவாரணம்: "அந்நுண் பல்பொறிக், காமரு தகைய கான வாரணம்" நற். உக: 7-8, மருதனிளநாகனார்.

14-6. "உமண ருயங்குவயி னொழித்த, பண்ணழி பழம்பார் வெண்குரு கீனும், தண்ணந் துறைவன்" நற். கருஅ.

13-6. "நரைமூ தாள ரதிர்தலை யிறக்கிக், கவைமனத் திருத்தும் வல்லுவனப் பழிய . . . . . பொதியில்" அகநா. ருஎஎ.

16-7. "கானங் கோழிக் கவர்குரற் சேவ, லொண்பொறி யெருத்திற் றண்சித றுறைப்ப" குறுந். உசுஉ.

கோழியை வாரணமென்றல் மரபென்பதற்கு மேற்கோள்; தொல். மரபு. சூ. 68, பேர்.

பி - ம். *கலிகெழு மூதூர்க்கந்து. †மருதினிளநாகனார்.

இ - ள்.—தெய்வங்களையுடைத்தாகிய நெடிய சிகரங்களையுடைய மலையின்கண்ணே முழையின்கண் துயிலைவெறுத்து [1]மூரிநிமிர்ந்த புலியாகிய நிரம்பிய வலியையுடைய ஏற்றை ஊனை விரும்பிய உள்ளம்செலுத்துதலான் அவ்விரையைக் கருதித் தான்வேண்டிய இடத்தே விரும்பிச் சென்றாற்போல வடநாட்டு வேந்தர் வாட அவரைக் கொல்லுதலைக் கருதி [2]இன்னாத வெய்ய போரைச் செய்யும் இயற்றப்பட்ட தேரினையுடைய வழுதி! நீ கருதியது இப்போராயின், பெரிய உலகத்தின்கண் யாரோ அளிக்கத்தக்கார்தாம்? ஊர்தோறும் மீன்சுடுகின்ற புகையினது புலால் நாறும் நெடிய ஒழுங்கு வயலிடத்து மருதினது விளைந்த கோட்டைச் சூழும் பெரிய நல்ல புதுவருவாயின் நீங்கி இப்பொழுது முழவுமுதலாகிய ஒலிபொருந்திய தெய்வங்கள் தூணத்தைக் கைவிடும் பரிசு பலி இடத்தின்மாறிய பாழ்பட்ட அம்பலத்தின்கண் முற்காலத்து நரையையுடைய முதியோர் சூதாடுங்கருவியை இடுதலாற் குழிந்த அச்சூதுகருவியினது நல்லமனையாகிய இடம்நிறையப் பலபொறியையுடைய காட்டுக்கோழி முட்டையிடும் காடாய்க் கெடும் நாடுடையோர்.—எ - று.

கலி - புகழும் அரவமுமாம்.

வழுதி! அடல்குறித்து நீகருதியது இதுவாயின், விளியும்நாடுடையோர்தாம் யார்கொல் அளியரெனக் கூட்டுக. (௫உ)

---

[1] மூரிநிமிர்தல் - துயின்றெழுந்தவுடன் இரண்டுகைகளையும் நிமிர்த்துச் சோம்பைப்போக்குதல்; "மூரி நிமிர்வன போல" (பெருங். உ. 6 : 102); "பொய்த்ததோர் மூரியா னிமிர்ந்து போக்குவாள்" (சுளா. உண்டாட்டு. 35); இக்காலத்துச் சோம்பல்முறித்தலென வழங்கும்.

[2] இன்னாத - பகைவர்களுக்கு இன்னாத; "இன்னா வாகப் பிறர் மண் கொண்டு" (புறநா. கஉ : 4) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

(ருங.) முதிர்வா ரிப்பி முத்த வார்மணற்
கதிர்விடு மணியிற் கண்பொரு மாடத்
திலங்குவளை மகளிர் தெற்றி யாடும்

---

1. முதிர் முத்தம்: "விளைந்துமுதிர்ந்த விழுமுத்தின்" (மதுரை. 135.) முத்தவார்மணல்: பெரும்பாண். 335; கலி. கஙசு: 5; பெருங். க. 48: 88, உ. 7: 142, ரு. 6: 41.

1 - 3. புறநா. கஙசு: 3 - 5.



விளங்குசீர் விளங்கில் விழுமங் கொன்ற
களங்கொள் யானைக் கடுமான் பொறைய
விரிப்பி னகலுந் தொகுப்பி னெஞ்சும்
மம்மர் நெஞ்சத் *தெம்மனோர்க் கொருதலை
கைம்முற் றலநின் புகழே யென்றும்
ஒளியோர் பிறந்தவிம் மலர்தலை யுலகத்து
வாழே மென்றலு மரிதே தாழாது
செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்
இன்றுள னாயி னன்றும னென்றநின்
ஆடுகொள் வரிசைக் †கொப்பப்
பாடுவன் மன்னாற் பகைவரைக் கடப்பே.

திணையும் துறையும் அவை.

சேரன் [1]மாந்தரஞ்சேரலிரும்பொறையைப் பொருந்திலிளங்கீரனார் பாடியது.

---

4. விளங்கில் - ஒருநகரம்; "மாவண் கடலன் விளங்கி லன்னவெம், மையெழி லுண்கண்" அகநா. அக.

5. 'களங்கொள் பொறைய' என்றது போர்க்களம் வென்ற வேந்தர்க்குரித்தாதலான்; புறநா. ச: 3, சுஉ: 12; சிலப். உஅ: 104 - 5; "ஏந்து வாட் டானை யிரிய வுறைகழித்துப்,போந்தவாண் மின்னும் பொருசமத்து-வேந்த, ரிருங்களி யானை யினமிரிந் தோடக், கருங்கழலான் கொண்டான் களம்", "வென்று களங்கொண்ட வேல்வேந்தே" (பு. வெ. 180, 225); "தேன்மிடைந்த தாரினான் செங்களஞ் சிறந்ததே" (சீவக. 279, உரை); "கொன்று களங்கொள்ளுங் கொல்யானை வேந்தனை, வென்றுகளங் கொள்ளுமேல் வேந்து" தொல். புறத். சூ. 5, ந. மேற்.

12. வெறுப்பென்னும் உரிச்சொல் செறிவென்னும்பொருளில் வந்ததற்கும் (தொல். உரி. சூ. 51, சே.; சூ. 49, ந.; இ. வி. சூ. 281, உரை), 'வெறுப்பு' புறப்பொருட்கண்வந்ததற்கும் (தொல். பொருளியல், சூ. 53, ந.) மேற்கோள்.

11 - 2. "மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின், உவலை கூராக் கவலையி னெஞ்சின், நனவிற் பாடிய நல்லிசைக் கபிலன்" பதிற். அடு: 10-13.

13 - 5. பழிகரப்பு அங்கதத்திற்கு மேற்கோள்; தொல். செய். சூ. 126, பேர்.

[1] "பலர்மேளந் தோன்றிய கவிகை வள்ளல், நிறையருந் தானை வெல்போர் மாந்தரன், பொறையன்" அகநா. கசஉ: 3 - 5.

பி - ம். *தெமக்கோவொருவினை. †கேற்பப்.

இ - ள்.—முற்றி நீண்ட சிப்பிக்கண் முத்துப்போலும் வெளிய ஒழுங்குபட்ட மணற்கண்ணே ஒளிவிடுகின்ற மணிகளாற் கண்ணைப் பொருகின்ற மாடத்திடத்து விளங்கிய வளையையுடைய மகளிர் வேதிகைக்கண்ணே விளையாடும் விளங்கிய சீர்மையையுடைய விளங்கிற்குப் பகைவரான் வந்த இடும்பையைத்தீர்த்த, போர்க்களத்தைத் தனதாக்கிக்கொண்ட, யானையையும் விரைந்த குதிரையையுமுடைய பொறைய! விரித்துச்சொல்லிற் பரக்கும்; தொகுத்துச்சொல்லிற் பொருள் ஒழிவுபடும்; ஆதலான், மயக்கம்பொருந்திய நெஞ்சையுடைய எங்களுக்கு ஒருதலையாக முடியா, நினதுபுகழ், எந்நாளும்; கல்வியால் விளக்கமுடையோர் பிறந்த இப்பெரிய இடத்தையுடைய உலகத்தின்கண்ணே வாழ்மென்றிருத்தலும் கூடாது; விரைய, பல பொருளையும் அடக்கிய செய்யுளைச் செய்யும் செவ்விய நாவினையும் மிக்ககேள்வியையும் விளங்கிய புகழையுமுடைய கபிலன் இன்று உளனாகப்பெறின் நன்று; அது பெற்றிலேனென்று சொல்லிய நினது வென்றிகொண்ட சிறப்பிற்குப் பொருந்தப் பாடுவேன், நீ பகைவரைவென்ற வெற்றியை.—எ - று.

மாடத்துமகளிர் மணலிடத்துத் தெற்றிக்கண் ஆடும் விளங்கிலென்க.

தெற்றியென்பதனைக் கைகோத்தாடும் குரவையென்பாரும் உளர்.

பொறைய! கபிலன் இன்று உளனயின், நன்றுமனென்ற நின் ஆடுகொள்வரிசைக்கொப்பப் பகைவரைக்கடப்பை யான் தாழாது பாடுவேன்; நின்புகழ் விரிப்பின் அகலும்; தொகுப்பின் எஞ்சும்; ஆதலான், எமக்குக் கைம்முற்றல ; ஒளியோர் பிறந்த இம்மலர்தலையுலகத்து வாழேமென்றலும் அரிதெனை மாறிக்கூட்டுக.

தாழாது செய்யுட்செய் செந்நாவென இயைப்பினும் அமையும்.

‘ஒளியோர்’ என்றது, கபிலன்முதலாயினோரை.

வாழேமென்றலும் அரிதென்றகருத்து, பாடாதிருத்தலும் அரிதென்றதாக்கி, யாமும் [1]வல்லபடி பாடிப்போதுவேமென்றதாகக் கொள்க.

நன்றுமனென்பது, கழிவின்கண் வந்தது.

பாடுவன்மன்னாலென்றவழி, மன்னும் ஆலும் அசைநிலை.

பாடுவன்மன்னென்பதனை அல்லீற்றுத் தனித்தன்மைவினையாக்கி, நின்வரிசைக்கொப்ப, நின்பகைவரைக்கடப்பைப் பாடுவேன்; அதனால், விரிப்பின் அகலும்; தொகுப்பின் எஞ்சும்; மம்மர்நெஞ்சத்து எமக்கு நின் புகழ் கைம்முற்றலவென அவன்புகழை மேம்படுத்துக்கூறியவாறாக உரைப்பினுமமையும். இப்பொருட்குப் பாடுவன்மனென்றதனை ஒழியிசையாகக் கொள்க.

‘சிறந்தசெய்யுள்’ என்றும், ‘செய்யுட்செய்தசெந்நா’ என்றும் பாடம். (௫௩)

---

[1]“வடியா நாவின் வல்லாங்குப் பாடி” புறநா. ௪௭: 3.



(௫௪) எங்கோ னிருந்த கம்பலை மூதூர்
உடையோர் போல விடையின்று குறுகிச்
செம்ம ளுளவை யண்ணாந்து *புகுதல்
எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே
இரவலர்க் கெண்மை யல்லது புரவெதிர்ந்து

வான நாண வரையாது சென்றோர்க்
கானா தீயுங் கவிகை வண்மைக்
கடுமான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த
நெடுமொழி மன்னர் நினைக்குங் காலைப்
பாசிலைத் தொடுத்த வுவலைக் கண்ணி
†மாசு ணுடுக்கை மடிவா யிடையன்

---

1. 'கம்பலை என்னும் உரிச்சொல் அரவமாகிய இசைப்பொருண்மை யுணர்த்தும்' தோல். உரி. சூ. 53, சே.

2. இடை - சமயம்; "தளரிடை யறியுந் தன்மையள்" (மணி. ௨ : 98); "நம்பன் சிறிதே யிடைதந்திது கேட்க" சீவக. 1975.

3. நாளவை: புறநா. ௨௧ : 5. "நசையுநர்த் தடையா நன்பெரு வாயி, லிசையேன் புக்கு" (பொருந. 66 - 7); "பொருநர்க் காயினும் புலவர்க் காயினு, மருமறை நாவி னந்தணர்க் காயினுங், கடவுண் மால் வரை கண்விடுத் தன்ன, அடையா வாயிலவ னருங்கடை குறுகி" (சிறு பாண். 203 - 6); "நும்மில் போல நில்லாது புக்கு", "அருங்கடி வாயி லயிராது புகுமின்" (மலைபடு. 165, 491); "நசையுநர்க் கடையா நன்பெரு வாயில்" (கூர்ம. சூரியன்மரபு. 13); "தடைஇய வாயி றடையாது நுழைந்து" தணிகையாறு. 231.

7. ஆனாது ஈதல்: புறநா. ௬௨ : 1. கவிகை - கொடுத்தற்குக் கவிந்த கை; "தேர்வீசு கவிகை" (மலைபடு. 399); "கலம்பெயக் கவிந்த கழலொடித் தடக்கை" (அகநா. ௨௧௩); பெருங். ௬. 10 : 106 - 7.

6 - 7. "மாரி பொய்க்குவ தாயினுஞ், சேர லாதன் பொய்யல னசையே" (பதிற். ௧௮ : 11-2); "நின், சுரத்தலும் வண்மையும் மாரியுள", "வண்மைபோல் வானம் பொழிந்தநீர்" (பரி. ௬ : 27, ௨௨ : 8); "தளியிற் சிறந்தனை வந்த புலவர்க், களியொடு கைதா வலை" கலி. ௫௦ : 16 - 7.

9. நெடுமொழி: புறநா. உகு : 5, அடிக்.

8 - 9. புறநா. கக : 8 - 9, ருஅ0 : 10.

11. "மடிவாய்க் கோவலர்" (பெரும்பாண். 166); "இடையன் மடிவிடு வீளை" அகநா. உஎச.

பி - ம். *புகுதற்கெம்மன. †மாருணுடுக்கை.





சிறுதலை யாயமொடு குறுகல் செல்லாப்
புலிதுஞ்சு வியன்புலத் தற்றே
வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே[1].

திணையும் துறையும் அவை.

சேரமான் குட்டுவன் கோதையைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரன் பாடியது.

இ - ள்.—எம்முடைய இறைவன் இருந்த ஓசையையுடைய பழைய ஊரிடத்து அதனையுடையவர்களைப்போலக் காலம்பாராதே அணுகித் தலைமையையுடைய நாளோலக்கத்தின்கண்ணே தலையெடுத்துச் செம்மாந்து சென்று புகுதல் எம்மைப் போலும் வாழ்க்கையையுடைய இரப்போருக்கு எளிது; இங்ஙனம் இரப்போர்க்கு எளிதாவதல்லது, பாதுகாத்தலை ஏற்றுக்கொண்டு மழை நாணும்படி எப்பொருளையும் வரையாது தன்பாற்சென்றவர்கட்கு இடக்கவிந்த கையால் அமையாதுகொடுக்கும் வண்மையையுடைய கடுமான் கோதையது வலியோடு மாறுபட்டெழுந்திருந்த வஞ்சினங்கூறிய வேந்தர் கருதுங்காலத்து, பசிய இலையால் தொடுக்கப்பட்ட தழைக்கண்ணியையும் மாசுண்ட உடையையும் [2]மடித்த வாயையுமுடைய இடையன் சிறிய தலையையுடைய ஆட்டினத்தினோடு

கூட அணுகல்செல்லாத புலி தங்கும் அகன்ற நிலத்தை யொக்கும், வலி தங்கிய பெரிய கையையுடையவனுடைய நாடு.—எ - று.

எங்கோனிருந்தமூதூர்ப்புகுதல், இரவலர்க்கு எளிது; அவனுடைய நாடு, மன்னர் நினைக்குங்காலை, இடையன் சிறுதலையாயமொடு குறுகல் செல்லாப் புலிதுஞ்சு வியன்புலத்தற்றெனக் கூட்டி வினைமுடிவுசெய்...

மன்னர்க்கு இடையனும், அவர்படைக்குச் சிறுதலையாயமும், கோதை நாட்டிற்குப் புலிதுஞ்சு வியன்புலமும் உவமையாகக் கொள்க.

[3]உவலைக்கண்ணியென்றதனைப் பெயராகக் கொள்க.
புலியுடை வியன்புலமென்பதூஉம் பாடம். (டுச)

---

12. "சிறுதலை வெள்ளைத் தோடு" குறுந். கசுரு: 2.

[1]மு. கருத்து: புறநா. ருகo: 4 - 5.

[2]வாயைமடித்தல் சீழ்க்கையொலிசெய்தற்கு; 'சீழ்க்கைபிடித், லாலே மடித்த வாயையுடைய இடையர்' பெரும்பாண். 166, உரை.

[3]'பாசிலைத் தொடுத்த' என்றதனால் உவலைக் கண்ணி யென்பதனைப் பெயர் என்றார்; 'தொடுபொருதி, பெயர் மாத்திரையாய் நின்றது' புறநா. டுஅ: 30, உரை.

(௫௫) ஓங்குமலைப் பெருவிற் பாம்பு ஞாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயி லுடற்றிப்
பெருவிற லமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல் விளங்கு மொருகண் போல
வேந்துமேம் பட்ட பூந்தார் மாற
கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரு நெஞ்சுடைய புகன்மறவரும்
நான்குடன் மாண்ட தாயினு மாண்ட [†என்
அறநெறி முதற்றே யரசின் கொற்றம்

---

1. நேர்புநிரை ஆசிரியத்துள் வந்ததற்கும் (தொல். செய். சூ. 14, பேர். ந), தளைநிலைவகையான் வந்து கட்டளையாய் இன்னோசைபெற்ற தற்கும் (ஷை. ஷை. சூ. 54, ந.) மேற்கோள்.

3. தருசொல் படர்க்கைக்கண்வந்ததற்கு மேற்கோள்; தொல். கிளவி. சூ. 29, சே. ந; இ. வி. சூ. 301, உரை.

1 - 4. "தொடங்கற்கட் டோன்றிய முதியவன் முதலாக, அடங்காதார் மிடல்சாய வமரர்வந் திரத்தலின், மடங்கல்போற் சினைஇ மாயஞ்செயவுணரைக், கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலு, முடன்றக்கான் முகம்போல வொண்கதிர் தெறுதலின்" (கலி. உ); "திரிபுர மெரியத் தேவர் வேண்ட, எரிமுகப் பேரம் பேவல் கேட்ப" சிலப். ௬: 40-41.

4 - 5. புறநா. க: 9, அடிக். ௬க: 5 - 6; "பிறைநுதல் விளங்கும்", "தேய்பொடி வெள்ளை பூசி யதன் மேலோர் திங்கடிலகம் பதித்த நுதலர்" தே.

7. புறநா. கச : 1, அடிக்.

பதினெட்டெழுத்தான் வந்த ஆசிரிய அடிக்கு மேற்கோள்; தோல்.
செய். சூ. 49, இளம்.

8. பத்தொன்பதெழுத்தான் வந்த ஆசிரிய அடிக்கு மேற்கோள்;
தோல். செய். சூ. 49, இளம்.

7-8. புறநா. எஉ: 3-5, ௬௰௧: 1-3.

7 - 9. திணைவிராயெண்ணப்பட்ட பெயர் செய்யுளகத்து அஃறிணைச் சொற்கொண்டு முடியுமென்பதற்கு மேற்கோள் ; தோல். கிளவி. சூ. 51,
சே. ந; இ. வி. சூ. 298, உரை.

10. புறநா. உஎ : 17 - 8, அடிக்.

9 - 10. "அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா, மான முடைய

பி - ம். *நாண். †எனும்.



அதனல், நமரெனக் கோல்கோடாது
பிறரெனக் குணங்கொல்லாது
ஞாயிற் றன்ன *வெந்திற லாண்மையும்

திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்
வானத் தன்ன வண்மையு மூன்றும்
†உடையை யாகி யில்லோர் கையற
‡நீநீடு வாழிய நெடுந்தகை தாழ்நீர்
வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில்

---

தரசு", "வேலன்று வென்றி தருவது மன்னவன், கோலதூஉங் கோடா தெனின்" (384, 546) என்னுந் திருக்குறள்களின் விசேடவுரையில், 'மாண்ட, அறிநெறி முதற்றே யரசின் கொற்றம்' என்னும் இப்பகுதியை மேற்கோளாக எடுத்துக் காட்டினர் பரிமேலழகர்.

"உருளு நேமியு மொண்சுட ரெஃகமு, மருளில் வாணியும் வல்லவர் மூவர்க்குந், தெருளு நல்லற மும்மனச் செம்மையும், அருளு நீத்தபி னுவதுண் டாகுமோ", "அறத்தினு லன்றி யமரர்க்கு மருஞ்சமங் கடத்தல், மறத்தி னலரி தென்பது மனத்திடை வலித்தி" கம்ப. மந்தரை. 11; முதற்போர். 225.

11. புறநா. சு : 9 - 10; "எங்க ணினைய ரெனக்கருதி னேதமால், தங்கண்ண ரானுந் தகவில கண்டக்கால், வன்கண்ண னாகி யொறுக்க வொறுக்கல்லா, மென்கண்ண னாளா னரசு" பழமொழி, 322.

15. புறநா. ருச: 6 - 7, அடிக். கருரு: 6 - 7, கசஉ : 3 - 5, கடுஅ: 7, ருகள: 16; சிறுபாண். 124 - 6; மலைபடு. 580; "பொழிபெயல்வண்மை யான்" கலி. ருள: 12.

13 - 5. "நின், வெம்மையும் விளக்கமு ஞாயிற்றுள, நின், தண்மையுஞ் சாயலுந் திங்களுள, நின், சுரத்தலும் வண்மையு மாரியுள" பரி. ௪: 25 - 7.

13 - 6. புறநா. ௫௧ : 6 - 7; "ஈண்டுநீர் மிசைத்தோன்றி யிருள் சீக்குஞ் சுடரேபோல், வேண்டாதார் நெஞ்சுட்க வெருவந்த கொடுமையும், நீண்டுதோன் றுயர்குடை நிழலெனச் சேர்ந்தார்க்குக், காண்டகு மதியென்னக் கதிர்விடு தண்மையும், மாண்டநின் னொழுக்கத்தால்" (கலி. ௧௦௦); "நண்ணுநர் பகைவரென் றிவர்க்கு நாளினும், தண்ணியன் வெய்யனந் தானை மன்னனே" சூளா. நகர. 17.

பி - ம். *வெந்தெற. †உடையாயாதலினில்லோர். ‡நீடுவையொழிய.



நெடுவே ணிலைஇய காமர் வியன்றுறைக்
கடுவளி தொகுப்ப வீண்டிய
வடுவாழெக்கர் மணலினும் பலவே.

திணை - பாடாண்டிணை; துறை - செவியறிவுறூஉ.

பாண்டியன் இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நன்மாறனை மதுரை மருதனிளநாகனார் பாடியது.

இ - ள்.—உயர்ந்தமலையாகிய பெரியவில்லைப் பாம்பாகிய நாணைக் கொளுத்தி ஒப்பில்லாததோர் அம்பைவாங்கி மூன்றுமதிலையும் எய்து பெரிய வலியையுடைய தேவர்கட்கு வெற்றியைக்கொடுத்த கரியநிறஞ்சேர்ந்த திருமிடற்றையுடைய இறைவனது அழகிய திருமுடிப்பக்கத்து அணிந்த பிறைசேர்ந்த திருநெற்றிக்கண்ணே விளங்கும் ஒரு திருநயனம்போல மூவேந்தருள்ளும் மேம்பட்ட பூந்தாரையுடைய மாற! கடிய சினத்தையுடையவாகிய கொல்களிறும் விரைந்த செலவையுடையவாகிய மனஞ் செருக்கிய குதிரையும் நெடிய கொடியையுடையவாகிய உயர்ந்த தேரும் நெஞ்சுவலியையுடைய போரைவிரும்பும் மறவருமென நான்குபடையுங் கூட மாட்சிமைப்பட்டதாயினும் மாட்சிமைப்பட்ட அறநெறியை முதலாகவுடைத்து, வேந்தாது வெற்றி; அதனால், இவர் நம்முடையரென அவர் செய்த கொடுந்தொழிலைப் பொறுத்துக் கோல்வளையாது, இவர் நமக்கு அயலாரென்று அவர் நற்குணங்களைக் கெடாது, ஞாயிற்றைப்போன்ற வெய்யதிறலையுடைய வீரமும், திங்களைப்போன்ற குளிர்ந்த பெரிய மென்மையும், மழையைப்போன்ற வண்மையுமென்ற மூன்றையுமுடையையாகி இல்லாதோர் இல்லையாக நீ நெடுங்காலம் வாழ்வாயாக, நெடுந்தகாய்! தாழ்ந்த நீரையுடைய கடலின்கண் வெளிய தலையையுடைய திரை

---

18 - 9. செந்தில்: "திருமணி விளக்கி னலைவாய்ச், செருமிகு சேஎய்" (அகநா. உகசு); "அலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே" (முருகு. 125); "சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்றும், ஏரகமு நீங்கா விறைவன்" (சிலப்: உச); "நஞ்செந்தின் மேய வள்ளி மணாளற்குத் தாதைகண்டாய்" (தே); "முருகன் நீம்புன லலைவாய்" தொல். களவு. சூ. 23, ந; "பையுண்மாலை."

21. மு. மலைபடு. 556. எக்கர்மணல்: "கான லணிந்த வுயர்மணலெக்கர்", "முத்துறழ் மணலெக்கர்" கலி. கஙு: 2, கஙசு: 5.

மணலைப் பன்மைசுட்டற்கு உவமித்தல்; புறநா. ருகரு: 4; மதுரை. 236, அடிக்.

17 - 21. புறநா. க: 8 - 11, அடிக். சரு: 21 - 3, கருகு: 26, ககஅ: 17 - 23.



அலைக்கும் செந்திலிடத்து நெடிய முருகவேள் நிலைபெற்ற அழகிய அகன்ற துறைக்கண் பெருங்காற்றுத் திரட்டுதலால் குவிந்த வடு அழுந்திய எக்கர் மணலினும் பலகாலம்.—எ - று.

'குணம்கொல்லாது' என்பதற்கு முறைமையழிய நீ வேண்டியவாறு செய்யாதெனினுமாம்.

பூந்தார்மாற ! நெடுந்தகாய் ! நான்குடன்மாண்டதாயினும், அரசின் கொற்றம் அறநெறிமுதற்று; அதனால், கோல்கோடாது, குணங்கொல்லாது, ஆண்மையும் சாயலும் வண்மையும் உடையையாகி இல்லோர் கையற நீ மணலினும் பலகாலம் நீடுவாழியவெனக் கூட்டி வினைமுடிவு செய்க. (டுரு)

---

(டுசா) ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை
மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும்
கடல்வளர் புரிவளை புரையு மேனி
அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்

1. பதினைந்தெழுத்தான் வந்த ஆசிரியவடிக்கு மேற்கோள்; தொல். செய். சூ. 49, இளம்.

எரிமருளவிர்சடை: "எரியகைந் தன்ன வவிர்ந்துவிளங்கு புரிசடை" (அகநா. கடவுள். 10); "ஊழியெரி, முத்தனைய மோலியென மூவோத மீதெரிய" தக்க. 469.

2. "சீறருங் கணிச்சியோன்" (கலி. உ); "மழுவா ணெடியோன் றலைவ னாக" மதுரை. 455.

1 - 2. "வெள்ளேறு, வலவயி னுயரிய...மூவெயின் முருக்கிய முரண் மிகு செல்வனும்" முருகு. 151 - 4.

3. "வலம்புரி வண்ணை" (பரி. ரு : 88); "சங்கமேனிப் புதுநிறத் தோன்" மதுரைக்கோவை, 143.

4. 'கொடி' என்னுஞ்சொல் 'பனை' என்னுஞ் சொல்லுக்குமுன் வரின் ஐகாரம் கெடாது நிற்றற்குப் 'பனைக்கொடி' என்பது மேற்கோள்; தொல். உயிர்மயங்கு. சூ. 83, இளம். ந.

3 - 4. "மாயுடை மலர்மார்பின் மையில்வால் வளைமேனி......... வாய்வாங்கும் வளைநாஞ்சி லொருகுழை யொருவனை" (பரி. க : 3 - 5); "வானுற வோங்கிய வயங்கொளிர் பனைக்கொடிப், பானிற வண்ணன்" கலி. க0ச: 7 - 8.



*மண்ணுறு திருமணி புரையு மேனி
விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும்
மணிமயி லுயரிய மாறா வென்றிப்
பிணிமுக வூர்தி யொண்செய் யோனுமென

ஞாலங் காக்குங் கால முன்பிற்
றோலா நல்லிசை நால்வ ருள்ளும்
கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்
வலியொத் தீயே வாலி யோனைப்

---

5. ழ. சிலப். உஉ: 97.

5 - 6. "மண்ணுறு மணிபா யுருவினவை" பரி. க : 59, என்பதன் விசேடக்குறிப்பைப் பார்க்க.

7. "பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய, ஓடியா விழவி னெடியோன்" (அகநா. கசக : 15 - 6); "பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ" முருகு. 122, அடிக்.

7 - 8. "மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடிப், பிணிமுக மூர்ந்த வெல்போ ரிறைவ" பரி. கஎ : 48 - 9.

1 - 10. "முக்கட் பகவ னடிதொழா தார்க்கின்னா, பொற்பனை வெள்ளையை யுள்ளா தொழுகின்னா, சக்கரத் தானை மறப்பின்னா தாங் கின்னா, சத்தியான் றாடொழா தார்க்கு" (இன்னா. 1); "கண்மூன் றுடையான்றாள் சேர்தல் கடிதினிதே, தொன்மாண் டுழாய்மாலை யானைத் தொழலினிதே" (இனியது. 1); "பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும், அறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும், வால்வளை மேனி வாலியோன் கோயிலு, நீல மேனி நெடியோன் கோயிலும்", "நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும் உவணச்சேவ லுயர்த்தோ னியமமு, மேழிவல னுயர்த்த வெள்ளை நகரமுங், கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்" (சிலப். ரு : 169 - 72, கச : 7 - 10); "நுதல்விழி நாட்டத் திறையோன் முதலா" மணி. க: 54.

11. புறநா. ரு : 12, சஉ : 22; "மடக்கல்போற் சினைஇ" (கலி. உ : 3); "கால னனைய கடுஞ்சின முன்ப" (பதிற். ருக); "தென்புலத் தவன்போற் செய்த சீற்றமும்" (திருக்கழுக்குன்ற. நாராயண. 12); "மாற்றருஞ் சீற்றத்துக் கூற்றுவனே" கனநூல், 15.

12. 'வால்வளை மேனி வாலியோன்' என்பதற்கு மேற்கோள்; சிலப். ௬ : 171, அடியார்.

பி - ம். *மண்ணிய.



புகழொத் தீயே யிகழுந ரடுநனை
முருகொத் தீயே முன்னியது முடித்தலின்
ஆங்காங் கவரவ ரொத்தலின் யாங்கும்
அரியவு முளவோ நினக்கே யதனால்
இரவலர்க் கருங்கல மருகா தீயா
யவனர், நன்கலந் தந்த தண்கமழ் தேறல்
பொன்செய் புனைகலத் தேந்தி நாளும்
ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்
தாங்கினி தொழுகுமதி யோங்குவாண் மாற
அங்கண் விசும்பி னாரிரு ளகற்றும்
வெங்கதிர்ச் செல்வன் போலவுங் குடதிசைத்
தண்கதிர் மதியம் போலவும்
நின்று நிலைஇய ருலகமோ டுடனே.[1]

திணை - அது; துறை - பூவைநிலை.

அவனை *மதுரைக்கணக்காயனார்மகனார் நக்கீரனார் பாடியது.

இ - ள்.—ஆனேற்றை வெற்றியாக உயர்த்த அழல்போலும் விளங்கிய சடையினையும் விலக்குதற்கரிய மழுப்படையையுமுடைய நீலமணி போலுந் திருமிடற்றையுடையோனும், கடற்கண்ணே வளரும் புரிந்த சங்கையொக்கும் திருநிறத்தையுடைய கொலையைவிரும்பும் கலப்பையையும் பனைக்கொடியையுமுடையோனும், கழுவப்பட்ட அழகிய நீலமணி

---

வாலியோன்வலி: "விறன்மிகுவலி......நாஞ்சிலோன்" (பரி. கரு: 32-3); "கொடிமிட ஞஞ்சிலான்" (கலி. ருசு: 1); "விறல்வெள்ளையாயவன்" சிலப். கஎ.

13. புறநா. ஙஎ: 2 - 3; "எண்ணிறந்த புகழவை" (பரி. க: 60); "தேயா விழுப்புகழ்த் தெய்வம்" (கலி. கOரு: 76); "உரைசால் சிறப்பினெடியோன்" சிலப். உஉ: 60.

18. தண்கமழ்தேறல்: புறநா. உச: 32, அடிக். உகஉ: 1.

18 - 21. புறநா. உச: 31 - 3, அடிக்.

[1]ழ. பூவைநிலையாவது ஒன்றனையொன்றுபோற்கூறுந்துறை; அஃது ஓரரசனுக்குத் திருமாலையும் ஏனைத் தேவர்களையும் உவமைகூறுதலென்றுரைத்து இச்செய்யுளை மேற்கோள் காட்டினர்; தொல். புறத்திணை. சூ. 5, ந.; இ. வி. சூ. 617, உரை.

பி - ம். *அவர் பாடியது.



போலும் திருமேனியையும் வானுற ஓங்கிய கருடக்கொடியையுமுடைய வென்றியை விரும்புவோனும், நீலமணிபோலும் நிறத்தையுடைய [1]மயிற்கொடியை எடுத்த மாறாத வெற்றியையுடைய [2]அம்மயிலாகிய ஊர்தியையுடைய ஒள்ளிய செய்யோனுமென்று சொல்லப்பட்ட உலகங்

காக்கும் முடிவுகாலத்தைச் செய்யும் வலியினையும் தோல்வியில்லாத நல்ல புகழினையுமுடைய நால்வருள்ளும், விலக்குதற்கரிய வெகுட்சியாற் கூற்றத்தை ஒப்பை; வலியால் வாலியோனை ஒப்பை; புகழாற் பகைவரைக் கொல்லும் மாயோனை ஒப்பை; கருதியது முடித்தலான் முருகனை ஒப்பை; அப்படி அப்படி அவரை அவரை ஒத்தலான், எவ்விடத்தும் அரியனவுமுளவோ நினக்கு? ஆதலால், இரப்போர்க்குப் பெறுதற்கரிய அணிகலங்களைப் பெரிதும் வழங்கி, யவனர் நல்ல குப்பியிற் கொடுவரப்பட்ட குளிர்ந்த நறுநாற்றத்தையுடைய தேறலைப் பொன்னாற் செய்யப்பட்ட புனைந்த கலத்தின்கண்ணே ஏந்தி நாடோறும் ஒள்ளிய வளையையுடைய மகளிர் ஊட்ட மகிழ்ச்சி மிக்கு இனிதாக நடப்பாயாக; வென்றியானுயர்ந்த வாளையுடைய மாற! அழகிய இடத்தையுடைய வானத்தின்கண்ணே நிறைந்த இருளைப்போக்கும் வெய்ய கதிரையுடைய ஞாயிற்றையொப்பவும் மேலைத்திக்கிற்றோன்றும் குளிர்ந்த கதிரையுடைய பிறையைப்போலவும் இவ்வுலகத்தோடுகூட நின்று நிலை பெறுவாயாக.—எ - று.

[3]பிணிமுகம் - பிள்ளையாரேறும் யானையென்றும் சொல்லுப.

காலமுன்பென்றது, தம்மை யெதிர்ந்தோர்க்குத் [4]தாம் நினைந்த பொழுதே முடிவுகாலத்தைச் செய்யும் வலியை.

---

[1]'பிள்ளையாருடைய துவச வாகனமான தோகைமயில்கள்' தக்க. 114, உரை.

[2]"பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ணம், மணி விசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே" (சிலப். உச); "பிணிமுக மஞ்ஞை செருமுகத் தேந்திய, மூவிரு திருமுகத் தொருவே லவற்கு"

கல்லாடம், 7.

[3]இதனை, "சேயுயர் பிணிமுக மூர்ந்து" (பரி.: ௫), "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" (முருகு. 247) என்பவற்றின் உரைகளா லுணர்க.

[4]புறநா. சக : 1 - 3.

19



[1]மணிமிடற்றோனைக் கூற்றமென்றது, அழித்தற்றொழிலையுடைமையான.

வாலியோனென்றது; [2]நம்பிமூத்தபிரானை.

இகழுநரடுநனென்றது, மாயோனை.

ஆரிருளகற்றும் வெங்கதிர்ச்செல்வனென்றது, எழுகின்ற ஞாயிற்றை.

[3]மதி - இளம்பிறை.

இது, தேவரோடு உவமித்தமையாற் பூவைநிலை ஆயிற்று. (௫௬)

---

[1]இவர் காலக்கடவுளெனவுங் கூறப்படுவர்; "எரியெள்ளு வன்ன ......இளம்பிறை சேர்ந்த நுதலன் களங்கனி, மாறேற்கும் பண்பின் மறுமிடற்றன் றேற்றிச், சூலம் பிடித்த சுடர்ப்படைக், காலக் கடவுட் குயர்கமா வலனே" (தொல். புறத்திணை. சூ. உசு, ந. மேற்.); "கொலைவன்" கலி. ௧0௫ : 15, ந.

[2]நம்பிமூத்தபிரான் - பலதேவர்; கலி. உகு : 1, ந.

[3]"இருகோட் டொருமதி யெழில்பெற மிலைத்தனே" 11 - ஆம் திருமுறை, திருவெழுகூற்றிருக்கை.

---

(ருஎ) வல்லா ராயினும் வல்லுந ராயினும்
புகழ்த லுற்றோர்க்கு மாயோ னன்ன
உரைசால் சிறப்பிற் புகழ்சான் மாற
நின்னொன்று கூறுவ துடையே னென்னெனின்
நீயே, பிறர்நாடு கொள்ளுங் காலை யவர்நாட்
டிறங்குகதிர்க் கழனிநின் னிளையருங் கவர்க
நனந்தலைப் பேரூ ரெரியு நைக்க
மின்னுநிமிர்ந் தன்னநின் னொளிறிலங்கு நெடுவேல்
ஒன்னார்ச் செகுப்பினுஞ் செகுக்க வென்னதூஉம்

---

2 - 3. புறநா. ருகு : 13, அடிக்.

1 - 3. புறநா. உஎ : 15; "வல்லினும் வல்லா ராயினுஞ் சென்றோர்க்கு............நிறைய வீசு, மாஅல் யானை யாஅய்" அகநா. கடுஉ.

5. 'நீ' என்பது ஆண்பாலின் வந்ததற்கு மேற்கோள்; தொல. பெயர். சூ. 39, பேர். ந.

7. "ஒள்ளெரி நைப்ப வுடம்பு மாய்ந்தது" புறநா. உசு0 : 10.
5 - 7. புறநா. கசு : 16 - 7, அடிக்.

10 கடிமரந் தடிதலோம்புநின்
நெடுநல் *யானைக் கந்தாற் றாவே.[1]

திணை - வஞ்சி; துறை - துணைவஞ்சி.

அவனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியது.

இ - ள்.—யாதொரு கல்வியை மாட்டாராயினும் அதனை வல்லாராயினும் புகழ்தலைப் பொருந்தியவர்கட்கு மாயோனையொத்த சொல்லுதலமைந்த தலைமையையுடைய புகழ் அமைந்த மாற! நினது ஒரு காரியஞ் சொல்லுதலுடையேன்; அது யாதெனின், நின்பகைவர் நாட்டைக் கொள்ளுங்காலத்து அவர் நாட்டின்கண் விளைந்த கதிரையுடைய வயலை நின்னுடைய வீரரும் கொள்ளைகொள்க; அகலிய இடத்தையுடைய பெரிய ஊரைத் தீயுஞ் சுடுக; மின்னிமிர்ந்தாற்போன்ற நினது [2]பாடஞ் செய்கின்ற விளங்கிய நெடிய வேல் பகைவரை அழிக்கினும் அழிக்க; யாவதும் காவன்மரத்தை வெட்டுதலைப் பாதுகாப்பாயாக, நின்னுடைய நெடிய நல்லயானைகட்கு முன்பு நட்டுநிற்கின்ற தறிகள் ஆற்றமாட்டாவாதலான். —எ - று.

[3]அவை இளமரமாதலால், நின் நெடுநல்யானைக்குத் தறியாதற்குப் பொறையாற்றாவென்று உரைப்பாருமுளர்.

[4]வல்லவர்க்கும் மாட்டார்க்கும் ஒப்பப்புகழ்ந்து முடியவொண்ணுமையான், மாயோனன்னவென்றார்; அன்றி அவ்விருவர்க்கும் ஒப்ப அருள்பண்ணுதலின், அவ்வாறு கூறிற்றெனினும் அமையும்.

மாற! நின்யானைக்குக் கந்து ஆற்றாவாதலால், கடிமரந்தடிதலோம்பெனக் கூட்டுக.

நின்யானைக்குக் கந்து ஆற்றுவாதலாற் கடிமரந்தடிதலோம்பெனக் கூறுவான்போற் சந்துசெய்விக்கும் நினைவாற் கூறினமையின், இது துணைவஞ்சி ஆயிற்று (௫எ)

10. புறநா. உரு : 8 - 9, அடிக்.

11. நெடுநல்யானை: புறநா. எஉ : 4.

[1]மு. '......கூறுதல் கருத்தாயின் வஞ்சியாம்; புகழ்தல் கருத்தாயிற் பாடாண்டிணையாம்' (தொல். புறத்திணை. சூ. 28, இளம்.); பாடாண் கொற்றவள்ளையென்பர்; ஷை. ஷை. ஷை. 34, ந.

[2]பாடம் - சோதி; "திலகபாடமிருள் பருகவந்து" (தக்க. 27); "பல்லாயிர மாமணி பாடமுறும்" கம்ப. சரபங்கர். 11.

[3]"ஆடுகோ டாகி யதரிடை நின்றதூஉங், காழ்கொண்டக் கண்ணே களிறணைக்குங் கந்தாகும்" நாலடி. 192.

[4]பரி. ரு : 28 - 30, பரிமேல்.

பி - ம். *யானைக் குக்கந்து.



(௫அ) நீயே, தண்புனற் காவிரிக் கிழவனை யிவனே
முழுமுத றொலைந்த கோளி யாலத்துக்
கொழுநிழ னெடுஞ்சினை வீழ்பொறுத் தாங்குத்
தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல் செல்லாது

நல்லிசை முதுகுடி நடுக்கறத் தழீஇ
இளைய தாயினுங் கிளையரா வெறியும்
அருநரை யுருமிற் பொருநரைப் பொறாஅச்
செருமாண் பஞ்சவ ரேறே நீயே
அறந்துஞ் சுறந்தைப் பொருநனை யிவனே
நெல்லு நீரு மெல்லார்க்கு *மெளியவென
வரைய சாந்தமுந் திரைய முத்தமும்
இமிழ்குரன் முரச மூன்றுட னாளும்

---

2. "கோடுபல முரஞ்சிய கோளி யாலத்து" மலைபடு. 268.

'கோளி - பூவாது காய்க்கும் மரம்; என்னை? கோளியாலத்து என்றார்' சிலப். கசு : 22 - 8, அடியார்.

2 - 5. "சிதலை தினப்பட்ட வால மரத்தை, மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக், குதலைமை தந்தைகட் டோன்றிற்றன் பெற்ற, புதல்வன் மறைப்பக் கெடும்" (நாலடி. 197); "தூங்குசிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன, ஓங்குகுல நையவத னுட்பிறந்த வீரர், தாங்[illegible] கட னாகும்" சீவக. 498.

4 - 5. "துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றி" பதிற். ருஉ : 7.

6 - 7. அராவெறியும் உரும்: புறநா. சஎ : 38 - 9, அடிக்.; ருஎ : 1 - 4, அடிக்.; கஉசு : 19; ருசுசு : 3.

7 - 8. "நரையுருமி னேறனையை" மதுரை. 63.

6 - 8. "இளைய ராயினும் பகையரசு கடியுஞ், செருமாண் டென்னர்" (சிலப். ௪ : 21 - 2); "மழைதவழும் பெருங்குன்றத்துச், செயிருடைய வரவெறிந்து, கடுஞ்சினத்த மிடறபுக்கும், பெருஞ்சினப்புய லேறனையை" பதிற். ௫௧ : 25 - 8.

9. புறநா. ௧௧ : 8 - 9, அடிக்.

10. புறநா. ௭0 : 9, ௧௮௯ : 1.

பி - ம். *மெளியவரைய.



தமிழ்கெழு கூடற் றண்கோல் வேந்தே
பானிற வுருவிற் பனைக்கொடி யோனும்
நீனிற வுருவி னேமி யோனுமென்
றிருபெருந் தெய்வமு முடனின் றாஅங்
குருகெழு தோற்றமொ டுட்குவர விளங்கி
இன்னீ ராகலி னினியவு முளவோ
இன்னுங் கேண்மினும் மிசைவா ழியவே
ஒருவீ ரொருவீர்க் காற்றுதி ரிருவீரும்
உடனிலை திரியீ ராயி னிமிழ்திரைப்
பௌவ முடுத்தவிப் பயங்கெழு மாநிலம்
கையகப் படுவது பொய்யா காதே

அதனால், நல்ல போலவு நயவ போலவும்
தொல்லோர் சென்ற நெறிய போலவும்
காத னெஞ்சினும் மிடைபுகற் கலமரும்
ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளா
தின்றே போல்கநும் புணர்ச்சி வென்றுவென்
றடுகளத் துயர்கநும் வேலே கொடுவரிக்

---

13. “செழியன், றமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின், மகிழ்நனை மறுகின் மதுரை” (சிறுபாண். 65 - 7); “மலையாத, தண்டாரான் கூடற் றமிழ்” மதுரை. இறுதிவெண்பா.

11 - 3. “சீர்மிகு சிறப்பினோன் றொல்குடிக் குரித்தெனப், பார்வளர் முத்தமொடு படுகடல் பயந்த, ஆர்கலி யுவகையர்” கலி. ௧௦௫ : 3 -5.

15. “நீணிற வுருவி னெடியோன்” (பெரும்பாண். 402) ; “நீல மேனி நெடியோன்” சிலப். ௫ : 172.

14 - 5. புறநா. ௫௬ : 3 - 6, அடிக்.; நற். ௩௨ : 1 - 2.

14 - 6. “மன்புன லிளவெயில் வளாவவிருள் வளர்வெனப், பொன்புனை யுடுக்கையோன் புணர்ந்தமர் நிலையே” பரி. ௧௫ : 27 - 8.

25. “பெரியோர் சென்ற வடிவழிப் பிழையாது” மதுரை. 192.

28. “இன்றை யன்ன நட்பு” குறுந். ௧௩௧.

“புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா, னட்பாங் கிழமை தரும்” (குறள், 785) என்பதன் உரையில், ‘புணர்ச்சி-ஒருதேயத்தாராதல்; இன்றே போல்கநும் புணர்ச்சி யென்றதும் அதனை’ என்பர் பரிமேலழகர்.

29. புறநா. கடுஅ : 28, கூ0க : 7.



30 கோண்மாக் குயின்ற சேண்விளங்கு தொடுபொறி
நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த
குடுமிய வாகபிறர் குன்றுகெழு நாடே.

திணை - பாடாண்டிணை; துறை - உடனிலை.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவனும் பாண்டியன் வெள்ளியம்பலத்துத்துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தாரைக் காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனூர் பாடியது.

இ - ள்.—நீ, குளிர்ந்த நீரையுடைய காவிரிக்குத் தலைவன்; இவன், பரிய அடி மாய்ந்த கோளியாகிய ஆலத்துக் கொழுவிய நிழலையுடைய நெடிய கொம்பை அதன்வீழ் தாங்கினாற்போலத் தனக்கு முன்னுள்ளோர் இறந்தாராகத் தான் தளராது நல்லபுகழையுடைய பழைய குடியைத் தடுமாற்றமற அணைத்துத் தான்சிறிதேயாயினும் கிளையுடனே பாம்பை எறியும் பொறுத்தற்கரிய வெள்ளிய உருமேறுபோல இளமைக் காலத்தும் பகைவரைக் காணப்பொறாத போரின்கண் மாட்சிமைப்பட்ட பாண்டியர் குடியுள் ஏறுபோல்வான்; நீ, அறந்தங்கும் உறையூரின்கண் அரசன்; இவன், நெல்லும் நீரும் யாவர்க்கும் எளியவெனக் கருதி அவைபோலாது யாவர்க்கும் பெறுதற்கரிய [1]பொதியின் மலையிடத்துச் சந்தனமும் கடலிடத்து முத்துமென இவற்றை ஒலிக்கும் குரலையுடைய [2]முரசம் மூன்றுடனே ஆளும் தமிழ் பொருந்திய மதுரைக்கட்

30 - 32. அரசர் தாம்வென்ற நாட்டிலுள்ள மலையில் தம் கொடியை

எழுதுவித்தல் மரபு; "கயலெழுதிய விமயநெற்றி" (சிலப். கஎ : 1, உரைகள்); "பருப்பதத்திற் கயல்பொறித்த பாண்டியர் குலபதிபோல்" (பெரியாழ்வார்திருமொழி); "நககோடி பலகோடி புலியேறு தனியேற", "பொறைசூழ் வரையிற் புலியே றெழுதும்" தக்க. 4, 185, அடிக்.

29 - 32. பரி. ரு : 17 - 8, பரிமேல். மேற்.

[1]புறநா. ருஅ0; "தன்கடற் பிறந்த முத்தி னாரமும், முனைதிறை கொடுக்குந் துப்பிற் றன்மலைத், தெறலரு மரபிற் கடவுட் பேணிக், குறவர் தந்த சந்தி னாரமும்......அணியும்......தென்னவன்" (அகநா. கரு); "குட மலைப் பிறந்த வாரமு மகிலுந், தென்கடன் முத்தும்" (பட்டின. 188 - 9); "தென்கடன் முத்துந் தென்மலைச் சந்தும்", "கொற்கையம் பெருந்துறை முத்தொடு பூண்டு, தெக்கண. மலயகச் செழுஞ்சே றாடி", "கோவா மலையாரங் கோத்த கடலாரம்" (சிலப். அ : 19, கசு : 80 - 81, கஎ : "உள்வரி"); "வெண்டிரைத் தென்கடன் முத்துந் தென்மலைச் சந்தும்" தஞ்சை. 93.

[2]"முரைசுமூன் றாள்பவர் முரணியோர் முரண்டப" (கலி. கருஉ); மூரசு மூன்றவன:—வீரமுரசு தியாகமுரசு நியாயமுரசென்பன; தன்



குளிர்ந்த செங்கோலையுடைய வேந்தன்; நீர், பால்போலும் நிறத்தை யுடைய பனைக்கொடியையுடையோனும் நீலநிறம்போலும் திருமேனியை யுடைய ஆழியையுடையோனுமென்று சொல்லப்படும் இரண்டு பெரிய தெய்வமும் ஒருங்கு நின்றாற்போல உட்குப்பொருந்திய காட்சியோடு அச்சம்வர விளங்கி இத்தன்மையீராகுதலின், இதனினும் இனிய பொருள் உளவோ? இன்னமும் கேளீர்; நும்முடைய புகழ் நெடுங்காலம் செல்வதாக; நும்முள் ஒருவீர் ஒருவீர்க்கு உதவுவீராக; நீங்களிருவீரும்

கூடிநிற்கின்ற இங்கிலேயின் வேறுபடுராயின் ஒலிக்கும் திரையையுடைய கடல்சூழ்ந்த இப்பயன் பொருந்திய உலகங்கள் கையகத்தே அகப்படுதல் பொய்யாகாது; ஆதலால், நல்லனபோலே யிருக்கவும் நியாயத்தையுடை யன்போலே யிருக்கவும் பழையோரொழுகிய ஒழுக்கமுடையன்போலே யிருக்கவும் அன்புபொருந்திய நெஞ்சையுடைய நம் இடையே புகுந்து நம்மைப் பிரித்தற்கு அலமரும் அயலோருடைய [3]சிறப்பில்லாத மொழி யைக் கேளாது இன்று போல்க, நமது கூட்டம்; வென்றுவென்று கொலைக்களத்தின்கண் மேம்படுக, நம்முடைய வேல்; வளைந்த வரியை யுடைய புலிவடிவாகச் செய்யப்பட்ட சேய்மைக்கண் விளங்குகின்ற தோண்டிய இலாஞ்சனையைப் பெரிய நீரின்கண் வாழும் கயலுடனே பொறித்த சிகரங்களையுடையவாக, பிறருடைய குன்றையுடைய நாடுகள்.

—எ - று.

[4]குன்றுகெழுநாடென்றதாயினும், கருதியது பிறர்நாட்டுக்குன்றுக ளென்றதாகக் கொள்க.

கோளியென்றது, பூவாதுகாய்க்கும் மரம்.

தழீஇப் (5) பொரூவென் (7) இயையும்.

---

முரசும் சேரன்முரசும் சோழன்முரசுமென மூன்றெனலுமாம்" (ஷை. உரை); "மன்றல்பே ருதவி வலனுறு வெற்றியால், மூன்றிலின் முழங்கு மூவகை முரசும்" சரபேந்திர. குற. ௩௦ : 35.- 6.

[3]"பொதுக்கொண்டகவ்வை" (கலி. ௬௬ : 11) என்புழி, பொது என்பதற்குச் சிறப்பில்லாமையென்று நச்சினார்க்கினியர் எழுதியவுரையும், 'இவை பதினாறும் சிறப்பின்மையிற் பொதுச்சீரென்பது காரணக்குறி; பொது சிறப்பின்மையைச் சொல்லுமோவெனிற் சொல்லும்; என்னை ? "புலமிக் கவரைப் புலமை தெரிதல், புலமிக் கவர்க்கே புலனும் - நலமிக்க, பூம்புன லூர பொதுமக்கட் காகாவாம், பாம்பறியும் பாம்பின்கால்"

இதனுட் பொதுவைச் சிறப்பின்மைக்கட் புணர்த்தார்; சான்றோராதலின்' (யா. வி. சூ: 13, உரை) என்பதும் இங்கே கூறிய உரையை வலியுறுத்தும்.

[4]'குன்றுகெழு நாடென்றாயினும் 'நாடுகெழுகுன்றென்பது' கருத் தாயினற்போல' பரி. சு : 17 - 8, பரிமேல்.



முரசமூன்றவன:—வீரமுரசம் நியாயமுரசம் தியாகமுரசம்; மண முரசுடனே ஏனை இரண்டுமுரசென்பாரும் உளர்.

நெல்லும் நீரும் எல்லார்க்கும் எளியவென முற்றாக உரைப்பாரும் உளர்.

[1]தொடுபொறி: பெயர்மாத்திரையாய் நின்றது.

ஒருவீர் ஒருவீர்க்கு உதவியாய் வலியையுடையீராய் நீங்கள் இருவீரு மென்பாரும் உளர்.

இருவரரசர் ஒருங்கிருந்தாரைப் பாடினமையின், இஃது உடனிலை ஆயிற்று. (டுஅ)

---

[1]பொறித்த எனப் பின்வருதலின் இங்ஙனம் உரையெழுதினர்; புறநா. டுச : 10.

---

(டுகூ) ஆரந் தாழ்ந்த *வணிகிளர் மார்பிற்
றாடோய் தடக்கைத் தகைமாண் வழுதி
வல்லை மன்ற நீநயந் தளித்தல்
தேற்றாய் பெரும பொய்யே யென்றும்
காய்சினந் தவிராது கடலூர் பெழுதரும்

ஞாயி றனையைநின் பகைவர்க்குத்
திங்க ளனையை யெம்ம னோர்க்கே.

திணை - அது; துறை - பூவைநிலை.

பாண்டியன் சித்திரமாடத்துத்துஞ்சிய நன்மாறனை மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார் பாடியது.

இ - ள்.—ஆரந்தாழ்ந்த அழகுமிக்க மார்பினையும் முழந்தாளிலே தோய்ந்த பெரிய கையினையுமுடைய அழகுமாட்சிமைப்பட்ட வழுதி! நீ யாவர்க்கும் உவந்து அருளைப் பண்ணுதலைத் தெளிவாக வல்லை! மெய்யாக

1. புறநா. கருஉ : 10.

2. தாடோய்தடக்கை : புறநா. கச : 11, ௯0 : 10; பு. வெ. 205.

4. "பொய்ச்சொற் கேளா வாய்மொழி மன்னன்" கம்ப. கைகேயி. 31.

தேற்றலென்பது 'அறிதல்' என்னும் பொருளில் வந்ததற்கு மேற்கோள்; சீவக. 257, 770, ந.

5 - 6. "கதிர்சினந் தணிந்த" குறுந். ௩அஎ; கலி. கக : 11 - 2.

6 - 7. புறநா. ௫௫ : 13 - 4, அடிக்.

பி - ம். *வம்பகட்டு மார்பிற்.



யாவரிடத்தும் தெளியாய், பெரும! பொய்யை; எந்நாளும் சுடும் வெம்மை யொழியாது கடலிடத்தே கிளர்ந்தெழுகின்ற ஞாயிற்றை ஒப்பை, நின் பகைவர்க்கு; எம்போல்வார்க்குத் திங்களை ஒப்பை.— எ - று.

தேற்றாவென்றது, [1]தேறாவெனத் தன்வினையாய் நின்றது; தேற்றாவென்பதற்குப் பொய்தெளிக்கப்படாவெனினும் அமையும்.

ஞாயிற்றோடும் திங்களோடும் உவமித்தமையால், இது பூவைநிலை ஆயிற்று. (௫௯)

[1]புறநா. ௨௦௨: 16, உரை.

---

(௬௦) முந்நீர் நாப்பட் டிமிற்சுடர் போலச்
*செம்மீ னிமைக்கு மாக விசும்பின்
உச்சி நின்ற வுவவுமதி கண்டு
கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த
சில்வளை விறலியும் யானும் வல்விரைந்து
தொழுதன மல்லமோ பலவே கானற்
கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கும்
ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும்
உரனுடை நோன்பகட் டன்ன வெங்கோன்

1. முந்நீர்: புறநா. ௯ : 10, அடிக்.
2. மாகவிசும்பு: புறநா. ௩௫ : 18, அடிக்.
1 - 2. "மீன்றிமில் விளக்கமும்" என்பதற்கு இவ்வடிகளை மேற்கோளாகக் காட்டினர்; சிலப். ௬ : 142, அடியார்.
5. சில்வளைவிறலி : புறநா. ௬௪ : 2, ௧௦௩ : 4; பதிற். ௪௦ : 21, ௫௭ : 6, ௭௮ : 3; 'சில்வளை விறலியென்றது பல்வளையிடுவது பெதும்பைப் பருவத்தாகலின், அஃதன்றிச் சில்வளையிடும் பருவத்தாளென அவள் ஆடல்

முதலிய துறைக்குரியளாதல் கூறியவாறு' பதிற். ருஎ : 6, உரை.

7 - 9. புறநா. அச : 6, கூO : 6 - 8; "கதுமென மண்ட, அள்ளற் பட்டுத் துள்ளுபு துரப்ப, நல்லெருது முயலு மளறுபோகு விழுமத்துச், சாகாட் டாளர் கம்பலை" (பதிற். உஎ : 12 - 4); "அள்ளற் றங்கிய பகடுறு விழுமங், கள்ளார் களமர் பெயர்க்கு மார்ப்பே" (மதுரை. 259 - 60); "மடுத்தவா யெல்லாம் பகடன்னான்" (குறள், 624); "நிரம்பாத நீரியாற்

பி - ம். *செய்ம்மீன்.





வலனிரங்கு முரசின் வாய்வாள் வளவன்
வெயின்மறைக் கொண்ட வுருகெழு சிறப்பின்
மாலை வெண்குடை *யொக்குமா லெனவே.

திணை - அது; துறை - குடைமங்கலம்.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனை உறையூர் மருத்துவன்தாமோதரனார் பாடியது.

இ - ள்.—கடல் நடுவே தோன்றுகின்ற திமிலின்கண் இடப்பட்ட விளக்குப்போலச் செவ்வாய்மீன் விளங்கும் மாகமாகிய விசும்பினது உச்சிக்கண்ணேநின்ற உவாநாளின் மதியத்தைக் கண்டு காட்டுள் வாழும் மயிலைப்போலச் சாத்திடைப்பொருந்திய சிலவாகிய வளையையுடைய விறலியும் யானும் கடிதின் விரைந்து தொழுதேமல்லேமோ பலகால்? கடற்கரையிடத்துக் கழியினீரான் விளைந்த உப்பை முகந்துகொண்டு மலை நாட்டை நோக்கிச் செல்கின்ற ஆரையுடைய சகடையினது குழிப்பாய் தலைத் தீர்த்துச் செலுத்தும் வலியையுடைய பாரம்பொறுக்கும் பகட்டை

யொக்கும் எங்கோன், வென்றியாக முழங்கும் முரசினையும் தப்பாத வாளினையும் உடைய வளவனது வெயிலை மறைத்தற்கு எடுத்த உட்குப் பொருந்திய தலைமையையுடைய தாமம்பொருந்திய வெண்கொற்றக் குடையை ஒக்குமெனக் கருதி.—எ - று.

செம்மீன் இமைக்கும் விசும்பின் உச்சி நின்றமதியை உவமித்தமை யின், இது தலைப்பெயலுவமையாய் நின்றது.

கானல் - கடற்கரை.

வெயிலென்றது, [1]பகைவரானும் கொடியோரானும் வரும் வெம்மையை.

---

றிமெணலு ளாழ்ந்து, பெரும்பார வாடவர்போற் பெய்ப்பண்டந் தாங்கி'' (சீவக. 2784); "குண்டுதுறை யிடுமணற் கோடுற வழுந்திய, பண்டித்துறை யேற்றும் பகட்டிணை போல'' பெருங். க. 53 : 53 - 4.

11 - 2. புறநா. ௬௯ : 19 - 21, அடிக். "எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடை'' கலி. க : 1.

தலைவன்புகழ் குடையடுத்துவந்ததற்கு மேற்கோள்; தோல். புறத்திணை. சூ. 31, ந.

[1]புறநா. ௨௦ : 8-9 ; "வருந்திய குடிமறைப் பதுவே'' புறநா. ௬௯ : 19 - 20.

பி - ம். *யோர்க்குமால்.

இராச்சியபாரத்தைப் பொறுத்துநடத்துமாறு நோக்கி நோன்பகட்டோடு உவமித்தமையின், [1]இறப்ப இழிந்த ஆனந்தவுவமை அன்றாயிற்று.

உவாமதியைக் கண்டு வளவன்வெண்குடையை ஒக்குமென விறலியும் யானும் பலகால் தொழுதேமல்லேமோவெனக் கூட்டி வினை முடிவு செய்க.

வளவன் வெண்குடையைக்காட்டித் தொழுமினென்றார்க்கு [2]நிறைமதி தொழப்படாதாயினும், குடையோடு ஒப்புமைகண்டு தொழுத யாம் குடைதன்னைக் கண்டால் தொழுதல் சொல்லவேண்டுமோவென அதன் சிறப்புக் கூறியவாறு.

செம்மீன் - திருவாதிரையுமாம். (௬0)

---

[1]இறப்ப இழிந்த ஆனந்தவுமையாவது, உயர்ந்த பொருளுக்குத் தாழ்ந்த பொருளையுவமம் கூறுவது; 'இறப்ப விழிந்தது மிறப்ப வுயர்ந்ததும், அறத்தகை வழீஇய வானந்த வுவமை' என்பது விதி.

[2]நிறைமதி தொழப்படாதென்றது, பிறை தொழப்படுமென்பது கருதி; இதனை, புறநா. க : 9 - 10-ஆம் அடிக்குறிப்பாலும், "வளையுடைத் தனைய தாகிப் பலர்தொழச், செவ்வாய் வானத் தையெனத் தோன்றி, இன்னம் பிறந்தன்று பிறையே" (குறுந். ௩0௭) என்பதனாலும் அறிக.

---

(௬௧) கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்
சிறுமா ணெய்த லாம்பலொடு கட்கும்

மலங்குமிளிர் செறுவிற் றளம்புதடிந் திட்ட
பழன வாளைப் பரூஉக்கட் டுணியல்
புதுநெல் வெண்சோற்றுக் கண்ணுறை யாக
விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி

1. தழை - ஒருவகையுடை ; அஃது ஆம்பல் முதலிய மலர்களினு லேனும், தளிர்களினுலேனும், விரவிய இவ்விரண்டினுலேனும் ஆக்கப் படுவது ; இதனை, புறநானூறு, கககூ : 1 - 2, உசஅ : 1-2-ஆம் அடிகளாலும், "முடித்த குல்லை யிலையுடை நறும்பூச், செங்கான் மராஅத்த வாலிணர் ரிடையிடுபு, சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை... உடீஇ" (முருகு. 201 - 3) என்னும் அடிகளாலும் உணர்க.

3. மலங்குமிளிர் செறு : சிலப். கo : 80.

6. 'விலாப்புடை மருங்குல் விசிப்ப மாந்திய உழவர்' என இவ் வடியை உரைநடையிலிட்டு எழுதவர் பரிமேலழகர்; பரி. எ : 38 - 9, உரை.



நீடுகதிர்க் கழனிச் சூடுதடு மாறும்
வன்கை வினைஞர் புன்றலைச் சிறாஅர்
தெங்குபடு வியன்பழ *முனையிற் றந்தையர்
குறைக்க ணெடும்போ ரேறி விசைத்தெழுந்து
செழுங்கோட் பெண்ணைப் பழந்தொட முயலும்

வைகல் யாணர் நன்னாட்டுப் பொருநன்
எஃகுவிளங்கு தடக்கை யியறேர்ச் சென்னி
சிலைத்தா ரகல மலைக்குந ருளரெனிற்
றாமறி குவர்தமக் குறுதி யாமவன்
எழுவுறழ் திணிதோள் வழுவின்று மலைந்தோர்
வாழக் கண்டன்று மிலமே தாழாது
திருந்தடி பொருந்த வல்லோர்
வருந்தக் காண்ட லதனினு மிலமே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

சோழன் †இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி [1]சேட்சென்னியைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் பாடியது.

இ - ள்.—கொண்டையாகிய மயிரையும் குளிர்ந்த தழையையும் உடைய கடைசியர் சிறிய மாட்சிமையுடைய நெய்தலை ஆம்பலுடனே களையும் மலங்கு பிறழ்கின்ற செய்யின்கண்ணே தளம்புதுணித்து இடப்பட்ட பொய்கையிடத்து வாளையினது பரிய இடத்தையுடைய தடியைப் புதிய நெல்லினது வெள்ளிய சோற்றிற்கு மேலீடாகக் கொண்டு விலாப் புடைப்பக்கம் விம்மவுண்டு நெடிய கதிரையுடைய கழனியினிடத்துச் சூட்டை இடுமிடம் அறியாது தமோறும் வலிய கையையுடைய உழவர் புல்லிய தலையையுடைய சிறுவர் தெங்குதரும் பெரிய பழத்தை வெறுப்பின், தந்தையருடைய தலைகுவியாமல் இடப்பட்ட குறைந்த இடத்தையுடைய நெடிய போரின்கண்ணே யேறி உகைத்தெழுந்து வளவிய கோட்புக்க

7. சூடு: புறநா. கரு : 11.

14. சிலைத்தார்: புறநா. கo : 9 - 10, ருசு : 12, அடிக். "திருவிற் றூன் மாரி கற்பான் றவலைநாட் செய்வ தேபோல், உருவிற்றூய்த் துளிக் குந் தேற லோங்குதார்" சீவக. 2070.

18. புறநா. கo : 5 - 6. திருந்தடி : புறநா. எ : 2, உரை.

[1]'சென்னி' எனத் தலைவன் பெயரில் ஒரு பகுதி 13-ஆம் அடியில் வந்துள்ளது.

பி - ம். *முனையிற். †காலேகப்பள்ளி.



பனையினது பழத்தைத் தொடுதற்கு முயலும், நாடோறும் புதுவருவாயை யுடைய நல்ல நாட்டிற்கு வேந்தனாகிய வேல்விளங்கும் பெரியகையினையும் இயற்றப்பட்ட தேரினையுமுடைய சென்னியது இந்திரவிற்போலும் மாலையையுடைய மார்போடும் மாறுபடுவோருளராயின், தாமறிகுவர் தமக் குற்ற காரியம்; யாங்கள், அவனுடைய கணையமரத்தோடு மாறுபடும் திணிந்த தோளைத் தப்பின்றாக மாறுபட்டோர் வாழக் கண்டதும் இலமே; விரைய அவனது திருந்திய அடியை அடையவல்லோர் வருந்தக்காண்டல் அவ்வாழக்கண்டதனினும் இலம்.—எ - று.

தளம்பென்றது, சேறுகுத்தியை.

வழுவின்று மலைதலாவது, வெளிப்பட நின்று மலைதல். (சுக)

---

(சுஉ) வருதார் தாங்கி யமர்மிகல் யாவது
பொருதாண் டொழிந்த மைந்தர் புண்டொட்டுக்
குருதிச் செங்கைக் கூந்த றீட்டி
நிறங்கிளர் உருவிற் பேஎய்ப் பெண்டிர்

எடுத்தெறி யனந்தற் பறைச்சீர் தூங்கப்
பருந்தருந் துற்ற தானையொடு செருமுனிந்
தறத்தின் மண்டிய *மறப்போர் வேந்தர்
தாமாய்ந் தனரே குடைதுளங் கினவே
உரைசால் சிறப்பின் முரைசொழிந் தனவே
பன்னூ றடுக்கிய வேறுபடு பைஞ்ஞிலம்
இடங்கெட வீண்டிய வியன்கட் பாசறைக்
களங்கொளற் குரியோ ரின்றித் தெறுவர

---

1. தொல். புறத். சூ. 5 : 15. பு. வெ. 28.

4 - 5. "இடிக்குரன் முரசின்மு னெழுந்தன னாடி" (பெருங். க. 37 : 246); "தானையா மெய்பேய், பறைபெற்ற லாடாதோ பாய்ந்து" புறத்திரட்டு.

7. புறநா. கூ : 1 - 6.

10. பைஞ்ஞிலம் - தொகுதி; பஞ்ஞிலம் பஞிலமெனவும் வழங்கும்; "நனந்தலைப் பைஞ்ஞிலம் வருகவிந் நிழலென", "உண்ணாப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி" (பதிற். கஎ, ஙக); வேறுபடு பைஞ்ஞிலம் : "வேறுபல் பெரும்படை" முல்லை. 43.

12. புறநா. இகூ : 5, அடிக்.

பி - ம். *விறற்போர், வயப்போர்.

உடன்வீழ்ந் தன்று லமரே பெண்டிரும்
பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்
மார்பகம் பொருந்தி யாங்கமைந் தனரே

வாடாப் பூவி னிமையா நாட்டத்து

நாற்ற வுணவி னோரு மாற்ற

அரும்பெற லுலக நிறைய
விருந்துபெற் றனராற் பொலிகநும் புகழே.[1]

திணை - தும்பை; துறை - தொகைநிலை.

சேரமான்குடக்கோநெடுஞ்சேரலாதனும் சோழன்வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்தாரைக் கழாத்தலையார் பாடியது.

இ - ள்.—வருகின்ற தூசிப்படையைத்தடுத்துப் போரின்கண் ஒருவர் ஒருவரை வெல்வேமென மிகுதல் எங்ஙனமாவது? பொருது அக்களத்தின் கட்பட்ட வீரரதுபுண்ணைத்தோண்டி அவ்வுதிரந்தோய்ந்த செய்யகையால் தமது மயிரைக் கோதி நிறமிக்கவ்வடிவையுடைய பேய்மகளிர் மேன்மேலும் கொட்டுகின்ற மந்தமான் ஓசையையுடைய பறையினது தாளத்தே யாடப் பருந்து ஊனைத் தின்னப் பொருந்திய படையானே போரின்கண் வெகுண்டு அறத்தான் அட்டுச்செய்த வலியபோரையுடைய அரசர் இருவரும் பட்டார்; அவர்கொற்றக்குடையும் தளர்ந்தன; புகழமைந்த தலைமை

---

13 - 5. "தயங்கிணர்க் கோதை தன்றுயர் பொறாஅன், மயங்கினன் கொல்லென மலரடி வருடித், தலைத்தா ணெடுமொழி தன்செவி கேளான்,

கலக்கங் கொள்ளாள் கடுந்துயர் பொறாஅள், மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத், தன்னுயிர் கொண்டவ னுயிர்தே டினள்போற், பெருங்கோப் பெண்டு மொருங்குடன் மாய்ந்தனள்" (சிலப். உடு : 80-86); "கருதல நிறப்பிற் கனையெரி பொத்தி, ஊதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா, தின்னுயி ரீவர்...பத்தினிப் பெண்டிர்" (மணி. உ : 42 - 8); "நாடினர் நாடியே நனிவருங் கொம்பனார், வாடினர் கணவர்தம் மார்புறத் தழுவியே, வீடினர்" (கம்ப. அக்ககுமாரன். 48); பு. வெ. 262.

16 - 7. "விரட்டாப் பூவி னிமையா நாட்டத்து, நாற்ற வுணவி னுருகெழு பெரியோர்" மதுரை. 457 - 8

19. புகழ்வாழ்க்: புறநா. ௫அ : 19.

[1]ழு. தும்பைத்திணையுள், வாள்வரய்த்து இருபெருவேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியாத்தொகைநிலையென்னுந் துறைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 14, இளம்.; ஷை. ஷை. ஷை. 17, ந.



யையுடைய முரசுவீழ்ந்தன; பலதுாக அடுக்கப்பட்ட [1]பதினெண்பாடை மாக்களாகிய படைத்தொகுதி இடமில்லையாம்படி தொக்க அகன்ற இடத்தையுடைய பாடிவீட்டின்கட் போர்க்களம் தமதாக்கிக்கொள்ளுதற்கு உரியோர் ஒருவரின்றிக் கண்டார்க்கு அச்சம்வர உடனே மடிந்தது

பூசல்; அவர் [2]பெண்டிரும், பச்சையிலைதின்னாராய்க் குளிர்ந்தநீரின்கண் மூழ்காராய் அவர் மார்பத்தைக்கூடி அக்களத்தின்கண்ணே உடன்கிடந்தார்; வாடாத கற்பகத்தின் தாரினையும் இமையாத கண்ணினையும் [3]நாற்றமாகிய உணவையுமுடைய தேவர்களும் மிகப்பெறுதற்கரிய உலகம் நிரம்ப விருந்து பெற்றார்; அதனாற் பொலிக நுங்கள் புகழ்.—எ - று.

அனந்தல் - பறைகொட்டுவோர்கை புண்படுதலின், மந்தமாக ஒலித்தல்.

அறத்தின்மண்டுதலாவது, படைபட்டபின் பெயராது சென்று இருவேந்தரும் பொருதல்.

பட்ட இருவேந்தரும் அக்களத்துக் கிடக்கின்றபடியைக் கண்டு தம் மனத்தோடு நொந்து அவரைநோக்கிக் கூறுகின்றாராதலான், நும் புகழென முன்னிலையாக்கிக் கூறினார்.

வேந்தர் மாய்ந்தனர்; குடை துளங்கின; முரசு ஒழிந்தன; அமர் உடன்வீழ்ந்தது; பெண்டிரும் மார்பகம்பொருந்தி அமைந்தனர்; நாற்ற உணவினோரும் விருந்துபெற்றனர்; இவ்வாறான பின்பும், யாம், அமரினை மேற்கொண்டு பொருது வெல்வேமென்று தாம் தாம் நினைந்த நினைவு எவ்வண்ணமாவதென்று தம்நெஞ்சொடு கூறிப் பின் பொலிக நும்புகழேயென அவ்வரசர் கிடந்தவாறு கண்டு கூறியவாறு.

மறத்தின் மண்டியவென்று பாடமோதுவாரும் உளர்.

வருதார்தாங்கி அமர்மிகல் யாவதென்பதற்கு இவர்கள் செய்தபடி கண்டு.........இனிச் சிலர் பொருது வேறல் எங்கேயுளதென வியந்து கூறியதாக உரைப்பாரும் உளர். (கூஉ)

[1]"பதினெட்டுப் பாடையுங், கண்டவர்" (திருமந்திரம்); "மூட்டிலா மூவறு பாடை மாக்கள்" (சீவக. 93); "விரவுமொழிக் கட்டூர்" (பதிற். கூo : 30); "ஐம்பதி னிரட்டி யவனச் சேரியும், எண்பதி னிரட்டி யெறிபடைப் பாடியும், அளப்பருஞ் சிறப்பி னுயிர மாகிய, தலைப்பெருஞ் சேனைத் தமிழச் சேரியும்" பெருங். ௩. 4 : 8 - 11.

[2]பெண்டிர் பச்சையிலை தின்னுதலென்றது, கணவர் இறந்தபின்னர் அவர் மனைவியர் வேளைக்கீரை முதலியவற்றைத் தின்று கைம்மை விரதங் காத்தலைக் குறிப்பித்தது; புறநா. உசசு; பு. வெ. 257. இச் செய்யுளிற் கூறப்பட்ட பெண்டிர் தலையாகு கற்பையுடையாராதலின் தம் கணவரோடு உயிர் துறந்தார்; மணி. ௩ : 42 - 7.

[3]'நாற்றவுணவு' - அவியுணவு 'வுணவு' மதுரை. 458, ந.



(சுரு) எனைப்பல் யானையு மம்பொடு துளங்கி
விளைக்கும் வினையின்றிப் படையொழிந் தனவே
விறற்புகழ் மாண்ட புரவி யெல்லாம்
மறத்தகை மைந்தரொ டாண்டுப்பட் டனவே
தேர்தர வந்த சான்றோ ரெல்லாம்
தோல்கண் மறைப்ப வொருங்குமாய்ந் தனரே
விசித்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம்
பொறுக்குந ரின்மையி னிருந்துவிளிந் தனவே

சாந்தமை மார்பி னெடுவேல் பாய்ந்தென
வேந்தரும் பொருதுகளத் தொழிந்தன ரினியே
என்னா வதுகொ றானே கழனி
ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
பாசவன் முக்கித் தண்புனற் பாயும்

---

5. "நோன்புரித் தடக்கைச் சான்றோர்" பதிற். கச : 12.

7. புறநா. ௫0 : 1 - 5, உஅஅ : 1 - 4; "ஓடா நல்லேற் றுரிவை தைஇய, பாடுகொண் முரசம்" (அகநா. ௩௩௪); "கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த, மாக்கண் முரசம்" (மதுரை. 732 - 3); "ஏற்றுரியி னிமிழ்முரசம், கூற்றுட்க வெழீஇச் சிலைப்ப" (யா. வி. மேற். 'தாழிரும்பிணர்'); "மயிர்க்கண் முரசமொடு வான்பலி யூட்டி" (சிலப். ௫ : 88); "புனைமருப் பழுந்தக் குத்திப் புலியொடு பொருது வென்று, கனைகுர லுருமுச் சீற்றக் கதழ்விடை யுரிவை போர்த்த, துனைகுரன் முரசம்" (சீவக. 2899); "பசும்பொற் பலவார் விசித்துப் பிணியுறீஇ... ஏற்றுரி போர்த்த......முரசம்" பெருங். உ. 2 : 26 - 9.

9. புறநா. ௩0அ : 6 - 7; "பாடுபுலர்ந்த நறுஞ்சாந்தின், விழுமிய பெரியோர்" மதுரை. 226 - 7.

12. மு. புறநா. ௩௯௨ : 5; ஆம்பல் வள்ளித்தொடி: "ஆம்ப லுடைக்கு மணிவளையும்" (பு. வெ. 329); "பவள வளைசெறித்தாட் கண் டணிந்தாள் பச்சைக், குவளைப் பசுந்தண்டு கொண்டு". பரி. கக : 101 - 2.

13. முக்குதல் - உண்ணுதல்; "முதிய வானமீன் வாரிமுக்கி", "மலைகள் வாரியனவேழு முக்கி" (தக்க. 358, 410); "முத்தைக், கொக்கு முக்கிக்கக்கி விக்குமச் சோலைக் குறுக்குடியே" (தனிப்பாடல்); "கங்கை முக்கின சிறுமீ னெல்லாம்" திருவிளை. இந்திரன். 56

12 - 3. மகளிர் புனற்பாய்தல்: புறநா. கூ௰உ : 6.



யாண ரறாஅ வைப்பிற்
காமர் கிடக்கையவ ரகன்றலை நாடே.

திணையும் துறையும் அவை.

அவரை அக்களத்திற் பரணர் பாடியது.

இ - ள்.—எத்துணையும் பலவாகிய யானையும், அம்பாற்கலங்கி இனி மேல் உண்டாக்கும் போரின்றிப் படையிடத்துப் பட்டன; [1]வெற்றிப் புகழ் மாட்சிமைப்பட்ட குதிரையெல்லாம், ஆண்மைக்கேற்ற வீரக்கூறு பாட்டையுடைய மேலாட்களுடனே அக்களத்தே பட்டன; தேர்கொடுவா வந்த போரிற்கு அமைந்தோரெல்லாம் தாம் பிடித்த பரிசை தம் கண் மறைப்பச் சேரப்பட்டனர்; வாரால் விசிக்கப்பட்டுத் தொழில் மாட்சி மைப்பட்ட மயிர்சீவாத போர்க்கப்பட்ட கண்ணையுடைய முரசமெல் லாம், பரிப்பார் படுதலான் இருந்துகெட்டன; சாந்தமைந்த மார்பின் கண்ணே நெடியவேல் பாய்ந்தனவாக அரசரும் பொருது அக்களத்தின் கண்ணே மடிந்தனர்; இனி, என்னவருத்தமுறுவதோதான்? கழனிக்கண் ஆம்பற்றண்டாற் செய்த வளையணிந்த கையினையுடைய மகளிர் செவ்வி அவலை மூக்கிக் குளிர்ந்த புனற்கண்ணே பாயும் புதுவருவாய் அறாத ஊர்களையுடைய அழகிய கிடையையுடைய அவரது அகன்ற இடத்தை யுடைய நாடு.—எ - று.

அன்னோ என்னுவதுகொலென்று பாடமோதுவாரும் உளர்.

நாடுதான் என்னுவதுகொலெனக் கூட்டுக.

நாடென்னும் ஒருமைநோக்கி, என்னுவதுகொலென ஒருமையாற்

14. "அரூஅ யாண ரகன்றலைப் பேரூர்" பொருந. 1.

15. புறநா. கஅ : 20.

[1]"மறம் வீங்கு பல்புகழ்" பதிற். கஉ.

---

(சுச) நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கிச்
செல்லா மோதில் சில்வளை விறலி

---

1. புறநா. கருஉ : 14-8; "குரல்புணர் நல்யாழ் முழவோ டொன்றி, நுண்ணீ ராகுளி யிரட்ட" மதுரை. 605 - 6.

2. "செல்லா யோதில் சில்வளை விறலி", "செல்லா மோதில் சில்வளை விறலி" பதிற். சுO : 21, ருஎ : 6.

சில்வளைவிறலி: புறநா. சுO : 5, அடிக்.

1 - 2. புறநா. கOரு : 1; மலைபடு. 1 - 13; பதிற். சுக : 1 - 5.





களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
*விசும்பா டெருவை பசுந்தடி தடுப்பப்
பகைப்புல மரீஇய தகைப்பெருஞ் சிறப்பிற்
குடுமிக் கோமாற் கண்டு
நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே.[1]

திணை - பாடாண்டிணை; துறை - விறலியாற்றுப்படை.

[2]பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை [3]நெடும் பல்லியத்தனார் பாடியது.

இ - ள்.—நல்ல யாழையும் சிறுபறையையும் ஒருதலைமாக்கினை யுடனே கட்டிப் போவேமல்லேமோ? சொல்லுவாயாக, சிலவளையை யுடைய விறலி! யானையணிபொருத இடமகன்ற பாசறைக்கண் ஆகாயத்தின்கண்ணே பறக்கும் எருவையைப் பசிய ஊன்றடி தகைப்ப மாற்றார் தேயத்தின்கண்ணே மருவிய அழகிய பெரிய செல்வத்தினை யுடைய முதுகுடுமியாகிய கோமானைக் கண்டு மிக்கநீரான் அடப்பட்ட புற்கையைக் கைவிட்டு வருவதற்கு.—எ - று.

எருவை - தலைவெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து; [4]கழு கெனினும் அமையும்.

விறலி! குடுமிக்கோமாற்கண்டு புற்கையை நீத்தனம் வரற்குச் செல்லாமோவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

தகைப்பருஞ் சிறப்பினென்பதூஉம் பாடம். (கசு)

---

3. நிரைபுநிரை ஆசிரியத்துள் வந்ததற்கு மேற்கோள்; தொல். செய். சூ. 14, ந.

4. "கரும்பின் பாத்திப் பூத்த நெய்தல், இருங்க ணெருமையி னிரைதடுக் குநவும்" (பதிற். கங : 3 - 4) என்பதும், 'நெய்தலானது அக் கரும்பு முதலாய மற்றோரிரையின் பாங்கரிற் செல்லாது தன்னையே நின்று தின்னும்படி தான் போதவுண்ட எருமை நிரையைத் தடுக்குமிடங் களும்' என்னும் அதன் உரையும், "செலல் விலங்குதேன்" (தக்க. 360) என்பதும் இவ்வடியின் பொருளோடு ஒப்பு நோக்கற்குரியன.

7. புறநா. அச: 1; "தெண்ணீ ரடுபுற்கை" குறள், 1065.

[1]மு. பரிசில்பெறப்போகல்வேண்டுமென்னும் குறிப்பிற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 30, இளம்; ஷை. ஷை. ஷை. 36, ந.

[2]பாட்டுடைத்தலைவன் பெயரின் ஒரு பகுதி 6 - ஆம் அடியில் வந்துள்ளது.

[3]இவரது பெயர்க்காரணத்தை முதலடி அறிவிக்கின்றது.

[4]தக்க. 562, உரை.

பி - ம். *விக்ம்போர்வெருநை.



(சாரு) மண்முழா மறப்பப் பண்யாழ் மறப்ப
இருங்கட் குழிசி கவிழ்ந்திழுது மறப்பச்
சுரும்பார் தேறல் சுற்ற மறப்ப
உழவ ரோதை மறப்ப விழவும்
அகலு ளாங்கட் சீறூர் மறப்ப
உவவுத்தலை வந்த பெருநா ளமயத்
திருசுடர் தம்மு ளோக்கி யொருசுடர்
புன்கண் மாலை மலைமறைந் தாங்குத்
தன்போல் வேந்தன் முன்புகுறித் தெறிந்த
புறப்புண் ணாணி மறத்தகை மன்னன்
வாள்வடக் கிருந்தன னீங்கு
நாள்போற் கழியல ஞாயிற்றுப் பகலே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

சேரமான் *பெருஞ்சேரலாதன் சோழன் கரிகாற்பெருவளத்தா

ஞேடு பொருது புறப்புண்ணாணி வடக்கிருந்தானைக் கழாத்தலையார் பாடியது.

---

1. புறநா. கஉ: 14.

8. புன்கண்மாலை: குறுந். சுசு : 6. மலைமறைதல்: "மலைமறைந் தொளித்தி" புறநா. அ : 8.

9 - 11. புறநா. சுசு : 8; மேலுலகத்தை அடைய விரும்பினோர் இவ்வுலகநுகர்ச்சியைத் துறந்து விரதத்தால் உடலை மெலிவித்து யோகப்பயிற்சியால் உயிரை நீத்தற்குத் தாம் உறைந்த இடத்தை விட்டுப் புண்ணியதிசையாகிய வடதிசையிற் சென்று தங்குதலும், மீளாமல் நியமத்துடன் வடதிசையிற் செல்லுதலும் மரபு; அங்ஙனஞ் செல்லுதல் உத்தரகமனமென்றும், மகாப்பிரத்தானமென்றும் கூறப்படும் (புறநா. உகசு, உககூ, உகஅ; சிறுபஞ்ச. 73); கருத்து: "கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப், பொருதுபுண் ணாணிய சேரலாத, னழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென, இன்னா வின்னுரை கேட்ட சான்றோ, ரரும்பெற லுலகத் தவனொடு செலீஇயர், பெரும்பிறி தாகியாங்கு" (அகநா. ருரு); "நிறக்கவல் விரும்பைச் செம்பொனும் வண்ண நிகழ்த்திய விரதமே நிகர்ப்பப், பிறக்கமும் வனமு மொழித்தவ ணமைத்த பெரும்பதிக் குவணமும் பெறும்ல், மறக்கடுங் களிற்றுக் குபேரன்வா ழளகை வடக்கிருந்தது" (வில்லி. பா. இந்திரப். 25); "வாணன்றென் மாறையில் வாழ், நின்றோனைக் கற்பி னிலைமையென் ணுதெதிர் நின்றுவென்னிட்டன்றே வடக்கிருந் தாண்மடப் பாவை யருந்ததியே" (தஞ்சை. 374); போரில் தோல்வியுற்றோர் வடபாற்சென்றிருத்தல் மரபென்றுங் கூறுவர்.

பி - ம். *பெருந்தோளாதன்.



இ - ள்.—முழா மார்ச்சனையிடுதலொழிய, யாழ் பண்ணையொழிய, பெரிய இடத்தையுடைய பானை பாலின்மையிற் கவிழ்ந்து நெய்கடைதலையொழிய, தம்முடைய கிளை வண்டார்ந்த மதுவை உண்ணுதொழிய,

உழுவார் தொழில்செய்யும் ஓசையையொழிய, அகன்ற தெருவினையுடைய சீறூர் விழாவினையொழிய, உவாவந்துகூடிய பெரியநாளாகிய பொழுதின்கண் ஞாயிறும் திங்களுமாகிய இருசுடரும் தம்முள் எதிர்நின்றுபார்த்து அவற்றுள் ஒருசுடர் புல்லிய மாலைப்பொழுதின்கண் மலையுள்ளேயொளித்தாற்போலத் தன்னையொக்கும்வேந்தன் முன்னாகக் கருதியெறிந்த புறத்துற்ற புண்ணுக்கு நாணி மறக்கூறுபாட்டையுடைய வேந்தன் வாளோடு வடக்கிருந்தான்; ஆதலால், இவ்விடத்து யாம் அவனையன்றித் தனித்து உயிர்வாழும் ஞாயிற்றையுடைய பகல் எமக்கு இனி முன்புகழிந்த நாள் போலக் கழியா.—எ - று.

'மண்முழா மறப்ப' என்பது முதலாகிய செயவெனெச்சங்களெல்லாம், வாள்வடக்கிருந்தனனென்னும் வினையோடு முடிந்தன.

எறிந்தபுண் - எறிதல் ஏதுவாக உற்ற புண்.

'முன்புகுறித் தெறிந்த புறப்புண் ணாணி' என்றது, [1]மார்பில் தைத்துருவின புண்ணும் புறப்புண்ணுதலையொக்குமென நாணியென்றதாகக் கொள்க. (௬௫)

---

[1]இராவணனது மார்பில் திக்கயங்களின் கோடுகள் பாய்ந்து உருவின அடையாளத்தை இராமன் புறப்புண்ணென்று நாணிய செய்தி இங்கே நினைவுக்கு வருகிறது; கம்ப. இராவணன்வதை. 207 - ஆம் செய்யுள் முதலியவற்றைப் பார்க்க.

---

(௬௬) நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட வுரவோன் மருக
களியியல் யானைக் கரிகால் வளவ
சென்றமர்க் கடந்தநின் னாற்ற றோன்ற
வென்றோய் நின்னினு நல்ல னன்றே

1. "களியிரு முந்நீர்" புறநா. கூ௯ : 1; மணி. கஉ : 92.

1 - 2. முற்காலத்திற் சோழனொருவன் கடலிற் காற்றை ஏவல் கொண்டமை, "வாத ராசனை வலிந்துபணி கொண்டவவனும்" (கலிங்க. இராச. 16) என்பதனாலும் விளங்குகின்றது.

4. புறநா. உசஉ : 4.



கலிகொள் யாணர் *வெண்ணிப் பறந்தலை
மிகப்புக ழுலக மெய்திப்
புறப்புண் ணாணி வடக்கிருந் தோனே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

[1]சோழன் கரிகாற்பெருவளத்தானை †வெண்ணிக் குயத்தியார் பாடியது.

இ - ள்.—நீர்செறிந்த பெரிய கடலின்கண்ணே மரக்கலத்தையோட்டிப் போர்செய்தற்குக் [2]காற்றின்றி நாவாய் ஓடாதாக ஆண்டு வளிச்செல்வனையழைத்து ஏவல்கொண்ட வலியோன் மரபினுள்ளானே! மதம் பொருந்திய யானையையுடைய கரிகால்வளவ! மேற்சென்று போரைஎதிர் நின்றுகொன்ற நினது வலிதோற்ற வென்றவனே! நின்னினும் நல்லனல்லவோ? தழைத்தலைக்கொண்ட புதுவருவாயையுடைய வெண்ணியென்னும் ஊர்ப்புறத்துப் போர்க்களத்தின்கண் மிகப்புகழை உலகத்துப்பொருந்திப் புறப்புண்ணிற்கு நாணி வடக்கிருந்தோன், அவ்வாறிருத்தலான்.—எ-று.

புகழெய்தியென்றது, புறப்புண்ணிற்கு நாணுதல்தன்னை.

ஓட்டியென்பதனை ஓட்டவெனத் திரிக்க.

எய்தி, எய்தவெனத் திரிப்பினும் அமையும்; எய்தவென்று பாட மோதுவாரும் உளர்.

உரவோன்மருக! கரிகால்வளவ! வென்றோய்! வெண்ணிப்பறந்தலைப் பட்ட புறப்புண்ணாணி உலகத்துப் புகழ்மிகவெய்தி வடக்கிருந்தோன், நின்னினும் நல்லனன்றேயெனக் கூட்டுக.

இது கரிகால்வளவன் வென்றிகூறியதாகலின் அரசவாகையாயிற்று.

(சுசு)

---

3 - 8. அகநா. ருரு : 10 - 15; "காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகா, லார்கலி நறவின் வெண்ணி வாயிற், சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்...வேந்தர் சாய, மொய்வலி யறுத்த ஞான்றை" (அகநா. உசசு : 8 - 13); "இரும்பனம் போந்தைத் தோடுங் கருஞ்சினை, அரவாய் வேம்பி னங்குழைத் தெரியலு, மோங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த, இருபெரு வேந்தரு மொருகளத் தவிய, வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட், கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்" பொருந. 143 - 8.

[1] பாட்டுடைத்தலைவன் பெயர் 3 - ஆம் அடியில் வந்துள்ளது.

[2] "வாயுவினை நோக்கியுள மாண்டவினை நாவாய்" குண்டலகேசி.

பி - ம். *வெண்ணிற்பறந்தலை. †வெண்ணிற்குயத்தியார்.



(சுஎ) அன்னச் சேவ லன்னச் சேவல்
ஆடுகொள் வென்றி யடுபோ ரண்ணல்
நாடுதலை யளிக்கு மொண்முகம் போலக்

கோடுகூடு மதிய முகிழ்நிலா விளங்கும்
மையன் மாலையாங் கையறு பிணையக்
குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி
வடமலைப் பெயர்குவை யாயி னிடையது
சோழநன் னாட்டுப் படினே கோழி
உயர்நிலை மாடத்துக் குறும்பறை யசைஇ
வாயில் விடாது கோயில் புக்கெம்
பெருங்கோக் கிள்ளி கேட்க விரும்பிசிர்
ஆந்தை யடியுறை யெனினே மாண்டநின்
இன்புறு பேடை யணியத்தன்
நன்புறு நன்கல நல்குவ னினக்கே.1

---

1. தோல். கிளவி. சூ. 52, தெய்வச். மேற்.

4. மதியக்கோடு: "இருகோட் டொருமதி யெழில்பெற மிலைத்தனை" நக்கீரர் திருவெழுகூற்றிருக்கை.

6 - 7. குமரியும் வடமலையும்: புறநா. சு: 1 - 2, கள: 1; மதுரைக். 70 - 71.

8 - 9. புறநா. சுகூ : 12. 10. புறநா. சுகூ : 17.

11. பிசிர் - பாண்டிநாட்டிலுள்ளதோர் ஊர்; புறநா. உகமி : 6 - 7.

12. அடியுறை - அடியில் வாழ்வேன்; புறநா. கககூஅ: 26, உரை; "அடியுறை யருளாமை யொத்ததோ" (கலி. ருச : 4); "காவலற் குறுகி, அடியுறை யருண்மொழி யான்பணிந் துரைப்ப" பெருங். க. 47 : 7 - 8.

11 - 4. நற்செய்தி கேட்டோர் சொன்னவர்களுக்குத் தாமணிந்த அணிகலம் நல்குதல்: "அணிகலம் பரிந்து நங்கை யணிமரு ளுருவக் தந்த, மணிமருண் முறுவற் செவ்வாய் மாதவ சேனைக் கீந்து" (சூளா.

கல்யாண. 182); "ஆயபே ரன்பெனு மளக்க ரார்த்தெழத், தேய்விலா முகமதி விளங்கித் தேசுறத், தூயவ ளுவகைபோய் மிகச்சு டர்க்கெலா, நாயக மனையதோர் மாலை நல்கினள்" கம்ப. மந்தரை. 52.

[1]ழ. "நாராய் நாராய்" என்னும் சத்திமுற்றப்புலவர் பாடல் ஞாபகத்திற்கு வருகின்றது.

'அன்னச் சேவ லன்னச் சேவலென்னும் பாட்டினுள் இநம்பிசிராந்தையடியுறைபெனினென்பது.........குறிப்புமொழி' தொல். எச்ச. சூ. 25, தெய்வச்.



திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.

1கோப்பெருஞ்சோழனைப் *பிசிராந்தையார் பாடியது.

இ - ள்.—அன்னச்சேவலே ! அன்னச்சேவலே ! கொல்லுதலைப் பொருந்திய வென்றியையுடைய அடுபோரண்ணல் தன்னாட்டைத் தலையளிசெய்யும் விளங்கிய முகம்போல இரண்டுபங்கும் வந்து பொருந்திய மதியம் அரும்புநிலாவிளங்கும் தமியோராயினோர்க்கு மயக்கத்தைச்செய்யும் மாலைப்பொழுதின்கண் யாம்செயலற்று வருந்தக் குமரியாற்றினது பெரிய துறைக்கண்ணே அயிரையை மேய்ந்து வடதிசைக்கண் இமயமலைக் கண்ணே போகின்றாயாயின், இவ்விரண்டிற்கும் இடையதாகிய நல்ல சோழநாட்டின்கட் சென்று பொருந்தின், உறையூரின்கண் உயர்ந்த நிலையையுடைய மாடத்தின் கண்ணே நினது குறும்பறையோடு தங்கி வாயில்காவலர்க்கு உணர்த்திவிடாதே தடையின்றிக் கோயிற்கண்ணே புக்கு எம்முடைய பெருங்கோவாகிய கிள்ளிகேட்பப் பெரியபிசிரென்னும் ஊரின்கண் ஆந்தையுடைய அடிக்கீழெனன்று சொல்லின், மாட்சிமையை

யுடைய நினது இன்புறும் பேடை பூணத் தனது விருப்பமுறும் நல்ல அணிகலத்தை அளிப்பன், நினக்கு.—எ - று.

'ஆடுகொள்வென்றி' என்பதற்கு வென்றியுள்மிக்கவென்றி யெனினும் அமையும்.

குறும்பறையென்றது, பேடையை.

வாயில்விடாதென்றதற்கு வாயில்காவலர் விடவேண்டாதெனினும் அமையும்.

முகிழ்நிலாவென்பது, ஒருசொன்னடைத்தாய் மதியம் முகிழ்நிலா விளங்குமென முதல்வினைகொண்டது; மதியம் முகிழ்க்கும் நிலா வெனினும் அமையும்.

---

11 1 - 2 - ஆம் அடிகளில் தலைவன் பெயரும் புலவர்பெயரும் அமைந்திருக்கின்றன.

'புணர்ச்சி : ஒரு தேயத்தாராதல்; பழகுதல் : பலகாற்கண்டும் சொல்லாடியும் மருவுதல்; இவ்விரண்டுமின்றிக் கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும்போல உணர்ச்சியொப்பின் அதுவே உடனுயிர் நீக்கும் உரிமைத்தாய நட்பினைப் பயக்குமென்பதாம்' (குறள், 785, பரிமேல்); 'கோப்பெருஞ்சோழன் துறந்துழிப் பிசிராந்தையாரும் பொத்தியாரும் போல்வார் துறந்தாரென்று கூறும் புறச்செய்யுட்கள் உதாரணம்' என்னும் நச்சினார்க்கினியர் வாக்கியம் ஈண்டறியத்தக்கது; தொல். கற்பியல், சூ. 52.

பி - ம். *இரும்பிசிராந்தையார்.

ஆந்தையடியுறையென்பதற்கு ஆந்தை நின் அடிக்கண் உறைவானென்றுரைப்பாரும் உளர்.

பேடையணிய நன்கலம் நல்குவனென்பதனாற்பயன்: மறவாது போதல்வேண்டுமென்னும் நினைவாயிற்று. (கஎ)

---

(கூஅ) உடும்புரித் தன்ன வென்பெழு மருங்கிற்
கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது
சில்செவித் தாகிய கேள்வி நொந்துநொந்
தீங்கெவன் செய்தியோ பாண பூண்சுமந்
தம்பகட் டெழிலிய செம்பொறி யாகத்து
மென்மையின் மகளிர்க்கு வணங்கி வன்மையின்
ஆடவர்ப் பிணிக்கும் பீடுகெழு நெடுந்தகை
புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச்
சுரந்த காவிரி மரங்கொன் மலிநீர்
மன்பதை புரக்கு நன்னாட்டுப் பொருநன்

---

3. "சில்செவித் தாகிய புணர்ச்சி" அகநா. கo : 4.

"புலவுவாய்ப் பாண" (பெரும்பாண். 22) என்பதற்கு, 'கற்ற கல்வியை வெறுத்துக் கூறுகின்ற வாயினையுடைய பாணனே' என்று பொருள்கூறி இவ்வடியையே மேற்கோளாகக் காட்டினர் நச்சினார்க்கினியர்.

5. மார்பில் மூன்று வரிகள் கிடத்தல் ஆடவர்க்கு உத்தம இலக்கணம்; புறநா. கூக : 27; "மார்பிற், செம்பொறி வாங்கிய மொய்ம்பு" (முருகு. 104 - 5); "பொறிகுலாய்க் கிடந்த மார்பிற் புண்ணியன்" (சீவக. 1706); "செவ்வரை யாகத்தான்" சீகாளத்தி. நக்கீர. 31.

6 - 7. புறநா. சுo : 9 - 10, அடிக்.

8. 'புனிறு' என்னும் உரிச்சொல் ஈன்றணிமையாகிய குறிப்புப் பொருளை உணர்த்தியதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 77, ந.

8 - 9. கலி. கக : 4 - 5; "மணற்கிளைக்க நீரூறு மைந்தர்கள் வாய் வைத், திணைச்சுரக்குந் தாய்முலை யொண்பால்" (திருவள். ருக); "சரயு வென்பது தாய்முலை யன்னதிவ், வுரவு நீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம்" (கம்ப. ஆற்று. 12); "பிள்ளை தைவரப் பெருகுபால் சொரிமுலைத் தாய் போல், மள்ளர் வேனிலின் மணற்றிடர் பிசைந்துகை வருட, வெள்ள நீரிரு மருங்குகால் வழிமிதந் தேறிப், பள்ள நீள்வயற் பருமடை யுடைப்பது பாலி" பெரிய. திருக்குறிப்பு. 22.



உட்பகை யொருதிறம் பட்டெனப் புட்பகைக்
கேவா னாகலிற் சாவேம் யாமென
நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்பத்

தணிபறை யறையு மணிகொ டேர்வழிக்
கடுங்கட் பருகுநர் நடுங்குகை யுகுத்த
நறுஞ்சே றாடிய வறுந்தலை யானை
நெடுநகர் வரைப்பிற் படுமுழா வோர்க்கும்
உறந்தை யோனே குருசில்
பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே.

திணை - அது ; துறை - பாணாற்றுப்படை.

சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார் பாடியது.

இ - ள்.—உடும்புரித்தாற்போன்ற எலும்பெழுந்த விலாப்புடையை யுடைய சுற்றத்து மிக்கபசியைத் தீர்ப்பாரைக்காணாதே கேட்டார் பலரும் அறிதற்கரிதாய் அறிவார் சிலராதலின் சில்செவிக்கண்ணதாகிய யாழை இப்பாண்சாதியது உணவிற்கு முதலாகப்பெற்ற பரிசு என்னென்று வெறுத்து இங்கே என்செய்கின்றாயோ பாண ! பூணைத்தாங்கி அழகிய

---

11 - 2. "நாளும் புள்ளுங் கேளா னூக்கமொ, டெங்கோ னேயின னாதலின்" தொல். புறத். சூ. 3, ந. மேற்.

11 - 3. "ஏகும்மள வையின்வந்தன வலமும்மயி லிடமும், காகம்முத லியமுந்திய தடைசெய்வன கண்டா, னாகம்மன னிடையிங்குள திடையூறென நடவான், மாகம்மணி யணிதேரொடு நின்றானெறி வந்தான்" (கம்ப. பரசுராம. 5); புள்ளின் தீய நிமித்தத்தையும் மதித்திலரென மறவரின் வீரச்சிறப்புக்கூறினர் ; "உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன், செறினுஞ்சேர் குன்ற விலர்" (778) என்னும் குறளும்,

' போர்பெற்று
அறியாமையின், அதுபெற்ருல் அரசன் தடுப்பினும்
நில்லாரென்பதாம்;
பிறரும்......' புட்பகைக், கேவாஞகலிற் சாவேம் யாமென, நீங்கா
மறவர் வீங்குதோள் புடைப்ப ' என்றுங் கூறினர் ' என்று
வந்துள்ள.
பரிமேலழகர் வாக்கியங்களும் ஈண்டறியத்தக்கன.
16. "கீழு மேலுங் காப்போர் நீத்த, வறுந்தலைப்
பெருங்களிறு"
நற். கஅஉ : 8 - 9.
17. ஓர்க்கும்: "நென்னீ நெறிந்து விரிச்சி யோர்க்கும்"
(புறநா.
உஅ0 : 6) ; கலி. சசு : 13; அகநா. அஅ : 3.
16 - 7. "நாறுமயிர் மடப்பிடி தழீஇ வேறுநாட்டு, விழவுப்படர் மள்
ளரின் முழவெடுத் துயரிக், களிறதர்ப் படுத்த" அகநா. கஅக : 4 - 6.
19. புறநா. உஉ : 31 - 3, அடிக்.
22

பெருமையையுடைய எழில்பெற்ற செம்பொறிபொருந்திய மார்பினை யுடைய மென்மையான் மகளிர்க்குத் தாழ்ந்து வன்மையான் வீரரை அகப்படுக்கும் பெருமைபொருந்திய நெடுந்தகை, ஈன்றணிமை பொருந்தி அது தீர்ந்த குழவிக்குச் சுரக்கும்முலைபோல நீர்மிக்ககாவிரியினது கரை மரத்தைச்சாய்க்கும் மிக்கவெள்ளம் உலகத்து உயிர்ப்பன்மையைப் பாது காக்கும் நல்லசோழநாட்டையுடைய வேந்தன், உட்பகை ஒருகூற்றிலே பட்டதென்னும்படி எம்மைப் புட்செய்யும் பகையிடத்து ஏவானுகலான் யாம் எம்மிற்பொருது மடியக்கடவேமென்று நீங்காத மறத்தையுடை யோர் தம்முடைய பூரித்த தோள்களைத் தட்ட அவருடைய மேற்கோள் தணிதற்குக் காரணமாகிய பறையையும் அழகுபொருந்திய தேர்வழிக் கண் வெய்ய கள்ளைப்பருகுவார் தம் நடுங்கு கையான் உகுக்கப்பட்ட நறிய அச்சேற்றின்கண் ஆடிய பாகரேறுத யானை நெடிய நகரிடத்து ஒலிக்கும் பறையினது ஓசையைச் செவிதாழ்த்துக் கேட்கும் உறையூரிடத்தான்; அவ்விறைவன், நீ பிறன்வாயிலைநினையாமை நினக்கு அளிப்பன், அவன் பாற் செல்வையாயின்.—எ - று.

செம்பொறியென்றது, [1]"வரையகன் மார்பிடை வரையு மூன்றுள" என்னும் இலக்கணத்தை; [2] திருமகளெனினும் அமையும்.

உறந்தையோனென்பது, வினைக்குறிப்புமுற்று.

பூண்சுமந்தெழிலிய அம்பகட்டாகத்து நெடுந்தகையென இயையும்.

பாண! நீ செவின், நெடுந்தகை, பொருநன், குருசில், உறந்தை யோன்; அவன் பிறன்கடைமறப்ப நல்குவன்; நீ ஈங்கு எவன் செய்தியோவெனக் கூட்டுக.

'உட்பகையொருதிறம் பட்டென' என்பதற்கு உள்ளபகை சந்தாகிய

ஒருகூற்றிலே பட்டதாகவென்று உரைப்பினும் அமையும்.

பகட்டினுடையதோற்றம் பொலிவுபெறவென்பாரும் உளர்.

'புட்பகை யேவானாகலின்' என்றோதி, உள்ளபகை தம்மிற் கூடிற்றாக, புள் நிமித்தத்திற்குப்பகைவன் ஏவானாகலிற் சாவேம்யாமென மறவர் தோள்புடைப்பவென்று உரைப்பாரும் உளர். [3]புட்பகையென்று இவனுக்கு ஒருபெயர். (௬௮)

---

[1] சீவகசிந்தாமணி, 1462.

[2] புறநா. ௭ : 5; "திருமறு மார்பநீ யருளல் வேண்டும்", "பொன்னிற் றோன்றிய புனைமறு மார்ப" (பரி. ௧ : 36, ௪ : 59); "இருநிலங் கடந்த திருமறு மார்பின், முந்நீர் வண்ணன்" (பெரும்பாண். 29 - 30); "குருந்த மொசித்தஞான் றண்டா லதனைக், கரந்த படியெமக்குக் காட்டாய்—மரம்பெறு, போர்பிற் குருகுறங்கும் பூம்புன னீர்நாட, மார்பிற் கிடந்த மறு" தொல். புறத். சூ. 5, ந. மேற்.

[3] பு. வெ. 33.



(௬௯) கையது கடனிறை யாழே மெய்யது
புரவல ரின்மையிற் பசியே யரையது
வேற்றிழை நுழைந்த * வேர்நனை சிதாஅர்
ஓம்பி யுடுத்த வுயவற் பாண
† பூட்கை யில்லோன் யாக்கை போலப்
பெரும்புல் லென்ற விரும்பே ‡ ரொக்கலை
வையக முழுதுடன் வளைஇப் பையென

என்னை வினவுதி யாயின் மன்னர்
அடுகளி றுயவுங் கொடிகொள் பாசறைக்
குருதிப் பரப்பிற் கோட்டுமா தொலைச்சிப்
புலாக்களஞ் செய்த கலாஅத் தானையன்
பிறங்குநிலை மாடத் துறந்தை யோனே
பொருநர்க் §கோக்கிய வேல னொருநிலைப்
பகைப்புலம் படர்தலு முரியன் றகைத்தார்
ஒள்ளெரி புரையு முருகெழு பசும்பூட்
கிள்ளி வளவற் படர்குவை யாயின்
நெடுங்கடை நிற்றலு மிலையே கடும்பகற்
றேர்வீ சிருக்கை யார நோக்கி
நீயவற் கண்ட பின்றைப் பூவின்
ஆடும்வண் டிமிராத் தாமரை
சூடா யாத லதனினு மிலையே.

---

3. "வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த, துன்னற் சிதாஅர்" பொருந. 80 - 81. 4. உயவல் : மணி. ௫ : 90.

11. "செற்றமுங் கலாமுஞ் செய்யா தகலுமின்" மணி. ௧ : 63.

12. புறநா. ௬௭ : 8 - 9; பட்டின. 285.

உறையூரென்பதனை உறந்தையென முன்னோர் திரித்து வழங்கியதற்கு மேற்கோள்; தொல். செய். சூ. 80, பேர். ந.

13. "திருமா வளவன் றெவ்வர்க் கோக்கிய, வேலினும் வெய்ய" பட்டின. 299 - 300.

18. “ நயந்தோர்க்குத், தேரீயும் வண்கை யவன் ” கலி. சஉ.

17 - 8. மதுரை. 714 - 752.

20. “ ஆடுவண் டிமிரா வழலவிர் தாமரை ” பெரும்பாண். 481.

16 - 21. புறநா. கo : 11 - 7, அடிக்.

பி - ம். * வெயர்நனே. † பூண்டகை. ‡ ரொக்கலொடு.

§ கேற்றியுவில்லன்.



திணையும் துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர்கிழார் பாடியது.

இ - ள்.—நின் கையகத்தது, இலக்கணமுறைமை நிரம்பிய யாழ்; உடம்பின் கண்ணது, [1]ஈத்தளிப்போரில்லாமையாற் பசி; அரையதாகிய வேற்றிழை ஊடுபோன வேர்ப்பால் நனைந்த சீரையை [2]அற்றம் மறைத்து உடுத்த வருத்தத்தையுடைய பாண! மடியால் மேற்கோளில்லாதவன் உடம்பையொப்பப் பெரிதாகப் புற்கென்ற மிகப்பெரிய சுற்றத்தை யுடையையாய் உலகமெல்லாவற்றையுஞ் சூழ்வந்து பின்னை என்னை, மெல்ல வறுமைதீர்ப்பார் யாரெனக் கேட்கின்றாயாயின், கேளாய்: வேந்தரது கொல்யானை புண்பட்டுவருந்தும் கொடியெடுக்கப்பட்ட பாடி வீட்டின்கட் குருதிப்பரப்பின்கண்ணே யானையைக் கொன்று புலாலை யுடைய போர்க்களத்தையுண்டாக்கிய போர்செய்யும் படையையுடைய வன், உயர்ந்தநிலையையுடைத்தாகிய மாடத்தையுடைய உறையூரிடத் திருந்தான்; அவன், பொருவோர்பொருட்டு எடுக்கப்பட்ட வேலையுடைய னாய் ஒருபெற்றியே பகைவர் நாட்டின்கட் போதலும் உரியன்; சுற்றப் பட்ட மாலையையும் ஒள்ளிய எரியையொக்கும் நிறம்பொருந்திய பசும் பொன்னாற் செய்யப்பட்ட பூணினையும் உடைய கிள்ளிவளவனிடத்தே செல்குவையாயின் அவனது நெடியவாயிலின்கட் காலம் பார்த்துநிற்றலும் உடையையல்லை; விளங்கிய பகற்பொழுதின்கண் அவன் பரிசிலர்க்குத் தேர்வழங்கியிருக்கும் இருப்பை நின் கண்ணாரப் பார்த்து நீ அவனைக் கண்டபின்பு பூவின்கண்ஆடும் வண்டு ஊதாத பொற்றாமரைப்பூவைச் சூடாயாதல் அந்நெடுங்கடை நிற்றலினும் உடையையல்லை; அதனால், ஆண்டுச் செல்வாயாக.—எ - று.

தகை தார், தகைத்தாரென நின்றது; மேம்பட்ட தாருமாம்.

பாண! ஒக்கலையாய் வளைஇ வினவுதியாயின், தானையையுடையவன், உறந்தையோன்; அவன்பாற் படர்குவையாயின், நின்கையது யாழாதலா னும், மெய்யது பசியாதலானும், நெடுங்கடை நிற்றலுமிலை; நீ அவற் கண்டபின்றைத் தாமரை சூடாயாதல் அதனினுமிலையென மாறிக் கூட்டுக.

பூவாகிய தாமரையெனினும் அமையும்; அதற்கு இன், அல்வழிச் சாரியை.

'புகழ்த்தகையில்லோன்' என்பதூஉம் பாடம்.

---

[1]" இன்சொலா லீத்தளிக்க வல்லாற்கு " குறள், 387.
[2]" அற்றங் காவாச் சுற்றுடைப் பூந்துகில் " மணி. ௩ : 139.



[1]ஒருநாளுள் முதலன பத்துநாழிகையும் அறத்தின்வழியொழுகிப் பின் பத்துநாழிகையும் இறையின் முறைமைகேட்டுச் செய்த பொருளைப் பரிசிலர்க்குக் கொடுத்து மகிழ்ந்திருத்தலால் கடும்பகற்றேர்வீசிருக்கை யென்றார்.

(௬௯)

---

1 'தலைமகனால் தலைநின்று ஒழுகப்படுவன தருமார்த்த காமமென்பன; அம்மூன்றினையும் ஒரு பகலை மூன்று கூறிட்டு முதற்கட் பத்து நாழிகையும் அறத்தொடுபட்டுச் செல்லும்; இடையன பத்து நாழிகையும் அருத்தத்தொடு பட்டுச்செல்லும்; கடையன பத்து நாழிகையும் காமத்தொடு பட்டுச் செல்லும்; ஆதலால் தலைமகன் நாழிகையளந்துகொண்டு தருமத்தொடு படுவான், தலைமகளும் வேண்டவே தானும் வேண்டப் போந்து அத்தாணி புகுந்து அறங்கேட்பதும் அறத்தொடு பட்டுச் செல்வதும் செய்யும்; நாழிகை யளந்து இடையன பத்து நாழிகையும் இறையும் முறையும் கேட்டு அருத்தத்தினொடுபட்டு வாழ்வானும்' இறை. சூ. 40, உரை.

---

(௭௦) தேஎந் தீந்தொடைச் சீறியாழ்ப் பாண

கயத்துவாழ் யாமை காழ்கோத் தன்ன
நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை
இனிய காண்கிவட் டணிகெனக் கூறி
வினவ லானா முதுவா யிரவல
தைஇத் திங்கட் டண்கயம் போலக்

---

1. "தீந்தே, னணிபெற வொழுகி யன்ன வமிழ்துறழ் நரம்பி னல்யாழ்" சீவக. 722.

2 - 3. புறநா. உசக : 3 - 4; "பகுவா யாமை, கம்பு ளியவ னுக விசிபிணித், தெண்கட் கிணையிற் பிறழும்" (அகநா. ஙருசு: 2 - 4); "ஆமை யகடுபோ லங்கட் டடாரி", "யாமை, யள்ளகட் டன்ன வரிக்கிணை" பு-வெ. 186, 206.

5. புறநா. அக: 4.

6. "தைஇத் திங்கட் டண்கயம் படியும்" (நற். அ0: 7); "பனிச் சுனைத் தெண்ணீர், தைஇத் திங்கட் டண்ணிய தரினும்" (குறுந். ககக); "தைஇத் தண்கயம் போலப் பலர்படிந்து" ஐங்கு. அச.



கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்
அடுதீ யல்லது சுடுதீ யறியா
திருமருந்து விளைக்கு நன்னாட்டுப் பொருநன்
கிள்ளி வளவ னல்லிசை யுள்ளி

நாற்ற நாட்டத் தறுகாற் பறவை
சிறுவெள் ளாம்பன் ஞாங்க ரூதும்
கைவள் ளீகைப் *பண்ணன் சிறுகுடிப்
பாதிரி கமழு மோதி யொண்ணுதல்
இன்னகை விறலியொடு மென்மெல வியலிச்
செல்வை யாயிற் செல்வை யாகுவை
விறகொய் மாக்கள் பொன்பெற் றன்னதோர்

---

7. "கொளக்கொளக் குறையாச் செல்வத்து" (பதிற். அஉ : 12); "கொளக்கொளக் குறையாது தாத்தர மிகாது......நாடு" மதுரை. 426 - 8.

செயவெனெச்சம் இருதொழிலும் நிகழ்காலமும் ஏற்றுவந்ததற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. 343; நன் - வி. சூ. 344.

6 - 7. "கொளக்குறை படாஅக் கோடுவளர் குட்டத்து" அகநா. கசுஉ.

8. புறநா. உ0 : 7 - 9.

9. புறநா. ௫அ : 10; 'சோறு' மருந்தெனப்படுதலே, மணி. கக: 48, 117 - ஆம் அடிகளாலும் அறிக; "சோழ வளநாடு சோறுடைத்து" ஔவையார்.

12. ஊதும் - நுகரும்; கலி. சுசு; அகநா. கருஉ.

13. பண்ணன் சிறுகுடி : "தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன், பண்ணன் சிறுகுடி", "பண்ணன் சிறுகுடி படாஅது, நீரீர்க் கான்யாறு", "கழற்காற் பண்ணன் காவிரி வடவயி, னிழற்கயம்" அகநா. ௫௪, ககள, களள.

14. "கானப் பாதிரிக் கருந்தகட் டொள்வீ, வேனி லதிரலொடு விரைஇக் காண்வரச், சில்லைங் கூந்தல்" அகநா. உ௬௧ : 1 - 3.

15. "நன்மா மயிலின் மென்மெல வியலி" மதுரை. 608.

16. செல்வு-செல்வம்; "செல்வாய செல்வந் தருவாய் நீயே", "செல்வாய்த் திருவாணுய் நீயே" தே.

17. ஓய்தல் - செலுத்துதல்; புறநா. க்கக: 8; நற். எஅ: 4; பதிற். எரு; அஎ.

மு - ம். *பாணன்.



தலைப்பா டன்றவ னீகை
நினைக்க வேண்டா வாழ்கவன் றாளே.

திணையும் துறையும் அவை.
அவனைக் *கோவூர்கிழார் பாடியது.

இ - ள்.—தேன்போல இனிய நரப்புத்தொடை பொருந்திய சிறிய யாழையுடைய பாண! 'கயத்தின்கண் வாழும் யாமையை நாராசத்தின் கண்ணே கோத்தாற்போன்ற நுண்ணிய கோலாற் பிணிக்கப்பட்ட தெளிந்த கண்ணையுடைய பெரிய உடுக்கையோசை இனிய காண்க; இவ்விடத்தே சிறிது ஆறிப்போவீராக' என்றுசொல்லிப் பலவும் என்னைவினவு தலமையாத முதிய வாய்மையையுடைய இரவலனே! யான்சொல்லுவதனைக் கேட்பாயாக; தைமாதத்தின்கட் குளிர்ந்த பொய்கையைப்போலக் கொள்ளக்கொள்ளத் தொலையாத சோற்றையுடைய அகன்ற நகரிடத்து அடுநெருப்பல்லது சுடுநெருப்பறியாது [1]சோற்றையும் தண்ணீரையும் விளக்கும் நல்ல நாட்டுக்கு வேந்தன், கிள்ளிவளவனது நல்லபுகழை நினைத்து மணத்தை ஆராயும் ஆராய்ச்சியையுடைய வண்டு சிறிய வெளிய ஆம்பலின்மீதே ஊதும் கையான்வள்ளிய கொடையையுடைய பண்ணனது சிறுகுடிக்கட் பாதிரிநாறும் மயிரினையும் ஒள்ளிய நுதலினையும் இனிய முறுவலையுமுடைய விறலியுடனே மெல்ல மெல்ல நடந்து செல்வையாயின் செல்வத்தையுடையையாவை; விறகைக்காட்டினின்றும் ஊரகத்துச் செலுத்துமாந்தர் அக்காட்டகத்து விழுப்பொருள் எடுத்துக்கொண்டாற் போல்வதொரு நேர்பாடன்று, அவனது வண்மை; அது பெறுவேங்கொலென்று கருதவேண்டா; அவனது தாள் வாழ்க.—எ - று.

பாண! தணிக எனக்கூறி வினவலானு இரவல! விறலியொடு மென்மெலச் செல்குவையாயினென இயையும்; வியனகர்ச் செல்வையாயினனவும் அமையும். நகரையுடையநாடென இயைப்பாரும் உளர்.

'விறகொய்மாக்கள் பொன்பெற்றன்னதோர் தலைப்பாடன்று' என்பதற்கு விறகிற்குச் சென்றோர் பொன்பெற்றாற் போல்வதொரு தலைப்பாடதென்று பொருளுரைப்பாரும் உளர்; அதுபொருந்துமேல் அறிந்துகொள்க.

(எ0)

19. தாள்வாழ்க வென்றல் மரபு; புறநா. ௧௦௪ : 10, ௧௦௩ : 12, ௧௭௧ : 15; "நாதன்றாள் வாழ்க" திருவாசகம்.

1 "தண்ணீருஞ் சோறு மளிப்பான் றிருப்பனங் காட்பட்டனே" தனிப்பாடல்.

பி - ம். *கோவூரழகியார்.



(௭௧) மடங்கலிற் சினைஇ மடங்கா வுள்ளத்
தடங்காத் தானை வேந்த ருடங்கியைந்
தென்னொடு பொருது மென்ப வவரை
ஆரம ரலறத் தாக்கித் தேரொ
டவர்ப்புறங் காணே னாயிற் சிறந்த
பேரம ருண்க ணிவளினும் *பிரிக

1. "மடங்கல்போற் சினைஇ" கலி. ௨.
2. புறநா. ௯௮ : 11 - 3.
3 - 5. புறநா. ௭௨ : 7 - 9.

6. "மெல்லிய லரிவைநின் னல்லகம் புலம்ப, நிற்றுறந் தமைகுவெ னாயி னெற்றுறந், திரவலர் வாரா வைகல், பலவா குகயான் செலவுறு தகவே" (குறுந். ௧௩௭); "கருந்தடங்கண் மங்கையரை நோக்குற்ற கண்ணும், பெருந்தடந் தோட்பிணித்த கையும் - பருந்தின், வளைவாயிற் பெய்யேனேல் வந்திரந்தார் துன்பம், களையாது மாற்றுகவென் கை" வீர.

பொருள். 17, மேற்.

பேரமருண்கண்: நற். உக: 9, சச: 2; குறள், 1083.

4 - 6. இவனென்றது தன் தேவியை; அவள் கற்பிற் சிறந்தவள். இந்நூல் உசசு - ஆம் செய்யுளின் கருத்தில், 'பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்வாள் சொல்லியது' என்று இருத்தலின், அவள் கல்வியிற் சிறப்புற்றுச் செய்யுள் செய்யும் ஆற்றலையுடையளா யிருந்தாளென்பதும் இவன் அவளிடத்தே மிக்க அன்புடையவனு யிருந்தது போலவே அவளும் இவனிடத்துப் பேரன்புடையவளாயிருந்து இல்லறத்தை இனிது நடத்தி இவன் இறந்தவுடன் தீப்பாய்ந்து தானும் இறந்தாளென்பதும் வெளியாகின்றன; தன்னுடைய குற்றமற்ற மனைவி யை மனத்தால் அங்கீகரியாது விட்டவன் மிக்கபாவியாய்ப் பிணிவாய்ப் பட்டு வருந்துவானென்று நீதிநூல்கள் கூறுதலின் 'இவளினும் பிரிக' என்றான்; "குழற்சிகைக் கோதை சூட்டிக் கொண்டவ னிருப்ப மற்றோர், நிழற்றிகழ் வேலி னோ நேடிய நெடுங்க ணாளும், பிழைப்பிலாட் புறந்தந் தானுங் குரவரைப்பேணல் செய்யா, திழுக்கினு ரிவர்கள் கண்டா யிம்மைநோய்க் கிரைக ளாவார்" (சீவக. 252) என்னுஞ் செய்யுள் இதனை நன்கு புலப்படுத்தும்.

"கடிசொலில்லைக் காலத்துப்படினே" என்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். எச்ச. சூ. 50, தெய்வச்.

பி - ம். * பிரிகு.

அறனிலை திரியா வன்பி னவையத்துத்
திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தே னாகுக மலிபுகழ்
வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்
பொய்யா யாணர் மையற் கோமான்

மாவனு மன்னெயி லாந்தையு முரைசால்
அந்துவஞ் சாத்தனு மாத *னழிசியும்
வெஞ்சின வியக்கனு முளப்படப் பிறரும்
கண்போ னண்பிற் கேளிரொடு கலந்த
இன்களி மகிழ்நகை யிழுக்கியா னொன்றோ
மன்பதை காக்கு நீள்†குடிச் சிறந்த
தென்புலங் காவலி னொரீஇப்பிறர்

---

7. "சிறந்த, அவைநல மன்பின் விளங்கும்" நான்மணி. 26.

8 - 9. கலி. கO: 5-7.

7 - 9. புறநா. எஉ: 10 - 12; "நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினை வாங்கக், கொடிதோர்த்த மன்னவன்" (கலி. அ); "உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை, அடக்கமி லுள்ளத்த னாகி - நடக்கையின், ஒள்ளிய னல்லான்மேல் வைத்தல் குரங்கின்கைக், கொள்ளி கொடுத்து விடல்", "முறைதெரிந்து செல்வர்க்கு நல்கூர்ந் தவர்க்கும், இறை திரியா னேரொக்கல் வேண்டும் - முறைதிரிந்து, நேரொழுகா னாயி னதுவா மொருபக்கம், நீரொழுகப் பாலொழுகு மாறு" பழ. 200, 206.

15. "கரவா துவந்தியுங் கண்ணன்னார் கண்ணும், இரவாமை கோடியுறும்" (குறள், 1061); பெருங். உ. 10: 101, 11: 166, 17: 161; சு. 3: 61.

10 - 16. "கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட, விலங்கிற்கும் விள்ள லரிது" நாலடி. 76.

17 - 8. "மன்புதை காக்குந் தென்புலங் காவல், என்முதற் பிழைத் தது" (சிலப். உ௦ : 76 - 7) என்பவையும் இவ்வடிகள்போலவே பாண்டியருடைய குலப்பெருமையைப் புலப்படுத்துகின்றன

பி - ம். இழிச்சியும். † குடிப்புறந்த.

23



வன்புலங் காவலின் மாறியான் பிறக்கே.[1]

திணை - காஞ்சி; துறை - வஞ்சினக் காஞ்சி.

[2]ஒல்லையூர்தந்த *பூதப்பாண்டியன் பாட்டு.

இ - ள்.—சிங்கம்போலச் சினந்து மீளாத மேற்கோள் பொருந்திய உள்ளத்தினையும் மிகைத்துச் செல்லும் படையையுமுடைய வேந்தர், தம்மில் ஒப்பக்கூடிவந்து என்னொடு பொருவேமென்று சொல்லுவர்; அவ் வேந்தரைப் பொறுத்தற்கரிய போரின்கண்ணே அலறப்பொருது தேரு டனே அவர் உடைந்தோடும் புறக்கொடையைக் கண்டிலேனாயின், எனக் குச் சிறந்த பெரியவாய் முகத்தோடு பொருந்தின மையுண்ட கண்ணினை யுடைய [3]இவளினும் நீங்குவேனாக; அறமானது நிலைகலங்காத அன்பினை

யுடைய அவைக்களத்து அறத்தின் திறப்பாடில்லாத ஒருவனை வைத்து முறைகலங்கிக் கொடுங்கோல் செய்தேனாகுக; மிக்க புகழையுடைய வையையாற் சூழப்பட்ட செல்வம் பொருந்திய ஊர்களிற் பொய்யாத புதுவருவாயையுடைய மையலென்னும் ஊர்க்குத்தலைவனாகிய மாவனும், நிலைபெற்ற எயிலென்னும் ஊரையுடைய ஆந்தையும், புகழமைந்த அந்துவஞ்சாத்தனும், ஆதனழிசியும், வெய்ய சினத்தையுடைய இயக்கனுமென இவருட்படப் பிறரும் எனது கண்போலும் நண்பினையுடைய நட்டாரோடு கூடிய இனிய செருக்கையுடைய மகிழ்கையைத் தப்பியவனாகிப் பலவுயிரையும் பாதுகாக்கும் அரசர்குலத்திற் சிறந்த பாண்டிநாடுகாக்கும் காவலின் நீங்கிப் பிறருடைய வன்புலங்களைக் காக்கும் காவற்கண்ணே இக்குடிப்பிறப்பின் நீங்கி யான் பிறப்பேனாகுக.—எ - று.

'மெலிகோல் செய்தேனாகுக' என்பதனுள் ஆகுகவென்பது, எங்குந் தந்துரைக்கப்பட்டது.

[4]ஒன்றோவென்பது எண்ணின்கண்வருவதோரிடைச்சொல்; அதனை முன்னும் பின்னுங் கூட்டுக. (எக)

---

[1]மு. காஞ்சித்திணைத்துறைகளுள் இன்னதுபிழைப்பின் இதுவாகியரெனத் துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத்தானுமென்பதன் விசேடவுரையில், 'நகுதக்கனரே (எஉ), மடங்கலிற் சினைஇ (எக) யென்னும் புறப்பாட்டுக்கள் உயிரும் செல்வமும் போல்வன நிலையும் பொருளென நினையாது வஞ்சினஞ் செய்தன' என்பர்; தொல். புறத்திணை. சூ. 24, ந.

[2] சோழநாட்டிலுள்ள ஒலியமங்கலமென்னும் ஊர் இதுவென்று தெரிகிறது.

[3] தன் தேவியை இவளென்றது, தன் கருத்துக்கண் அணிமையாக இருத்தலின்; புறநா. எஉ : 2, உரையைப் பார்க்க.

4 புறநா. கூஉ: 2, உரை.

பி - ம். *பூதபாண்டியன்.

(எ௨) நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்
இளைய னிவனென வுளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையுந் தேரு மாவும்
படையமை மறவரு முடையம் யாமென்
றுறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை

---

1. நாடு மீக்கூறுநர் : "காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்ல னேல், மீக்கூறு மன்ன னிலம்" குறள், 386.

எள்ளல் நகையை விளக்குமிடத்து 'நகுதக்கனரே நாடுமீக் கூறுநர் என்றாற்போல வீரத்தெழுந்த வெகுளிநகையும் எள்ளல் நகையின்கண் அடக்கவேண்டும்' என்பர்; தொல். மெய்ப்பாடு. சூ. 4, பேர்.

2. புறநா. ௩அ, எஎ, எஅ; "பாம்பு மாசும் பகையுஞ் சிறிதென, ஆம்பொரு ளோதின ரிகழார்" (பெருங். ௪. 10 : 130-31); "இளைய ரின முறைய ரென்றிகழார் நின்ற, ஒளியோ டொழுகப் படும்" (குறள், 698); "அளையுறை பாம்பு மரசும்......இளைய வெளிய பயின்றனவென் றெண்ணி, இகழி னிழுக்கந் தரும்" (ஆசார. 84); "சீர்த்தகு மன்னர்... இளைதென்று பாம்பிகழ்வா ரில்" பழ. 383.

4. நெடுநல்யானை : புறநா. ௩எ : 11.

3 - 4. "படுமணி யிரட்டு மருங்கின்.........வேழம்" (மூநத. 80 -

83.) பாவடி: புறநா. கஙி : 8.

4 - 5. ‘திணைவிராயெண்ணல் வழுவென்பதே கருத்தாயின், ‘நெடுநல் யானையுந் தேரு மாவும், படையமை மறவரு முடையம்யாம்’ எ - ம், ‘இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறும்’ எ - ம் படர்க்கைச் சொல்லும் அஃறிணைக் கிளவியும் விராயெண்ணுதல் வழக்குப் பயிற்சியுடைமையான் அவையும் அடங்க ‘உயர்திணைச் சொல்லே யஃறிணைக் கிளவி’ எனப் பொதுப்பட ஓதாது ‘தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவி’ எனத் தன்மைச்சொல்லையே விதந்தோதல் குன்றக்கூறலாமாகலானும் அவர்க்கது கருத்தன்மையறிக’ தொல். கிளவி. சூ. 45, சே.

3 - 5. நாற்படை: புறநா. இஙி : 7 - 8, கூஙிக : 1 - 3.

4 - 6. உடைமையென்னும் மெய்ப்பாட்டிற்கு மேற்கோள்; தொல். மெய்ப்பாடு. சூ. 12, இளம்.

7. சிறுசொல் : சீவக. 207; சூளா. அரசியல். 317.

6 - 7. ‘உறுதுப்பஞ்சா......வேந்தரையென்பது கொலை பொருளாக வெகுளிச்சுவை பிறந்தது; என்னை? சிறுசொற்சொல்லுதலென்பது



அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ
டொருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக
ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி

மாங்குடி மருதன் றலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா வின்மையா னுறவே.[1]

---

புகழ்கொன்றுரைத்தலாகலின்' (தொல். மெய்ப்பாடு. சூ. 10, பேர்.); இ. வி. சூ. 578, மேற்.

8 - . புறநா. உ௫ : 5 - 7-ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க; "துளங்குகுடி விழுத்திணை திருத்தி முரசுகொண், டாண்கட னிறுத்த", "இருபெரு வேந்தரையு முடனிலை வென்று, முரசுங் குடையுங் கலனுங் கொண்டு" பதிற். ௬க; 8 - ஆம் பத்துப்பதிகம்.

6 - 9. வெகுளிச்சுவைக்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். மெய்ப்பாடு. சூ. 10, இளம்.

12. "வன்பழி தூற்றுங் குடியதே மாமதுரை", "குடிபழி தூற்றுங் கோலனு மல்லன்" சிலப். கக௯: 28, உ௬ : 34.

11-2. 'பெயர்' என்பதற்கு 'வஞ்சினம்' எனப் பொருள் கூறி, 'கொடியனெம் . . . . . . கோலே னாகுக' என்னும் பகுதியை மேற்கோள்காட்டி, 'கூறும் வஞ்சினத்தால் தனக்கு ஒருபெயர் பெறுதலின் வஞ்சினத்தைப் பெயரென்றார்' என விசேடவுரையும் எழுதினர்; பட்டின. 289, ந.

18. "சாதலி னின்னாத தில்லை யினிததூஉம், ஈத லியையாக் கடை" (குறள், 230) என்பதும் இவ்வடியின் பொருளை வலியுறுத்துகின்றது.

17 - 8. புறநா. எக : 6, அடிக்.; "கலிமா ணேயே கலிமா ணேயே, நாகத் தன்ன நன்னெடுந் தடக்கைக், காய்சின யானைக் கலிமா ணேயே, வெள்ளத் தானைமுன் . . . முன், னுள்ளழித்துப் புகேஎ னாயி னுள்ள, திரப்போ னின்மை கண்டுங், கரப்போன் சிறுமை யானுறு கவ்வே" தகடூர்யாத்திரை.

[1]மு. காஞ்சித்திணைத்துறைகளுள், இன்னது பிழைப்பின் இதுவாகிய



திணையும் துறையும் அவை.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பாட்டு.

இ - ள். நம்மாற் சிரிக்கத்தக்கார் இவன் ஆளும் நாட்டை மிகுத்துச் சொல்லுவாரெனவும் இவன்றான் இளையனெனவும் யான் வெறுப்பச் சொல்லி ஒலிக்குமணி இருமருங்கும் ஒன்றோடொன்று மாறியிசைக்கும் பரந்த அடியினையும் பெரிய காலினையுமுடைய உயர்ந்த நல்ல யானையினையும் தேரையும் குதிரையையும் படைக்கலத்தொழில்அமைந்த வீரரையும் உடையேம் யாமென்று எனது மிக்க வலிக்கு அஞ்சாதே மாறுபடுஞ் சினம் பெருகிப் புல்லிய வார்த்தைகளைக் கூறிய சினம்பொருந்திய அரசரைப் பொறுத்தற்கரிய போரின்கண்ணே சிதறப் பொருது முரசத் தோடுகூட அவரைக் கைக்கொண்டிலேனாயின், பொருந்திய எனது குடைநிழற்கண் வாழ்வார், தாங்கள் சென்றடையும் நிழல் காணாதே கொடியன் எம்முடைய வேந்தனென்று கருதிக் கண்ணீரைப் பரப்பிக் குடிமக்கள் பழிதூற்றும் கொடுங்கோலையுடையேனாகுக; உயர்ந்த தலைமையுடனே மேம்பட்ட கேள்வியையுடைய மாங்குடிமருதன் முதல்வனாக

உலகத்தோடு நிலைபெற்ற பலரும் புகழும் தலைமையையுடைய புலவர் பாடாது நீங்குக, எனது நிலவெல்லையை, என்றுற் புரக்கப்படுங் கேளிர் துயரம் மிக இரக்குமவர்கட்குக் கொடாத வறுமையை யான் உற.—எ-று.

என் நிழல் வாழ்நராகிய குடியென்க.

உளையக்கூறியதனைத் தம்மிடத்திருந்து கூறியதாகவும், சிறுசொற் சொல்லியதனைப் போர்க்களத்து எதிர்ப்பட்டுக் கூறியதாகவும் கொள்க.

இவனென்றூர், தம் கருத்துக்கண் அணுமையான்.

அகப்படேனாயினென்றது, ஈண்டுப் பிறவினைமேல் நின்றது.

வேந்தரைத் தாக்கி அகப்படேனாயின், கோலேனாகுக; இன்மை யானுற என் நிலவரை புலவர்பாடாது வரைகவென மாறிக்கூட்டி வினைமுடிவு செய்க.

---

ரெனத் துன்னருஞ் சிறப்பின் வஞ்சினங் கூறியதற்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. சூ. 19, இளம். 24, ந); "மன்னர் நுங்கள் புறக்கொடை கண்டு . . . . . . சலப்ப லன்றே, வெரிசுடர் வழங்கும் வையத் தென்பெயர் கெடுக வென்றான்" (சீவக. 773) என்பதன் விசேட வுரையில், 'இது சீவகன் வஞ்சினம். இது, முன் இளமை முதலியவற்றை அவ்வரசர்கொன்று கூறுதலின் அக்கொலை பொருளாகப்பிறந்த வெகுளி யென்னும் மெய்ப்பாடு. இது, நகுதக்கனரே என்னும் புறப்பாட்டி னுட் கண்டு கொள்க' என்று எழுதியிருக்கின்றனர் நச்சினார்க்கினியர்.



'நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்' என்பதனை, நாட்டாரால் மீக்

கூறப்பட்ட மந்திரிச்சுற்றமுதலாயினர் நகுதக்கனரெனப் பிரித்துரைப்பினும் அமையும்.

'நிலவரைப் புரப்போர்' எனவும் பாடம். (எஉ)

---

(எங) மெல்ல வந்தென் னல்லடி பொருந்தி
ஈயென விரக்குவ ராயிற் சீருடை
முரசுகெழு தாயத் *தரசோ தஞ்சம்
இன்னுயி ராயினுங் கொடுக்குவெ னிந்நிலத்
தாற்ற லுடையோ ராற்றல் போற்றாதென்
உள்ள மெள்ளிய மடவோன் றெள்ளிதிற்
றுஞ்சுபுலி யிடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ வரிதே மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
வன்றிணி நீண்முளை போலச் சென்றவண்
† வருந்தப் பொரேஎ னாயிற் பொருந்திய

---

3. புறநா. எகு : 12.

* 'முரசுகெழு தாயத் தரசோ தஞ்சமெனத் தஞ்சக்கிளவி அரசு கொடுத்தலெளிதென எண்மைப்பொருளுணர்த்தியவாறு கண்டுகொள்க'

தொல். இடை. சூ. 18, சே; ந; தெய்வச். இ - வி. சூ. 271, உரை.

1 - 4. இவ்வடியிலுள்ள மொழிகளால், சோழன் நலங்கிள்ளியின்
மேம்பாடும் வீரமும் வண்மையும் விளங்குகின்றன; புறநா. ௪௦ : 5 - 6-
ஆம் அடிக்குறிப்பும், "தனதுமேம் பாடுரைத்த ருனெடு மொழி", "தன்
னுடை யாற்ற லுணரா ரிடையினுந், தன்னை மறுதலை பழித்த காலையுந்,
தன்னைப் புகழ்தலுந் தகும்", "ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்றே",
"கொடுவென்கிளவி யுயர்ந்தோன் கூற்றே" என்பவைகளும் இங்கே
அறியற்பாலன.

7. இந்த அடியும், "எழுப்புபவோ, துஞ்சு புலியைத் துயில்" (பழமொழி, 33) என்பதும் ஒருபொருளன.

9 - 11. புறநா. அ௦ : 7; "நெற்கொ ணெடுவெதிர்க் கணந்த யானை"
(குறிஞ்சிப். 35); "சேபுயர் பிணைமிசை யெழில் வேழம்" (பரி. ௧ : 4);
"வார்முகின் முழக்கின் மழகளிறு மிகீஇத்தன், கான்முளை மூங்கிற் கவர்கிளை போல, உய்தல் யாவதுநின் னுடற்றி யோரே"பதிற். அ௪ : 11 - 3.

பி - ம். *தாசே. †வருந்த வொற்றேனுயிற்.

தீதி னெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தன் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகவென் றாரே.[1]

திணையும் துறையும் அவை.

சோழன் *நலங்கிள்ளி பாட்டு.

இ - ள்.—மெல்ல வந்து எனது நல்ல அடியையடைந்து எமக்கு ஈய வேண்டுமென்று தாழ்ந்திரப்பாராயின், அவர்க்குச் சீர்மையையுடைய முரசு பொருந்திய பழையதாய்வருகின்ற உரிமையையுடைய எனது அரசாட்சி கொடுத்தலோ எளியது; இனிய உயிரேயாயினும் கொடுப்பேன், இந்நிலத்தின்கண்; அமைச்சர் படைத்தலைவர்முதலாகிய வலியையுடையோரது வலியைப் பாதுகாவாது என்னுள்ளத்தை இகழ்ந்த அறிவில்லாதோன் யாவர்க்கும் விளங்கத் துயில்கின்ற புலியை இடறின குருடன்போலப் பிழைத்துப்போதலோ அரிது; மூங்கிலைத் தின்னும் வலியையுடைய யானையினது காலின்கண் அகப்பட்ட வலிய † திண்ணியமூங்கிலது நீண்ட முளையையொப்ப மேற்சென்று [2]அவ்விடத்து வருந்தும்படி பொருதிலேனாயின், கூடிய தீதில்லாத நெஞ்சத்தாற் காதல்கொள்ளாத பலவகைப்பட்ட கரியகூந்தலையுடைய பொதுப்பெண்டிரது பொருந்தாத புணர்ச்சியிடை என் மாலை துவள்வதாக.—எ - று.

'இரக்குவிராயின்' என்று பாடமோதுவாரும் உளர்.

3. 13 - 4. "முகைவாய்த்த முலைபாயக் குழைந்தநின் றார்", "கூருகிர் சாடிய மார்புங் குழைந்தநின் றாரும்", "சாயலின் மார்பிற் கமழ்தார் குழைத்தநின்......தடமென்றோள்" (கலி. சுஅ: 14, கக : 11-2, ககஉ : 23); "செழுந்தார் குழையச் சேர்ந்தார்", "புல்லி......குழைந்து தார் திவண்ட தன்றே" (சீவக. 2034, 2062); பு. வெ. 317.

12 - 4. "அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா, ரின்சொ லிழுக்குத் தரும்" (குறள், 911.) ஒல்லாமுயக்கு : "வேளா முயக்கம்" கலி. சுஅ.

காமம்பற்றியும் பெருமிதம் பிறக்குமென்பதற்கு, 'பல்லிருங்கூந்தல் ......தாரே' என்பது மேற்கோள்; தொல். மெய்ப்பாடு. சூ. 9, பேர்.

[1]மு. காஞ்சித்திணையுள் இன்னது பிழைப்பின் இதுவாகியரெனத் தன்னருஞ் சிறப்பின் வஞ்சினங்கூறியதற்கு மேற்கோள்; தொல். புறத் திணை. சூ. 24, ந.

[2]அவ்விடம் - பகைவரூர்; புறநா. எஅ : 9 - 12.

பி - ம். * நல்லுருத்திரன். † திணிய.



நீதில்காதல்கொள்ளாவென இயைப்பினும் அமையும்.

உள்ளமென்றது, உள்ளத்தாற் சூழும் சூழ்ச்சியை.

தன்மேம்பாடு கூறுகின்ற இடமாதலின், நல்லடியென்பது தற்புகழ்த லென்னும் குற்றமாகாது. (எரு).

(எச) குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினும்
* ஆளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை யின்றி † வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
‡ ஈன்ம ரோவிவ் வுலகத் தானே.[1]

---

1 - 2. அரசர்களில், போர்க்களத்து வீழ்ந்தோரே துறக்கம் பெறுவர்; அங்ஙனமின்றி நோயால் இறந்தோருடம்பைத் தருப்பையிற் கிடத்தி வாளாற் போழ்ந்து, 'போரில்மாண்டோரடையும் கதியை இவர் அடைக' எனக்கடவுளைவேண்டி அவ்வுடம்பை அடக்குதல் விதியென்பது ஈண்டறியற்பாலது; இதனை, "திண்பிணி முரசம்" (புறநா. கரு); "தருப்பையிற் கிடத்தி......நாணுத்தக வுடைத்து" (மணி. உரு : 13 - 6); 'மூப்பினும் பிணியினும் இறவாது அமர்க்களத்து வீழ்ந்தோரே துறக்கம் பெறுவர்' (தொல். அகத்திணை. சூ. 44, ந.) (கம்ப. மந்திர. 20, 28); என்பவற்றாலும் அறிக.

3 - 7. "மான வருங்கல நீக்கி யிரவென்னு, மீன விளிவினால் வாழ்வேன்ம - னீனத்தா, லூட்டியக் கண்ணு முறுதிசேர்ந் திவ்வுடம்பு, நீட்டித்து நிற்கு மெனின்." (நாலடி. 40); "மறனிழுக்கா, மான முடைய தரசு", "மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை, பீடழிய வந்த விடத்து", "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா, ருயிர்நீப்பர் மானம் வரின்", "இளிவரின் வாழாத மான முடையா, ரொளிதொழு தேத்து முலகு" (குறள், 384, 968 - 70); "மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே" (இனியது. 14) என்பவை இச்செய்யுளின் பொருளை விளக்குகின்றன.

'தொடர்ப்படு......உலகத்தானே : இது தன்மாட்டு வருத்தத் தான் இழிப்புப் பிறந்தது' தோல். மெய்ப்பாடு. சூ. 6, இளம்.

[1]மு. காஞ்சித்திணையுள், தாமேயேங்கிய தாங்கரும் பையுள் என்னுந் துறைக்கு மேற்கோள் (தோல். புறத்திணை. சூ. 19, இளம்); 'தாமே யேங்கிய வென்பதற்குச் சிறைப்பட்டார் தாமே தனித்திருந்த வென்று கூறி, குழவி......உலகத்தானேயென்னும் புறப்பாட்டைக் காட்டுவாரு முளர்' ஷை. ஷை. ஷை. 24, ந.

பி - ம். * மானவிலேயின்றெனவாளில். †வயிற்றலந்தித். ‡உண்பரோ.



திணை - பொதுவியல்; துறை - முதுமொழிக்காஞ்சி.

சேரமான்கணைக்காலிரும்பொறை சோழன்செங்கணுனேடு *திருப் போர்ப்புறத்துப் பொருது பற்றுக்கோட்பட்டுக் குடவாயிற்கோட்டத்துச் சிறையிற்கிடந்து தண்ணீர் தாவென்று பெறது பெயர்த்துப்பெற்றுக் கைக்கொண்டிருந்து உண்ணுன் சொல்லித் [1]துஞ்சிய பாட்டு.

இ - ள்.—பிள்ளை இறந்துபிறப்பினும் தசைத்தடியாகிய மணை பிறப் பினும் அவற்றையும் ஆளல்லவென்று கருதாது வாளோக்குதவில் †தவறுர் அரசாயிருக்க, பகைவர்வாளாற் படாது, சங்கிலியாற் பிணிக்கப்பட்ட நாய்போலப் பிணித்துத் துன்பத்தைச்செய்து இருத்திய கேளல்லாத கேளிருடைய உபகாரத்தான் வந்த தண்ணீரை இரந்துண்ணக்கடவே மல்லேமென்னும் மனவலியின்றி வயிற்றின்கட் டீயை யாற்றவேண்டித்

தாமே இரந்துண்ணும் அளவினையுடையாரை அவ்வரசர்பெறுவார்களோ இவ்வுலகத்தின்கண்.—எ - று.

அளவையுடையாரை அளவையென்றார்.

இதன்கருத்து : சாக்குழவியும் ஊன்பிண்டமுமென இவற்றின் மாத்திரையும் பெற்றிலேமெனப் பிறர்மேல் வைத்துக் கூறியவாறு.

கேளல்கேளிரென்றது, சிறைக்கோட்டங் காவலரை.

அன்றி, இவன் ஆண்மையுடையனல்லனென்று வாளாற் கொல்லாராய்த் தொடர்ப்படுஞமலிபோல இடர்ப்படுத்திருத்திய கேளல்கேளிர் வேளாண் சிறுபதத்தை மதுகையின்றி வயிற்றுத்தீத் தணிக்கவேண்டித் தாம் இரந்துண்ணுமளவாகக் குழவி செத்துப்பிறப்பினும் ஊன்தடி பிறப்பினும் இவ்வுலகத்து மகப்பெறுவாருளரோவென உரைப்பினும் அமையும்.

அரசர்க்கு மானத்தின்மிக்க அறனும் பொருளும் இன்பமுமில்லை யென்று கூறினமையின், இது முதுமொழிக்காஞ்சியாயிற்று. (எச)

[1]துஞ்சிய வென்பதற்கு மூர்ச்சித்தவென்று பொருள்கொள்ள வேண்டும் போலும்.

பி - ம். *போர்ப். †தவிரார்.

---

(எரு) *மூத்தோர் மூத்தோர்க் கூற்ற முய்த்தெனப்
பாறர வந்த பழவிறற் றாயம்

1. "எனக்குத்தா யாகியா ளென்னையீங் கிட்டுத், தனக்குத்தாய் நாடியே சென்றாள்" நாலடி. 15.

ஏ - ம். *மூத்தோர்க்கூற்றமுய்த்தெனவுய்த்தென.
24



எய்தின மாயி னெய்தினஞ் சிறப்பெனக்
குடிபுர விரக்குங் கூரி லாண்மைச்
சிறியோன் பெறினது சிறந்தன் று மன்னே
மண்டமர்ப் பரிக்கு மதனுடை நோன்றாள்
விழுமியோன் பெறுகுவ *னாயி னாழ்நீர்
அறுகய மருங்கிற் சிறுகோல் வெண்கிடை
என்றூழ் வாடுவறல் போல நன்றும்
நொய்தா லம்ம தானே மையற்று
விசும்புற வோங்கிய வெண்குடை
முரசுகெழு வேந்த ரரசுகெழு திருவே.

திணை - அது; துறை - †பொருண்மொழிக்காஞ்சி.

சோழன் நலங்கிள்ளி பாட்டு.

இ - ள்.—தம் குடியின் முதியோரை முதியோரைக் கூற்றம் கொண்டுபோயிற்றாக, விதி தரப்பட்டுத் தம்பால்வந்த பழையவெற்றியால் உண்டாகிய அரசுரிமையைப் பெற்றேமாதலால் இத்தலைமையைப்பெற்றேமெனக்கொண்டு தங்குடிமக்களை இறைவேண்டியிரக்கும் மிகுதியில்லாத ஆண்மையையுடைய உள்ளஞ்சிறியோன் பெறின், அத்தாயம் அவனுக்குப் பரிக்கவொண்ணுதாம்படி கனத்தது, மிகவும்; அடுத்துப்பொரும்

போரைப்பொறுக்கும் மனவெழுச்சியையுடைத்தாகிய வலிய முயற்சியையுடைய சீரியோன் பெறுவனாயின், தாழ்ந்தநீரையுடைய வற்றிய கயத்திடத்துச் சிறிய தண்டாகிய வெளிய கிடேச்சினது கோடைக்கண் உலர்ந்த சுள்ளியைப்போலப் பெரிதும் நொய்து, குற்றமற்ற விண்ணின்கண்ணே பொருந்த உயர்ந்த வெண்குடையினையும் முரசினையுமுடைய அரசரது அரசாட்சியைப் பொருந்திய செல்வம்.—எ - று.

குடிபுரவிரக்குமென்பது, குடிமக்களைக் கொள்ளுங்கடமையன்றி மிகத்தரவேண்டுமென்று இரத்தலை.

தாயம் சிறியோன் பெறின், அது மிகவும்சிறந்தன்று; வேந்தர் அரசுகெழுதிரு விழுமியோன் பெறுகுவனாயின், நன்றும் நொய்தாலெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

மன்: ஆக்கத்தின்கண்வந்தது. அம்ம: அசைநிலை. (எடு)

---

2 - 3. "உருகெழு தாய மூழி னெய்தி" பட்டின. 227.

4 - 5. "வேலொடு நின்றா னிடுவென் றதுபோலும், கோலொடு நின்றா னிரவு" குறள், 552.

பி - ம். *ஞயிற்கழுநீர். †பொதுமொழிக்காஞ்சி.



(எசா) ஒருவனை யொருவ னடுதலுந் தொலைதலும்
புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை
இன்றி னூங்கோ கேளலந் திரளரை
மன்ற வேம்பின் மாச்சினை யொண்டளிர்

நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிடைந்து
செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி
ஒலியன் மாலையொடு பொலியச் சூடிப்
பாடின் றெண்கிணை கறங்கக் காண்டக
நாடுகெழு திருவிற் பசும்பூட் செழியன்
பீடுஞ் செம்மலு மறியார் கூடிப்
பொருது மென்று தன்றலை வந்த
புனைகழ லெழுவர் நல்வல மடங்க
ஒருதா னாகிப் பொருதுகளத் தடலே.[1]

திணை - வாகை; துறை - அரசவாகை.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற [2]நெடுஞ்செழியனை இடைக்குன்றூர்கிழார் பாடியது.

இ - ள்.—ஒருவனை ஒருவன் கொல்லுதலும் ஒருவற்கு ஒருவன் தோற்றலும் புதிதன்று; இந்தவுலகத்தின்கண் முன்னேதொட்டு இயல்பு; இன்றையின்முன் கேட்டறியேம்: திரண்ட தாளையுடைய மன்றத்திடத்து வேம்பினது பெரியகொம்பின்கண் உண்டாகிய ஒள்ளியதளிரை நீண்ட கொடியாகிய உழிஞைக்கொடியுடனே விரவிச் செறியத்தொடுக்கப்பட்ட தேன்மிக்க மாலையை வளையமாலையுடனே சிறப்பச் சூடி ஓசையினிய

2. புறநா. சஉ : 6; "பண்டுமிவ் வுலகத் தியற்கை யஃதின்றும், புதுவ தன்றே" (கலி. உஉ : 3 - 4); "புதுவ தன்றே தொன்றியல் வாழ்க்கை" சிலப். ௩௦ : 140.

4. மன்றவேம்பு: புறநா. சடு : 2, எசு : 2, ௩எக : 7. மாச்சினை: பொருந. 143 - 4.

4 - 5. புறநா. உஉ: 20 - 21, அடிக்; எஎ: 2 - 3; "போர்பமெ மள்ளர் போந்தொடு தொடுத்த, கடவுள் வாகை" பதிற். சுசு.

8. கிணைகறங்கச் செல்லுதல்: புறநா. எஅ : 12, எகூ : 3.

9 - 13. புறநா. கக : 17, அடிக்.

[1]மு. நாழிலென்னுந் துறைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 14, இளம்.

[2] 9 - ஆம் அடியில் தலைவன்பெயரின் ஒருபகுதி வந்துள்ளது.



தெளிந்த போர்ப்பறை யொலிப்பக் காட்சிதக நாடுபொருந்திய செல்வத்தினையுடைய பசும்பொன்னாற்செய்த பூணை அணிந்த நெடுஞ்செழியனது பெருமையையும் உயர்ந்ததலைமையையும் அறியாராய்த் தம்மிற்கூடிப் பொருவேமென்று தன்னிடத்து வந்த புனைந்த வீரக்கழலினையுடைய [1]இருபெருவேந்தரும் ஐம்பெருவேளிருமாகிய எழாசருடைய நல்ல வென்றி அடங்கத் தான் ஒருவனாய் நின்று பொருது களத்தின்கட் கொல்லுதல்.—எ - று.

ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் புதுவதன்று; இவ்வுலகத்து இயற்கை; செழியன் பொருதுமென்று வந்த எழுவர் நல்வலம் அடங்க ஒருவனாகித் தெரியலை மாலையொடு காண்டகச் சூடிக் கிணை கறங்கப்பொருது களத்து அடல் இன்றின் ஊங்கோ கேளலமெனக் கூட்டி வினை முடிவுசெய்க. (எகூ)

---

[1] மதுரைக். 55 - 6, அடிக்.

(எஎ) கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டுக்
குடுமி களைந்த நுதல் வேம்பி னொண்டளிர்
நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து
குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி
நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல் வாழ்கவவன் கண்ணி தார்பூண்டு

1. கிண்கிணிக்கால் : புறநா. கக அ : 5. கழல் தொட்டு : புறநா. அ௲ : 1.

2. குடுமி களைதல் : "ஏந்து, நெடுமதில் கொண்டு நிலமிசையோ ரேத்தக், குடுமி களைந்தானெங் கோ" பு - வெ. 209.

2 - 3. புறநா. எசு : 4 - 5, அடிக்.

1 - 4. புறநா. எஉ : 2, அடிக்.

5. நெடுந்தேர்க் கொடுஞ்சி: மதுரை. 752; மணி. ச : 48; "நெடுந் தேர்க் கொடுஞ்சி பற்றி, நின்றோன்" (அகநா. ககo : 24 - 5); கலி. அ௫ : 18.

6. கண்ணியை வாழ்த்தல்: புறநா. கக அ : 11; "வாழ்கநின் கண்ணி வாய்வாள் வேந்தென" (மணி. க அ: 63); "வாழ்கநுங் கண்ணி மாதோ" (சீவக. 1890); "வண்டார் கமழ்கண்ணி வாழ்கென்று" பு. வெ. 13.

தாலி களைந்தன்று மிலனே பால்விட்
டயினியு மின்றயின் றனனே வயின்வயின்
உடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்று மிழிந்தன்று மிலனே யவரை
அழுந்தப் பற்றி யகல்விசும் பார்ப்பெழக்
கவிழ்ந்துநிலஞ் சேர வட்டதை
மகிழ்ந்தன்று மலிந்தன்று மதனினு மிலனே.1

**திணையும் துறையும் அவை.**

**அவனை அவர் பாடியது.**

---

7. தாலி - ஐம்படைத்தாலி; இதனைப்பஞ்சாயுதமென்றும், பிறந்த ஐந்தாநாளில் பிள்ளைகளுக்கு இதனை அணிவித்தல் மரபென்றுங் கூறுவர்; "பொன்னுடைத் தாலி யென்மகன்" (அகநா. ருச); "மழலை, சிந்துபு சின்னீ ரைம்படை நனைப்ப", "ஐம்படைத் தாலி......புதல்வர்" (மணி. ௩ : 137 - 8, எ : 56 - 7); "எழிலார் திருமார்பிற் கேற்கு மிவை யென், றழகிய வைம்படையு மாரமுங் கொண்டு" (பெரியாழ்வார் திருமொழி, க. 4 : 5); "பண்டுவசு தேவன்மக னாகிநில மாதின் படர்களையு மாயனிவ னென்றுதெளி வெய்தத், தண்டுதனு வாள்பணில நேமியெனு நாமத் தன்படைக ளானதிரு வைம்படை தரித்தே" (கலிங்க. அவதாரம், 9); "தாலி யைம்படை தழுவு மார்பிடை" (கம்ப. நாடு. 58); "ஐம்படை மார்பிற் காணேன்" திருவிளை. ௩௩: 25.

9. வம்பமள்ளர் : புறநா. எஅ : 7, எக : 5.

7 - 10. 'இந்த நகாஉகாம் 'தாவிகளைந்தன்றுமிலனே' எ - ம், 'வியந்தன்றுமிழிந்தன்று மிலனே' எ - ம் உயர்திணைக்கண்ணும் வந்ததா லெனின், அவை 'களைந்தான்' 'வியந்தான்' 'இழிந்தான்' என்பனவற்றிற்கு மறையாய்க் 'களைந்திலன்' 'வியந்திலன்' 'இழிந்திலன்' எனநிற்கின்றவை 'களைந்தன்றுமிலன்' 'வியந்தன்றுமிலன்' 'இழிந்தன்றுமிலன்' என முற்று வினைத்திரிசொல்லாய் நின்றன' தொல். வினை. சூ. 20, ந.

10 - 11. பெரும்பாண். 419; மலைபடு. 386.

13. அகத்தடக்கல்: புறநா. சுஎ : 25, கக௨ : 13.

[1] மு. உழிஞைத்திணைத் துறைகளுள் ஒன்றாகிய 'திறப்படவொருதான் மண்டிய குறுமையும்' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. 10, இளம்.); 'மதிமை சாலா மருட்கையானே......கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டென்னும் பாட்டுச் சிறியோர் பெருந்தொழிலைச் செய்தது' ஷை. மெய்ப்பாடு. சூ. 7, பேர்; இ. வி. சூ. 578, உரை.



இ - ள். சதங்கை வாங்கப்பட்ட காலிலே ஒள்ளிய வீரக்கழலினைச் செறித்துக் குடுமியொழிக்கப்பட்ட சென்னிக்கண்ணே வேம்பினது ஒள்ளிய தளிரை நெடியகொடியாகிய உழிஞைக்கொடியோடு சூடிக் குறிய வளைகளையொழிக்கப்பட்ட கையின்கண்ணே வில்லைப் பிடித்து நெடிய தேரினது மொட்டுப் பொலிவுபெற நின்றவன் யாரோ தான்? யாரே யாயினும், அவன் கண்ணி வாழ்வதாக; தாரையணிந்து ஐம்படைத்தாலி

கழித்ததும் இலன்; பாலையொழித்து உணவும் இன்றுண்டான்; முறை முறையாக வெகுண்டு மேல்வந்த புதியவீரரை மதித்ததும் அவமதித்ததும் இலன்; அவரை இறுகப் பிடித்துப் பரந்த ஆகாயத்தின்கண்ணே ஒலி யெழக் கவிழ்ந்து உடலம் நிலத்தின்கண்ணே பொருந்தக் கொன்றதற்கு மகிழ்ந்ததுவும், இவ்வாறு செய்தேமென்று தன்னை மிகுத்ததுவும் அதனினும் இலன்.—எ - று.

யார்கொலென்றது, வியப்பின்கட் குறிப்பு.

இழித்தன்றென்பது, இழிந்தன்றென மெலிந்துநின்றது. (எஎ)

---

(எஅ) வணங்குதொடைப் பொலிந்த *வலிகெழு நோன்றாள்
அணங்கருங் கடுந்திற லென்னை முணங்குநிமிர்ந்
தளைச்செறி யுழுவை யிரைக்குவந் தன்ன
மலைப்பரு மகல மதியார் சிலைத்தெழுந்து
விழுமியம் பெரியம் யாமே நம்மிற்
பொருநனு மிளையன் கொண்டியும் பெரிதென
எள்ளி வந்த வம்ப மள்ளர்
புல்லென் கண்ணர் புறத்திற் பெயர

---

2. என்னை - எனது தலைவன்; புறநா. அஎ : 1, அ௫ : 1, அக : 9, உகஉ : 5; "என்னைமுன் னில்லன்மின்" (குறள், 771.) முணங்குநிமிர்தல்: புறநா. ௫உ: 2, அடிக்.

4. புறநா. ௧௦: 9 - 10, அடிக்.

1 - 4. புறநா. ௬௨ : 1 - 4, அடிக்.
6. இளையன்: புறநா. ௭௨ : 2, அடிக்.
7. வம்பமள்ளர்: புறநா. ௭௭: 9, ௭௧: 5.

பி - ம். *மதனுடை நோன்றாள்.



*ஈண்டவ ரடுதனு மொல்லா னண்டவர்*
*மாணிழை மகளிர் நாணினர் கழியத்*
*தந்தை தம்மூ ராங்கட்*
*டெண்கிணை கறங்கச்சென் றாண்டட் டனனே.*

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள். வளைந்த [1]சந்துகளாற் பொலிந்த வலிபொருந்திய போரின் கண் நிலைதளராத பொறையினையுடைய தாளினையும் வருத்துதற்கரிய மிக்க வலியையுமுடைய என் இறைவன் மூரிநிமிர்ந்து முழையின்கட் கிடந்த புலி தான் விரும்பியதோர் இரையை நோக்கிவந்தாற்போன்ற மாறுபடுதற்கரிய மார்பத்தை மதியாராய் ஆர்த்து எழுந்திருந்து, 'சிறப்புடையேம், படையாற் பெரியேம் யாங்கள், நம்மிற் பொருவானும் இளையன், கொள்ளையும் பெரிது' என இகழ்ந்துவந்த [2]நிலையில்லாத வீரர், புற்கென்ற கண்ணராய் நின்றவிடத்து நில்லாது புறத்தே போக அவரை இப்போர்க்களத்தின்கண்ணே கொன்றிடுதலும் உடம்படானாய் அவ்

விடத்து அவர் மாட்சிமைப்பட்ட ஆபரணத்தையுடைய மகளிர் நாணின ராய் இறந்துபடத் தந்தையருடையவாகிய தங்களூரிடத்துத் தெளிந்த போர்ப்பறை யொலிப்பச் சென்று அவ்விடத்தே கொன்றான்.—எ - று.

தந்தைதம்மூரென்றதனை, "ஏவ லிளையர் தாய்வயிறு கறிப்ப" என்றாற்போலக் கொள்க. தந்தைதம்மூரென்றது, தாம் தோன்றிச் செய்த நகரியன்றி உறையூரும் கருவூருமுதலாகிய ஊர்களை. (எஅ)

---

12. இணைகறங்கச் செல்லல்: புறநா. எசு: 8, அடிக்.

9 - 12. "சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையா, னூக்க மழிந்து விடும்", "சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த, ருறைநிலத்தோ டொட்ட லரிது" (குறள், 498 - 9.) உழிஞையைச் சூடிய வீரன் பகைவருடைய மதிலைச்சூழ்ந்து போர்செய்ய வேண்டுமென்பது விதியாதலாலும் இச்செழியன் உழிஞை சூடியவனாதலாலும் இங்ஙனம் போர்செய்வானாயினனென்பதுமொன்று; புறநா. எசு, எஎ - ஆம் பாடல்களைப் பார்க்க.

[1] சந்து - மூட்டுவாய்; "இருகாலுஞ் சந்துபோ னூல்" காளமேகம்.
[2] "வம்புநிலை யின்மை" தொல். உரி. சூ. 29.

(எகூ) மூதூர் வாயிற் பனிக்கய மண்ணி
மன்ற வேம்பி னொண்குழை மலைந்து
தெண்கிணை முன்னர்க் களிற்றி னியலி
வெம்போர்ச் செழியனும் வந்தன னெதிர்ந்த
வம்ப மள்ளரோ பலரே
எஞ்சுவர் கொல்லோ பகறவச் சிறிதே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—தனது பழைய நகரிவாயிற்கட் குளிர்ந்த பொய்கையின் கண்ணே மூழ்கி மன்றத்திடத்து வேம்பினது ஒள்ளிய தளிரைச் சூடித் தெளிந்த ஓசையையுடைய [1]பறைமுன்னாகக் களிறுபோலப் பெருமிதத்தோடு நடந்து வெய்ய போரையுடைய நெடுஞ்செழியனும் வந்தான்; அவனோடு பகைத்த நிலையில்லாத மறவர் பலரே; பகற்பொழுது மிகச் சிறிதாதலால், அவருட் சிலர் படாதொழியவும் கூடும்.—எ - று.

[2]போர்மடந்தையைப் புணர வருகின்ற [3*]கன்னிப்போராதலாற் பனிக்கயமண்ணியென்றார்.

---

1. "என்னு மெல்லையி னன்றெனு வவுணர்கோ னெழுந்து, தன்ன தாகிய வுறையுள்போய்த் தடம்புன லாடி" கந்த. சூரபன்மன்வதை. 16.

2. புறநா. எகூ : 4.

இவ்வடி ஏழாம்வேற்றுமைத் தொகைக்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. 17, ந.

3. தொண்கிணை : எஅ : 12. சிறந்த ஆடவர் நடைக்குக் களிற்றின் நடை உவமை: "மங்கல மழகளி றனைய செல்கையன்" (சூளா. குமார கால. 9); "பொன், ஞகமு நாகமு நாண நடந்தான்" கம்ப. கார்முக. 32.

[1]யானைக்குமுன் பறைசெல்லுதல் மரபு: "வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை, வெருவரு செலவின் வெகுளி வேழம்" (பொருந. 171 - 2); "நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப், பறையறைந் தல்லது செல்லற்க" (கலி. ருசு: 32 - 3); "பாகும் பறையும் பருந்தின் பந்தரும், ஆதுல மாக்களு மலவுற்று விளிப்ப" (மணி. ௪ : 41 - 2); "பறைநிறை கொல்யானை", "அறைபறை யானை" முத்தொள்ளாயிரம்.

[2] 'இவ்விலம்பகம் வீரமகளைச் சேர்ந்தமை கூறிற்று' சீவக. கோவிந்தை. ந.

[3]"கடிக்கண்ணி வேந்தரை யாற்றுக் கடிக்கன்னி வாகைகொண்டே.

பி - ம். *கண்ணிப்போர்.



கிணை முன்னர்வருதல், யானைக்கும், இவனுக்கும் ஒக்கும். (எக)

முடிக்கண்ணி மேல்வைத்த மும்மதில் வேந்தன்" (பாண்டிக்கோவை); "காண்டமிக் காளைதன் கன்னிப் போரென" (சூளா. அரசியல். 79); "காகுத்தன் கன்னிப் போரில்" (கம்ப. தாடகை. 77); "கன்னி வேட்டை மகன்போக" (பெரிய. கண்ணப்பர். 47); "மழவிடை கன்னி வேட்டம் வாய்த்துடன் வருக வென்றான்" (சீகாளத்திப். கண்ணப்பச். 70); "கன்னிப்போர் செய்தருளி" ஸ்ரீபராந்தகதேவர் மெய்க் கீர்த்தி.

(௮௦) இன்கடுங் கள்ளி னாமூ ராங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
ஒருகான் மார்பொதுங் கின்றே யொருகால்
வருதார் தாங்கிப் பின்னொதுங் கின்றே
நல்கினு நல்கா னாயினும் வெல்போர்ப்
*போரருந் தித்தன் காண்கதி லம்ம
பசித்துப்பணை முயலும் யானை போல
இருதலை யொசிய வெற்றிக்
களம்புகு †மல்லற் கடந்தடு நிலையே.[1]

திணை - தும்பை; துறை [2]எருமைமறம்.

சோழன் போர்வைக்கோப்பெருநற்கிள்ளி முக்காவனாட்டு [3]ஆமூர் மல்லனைப் பொருது அட்டுநின்றானைச் சாத்தந்தையார் பாடியது.

---

1. இன்கடுங்கள் : நற். ௧௦ : 5; குறுந். ௨௧௮ : 5; அகநா. ௭௬ : 3, ௧௪௭ : 6.

2. மதவலி : முருகு. 232.

5. நல்கல் - உவத்தல்; "நறுமலர்க் கோதாய் நல்கினை கேளாய்" மணி. ௧௨ : 56.

6. தித்தன் - உறையூரிலிருந்த ஒரு சோழன்; புறநா. ௩௫௨ : 9 - 10, ௩௯௫ : 18 - 9; "நொச்சி வேலித் தித்த னுறந்தை" அகநா. ௧௨௨ : 21.

7. புறநா. ௭௩ : 9 - 11, அடிக்.

9. கடந்தடுதல்: புறநா. அ : 5, உரு : 16, சo : 2, அடிக். ; கலி. கOக: 31, கOடு : 1; பரி. கஙு : 45.

[1]ழ. மல்வென்றிக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 16, இளம்; ஷை. ஷை. சூ. 20, ந.

[2]புறநா. உஎச; சீவக. 2259, ந.

[3]இவன் பெயர் இப்பாட்டின் முதலிரண்டடிகளிற் காணப்படுகிறது.

பு - ம். *பொரலருந்தித்தன். †மள்ளர்க்கடந்தடு.





இ - ள்.—இனிய அழன்ற கள்ளினையுடைய ஆமூரிடத்து வலியையுடைய மல்லனது மிக்க வலியைக் கெடுத்து ஒருகால் மண்டியாக மார்பிலே மடித்துவைத்து ஒருகால் அவன் செய்கின்ற உபாயத்தை விலக்கி முதுகின்கண்வளைத்துப் பசித்து மூங்கிலைத் தின்றற்கு முயலும் யானையையொப்பத் தலையுங் காலுமாகிய இரண்டிடமும் முறிய மோதி அக்களத்தின்கட் புக்க அம்மல்லனை எதிர்ந்துநின்று கொன்ற நிலையை, கண்டால் [1]உவப்பினும் உவவானுயினும், இவன் தந்தையாகிய வெல்லும் போரினையுடைய பொருதற்கரிய தித்தன் காண்பானாக.—எ - று.

என்றது, தந்தையுடன் வெறுத்துப்போந்தான் அமருட் புகுந்து இப்போர்செய்தானை அவன் விரும்பின் உவக்கின்றான்; விரும்பாவிடின் அஞ்சுகின்றானென்பதாம்.

'பணைமுயலும் யானைபோல வொருதலை யொசிய வொற்றி' என்று பாடமோதி, அம்மல்லன் முற்கூறுயினும் பிற்கூறுயினும் ஒருதலை முறிய மோதியென்று உரைப்பாரும் உளர்.

தில்: விழைவின்கண் வந்தது. 

---

1 "நல்கியா ணல்கியவை" (கலி. கூஅ : 13) என்ற இடத்து, 'என்னாலே காமிக்கப்பட்டவள் எனக்குக் காதலித்துத் தந்தவை' எனப் பொருளெழுதுவர் நச்சினார்க்கினியர்.

---

(அக) ஆர்ப்பெழு கடலினும் பெரிதவன் களிறே
கார்ப்பெய லுருமின் முழங்கலா னவே
யார்கொ லளியர் தாமே யார்நார்ச்
செறியத் தொடுத்த கண்ணிக்
கவிகை மள்ளன் கைப்பட் டோரே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

அவனை அவர் பாடியது.

---

1 - 2. யானைமுழக்கிற்கு இடிமுழக்கு உவமை: "யானை முழக்கங் கேட்ட, கதியிற்றே காரின் குரல்" (பரி. அ : 17 - 8); "விசும்பின், ஏறெழுந்து முழங்கினு மாறெழுந்து சிலைக்கும், கடாஅ யானை" (அகநா. கசச); "கார்ப்பெய லுருமிற் பிளிறி......மையல் வேழ மடங்கலின்" (குறிஞ்சி. 162 - 5); "களிறுங் களித்ததிருங் கார்" பு - வே. 37.

3 - 4. ஆர்க்கண்ணி: புறநா. அஉ : 6.

இ - ள்.—படையினது ஆரவாரம், எழுகடலுங் கூடி ஒலிக்கும் ஒலியினும் பெரிது; அவனுடைய களிறு, கார்காலத்து மழையின்கண் இடியினும் முழங்குதலை அமையா; நாராற் பயிலத்தொடுக்கப்பட்ட ஆத்திக்கண்ணியையும் இடக் கவிந்த கையினையுமுடைய வீரனது கையின் கட் பட்டோராகிய இரங்கத்தக்கார்தாம் யார்கொல்?—எ - று. (அக)

---

(அ௨) சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற் றுற்றெனப்
பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்
*கட்டி னிணக்கு மிழிசினன் கையது
†போழ்தூண் டூசியின் விரைந்தன்று மாதோ
ஊர்கொள வந்த பொருநனொ
டார்புனை தெரிய னெடுந்தகை போரே.[1]

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

---

2. ஞான்றஞாயிறு - அத்தமித்த சூரியன்; "ஞான்றுதோன் றவிர் சுடர்" அகநா. ருக.

தோல். தொகைமரபு, சூ. 29, இளம். மேற்.

3. நிணக்கும் - பிணிக்கும்; "நிணந்தெ னெஞ்ச நிறைகொண்ட கள்வனே" (சீவக. 1311.) இழிசினன் - இழிவையுடையான்: புறநா. உ௮எ : 2, உ௮௯: 11; "இழிசினர்க்கே யானும் பசித்தார்க ணீதல், கழிசினக் காத்தல் கடன்" சிறுபஞ்ச. 77.

4. 'விரைவு' என்னும் மெய்ப்பாட்டிற்கு மேற்கோள்; தோல். மெய். சூ. 12, இளம்.

[1] மு. சாறு......போரேயென்பது இழிந்ததன்மேல் வந்ததாலெனின்...ஊசியினது விரைவு மற்றுள்ள விரைவின் உயர்ந்ததாதலின் அதுவும் உயர்ந்ததாம்' (தோல். உவம. சூ. 3, இளம்.); 'சாறுதலைக்கொண்டென......என்னும் பாட்டினுள் உவமப்பொருளாகிய போழ்தூண்டூசிக்குப் பல அடைகூறி அதனோடு உவமிக்கப்படும் போர்த்தொழிலினை யாதுமோரடையின்றி வாளாது கூறினாராயினும் உவமப்பொருளானே போர்த்தொழிற்குற்றதும் உணரக் கூறினான்; என்னை? உண்டாட்டும் கொடையும் ஊரனொடு நோக்கி மறுத்தலுமுதலாகிய உள்ளக்கருத்தினான் ஒரு கணத்துள்ளே பலவேந்தரை ஒருங்கு வேறற்கு விரைகின்றது

பி - ம். *கட்டினிணர்க்குமிழிசனன். †போழ்தூன்னூசி.



இ - ள்.—ஊரின்கண் விழாத் தொடங்கிற்றாக அவ்விழாவிற்கு உதவப் போகவும் தன்மனைவி பிள்ளைபெறுதலைப் பொருந்தினாளாக அவள் [1]மெய்ந்நோவிற்கு உதவப்போகவும் வேண்டி, பெய்கின்ற மழையையுடைய ஞாயிறு வீழ்ந்தபொழுதின்கட் கட்டிலைப்பிணிக்கும் புலைமகன்

கையதாகிய வாரைச் செலுத்தும் ஊசியினும் விரைந்தது, ஊரைக் கொள்ளவந்த வீரனோடு ஆத்தியாற்றொடுக்கப்பட்ட கண்ணியையுடைய பெருந்தகையது போர்.—எ - று.

நெடுந்தகைபோர், பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றின்கட் சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற்றுற்றென இழிசினன்கையதாகிய ஊசியின் விரைந்தன்றெனக் கூட்டுக.

சாறுதலைக்கொண்டென அதற்கு உதவப்போகவும், பெண் ஈற்றுற்றென அதற்கு உதவப்போகவுமென வேறுவேறு கொள்க; ஒன்றாக உரைப்பாரும் உளர். (அ௨)

---

போர்த்தொழிலென்பது தெளியப்பட்டமையின்' (ஷை. ஷை. ஷை. 20, பேர்.); 'சாறுதலைக் கொண்டென......நெடுந்தகை போரே: இதனுள் ஆர்புனை தெரியல் நெடுந்தகை போர்த்தொழிலுவமையாகிய போழ்தூண்டூசித்தொழிற்குப் பல அடை புணர்ப்பினும் அவையனைத்தும் போர்த்தொழில் விரைவையே சிறப்பித்து வந்தமையால் வழுவாகாது இலக்கணமாம்' இ - வி. சூ. 641, உரை.

1 "அகத்தடியாண் மெய்ந்நோவ" தனிப்பாடல்.

---

(அ௩) அடிபுனை தொடுகழன் மையணற் காளைக்கென்
தொடிகழித் திடுதல்யான் யாயஞ் சுவலே
*அடுதோண் முயங்க லவைநா ணுவலே

†என்போற் பெருவிதுப் புறக வென்றும்

1. தொடுகழல் - செறித்த கழல்; புறநா. எ : 1. மையணற் காளை: "செய்வினைப் பொலிந்த செறிகழ னோன்றாள், மையணற் காளையொடு" (ஐங்குறு. ௩அ௧); "மையணற் காளை மகிழ்துடி" பு - வே. 12.

4. மு. புறநா. உ௫௫ : 3, உ௯௧ : 5.

'என்போற் பெருவிதுப் புறுக வென்புழி, போலென்பது போல வென்னுஞ் செயவெனெச்சக்குறிப்பாகிய உவமவுருபு' தொல். எச்ச. சூ. 18, ந.

பி - ம். *அடுதொறுமுயங்கல். †எம்போற்பெருவிதிர்ப்பு.



5 ஒருபாற் படாஅ தாகி

இருபாற் பட்டவிம் மைய லூரே.[1]

திணை - கைக்கிளை; துறை - பழிச்சுதல்.

அவனைப் பெருங்கோழிநாய்கன் மகள் நக்கண்ணையார் பாடியது.

இ - ள்.—அடியின்கட் புனைந்த செறிந்த வீரக்கழலினையும் மைபோன்ற [2]தாடியினையுமுடைய இளையோன்பொருட்டு எனது வளை என்னைக் கைவிடுதலான், யான் யாயை அஞ்சுவேன்; அவன்பகையைக் கொல்லுந் தோளைத் தழுவுதற்கு அவையின்கணுள்ளாரை நாணுவேன்; என்னைப்போல மிக்க நடுக்கமுறுவதாக, எந்நாளும், யாயேயாதல் அவையேயாதல் ஒருகூற்றிற் படாதாகி யாயும்அவையுமாகிய இருகூற்றிற் பட்ட இம்மயக்கத்தையுடைய ஊர்.—எ - று.

மையலூர் பெருவிதுப்புறுகவெனக் கூட்டுக.

யாயில்லையாயின், வளைகழலுதற்கு அஞ்சவேண்டா; அவையில்லை யாயின், முயங்குதற்கு அஞ்சவேண்டாவென்பது கருத்தாகக் கொள்க.

'ஒருபாற் படாஅ தாகி யிருபாற் பட்டவிம் மையலூர்' என்பதற்கு [3]அச்சமும் நாணுமுண்டாய் வருந்தும் என்கூற்றிலும் நில்லாது என்காத லறிந்து அவனோடு கூட்டவினையாத யாய்கூற்றிலும் நில்லாது இருவர் கூற்றிலும் நின்று மயங்குகின்ற ஊரெனினும் அமையும். (அரு)

6. மையலூர்: குறுந். ருஎச : 7.

[1]மு. 'அடிபுனை தொடுகழன்...மைய லூரே : இது பெருங்கோழி நாய்கன்மகளொருத்தி, ஒத்த அன்பினாற் காமமுறுதவழியும் குணச்சிறப் பின்றித் தானே காமமுற்றுக் கூறியது இதனின் அடக்குக' தொல். புறத்திணை. சூ. 28, ந.

[2]தாடி-வீசை; "இரலை, மருப்பிற் றிரிந்து மறிந்துவீழ் தாடி" (கலி. கடு); "கலையிரு மருப்பிற் கோடிக் காதள வோடுஞ் தாடி" திருவிளை. உரு : 22.

[3]"அச்சமு நாணு மடனுமுந் துறுத்த, நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப" (தொல். களவு. சூ. 8); "உட்கு நாணு மொருங்குவந் தடைதர" பெருங். ரு. 6 : 87, ச. 13 : 100.

---

(அச) என்னை, புற்கை யுண்டும் பெருந்தோ ளன்னே
யாமே, புறஞ்சிறை யிருந்தும் பொன்னன் னம்மே

1. என்னை: புறநா. எஅ: 2, அடிக்.

போரெதிர்ந் தென்னை போர்க்களம் புகினே
கல்லென் பேரூர் விழவுடை யாங்கண்
ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்
குமணர் வெரூஉந் துறையன் னன்னே.[1]

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள். என்னுடைய தலைவன், தன் நாடிழந்த வறுமையாற் புற்கை நுகர்ந்தானாயினும் பகைவர் அஞ்சத்தக்க பெரியதோளேயுடையன்; யாம், அவனுடைய சிறைப்புறத்திருந்தும் பலகாலுங் காணப்பெறினும் மெய்யுறப்பெறாமையின் வருந்திப் [2]பொன்போலும் நிறத்தையுடையே மாயினேம்; போரையேற்று என் தலைவன் போர்க்களத்தின்கட் புகிற் கல்லென்னும் ஒலியையுடைய பெரிய ஊரின்கட் [3]போர்செய்தற்கெடுத்த விழாவினையுடைய இடத்துத் தோள்வலி பேசி இன்பமுற்றுப் போந்த வீரர்க்கு உப்புவிற்பார் அஞ்சத்தக்க ஏற்றிழிவுடைய துறையை ஒப்பன்.—எ - று.

என்னை, புற்கையுண்டும் பகைவெல்லும் பெருந்தோளனும்; யாம், அவன் சிறைப்புறத்திருந்தும் பசப்பை வெல்லமாட்டாமையால் பொன் போன்றனமெனத் தன் வேட்கைமிகுதி கூறியவாறு.

அன்றி, இதற்கு என்னை புற்கையுண்டும் வழங்கும் பெரியதோளை யுடையனும் நம்மிடத்து அருளின்மையின், அவன் சிறைப்புறத் திருந்தும் பொன்போற் பசந்தேமென்று அழிந்து கூறியதாகப் பொரு ளுரைப்பாரும் உளர்.

உமணர் வெரூஉம் துறையன்னனென்றதனுற் பயன் : வருத்துங் கூற்றின் ஆடவரையும் மகளிரையும் ஒக்கவருத்துவதல்லது அருளுமாறு கற்றிலனேவென்னும் நினைவிற்றுக்குக. (அசு)

---

6. புறநா. கOஉ : 1 - 5.

[1]மு. பெண்பாற் கைக்கிளைக்கும் (தொல். செய். சூ. 160, பேர்.), சுட்டியொருவர்ப் பெயர்கொள்ளாத பாடாண்டிணைக் கைக்கிளைக்கும் (ஷை. ஷை. ஷை. ந.) மேற்கோள்.

[2]பொன்போலும் நிறமென்றது பசலை நிறத்தை ; இது தலைவர் பிரிவினல் மகளிர்க்கு உண்டாவது.

[3]"விழவுமேம் பட்ட நற்போர்" புறநா. அஅ : 5.



(அரு) என்னைக் கூரிஃ தன்மை யானும்
என்னைக்கு நாடிஃ தன்மை யானும்
ஆடா டென்ப வொருசா ரோரே

ஆடன் றென்ப வொருசா ரோரே
நல்ல பல்லோ ரிருநன் மொழியே
அஞ்சிலம் பொலிப்ப வோடி யெம்மில்
முழாவரைப் போந்தை பொருந்திநின்
றியான்கண் டனனவ னாடா குதலே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—என்னுடைய தலைவனுக்கு ஊர் இஃது அல்லாமையானும் என்னுடைய தலைவனுக்கு நாடு இஃது அல்லாமையானும் அவனுக்கு இயல்பாய வென்றியை அவனது வென்றியென்று சிறப்பாகச்சொல்லுவர் ஒருபக்கத்தார்; அவனது வென்றியன்றென்று சொல்லுவர் ஒருபக்கத்தார்; பலரும் ஒத்து ஒவ்வாமற் கூறும் இவ்விருவகைப்பட்ட நல்ல வார்த்தையும் நல்லவாயிருந்தன; அவ்வாறு கூறினராயினும், அழகிய சிலம்பார்ப்ப ஓடிச் சென்று, எம்முடைய மனையின்கண் முழாப்போலும் பக்கத்தையுடைய பனையைப் பொருந்திநின்று, [1]எனது வளையும் கலையுமுதலானவை தோற்கும் ஆண்மையுடைமையின், அவனது வென்றியாதல் யான் கண்டேன். —எ - று.

பின்னும் ஒருகால் என்னையென்றதனால், [2]இவளது ஆதரவு தோற்றி நின்றது.

நல்லவென்றது, இகழ்ச்சிக்குறிப்பு.

ஆடென்றதூஉம் ஆடன்றென்றதூஉம் அவனைச் சுட்டியே கூறினமையின், இருநன்மொழியும் நல்லவென்றாரெனினும் அமையும். (அ௫)

1 - 2. புறத்திணைப் பகுதியில், தலைவி தலைவனை 'என்னை' என்பதற்கு மேற்கோள்; தொல். பொருளியல், சூ. 52, ந.

7. புறநா. ௩௭௫: 4; "முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணை" குறுந். ௩௦௧ : 1.

ஏதாவதொன்றனைச் சார்ந்துநின்று ஒருவரைப்பார்த்தலும் அங்ஙனம் நின்று ஒன்றைக்கேட்டலும் நாணமுடைய குலமகளிர்க்கு இயல்பு; புறநா. ௮௬ : 1 - 2.

[1]புறநா. ௮௬ : 2. [2]சிற். 47, உரை.



(௮௬) சிற்றி னற்றூண் பற்றி நின்மகன்
யாண்டுள னோவென வினவுதி யென்மகன்
யாண்டுள னாயினு மறியே னோரும்
புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ விதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே.

திணை - வாகை; துறை - ஏறாண்முல்லை.

[1]*காவற்பெண்டின் பாட்டு.

இ - ள்.—சிறிய இல்லின்கண் நல்லதூணைப் பற்றிநின்று நின்மகன் எவ்விடத்துளனோவென்று கேட்பை; என்னுடைய மகன் எவ்விடத்துளனாயினும் அறியேன்; புலி கிடந்துபோன கன்முழைபோல அவனைப் பெற்ற வயிறோ இஃது; அவன் செருக்களத்தின்கண்ணே தோன்றுவன்; அவனைக் காணவேண்டின் ஆண்டுச்சென்று காண்.—எ - று.

'ஈன்றவயிறோவிது' என்றகருத்து: புலிசேர்ந்துபோகிய அளைபோல

அவனுக்கு என்னிடத்து உறவும் அத்தன்மைத்தென்பதாம்.

ஒருமென்பதூஉம் மாதோவென்பதூஉம் அசைச்சொல். (அசு)

3. புறநா. உஅஉ : 3.

4 - 5. "வீடுணர்ந் தோர்க்கும் வியப்பாமா லிந்நின்ற, வாடன் முதியான் வயிற்றிடங் - கூடார், பெரும்படை வெள்ள நெரிதரவும் போா, இரும்புலி சேர்ந்த விடம்" பு - வே. 54.

[1]காவற்பெண்டு - செவிலித்தாய்; மணி. எ : 58; சிலப். உகூ, அரும் பத.

பி - ம். *காதற்பெண்டு.

---

(அஎ) களம்புக லோம்புமின் றெவ்விர் போரெதிர்ந்
தெம்முளு முளனொரு பொருநன் வைகல்
எண்டேர் செய்யுந் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே.[1]

1. புறநா. எஅ : 2, அடிக்.

[1]மு. வாகைத்திணையின் துறைகளுள் ஒன்றாகிய, 'அரும்பகை தாங்கு மாற்றல்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 17, இளம்; 21, ந.



திணை - தும்பை; துறை - தானைமறம்.

*அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் பாடியது.

இ - ள்.—போர்க்களத்தின்கட் புகுதலைப் போற்றுமின், பகைவிர் ! போரின்கண் மாறுபட்டு, எங்களுள் வைத்தும் ஒருவீரன் உளன்; ஒருநாள் எட்டுத்தேரைச் செய்யுந் தச்சன் ஒருமாதங்கூடிக் கருதிச் செய்யப்பட்டதொரு [1]தேர்க்காலையொப்பன்.—எ - று.

போரெதிர்ந்து களம்புகலோம்புமின், எம்முளும் உளனெனக் கூட்டுக.

எம்முளுமென்ற உம்மை, சிறப்பும்மை.

தேர்க்காலோடு உவமை, [2]விரைவும் திண்மையுமாகக்கொள்க. (அஎ)

---

[1]தேர்க்கால் - தேர்ச்சக்கரம்; புறநா. கூஉ : 8; "கால்வறேர் கையினியக்கி" கலி. அக : 8.

[2]விரைவு: "கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டும்" பு. வெ. 11.

பி - ம். *அதிகமானெடுமான்வஞ்சி.

---

(அஅ) யாவி ராயினுங் கூழை தார்கொண்
டியாம்பொருது மென்ற லோம்புமி னோங்குதிறல்
ஒளிறிலங்கு நெடுவேன் மழவர் பெருமகன்
கதிர்விடு நுண்பூ ணம்பகட்டு மார்பின்
விழவுமேம் பட்ட நற்போர்
முழவுத்தோ ளென்னையைக் காணா வூங்கே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—எப்பெற்றிப்பட்டீராயினும், அணியையும் தூசியையுங்

கொண்டு யாம் அவனோடு பொருவோமென்று சொல்லுதலைப் பாது காமின், உயர்ந்த வலியையுடைய [1]பாடஞ்செய்யும் விளங்கியநெடியவேலை

3. மழவர் - ஒருவகை வீரர்; (புறநா. கூ0 : 11); "உருவக் குதிரை மழவர்" (அகநா. க : 2); "கழற்கான் மழவர்", "பெருந்தோண் மழவர்" (மதுரை. 395, 687.) ஒளிறிலங்கு நெடுவேல்: புறநா. டுஎ : 8.

4. அம்பகட்டு மார்பு: புறநா. டுகூ : 1, பி-ம்; கூசு ; 1.

5. புறநா. அச : 4.

6. ஊங்கு - இங்கே காலமுன்; புறநா. எசு : 3, கசக : 7.

[1]புறநா. டுஎ : 8, உரை, அடிக்.





யுடைய இளையோர்க்குத் தலைவனாகிய சுடர்விடுகின்ற நுண்ணிய தொழிலை யுடைய பூணணிந்த அழகிய வலிய மார்பினையும் [1]களவேள்வி முதலாகிய விழாச்சிறந்த நல்ல போரைச்செய்யும் முழாப்போலுந் தோளினையு முடைய என் இறைவனைக் காண்பதற்குமுன்; கண்டால் அதுசெய்தல் அரிதாகலான்.— எ - று.

என்னையைக் காணூங்கு யாவிராயினும் பொருதுமென்றல் ஓம்புமி னெனக் கூட்டுக. (அஅ)

[1]புறநா. கஎஉ : 12; "அரசுபட வமருழக்கி, முரசுகொண்டு களம் வேட்ட" மதுரை. 128 - 9, அடிக்.

---

(அகூ) இழையணிப் பொலிந்த வேந்துகோட் டல்குல்

மடவர லுண்கண் வாணுதல் விறலி
பொருநரு முளரோநும் மகன்றலை நாட்டென
வினவ லானாப் பொருபடை வேந்தே
எறிகோ லஞ்சா வரவி னன்ன
சிறுவன் மள்ளரு முளரே யதாஅன்று
பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பின்
அதுபோ ரென்னு மென்னையு முளனே.

**திணையும் துறையும் அவை.**

**அவனை அவர் பாடியது.**

இ - ள்.—மணிக்கோவையாகிய அணியாற் பொலிந்த எந்திய பக்கத்தினையுடைய அல்குலினையும் மடப்பத்தினையும் மையுண்ட கண்ணி

---

2. "மடவரல் வள்ளி" (முருகு. 102); "மடவரன் மகளிர்" பெரும்பாண். 387.

4. வினவலானா: புறநா. ௭௦ : 5; "வினவ லானாப் புனையிழை" அகநா. ௨௧ : 14.

5 - 6. "அராவ ழன்ற தனையதன் னாற்றலால்", "அரவியற் றறுகண் வன் றாளான்", "மூரி வெஞ்சிலை யிராவண னராவென முனிந்தான்" (கம்ப. கரன்வதை. 184, முதற்போர். 151, 239); "கதையிற் றாக்கப் படு மர வென்னப் பொங்கி" காஞ்சிப். பரசிராம. 31.

7 - 8. புறநா. ௧௨௮ : 2 - 3.

9. புறநா. ௯௧ : 9, ௨௭௧ : 7.

லையும் ஒளிதங்கிய நுதலினையுமுடைய விறலி ! என்னோடு பொருவாரு முளரோ நம்முடைய பெரிய இடத்தினையுடைய நாட்டின்கண்ணென என்னைக் கேட்டலமையாத செருச்செய்யுந் தானையையுடைய வேந்தே ! நீ போர்செய்யக் கருதுவையாயின், எம்முடைய நாட்டின்கண்ணே அடிக்குங் கோலுக்கு அஞ்சாது எதிர்மண்டும் பாம்புபோன்ற இளைய வலியவீரருமுளர்; அதுவேயன்றி, மன்றின்கண் தூங்கும் பிணிப்புற்ற முழவினது காற்றெறிந்த தெளிந்த ஓசையையுடைய கண்ணின்கண் ஒலியைக்கேட்பின், அது போர்ப்பறையென்று மகிழும் என்னுடைய தலைவனும் உளன்.—எ - று.

'தெண்கண்' என்றது, அதன்கண் ஓசையை.

போரென்றது, போர்ப்பறையை. (அகூ)

---

(கூ0) உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்
அடைமல்கு குளவியொடு கமழுஞ் சாரல்
மறப்புலி யுடலின் மான்கண முளவோ
மருளின விசும்பின் மாதிரத் தீண்டிய
இருளு முண்டோ ஞாயிறு சினவின்
அச்சொடு தாக்கிப் பாருற் றியங்கிய
பண்டச் சாகாட் டாழ்ச்சி சொல்லிய

---

1. "இவட்கே, அலங்கிதழ்க் கோடல் வீயுகு பவைபோல், இலங்கே ரெல்வளை யிறையூ ரும்மே", "ஊழுறு கோடல்போ லெல்வளை யுகுப

வால்'', "கமழ்தண்டா துதிர்ந்துக ஆழுற்ற கோடல்வீ, இதழ்சோருங் குலைபோல விறைநீவு வளையாட்கு" (கலி. ௭ : 15 - 6, ௪௮ : 11, ௧௨௧ : 13 - 4); "வளையுடைந்தன்ன வள்ளிதழ்க் காந்தள்" (மலைபடு. 519); "துணைமலர்க் காந்த ளூழ்த்துச் சொரிவபோற் றோன்றி முன்கை, அணிவளை நலத்தோடேங்க" சீவக. 1742.

1 - 2. காந்தளும் குளவியும்: "இலையடர் தண்குளவி யேய்ந்த பொதும்பிற், குலையுடைக் காந்த ளினவண் டிமிரும்'' ஐந். எழுபது. 3.

3. "பாயும், புலிமுன்னர்ப் புல்வாய்க்குப் போக்கில்" (பழ. 234.) மறப்புலி : பதிற். ௪௧ : 7; கலி. ௪௨ : 1; சிலப். ௧௨ : 27; சீவக. 752.

5. "ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென், ஆயிழை மேனிப் பசப்பு'', "ஞாயிற்று முன்ன ரிருள்போல மாய்ந்ததென், ஆயிழை யுற்ற துயர்'', "ஆயிழை மடவா லவல மகலப், பாயிருட் பரப்பினைப் பகல் களைந் ததுபோல்'' கலி. ௪௨, ௧௪௫, ௧௪௮.

7. சொல்லிய : புறநா. ௯௯ : 1.



*வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ
எழுமரங் கடுக்குந் தாடோய் தடக்கை
வழுவில் †வன்கை மழவர் பெரும
இருநில மண்கொண்டு சிலைக்கும்
பொருநரு முளரோ நீகளம் புகினே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—முறிந்த வளையை ஒப்ப மலர்ந்த வெண்காந்தட்பூ இலை தழைத்த [1]குளவியுடனே நாறும் மலைச்சாரற்கண் மறத்தையுடைய புலி சீறின் எதிர்நிற்க வல்ல மானினமும் உளவோ? மயங்கிய ஆகாயத்திடத்தும் திசையின்கண்ணும் செறிந்த இருளும் உண்டோ ஞாயிறு கொதித்தெழுமாயின்? பாரத்து மிகுதியாற் பார் அச்சுமரத்தோடு வந்து தாக்கி உற இருத்தலின் நிலத்தின்கட் [2]குளித்த பண்டத்தையுடைய சகடத்தினது ஆழ்ச்சியைப் போக்குதற்குப் புனல்கொழிக்கப்பட்ட மணற் பரக்கவும் கற்பிளக்கவும் நடக்கவல்ல மிக்க மனச்செருக்கினையுடைய கடாவிற்குப் போதற்கரிய துறையுமுண்டோ? இல்லையன்றே; அவை போல, கணையமரத்தையொக்கும் முழந்தாளிலேபொருந்திய பெரியகையாகிய தப்பாத வன்மையைச் செய்யும் கையினையுடைய வீரர்க்குத்தலைவ! பெரிய நிலத்தின்கண் நினது மண்ணைக்கொண்டு ஆர்க்கும் வீரரும் உளரோ? இல்லையன்றே, நீ போர்க்களத்திற் புகின்.—எ - று.

மழவர்பெரும! நீ களம்புகின் பொருநரும் உளரோ? இல்லையன்றேயெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

---

6 - 9. புறநா. ௯0 : 7 - 9, அடிக்.

8 - 9. ‘வரிமணன் . . . . உண்டோவென்றாற்போலும் உவமப் பொருள்களும் இக்காலத்திற்கு ஆகாவாயின’ தொல். செய். சூ. 80, ந.

10. எழுமரம் - கோட்டைக்கதவின் உட்புறத்தே குறுக்காகப் போடப்படும் வலியமரம்; (புறநா. ௯௭ : 8); கணையமரமெனவும் வழங்கும்; “முழுவிறற் கணையம்” (சிலப். ௧௫ : 215) என்பதன் உரையைப் பார்க்க. தாடோய் தடக்கை : புறநா. ௫௧ : 2, அடிக்.

11. வழுவில் வன்கை : “கருனையாற் குழைக்குங் கைகள், வாளமர் நீந்தும் போழ்தின் வழுவழுத் தொழியு மென்றான்” சீவக. 257.

[1]குளவி - மலைமல்லிகை; புறநா. ௧௬௮ : 12; உரை.

[2]‘குளித்த’ என்ற இவ்வுரைக்குரிய மூலமாகிய ‘இயங்கிய’ என்பது ‘இங்கிய’ என்றிருக்கவேண்டுமெனத் தோற்றுகிறது.

பி - ம். *வரிமணன்ஞமல. †வண்கை.



தடக்கையையுடைய பெருமவெனக் கூட்டி, வன்கையை மழவரொடு கூட்டியுரைப்பினும் அமையும்.

இருநிலமாகிய மண்ணென்பாரும் உளர்.

‘மதப்பகடு’ என்பதூஉம் பாடம். (௯0)

---

(௯௧) *வலம்படு வாய்வா ளேந்தி யொன்னார்
களம்படக் கடந்த கழறொடித் தடக்கை
ஆர்கலி †நறவி னதியர் கோமான்
போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி

பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் ‡தீங்கனி குறியா

---

2. களம்படக்கடத்தல் : புறநா. கக : 2; "செங்களம் படக் கொன்று" (குறுந். க : 1.) கழறொடி : புறநா. கஉஅ : 5.

3. 'அதியர்' என்பது குடிப்பெயர்.

4. திருவிற்பொலந்தார் : புறநா. கO : 10, அடிக்.

6. தன்னுடைய ஆக்கங் கருதாமல் விடத்தையுண்டு பல்லுயிர்களையும் காத்தருளிய புண்ணியனாதலின், நீலமணிமிடற் றொருவனை உவமை கூறினர்; "போகம் மீன்ற புண்ணியன்" (சீவக. 362) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

5 - 6. 'பால்புரை பசுங்கதிர்க் குழவித்திங்களைக் குறுங்கண்ணியாக வுடைய அழலவிர் சோதி யருமறைக்கடவுள்' (இறை. சூ. 1, உரை.) பிறைநுதற்சென்னி ஒருவன் : புறநா. க : 9, அடிக். ருரு : 4 - 5, அடிக். "மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதன், முக்கண்ணான்" கலி. கOச : 11 - 2.

7. புறநா. சு : 28.

8. 'விடரகம்' என்பது அம்மலைப்பெயராகவும் கருதப்படுகின்றது; அகநா. உஎக, பார்க்க. விடரகம் : புறநா. ருஎ : 4; கலி. கOரு : 19.

9. "சிறியிலை நெல்லிக்காய்", "சிறியிலை நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய்" அகநா. உஅச, உகக.

பி - ம். *வளம். †முழவினதிகர்கோமான். ‡தீங்கனிகுறையாது காதனின்.

தாத னின்னகத் தடக்கிச்
சாத னீங்க *வெமக்கீத் தனையே.

திணை - பாடாண்டிணை; துறை - வாழ்த்தியல்.

அவனை அவர் நெல்லிப்பழம்பெற்றுப் பாடியது.

இ - ள்.—வென்றியுண்டான தப்பாத வாளையெடுத்துப் பகைவர் களத்தின்கட்பட வென்ற கழல இடப்பட்ட வீரவளை பொருந்திய பெரிய கையினையுடைய மிக்க ஆரவாரத்தைச் செய்யும் மதுவினையுடைய அதியர் கோமான்! மாற்றாரைப் போரின்கட்கொல்லும் வீரச்செல்வத்தினையும் பொன்னாற் செய்யப்பட்ட மாலையையுமுடைய அஞ்சி! நீ, பால்போலும் பிறை நுதல்போலப் பொலிந்த திருமுடியினையும் நீலமணிபோலும் கரிய திருமிடற்றினையுமுடைய ஒருவனைப்போல நிலைபெறுவாயாக; பெரும! நீ, பழைய நிலைமையையுடைய பெரியமலையிடத்து விடரின்கண் அரிய உச்சிக்கட்கொள்ளப்பட்ட சிறிய இலையினையுடைய நெல்லியின் இனிய பழத்தைப் பெறுதற்கரிதென்று கருதாது அதனாற் பெறும் பெரும் பேற்றினை எமக்குக்கூறாது நின்னுள்ளே அடக்கிச் சாதல் ஒழிய எமக்கு அளித்தாயாதலால்.—எ - று.

'நீல மணிமிடற் றொருவன் போல' என்றகருத்து, [1]சாதற்குக் காரணமாகிய நஞ்சுண்டும் நிலைபெற்றிருந்தாற்போல நீயும் சாவாதிருத்தல் வேண்டுமென்பதாம்.

10. 'அடக்கி' என்றது, ஆழமுடைமையை; "அட்டதை, மகிழ்ந் தன்று மலிந்தன்று மதனினு மிலனே" (புறநா. எஎ) என்பதும் அது.

9 - 11. "மால்வரைக், கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி, அமிழ்து விளை தீங்கனி யௌவைக் கீந்த,......அதிகனும்" (சிறுபாண். 99 - 103), "பூங்கமல வாவிசூழ் புல்வேளூர்ப் பூதனையும், ஆங்குவரு பாற்பெண்ணை யாற்றினையும் - ஈங்கு, மறப்பித்தாய் வாளதிகா வன்கூற்றி னௌவை, அறுப் பித்தா யாமலகந் தந்து" (ஔவையார் பாட்டு), 'இனியகனிகளென்றது, ஔவையுண்ட நெல்லிக்கனிபோல அமிழ்தாவனவற்றை" (குறள், 100, பரிமேல்.), "நெல்லியமு தௌவைக் களித்தநெடு வேலதிகன், மல்கு புகழ் கொண்டான் வடமலையே" (வடமலைவெண்பா) என்பவை இந்தச் சரித்திரத்தைப் புலப்படுத்தும்.

[1]"விண்ணோ ரமுதுண்டுஞ் சாவ வொருவரும், உண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்குவாய்" சிலப். கஉ : 'துண்ணென் றுடியொடு'.

மு - ம். *வெனக்கீத்தோயே.



அதியர்கோமான்! அஞ்சி! நெல்லித்தீங்கனி எமக்கு ஈத்தாயாதலால், பெரும! நீ நீலமணிமிடற்றொருவன்போல மன்னுகவெனக் கூட்டி வினை முடிவுசெய்க.

'பிறைநுதற் பொலிந்த சென்னி' என்பதற்குப் பிறைதான் நுதலிடத்தே பொலிந்த சென்னியெனினும் அமையும். (கக)

(௯௨) யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்
கருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை
என்வாய்ச் சொல்லு மன்ன வொன்னார்
கடிமதி லரண்பல கடந்த
நெடுமா னஞ்சிநீ யருளன் மாறே.

திணை - அது; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—யாழோசைபோல இசையால் இன்பமும் செய்யா; காலத்தோடும் கூடியிரா; பொருளும் அறியவாரா; ஆயினும், தந்தையர்க்கு அருளுதல்வந்தன பிள்ளைகளுடைய இளஞ்சொல்; என்னுடைய வாயின்கட் சொல்லும் அத்தன்மையன, பகைவரது காவலையுடைத்தாகிய மதிலையுடைய அரண்பலவற்றையும் வென்ற நெடுமானஞ்சி! நீ அருளுதலால்.— எ - று.

புதல்வர்மழலை தந்தையர்க்கு அருள்வந்தன; அஞ்சி! நீ அருளுதலால், என் வாய்ச்சொல்லும் அன்னவெனக் கூட்டுக.

---

3. மழலை - எழுத்து வடிவுபெறாது தோற்றும் இளஞ்சொல்; "மெய்பெறா வெழுத்துயிர்க்கு மழலை" சீவக. 181.

1 - 3. "அத்தத்தா வென்னுநின், றேமொழி கேட்ட லினிது" (கலி. ௮0 : 14 - 5); "அவர்மழலை கேட்ட லமிழ்தினு மினிதே" (இனியது நாற்பது, 15); "குழலினி தியாழினி தென்பதம் மக்கள், மழலைச்சொற் கேளா தவர்" (குறள், 66); "எழுத்தி னுறழாது வழுத்துபொரு ளின்றிக், குறிப்பொடு படாஅது வெறித்தபுன் சொல்லே, ஆயினும் பயந்தநஞ் சேயவர் சொலுமொழி, குழலினும் யாழினு மழகிதாம்" (திருக்கழுமல மும்மணி. ௨௮ : 2 - 5); "செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால், அப்

பொ ருட்குறை யாவருங் கொள்வரால், இப்பொ ருட்கென் னுரைசிறி தாயினும், மெய்ப்பொ ருட்குறி யார்கொள்வர் மேன்மையால்” பெரிய. பாயிரம், 7.



யாழென்றது, யாழிற்பிறந்த ஓசையை.

பொருளுமென்னும் உம்மை, விகாரத்தால் தொக்கது. (௯௨)

---

(௯௩) திண்பிணி முரச மிழுமென முழங்கச்
சென்றமர் கடத்தல் யாவது வந்தோர்
தார்தாங் குதலு மாற்றூர் வெடிபட்
டோடன் மரீஇய பீடின் மன்னர்
நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதன் மறந்தவர் தீதுமருங் கறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக *நல்லமர் வீழ்ந்த
நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ
வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்
தண்ணல் யானை யடுகளத் தொழிய

1. “ஏம முரச மிழுமென முழங்க” புறநா. ௩ : 3.

2. சென்றமர் கடத்தல்: புறநா. சுசு : 4. யாவது : சுஉ : 1.

7. முருகு. 180.

9. நன். சூ. 451, மயிலை. மேற்.

10. செல்வுழிச்செல்க : நன். சூ. 163, வி; இ - வி. சூ. 64; உரை, மேற்.

10 - 11. நன். சூ. 228, மயிலை; இ - வி. சூ. 139, உரை, மேற்.

8 - 11. புறநா. எச : 1 - 2, அடிக்.

12. வாய்புகுகடாம் : "வாயிழி கடாத்த வான்மருப் பொருத்தல்" (கலி. சுக : 3); "நாகம் வாய்வழி கடாத்த தாகி" சீவக. 753.

11 - 2. "வண்டுபடு பூநாறு கடாஅஞ் செருக்கி" மணி. கக : 21 - 2.

12 - 3. புறநா. உஉ : சு; "வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்துப், பொறிநுதற் பொலிந்த வயக்களிறு" (அகநா. எஅ : 3 - 4); "வரிவண் டார்க்கும் வாய்புகு கடாஅத்த, அண்ணல் யானை" (தொல். களவியல், சூ. 11, ந. "எண்ணியது"); "சுரும்புணக் களித்த புகர்முக வேழம்" (ஐங்குறு. உகூக); "வரிவண் டோங்குய ரெழில்யானைக் கனை கடாம்" (கலி. சுசு : 2 - 3); "தண்மதந் திவண்ட வண்டு தங்கிய காட்டுள் வேழம்" சீவக. 2313.

பி - ம். *வாளமர்.



அருஞ்சமந் ததைய நூறிநீ
பெருந்தகை விழுப்புண் பட்ட மாறே.[1]

திணை - வாகை; துறை - அரசவாகை.

அவன் பொருது புண்பட்டுநின்றேனை அவர் பாடியது.

இ - ள்.—திண்ணிய பிணிப்பையுடைய முரசம் இழுமென்னும் ஓசையையுடைத்தாய் ஒலிப்ப மேற்சென்று போரைவெல்லுதல் இனி எங்கேயுள்ளது? நின்னோடு எதிர்ந்துவந்தோர், நினது தூசிப்படையைப் பொறுத்தற்கும் மாட்டாராய்ச் சிதறிக் கெட்டுப்போகவிலே மருவிய பெருமையில்லாத அரசரது கோயின்பக்கத்தான் இறந்த உடம்பை யணைத்துத் தமது ஆசைத்தன்மையை மறந்து அவர் வாளாற்படாத குற்றம் 'அவரிடத்தினின்றும் நீக்கவேண்டி அறத்தைவிரும்பிய கோட்பாட்டையுடைய நான்குவேதத்தையுமுடைய அந்தணர் நல்லகூற்றிலே பொருந்திய பசிய தருப்பைப்புல்லைப் பரப்பினராய்க் கிடத்தித் தமது ஆண்மையே பற்றுக்கோடாக நல்ல பூசலிலே பட்ட மேம்பட்ட வீரக் கழலினையுடைய வேந்தர் செல்லும் உலகத்திலே செல்கவென்று வாளோக்கியடக்கும் இழிதகவும் பிழைத்தார்கள், வரியையுடைய தேனீ ஒலிக்கும் வாயின்கண்வந்து புகுகின்ற மதத்தினையுடைய தலைமை பொருந்திய யானை போர்க்களத்தின்கண்ணே படப் பொறுத்தற்கரிய பூசற்கண்ணே சிதற வெட்டி, பெரிய தகைமையையுடையாய்! நீ சீரிய புண்பட்டபடியால்.—எ - று.

பெருந்தகாய்! நீ அருஞ்சமம் ததையநூறி விழுப்புண்பட்டவாற்றால் நின்னோடு எதிர்த்து வந்தோர்தாம் பீடின்மன்னர் விளிந்த யாக்கைதழீஇ நீள்கழன்மன்னர் செல்வுழிச்செல்கென வாள்போழ்ந்தடக்கலும் உய்ந்தன ராதலின், இனி நின்னோடு எதிர்ப்பார் இன்மையின், முரசுமுழங்கச் சென்று அமர்கடத்தல் யாவதெனக் கூட்டுக.

சென்றமர்கடத்தல் யாவதென்றதனானும் வாள்போழ்ந்தடக்கலும் உய்ந்தனரென்றதனானும் வந்தோர் பட்டமை விளங்கும்.

[2]இன்னும் இதற்கு நின் வாளாற் பட்டுத் துறக்கம் பெற்றதே யன்றி வாள்போழ்ந்து அடக்கலும் உய்ந்தனராகலின், அவர்க்குப்

15. விழுப்புண் - முகத்தினும் மார்பினும்பட்ட புண்; குறள், 776, பரிமேல்.

[1]ழ. வஞ்சித்திணைத் துறைகளுள், 'அடுத்தூர்ந்தட்ட கொற்றம்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 7, இளம்.

[2]இப்பொருள், "நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு, மாற்றாரென்னும் பெயர்பெற், றாற்றா ராயினு மாண்டுவாழ் வோரே" (புறநா. உசு : 16 - 8) என்பதை நினைப்பிக்கின்றது.

27



பிறர்மேற் சென்று அமர்கடத்தல் என்ன பயனுடைத்தென்றுரைப்பினும் அமையும்.

இனி, வந்தோராகிய மன்னர் நீ விழுப்புண்பட்டபடியாலே வாள்போழ்ந்தடக்கலும் உய்ந்தார்; இனி நின்னோடு எதிர்ப்பாரின்மையின் மேற்சென்று அமர்கடத்தல் யாவதெனக்கூட்டி அதற்கேற்ப உரைப்பாரும் உளர்.

தார் தாங்கலுமென்ற உம்மை, இழிவுசிறப்பு.

வாள்போழ்ந்தடக்கலுமென்பது, நினக்குத் தொலைந்தாரென்னும் இழிதகவேயன்றித் தமர் வாள்போழ்ந்தடக்கும் இழிவையும் உய்ந்தனரென எச்சவும்மையாய்நின்றது. (௯௫)

---

(௯௬) ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்
*நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனியை பெரும வெமக்கே மற்றதன்
துன்னருங் கடாஅம் போல
இன்னாய் பெருமநின் னொன்னா தோர்க்கே.[1]

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—ஊரின்கட் சிறுபிள்ளைகள் தனது வெள்ளிய கோட்டைக் கழுவுதல் காரணமாக நீரையுடைய துறைக்கட்படியும் பெரிய களிறு அவர்க்கு எவ்வாறு எளிதாய் இனிதாம்? அவ்வாறே எங்களுக்குப் பெரும!

1. ஊர்க்குறுமாக்கள்: புறநா. ௯0௪: 2; "ஒலித்தொருங் கீண்டிய வூர்க்குறு மாக்களும்" (மணி. ௧௫: 59.) குறுமாக்கள்: புறநா. ௧௫௯ : 7; நற். ௨௨0: 4; கலி. அ௨: 9; மதுரை. 461; மணி. ௩௬: 40.

4. புறநா. ௩: 8.

[1]மு. பாடாண்டிணைத் துறைகளுள், 'இயன்மொழி' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. 29, இளம்.); 'ஊர்க்குறுமாக்களென்னும் பாட்டினுள் உவமையாகிய பொருளினை யானையும் கடாமுமென்று இரண்டாக்கி யானைக்கே ஊர்க்குறுமாக்கள் வெண்கோடு கழாலின் நீர்த்துறை படியுமென்னும் அடைகூறி ஊர்க்குறுமாக்கள்போல்வாரைத் துன்னருங் கடாத்திற்குச் சொல்லாமையின் இதுவும் வேறுபடவந்த உவமத் தோற்றமெனப்பட்டது' தொல். உவம. சூ. 32, பேர்.

பி - ம். *நீர்த்துறைப் படி.



இனியை ; மற்று அதனுடைய அணைதற்கரிய மதம்பட்ட நிலைமை எவ்வாறு இன்னாதாம்? அதுபோலப் பெரும! நின் பகைவர்க்கு இன்னாய்.
—எ - று.

கழாஅலினென்பதற்குக் கழுவப்படுதலாலெனினும் அமையும். (௯௪)

(௯௫) இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிர ணோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே யவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ வென்றும்
உண்டாயிற் பதங்கொடுத்
தில்லாயி னுடனுண்ணும்
இல்லோ ரொக்கற் றலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே.[1]

திணை - பாடாண்டிணை; துறை - வாண்மங்கலம்.

அவன் தூதுவிடத் தொண்டைமானுழைச் சென்ற ஔவைக்கு அவன் படைக்கலக்கொட்டில் காட்ட [2]அவர் பாடியது.

---

1. வேலுக்குப் பீலி அணிதல் : "தொடையமை பீலிப் பொலிந்த க்டிகை, மடையமை திண்சுரை மாக்காழ் வேல்" அகநா. ௧௧௬: 12 - 3.

3. புறநா. ௨௭௨ : 4; "கடியுடை வியனகர்ச் சிறுகுறுந் தொழுவர்" நெடுநல். 49.

5. "அழலவாய்க் கிடந்த வைவேல்" (சீவக. 1865) என்பதற்கு, 'கொல்லனுலையை விரும்பின வேல்' என்று பொருள்கூறி, 'கொற்றுறைக் குற்றில' என்பதனை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்.

8. "கற்றவர் நற்றுணை பாண ரொக்கல்" திருச்சிற். 400.

[1]மு. வாகைத்திணைத்துறைகளுள், 'பெரும்பகை தாங்கும் வேல்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 17, இளம்; ஷை. ஷை. ஷை. 21, ந.

[2]"இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற், குறுதி பயப்பதாந் தூது" என்னும் (690) குறளின்படி தம்முடைய அரசனது மேம்பாட்டைவேற்று வேந்தனிடத்து ஔவையார் இச்செய்யுள்வாயிலாக எடுத்துக்கூறிய வன்மை மிகவும் பாராட்டற்பாலது.



இ - ள்.—இவைதாம், பீலி அணியப்பட்டு மாலையைச் சூட்டப்பட்டு உடலிடம் திரண்ட வலிய காம்பை அழகுபடச் செய்யப்பட்டு நெய்யிடப் பட்டுக் காவலையுடைய அகன்ற கோயிலிடத்தன; அவைதாம், பகைவரைக் குத்துதலாற் கங்கும் நுனியும் முரிந்து கொல்லனது [1]பணிக்களரியாகிய குறிய கொட்டிலிடத்தனவாயின எந்நாளும்; செல்வமுண்டாயின் உணவுகொடுத்து இல்லையாயின் உள்ளதனைப் பலரோடுகூடவுண்ணும் வறியோருடைய சுற்றத்திற்குத் தலைவனாகிய தலைமையையுடைய எம் வேந்தனுடைய கூரிய நுனியையுடைய வேல்.—எ - று.

பீலியணிந்தென்பதுமுதலாகிய வினையெச்சம் நான்கும் வியனகர வென்னும் குறிப்புவினையோடு முடிந்தன; இவற்றைச் செயவெனெச்சமாகத் திரிப்பினும் அமையும்.

'சிதைந்து.........குற்றில' என்பது, [2]பழித்ததுபோலப் புகழ்ந்து கூறப்பட்டது.

இவை வியனகர; வைந்நுதிவேலாகிய அவை கொற்றுறைக்குற்றிலடத்தனவெனக் கூட்டுக.

வினைக்குறிப்பாகலின், ஆக்கம் கொடுக்கப்பட்டது.

இது, கொடைச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் கூறியவாறு. (கூ௫)

[1]பணிக்களரி - வேலைசெய்யுங் கொட்டில்.

[2]தண்டி. சூ. 64.

---

(௯௬) அலர்பூந் தும்பை யம்பகட்டு மார்பிற்
றிரண்டுநீடு தடக்கை யென்னை யிளையோற்
கிரண்டெழுந் தனவாற் பகையே யொன்றே
பூப்போ லுண்கண் பசந்துதோ ணுணுகி
நோக்கிய மகளிர்ப் பிணித்தன் றொன்றே.
விழவின் றாயினும் படுபதம் பிழையாது
மையூன் மொசித்த வொக்கலொடு துறைநீர்க்

1. அம்பகட்டு மார்பு: புறநா. அஅ: 4.

7. மொசித்தல் - உண்டல்; "மொய்கொண் மாக்கண் மொசிக்க வூண் சுரந்தனள்" (மணி. கக: 136); "மொசிவா யுழுவை" பெருங். உ. 17: 24.



கைமான் கொள்ளு மோவென
உறையுண் முனியுமவன் செல்லு மூரே.

திணை - அது; துறை - இயன்மொழி.

அவன்மகன்போகுட்டெழினியை அவர் பாடியது.

இ - ள்.—மலர்ந்த பூவையுடைய தும்பைக்கண்ணியை அணிந்த அழகிய வலியமார்பினையும் திரண்டு நீண்ட பெரிய கையினையுமுடைய என் இறைவன்மகன் இளையோனுக்குப் பகை இரண்டுதோன்றின; அவற்றுள், பூப்போலும் வடிவினையுடைய மையுண்டகண்கள் பசப்பத் தோள் மெலியத் தன்னைப் பார்த்த மகளிரை நெஞ்சு பிணித்ததனால் அவர்தனி கூருதலின் உள்ளதாயது ஒருபகை; அவன் எடுத்துவிட்டுச்சென்றிருக்கும் ஊர், விழாவில்லையாயினும், உண்டாக்கப்படும் உணவு யாவர்க்கும் தப்பாமற் செம்மறியாட்டுத் தசையைத் தின்ற சுற்றத்துடனே யாறுங்குளனு முதலாகியவற்றின் துறைநீரை அவன்யானை முகந்துண்ணுமெனக் கருதி அவ்விடத்துறைதலை வெறுக்கும்; அவ்வெறுத்ததனால் உளதாயது ஒரு பகை; ஆகப் பகை இரண்டு.—எ - று.

பசந்து நுணுகி என்னும் செய்தெனெச்சங்களைச் செயவெனெச்சமாக்கி, அவற்றைப் பிணித்தன்றென்னும் வினையோடு முடிக்க.

ஓகாரம்: அசைநிலை.

இதனால், அவன் இன்பச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் கூறியவாறு.

(கசு)

---

9. 'முனிதல் - வெறுத்தல்; அஃது அருளும் சினமுமின்றி இடைநிகர்த்தாதல்; 'வாழ்க்கை முனிந்தான்' எ - ம், 'உறையுண் முனியுமவன் செல்லு மூரே' எ - ம் சொல்லுபவாதலின்' தொல். மெய்ப்பாடு. சூ. 12, பேர்.

7 - 9. புறநா. கஉ: 9 - 10, கசு: 6, உரு : 2.

(கூஎ) போர்க்குறை இப் புகன்றகழித்தவாள்
உடன்றவர்காப்புடை மதிலழித்தலின்
ஊனுற மூழ்கி யுருவிழந் தனவே
வேலே, குறும்படைந்த வரண்கடந்தவர்
நறுங்கள்ளி னாடுநைத்தலிற்
சுரைதழீஇய விருங்காவொடு



மடைகலங்கி நிலைதிரிந்தனவே
களிறே, எழூஉத்தாங்கிய கதவுமலைத்தவர்
*குழூஉக்களிற்றுக் குறும்புடைத்தலிற்
பரூஉப்பிணிய தொடிகழிந்தனவே
மாவே, பரந்தொருங்கு மலைந்தமறவர்
பொலம்பைந்தார் கெடப்பரிதலிற்
களனுழந் தசைஇய மறுக்குளம் பினவே
அவன்றானும், நிலந்திரைக்குங் கடற்றானைப்
பொலந்தும்பைக் கழற்பாண்டிற்
கணைபொருத துளைத்தோலன்னே
ஆயிடை, உடன்றோ ருய்தல் யாவது தடந்தாட்
பிணிக்கதிர் நெல்லின் செம்மன் மூதூர்
நுமக்குரித் தாகல் வேண்டிற் சென்றவற்

4 - 7. "மடையமை திண்சுரை மாக்காழ்வேல்", "மாக்காழ் நெடு வேல்" (அகநா. கககூ, ரூசுகூ); "காழ்மண் டெஃகம்" மதுரை. 739; மலைபடு. 129.

8 - 9. புறநா. ரூ : 9-11, சு : 10 - 11.

ழகரஉகரவீற்றுச்சொற்கள் நீண்டு உகரம் பெறுதற்கு மேற்கோள்; தொல். உயிர்மயங்கு. சூ.59, ந; இ - வி. சூ. 95, உரை.

8 - 10. "கடிமதிற் கதவம் பாய்தலிற் றொடிபிளந்து, நுதிமுகம் மழுகிய மண்ணை வெண்கோட்டுச், சிறுகண் யானை", "பெருங்கதவு பொருத யானை மருப்பின், இரும்புசெய் தொடியி னேர வாகி", "அடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பிற், பிடிமிடை களிற்றிற் றோன்றும்" அகநா. உசு : 11 - 3, உகூ : 6 - 7. கக : 12 - 3.

11 - 3. புறநா. கூஅ: 5 - 7.

14. "நிலந்திரைத்தானை" (சிலப். உகூ: 187); "நிலந்திரைப் பன்ன தானையோய் நினக்கே" பதிற்.

15. புறத்திணைமாலை பொன்னுற் செய்யப்படல்: புறநா. உஉ : 20.

16. புறநா. சு : 5.

17. "கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சும், செழுங்கூடு கிளைத்த விளந்துணை மகாரின், அலந்தனர் பெருமநின் னுடற்றி யோரே" பதிற். எக : 6 - 8.

18 - 20. புறநா. இக: 6 - 7.

பி - ம். *குரூஉக்களிற்றுக்.

ஒல்வா னல்லன் வெல்போ ரானெனச்
சொல்லவுந் தேறீ ராயின் மெல்லியற்
கழற்கனி வகுத்த துணைச்சில் லோதிக்
குறுந்தொடி மகளிர் தோள்விடல்
இறும்பூ தன்றஃ தறிந்தா டுமினே.

திணையும் துறையும் அவை.
அதியமான் நெடுமானஞ்சியை அவர் பாடியது.

இ - ள்.—போரைச்செய்தற்குப் புடைபெயர்ந்து உலாவி விரும்பி உறைகழித்த வாள்கள்தாம், பகைத்தவரது காவலையுடைய அரணையழித்தலால் அவர்தசையின்கண்ணே உறக்குளித்துக் [1]கதுவாய்போய் வடிவிழந்தன; அவன் வேல்கள்தாம், குறும்பர்சேர்ந்த அரண்களை வென்று அப்பகைவரது நறிய மதுவையுடைய நாட்டையழித்தலாற் சுரையோடுபொருந்திய கரிய காம்புடனே ஆணிகலங்கி நிலைகெட்டன; அவன்களிறுதாம், கணையமரத்தால் தடுக்கப்பட்ட கதவைப்பொருது அப்பகைவரது திரண்ட களிற்றையுடைய அரணையழித்தலாற் பரிய பிணித்தலையுடையவாகிய கிம்புரிகள் கழன்றன; அவன்குதிரைதாம், பரந்துவந்து ஒக்கப்பொருத வீரரது பொன்னாற் செய்யப்பட்ட பசிய மாலையையுடைய மார்பு உருவழிய ஓடுதலாற் போர்க்களத்தின்கட்பொருது வருந்திய குருதியான் மறுப்பட்ட குளம்பையுடையவாயின; அவன்தானும், நிலவகலத்தைத் தன்னுள்ளே

யடக்கும் கடல்போன்ற படையுடனே பொன்னணியன்ற தும்பைக் கண்ணியையுடைய, கழல்வடிவாகவும் கிண்ணிவடிவாகவும் செய்து செறிக்கப்பட்டு அம்புபடுதலால் துளைபட்ட பரிசையையுடையன்; அவ்விடத்து அவனால் வெருளப்பட்டோர் பிழைத்தல் எங்கேயுள்ளது? [2]பெரிய தாளினையும் ஒன்றோடொன்று நெற்றிக்கிடக்கின்ற கதிரினையுமுடைத்தாகிய நெல்லினையுடைய தலைமைபொருந்திய பழையவூர் நுங்கட்கு உரித்தாக வேண்டுவிராயிற் போய் அவனுக்குத் திறைகொடுத்தல் வேண்டும்; கொடீராயின், அதற்கு உடம்படுவானல்லன் வெல்லும் பூசலையுடையானென்று யான்சொல்லவும் தெளியீராயின், நுமக்கு, மெல்லிய தன்மையையும் கழன்மணியினது கனியால் கூறுபடுத்துச்

---

[1]கதுவாய்போய் - வடுமிக்கு (பெருங். ௧. 35 : 166, குறிப்புரை); “அரக்கன் கதுவாய்த் தலைகள்பத் தலறியிடக் கண்டான்”, “கதுவாய்த் தலையிற் பலிநீகொள்ளக் கண்டாலடியார் கவலாரோ” தேவாரம்.

[3]தடவென்பதற்கு வளைவெனப் பொருள்கொண்டு, கதிர்க்கனத்தாலே வளைந்த தாளெனலுமாம்; “முடந்தைநெல்” பதிற். ௨௬ : 3, ௩௨ : 13.



சுருட்டப்பட்ட இனமாகிய சிலவாகிய பனிச்சையையும் குறிய வளையையுமுடைய உரிமைமகளிரது தோளைப் பிரிந்துறைதல் வியப்பன்று; அதனையறிந்து போர்செய்ம்மின்.—எ - று.

அறிந்தாடுமினென்ற கருத்து, அறியிற் போர்செய்தல் அரிதென்பதாம். குறும்பு - சிற்றரண்.

கடற்ருனேயினேயும், பொலந்தும்பையினேயுமுடைய அவன்ருனு மென்க. (கஎ)

---

(கஅ) முனேத்தெவ்வர் முரணவியப்
பொரக்குறுகிய நுதிமருப்பினின்
இனக்களிறு செலக்கண்டவர்
மதிற்கதவ மெழூச்செல்லவும்
பிணனழுங்கக் களனுழக்கிச்
செலவசைஇய மறுக்குளம்பினின்
இனநன்மாச் செலக்கண்டவர்
கவைமுள்ளிற் புழையடைப்பவும்
மார்புறச் சேர்ந்தொல்காத்
தோல்செறிப்பினின் வேல்கண்டவர்
தோல்கழியொடு பிடிசெறிப்பவும்
வாள்வாய்த்த வடுப்பரந்தநின்
மறமைந்தர் மைந்துகண்டவர்
புண்படுகுருதி யம்பொடுக்கவும்
நீயே, ஐயவி புகைப்பவுந் தாங்கா தொய்யென

உறுமுறை மரபிற் புறநின் றுய்க்கும்
கூற்றத் தனையை யாகலிற் போற்றார்
இரங்க விளிவது கொல்லோ வரம்பணைந்

---

5 - 7. புறநா. கஎ : 11 - 3; "எறிபிணை மிடறிய செம்மறுக் குளம்பிற், பரியுடை நன்மா" பதிற். கூரு: 1 - 2.

11. "கழிப்பிணிக் கறைத்தோல்" அகநா. உச : 14, கூஎ : 13.

15. புறநா. உகக : 2.



திறங்குகதி ரலம்வரு கழனிப்
பெரும்புனற் படப்பையவ ரகன்றலை நாடே.

திணை - வாகை; துறை - அரசவாகை; திணை - வஞ்சியும், துறை கொற்றவள்ளையுமாம்.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—போர்முனைக்கட் பகைவரது மாறுபாடு அடங்கப்பொருதலால் தேய்ந்து குறைந்த நுனையுடைத்தாகிய கோட்டையுடைய நினது இனமாகிய யானை போகக்கண்ட பகைவர் தமது மதில்வாயிற் கதவங்களும் கணையமரங்களும் புதியனவாக இடுதற்குப் பழையன போக்கவும், பட்டோரது பிணம் உருவழியப் போர்க்களத்தை உழக்கிச்செல்லுதலால் வருந்திய குருதிக்கறைபொருந்திய குளம்பையுடைய நினது இனமாகிய நல்ல குதிரை போகக்கண்ட அப்பகைவர்தாம் கவைத்தவேலமுள்ளாற்

காட்டுவாயில்களை அடைப்பவும், நின்பகைவரது மார்பின்கண் எறிந்த வழி ஆண்டுத்தைத்து நில்லாது உருவிப்போன [1]உறையின்கட் செறித்த லில்லாத நின்வேலைக்கண்ட பகைவர் தமது கிடுகைக் காம்புடனே கைந்நீட்டிச் செறிக்கவும், வாள்வாய்க்கத் தைத்த வடுப்பரந்த நின்னுடையமறத்தையுடைய வீரரது வலியைக்கண்ட அப்பகைவர் புண்பட்ட குருதியைய்டைய அம்பைத் தூணியகத்துஅடக்கிக் கொள்ளவும், நீதான் [2]வெண்சிறுகடுகைக் காவலாகப் புகைப்பவும் தரியாது விரைய வந்து பொருந்துதன் முறைமையையுடைய இயல்பிற் புறத்தேநின்று உயிரைக் கொடுபோதும் கூற்றத்தையொப்பை; ஆதலாற் பகைவரிரங்கக் கெடுவது கொல்லோ! [3]வரம்பைச்சேர்ந்து விளையும் நெற்கதிர் சுழலும் கழனியொடு மிக்க நீர்ப்பக்கத்தையுடைய அவரது அகன்ற இடத்தையுடைய நாடு.— எ - று.

செல்லவுமென்பது முதலாய செயவெனெச்சங்கள் கூற்றத்தனையை யென்னும் வினைக்குறிப்பொடு முடிந்தன.

நீ கூற்றத்தனையையாகலிற் போற்றார்நாடு அவரிரங்க விளிவது கொல்லெனக்கூட்டுக.

கொல்லும் ஓவும் அசைநிலை. (௧அ)

---

19. புறநா. ௪௯ : 5; "இறங்குகதிர்க் கழனியும்" சிலப். ௧௪ : 2.

[1]"உறைகழிப் பறியா வேலோ னூரே" புறநா. ௬௨௬ : 7.

[2]"ஐயவி சிந்தி நறைபுகைத் தாய்மலர்தூஉய் . . . . யாங்காப்ப" பு - வெ. 79.

[3]"அங்க ணகல்வய லார்பெயற் கலித்த, வண்டோட்டு நெல்லின் வருகதிர் வணங்க" நெடுநல். 21 - 2.

(கூகூ) அமரர்ப் *பேணியு மாவுதி யருத்தியும்
அரும்பெறன் மரபிற் கரும்பிவட் டந்தும்
நீரக விருக்கை யாழி சூட்டிய
தொன்னிலை மரபினின் முன்னோர் போல
ஈகையங் கழற்கா லிரும்பனம் புடையற்
பூவார் காவிற் புனிற்றுப்புலா னெடுவேல்
எழுபொறி நாட்டத் தெழாஅத் தாயம்
வழுவின் றெய்திய மமையாய் செருவேட்
டிமிழ்குரன் முரசி னெழுவரொடு முரணிச்
சென்றமர் கடந்துநின் னாற்ற றோற்றிய
அன்றும் பாடுநர்க் கரியை யின்றும்
பரணன் பாடினன் மற்கொன் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறிநின்
அரணடு திகிரி யேந்திய தோளே.

திணையும் துறையும் அவை.

அவன் கோவலூரெறிந்தானை அவர் பாடியது.

இ - ள்.—தேவர்களைப் போற்றி வழிபட்டும் அவர்களுக்கு வேள்விக்கண் ஆவுதியை அருந்துவித்தும் பெறுதற்கரிய முறைமையையுடைய

1. ழ. பட்டின. 200; ஞானமிர்தம். கஎ.

பேணென்னும் உரிச்சொல் பெட்பின்பொருளில் வருதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 42, தெய்வச்.; சே; ஷை. ஷை. ஷை. 40, ந; இ. வி. சூ. 281, உரை.

2. இவன் முன்னோர் விண்ணுலகத்திலிருந்து இவ்வுலகத்திற்குக் கரும்பைக்கொண்டு வந்தனரென்பது, புறநா. கூகஉ : 19 - 21-ஆம் அடிகளாலும் அறியப்படும்.

5. ஈகை - பொன்; புறநா. கூ௧கூ : 3 ; "மாயிரும் புடையன் மாக் கழல் புனைந்து", "இரும்பனம் புடைய லீகை வான்கழல்", "இரும்பனம் புடையலொடு வான்கழல் சிவப்ப", "புடையலங் கழற்கால்" (பதிற். கஎ: 8, சஉ: 1, ௬எ : 2, அ0 : 7); "புடையலங்கழற்கால்" அகநா. உகூ௧ : 13.

7. எழுபொறி - எழிலாஞ்சனை; இவை எழரசர்க்குரியன; இது, "கேழன் மேழிகலை யாளி வீணைசிலை கெண்டை யென்றினைய பல்கொடி" (கலிங்க. கடவுள். 18) என்பதனாலும் ஒருவாறு விளங்குகின்றது.

பி - ம். *பேணியாகுதி.



கரும்பை விண்ணுலகத்தினின்று இவ்வுலகத்தின்கட் கொடுவந்துதந்தும் கடலுக்குட்பட்ட நிலத்தின்கண்ணே சக்கரத்தை நடாத்திய பழைய நிலைமைபொருந்திய முறைமையையுடைய நின்குடியிற் பழையோரை யொப்பப் பொன்னாற் செய்யப்பட்ட வீரக்கழல் புனைந்த காலினையும்,

பெரிய பனந்தோடாகிய தாரினையும் பூநிறைந்த காவினையும் நாடோறும் புதிய ஈரம்புலராத புலாலையுடைய நெடிய வேலினையுமுடைய எழிலாஞ் சனையும் நாடுதலையுடைய ஒருநாளும் நீங்காத அரசவுரிமையைத் தப்பின்றாகப்பெற்றும் அமையாயாய்ப் போரைவிரும்பி ஒலிக்கும் ஓசைபொருந்திய முரசினையுடைய எழரசரோடு பகைத்து மேற்சென்று போரின்கண் வென்று நின்வலியைத்தோற்றுவித்த அற்றைநாளும் பாடுவார்க்குப் பாடஅரியை; இற்றைநாளும் பாணன்பாடினன், நீ மாறுபாடு மிக்க கோவலூரை அழித்துவென்று பிறவும் அரண்களை அழிக்கின்ற ஆழியைத் தாங்கிய நினதுதோளை.—எ - று.

இன்றும் பாணன்பாடினனென்றது, [1] அவனும் தன்பெருமையாற் பாடினன்; பிறராற் பாடப்படுதலரிதென்றதாம்.

நின் ஆற்றல் தோற்றிய அன்றும் பாடுநர்க்கு அரியை; திகிரியேந்திய தோளை இன்றும் பாணன் பாடினனெனக் கூட்டுக.

கழற்காலையும் புடையலையும் காவையும் வேலையுமுடைய நின்முன்னோர் போலத் தாயமெய்தியும் அமையாயென மாறிக்கூட்டுக.

நாடுதல் - ஆய்தல்.

'மூவரொடு முரணி' என்றும், 'முரணுடுதிகிரி' என்றும் பாடம்.

கொல்: ஐயம். மன்: அசைநிலை.

பூவார் கா - வானோர் இவன் முன்னோர்க்கு வரங்கொடுத்தற்கு வந்திருந்ததொரு கா.

இவனுக்குப் பனந்தார்கூறியது, *சேரமாற்கு உறவாதலின்.

எழுபொறிநாட்டமென்பதற்கு எழரசர்நாடுங்கூடி ஒருநாடாய் அவ்வேழரசர் பொறியும் கூடிய பொறியோடு கூடிநின்று நன்மையும் தீமையும் ஆராய்தலெனினுமமையும். (௯௯)

[1]இங்கே பரணரைப் பாராட்டிக் கூறியதுபோல, புறநா. ருஉ : 11 - 3-ஆம் அடிகளிற் கபிலரைப் பாராட்டிக் கூறியிருத்தல் இங்கே கருதற்பாலது.

ரு - ம். *உதியவேந்தாதலின்.



(க00) கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்
வட்கர் போகிய வளரிளம் போந்தை
உச்சிக் கொண்ட வூசி வெண்டோடு
வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்
சுரியிரும் பித்தை பொலியச் சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னு மாறாது சினனே யன்றோ

1. கழல்: "ஆடவர் கொடைவீ ரத்தா லணிவது கழலென் றாமே" சூடாமணி. எ : 26.

காலன புனைகழல்: "வில்லோன் காலன கழலே" குறுந். எ.

2. மிக்க கோபமுற்றோர்க்கு உடம்பில்வேர்வை தோன்றுதல் இயல்பு: "வெயர்பொடிப்பச் சினங்கடைஇ" (பு - வெ. 139.) உடம்பு முழுதும் புண்படப் போர்செய்தல் வீரர்க்கு இயல்பாதலின், இவனுக்கு

மிடற்றுப்புண் கூறப்பட்டது; (புறநா. கஅ0 : 5 - 6); "விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள், வைக்குந்தன் னாளை யெடுத்து" (குறள், 776); "சீறுஞ் செருவிற் றிருமார்பிற் றெண்ணூறும், ஆறும் படுதழும்பி னாகத்தோன்" (குலோத்துங்கசோழனுலா) என்பவற்றிலும் இங்ஙனங் கூறப்பட்டிருத்தல் காண்க.

3 - 4. "வட்கர் போகிய வான்பனந் தோட்டுடன், புட்கைச் சேனை பொலியச் சூட்டி...வஞ்சிசூடுதும்" சிலப். உசு : 146 - 9.

6. மு. பொருந. 160. 5 - 6. புறநா. உகூசு : 2 - 4.

7 - 8. "கதழ் வாய் வேழம், இருங்கேழ் வயப்புலி வெரீஇ யயலது, கருங்கால் வேங்கை யூறுபட மறலிப், பெருஞ்சினந் தணியுங் குன்ற நாட", "வயக்களிறு பொருத வாள்வரி வேங்கை, கன்முழைச் சிலம்பிற் குழுமும்" (நற். உகஎ : 2 - 5, உசுசு); "கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு, நெடுவரை மருங்கிற் றுஞ்சும் யானை" (கலி. சகூ : 1 - 2); "புலியொடு பொருது சினஞ்சிறந்து வலியோ, டிரவுக்களி றொதுங்கிய மருங்கு", "குயவரி யிரும்போத்துப் பொருத புண்கூர்ந், துயங்குபிடி தழீஇய மதனழி யானை" (அகநா. உகூக, ஙகூஅ); "குரூஉப்புலி பொருத புண்கூர் யானை" (மலைபடு. 517); சிலப். உசு : 29.

'வரிவயம் பொருத......சினனே : என்பதனுள் அலைபற்றிச் சினம் பிறந்தது; என்னை? புலியான் அலைக்கப்பட்ட யானை பொருது போந்தும் அவ்வலைப்புண்டலை நினைந்து சினங்கொள்ளாநின்றதென்றமையின்' (தொல். மெய்ப். சூ. 10, பேர்); இ - வி. சூ. 578, மேற்.



உய்ந்தன ரல்லரிவ னுடற்றி யோரே
செறுவர் நோக்கிய கண்டன்

சிறுவனை நோக்கியுஞ் சிவப்பா னவே.

* திணையும் துறையும் அவை.

அதியமான்தவமகன்பிறந்தவனைக் கண்டானை அவர் பாடியது.

இ - ள்.—கையின்கண்ணது வேலே; காலின்கண்ண அணிந்த வீரக் கழல்; உடம்பின்கண்ணது வேர்ப்பு; மிடற்றின்கண்ணது ஈரம்புலராத பசிய புண்; பகைவர் தொலைதற்கு ஏதுவாகிய வளரும் இளைய பனையினது உச்சிக்கண்ணே வாங்கிக் கொள்ளப்பட்ட வெளித்தன்மையைப்பொருந்திய வெளியதோட்டையும் வெட்சியினது பெரிய மலரையும் வேங்கைப் பூவுடனே விரவிச் சுருண்ட கரியமயிர் பொலிவுபெறச்சூடிப் புலியொடு பொருத வலிய யானையையொப்ப இன்னமும் நீங்காது, சினம்; ஆதலால், ஐயோ ! பிழைத்தாரல்லர், இவனைச்சினப்பித்தவர்கள் ; பகைவரை வெகுண்டு பார்த்த கண் தன்னுடைய புதல்வனைப்பார்த்தும் சிவப்பமையா வாயின.—எ - று.

காலனபுனை கழலென்பது, வீரத்திற்கும் வென்றிக்கும் கட்டின ; போர்தோறும் வென்றுகட்டினவெனவுமாம்.

உம்மை: சிறப்பு.

தோட்டையும் மலரையும் வேங்கையொடு விரைஇச் சூடிச்செறுவர் நோக்கிய கண் சிறுவனைநோக்கியும் சிவப்பான; ஆதலால், அன்னோ ! இவனுடற்றியோர் உய்ந்தனரல்லரெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

வட்காரென்பது, வட்கரெனக்குறுகிநின்றது; வட்கர் - குற்ற மெனினும் அமையும். (௧00)

---

9. புறநா. ௬௧ ; 16 - 7.

10. புதல்வன் பிறந்தவுடன் அவன் முகத்தைத் தந்தை பார்த்து மகிழவேண்டுமென்பது தருமநூல் விதி; இதனை, 'சிறப்பாவன பிறந்த புதல்வன் முகங்காண்டலும்' (தொல். கற்பு. சூ. ௫, ந.); "மாமுனிதன் னொடு மன்னர் மன்னவ, னேமுறப் புனல்படீஇ வித்தொ டின்பொருள், தாமுற வழங்கிவெண் சங்க மார்ப்புறக், கோமகார் திருமுகங் குறுகி நோக்கினான்" (கம்ப. திருவவதார. 112) என்பவற்றாலும் அறிக.

பி - ம். * திணை - வாகை; துறை - அரசவாகை.



(௧௦௧) ஒருநாட் செல்லல மிருநாட் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாட் போன்ற விருப்பினன்‡ மாதோ
அணிபூ ணணிந்த யானை யியறேர்
அதியமான், பரிசில் பெறூஉங் காலம்
நீட்டினு நீட்டா தாயினும் யானைதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுவது பொய்யா காதே
அருந்தே மாந்த நெஞ்சம்!
வருந்த வேண்டா † வாழ்கவன் றாளே.

1 - 2. "பன்று ணிற்பினுஞ் சேர்ந்தனிர் செலினும்" (மலைபடு. 452); "ஒருநாள் வாரல னிருநாள் வாரலன், பன்னாள்வந்து" குறுந். கஎசு : 1 - 2.

1 - 3. புறநா. ௯அ : 28 - ஆம் அடிக்குறிப்பும், "தலைநா ளன்ன பேணலன்" (நற். ௩௨௨), "பெருவளை யடுக்கத்துக் கிழவ னொன்றும், அன்றை யன்ன நட்பினன்" (குறுந். ௩அ௫), "தண்டாக் காதலுந் தலைநாட் போன்மே" (அகநா. ௩௩௨), "அன்றை யன்ன விருப்பொடு" (குறிஞ்சி. 238), "தலைநா ளன்ன புகலொடு வழிசிறந்து, பலநாள் நிற்பினும்" (மலைபடு. 565 - 6); "பன்னாளுஞ் சென்றக்காற் பண்பிலார் தம்முழை, யென்னானும் வேண்டுப வென்றிகழ்ப - வென்னானும், வேண்டினு நன்றுமற் றென்று விழுமியோர், காண்டொறுஞ் செய்வர் சிறப்பு" (நாலடி. 159), "தலைநாள் விழைவொடு" (வி. பா. குருகுல. 79) என்பனவும் ஈண்டு அறியற்பாலன.

4. அணிபூ ணணிந்த யானை : புறநா. கடுக : 3 - 4, கடு௩ : 2.

6 - 7. "தேம்படு கவுள சிறுகண் யானை, ஓங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந் தியாத்த, வயல்விளை யின்குள குண்ணாது நுதலுடைத், தயினுனை மருப்பிற்றங் கையிடைக் கொண்டென" முல்லைப். 31 - 4.

9. ஏமாந்த - ஆசைப்பட்ட; (புறநா. கக௮ : 8; பொருந. 98); "இரப்போர்க் காணு தேமாந் திருப்ப" மணி. கச : 50.

10. தாள்வாழ்கவென்றல் மரபு; புறநா. எ0 : 19, க0௩: 12, கஎக : 15.

பி - ம். * தலைநாள் விருப்பினன்னபேணலன். † வாழ்கவ வன்றாளே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசில்கடாநிலை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—யாம் ஒருநாட்செல்லேம்; இரண்டுநாட்செல்லேம்; பல நாளும் பயின்று பலரோடுகூடச்செல்லினும் முதற்சென்றநாள்போன்ற விருப்பத்தையுடையன், அணிகலம் அணிந்த யானையையும் இயன்ற தேரையுமுடைய அதியமான்; பரிசில்பெறுங்காலை நீட்டிப்பினும் நீட்டியா தொழியினும், யானை தனது கொம்பினதிடையே வைக்கப்பட்ட கவளம் போல நமது கையகத்தது, அப்பரிசில்; அது தப்பாது; உண்ண ஆசைப் பட்ட நெஞ்சே! நீ பரிசிற்கு வருந்தவேண்டா; அவன்றாள் வாழ்வதாக.—எ - று.

அதியமான்விருப்பினனென முன்னே கூட்டுக.

கோட்டிடைவைத்த கவளம்போலவென்றதற்கு யானைவாயிற் கொண்டு நுகரும் அளவும் கோட்டிடைவைத்த கவளம் போலப் பரிசில் கையகத்தது வென்க; அன்றிக் களிறுகோட்டிடைவைத்த கவளத்தைச் சிறிது தாழ்த்ததாயினும் அஃது அதற்குத் தப்பாதவாறுபோலப் பரிசில் சிறிது தாழ்ப்பினும் நமக்குத் தருதல் தப்பாதென்பதாக்கி உரைப்பினும் அமையும்.

தாளை முயற்சியென்பாரும் உளர்.

அருந்தவென்பது, அருந்தெனக் கடைக்குறைக்கப்பட்டது; அருந் தென முன்னிலையேவலாக்கி உரைப்பினும் அமையும். (க0க)

---

(க0௨) எருதே யிளைய நுகமுண ராவே
சகடம் பண்டம் பெரிதுபெய் தன்றே
அவலிழியினு மிசையேறினும்
அவண தறியுநர் யாரென வுமணர்
கீழ்மரத் தியாத்த சேமவச் சன்ன
இசைவிளங்கு கவிகை நெடியோய் திங்கள்

5. "கீழ்மரத் தியாத்த சேமவச்சன்னவென்றாற் போலும் உவமப் பொருள் இக்காலத்திற்கு ஆகாதாயிற்று' தொல். செய். சூ. 80, ந.

6. கவிகை: புறநா. ௯௪ : 7-ஆம் அடிக்குறிப்பையும், "தேம்பாய் கண்ணித் தேர்வீசு கவிகை" (மலைபடு. 399) என்பதன் பொருளையும் பார்க்க.



நாணிறை மதியத் தனையையிருள்
யாவண தோநின் னிழல்வாழ் வோர்க்கே.

திணை - அது; துறை - இயன்மொழி.
அவன்மகன் பொதுட்டேழினியை அவர் பாடியது.
இ - ள்.—எருதுகள் இளையதாம் நுகம்பூண்டலை, *யறியா; சகடங்

தான் பண்டம் பெரிதாக இடப்பட்டது; ஆதலால், அது பள்ளத்தே இழியினும் மேட்டிலே ஏறினும் அவ்விடத்துவரும் இடையூறு அறிவார் யார்தானென்று நினைந்து உப்புவாணிகர் அச்சுமரத்தின்கண்ணே அடுத்துக் கட்டப்பட்ட சேமவச்சுப்போன்ற புகழ்விளங்கிய இடக்கவிந்த கையையுடைய உயர்ந்தோய்! நீ திங்களாகிய நாள்நிறைந்தமதியத்தை யொப்பை; ஆதலின், நின்நிழற்கண்வாழுமவர்கட்குத் துன்பமாகிய இருள் எவ்விடத்துள்ளது?—எ - று.

திங்கள் நாணிறைமதியத்தனையையென்றது, [1]அறிவும் நிறைவும் அருளும் முதலாகிய குணங்களால் அமைந்தாயென்றவாறும்.

சேமவச்சன்னவென்றது, ஏற்றிழிவுடையவழி அச்சுமுறிந்துழிச் சேமவச்சு உதவினாற்போல நீ காக்கின்ற நாட்டிற்கு ஓரிடையூறு உற்றால் அதநீக்கிக் காத்தற்குரியை யென்பதாம்.

'எருதே யிளைய நுகமுண ராவே, சகடம் பண்டம் பெரிது பெய்தன்றே' என்பது [2]உவமங்கருதாது சகடத்திற்குவரும் ஏதங்குறித்து உமணர் சேமவச்சு யாத்தற்குக் காரணமாய் நின்றது. (கoஉ)

---

6 - 7. "பன்மீ னாப்பட் டிங்கள் போலப், பூத்தசுற்றமொடு பொலிந்து தோன்றலை" (பதிற். கo); "பன்மீ னடுவட் பான்மதி போல, இன் னகை யாயமோ டிருந்தோற் குறுகி" (சிறுபாண். 219- 20); "பன்மீ னடுவட் டிங்கள் போலவும், பூத்த சுற்றமொடு பொலிந்து" (மதுரை. 769-70); "பூண்மின்னு மார்பன் பொலிந்தாங் கிருந்தான் விசும்பிற், கோண்மின்னு மீன்சூழ் குளிர்மாமதித் தோற்றமொத்தே" சீவக. 882.

[1]முருகு. 98; மதுரை. 769, ந.

[2]"உவமப் பொருளி னுற்ற துணரும், தெளிமருங் கிலவே திறத்திய லான" (தொல். உவம. சூ. 20) என்பதையும், 'இனி, உவமத்தின் உற்றது உணர்க வென்றது 'பொருள்' என்றதனாற் பொருட்கு அடுத்த அடையும் உவம அடைக்கேற்றது உணரப்படாதன களையப்படுமென்பது. அது, "பாசடை நிவந்த கணைக்கா னெய்தல், இனமீ னிருங்கழி யோத மல்குதொறும், கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்" (நற்றி. க) என்ற வழி, பாசடை நிவந்த, கணைக்காலென நெய்தலாகிய பொருட்குவந்த அடையிரண்டும் கண்ணெனப்பட்ட உவமத்திற்கு ஏற்ப வாராமையான் அவை தெளிமருங்கிலவென்று களைந்து கொள்க' என்னும் பேராசிரியர் உரையையும் பார்க்க.

பி - ம். *மதியா.



(கoங) ஒருதலைப் பதலை தூங்க வொருதலைத்
தூம்பகச் சிறுமுழாத் தூங்கத் தூக்கிக்
கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்
சுரன்முத லிருந்த சில்வளை விறலி
செல்வை யாயிற் சேணோ னல்லன்
முனைசுட வெழுந்த மங்குன் மாப்புகை
மலைசூழ் மஞ்சின் மழகளி றணியும்
பகைப்புலத் தோனே பல்வே லஞ்சி
பொழுதிடைப் படாஅப் புலரா மண்டை
மெழுகுமெல் லடையிற் கொழுநிணம் *பெருப்ப
அலத்தற் காலை யாயினும்
புரத்தல் வல்லன் வாழ்கவன் றாளே.

திணை - அது ; துறை - விறலியாற்றுப்படை.

அதியமான் நெடுமானஞ்சியை அவர் பாடியது.

இ - ள்.—காவினது ஒருதலைக்கண்ணே பதலை தூங்க ஒருதலைக் கண்ணே துளையை அகத்தேயுடைய சிறிய முழாவைத் தூங்கும்பரிசு தூக்கி இடுவோரின்மையின் [1]ஏலாது கவிழ்ந்த என்மண்டையை இட்டு மலர்த்தவல்லார் யாரெனச் சொல்லிச் சுரத்திடத்தேயிருந்த சிலவாகிய

---

1 - 2. புறநா. கருக : 1, கடுஉ : 14 - 8; "நரம்பின் தீந்தொடை பழுனிய, வணரமை நல்யா ழிளையர் பொறுப்பப், பண்ணமை முழவும் பதலையும் பிறவும், கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கிக், காவிற் றகைத்த துறைகூடு கலப்பையர்" (பதிற். சக: 1 - 5); "திண்வார் விசித்த முழவொ டாகுளி, நுண்ணுருக் குற்ற விளங்கடர்ப் பாண்டில், மின்னிரும் பீலி யணிதழைக் கோட்டொடு,......நொடிதரு பாணிய பதலையும்...... நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்" மலைபடு. 3 - 13.

3. மண்டை - ஒருவகை உண்கலம்; வாயுமாம்; புறநா. கசுடு : 2, கஉடு : 3, கஎக : 2 - 3; "பிழற்பெய் மண்டை" மணி. சு : 92.

4. சில்வளைவிறலி : புறநா. சுo : 5, அடிக்.

6. புறநா. சு : 22, உரு : 9 - 10, கூஎ : 7.

10. "நல்வரி யிறாஅல் புரையு மெல்லடை" (மதுரை. 624); "தேனி றாலன தீஞ்சுவை யின்னடை" சீவக. 2674.

9 - 10. புறநா. கஉடு : 1 - 3, கூஅசு : 5.

12. புறநா. எo : 19, கoக : 10. அடிக்.

[1]புறநா. கஎக : 2 - 3.

பி - ம். *பரிப்ப வறத்தற் காலை.

29

வளையையுடைய விறலி ! நீ அவன்பாற்போவையாயின் அவன் சேய்மைக் கண்ணனல்லன்; முனைப்புலத்தைச் சுடுதலான் எழுந்த இருட்சியை யுடைய கரியபுகை மலையைச்சூழும் முகில்போல இளங்களிற்றைச் சூழும் பகைவர்தேயத்திருந்தான், பல வேற்படையையுடைய அதியமான்; ஒரு பொழுதும் ஓயாமல் உண்ணவும் தின்னவும் படுதலான் ஈரம்புலராத மண்டை மெழுகான் இயன்ற மெல்லிய அடைபோலக் கொழுத்தநிணம் மிக உலகம் வறுமையுறுதலையுடைய காலமாயினும் பாதுகாத்தலைவல்லன்; அவன்ருள் வாழ்க.—எ - று.

பதலையென்பது, ஒருதலைமுகமுடையதொரு தோற்கருவி.

பகைப்புலத்தோனென்ற கருத்து : [1]பகைவர்பால் திறைகொண்ட பொருளுடையனாதலின், நீ வேண்டியவெல்லாந் தருதல் அவனுக்கு எளி தென்பதாம்.

உம்மை: சிறப்பு.

சேணோனல்லனென்பதற்குப் பரிசில் நீட்டிப்பானல்லனென்று உரைப்பினும் அமையும். (க0ரு)

---

[1]புறநா. உஉ : 26 - 8.

---

(கOச) போற்றுமின் மறவீர் சாற்றுது நும்மை
ஊர்க்குறு மாக்க ளாடக் கலங்கும்
தாட்படு சின்னீர்க் களிறட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கராஅத் தன்ன *வென்னை
நுண்பல் கரும நினையா

இளையனென் றிகழிற் பெறலரி தாடே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—நீங்கள் பாதுகாமின், மறவீர்! நுமக்கு நாங்கள் அறிவிப்பேம்; ஊரின்கண் இளம்புதல்வர் ஆடக் கலங்குகின்ற காலளவான

---

2. ஊர்க்குறுமாக்கள்: புறநா. கூச : 1, அடிக். கலி. அஉ : 9.

4. என்னை: புறநா. எஅ : 2, அடிக்.

3 - 4. "உரவுக்களிறு கரக்கு மிடங்க ரொடுங்கி" மலைபடு. 211.

1 - 4. "என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை, முன்னின்று கன்னின் றவர்" குறள், 771.

பி - ம். *வெர்தை.



அளவிற்பட்ட நீருள்ளே [1]யானையைக் கொன்றுவீழ்க்கும் இழுத்தலையுடைய முதலையை யொக்கும் என் இறைவனது நண்ணிய பல கருமத்தையும் நினையாதே அவனை இளையனென்று மதியாதிருப்பின் நுங்களுக்கு வென்றிபெறுதல் அரிது.—எ - று.

மறவீர்! நுமக்குச் சாற்றுதும்; என்னை இளையனென்று இகழின் வென்றிபெறுதல் அரிது; ஆதலால், நீர் போற்றுமினெனக் கூட்டுக.

மீப்புடையென்றோதி, மிகுதியையுடையவென்று உரைப்பினும் அமையும். (௱௪)

---

[1]குறள், 495.

(௧௦௫) சேயிழை பெறுகுவை வாணுதல் விறலி
தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை
வண்டுபடு புதுமலர்த் தண்சிதர் கலாவப்
பெய்யினும் பெய்யா தாயினு மருவி
கொள்ளுழு வியன்புலத் துழைகா லாக
மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரும்
நீரினு மினிய சாயற்
பாரி வேள்பாற் பாடினை செலினே.[1]

---

1. விறலி இழைபெறுதல்: புறநா. ௧௧ : 11 - 7, அடிக்.; "செல்லா யோதில் சில்வளை விறலி, மலர்ந்த வேங்கையின் வயங்கிழை யணிந்து, மெல்லியன் மகளி ரெழினலஞ் சிறப்ப" பதிற். ௪௦ : 21 - 3.

2. தடவு - தாழியுமாம்; "தாழியுண் மலர்ந்த தண்செங் குவளை" (பெருங். ௩. 5 : 87); "தாழிவாய்க் குவளை", "தாழிவாய் மறைக்குந் தண்ணென் றடம்பெருங் குவளைக் கண்ணார்" (சீவக. 833, 2974); "தாழி வாய்க் குவளையும்" (சூளா. நகரச். 9); "தாழிநறுங் குவளையந்தார்த் தருமன்" வி. பா. வசந்தகால. 18.

6. மால்பு: "கலைகை யற்ற காண்பி னெடுவரை, நிலைபெய் திட்ட மால்புநெறி யாக" (மலைபடு. 315 - 6); "சுவிளை யாட நறவிளை வோர்ந்தெமர் மால்பியற்றும், வேய்விளை யாடும் வெற்பா" சிற். 133.

6 - 7. "பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்" (குறுந். ௧௯௬); "பாரி தீம்பெரும் பைஞ்சுனை பூத்த, தேங்கமழ் புதுமலா" அகநா. ௭௮.

7 - 8. "வானி நீரினுந் தீந்தண் சாயலன்" (பதிற். ௮௬); "தன்மலை, நீரினுஞ் சாய லுடையன்", "வேனிற் புனலன்ன நந்தை" (கலி. ௪௨, ௮௪); "புனலஞ் சாயல்......னன்னன்" மலைபடு. 61 - 4.

[1] மு. புறநா. ௧௦௧ : 16 - 8, ௧௧௧, ௧௨௮ : 5 - 7, ௧௫௮ : 1 - 4, ௩௩௭ : 6 - 7.

விறலியாற்றுப்படைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ௬.

திணை - பாடாண்டிணை; துறை - விறலியாற்றுப்படை.
வேள்பாரியைக் கபிலர் பாடியது.

இ - ள்.—சிவந்த அணியைப்பெறுகுவை, ஒளிதங்கிய நுதலினை யுடைய விறலி! பெரிய இடத்தையுடைய [1]சுனையின்கண் தழைத்த கரிய இதழையுடைய நீலத்தினது வண்டுமொய்க்கும் புதியமலரின்கட் குளிர்ந்த துளி கலக்க மழைபெய்யினும் பெய்யாதொழியினும் அருவி கொள்ளிற்கு உழுத பரந்தநிலத்திடை நீரோடுகாலாக ஓடக் [2]கண்ணேணியையுடைய நெடியமலையினது சிகரந்தோறும் இழிதரும் நீரினும் மிக இனிய மென்மையையுடைய வேள் [3]பாரிபக்கலே நீ பாடிச்செல்லின்.—எ - று.

விறலி! பாரிவேள்பாற் பாடினை செலின், சேயிழை பெறுகுவை யெனக் கூட்டுக.

அவன்மலையாதலால், எக்காலமும் அருவி கோடுதோறிழிதருமெனப் பட்டது.

புதுமலர்த் தண்சிதர் கலாவப்பெய்யினும் பெய்யாதாயினும் உழை காலாகக் கோடுதோறிழிதரும் அருவிநீரினும் இனியவென இயையும்.

எனவே அவன் குணங்கள் தோன்றிநின்றன. (௧0௫)

---

[1]புறநா. ௧௧௬ : 1, அடிக்.

[2]கண்ணேணி - கணுக்களிலேயே அடிவைத்து ஏறிச் செல்லும்படி அமைத்துள்ள மூங்கில்.

[3]பாரியின்பெருமையை, "கொடுக்கிலா தானைப் பாரியே யென்று கூறினுங்கொடுப் பாரிலை" (தே. சுந்தர.), "களியானை செம்பொன், றரும் பாரி" (தஞ்சை. 37), "பன்னக மாமணி பாவலர்க் கீந்திடும் பாரி" (கரவைவேலன் கோவை, 113) என்பவற்றாலும் உணர்க.

---

(க0சா) நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்
புல்லிலை யெருக்க மாயினு முடையவை
கடவுள் *பேணே மென்னா வாங்கு
மடவர் மெல்லியர் செல்லினும்
கடவன் பாரி கைவண் மையே.

திணை - அது; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

---

2. "புல்லெருக்கங் கண்ணி" (தொல். களவி. சூ. 56, சே. "ஒல்லேம்"); "துன்னியவூ ரினும்விரைசார்ந் தறியாத புல்லெருக்குஞ் சூடிக் கொண்டாய்" வாட்போக்கிக்கலம்பகம், 99.

பி - ம். *வேண்டே மென்னா.



இ - ள்.—நல்லனவென்றும் தீயனவென்றும் சொல்லப்படுவன வாகும் பூவாதலால் அவை இரண்டினும்வைத்து எண்ணப்படாத குவிந்த பூங்கொத்தினையும் புல்லிய இலையையுமுடைய எருக்கம்பூவாயினும் ஒருவ

னுடையனவற்றைத் தெய்வங்கள் விரும்பேமென்று; அதுபோல, யாதும் அறிவில்லாதாரும் புல்லிய குணங்களையுடையாரும் செல்லினும் பாரி கைவண்மை செய்தலைக் கடப்பாடாகவுடையன்.—எ - று.

'குவியிணர்ப் புல்லிலை யெருக்கம்' என்றது, முதற்கேற்ற அடையடுத்த ஆகுபெயர்.

உம்மை: இழிவுசிறப்பு.

மெல்லியரென்பதற்கு வறுமையுற்றாரென்றும் உரைப்பர். (க0சு)

---

(க0எ) பாரி பாரி யென்றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே[1].

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

---

[1]மு. பாடாண்டிணைத்துறைகளுள், கொடுப்போரேத்தற்கு (தொல். புறத்திணை. சூ. 29, இளம்; ௯௯௯.35, ந.) மேற்கோள்; 'உவமிக்கப் படும் பொருளொடு உவமை தோன்றவருதலேயன்றி உவமையது தன்மை கூறலும் உவமையாதற்குரித்துப் பயனிலை பொருந்திய வழக்கின்கண் என்றவாறு; எனவே, இவ்வாறுவருவது பயனிலையுவமைக்கணென்று கொள்க; பாரிபாரி......புரப்பதுவே : இது மாரிபோலும் பாரியது

கொடையென்னாது இவ்வாறு கூறும் பொருண்மையும் உவமமாம் எ - று' (தொல். உவம.சூ. 36, இளம்.); "உவமத் தன்மையும்" என்னும் (ஷை. ஷை. ஷை. 34) சூத்திரத்தில், 'அது 'பாரிபாரி......புலவர்' என்னும் பாட்டினுள் உலகளித்தற்கு மாரியுமுண்டெனப் பாரியை உவமித்துச் சிறப்பித்துக் கூறுவான் மாரியைச் சிறப்பித்துப் பாட்டுடைத் தலைவனாகிய பாரியை உயர்த்துக் கூறுதான்போல இயல்பிறேன் உவமை கூறினனும்; இது மாரிக்கும் பாரிக்கும் ஓரிழிவில்லை என்னுந் தன்மைபடக் கூறவே அவன் உயர்வு கூறுதலிற் பயனில்லை புரிந்த வழக்கெனப்படுமென்பது' என்றனர் பேராசிரியர்; விலக்குவமையின்பாற்படுமென்பர் தண்டியுரையாசிரியரும் இலக்கணவிளக்க வுரையாசிரியரும் (தண்டி. சூ. 38; இ. வி. சூ. 645,



இ - ள்.—பாரிபாரியென்றுசொல்லி அவன் பல புகழையும்வாழ்த்தி அவனொருவனையே புகழ்வர், செவ்விய நாவையுடைய அறிவுடையோர்; பாரியாகிய ஒருவனுமேயல்லன், மாரியுமுண்டு, இவ்விடத்து உலகத்தைப் பாதுகாத்தற்கு.—எ - று.

உலகுபுரத்தற்கு மாரியும் உண்டாயிருக்கப் பாரியொருவனைப் புகழ்வர் செந்நாப்புலவரெனப் [1]பழித்ததுபோலப் புகழ்ந்தவாறு. (கoள)

உரை); குறிப்புவமையின்பாற்படுமென்பர் காரிரத்நகவிராயர்; மாறன். சூ. 100.

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ வுலகு" (குறள், 211) என்பது ஈண்டு அறியத்தக்கது.

[1]புறநா. கூ௭, உரை.

(௧௦௮) குறத்தி மாட்டிய வறற்கடைக் கொள்ளி
ஆர மாதலி னம்புகை யயலது
சாரல் வேங்கைப் பூஞ்சினைத் தவழும்
பறம்பு பாடின ரதுவே யறம்பூண்டு
பாரியும் பரிசில ரிரப்பின்
வாரே னென்னு னவர்வரை யன்னே.

**திணையும் துறையும் அவை.**
**அவனை அவர் பாடியது.**

இ - ள்.—குறத்தி மடுத்தெரிக்கப்பட்ட வற்றிய கடைக்கொள்ளி சந்தனமாதலால் அதன் அழகியதாகிய புகை அதற்கு அருகாகிய சாரற்கண் வேங்கையின் பூங்கொம்பின்கட் பரக்கும் பறம்பு பாடுவோர்க்குக் கூறிட்டுக்கொடுத்தலின் அவருடையதாயிற்று; தன்மத்தைப் பரித்துப் பாரியும் பரிசிலர் வேண்டுவாராயின் அவ்வழி வாரேனென்னுனாய் அவரெல்லையின்கண்ணே நிற்பன்.—எ - று.

---

2. புறநா. ௩௨௦ : 12.

1 - 2. "சாந்த விறகி னுவித்த புன்கம்" புறநா. ௧௬௮: 11.

1 - 3. "புனத்து, வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே, எறிபுனந் தீப்பட்டக் கால்" நாலடி. 180.

4 - 6. "அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார், என்பு முரியர் பிறர்க்கு" குறள், 72.

5 - 6. "தம்மை மாறியும் புரிவது தருமமங் நாடு" திருவிளை. நாட்டு. 59.

சந்தனப்புகை வேங்கையின்மிசைத் தவழும் பறம்பெனவே, [1]இவை யொழிய மரமின்மையும், பகைவர்சுடும் புகையின்மையும் கூறியவாறா யிற்று. (௧௦௮)

---

1'சாந்தம் ஏறுதென்றது, மரமாயிற் சாந்தமே உள்ளதென்று' (அகநா. உ : 6, உரை); 'கொன்றையே என்ற ஏகாரத்தால் மற்ற விருட் சங்களுள் ஒன்றுமின்று என்றவாறு', 'சந்தனத்தையும் அகிலையும் காடென்று விருத்தியிட்டது; நீ எழுந்தருளியிருக்கும் அவ்வனத்தில் மற்று விருட்சமில்லை' தக்க. 62, 228, உரை.

---

(௧௦௯) அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொண் *முரசின் மூவிரு முற்றினும்
உழவ ருழாதன நான்குபய னுடைத்தே
ஒன்றே, சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் †பழமூழ்க் கும்மே
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்குவீழ்க் கும்மே
நான்கே, அணிநிற வோரி ‡பாய்தலின் மீதழிந்து

---

1. புறநா. ௧௧௧ : 1.

2. "ஆளிடூஉக் கடந்து வாளம ருழக்கி, ஏந்துகோட் டியானை வேந்த ரோட்டிய, கடும்பரிப் புரவிக் கைவண் பாரி" அகநா. ௭௮.

4. மூங்கில் நெல் : "வெதிரிற் பிறந்த பொதியவி ழருநெல்"

(பெருங். க. 51 : 12); "வெதிர்கண் ணுடைந்து நெல்லுதிரவும்" (யா. வி. சூ. 95, மேற்.); "நெற்கொ ணெடுவெதிர்க் கணந்த யானை" (குறிஞ்சி. 35); "புல்லிலை வெதிர நெல்விளை காடே" அகநா. ௩௯௭ : 16.

'சிறியிலை வெதிரி னெல்விளை யும்மே: இது, விளையுமேயெனற் பாலது, விளையும்மேயென ஒற்றில்வழி ஒற்றை விரித்தவாறு; இதனுட் சிறியவிலை யெனற்பாலது சிறியிலையெனத் தொகுத்தவாறு' நன். வி. சூ. 155.

5. "பல்கோட் பலவின் பயிர்ப்புறு தீங்கனி" கலி. ௫௦ : 12.

6. கிழங்கு கீழே தாழவிருத்தலை, வீழ்த்தலென்றல் மரபு; "வள்ளி கீழ் வீழா வரைமிசைத் தேன்றொடா" (கலி. ௩௯); "கீழ்செல வீழ்ந்த கிழங்கொடு" (மதுரை. 534); "வயவுப்பிடி முழந்தாள் கடுப்பக் குழி தொறும், விழுமிதின் வீழ்ந்தன கொழுங்கொடிக் கவலை" மலைபடு. 127-8.

பி - ம். *முரசம். †பழம்வீழ்க் கும். ‡பாயமீ தழிந்து.



திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே
வான்க ணற் *றவன் மலையே வானத்து
மீன்க ணற்றதன் சுனையே †யாங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினும்
‡தாளிற் கொள்ளலிர் வாளிற் றரலன்
யானறி குவனது கொள்ளு மாறே
சுகிர்புரி நரம்பின் சிறியாழ் பண்ணி

‡ விரையொலி கூந்தனும் விறலியர் பின்வர
ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்று மொருங்கீ யும்மே[1].

திணை - நொச்சி; துறை - மகண்மறுத்தல்.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—இரங்கத்தக்கது, பாரியுடைய பறம்பு, பெருமையைக் கொண்ட முரசினையுடைய நீயிர் மூவேந்தரும் சூழினும்; உழவரால் உழுது விளைக்கப்படாதன நான்குவிளையுளையுடைத்து; அவற்றுள், முதலாவது, சிறிய இலையையுடைய மூங்கிலினது நெல் விளையும்; இரண்டாவது, இனிய சுளையையுடைய பலாவினது பழம் ஊழ்க்கும்; மூன்றாவது, கொழுவிய கொடியையுடைய வள்ளிக்கிழங்கு தாழவிருக்கும்; நான்காவது, அழகிய நிறத்தையுடைய ஓரிபாய்தலான் அதன்மேற் ||பவாழிந்து கனத்த நெடிய மலை தேனைப்பொழியும்; அகலநீள உயரத்தால் வானிடத்தையொக்கும், அவனது மலை; அவ்வானத்தின்கண் மீனையொக்கும்,

---

4 - 9. "கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார், நிலைக் கெளிதா நீர தரண்" குறள், 745.

1 - 13. "பேரிசை யுருமொடு மாரி முற்றிய, பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி, பலவுறு குன்றம் போலப், பெருங்கலி னெய்திய வருங் காப் பினளே" நற். உரு.

16. ஒலித்தல் - தழைத்தல்; "ஒலிதெங்கின்" பதிற். கரு : 7.

[1] மு. உழிஞைத்திணையின் துறைகளுளொன்றாகிய 'அகத்தோன் செல்வம்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 10, இளம்.; ஷை. ஷை. 12, ந.

பி - ம். *அகன் மலையே வான்கணத்து. †ஆங்குப், புலங்...... தேரினாராயினும், மரங்...களிற்றினாராயினும். ‡வாளிற்கொள்ள லிற்ரு ளிற்ரலன். ‡‡விரைபொலி. §காஞ்சி. ||பவணழிந்து.



அம்மலையின்கட் சுனை; அவ்விடத்து மரந்தோறும் கட்டப்பட்ட யானையை யுடையீராயினும் இடந்தோறும் பரப்பப்பட்ட தேரையுடையீராயினும் உங்கள் முயற்சியாற் கொள்ளமாட்டீர்; நமது வாள்வலியால் அவன் தாரான்; யான் அறிவேன், அதனைக் கொள்ளும்பரிசை; வடித்து முறுக் கப்பட்ட நரம்பினையுடைய சிறிய யாழைப் பண்ணி வாசித்து நறு நாற்றத்தையுடைய தழைத்த கூந்தலையுடைய நும் விறலியர் பின்வர ஆடினிராய்ப் பாடினிராய்ச் செல்லின் அவன் நமக்கு நாட்டையும் மலையையும் கூடத்தருவன்.—எ - று.

அளிதோவென்பது, ஈண்டு வியப்பின்கண் வந்தது.

ஓரியென்பது, தேன்முதிர்ந்தாற் பரக்கும் [1]நீலநிறம்; முசுக்கலை யெனினும் அமையும்.

குன்றம் தேன்சொரியுமென இடத்துநிகழ்பொருளின் தொழில் இடத்துமேல் ஏறிநின்றது.

நான்குபயனுடைத்தென்று வைத்து, நெல் விளையும் பழம் ஊழ்க்கும் கிழங்கு வீழ்க்கும் தேன் சொரியுமென்று அவற்றின் செய்கைதோன்றக் கூறினாரெனினும், கருதியது நெல்லும் பழனும் கிழங்கும் தேனுமாகக் கொள்க.

வான்கணற்றணிமலையேயென்று பாடமோதுவாரும் உளர்.

வான்கணற்றென்பது, மலையின் ஓக்கமும் பரப்பும்.

மீன்கணற்றென்றது, [2]சுனையினது பன்மையும், தெளிவும், சிறுமையும்.

ஈண்டுக் கண்ணென்பது, அசைநிலை.

தாளென்றது, படையறுத்தலும் அழித்தற்கு வேண்டும் கருவி முதலாயின இயற்றலும்.

விறலியரென்றது, அவர் உரிமைமகளிரை. (௧௦௧)

---

[1]"நீனெய்தாழ் கோதை" (பரி. ௧௧ : 124); "நீனிற வோரி பாய்ந் தென நெடுவரை, நேமியிற் செல்லு நெய்க்க ணிறூஉல்" மலைபடு. 524-5.

[2]" எறும்பி யளையிற் குறும்பல் சுனைய" குறுந். ௧௨.



(௧௧௦) கடந்தடு தானை மூவிருங் கூடி
உடன்றனி ராயினும் பறம்புகொளற் கரிதே

---

1. கடத்தல் - வஞ்சியாது எதிர்நிற்றல்; புறநா. ௮ : 5.
2. புறநா. ௧௦௧ : 13, ௧௧௧ : 2.





மூந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு
மூந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்

*யாமும் பாரியு முளமே
குன்று முண்டுநீர் பாடினிர் செலினே.

**திணையும் துறையும் அவை.**

**மூவேந்தரும் பறம்புமுற்றியிருந்தாரை அவர் பாடியது.**

இ - ள்.—வஞ்சியாது எதிர்நின்று கொல்லும் படையினையுடைய மூன்று திறத்திரும் கூடிப் பொருதீராயினும் பறம்பு கொள்ளுதற்கு அரிது; முந்நூறு ஊரையுடைத்து, குளிர்ந்த நல்ல பறம்புநாடு; அம்முந்நூறூரும் பரிசிலர் பெற்றனர்; நீயிர் பாடினிராய் வரின், நமக்கு யாமும் பாரியும் உளேம்; அதுவேயன்றி மலையும் உண்டு.—எ - று.

நீர் பாடிவரினும் பறம்புநாடு பரிசிலர் முன்னேபெற்றமையின், அது நுமக்குக் கிடையாதென்பது கருத்தாகக் கொள்க. (௧௧௦)

* பி - ம். யானும்.



(௧௧௧) அளிதோ தானே பேரிருங் குன்றே
வேலின் வேறல் வேந்தர்க்கோ வரிதே
நீலத், திணைமலர் புரைய முண்கட்
கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே.

**திணையும் துறையும் அவை.**

**அவனை அவர் பாடியது.**

இ - ள்.—இரங்கத்தக்கது, பெரிய கரிய குன்றம்; அது வேலான் வெல்லுதல் வேந்தர்க்கோ அரிது; நீலத்தினது இணைந்தமலரையொக்கும் மையுண்ட கண்ணையுடைய கிணையையுடைய விறலிக்கு எளிது, பாடின

ளாய் வரின்—எ - று.

அளிதோவென்றது ஈண்டு வியப்பின்கண் வந்தது.

பாடினளாய்வரினென்றகருத்து : அவட்கும் அவ்வாறன்றித் தன் பெண்மையால் மயக்கி வென்றுகோடல் அரிதென்பதாம். (௧௧௧)

1. புறநா. ௧0௯ : 1.

2. புறநா. ௧0௯ : 13, ௧௧0 : 2.

2 - 3. "எதிரிதழ் நீலம் பிணைந்தன்ன கண்ணாய்" கலி. ௯௯.

4. புறநா. ௧0௯ : 16 - 8



(௧௧௨) அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவின்
எந்தையு முடையேமெங் குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்க ளிவ்வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெம்
குன்றுங் கொண்டார்யா மெந்தையு மிலமே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

பாரிமகளிர் பாடியது.

இ - ள்.—மூவேந்தரும் முற்றியிருந்த அற்றைத்திங்களின் அவ் வெள்ளிய நிலாவின்கண் எம்முடைய தந்தையையும் உடையேம்; எம்முடைய மலையையும் பிறர்கொள்ளார்; இற்றைத்திங்களது இவ் வெள்ளிய நிலவின்கண் வென்று அறைந்த முரசினையுடைய அரசர் எம்முடைய மலையையுங் கொண்டார்; யாம் எம்முடைய தந்தையையும்

இழந்தேம்.—எ - று.

திங்களை மாதமென்பாரும் உளர்.

ஒருவனை மூவேந்தரும் முற்றியிருந்தும் வஞ்சித்துக் கொன்றமையின், [1]'வென்றெறி முரசின்வேந்தர்' என்றது, ஈண்டு இகழ்ச்சிக் குறிப்பாய் நின்றது. (கக௨)

4. புறநா. ௬௩ : 5; "வேந்தர், வென்றெறி முரசி னன்பல முழங்கி" குறுந். ௩௮௦ : 1 - 2.

[1]"வஞ்சனை யாலர செய்திய மன்னரும் வந்தாரே" (கம்ப. குகப். 14) என்பதிலுள்ள மன்னருமென்பதும் இப்பொருளதே.

---

(கக௩) மட்டுவாய் திறப்பவு மைவிடை வீழ்ப்பவும்
அட்டான் றானுக் கொழுந்துவை யூன்சோறும்
பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி
நட்டனை மன்னோ முன்னே யினியே
5 பாரி மாய்ந்தெனக் கலங்கிக் கையற்று
நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சிச்

1. புறநா. ௩௩ : 21, உகஉ : 1.

3. "பல்வளம் பழுனிய" மணி. ௩ : 28.

6. "நீர்வார் கண்ணேன்" (நற். கசு௩); "நீர்வார் கண்ணே" குறுந். உஉ : 1.

தன்மைப்பன்மை வினைக்குறிப்புமுற்று வினையெச்சக்குறிப்பான

சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே
கோறிரண் முன்கைக் குறுந்தொடி மகளிர்
நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே.

திணையும் துறையும் அவை.

அவன்மகளிரைப் பார்ப்பார்ப்படுக்கக் கொண்டுபோவான் பறம்பு விடுத்த கபிலர் பாடியது.

இ - ள்.—மது இருந்த சாடியை வாய்திறப்பவும் ஆட்டுக்கிடாயை வீழ்ப்பவும் அடப்பட்டு அமைந்தொழியாத கொழுவிய துவையையும் ஊனையுடைய சோற்றையும் விரும்பிய பரிசே தரும் மிக்க செல்வம் முதிர்ந்து எம்மோடு நட்புச்செய்தாய் முன்பு; இப்பொழுது, பாரி இறந்தானாகக் கலங்கிச் செயலற்று நீர்வார்கண்ணையுடையேமாய்த் தொழுது நின்னை வாழ்த்திச் செல்லுதும், பெரிய புகழையுடைய பறம்பே ! கோற்றொழிலாகச் செய்யப்பட்ட திரண்ட குறிய வளையையணிந்த முன்கையினையுடைய மகளிரது மணம் கமழும் கரிய கூந்தலைத் தீண்டுதற்கு உரியவரை நினைந்து—எ - று.

பறம்பே ! பெருவளம் பழுனி நட்டனை முன்; இனி நாறிருங்கூந்தற் கிழவரைப் படர்ந்து சேறுமெனக் கூட்டுக.

மன்: கழிவின்கண் வந்தது.

வாழியும் ஓவும்: அசைநிலை.

ஆறுக்கொழுந்துவையென்பதற்கு விருப்பம் அமையாத கொழுந்

தற்கு மேற்கோள்; நன். சூ. 350, மயிலை; நன். வி. சூ. 351; இ. வி. சூ. 250, உரை.

9. "கலிமயிற் கலாவத் தன்னவிவள், ஒலிமென் கூந்த லுரியவா நினக்கே" (குறுந். ௨௨௫ : 6 - 7); "கூந்த லணிகொடுப்பேம் யாம்" (கலி. க0க); "தோடேந்து பூங்கோதை வேண்டேங் கூந்தல் தொடேல்" சீவக. 1229.

---

(ககச) ஈண்டுநின் றோர்க்குந் தோன்றுஞ் சிறுவரை
சென்றுநின் றோர்க்குந் தோன்று மன்ற
களிறுமென் றிட்ட கவளம் போல
நறவுப்பிழிந் திட்ட கோதுடைச் சிதறல்



வாரசும் பொழுகு முன்றிற்
றேர்வீ சிருக்கை நெடியோன் குன்றே.

திணையும் துறையும் அவை.

அவன்மகளிரைக் கொண்டுபோம் கபிலர் பறம்புநோக்கி நின்று சொல்லியது.

இ - ள்.—இவ்விடத்து நின்றோர்க்குந் தோன்றும், சிறிது எல்லை போய் நின்றோர்க்குந் தோன்றும், நிச்சயமாக; யானை மென்று போகடப் பட்ட கவளத்தினது கோதுபோல மதுப்பிழிந்து போகடப்பட்ட கோதுடைத்தாகிய சிதறியவற்றினின்றும் வார்ந்த மதுச்சேறு ஒழுகும் முற்றத்தையுடைய தேர்வழங்கும் இருப்பையுடைய உயர்ந்தோனுடைய மலை.—எ - று.

நெடியோன் குன்று தோன்றுமென்றது, புகழான் உயர்ந்து காணாதார்க்கும் செவிப்புலனாகத் தோன்றும், அவன் உளனாயகாலத்து; இப்பொழுது பிறமலைபோலக் கட்புலனாகத் தோன்றும் அளவாயிற் றெனக் கையற்றுக் கூறியவாறாகக் கொள்க. (கக௪)

6. தேர்வீசிருக்கை : புறநா. கக௮ : 5; "தேர்வீசு கவிகை" மலை படு. 399, அடிக்.

---

(ககரு) ஒருசா ரருவி யார்ப்ப வொருசார்
பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்
வாக்க வுக்க தேக்கட் டேறல்
கல்லலைத் தொழுகு மன்னே பல்வேல்
அண்ணல் யானை வேந்தர்க்
கின்னா னாகிய வினியோன் குன்றே.

2. மண்டை : புறநா. க0ரு : 3, அடிக்.

3. "அடற்பொற் சிரகத்தால் வாக்கி" (கலி. ௫க : 7); "வடியுறு தீந்தேறல் வாக்கு" பு. வெ. 19.

2 - 3. "வண்டுபடு நறவிற் றண்டா மண்டையொடு" புறநா.

உகக : 2.

2 - 4. "தீந்தொடை நரம்பின் பாலை வல்லோன், பையு ளுறுப்பிற் பண்ணுப்பெயர்த் தாங்குச், சேறுசெய் மாரியி னளிக்குநின், சாறுபடு திருவி னனைமகி ழானே" பதிற். சுஙி : 14 - 7.

5 - 6. பகைவர்க்கு இன்னான்: புறநா. கஉ : 4, ஙிக : 6.



திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—ஒருபக்கம் அருவி ஆர்த்தொழுக ஒருபக்கம் பாணருடைய மண்டைகள் நிரம்ப வாக்கவேண்டி வடிக்க உக்க இனிய கள்ளாகிய தேறல் கல்லையுருட்டியொழுகும், பலவேற்படையுடனே தலைமைபொருந் திய யானையையுமுடைய வேந்தர்க்குக் கொடியோனாகிய இனியோன் மலை; அது கழிந்தது.—எ - று.

குன்று தேறல் கல்லலைத்தொழுகும்; இனி அது கழிந்ததென்று கூட்டுக.

அருவியும் அவன் உளனாயின் உளதாவதென்பது கருத்து.

மன் : கழிவின்கண் வந்தது.

குன்று தேறல் கல்லலைத்தொழுகுமென இடத்துநிகழ்பொருளின் தொழில் இடத்துமேல் ஏறிநின்றது. (ககரு)

---

(ககசு) *இீர்ப் பெருங்குண்டு சுனைப்பூத்த குவளைக்

கூம்பவிழ் முழுநெறி புரள்வரு மல்குல்

ஏந்தெழின் மழைக்க ணின்னகை மகளிர்
புன்மூசு கவலைய முண்மிடை வேலிப்

---

1. புறநா. ௧௦௫ : 2, ௧௩௨ : 5; "குவளையம் பைஞ்சுனை" (மலைபடு. 251); "மலிசுனைக் குவளைத், தேம்பா யொண்பூ" அகநா. ௩௦௮.

2. முழுநெறி - புறவிதழொடிந்தமுழுப்பூ; "கழனி யாம்பன் முழுநெறிப் பகைத்தழை" (அகநா. ௧௫௬); "கழுநீர்ப் பிணையன் முழுநெறி" சிலப். ௨ : 34.

1 - 2. தழை : புறநா. ௬௧ : 1, ௩௪௦ : 1; "மணிப்பூம் பைந்தழை தைஇ", "பணைநகு வயலை மாணிவர் கொழுங்கொடி, அரிமல ராம்பலோ டார்தழை தைஇ, விழவாடு மகளிர்" (அகநா. ௨௦, ௧௭௬); "இளையிதழ் பறியாப் பைவிரி யல்குற், கொய்தழை தைஇ" (குறிஞ்சி. 101 - 2); "பைந்தழைமா மகளிரொடு" பட்டின. 91.

"முழுநெறிக்குவளை" (சிலப். ௨ : 14) என்பதற்கு, இதழொடிக்கப் படாத குவளையென்று பொருள்கூறி, இவ்வடிகளை மேற்கோள் காட்டினர் அடியார்க்குநல்லார்.

1 - 3. "பைஞ்சுனைக், குவளைத் தண்டழையிவள்" குறுந். ௩௪௨ : 4-5.

4. முள்வேலி: "வாழ்முள் வேலி", "இடுமுள் வேலி" பெரும்பாண். 126, 154.

பி - ம். *தீம்பெரும்.



பஞ்சி முன்றிற் சிற்றி லாங்கட்

பீரை நாறிய சுரையிவர் மருங்கின்
ஈத்திலைக் குப்பை பேறி யுமணர்
உப்பொ யொழுகை யெண்ணுப மாதோ
நோகோ யானே தேய்கமா காலை
பயில்பூஞ் சோலை மயிலெழுந் தாலவும்
பயிலிருஞ் சிலம்பிற் கலைபாய்ந் தூகளவும்
கலையுங் கொள்ளா *வாகப் பலவும்
கால மன்றியு மரம்பயம் பகரும்
யாண ரறாஅ வியன்மலை யற்றே
அண்ண னெடுவரை யேறித் தந்தை
பெரிய நறவிற் கூர்வேற் பாரிய
தருமை யறியார் போரெதிர்ந்து வந்த

---

6. "சுரையொடுபேய்ப் பீர்க்குஞ் சுமந்த" பு. வெ. 60.

8. ஒய்தல் : புறநா. ௭௦ : 17, அடிக்.

7 - 8. இங்ஙனம் எண்ணுதல் ஒருவகை விளையாட்டு; திமில் முதலியவற்றை எண்ணுதலும் உண்டு; "நிலவுக்குவித் தன்ன மோட்டு மண லிடிகரைக், கோடுதுணர்ந் தன்ன குருகொழுக் கெண்ணி", "உவர்விளை யுப்பி னுழாஅ வுழவர், ஒழுகை யுமணர் வருபத நோக்கிக், கான லிட்ட காவற் குப்பைப், புலவுமீ னுணங்கற் படுபுள் ளோப்பி, மட நோக் காயமொ டுடனுப் பேறி, எந்தை திமிலிது நுந்தை திமிலென, வளைநீர் வேட்டம் போகிய கிளைஞர், திண்டிமி லெண்ணுந் தண்கடற்

சேர்ப்ப" (நற். கடுக, ௩௬௩); "ஊசன் மேவற் சேயிழை மகளிர், உரல் போற் பெருங்கா லிலங்குவாண் மருப்பிற், பொருங்கை மதமாப் புகுதரி னவற்றுள், விருந்தின் வீழ்பிடி யெண்ணுமுறை பெறாஅ" (பதிற். ௬௬); "திரையுழந் தசைஇய நிரைவளை யாயமொ, டெப்பின் குப்பை யேறி யெற்பட, வருதிமி லெண்ணுந் துறைவனொடு" அகநா. ௧௯௦.

13. "கால மன்றியு மரம்பயன் கொடுத்தலின்" (மலைபடு. 134); "பருவ மன்றியும் பயன்கொடுப் பறாஅப், பலவு மாவுங் குலைவளர் வாழையும், இருங்கனி நாவலு மிளமா துளமும்" (பெருங். உ. 20 : 61 - 3); "கால மின்றியுங் கனிந்தன கனி", "தீங்கனி, கால மின்றிக் கனிவது காண்டிரால்" கம்ப. வனம்புகு. 44, நாடவிட்ட. 18.

பி - ம். *வாகிப்.



வலம்படு தானை வேந்தர்
பொலம்படைக் கலிமா வெண்ணு வோரே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது

இ - ள்.—இனிய நீரையுடைய பெரிய ஆழ்ந்த சுனைக்கட் பூத்த செங்கழுநீரினது முகையவிழ்ந்த புறவிதழ் ஒடித்த முழுப்பூவாற் செய்யப் பட்ட தழையசையும் அல்குலையும் மிக்க அழகையுடைய குளிர்ந்த கண் ணினையும் இனிய முறுவலையுமுடைய மகளிர் புல்மொய்த்த கவலையை யுடையனவாகிய முள்ளால் நெருங்கிய வேலியையும் பஞ்சுபரந்த முற்றத்

தையுமுடைய சிறியமனையிடத்தின்கட் பீர்க்கு முளைத்த சுரைபடர்ந்த விடத்தில் ஈத்திலையையுடைய குப்பையின்கண் ஏறி உமணர் உப்புச் செலுத்தும் சகடத்தை எண்ணுவர்; நோவேன் யான்; எனது வாழ்நாள் கெடுவதாக; பயின்ற பூவையுடைய சோலைக்கண் மயிலெழுந்து ஆடவும் பயின்ற பெரியமலையின்கண்ணேயேறி முசுக்கலை தாவிஉகளவும் அம்முசுக் கலையும் நுகர்ந்து வெறுத்தலாற் கொள்ளாவாம் பரிசு காலமன்றாகவும் மரங் கள் பலவும் காயும்பழமும் முதலாயினவற்றை விளைந்துகொடுக்கும் புதுவரு வாய் ஒழியாத அகன்ற மலையைப்போலும் பயனுடைத்தாகிய தலைமையை யுடைய உயர்ந்த வரையின்கண்ணேயேறித் தம்முடைய தந்தையாகிய மிக்க மதுவினையும் கூரியவேலினையுமுடைய பாரியது பெறுதற்கரு மையை அறியாராய்ப் போரேற்றுவந்த வென்றிப்பட்ட சேனையையுடைய அரசரது பொன்னாற் செய்யப்பட்ட கலமுதலியவற்றையுடைய மனஞ் செருக்கிய குதிரையை எண்ணுவார்.— எ - று.

வியன்மலையென்றது, அரைமலையை.

நெடுவரையென்றது, உச்சிமலையை.

இன்னகைமகளிர், நெடுவரையேறி முன்பு வேந்தர்கலிமாவை எண்ணுவோர், இப்பொழுது ஈத்திலைக்குப்பையேறி உமணர் உப்பொய் ஒழுகையை எண்ணுவர்; இதற்கு நோவேன் யான்; எனது வாழ்நாள் கெடுவதாகவென வினைமுடிவு செய்க.

அற்றேயென்னும் ஏகாரம், அசைநிலை.

வியன்மலை அத்தன்மைத்தெனப் பிறிதொருதொடராக்கி உரைப் பினும் அமையும். (கககூ)

---

16 - 8. "எந்தகோட் டியானை வேந்த ரோட்டிய, கடும்பரிப் புரவிக்

ஞ்கவண் பாரி'' அகநா. எஅ.

19. பொலம்படைக் கலிமா: புறநா. ருடுக : 14; "பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி" (மலைபடு. 574); "புனையும் பொலம்படைப் பொங்குளைமான்" பு. வெ. 276.



(கக௭) மைம்மீன் புகையினுந் தூமந் தோன்றினும்
தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்
வயலக நிறையப் புதற்பூ மலர
மனைத்தலை மகவை யீன்ற வமர்கண்
ஆமா நெடுநிரை நன்புல் லாரக்
கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கிப்
பெயல்பிழைப் பறியாப் புன்புலத் ததுவே
பிள்ளை வெருகின் முள்ளெயி றுரையப்

---

1 - 2. புறநா. ருடு : 6 - 8; சனி கரியநிறமுடையனாதலின் மைம்மீனென்றார்; சனிபுகைதலாவது, இடபம் சிங்கம் மீனம் இவற்றொடு மாறுபடுதல்; இவற்றுள், சனி தனக்குப் பகைவீடாகிய சிங்கராசியிற் புகின் உலகிற்குப் பெருந்தீங்கு விளைவிப்பனென்பதை, "மகத்திற் புக்கதோர் சனியெனக் கானாய்" (தேவாரம்), "அடையார்தமக்கு, மகத்திற் சனியன்ன சந்திர வாணன்" (தஞ்சை. 48), "மகத்தில் வாழ்சனியாயினை" (வாயுசங்கிதை, கடவுள். 7), "விசயன் றம்முற் குதவி செய்யாமன், மகத்திற் சனிபோல் விளைக்குவம் யாம்" (வி. பா. 11 - ஆம் போர்.

40) என்பவற்றாலுணர்க; (நக்ஷத்திரங்களுள் மகம், பூரம், உத்தரத்தின் முதற்பாதம் சிங்கராசிக்கு உரியவை.) தூமம், புகைக்கொடியென்றுங் கூறப்படும்; தூமகேது வென்பதும் இதுவே; இது வட்டம், சிலை, நீட்டம், தூமமென்னுங் கரந்துறை கோட்கள் நான்கனுளொன்று; இதன் தோற்றம் உலகிற்குப் பெருந்தீங்கு விளைவிக்குமென்பர்; "தூம கேது புவிக்கெனத் தோன்றிய" கம்ப. மந்தரைசூழ்ச்சி. 21.

"கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும், விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்" (சிலப். ௧௦ : 102 - 3) என்பதனுரையில் இவ்வடிகளை மேற்கோள்காட்டினர் அடியார்க்குநல்லார்.

6. புறநா. ௧௩௧ : 4 – 7.

'கோஒல் செம்மையிற் சான்றோர்பல்கி யெனவரும் பண்பு பொருளியைபின்றேனும் பெயர்கொள வருதற்பாற்படுதலும்......இதனாற் கொள்க' தொல். வேற்றுமை. சூ. 5, ந.

8. வெருகு – காட்டுப்பூனை; இதனை, 'படப்பை வேலியும் புதலும் பற்றி விடக்கிற்கு வேற்றுயிர் கொல்வது' (தொல். மரபு. சூ. 68) என்பர் பேராசிரியர். பிள்ளைவெருகு: குறுந். ௧௦௭ : 4 ; அகநா. உ௪௭ : 13 - 4.

31



பாசிலை முல்லை முகைக்கும்
ஆய்தொடி யரிவையர் தந்தை நாடே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—சனிமீன் புகைகளோடு கூடிப் புகையினும் எல்லாத் திசையினும் புகை தோன்றினும் தென்றிசைக்கண்ணே வெள்ளி போக்குறினும் வயலிடம் விளைவுமிகப் புதலிடத்துப் பூ மலர மனையிடத்துக் குழவியையீன்ற மேவிய கண்ணையுடைய ஆமாவினது நெடியநிரை நல்ல புல்லை மேயக் கோல் செவ்விதாகலின் அமைந்தோர் பலராக மழை பிழைப்பறியாத புல்லியநிலத்தின்கண்ணது, இளைய வெருகினது கூரிய பல்லையொப்பப் பசிய இலையையுடைய முல்லை முகைக்கும் நுண்ணிய தொழிலையுடைய வளையினையணிந்த மகளிருடைய தந்தை நாடு.— எ - று.

பல்கியென்பதனைப் பல்கவெனத் திரிக்க.

அரிவையர்தந்தை நாடு, பெயல்பிழைப்பறியாப் புன்புலத்ததுவெனக் கூட்டுக.

என்றதனாற் போந்தது: புன்புலத்ததாயிருந்ததே! அது [1]பெயல் பிழைப்பறியாமை, கோல்செம்மையினன் உளதாயதன்றே; அவ்வாறு கோல் செவ்விதாக நிறுத்தியவனை இழப்பதேயென்று அவன் நாடு கண்டு இரங்கியவாறாகக் கொள்க. (கஎ)

---

8 - 9. "அருவிசேர் மருங்கிற் பூத்த முல்லை, வெருகுசிரித் தன்ன பசுவீ மென்பிணிக், குறுமுகை யவிழ்ந்த நறுமலர்ப் புறவு", "வெருக்குப் பல் லுருவின் முல்லை" (குறுந். உ௨௦, உ௪௦); "வெருகுவேட்பச் சிரிப்பன போன் முகைத்த முல்லை" சீவக. 1651.

[1]"முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி, யொல்லாது வானம் பெயல்", "ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர், காவலன் காவா னெனின்" (குறள், 559, 560); மணி. எ : 8 - 10; சீவக. 255.

(ககஅ). அறையும் பொறையு மணந்த தலைய
எண்ணாட் டிங்க ளனைய கொடுங்கரைத்
தெண்ணீர்ச் சிறுகுளங் கீள்வது மாதோ

2 - 3. "தேய்பிறை யுருவக் கேணி" (சீவக. 2998); "எரி வளர்விக் கிடந்தது போலு மிளம்பிறையே" திருநா. தே.



கூர்வேற் குவைஇய மொய்ம்பிற்
றேர்வண் பாரி தண்பறம்பு நாடே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—பாறையும் சிறுகுவடுங் கூடிய தலையையுடையவாகிய எட்டாம்பக்கத்துப் பிறைபோலும் வளைந்த கரைகளையுடைத்தாகிய தெளிந்த நீரையுடைய சிறியகுளம் பாதுகாப்பார் இன்மையின் உடைவது போலும், கூரிய வேலையேந்திய திரண்டதோளையுடைய தேர்வண்மையைச் செய்யும் பாரியது குளிர்ந்த பறம்பு நாடு.—எ - று.

நாடு குளங்கீள்வதென இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்துமேல் ஏறி நின்றது.

மாதோ: அசைநிலை. (ககஅ)

5. தேர்வண்பாரி: புறநா. ககச : 6, உ00 : 9 - 12, உ0க : 2 - 5;

"சுரும்புண, நறவுவா யுறைக்கு நாக நெடுவழிச், சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய, பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற், பறம்பிற் கோமான் பாரியும்" (சிறுபாண். 87 - 91); "முல்லைக்குத் தேரு மயிலுக்குப் போர்வையும், தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும்" (பழ. 361); "முல்லைக்குத் தேரு மயிலுக்குப் போர்வையும், எல்லைநீர் ஞாலத் திசை விளங்கத் - தொல்லை, இரவாம லீந்த விறைவர்போ னீயும், கரவாம லீகை கடன்" பு. வெ. 194.

---

(கககூ) கார்ப்பெய றலைஇய காண்பின் காலைக்
களிற்றுமுக வரியிற் றெறுழ்வீ பூப்பச்
செம்புற் றீயலி னின்னளைப் புளித்து
மென்றினை யாணர்த்து நந்துங் கொல்லோ

---

1. "தலைப்பெய றலைஇய" முருகு. 9.

2. களிற்றுமுகவரி: நற். கஎகூ : 5; கலி. சச : 5; அகநா. கூசக : 11- 2. தெறுழ்வீ: "அரும்பவிழ்ந், தீர்ந்தண் புறவிற் றெறுழ்வீ மலர்ந்தன" (கார்நாற்பது, 25); "நறைநிறம் படுத்த நல்லிணர்த் தெறுழ்வீ" நற். கூ0உ.

3. "சிறுத்தலைத் துருவின் பழுப்புறு விளைதயிர், இதைப்புன வரகி னவைப்புமா ணரிசியொடு, கார்வாய்ப் பொழிந்த வீர்வாய்ப் புற்றத், தீயல்பெய் தட்ட வின்புளி வெஞ்சோறு" (அகநா. கூகச : 2 - 5.) சம்புற்றீயல்: புறநா. ௱௧ : 9 - 10, அடிக்.

4. புறநா. கஉ0 : 16.

நிழலி னீளிடைத் தனிமரம் போலப்
பணைகெழு வேந்தரை யிறந்தும்
இரவலர்க் கீயும் வள்ளியோ னாடே.

**திணையும் துறையும் அவை.**

**அவனை அவர் பாடியது.**

**இ - ள்.**—கார்காலத்து மழை பெய்து மாறிய காட்சியினியகாலத்துக் களிற்றுமுகத்தின்கட் புகர்போலத் தெறுழினது மலர் பூப்பச் செம்புற்றின்கண் ஈயலை இனிய மோரொடு கூட்டி அடப்பட்ட புளிங்கறியை யுடைத்து; மெல்லிய தினையாகிய புதுவருவாயையுடைத்து, முன்பு; இனி அது கெடுங்கொல்லோ! நிழலில்லாத நெடிய வழிக்கண் நின்ற தனி மரத்தையொப்ப முரசையுடைய அரசரின் மிகுத்தும் இரவலர்க்கு வழங்கும் வண்மையையுடையவனது நாடு.—எ - று.

பூப்பவென்னும் வினையெச்சம் இன்னளைப் புளித்தென்னும் குறிப்பொடு முடிந்தது.

வள்ளியோன் நாடு, இன்னளைப் புளித்து; யாணர்த்து; அது நந்துங் கொல்லோவெனக் கூட்டுக.

தெறுழென்றது, காட்டகத்ததொரு கொடி; புளிமாவென்றுரைப் பாரும் உளர். (கககூ)

---

5. "அழன்மண்டு போழ்தி னடைந்தவர்கட் கெல்லாம், நிழன்மரம்போ னேரொப்பத் தாங்கி" (நாலடி. 202); 'அருஞ்சுரத்தின் மரம் போல அடைந்தார்க்களித்தல் அவற்கியல்பு' (சீவக. 3, ந.); "ஆத பத்துக் கருநிழல் போலருள், வேத வித்தக வீரன்" வி. பா. அருச்சுனன்றவ நிலை. 6.

(கஉ0) வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவற்
கார்ப்பெயற் கலித்த பெரும்பாட் டீரத்துப்
பூழி மயங்கப் பலவுழுது வித்திப்
பல்லி யாடிய பல்கிளைச் செவ்விக்
களைகால் கழாலிற் றோடொலிபு நந்தி
மென்மயிற் புனிற்றுப்பெடை கடுப்ப நீடிக்

---

4. பல்லியாடுதல், தாளியடித்தல், ஊடடித்தலென்பன ஒருபொருட் சொற்கள்; அது நெருங்கி முளைத்த பயிர்களை விலக்குதற்கும் வருத்த



கருந்தாள் *போகி யொருங்குபீள் விரிந்து
கீழு மேலு மெஞ்சாமைப் பலகாய்த்து
வாலிதின் விளைந்த புதுவர கரியத்
தினைகொய்யக் கவ்வை கறுப்ப வவரைக்
கொழுங்கொடி விளர்க்காய் கோட்பத மாக
நிலம்புதைப் பழுனிய மட்டின் றேறல்
புல்வேய் குரம்பைக் †குடிதொறும் பகர்ந்து
நறுநெய்க் கடலை விசைப்பச் சோறட்டுப்
பெருந்தோ ளாலம் பூசன் மேவர
வருந்தா யாணர்த் துநந்துங் கொல்லோ

இரும்பல் கூந்தன் மடந்தையர் தந்தை
ஆடுகழை நரலுஞ் சேட்சிமைப் புலவர்
பாடி யானாப் பண்பிற் பகைவர்
ஓடுகழற் கம்பலை கண்ட
செருவெஞ் சேஎய் பெருவிற னாடே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—வெம்மை முதிர்ந்த வேங்கைமரத்தையுடைய சிவந்த மேட்டுநிலத்துக் கார்காலத்து மழையான் மிகுந்த [1]பெரிய செவ்வியை யுடைய ஈரத்தின்கட் புழுதி கலக்கப் பலசால்பட உழுது வித்தித் தாளி யடிக்கப்பட்ட பல கிளையையுடைய செவ்வியின்கட் களையை அடியி னின்றும் களைதலான் இலை தழைத்துப் பெருகி மெல்லிய மயிலினது ஈன்றணிய பேடையையொப்ப ஓங்கிக் கரிய தண்டு நீண்டு எல்லாம் ஒருங்கு சூல்விரிந்து கதிரினது அடியும் தலையும் ஒழியாமல் மிகக் காய்த்துச் சிறிதாக விளைந்த புதிய வரகையறுக்கத் தினையை யரிய எள்ளிளங்காய் கறுப்ப அவரையினது கொழுவிய கொடியின்கண் வெள்ளைக்காய் அறுக்கும் செவ்வியாக நிலத்தின்கட் புதைக்கப்பட்டு

---

மின்றிக் களைபிடுங்குதற்குமாகக் கீழ்நோக்கியுள்ள கூரிய பலமுனைகளை யுடைய பலகையின் இரண்டுபக்கத்தும் மேற்புறத்திலுள்ள வளையங்களிற் கட்டிய கயிறுகளைச் சேர்த்துப் பூட்டிய நுகத்தை வாய்கட்டப்பட்டுள்ள எருதுகளின் பிடரியில் வைத்துப் பூட்டி உழச்செய்தல்.

10. "சிறுதினை கொய்யக் கவ்வை கறுப்ப" மதுரை. 271.

[1]"மாவீரம் போகுதென்று விதைகொண் டோட" தனிப்.

பி - ம். *போக்கி. †குடிறொறும்.

முற்றிய மதுவாகிய தேறலைப் புல்லாலே வேயப்பட்ட சிறியமனையின்கட் குடியுள்ள இடந்தோறும் நுகரக்கொடுக்க நறியநெய்யிலே கடலை துள்ள அதனோடு சோற்றையட்டு ஊட்டுதற்குப் பெரியதோளையுடைய மனையாள் கலம்பூசுதலைப் பொருந்த வருந்தவேண்டாத புதுவருவாயை யுடைத்து, முன்பு; இனி அது கெடும்போலும்! கரிய பலவாகிய கூந்தலையுடைய மடந்தையர்க்குத் தந்தையாகிய. அசைந்த மூங்கில் இழைந்து ஒலிக்கும் உயர்ந்த உச்சியையுடைய, புலவர் பாடப்பட்டு அமையாத தன்மையை யுடைய பகைவரது [1]புறக்கொடுத்தோடும் வீரக்கழலினது ஆரவாரத்தைக் கேட்டு நாணிப் பின் செல்லாது கண்டுநின்ற போரை விரும்பிய சேயை யொக்கும் பெரிய வென்றியையுடையவனது நாடு.—எ - று.

வித்தி ஆடிய செவ்வியென இயையும்.

நந்தியென்பதுமுதலாய வினையெச்சங்கள் விளைந்தவென்னும் பெயரெச்சவினையோடும், அரியவென்பது முதலாக மேவரவென்பதீறாக நின்ற வினையெச்சங்கள் யாணர்த்தென்னும் குறிப்புவினையோடும் முடிந்தன.

பகர்ந்தென்பது, பகரவெனத் திரிக்கப்பட்டது.

விசைப்பச் சோறட்டு மேவரவென இயையும்.

செருவெஞ்சேஎய் பெருவிறலது சேட்சிமையையுடைய நாடு, யாணர்த்து; அது நந்துங்கொல்லோவெனக் கூட்டுக.

பெருந்தோளென்பது, பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

வெப்புளென வெம்மைக்கு அதுவும் ஒரு வாய்பாடாய் நின்றது; வெம்மையை உள்ளும் முதிர்ந்தவெனினும் அமையும்.. (கஉ0)

---

[1]"அழிகுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாக், கழிதறு கண்மை" பு. வெ. 55.

(கஉக) ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள்
வரிசை யறிதலோ வரிதே பெரிதும்
ஈத லெளிதே மாவண் டோன்றல்

---

2. பரிசின் மாக்கள்: புறநா. சு : 16, உச : 30.

3. வரிசை: புறநா. சு : 16; சஎ : 6; "வரிசை யறிதலும்" (சிறு பாண். 217); "பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின், அது நோக்கி வாழ்வார் பலர்" (குறள், 528); "தத்தம், வரிசையா னின்புறூஉ மேல்" நான்மணி. 67.



அதுநற் கறிந்தனை யாயிற்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே.[1]

திணை - அது ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.
மலையமான் திருமுடிக்காரியைக் கபிலர் பாடியது.

இ - ள்.—ஒருதிசைக்கண் [2]வள்ளியோனாகிய ஒருவனை நினைந்து நான்கு திசையினுமுள்ள பரிசின்மாக்கள் பலரும் வருவர்; அவர் வரிசை யறிதல் அரிது; கொடுத்தல் மிகவும் எளிது; பெரிய வண்மையையுடைய தலைவ ! நீ அவ்வரிசையறிதலை நன்றாக அறிந்தாயாயின், அறிவுடையோரிடத்து வரிசை கருதாது ஒருதாரமாகப் பார்த்தலைத் தவிர்வாயாக. —எ - று. (கஉக)

5. மு. புறநா. ௩௫ : 30.

[1]மு. பாடாண்டிணைக்குரிய விடைகள் பலவற்றுள், சிறிதென்ற விடைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 36, ந.

[2]புறநா. ௪௭ : 1.

---

(௧௨௨) கடல்கொளப் படாஅ துடலுந ருக்கார்
கழல்புனை திருந்தடிக் காரிநின் னாடே
அழல்புறந் தரூஉ மந்தண ரதுவே
வீயாத் திருவின் விறல்கெழு தானை
மூவரு ளொருவன் றுப்பா கியரென
ஏத்தினர் தரூஉங் கூழே நுங்குடி
வாழ்த்தினர் வரூஉ மிரவல ரதுவே

---

1 - 3. காரியின்நாடு, மலையும் மலைசார்ந்த இடமுமாதலின் இங்ஙனங் கூறினர்; இவன் இராசதானி பெண்ணையாற்றங்கரையிலுள்ள திருக்கோவலூரென்று, "துஞ்சா முழவிற் கோவற் கோமான், நெடுந் தேர்க் காரி கொடுங்கான் முன்றுறைப், பெண்ணையம் பேர்யாற்று நுண்ணறல்" (அகநா. ௩௫) என்பதனால் தெரிகின்றது; "கறங்குமணி, வாலுளைப் புரவியொடு வையக மருள, ஈர நன்மொழி யிரவலர்க் கீந்த, அழறிகழ்ந் திமைக்கு மஞ்சுவரு நெடுவேற், கழறொடித் தடக்கைக் காரியும்" சிறுபாண். 91 - 5.

5. புறநா. ௧௨௫, கருத்து; "முரண்கொ டுப்பிற் செவ்வேன் மலையன்" குறுந். ௩௧௨ : 2.

6 - 7. "வேந்துதரு விழுக்கூழ் பரிசிலர்க் கென்றும், அருகா தீயும்

வண்மை, உரைசா னெடுந்தகை'' புறநா. கூஉ0 : 16 - 8.



வடமீன் புரையுங் கற்பின் மடமொழி
அரிவை தோளள வல்லதை
நினதென விலைநீ பெருமிதத் தையே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—கடலாற் கொள்ளப்படாது, அதனைக் கொள்ளுதற்குப் பகைவர் மேற்கொள்ளார், வீரக்கழலணிந்த [1]இலக்கணத்தாற்றிருந்திய நல்ல அடியையுடைய காரி! நினது நாடு; அது, வேள்வித்தீயைப் பாது காக்கும் பார்ப்பாருடையது; கெடாத செல்வத்தினையும் வென்றிபொருந்திய படையையுமுடைய மூவேந்தருள் ஒருவனுக்கு வலியாகவேண்டுமென்று அம்மூவர்பானின்றும் வந்தோர் தனித்தனி புகழ்ந்து நினக்குத் தரும்பொருள், நமது குடியை வாழ்த்தினராய்வரும் பரிசிலருடையது; ஆதலால் வடதிசைக்கட்டோன்றும் அருந்ததியையொக்கும் கற்பினையும் மெல்லிய மொழியினையுமுடைய அரிவையுடைய தோள்மாத்திரையல்லது நின்னுடையதென்று சொல்ல ஒன்றுடையையல்லையாயிருக்கவும் நீ பெரிய செருக்கினையுடையையாய் இராநின்றாய்; இதற்குக் காரணம் என்னை?—எ - று.

ஏத்தினர் தரூஉமென்று பன்மையாற்கூறியது, அவ்வேந்தன் அமைச்சரை.

மூவருள் யான் ஒருவன்; எனக்குத் துப்பாகியரென அம்மூவரும் ஏத்தினர் தரூஉமென்று உரைப்பினும் அமையும்.

நாடு அந்தணாது; கூழ் இரவலரது; அரிவைதோளளவல்லதை நினக்கு உரித்தாகக் கூறுதற்கு யாதும் இல்லையாயிருந்தது; நீ பெருமிதத்தை யுடையையாயிருந்தாயென வியந்துகூறியவாறு. (கஉஉ)

---

8. "பெருநல் வானத்து வடவயின் விளங்கும், சிறுமீன் புரையுங் கற்பி னறுநுதல்" (பெரும்பாண். 302 - 3); "வடமீன்போற் றொழு தேத்த வயங்கிய கற்பினாள்" கலி. உ.

[1]திருந்தடி யென்பதற்குப் பிறக்கிடாத அடியென்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்; மதுரை. 436, உரை.

---

(கஉங) நாட்கள் ளுண்டு நாண்மகிழ் மகிழின்
யார்க்கு மெளிதே தேரீ தல்லே

---

1. "துளங்குதசும்பு வாக்கிய பசும்பொதித் தேறல், இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கடொறும் பெறுகுவிர்" (மலைபடு. 463 - 4.) நாண் மகிழ் : புறநா. உசு : 5, அடிக்.



தொலையா நல்லிசை விளங்கு மலையன்
மகிழா தீத்த விழையணி நெடுந்தேர்
பயன்கெழு முள்ளூர் மீமிசைப்
பட்ட மாரி யுறையினும் பலவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—நாட்காலையே மதுவையுண்டு நாளோலக்கத்துமகிழ்ச்சியை மகிழின், தேர்வழங்குதல் யாவர்க்கும் எளிது; கெடாத நல்லபுகழ்

விளங்கும் மலையன் மதுநுகர்ந்து மகிழாது வழங்கிய பொற்படைகளால் அணியப்பட்ட உயர்ந்த தேர், பயன்பொருந்திய முள்ளூர்மலையுச்சியின் கண் உண்டாகிய மழையினது துளியினும் பல—எ - று.

இதன்கருத்து : ஏனையோர்கொடை செயற்கையென்றும், இவன் கொடை இயற்கையென்றும் கூறியவாறு. (கஉரு)

---

4. இழையணிதேர் : புறநா. ருகூ : 15; குறுந். ருசு0 : 1; கலி. கூக: 7. தேர்தருதல்: புறநா. ககச : 6, அடிக்.

5. முள்ளூர் மலையனுடைய தென்பது, "ஆரியர் துவன்றிய பேரிசை மூள்ளூர்ப், பலருடன் கழித்த வொள்வாண் மலையன்" (நற். கஎ0), "முரண்கொ டேப்பிற் செவ்வேன் மலையன், முள்ளூர்க் கானம்" (குறுந். ருகஉ), "முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி" (அகநா. உ0க) என்பவற்றாலும் விளங்கும்.

6. புறநா. ருச : 20 - 23, அடிக். 5 - 6. புறநா. கஉ0 : 18 - 9.

---

(கஉச) நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்

---

1. "புலரி விடியற் புள்ளோர்த்துக் கழிமின்" (மலைபடு. 448); "நாளும் புள்ளுங் கேளா ஆக்கமோ, டெங்கோ னேயின னுதவின் யாமத்துச், செங்கால் வெட்சியுந் தினையுந் தூஉய், மறிக்குரற் குருதி மன்றுதுக ளவிப்ப, விரிச்சி யோர்த்தல் வேண்டா, எயிற்புறந் தருதும் யாம் பகைப்புல நிரையே" தகடூர் யாத்திரை.

'அன்றி' என்னும் குறிப்புவினையெச்சத்தின் ஈற்று இகரம் செய்யுளில் உகரமாகத் திரிந்துவந்ததற்கும் (தொல். உயிர்மயக்கு. சூ. 35, இளம். ந.; நன். சூ. 172, மயிலை.; நன். வி. சூ. 173; இ. வி. சூ. 91, உரை), அது செய்தெனெச்சவினைக்குறிப்பாய் வந்ததற்கும் (தொல். வினை. சூ. 34, தெய்வச்.; ஷை. ஷை. ஷை. 31, ந.; நன். சூ. 343,

மயிலை.; (இ. வி. சூ. 246, உரை) மேற்கோள்.

2. திறனன்று மொழிதல் : "திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும், பொருளு மதனினூஉங் கில்" குறள், 644.

32



வறிது *பெயர்குந ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—நல்லநாளன்றாகப் போகிப் புள்நிமித்தம் இடையேநின்று தடுப்பச் செவ்வியன்றாகச் சென்றுகூடிக் கூறுபாடன்றாக முனியும் வார்த்தைகளைச் சொல்லினும் வறிதாக மீள்வாரல்லர், ஒழுங்குபட ஓசைநிறைந்து ஒலிக்கும் அருவியையுடைய பெருமைபொருந்திய மலையை யுடையோனைப் பாடியவர்கள்.— எ - று.

மலையற்பாடியோர், வறிதுபெயர்குநரல்லரெனக் கூட்டுக.

அன்றியென்பது, அன்றெனத் திரிந்தது செய்யுளாகலின்.

வறிதென்னும் குறிப்புவினையெச்சம், பெயர்குவரல்லரென்பதனுட் பெயர்தலோடு முடிந்தது. வறியரென்றுரைப்பாரும் உளர். (கஉச)

---

1 - 3. குறுந். கசo.

வினையெச்சக்குறிப்பு அடுக்கிவந்து ஒருவினை கொண்டதற்கு மேற்கோள் (நன். சூ. 354, மயிலை.); இவை அடுக்காகா வென்பர் விருத்தியுரையாசிரியர்; நன். சூ. 355.

4. புறநா. ௬௬௬ : 22 - 3.     ௵. புறநா. ௧௨.

ஙீ - ம். *பெயர்குவர்.

---

(௧௨௫) பருத்திப் பெண்டின் பனுவ லன்ன
நெருப்புச்சினந் தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை

1. பருத்திப்பெண்டு : புறநா. ௩௨௬ : 5; "ஆளில் பெண்டிர் தாளிற் செய்த, நுணங்குநுண் பனுவல் போலக் கணங்கொள" (நற். ௩௫௩); 'நுண்ணிய பலவாய பஞ்சு நுனிகளாற் கைவன் மகடூஉத் தனது செய்கை மாண்பினுல் ஓரிழைப் படுத்தலாம் உலகத்து நூல் நூற்றலென் பது' (இறை. சூ. 1, உரை); "பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச், செஞ்சொற் புலவனே சேயிழையா - எஞ்சாத, கையேவா யாகக் கதிரே மதியாக, மையிலா நூன்முடியு மாறு" நன்னூல், சூ. 23.

2. 'நெருப்புச்சினந் தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை...... என இவை இருவகை யுகரமும் ஒற்றடுத்து உரியசையாயினவாறு' தொல். செய். சூ. 10, பேர்.

1 - 2. புறநா. ௬௬௬ : 12 - 4; "இழுதி னன்ன வானிணம்" மலை படு. 244.

'இன்னுமவ்விலேசானே, நெருப்புச்சினந் தணிந்த நிணந்தயங்கு.



பருஉக்கண் மண்டைபொ றீழ்மாறு பெயர
உண்கு மெந்தைநிற் காண்குவந் திசினே

நள்ளா தார் மிடல்சாய்த்த
வல்லாள நின் மகிழிருக்கையே,
உழுத நோன்பக டழிதின் றாங்கு
நல்லமிழ் தாகநீ நயந்துண் ணு நறவே,
குன்றத் தன்ன களிறு பெயரக்
கடந்தட்டு வென்றோனு நிற்கூ றும்மே
வெலீஇயோ னிவனெனக்,
கழலணிப் பொலிந்த சேவடி நிலங்கவர்பு
விரைந்துவந் து *சமந் தாங்கிய
வல்வேன் மலைய னல்ல னாயின்
நல்லமர் கடத்த லெளிதும னமக்கெனத்
தோற்றோன் றானு நிற்கூ றும்மே
தொலைஇயோ னிவனென,
ஒருநீ யாயினை பெரும பெருமைக்
கிருக்கை சான்ற வுயர்மலைத்
திருத்தகு சேஎய்நிற் பெற்றிசி னோர்க்கே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறையும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் பொருதவழிச் சோழற்குத் †[1] துப்பாகிய தேர் வண்மலையனை வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனார் பாடியது.

கொழுங்குறையென்றாற் போலச் சினமில்லதனை உள்ளது போலக் கூறுவனவுங் கொள்ளாமோவெனின், உணர்வுடையனவற்றுக்கல்லது சுவைதோன்றாமையின் வெகுளியென்று ஈண்டுக் கூறப்படாவென்பது. இது பிறன்கட் டோன்றிய பொருள்பற்றி வரும்' தொல். மெய்ப்பாடு. சூ. 10, பேர்.

7. புறநா. ௩௩௬ : 14.
'அழி - வைக்கோல்; ஆளழி வாங்கி யதரி திரிப்ப : இது சிலப்பதிகாரம்; உழுத நோன்பக டழிதின் றாங்கு : இது புறநானூறு' (தக்க. 439, உரை); தொல். உவம. சூ. 20, பேர். மேற்.

[1]புறநா. ௧௨௨ : 5, அடிக்.
பி - ம். *சமார். †துப்பாகிய வொருவனும்மலையனை வடவண்ணத்தன் பேரிசாத்தன்.



இ - ள்.—பருத்திநூற்கும் [1]பெண்டாட்டியது சுகிர்ந்த பஞ்சுபோன்ற நெருப்புத் தன்வெம்மை ஆறுதற்கு ஏதுவாகிய நிணமசைந்த கொழுவிய தடிகளைப் பெரியவுடலிடத்தையுடைய கள்வார்த்த மண்டையோடு முறை முறையாக ஒன்றற்கொன்று மாறுபட உண்பேமாக, எம்முடைய தலைவ! நின்னைக் காண்பேன் வந்தேன், பகைவரது வலியைத் தொலைத்த வலிய ஆண்மையையுடையோய்! நினது மகிழ்ச்சியையுடைய இருக்கைக்கண்; உழுத வலிய பகடு பின் வைக்கோலைத் தின்றாற்போல நினது [2]தாளாற்ற

லாற்செய்த பொருளை யாவர்க்கும் அளித்துப் பின் நீ விரும்பியுண்ணும் கள், நல்ல அமிழ்தாவதாக; மலைபோலும் யானை பட எதிர்நின்று கொன்று வென்றவனும், நம்மை வெல்வித்தோன் இவனென நின்னையே மகிழ்ந்து சொல்லும்; வீரக்கழலாகிய அணியாற்சிறந்த செய்ய அடியாலே போர்க் களத்தைக் கைக்கொள்ளவேண்டி விரைந்துவந்து போரைத் தடுத்த வலிய வேலினையுடைய மலையன் அல்லனாயின் நல்ல போரைவெல்லுதல் நமக்கு எளிதெனத் தோற்றவனும் நம்மைத் தொலைவித்தோன் இவனென நின்னையே புகழ்ந்துசொல்லும்; ஆதலால், நீ ஒருவனாயினாய், பெரும! பெரிய மழைக்கு இருப்பிடமாதற்கு அமைந்த உயர்ந்த மலையையுடைய திருத்தக்க சேயையொப்பாய்! நின்னை நட்பாகவும் பகையாகவும் பெற் றோர்க்கு.—எ - று.

பனுவலன்ன நிணமென இயையும்.

நிலங்கவர்பென்பது, கவரவெனத் திரிக்கப்பட்டது. எமது நிலத் தைக் கைக்கொண்டெனினும் அமையும்.

தாளாற்றலாற் செய்தபொருளில் நல்லனவெல்லாம் பரிசிலர்க்கு வழங்கி எஞ்சியது உண்டலான், அழிதின்றாங்கென்றார்.

காண்குவர்தென்பன, ஒருசொன்னீர்மைப்பட்டு உண்குமென்பதற்கு முடிபாய் நின்றன.

உண்குமென்பது சுற்றத்தை உளப்படுத்தி நின்றமையின், பன்மை யொருமை வழுவமைதியாய் நின்றது.

மன்: கழிவின்கண் வந்தது.

பெரும! சேஎய்! வென்றோனும், வெலீஇயோன் இவனெனநிற் கூறும்; தோற்றோனும், தொலைஇயோன் இவனெனநிற்கூறும்; அதனால், நிற்பெற்றிசினோர்க்கு ஒருநீயாயினையாதலால், நின் மகிழிருக்கைக்

---

[1]பெண்டாட்டி - பெண்; "மழையு மஞ்சும் வளியும் போலும், செலவினொருபெண்டாட்டி" (தகடூர்யாத்திரை); 'ஒருபெண்டாட்டி தமரொடு கலாய்த்து' இறை. சூ. 1, உரை.

[2]"தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு, வேளாண்மை செய்தற் பொருட்டு" குறள், 212.



கண்ணே உண்கும் காண்குவந்திசின்; பகடு அழிநின்றாங்கு நீ உண்ணும் நறவு நல்ல அமிழ்தாகவென மாறிக்கூட்டுக.

நெருப்புச் சினந்தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை என்பதற்கு எரியாது [1]பூத்துக்கிடக்கின்ற தழல்போலும் நிணந்தயங்குகொழுங்குறை யெனினும் அமையும்.

பருஉக்கண்மண்டை யென்பதற்குக் கண்ணையுடைய உடலிடம் பரியமண்டையெனினும் அமையும். (கஉரு)

---

[1]"நீறுமேற் பூத்த நெருப்பு" பு. வெ. 166.

---

(கஉசு) ஒன்னார் யானை யோடைப்பொன் கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்
ஓடாப் பூட்கை யுரவோன் மருக,

வல்லே மல்லே மாயினும் வல்லே
நின்வயிற் கிளக்குவ மாயிற் கங்குல்
துயின்மடிந் தன்ன தூங்கிரு ளிறும்பிற்
பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந,
தெறலரு மரபினின் கிளையொடும் பொலிய
நிலமிசைப் *பரந்த மக்கட் கெல்லாம்
புலனழுக் கற்ற வந்த ணாளன்
இரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப்
பரந்திசை நிற்கப் பாடின னதற்கொண்டு
சினமிகு தானை வானவன் குடகடற்

---

2 - 3. பாணருக்குப் பொற்றாமரை அளித்தல்: புறநா. ௧௧ : 11 - 7, அடிக்.

4. புறநா ௧௬௬ : 7; "ஓடாப் பூட்கை" முருகு. 247.

6 - 7. "கார்வண்டு, தொக்கிருந்தா லித்துழலுந் தூங்கிருள்வெய் யோற்கொதுங்கிப், புக்கிருந்தா லன்ன பொழில்" நள. சுயம். 22.

8. புறநா. ௨௨௬ : 14; "பறைக்குர லருவி" (பதிற். ௭0); "பறையிசை யருவி" சிலப். ௨௫ : 28.

'இசை' என்னும் உரிச்சொல் ஒலித்தற் றொழிற்பண்பில் வந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 458, மயிலை.; நன். வி. சூ. 459.

பி - ம். *பிறந்த.



பொலந்தரு நாவா *யோட்டிய வவ்வழிப்

பிறகலஞ் செல்கலா தனையே மத்தை
இன்மை துரப்ப விசைதர வந்துநின்
வண்மையிற் றொடுத்தனம் யாமே, முள்ளெயிற்
றரவெறி யுருமின் முரசெழுந் தியம்ப
அண்ணல் யானையொடு வேந்துகளத் தொழிய
அருஞ்சமந் ததையத் தாக்கி நன்றும்
நண்ணாத் தெவ்வர்த் தாங்கும்
பெண்ணையம் படப்பை நாடுகிழ வோயே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசிற்றுறை.

மலையமான் திருமுடிக்காரியை †மாறோக்கத்து நப்பசலையார் பாடியது.

இ - ள்.—பகைவருடைய யானையினது பட்டத்திற் பொன்னைக் கொண்டு பாணரது தலை பொலியும்படி செய்து வாடாத பொற்றாமரையைச் சூட்டிய சிறந்த தலைமையினையும் புறக்கொடாதமேற்கோளினையும் உடைய பெரியோன்மரபினுள்ளாய்! ஒன்றைக் கற்றறிவேமாயினும் அறியேமாயினும் விரைய நின்னிடத்துப் புகழைச் சொல்லுவேமாயின், இராப்பொழுதுதான் ஓரிடத்தே உறங்குவதுபோன்ற செறிந்த இருளையுடைய சிறுகாட்டையும் பறையொலிபோலும் ஒலிபொருந்திய அருவியையுமுடைய முள்ளூர்க்கு வேந்தே! அழித்தற்கரிய தன்மையையுடைய நின்சுற்றத்துடனே பெருக நிலத்தின்மேல் மிக்க மாந்தரெல்லாரினும் அறிவின்கண் மாசற்ற [1]அந்தணனாகிய கபிலன் இரந்துசெல்லும் புலவர்க்கு இனிப் புகழ்தற்கு இடனில்லையாகப்பரந்து புகழ்நிற்பப் பாடினான்; அதனைக் கொண்டு சினமிக்க சேனையையுடைய [2]சேரன் மேல்கடலின்கட் பொன்னைத்தரும் நாவாய் செலுத்திய அவ்விடத்து வேறுசில மரக்கலம் போகமாட்டாத அத்தன்மையையுடையேமாயும் எமது மிடி துரக்க

நின்புகழ் கொடுவா வந்து நின்து வண்மையிலே சில சொல்லத் தொடுத்தனம், யாங்கள்; மூட்போலும் பல்வினையுடைய பாம்பை எறியும் இடியேறுபோல முரசு கிளர்ந்தொலிப்பத் தலைமையையுடைய யானையுடனே அரசு போர்க்களத்தின்கட்படப் பொறுத்தற்கரிய பூசலைச் சிதறவெட்டிப்

19. அரவெறியுரும்: புறநா. ௩௮ : 6 - 7, அடிக். முரசுக்கு இடி: புறநா. கள: 39, அடிக்.

[1]அந்தணனாகிய கபிலன்: புறநா : ௨௦௦: 13, ௨௦௧: 7.

[2]இச்சேரன், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன்.

பி - ம். *யோட்டிய வழிப்பிறர்கலஞ். †மாறேருக்தது.



பெரிதும் பொருந்தாத பகைவரைத் தடுக்கும் பெண்ணையாற்றுப்பக்கத்தை யுடைய நாட்டையுடையோய் !—எ - று.

உரவோன்மருக ! பொருந ! நாடுகிழவோய் ! நின்வயிற் கிளக்குவமாயின், அந்தணாளன் கிளையொடும் பொலிய இசைநிற்பப் பாடினன்; அதற்கொண்டு பிறகலம் செல்லாத அனையேமாயும், இன்மை துரத்தலால் இசைதர வந்து நின்வண்மையிற் சிலதொடுத்தேம் யாமெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

மக்கட்கெல்லாமென்பது, ஐந்தாவதன்மயக்கம். மக்கட்கெல்லாம் ஒக்கவெனினும் அமையும்.

வண்மையிற்றொடுத்தனமென்பதற்கு நின் வண்மையால் விளைப் புண்டனமெனினும் அமையும். (௧௨௬)

(கஉஎ களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாடின் பனுவற் பாண ருய்த்தெனக்,
களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப,
ஈகை யரிய விழையணி மகளிரொடு
சாயின் றென்ப வாஅய் கோயில்,
சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
உரைசா லோங்குபுக ழொரீஇய
முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே.[1]

திணை - அது; துறை - கடைநிலை.
ஆயை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது.

---

1. புறநா. கசுகு : 5; "கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்ப" (நெடுநல். 70); "கருங்கோட்டுச் சீறியாழ்" மலைபடு. 534.

1 - 6. "ஒப்புரவி னல்வருங் கேடெனி னஃதொருவன், விற்றுக் கோட் டக்க துடைத்து" (குறள், 220); "வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன், நல்குரவே போலு நனிநல்ல" நீதிநெறி. 67.

7 - 10. "நறியன வயலவர் நாவி னீர்வா, உறுபத நுங்கிய வொருவ னுகயான்" கம்ப. பள்ளியடை. 111.

[1]மு. பாடாண்டிணைத் துறைகளுள், கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 29, இளம்.; ஷை. ஷை. சூ. 35, ந.

இ - ள்.—களாப்பழம்போலும் கரிய கோட்டையுடைத்தாகிய சிறிய யாழைக்கொண்டு பாடும் இனிய [1]பாட்டைவல்ல பாணர் பரிசில்பெற்றுக் கொண்டு போனார்களாக, களிறுகள் இல்லையாகிய புல்லிய பக்கத்தை யுடைய நெடிய தறியின்கண்ணே காட்டுமயில்கள் தத்தம் இனத்தோடு தங்கப் பிறிதோராணிகலமுமின்றிக் கொடுத்தற்கரிய மங்கலிய சூத்திரத்தையணிந்த மகளிருடனே பொலிவழிந்து சாய்ந்ததென்று சொல்லுப, ஆயுடைய கோயிலை; நுகர்தற்கு இனிதாகிய தாளிப்பையுடைய அடிசிலைப் பிறர்க்கு உதவலின்றித் தம்முடைய வயிற்றையே நிறைத்துச் சொல்லு தற்கமைந்த மேம்பட்ட புகழைநீங்கிய முரசுபொருந்திய செல்வத்தினை யுடைய அரசர்கோயில், இதனை ஒவ்வாது.—எ - று.

என்றதன் கருத்து: செல்வர் நகர், பெருந்திருவுடைமையிற் சிறந்தது போன்றிருப்பினும் ஆய்கோயில் வறிதெனினும் இஃது அதனினுஞ் சிறந்ததென்பதாம்.

ஆய்கோயில் சாயின்றென்ப; ஆயினும், முரசுகெழுசெல்வர் நகர் இதனை ஒவ்வாதெனக் கூட்டுக. (கஉஎ)

---

[1]பாணர் களிறு பெறுதல்: புறநா. கசㅇ : 8, அடிக்.

---

(கஉஅ) மன்றப் பலவின் மாச்சினை மந்தி

இரவலர் நாற்றிய விசிகூடு முழவின்
பாடின் றெண்கண் கனிசெத் தடிப்பின்
அன்னச் சேவன் மாறெழுந் தாலும்
கழறொடி யாஅய் மழைதவழ் பொதியில்,
ஆடுமகள் குறுகி னல்லது
பீடுகெழு மன்னர் குறுகலோ வரிதே.

**திணை - அது; துறை - வாழ்த்து; இயன்மொழியுமாம்.**
**அவனை அவர் பாடியது.**

---

1. *மன்றப்பலவு* : புறநா. ௱௭௪ : 5.

1 - 2. புறநா. ௮௧ : 7 - 8.

1 - 3. *முழவுக்குப் பலாப்பழம்*; புறநா. ௨௯ : 1.

3. *செத்து - கருதி; "தூவற் கலித்த புதுமுகை யூன்செத், தறியா தெடுத்த புன்புறச் சேவல்"* மலைபடு. 146 - 7.

5. மூ. குறுந். ௮௪ : 3.

6 - 7. புறநா. ௯௪ : 4 - 14, ௧0௧ : 15 - 8, ௧௧௧.



இ - ள்.—ஊர்ப்பொதுவின்கண் பலவினது பெரிய கோட்டின்கண் வாழும் மந்தி பரிசிலர் தூக்கிவைக்கப்பட்ட பிணிப்புப் பொருந்திய மத்தளத்தினது ஓசையினிய தெளிந்த கண்ணைப் பலாப்பழமென்று கருதித் தட்டினவிடத்து அதன்கண் வாழும் அன்னச்சேவல் அவ்வோசைக்கு மாறாக எழுந்து ஒலிக்கும் கழல இடப்பட்ட வீரவளையையுடைய ஆயது

முகில்படியும் பொதியின்மலே, ஆடச்செல்லும் மகள் அணுகினல்லது பெருமைபொருந்திய அரசர் அணுகுதல் அரிது.—எ - று.

இது, கொடைச்சிறப்பும் வென்றியும் கூறியவாருயிற்று. (கஉஅ)

---

(கஉகூ) *குறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
வாங்கமைப் பழுனிய தேறன் மகிழ்ந்து
வேங்கை முன்றிற் குரவை யயரும்
தீஞ்சுளைப் பலவின் மாமலைக் கிழவன்
ஆஅ யண்டிர னடுபோ ரண்ணல்
இரவலர்க் கீத்த யானையிற் கரவின்று,

---

2. "தூம்பகம் பழுனிய தீம்பிழி மாந்தி" (பதிற். அக : 21); "நெடுங்க ணுடமைப் பழுனிய கடுந்திறற், பாப்புக் கடுப்பன்ன தோப்பி", "அம்பணை விளைந்த தேக்கட் டேறல்" (அகநா. ௬௪அ, ௬௬அ), "நீடமை விளைந்த தேக்கட் டேறல்" முருகு. 195.

1 - 3. தேறலுண்டு குரவையாடுதல்: புறநா. உச : 4 - 6; "மன்ற வேங்கை மணநாட் பூத்த, மணியே ரரும்பின் பொன்வீ தாஅய், வியலறை வரிக்கு முன்றிற் குறவர், மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்" (அகநா. உ௬உ : 6 - 10); "வாங்கமைப் பழுனிய நறவுண்டு, வேங்கை முன்றிற் குரவையுங் கண்டே" (நற். உஎகூ : 9 - 10); "நறவுநாட் செய்த குறவர் தம் பெண்டிரொடு, மான்றோற் சிறுபறை கறங்கக் கல்லென, வான்றோய் மீமிசை யயருங் குரவை" மலைபடு. 320 - 22.

6. பரிசிலர்க்கு யானை கொடுக்கப்படுதலே, புறநா. க௬0, க௬க,

கஙு, கஅ0, கடுக-ஆம் பாட்டுக்களாலும், "இரவலர் வரூஉ மளவை யண்டிரன், புரவெதிர்ந்து தொகுத்த யானை போல" (நற். உஙஎ), "துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு, பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கென" (பொருந. 125 - 6), "குன்றூ கியபொன்னும் வேழக் குழாமுங் கொடைபுகழ்ந்து, சென்றூர் முகக்கும்" (தஞ்சை. 149) என்பவற்றூலும் அறிக.

பி - ம். *குறைபிறை.





வான மீன்பல பூப்பி னானு
தொருவழிக் கருவழி யின்றிப்
பெருவெள் ளென்னிற் பிழையாது மன்னே.

திணை - அது; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—குறிய இறப்பையுடைய சிறிய மனையின்கட் குறமக்கள் விளைந்த மூங்கிற்குழாயின்கண் வார்த்திருந்து முதிர்ந்த மதுவை நுகர்ந்து வேங்கைமரத்தையுடைய முற்றத்தின்கட் குரவைக்கூத்தை யாடும் இனிய சுளையையுடைத்தாகிய பலாமரத்தையுடைய பெரிய மலையை யுடையோன், ஆயாகிய அண்டிரன், கொல்லும் போரைச் செய்யும் தலைவன், அவன் இரப்போர்க்குக் கொடுக்கப்பட்ட யானைத்தொகை போல, மேகம் மறைத்தலின்றி ஆகாயம் பலமீனையும் பூக்குமாயின் அமை யாது, ஓரிடத்தும் கரிய இடம் இல்லையாகப் பெருக வெண்மையைச் செய்யுமாயின் அம்மீன்றொகை அதனுக்குத் தப்பாது.—எ - று.

யானையிற் பிழையாதென இயையும். மன்: அசை. (கஉக).

---

(கஙo) விளங்கு *மணிக் கொடும்பூ ணாஅய் நின்னாட்
டிளம்பிடி யொருசூல் பத்தீ னும்மோ
நின்னுநின் மலையும் பாடி வருநர்க்

---

1. புறநா. உOO : 8.

னளால ஒழிந்த ஏனைப்புள்ளி சிறுபான்மை விளியேற்றதற்கும் (தொல். விளி. சூ. 12, இளம்.; சே.; கல்.; ந.), யகார வீற்றுயர்திணைப் பெயர் அளபெடையாதிய விளியுருபேற்றதற்கும் (நன். சூ. 309, மயிலை.)

மேற்கோள்.

1 - 2. 'விளங்குமணிக் கொடும்பூ ணுஅய் . . . பத்தினும்மோ : என்புழி யகரம் விளியேற்றதாலெனின் அவ்வாறு வருவன வழக்குப் பயிற்சியின்மையின் எடுத்தோதிற்றிலராயினும் செய்யுண் மருங்கினென் னும் அதிகாரப்புறநடையான் இங்கிகான வெல்லாம் அமைத்துக்கொள்க" (தோல். விளி. சூ. 35, தெய்வச்.); யகாரவீறு சேய்மைக்கண் அள பெடுத்தல் விளியுருபாமெனக் கூறி இவ்வடிகளை மேற்கோளாகக் காட்டி னர்; இ. வி. சூ. 212, உரை.

3. மலையைப்பாடுதல் : புறநா. கங்க : 3; கசங : 12; "தாங்கரு மரபிற் றன்னுந் தந்தை, வான்பொரு நெடுவரை வளனும் பாடி" சிறு பாண். 127 - 8, அடிக்.

பி - ம். *மணிப் பசும்பூணய், மணிக்கொடும் பூணய்.



கின்முகங் கரவா துவந்துநீ யளித்த
அண்ணல் யானை யெண்ணிற் கொங்கர்க்
குடகட லோட்டிய ஞான்றைத்
தலைப்பெயர்த் திட்ட வேலினும் பலவே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள். விளங்கிய மணிகளான் இயன்ற வளைந்த பூணுகிய

ஆரத்தையுடைய ஆயே! நினது நாட்டின்கண் இளையபிடி ஒருகருப்பம் பத்துக் கன்று பெறுமோதான்? நின்னையும் நின்மலையையும் பாடிவரும் பரிசிலர்க்கு இனிய முகத்தை ஒளியாது வெளிப்படுத்திக் காதலித்து நீ கொடுத்த தலைமையையுடைத்தாகிய யானையை யெண்ணின், நீ கொங்கரை மேல்கடற்கண்ணே ஓட்டப்பட்ட நாளில் அவர் புறக் கொடுத்தலால் தம்மிடத்தினின்றும் பெயர்த்துப் போகடப்பட்ட வேலினும் பல.— எ - று.

தலைப்பெயர்த்திட்ட வேலென்ற கருத்து: [1]படைக்கலமில்லாதாரை ஏதஞ்செய்வாரில்லையாதலின், தம்முயிர்க்கு அரணாகப் பெயர்த்திடப் பட்ட வேலென்பதாம்; அன்றி, புறக்கொடுத்தோடுகின்றார் முன்னாகக் கிச் சாய்த்துப் பிடித்தவேலென்பாரும் உளர்.

இதனால், கொடைச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் கூறியவாறு. (கரு0)

---

3 - 5. புறநா. கஉக : 6, அடிக்.

[1]சிறுபஞ்ச. 41; "நிராயுதன், மார்பி லெய்யவோ வில்லிகல் வல்லதே", "நின்ற வன்னிலை நோக்கிய நெடுந்தகை யிவனைக், கொன்ற லுன்னிலன் வெறுங்கைநின்றானெனக் கொள்ளா" (கம்ப. வாலிவதை. 90, முதற்போர். 251); "நிராயுதரைக் கொன்றா ரெனுந்தீமை, எய்தாமை வேண்டும்" பெரிய. எறிபத். 39.

---

(கருக) மழைக்கணஞ் சேக்கு மாமலைக் கிழவன்
வழைப்பூங் கண்ணி வாய்வா ளண்டிரன்
குன்றம் பாடின கொல்லோ

களிறுமிக வுடையவிக் கவின்பெறு காடே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

---

3. புறநா. கஙo : 3, அடிக்கு. 4. புறநா. கஉக : 6, அடிக்.



இ - ள்.—முகிலினம் சென்று தங்கும் உயர்ந்தமலைக்குத் தலைவன், சுரபுன்னைப் பூவால் தொடுக்கப்பட்ட கண்ணியினையும் வாய்த்த வாளினையு முடைய அண்டிரனது மலையைப் பாடினவோ களிறுகளை மிகவுமுடைய இந்தக் கவினையுடைய காடு?—எ - று.

யானைக்குப் பிறப்பிடமாயிருக்கிற காட்டினும் அண்டிரனைப் பாடினோர், யானை மிகவுமுடையரென்று அவன் கொடைச்சிறப்புக் கூறிய வாறு.

ஆய்க்கு அண்டிரனென்பதும் ஒரு பெயர். (கஙக)

---

(கஙஉ) முன்னுள்ளு வோனைப் *பின்னுள்ளி னேனே
ஆழ்கென் னுள்ளம் போழ்கென் னாவே
பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே
நரந்தை நறும்புன் மேய்ந்த கவரி
குவளைப் பைஞ்சுனை பருகி யயல
தகரத் தண்ணிழற் பிணையொடு வதியும்

வடதிசை யதுவே வான்றோ யிமயம்
தென்றிசை யாஅய்குடி யின்றாயிற்
பிறழ்வது மன்னோவிம் மலர்தலை யுலகே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—யாவரினும் முன்னே நினைக்கப்படுமவனைப் பின்பே நினைத்தேன் யான்; அவ்வாறு நினைந்த குற்றத்தால் எனதுள்ளம் அமிழ்ந்திப்போவதாக; அவனையன்றிப் பிறரைப் புகழ்ந்த நாவும் கருவியாற் பிளக்கப்படுவதாக; அவன் புகழன்றிப் பிறர் புகழைக் கூறக்கேட்ட எனது செவியும் பாழ்பட்ட ஊரின்கட் கிணறுபோலத் தூர்வதாக; நரந்தையையும் நறியபுல்லையும் மேய்ந்த கவரிமாக் குவளைப்பூவையுடைய பசிய சுனையின் நீரை நுகர்ந்து அதன் பக்கத்தவாகிய தகரமாத்தினது குளிர்ந்த நிழலின்

---

5. புறநா. கககூ : 1; "குவளையம் பைஞ்சுனை" மலைபடு. 251.

4 - 7. "கவரி, பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவும், ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம்" பதிற். கக : 21 - 3.

8. 'திசை' என்னுஞ்சொல் ஏழாம்வேற்றுமையுருபாக வந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 301, மயிலை.

பி - ம். *பின்னுள்ளின் யானே.



கண் தனது பிணையுடனே தங்கும் வடதிசைக்கண்ணதாகிய வானைப் பொருந்தும் இமயமலையும் தென்றிசைக்கண் ஆய்குடியும் இல்லையாயின்

இந்தப் பரந்த இடத்தையுடைய உலகம் கீழ்மேலதாகிக் கெடும்.— எ - று.

*'முன்னுள்ளு வோனைப் பின்னுள்ளினேன்' என உள்ளம் ஆழ்தற் குக்காரணங் கூறினமையால், பிறரைப்புகழ்ந்த நாவெனவும், பிறர்புகழ் கேட்ட செவியெனவும் ஏனையவற்றிற்கும் காரணம் வருவித்து உரைக்கப் பட்டது.

அன்றி வடதிசை தேவருலகோடு ஒத்தலான், இமயத்தால் தாங்க வேண்டுவதில்லை; தென்றிசைக்கண் ஆய்குடி தாங்கிற்றில்லையாயின், இவ்வுலகு பிறழும்; அதனால் இமயத்துக்கு முன்னுள்ளப்படுவோனைப் பின்னுள்ளினேனாதலால், எனது உள்ளம் ஆழ்க; எனது நாப் போழ்க; எனது செவி தூர்வதாக வென்றதாக்கி உரைப்பினும் அமையும். (கஙஉ)

---

பி - ம். * இமயத்திற்கு ஒருதரமாக உலகத்தைத் தாங்கும் ஆய் உளனாகவும் பிறரிசையைக் கேட்ட செவிதூர்க; கேட்டுப் பிறரை நினைத்த உள்ளம் ஆழ்க; நினைத்துப் பிறரைப்பாடிய நாப் போழ்வதாக வென உள்ளமொழிந்தனவற்றிற்கும் காரணம் வருவித்துக்கொள்க.

---

(கஙங) மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்
கேட்பி னல்லது காண்பறி யலையே
காண்டல் வேண்டினை யாயின் மாண்டநின்
விரைவளர் கூந்தல் வரைவளி யுளரக்
கலவ மஞ்ஞையிற் காண்வர வியலி
மாரி யன்ன *வண்மைத்

---

4. "உரைத்த சந்தி னார விருங்கதுப், பைதுவர லசைவளி யாற்றக்

கைபெயரா, ஒவியல் வார்மயி ருளரினள் கொடிச்சி" அகநா. கO௨ : 3 - 5.

5. "மயில்கண் டன்ன மடநடை மகளிர்" (முருகு. 205); "நன்மா மயிலின் மென்மெல வியலி" மதுரை. 608.

4 - 5. " அணிகிளர் கலாவ மைதுவிரித் தியலும், மணிபுரை யெருத்தின் மஞ்ஞை போலநின், வீபெய் கூந்தல் வீசுவளி யுளர, எகுதி மடந்தை" நற். உசுச : 3 - 6.

6. புறநா. ௯௪ : 6 - 7, அடிக்., ௯௯ : 15, அடிக்.; "மாரிமழை வள்ளல்" (சீவக. 500); "மழையொன்று வண்டடக்கை வள்ளியோற்

பி - ம். *வண்கை.



தேர்வே ளாயைக் காணிய சென்மே.[1]

திணை - அது; துறை - விறலியாற்றுப்படை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—மெல்லிய இயல்பினையுடைய விறலி ! நீ நல்லபுகழைச் செவியாற் கேட்பினல்லது அவன்வடிவைக் காண்டலறியாய்; காண்டலை விரும்பினையாயின், மாட்சிமைப்பட்ட நினது மணம்வளரும் கூந்தலிலே வரையிடத்துக் காற்று வந்தசைப்பப் பீலியையுடைய மயில்போலக் காட்சி உண்டாக நடந்து மழைபோன்ற வண்மையையுடைய தேரினையுடைய வேள் ஆயைக் காணச் செல்வாயாக.—எ - று.

'விரைவளர் கூந்தல் வரைவளி யுளர' என்றது, 'கொண்டைமேற் காற்றடிக்க' என்பதொரு வழக்குப்பற்றி நின்றது.

என்றதனாற் பயன் : பிறிதொன்றால் இடையூறில்லையென்பதாம்.

ஆய் மாரியன்ன வண்மையனாதலின், விறலியை அம்மாரியைக் கண்ட மயில்போலக் களித்துச் செல்லென்றவாறும்.

யாழநின்னென்று பாடமோதுவாரும் உளர். (கருரு)

---

பாடி'', ''எழிலி வான மெள்ளினன் றரூஉம், கவிகை வண்கைக் கடுமான் றோன்றல்'', ''மழைவிழை தடக்கை வாய்வா ளெவ்வி'', ''கார்கள்ள வுற்ற பேரிசை யுதவி'' தொல். உவம. சூ. 11, 14, பேர். மேற்.

'அன்ன' என்பது பயனுவமத்தின்கண் வந்ததற்கு மேற்கோள்; தொல். உவம. சூ. 13, இளம்.; இ. வி. சூ. 642, உரை.

6 - 7. 'மாரியன்ன வண்மைத், தேர்வே ளாயைக் காணிய சென்மே: என்பது பயனுவமம்; என்னே ? மாரியான் விளக்கப்படும் பொருளும் வண்மையாற் பெறும் பொருளும் ஒக்குமென்றவாறு' (தொல். உவம. சூ. 1, பேர்.; இ. வி. சூ. 639, உரை); உவமையினது உயர்ச்சியாற் பொருட்கு உயர்ச்சியாயிற்று என்பதற்கும், தொன்றுதொட்டு வரும் உவமைக்கும் மேற்கோள் (மாறன். 92, 95, உரை); ஈன்றவென் என்னும் கல்லாடச் செய்யுளில், 'மறிதிரை......மேனியை' (அடி. 12 - 8) என்பதன் விசேட வுரையில் இவ்வடியைப் பயனுவமத்தின் வகை யென்று மேற்கோள் காட்டுவர் மயிலேறும் பெருமாள்பிள்ளை.

1மு. பாடாண்டிணைத்துறைகளுள் விறலியாற்றுப்படைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை சூ. 30, இளம்.; ஷை. ஷை. ஷை. 36, ந.



(கரு-சா) இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்

அறவிலை *வணிக னாயலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன் றவன்கைவண் மையே.[1]

திணை - அது; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—இப்பிறப்பின்கட் செய்ததொன்று மறுபிறப்பிற்கு உதவு மென்று கருதிப் பொருளை விலையாகக் கொடுத்து அதற்கு அறங் கொள்ளும் வணிகன் ஆய் அல்லன்; அமைந்தோர் பிறரும் போயவழி யென்று உலகத்தார் கருத அந்த நற்செய்கையிலே பட்டது, அவனது கைவண்மை.—எ - று.

அன்றி, ஆய் அறவிலை வணிகன் அல்லன்; பிறரும் சான்றோர்சென்ற நெறியெனக் கருதி அச்செய்கையிலே பட்டதன்று, அவன் கைவண்மை யென்றுரைப்பாரும் உளர். இதற்குப் பட்டன்றென்பது மறைப்பொருள் படாமையின், பட்டதன்றென்பது பட்டன்றென விகாரமாகக் கொள்க.()

---

1 - 2. புறநா. கசக : 14 - 5; "எற்றகை மாற்றுமை யென்னுனும் தாம்வரையா, தாற்றுதார்க் கீவதா மாண்கடன்" (நாலடி. 98); "இம்மை யாற் செய்ததை யிம்மையே யாம்போலும், உம்மையே யாமென்பா ரோரார்காண்" (திணைமாலை. 123); "வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாம், குறியெதிர்ப்பை நீர துடைத்து" (குறள், 221); "வைப்பானே வள்ளல் வழங்குவான் வாணிகன்" (சிறுபஞ்ச. 34); "ஆற்றுநர்க் களிப்போ ரறவிலை பகர்வோர்" (மணி. கக : 92); "சிறுநன்றி யின்றிவர்க்கியாஞ் செய்தக்கா ளைப், பெறுநன்றி மன்னும் பெரிதென் - றுறுநன்றி, தானவாய்ச் செய்வதூஉந் தானமன் றென்பவே, வானவா முள்ளத் தவர்" யா. வி. சூ. 4, மேற்.

[1]மூ. 'இது பிறருஞ் சான்றோர் சென்றநெறி யென்றமையின், அய லோரையும் அடுத்தூர்ந்தேத்தியது' (தொல். புறத்திணை. சூ. 35) என்பர்

நச்சினார்க்கினியர்.

பி - ம். *வாணிக ஞஅயலன் பிறவும்.

---

(கஙரு) கொடுவரி வழங்குங் கோடுயர் நெடுவரை
அருவிடர்ச் சிறுநெறி யேறலின் வருந்தித்
தடவரல் கொண்ட தகைமெல் லொதுக்கின்



வளைக்கை விறலியென் பின்ன ளாகப்,
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
வரிநவில் பனுவல் புலம்பெயர்ந் திசைப்பப்
படுமலை நின்ற பயங்கெழு சீறியாழ்
ஒல்க லுள்ளமொ டொருபுடைத் தழீஇப்,
புகழ்சால் சிறப்பினின் னல்லிசை யுள்ளி
வந்தனெ னெந்தை யானே யென்றும்
மன்றுபடு பரிசிலர்க் காணிற் கன்றொடு
கறையடி யானை யிரியல் போக்கும்
மலைகெழு நாடன் மாவே ளாஅய்,
களிறு மன்றே மாவு மன்றே
ஒளிறுபடைப் புரவிய தேரு மன்றே,

பாணர் பாடுநர் பரிசில ராங்கவர்
தமதெனத் தொடுக்குவ ராயி னெமதெனப்
பற்ற றேற்றாப் பயங்கெழு தாயமொ
டன்ன வாகநின் னூழி, நின்னைக்

---

1 - 4. புறநா. கருகூ : 3 - 4; "உயர்ந்தோங்கு பெருமலை யூறின் றேறலின், மதந்தபு ஞமலி நாவி னன்ன, துளங்கியன் மெலிந்த கல்பொரு சீறடிக், கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ, விலங்குமலைத் தமர்ந்த சேயரி நாட்டத், திலங்குவளை விறலியர்" மலைபடு. 41 - 6.

6. "வரியெனப் படுவது வகுக்குங் காலைப், பிறந்த நிலனும் சிறந்த தொழிலும், அறியக் கூறி யாற்றுழி வழங்கல்", "கண்கூடு காண்வரி யுள்வரி புறவரி, கிளர்வரி யைந்தோ டொன்ற வுரைப்பிற், காட்சி தேர்ச்சி யெடுத்துக் கோளென, மாட்சியின் வரூஉ மெண்வகை நெறித்தே" சிலப். அ : 77, 108, உரை, மேற்.

7. படுமலைப்பாலை - பாலைப்பண் பன்னிரண்டனுள் ஒன்று; அது கைக்கிளை குரலாகத் தோன்றுவது.

8. ஒல்கல் - தளர்தல்; "ஒற்கா வுள்ளத் தொழியா ளாகி" மணி. கடு : 18.

11. "வயிரிய மாக்கள்...மன்ற நண்ணி" (பதிற். உக); "மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர்" மலைபடு. 492.

12. புறநா. கஉக: 6, அடிக்.; பொருந. 125 - 7.

11 - 2. "பொருநர்க், குருகெழு பெருஞ்சிறப்பி, னிருபெயர்ப் பேராயமொ, டிலங்குமருப்பிற் களிறுகொடுத்தும்" மதுரை. 99 - 102.

காண்டல் வேண்டிய வளவை வேண்டார்
உறுமுரண் கடந்த வாற்றற
பொதுமீக் கூற்றத்து நாடுகிழ வோயே.

திணை - அது; துறை - பரிசிற்றுறை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—புலி இயங்கும் சிகரம் உயர்ந்த நெடிய மலையின்கண் ஏறு தற்கரிய பிளப்பின்கட் சிறியவழியை யேறுதலான் வருத்தமுற்று உடல் வளைவைப் பொருந்திய பயில அடியிட்டு நடக்கின்ற மெல்லியநடையினை யுடைய வளையையணிந்த கையையுடைய விறலி என்பின்னே வரப் பொன் னைக் கம்பியாகச் செய்தாற்போன்ற முறுக்கடங்கிய நரம்பினையுடைய வரிப்பொருண்மையோடு பயிலும் பாட்டு [1]நிலந்தோறும் மாறிமாறி யொலிப்பப் படுமலைப்பாலை நிலைபெற்ற பயன்பொருந்திய சிறிய யாழைத் தளர்ந்த நெஞ்சத்துடனே ஒருமருங்கிலே அணைத்துக்கொண்டு புகழ்தற் கமைந்த தலைமையையுடைய நினது நல்லபுகழை நினைந்துவந்தேன், என் னுடைய இறைவா! யான்; எக்காலும் மன்றத்தின்கண் வந்த பரிசிலரைக் காணிற் கன்றுடனே [2]கறைபொருந்திய அடியையுடைய யானையை அணி யணியாகச் சாய்த்துக்கொடுக்கும் மலையையுடைய நாடனே! மாவேளாகிய ஆயே! யாம் வேண்டியது, யானையுமன்று; குதிரையுமன்று; விளங்கிய பொற்படையையுடைய குதிரையிற் பூட்டப்பட்ட தேருமன்று; பாணரும் புலவரும் கூத்தர் முதலாயினருமாகிய அவர்கள் தம்முடைய பொருளென வளைத்துக்கொள்வாராயின் அதனை எம்முடையதென்று அவர்பால் நின் றும் மீண்டு கைக்கொள்ளுதலைத் தெளியாத பயன்பொருந்திய உரிமை யோடு கூடி மற்றும் அத்தன்மையவாக, நின்னுடைய வாழ்நாட்கள்; யான் வந்தது நின்னைக் காண்டல்வேண்டிய மாத்திரையே. பகைவரது மிக்க மாறுபாட்டைவென்ற வலியையுடைய, யாவரும் ஒப்பப் புகழும் நாட்டையுடையாய்.—எ - று.

நாடுகிழவோய் ! யான் வந்தது, களிறுமுதலாயின வேண்டியன்று ; நின்னைக் காண்டல்வேண்டிய அளவே; நின் ஊழி அன்னவாகவெனக் கூட்டுக.

---

22. ‘மீக்கூற்றென்பது புகழ்; அது மேலாய சொல்லாற் பிறந்த புகழென்னும் மேம்பாடெனப் பொருள்தந்து நிற்றலிற் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை’ நன். வி. சூ. 178.

[1]ஐந்திணைக்கும் உரியனவாக ஐந்துயாழும் பண்களும் உண்மையின் இங்ஙனம் கூறினர்.

[2]புறநா. ௩௯ : 1 - 2, உரை.





அல்லதூஉம், யானைமுதலாயினவன்றிப் பிறவற்றையும் பாணர் முதலாயினர் தமதெனத் தொடுக்குவராயினென இயைத்துரைப்பினும் அமையும்.

கொடுவரி: பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; ஆகுபெயருமாம்.

இனி, ‘தகைமெல்லொதுக்கின்’ எனவும், ‘வடிநவில்பனுவல்’ எனவும், ‘ஒளிறுநடைப்புரவிய’ எனவும் பாடமோதுவாரும் உளர்.

வடிநவில் பனுவல் புலம்பெயர்த்திசைப்பவென்றுகொண்டு வடித்தல் பயின்ற பாட்டை இசைதோறும் பெயர்த்து வாசிக்கவென்றுரைப்பாரும் உளர்.

பொதுமீக்கூற்றம், பொதியிலுமாம். (௧௩௫)

---

(கஙகூ) யாழ்ப்பத்தர்ப் புறங்கடுப்ப
இழைவலந்த பஃறுன்னத்
திடைப்புரைபற்றிப் பிணிவிடாஅ
ஈர்க்குழாத்தோ டிறைகூர்ந்த
பேஎற்பகையென வொன்றென்கோ,
உண்ணுமையி னூன்வாடித்
தெண்ணீரிற் கண்மல்கிக்
கசிவுற்றவென் பல்கிளையொடு
பசியலைக்கும் பகையொன்றென்கோ,
அன்னதன்மையு மறிந்தீயார்
நின்னதுதாவென நிலைதளர
மரம்பிறங்கிய நளிச்சிலம்பிற்
குரங்கன்னபுன் குறுங்கூளியர்

---

4 - 5. புறநா. சுக : 3 - 4, அடிக்., கஙஅ : 5.

10. 'செய்த' என்பதன் குறிப்பாய் 'அன்ன' என்பது வந்ததற்கு மேற்கோள்; தொல். வினை. சூ. 37, ந.; இ. வி. சூ. 243, உரை.

13. "மகாஅ ரன்ன மந்தி" (சிறுபாண். 56); "கடும்பறைக் கோடியர் மகாஅ ரன்ன, நெடுங்கழைக் கொம்பர்க் கடுவ னுகளினும்" மலைபடு. 236 - 7.



பரந்தலைக்கும் பகையொன்றென்கோ,

ஆஅங், கெனைப்பகையு மறியுனனாய்
எனக்கருதிப் பெயரேத்தி
வாயாரநின் னிசைநம்பிச்
சுடர்சுட்ட சுரத்தேறி
இவண்வந்த பெருநசையேம்,
எமக்கீவோர் பிறர்க்கீவோர்
பிறர்க்கீவோர் தமக்கீபவென
அனைத்துரைத்தனன் யானாக,
நினக்கொத்தது நீநாடி
நல்கினை விடுமதி பரிசில், அல்கலும்
தண்புனல் வாயிற் றுறையூர் முன்றுறை
நுண்பல மணலினு மேத்தி
உண்குவம் பெருமநீ நல்கிய வளனே.

திணை - அது; துறை - பரிசில்கடாநிலை.

அவனைத் துறையூர் *ஓடைகிழார் பாடியது.

இ - ள்.—யாழ்ப்பத்தரினது புறத்தையொப்ப இழைசூழ்ந்த பல தையலினது இடைக்கண் உளவாகிய புரைகளைப்பற்றி ஒன்றோடொன்று தொடர்ந்த பிணிப்பு விடாதேகிடக்கின்ற ஈரினது நிரளோடு தங்குதல் மிக்க பேனாகிய பகையை ஒரு பகையென்பேனோ? உண்ணாமையின், உடம்பு புலர்ந்து கண் தெளிந்தநீரால் நிறைந்து வியர்ப்புற்ற எனது பல சுற்றத்தோடு பசிநோய் வருத்தும் பகையை ஒருபகையென்பேனோ? அப்பெற்றிப்பட்ட எனது இயல்பையும் அறியாராய் நின்கைப்பொருளைத் தாவென்று சொல்லி எம்முடைய நிலைகள் தளரும்படி மரங்கள்செறிந்த குளிர்ந்தமலையிற் குரங்குபோலப் பறித்துக்கொள்ளும் இயல்பையுடைய

11 - 4. 'ஒப்போன் கூற்றென்றூரேனும் சிறுபான்மை வலியாற் கொள்ளுமிடத்துத் தாவென்பது வருமெனக் கொள்க; நின்னது...ஒன் றென்கோ: எனவரும்' தொல். எச்ச. சூ. 50, ந.

21 - 2. புறநா. கஙஉ : 1 - 2, அடிக்.

23 - 4. புறநா. கசO : 6 - 8.

25. இச்செய்யுளைப் பாடிய புலவர் துறையூரினராதலின் அவ்வூர்த் துறைமணலைக் கூறினர்.

பி - ம். *அரிசில்கிழார்.



புல்லிய குறிய ஆறலைகள்வர் பரந்துவந்து அலைக்கும் பகையை ஒருபகை யென்பேனோ? எல்லாப் பகையும் அறிவான் ஆயேயெனக் கருதி எமது வாக்கினால் மிகவும் நினதுபெயரை வாழ்த்தி நின்னுடைய புகழை நச்சி ஞாயிறு சுடப்பட்ட சுரத்தின்கண்ணே யேறி இவ்விடத்துவந்த பெரிய நச்சுதலையுடையேம்; இங்ஙனம், [1]வறுமையுற்ற எங்களுக்கு ஒன்றை இடுவோரன்றோ பயன்கருதாது பிறர்க்கு இடுமவர்களாவாரெனவும் எம்மை யொழிந்த பிறர்க்கு இடுவோரன்றோ பயன்கருதி யிடுதலால் தங்க ளுக்கே இடுவோரெனவும் அவ்வளவாக யான் சொன்னேனாகை, [2]நினக்குப் பொருந்தியது நீ ஆராய்ந்து எமக்குப் பரிசில்தந்தனையாய் விடுவாயாக; நாடோறும், குளிர்ந்த நீர் ஓடும் வாய்த்தலைகளையுடைய துறையூரின்கண் துறைமுன்னர் [3]நண்ணிய பலமணலினும் பலநாள் வாழ்கவென வாழ்த்தி உண்பேம், பெரும! நீ தந்த செல்வத்தை.—எ - று.

பெரும! நீ நல்கிய வளத்தை அல்கலும் ஏத்தி உண்பேம்; நினக்கு ஒத்தது நீ நாடிப் பரிசில் நல்கினை விடுமதியெனக் கூட்டுக.

'ஆயென' என்பதற்கு ஆயென்று பிறர்சொல்லவென்றும், 'எமக்கீ

வோர் பிறர்க்கீவோர்' என்பதற்கு எமக்கீவோர் எம் வறுமைகண்டு வருத்தமுறுவோர் யாவர்க்கும் ஈவோரெனவும், 'பிறர்க்கீவோர் தமக்கீப்' என்பதற்குப் பிறர்க்குக் கொடுப்போர் அக்கொடுக்கப்படுகின்றோர் தமக்கே கொடுப்போராவரெனவும் உரைப்பாரும் உளர்.

சசிவுற்றவென்பதற்கு இரக்கமுற்றவெனினும் அமையும்.

பேஎற்பகையெனவென்புழி எனவும், ஆங்கெனைப்பகையுமென்புழி ஆங்கும் அசைநிலை.

கண் தெண்ணீரின்மல்கியெனவும், வாயாரப் பெயரேத்தியெனவும் மாற்றப்பட்டன. வாய்த்தலை = தலைவாய் (கருசு)

---

[1]"வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாம், குறியெதிர்ப்பை நீர துடைத்து" குறள், 221.

[2]"இரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர், தாமறிவர் தங்கொடையின் சீர்" ஔவையார் பாடல்.

[3]புறநா. க : 8 - 11, அடிக்., ௹ : 17 - 21, அடிக்.

---

(கருஎ) இரங்கு முரசி னினஞ்சால் யானை
முந்நீ ரேணி விறல்கெழு மூவரை

---

1. 'இரங்கு' என்னும் உரிச்சொல் ஒலித்தற்றொழிற்டண்பில் வந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 458, மயிலை.; நன். வி. சூ. 459.

2. முந்நீரேணி: புறநா. கூ : 1.

இன்னு மோர்யா னவாவறி யேனே,
நீயே, முன்யா னறியு மோனே, துவன்றிய
கயத்திட்ட வித்து வறத்திற் சாவாது
கழைக்கரும்பி னொலிக்குந்து,
கொண்டல் கொண்டநீர் கோடை காயினும்
கண்ணன்ன மலர்பூக்குந்து,
கருங்கால் வேங்கை மலரி னாளும்
பொன்னன்ன வீசுமந்து
மணியன்னநீர் கடற்படரும்
செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந
சிறுவெள் ளருவிப் பெருங்க லடனே!
நீவா ழியர்நின் றந்தை
தாய்வா ழியர்நிற் பயந்திசி னோரே.

திணை - அது; துறை - இயன்மொழி; பரிசிற்றுறையுமாம்.
நாஞ்சில்வள்ளுவனை ஒருசிறைப் *பெரியனார் பாடியது.

இ - ள்.—ஒலிக்கும் முரசினையும் இனம் அமைந்த யானையையும் உடைய கடலாகிய எல்லையையுடைய நிலத்தின்கண் வென்றிபொருந்திய மூவேந்தரை இன்னமும் யான் ஒருவனே பாடும் அவாவையறியேன்; நீதான் முன்னே தொடங்கி யானறியுமவன்; நீர்நிறைந்த பள்ளத்தின்கண் விதைத்த வித்து நீரின்மையாற் சாவாது கரும்புபோலத் தழைக்கும், மழையால் முகந்து சொரியப்பட்ட நீர் கோடைகாயினும் மகளிர் கண் போன்ற குவளைமுதலிய மலர்பூக்கும், கரியதாளையுடைய வேங்கைமலரின்

நாடோறும் பொன்போலும் அப்பூவைச் சுமந்த மணிபோலும் நீர் கடற்கட்செல்லும் செவ்விய மலைப்பக்கத்தையுடைய நாஞ்சிலென்னும் மலையையுடைய பொருந! சிறிய வெளிய அருவியையுடைய பெரிய மலையையுடைய நாட்டையுடையாய்! நீ வாழ்வாயாக; நின்னைப் பெற்றோராகிய நின் தந்தையும் தாயும் வாழ்க.—எ - று.

---

6. கழைக் கரும்பு: "ஆலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே" (மலை. படு. 119); "மோடு கொண்டெழு மூரிக் கழைக்கரும்பு" (சூளா. நாடு. 25); கலி. ௪0 : 28.

11. மணி - பளிங்கு; புறநா. க௫0: 27.

14 - 5. ரகரவீற்றுவியங்கோள் வாழ்த்துதற்பொருளில் வந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 337, மயிலை.; இ. வி. சூ. 239, உரை.

பி - ம். *பெயரியனூர், பெயுரினூர்.



நீர் மலர்பூக்குமென இடத்துநிகழ்பொருளின்தொழில் இடத்துமேல் ஏறிநின்றது.

கோடைக்காயினுமென்பது பாடமாயின், கோடைக்கட்காயினுமென்றானும் கோடைக்கணுயினுமென்றானும் உரைக்க.

முன்னின்ற பெயரெச்சம் மூன்றும் நாஞ்சிலென்னும் நிலப்பெயர் கொண்டன.

தன் பழமை தோன்றப் புகழ்ந்துகூறுவான், மூவரையும் பாடும் அவாவை இன்னும் அறியேனென்றதாகக் கொள்க. (க௩௭)

---

(கநஅ) ஆனினங் கலித்த வதர்பல கடந்து
மானினங் கலித்த மலைபின் னொழிய
மீனினங் கலித்த துறைபல நீந்தி
உள்ளி வந்த வள்ளுயிர்ச் சீறியாழ்
சிதாஅ ருடுக்கை முதாஅரிப் பாண!
நீயே பேரெண் ணலையே, நின்னிறை
மாறி வாவென மொழியலன், மாதோ
ஒலியிருங் கதுப்பி னாயிழை கணவன்
கிளிமரீஇய வியன்புனத்து
மரனணி பெருங்குர லனைய னாதலின்,
நின்னை வருத லறிந்தனர் யாரே.

**திணை - அது; துறை - பாணாற்றுப்படை.**

**அவனை மருதனிளநாகனார் பாடியது.**

இ - ள்.—பெற்றத்தினது இனம் மிக்க வழிபலவும் வந்து மான்றிரள் மிக்கமலை பின்கழிய மீனினந்தழைத்த துறைபலவற்றையும் நீந்திநினைந்து வந்த வள்ளிய ஓசையையுடைத்தாகிய சிறிய யாழையும் சிதாராகிய உடையையுமுடைய மூத்தபாணனே! நீதான், அவன்பாற் சிலகருதிப் போகின்றமையின் பெரிய எண்ணத்தையுடையை; நின்னுடைய தலைவன்

---

5. முதாரி - முதுமை; சிலப். கக : 24, உரை.

4 - 5. புறநா. சுக : 3 - 4, கருசு : 4 - 5.

7. "இரந்தோர்க் கென்றும், காலம் பகராதார் காழி நகர் தானே" தேவாரம்.

8. ஆயிழை கணவன்: புறநா. கூ : 6, அடிக்.

இப்பொழுது போய்ப் பின் ஒருநாட் பரிசிற்குவாவென்று சொல்லான்; தழைத்த கரிய கூந்தலையுடைய ஆயிழைக்குத் தலைவன், கிளி மருவிய அகன்ற புனத்தின்கண் மரப்பொதும்பின்கண் வைத்த பெரிய கதிரை யொப்பனாதலின், நீ அவன்பாற் பரிசில் பெற்றுவருதற்கண் நின்னைப் [1]பழையபாணனென்று அறிவார் யார்?—எ - று.

'நின்னைவருதலறிந்தனர்யார்' என்றதன் கருத்து, நின்னை அறிவாரும் அறியாத தன்மையையாவை யென்பதாம்.

அறிவார் யாரென்பது, அறிந்தனர் யாரெனக் காலமயக்கமாயிற்று.

நினக்கு அவன் பரிசில் தப்பாமல் தருமென்பான், நின்னிறை யென்றான்.

'கிளி.........குரலனையன்' என்றது, கிளியீடு வாய்த்தாற்போல்வ னென்னும் வழக்கைப்பற்றி நின்றது. (கஙஅ)

[1]பொருந. 96 - 100.

---

(கஙகூ) சுவலழுந்தப் பலகாய
சில்லோதிப் பல்லிளைஞருமே
அடிவருந்த நெடிதேறிய
கொடிமருங்குல் விறலியருமே
வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய்கூறுவல்,
ஓடாப் பூட்கை யுரவோர் மருக!

உயர்சிமைய வுழாஅ நாஞ்சிற் பொருந
மாயா வுள்ளமொடு பரிசி றுன்னிக்
கனிபதம் பார்க்குங் காலை யன்றே,
ஈத லானான் வேந்தே வேந்தற்குச்

---

1 - 2. புறநா. ௬௪ : 1 - 2, அடிக்.

3 - 4. புறநா. ௧௩௬ : 1 - 4.

1 - 4. இளைஞரும் விறலியரும்: "மடமா னோக்கின் வாணுதல் விறலியர், நடைமெலிந் தசைஇய நன்மென் சீறடி, கல்லா விளையர் மெல்லத் தைவர" சிறுபாண். 31 - 3.

5 - 6. புறநா. ௧௪௮ : 5 - 6.

7. புறநா. ௧௨௬ : 4; குறள், 385, பரிமேல். பார்க்க.

8. நாஞ்சிற் பொருநன்: புறநா. ௧௪௦ : 1, ௩௮௦ : 9.



சாத லஞ்சாய் நீயே, யாயிடை
இருநில மிளிர்ந்திசி னாஅங் கொருநாள்
அருஞ்சமம் வருகுவ தாயின்,
வருந்தலு முண்டென் பைதலங் கடும்பே.

திணை - அது; துறை - பரிசில் கடாநிலை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—தோள் வடுப்படப் பலமுட்டுக்களையுங் காவிய சிலவாய மயிரையுடைய பல இளையோரும் அடி வருந்த நெடும்பொழுது ஏறிய கொடிபோலும் இடையினையுடைய விறலியரும் என இவர் வாழ்தலை விரும்பிப் பொய்சொல்லேன்; மெய்சொல்லுவேன்; புறக்கொடாத மேற்கோளையுடைய வலியோர் மரபிலுள்ளானே! உயர்ந்த உச்சியையுடைய தாய் உழப்படாத நாஞ்சிலென்னும் பெயரையுடைய மலைக்கு வேந்தே! மறவாத நினைவுடனே பரிசிற்குவந்து பொருந்திப் பின்புநின்று நின்மனம் நெகிழும் செவ்விபார்க்கும் காலமல்ல, யான் வறுமையுற்று நிற்கின்ற நிலைமை; நினக்கு வேண்டிற்றுத்தருதலை அமையான், நின்னுடைய அரசன்; அவ்வரசன் பொருட்டுச் சாதலுக்கு அஞ்சாய், நீ; அவ்விடத்துப் பெரிய நிலம் பிறழ்ந்தாற்போல ஒருநாள் பொறுத்தற்கரிய பூசல் வருவதாயின், வருந்துதலும் உளதாம், எனது பசித்துன்பத்தையுடைய சுற்றம்.—எ - று.

அதனாற் போர்வருவதன்முன்னே பரிசில்தந்து விடுவாயாகவென்பது கருத்து.

வேந்து என்றது சேரனை. (கூகூ)

12. முதுரை, 6. 1 - 13. புறநா. கOகூ.

---

(கசுo) திடவுநிலைப் பலவி ஞஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் *படப்பைக் கொய்த

1. புறநா. கூகூ : 8, கூசுO : 9.

அகரவீற்று உரிச்சொல் திடவுநிலையென உகரம் பெற்றுவந்ததற்கு மேற்கோள்; தொல். குற்றியலுகரப். சூ. 78, ந.

2. செந்நாப்புலவீர் : புறநா. ௧௦௭ : 2; "செந்நாப் புலவனியான் செல்கின்றேன்" தனிப்பாடல்.

பி - ம். *படப்பை கொய்த.



அடகின் கண்ணுறை யாக யாஞ்சில
அரிசி வேண்டினெ மாகத் தான் †பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே ‡யன்னதோர்
தேற்றா வீகையு ||முளதுகொல்
§போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே[1].

திணை - அது; துறை - பரிசில்விடை.

அவனை ╪ஔவையார் பாடியது.

இ - ள்.—பெரிய நிலைமையையுடைய பலாமரத்தையுடைத்தாய நாஞ்சின்மலைக்கு வேந்தன், அறிவுமெல்லியன், நிச்சயமாக; [2]செவ்விய நாவையுடைய புலவீர்! வளையணிந்த கையையுடைய விறலியர் மனைப் பக்கத்தின்கட் பறித்த இலைக்குமேல் தூவுவதாக யாங்கள் சில அரிசி வேண்டினேமாக, தான் பரிசிலர்க்கு உதவும் வரிசை அறிதலால் எம் வறுமையைப் பார்த்தலேயன்றித் தனது மேம்பாட்டையும் சீர்தூக்கிப் பெரிய சுரஞ்சூழ்ந்த மலைபோல்வதொரு பெரிய யானையை அளித்தான்; ஆதலான், ஒருவற்கு ஒன்றனைக் கொடுக்குமிடத்து அப்பெற்றிப்பட்ட

4. கண்ணுறை - மேலீடு; புறநா. ௬௧ : 5.

5 - 6. 'பிற' என்னும் இடைச்சொல் அசைநிலையாக வந்ததற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. 31, சே.; தெய்வச்.; ந.; இ. வி. சூ. 277, உரை.

5 - 8. புறநா. ௧௯௯ : 20 - 23; "சிரப்பான் மணிமவுலிச் சேரலர் கோன் றன்னைச், சுரப்பா டியான்கேட்கப் பொன்னூடொன் றீந்தா, னிரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர், தாமறிவர் தங்கொடையின் சீர்" தமிழ்நாவலர்சரிதை, 24.

[1]மு. புறநா. ௩௯௪; "சேற்றுக் கமலவயற் றென்னுறை வாணனை யான், சோற்றுக் கரிசிதரச் சொன்னக்கால் - வேற்றுக், களிக்குமா வைத்தந்தான் கற்றவர்க்குச் செம்பொன், அளிக்குமா றெவ்வா றவன்" தனிப்பாடல்.

பாடாண்டிணைத்துறைகளுள், கொடுப்போரேத்தற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 29, இளம். ஷை. ஷை. ஷை. 35, ந.

[2]'பொய் கூறுமையிற் செங்காவென்றூர்' என்பர் பின்; புறநா. ௧௪௮, உரை.

பி - ம். கையுறை யாக. †பிறர். ‡இன்னதேற்ரு. ||உண்டுகொல். §போற்ரு தம்ம. ‡அவர் பாடியது.





தொரு தெளியாக்கொடையும் உளதோ தான்? பெரியோர் தாங்கள் செய்யக்கடவமுறைமையைத் தெரிந்து பாதுகாத்துச் செய்யார்கொல்?— எ - று.

பிறவென்பது, அசைநிலை.

சொல்லென்பது, பின்பும் கூட்டியுரைக்கப்பட்டது. (க௪o)

---

(க௪க) பாணன் சூடிய பசும்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
ஊரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீ ரோவென வினவ லானாக்
காரென் னொக்கற் கடும்பசி யிரவல!
*வென்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியே மன்னே யினியே
இன்னே மாயினே மன்னே யென்றும்
உடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்
எத்துணை யாயினு மீத்த லன்றென
மறுமை நோக்கின்றோ வன்றே
பிறர், வறுமை நோக்கின்றவன் கைவண் மையே1.

---

1 - 2. புறநா. கக : 11 - 7, அடிக். 5. புறநா. க௩o : 23.
7. வினைத்தொகைக்கு இவ்வடி மேற்கோள்; தொல். எச்ச. சூ. 19, ௫.

8 - 9. பொருந. 68.  12. புறநா. கசுஙு : 3, 4.

10 - 12. புறநா. கசுஙு : 1 - 3; "கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய, அருந்திற லணங்கி னாவியர் பெருமகன், பெருங்க லாடன் பேகனும்" சிறுபாண். 85 - 7.

13 - 5. புறநா. கஅசு; நாலடி. 94; குறள், 222.

[1]மு. பாணாற்றுப்படைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 30, இளம்.; ஷை. ஷை. சூ. 36, ந.

பி - ம். *வெல்வேல்,



திணை - அது; துறை-பாணாற்றுப்படை; புலவராற்றுப்படையுமாம். வையாவிக்கோப் பெரும்பேகனைப் பரணர் பாடியது.

இ - ள்.—'பாணன் சூடிய ஓட்டற்ற பொன்னாற் செய்யப்பட்ட தாமரைப்பூ மாட்சிமைப்பட்ட அணியினையுடைய விறலி அணிந்த பொன்னரிமாலையுடனே விளங்கக் கடிய குதிரையைப் பூண்ட நெடிய தேரைப் பிணிப்பைவிட்டு இளைப்பாறி ஊரின்கண் இருந்தீர்போலச் சுரத்திடையிருந்தீர்! நீர் யாவிர் பாணரோ' என எம்மைக் கேட்டல் அமையாத புல்லென்ற சுற்றத்தையும் மிக்க பசியையுமுடைய இரவலனே! வென்றிவேலையுடைய தலைவனைக் காண்பதன்முன் யாம் நின்னினும் வறியேம்; இப்பொழுது அவ்வறுமை நீங்கி இத்தன்மையேமாயினேம்; எந்நாளும் உடா போராவாதலை அறிந்துவைத்தும் படாத்தினை மயிலுக்குக் கொடுத்த எம் இறைவன், மதமிக்க யானையினையும் மனஞ்செருக்கிய குதிரையினையுமுடைய பேகன், எவ்வளவாயினும் கொடுத்தல் அழ

தென்று மறுபிறப்பை நோக்கிற்றேவெனின், அன்று; பிறரது மிடியைக் கருதிற்று, அவனது கைவண்மை.—எ - று.

எங்கோ, பேகன்; அவன் கைவண்மை மறுமைநோக்கிற்றன்று; பிறர் வறுமை நோக்கிற்றெனக் கூட்டுக.

'நின்னினும் புல்லியேமன்' என்பது, [1]'பண்டுகாடுமன்' என்பது போல நின்றது. ஒழிந்த மன்: அசைநிலை. (கசக)

---

[1] ஆக்கப்பொருளில் வந்தது.

---

(கசஉ) அறுகுளத் துகுத்து மகல்வயற் பொழிந்தும்
*உறுமிடத் துதவா துவர்நில மூட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்காற் பேகன்

---

3. "மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ" கபிலரகவல்.
1 - 3. "மழைவள்ளல்" சீவக. 899.
4. புறநா. கசக : 12, கசடு : 3.

பி - ம். *உறுநிலத் துதவா.

5 கொடைமடம் படுத லல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே.

திணை - அது; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—வற்றிய குளத்தின்கண்ணே பெய்தும் அகன்ற விளை நிலத்தின்கண்ணே சொரிந்தும் இவ்வாறு குளத்தும் விளைநிலத்தும் பெய்யாது களர்நிலத்தை நிறைத்தும் எவ்விடத்தும் வரையாத மரபினை யுடைய மழைபோல மதமிக்க யானையினையுடைய கழல்புனைந்த காலை யுடைய பேகன் கொடையிடத்துத் தான் அறியாமைப்படுதலல்லது பிறர் படை வந்து கலந்துபொரின் அப்படையிடத்துத் தான் அறியாமைப் படான்.— எ - று.

[1]படைமடமென்றது, வீரரல்லாதார்மேலும், முதுகிட்டார்மேலும் புண்பட்டார்மேலும் மூத்தார் இளையார்மேலும் செல்லுதல். (கசஉ)

---

5. புறநா. கசக : 10 - 12; 'கொடைமடம்படுதல் - அகாரணத் தாற் கொடைகொடுத்தல்' (ஞானமிர்தம், 17, உரை); "கொடைமடம் வரையாது கொடுத்த லாகும்" (திவாகரம்); "கொடைமட மென்று சொல்ப வரையாது கொடுத்த லாமே" (சூடாமணி. க : 10); "வல்லார்

வல்ல கலைஞருக்கு மறைநூ லவர்க்குங் கடவுளர்க்கும், இல்லா தவர்க்கு முள்ளவர்க்கு மிரந்தோர் தமக்குந் துறந்தவர்க்குஞ், சொல்லா தவர்க்குஞ் சொல்பவர்க்குஞ் சூழுஞ் சமயா திபர்களுக்கு, மல்லா தவர்க்கு மிரவிமக னரிய தான மளிக்கின்றான்" (வி. பா. கிருட்டினன்றூது. 235) என்னுஞ் செய்யுளிற் கொடைமடம் விளங்கக் கூறப்பெற்றிருத்தல் காண்க.

'கொடைமடம் படுதலல்லதென்பது வசைபோன்று புகழ்; இது செம்பொருளின்பாற்படும்' தொல். செய். சூ. 124, ந.

3 - 5. புறநா. ௫௫ : 15, அடிக்.; ௧௯௯ : 6 - 7, அடிக்.

[1]"உடையிட்டார் புன்மேய்வா ரோடுநீர் புக்கார், படையிட்டார் பற்றேது மின்றி - நடையிட்டா, ரிவ்வகை யைவரையு மென்று மணுகாரே, செவ்வகைச் சேவகர் சென்று" (சிறுபஞ்ச. 41); "சடையின ருடையினர் சாம்பற் பூச்சினர், பிடிகைப் பீலிப் பெருநோன் பாளர், பாடு பாணியர் பல்லியத் தோளின, ராடு கூத்த ராகி யெங்கணு, மேந்துவா ளொழிய . . . வேண்டுவயிற் படர்தரக், கச்சை யானைக் காவலர் நடுங்க, . . . . . . . அதரிதிரித்த வாளே ருழவன்" (சிலப். ௨௬ : 225 - 34) என்பனவும், 'எந்தறன்', 'கைப்படை', 'வீறின்மையின்' (சீவக. 2258, 2259, 2261) என்னுஞ் செய்யுட்களும், "மீனாய் வேலையை யுற்றார் சிலர் சிலர் பசுவாய் வழிதொறு மேய்வுற்றா, ரூனார் பறவையின் வடிவுற் றார்சிலர் சிலர்நான் மறையவ ருருவானார், மானார் கண்ணின மடவா ராயினர் முன்னே தங்குழல் வகிர்வுற்றா, ரானார் சிலர்சில ரையா நின்சர ணென்றார் நின்றவ ரரியென்றார்" (கம்ப. அக்க. 40) என்பதும், "படைமயக் குற்ற போதும் படைமட மொன்றி லாதான்" (சூடாமணி. ௯ : 10) என்பதும் ஈண்டறியற்பாலன.



(௧௪௩) மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய்
மாரி யான்று மழைமேக் குயர்கெனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய வுவகையர் சாரற்
புனத்தினை யயிலு நாட! சினப்போர்க்
கைவள் ளீகைக் கடுமான் பேக!

யார்கொ லளிய டானே நெருநற்
சுரனுழந்து வருந்திய வொக்கல் பசித்தெனக்
குணில்பாய் முரசி னிரங்கு மருவி
நளியிருஞ் சிலம்பிற் சீறா ராங்கண்
வாயிற் றோன்றி வாழ்த்தி நின்று
நின்னுநின் மலையும் பாட வின்னா
திருத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்

---

1. "குன்றக் குறவ னார்ப்பி னெழிலி, நுண்ப லழிதுளி பொழியு நாட" (ஐங்குறு. ௨௫௧); "ஏனற் பசுங்கதி ரென்றூழ்க் கழிய வெழிலி யுன்னிக், கானக் குறவர்கள் கம்பலை செய்யும்வம் பார்சிலம்பா", "இறவரை யும்பர்க் கடவுட் பராய்நின் றெழிலியுன்னிக், குறவரை யார்க்குங் குளிர்வரை நாட" சிற். 159, 260.

'என' என்னும் இடைச்சொல் வினைப்பொருண்மைகுறித்து வந்ததற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. 10, சே.; இ. வி. சூ. 255, உரை.

1 - 2. "வையக முற்று மாமழை மறந்து வயலி னீரிலை மாநிலந் தருகோம், உய்யக் கொள்கமற் றெங்களை யென்ன வொளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும், பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப் பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளும், செய்கை கண்டுநின் றிருவடி யடைந்தேன் செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே" தே. சுந்தர.

4. கண்மாறல் : குறுந். ௧௨௫ : 7; கலி. ௪௬ : 18.

5. புறநா. ௧௬௮ : 6 - 7.

9. "பறையிசை யருவி" (புறநா. கஉக : 8) என்பதன் குறிப்பைப் பார்க்க. "புணரி, குணில்பாய் முரசி னிரங்குந் துறைவன்" குறுந். கூஉஅ.

12. புறநா. கரு0 : 3, அடிக். "மலைவளம் புகழ்ந்தும்" பெருங். உ. 12 : 134.

13. இகுத்தல் - சொரிதல்; மலைபடு. 226.



முலையக நனைப்ப விம்மிக்
குழலினை வதுபோ லழுதனள் பெரிதே.

திணை - பெருந்திணை; துறை - குறுங்கலி; தாபதநிலையுமாம்.

அவனால் துறக்கப்பட்ட கண்ணகிகாரணமாக அவனைக் கபிலர் பாடியது.

இ - ள்.—மலையை மழைவந்து சூழ்கவென்று மிக்க பலியைத் தூவி அம்மழை மிகப்பெய்தலான் அப்பெயல் அமைந்து முகில் மேலே போவதாக வேண்டுமெனத் தெய்வத்தைப் போற்றிய குறமாக்கள் மழை இடத்துமாறிய உவகையராய் மலைச்சாரற்கட் புனத்தினையை உண்ணும் நாட! சினத்தினுற் செய்யும்போரையும் கைவண்மையாற் கொடுக்கும் கொடையினையுமுடைய விரைந்த குதிரையையுடைய பேக! அவ்வருளத் தக்காள், யாரோதான்? [1]நெருநற்றுச்சுரத்தின்கண்ணே நடந்துவருந்திய எனது சுற்றம் பசித்ததாக, கடிப்பு அறையப்பட்ட முரசுபோல ஒலிக்கப் பட்ட அருவியையுடைய பெரிய உயர்ந்த மலைக்கட் சிறிய ஊராகிய அவ்விடத்து வாயிற்கண்ணே வந்து தோன்றி வாழ்த்திநின்று நின்னையும் நின்மலையையும் பாட, அப்பொழுது இன்னுதாகச் சொரியப்பட்ட கண்ணீரை ஒழித்தல்மாட்டாளாய் அக்கண்ணீர் முலையிடத்தை நனைப்பப் பொருமிக் குழல் இரங்கி ஒலிப்பதுபோல் அழுதாள், மிகவும்.—எ - று.

மழை வேண்டுங்காலத்துப் பெய்வித்தற்கும் வேண்டாக்காலத்து ஒழித்தற்கும் பலி தூஉய்ப் பேணிய குறவராகிய மாக்களென்க.

குறவர்மாக்கள்: இருபெயரொட்டுப்பண்புத்தொகை.

---

14. "கருங்கால் வெண்குருகு மேயும், பெருங்குள மாயிற்றென் னிடைமுலை நனைந்தே" குறுந். கூஉ௬ : 5 - 6.

13 - 4. "அரிமதர் மழைக்கண்ணீ ரலர்முலைமேற் றெறிப்பபோல்" (கலி. எஎ : 4); " முலைமேல், வடிக்கேழ் மலர்நெடுங்கண் வார்புயலுங் காலும்" சீவக. 2049.

15. "நெய்த லுண்கண் பைதல் கூரப், பின்னிருங் கூந்தன் மறையினள் பெரிதழிந், துதியன் மண்டிய வொலிதலை ஞாட்பி, னிம்மென் பெருங்களத் தியவ ரூதும், ஆம்பலங் குழலி னேங்கிக், கலங்கஞ ருறுவோள்" (நற். ௧௧௩); "குழலினு மினைகுவள் பெரிதே" (ஐங்குறு. ௫0௬); "சிறுகுழல் . . . இனைதியோ வெம்போல" (கலி. ௧௨௯:16 - 8); "குழலேங்கு மாறேங்கி யழுதார் கோதை மடவாரே" (சீவக. 2945); "வேய்ங்குழல் விளிகொ ணல்யாழ் வீணையென் றினைய நாண, வேங்கினள்" கம்ப. கிட்கிந்தா. அரசியல். 3.

[1]நெருநற்று: "நெருநற்றுச் சென்றாரெங் காதலர்" குறள், 1278.



மாக்கள் புனத்தினை அயிலும் நாட! பேக! என் ஒக்கல் பசித்தென வாயிற்றோன்றி வாழ்த்திநின்று நின்னும் நின்மலையும் பாடக் குழல் இனைவதுபோல அழுதாள்; அவ்வளிக்கத்தக்காள் யார்கொல்? அவள்பால் அருள்பண்ணத்தகுமென வினைமுடிக்க.

இது, [1]நின்மலையிற்குறவர்மாக்கள் கடவுட்பேணி மழைவேண்டிய பொழுது பெற்றுத் தாம் வேண்டுமுணவு நுகருமாறுபோல் இவளும் நின் அருள்பெற்று இன்ப நுகர்வாளாகவேண்டுமென்பதொரு நயந்தோன்ற நின்றது.

மழை மிகப்பெய்தலானென்பது, ஆற்றலாற் கூறப்பட்டது.

பேகனாற்றுறக்கப்பட்ட கண்ணகியை அவனோடு கூட்டலுறுவார், அருள்பண்ணவேண்டுமென்று இரந்துகொண்டுகூறினமையின், தூங்கலியாயிற்று. (கசங)

[1]சிற். 159, பேர்.

---

(கசச) அருளா யாகலோ கொடிதே யிருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக
நீனறு நெய்தலிற் பொலிந்த வுண்கண்
கலுழ்ந்துவா ரரிப்பனி பூணக நனைப்ப

---

1. ஆகலென்னும் வினைக்குறிப்புச்சொல் சார்ந்துநின்ற சொற்பொருளையே உணர்த்திநிற்றற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. 32, ந.

2. புறநா. கசசு : 3, கசஎ : 2.

1 - 2. மாலைக்காலத்திற் செவ்வழி பண்ணல்: புறநா. கசக : 2 - 4.

3. புறநா. கடுச : 13.

னகரவீற்றுச்சொல் வேற்றுமைக்கண் அம்முப்பெற்று நிற்றற்கும், (தொல். குற்றியலுகரப். சூ. 78, ந.), செயவெனெச்சம் முற்றாய்த் திரிவுழி ஆகவென்னும் இடைச்சொல் வந்து அதன் பொருளையே உணர்த்திச் செயவெனெச்சமாய் நிற்றற்கும் (ஷை. இடை. சூ. 32, ந.) மேற்கோள்.

4. "கயவாய நெய்தலலர் கமழ்முகை மணநகை.....மதருண்கண்"

பரி. அ: 74-5.

பி - ம். யாதலோ கொடிதே மருள்.



இனைத லானா ளாக விளையோய்
கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென
யாந்தற் றொழுதனம் வினவக் காந்தள்
*முகைபுரை விரலிற் கண்ணீர் துடையா
யாமவன் கிளைஞரே மல்லேங் கேளினி
எம்போ லொருத்தி நலனயந் தென்றும்
வரூஉ மென்ப வயங்குபுகழ்ப் பேகன்
ஒல்லென வொலிக்குந் தேரொடு
முல்லை வேலி நல்லூ ரானே[1].

திணையும் துறையும் அவை.

அவனை அவள்காரணமாகப் †பரணர் பாடியது.

இ - ள்.—அருள்பண்ணாயாதல் கொடிது; மாலைக்காலம் வந்த அளவிலே சிறிய யாழை இரங்கப்பண்ணாகிய செவ்வழியென்னும் பண்ணிலே வாசிக்கும் பரிசு பண்ணி நினது மழையையேற்றுக்கொண்ட காட்டைப் பாடினேமாக, நீலநறுநெய்தல்போன்று பொலிந்த மையுண்ட கண்கள் கலங்கி வீழ்ந்த [1]இடைவிட்ட துளிகள் பூணையுடைய மார்பை நனைப்ப

வருந்துதல் அமையாளாக, 'இளையோய் ! கிளைமையையுடையையோ எம்முடைய கேண்மையை விரும்புவோனுக்கு?' என யாங்கள் தன்னை

---

6. செயவெனெச்சம் முற்றுய்த்திரிவுழி ஆகவென்னும் இடைச்சொல் வந்து அதன்பொருளையே உணர்த்திச் செயவெனெச்சமாய் நிற்றற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. 32, ந.

8 - 9. "செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்" சிறுபாண். 167.

14. முல்லை வேலி : "வேலி சுற்றிய வால்வீ முல்லை" (அகநா. ௩௯௪ : 19); "முல்லைதலை யணிந்த முஞ்ஞை வேலி" பெருங். ௪. 2 : 63.

[1]மு. 'அருளா யாகலோ . . . நல்லூரானே : இது கண்ணகிகாரணமாக வையாவிக்கோப் பெரும்பேகனைப் பரணர் பாடிய கைக்கிளை வகைப் பாடாண்பாட்டு; கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென வினவ, யாம் கிளையல்லேம், முல்லைவேலி நல்லூர்க்கண்ணே வருமென்று சொல்லுவரெனக் கூறுதலின், அஃது ஏனைக்கைக்கிளைகளின் வேறுயிற்று' தொல். புறத்திணை. சூ. 35, ந.

[1]'பூப்போலும் மையுண் கண்கள் தாரையாகச் சொரியாது தனித்து வீழ்கின்ற முத்துப்போலுந் துளியைத் துளிப்ப' முல்லை. 23, ந.

பி - ம். *முகைபுணர். †வன்பரணர்.



வணங்கிக் கேட்டேமாக, அவள், காந்தள்மொட்டுப்போலும் விரலாலே தன் கண்ணீரைத் துடைத்து 'நாங்கள் அவனுடைய கிளைஞரேமல்லேம்; கேட்பாயாக, நீ இப்பொழுது: எம்மை ஒப்பாளொருத்தியுடைய அழகைக்

காதலித்து எந்நாளும் வருமென்று பலரும் சொல்லுவர், விளங்கிய புகழை யுடைய பேகன், ஒல்லென முழங்கும் தேருடனே முல்லைவேலியையுடைய நல்லூரின்கண்' என்று கூறினள்.—எ - று.

கிளையையோவென ஓகாரமும், என்றானென ஒருசொல்லும் வருவித்து உரைக்கப்பட்டன.

நின் கானம் பாடினேமாக, இனைதலானளாக, யாம் தற்றொழுதனம் வினவ, தன்கண்ணீர் துடைத்துப் பேகன் ஒருத்திநலன் நயந்து நல்லூரின் கண் என்றும் வரூஉமென்பவென்றாள்; அவளை அருளாயாதல் கொடிதெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

எம்போலொருத்தி யென்றது, உவமை கருதாது வன்மையுரை தோன்ற நின்றது; எம்மைப்போலும் பொதுமகளொருத்தியென அவளை இழித்துக் கூறியவாறுமாம்.

இனி, யாம் தற்றொழுதனம் வினவினேமாக, அவள் ஆயத்தார் தம் விரலால் அவள் கண்ணீரைத் துடைத்து யாம் அவன் கிளைஞரேமல்லேம்; இது புகுந்தவாறு யாம் கூறக் கேளென முன்பு கூறிப் பின் பேகன் எம்போலொருத்தி நலன் நயந்து நல்லூரின்கட்சென்றுவருமென்று சொன்னார்கள்; இவ்வாறு இளையோளும் ஆயத்தாரும் உறும் துன்புறவு தீர்த்து அருளாயாதல் கொடிதென உரைப்பினும் அமையும். (கசச)

---

(கசரு) மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக!
பசித்தும் வாரேம் பாரமு மிலமே,

களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி,
அறஞ்செய் தீமோ வருள்வெய் யோயென

3. புறநா. கசக : 12, கசஉ : 4.

1 - 3. புறநா. கசக : 10 - 12.

5. ஷ. புறநா. கஉஎ : 1; "மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்" மலைபடு. 534.





இஃதியா மிரந்த பரிசிலஃ திருளின்
இனமணி நெடுந்தே ரேறி
இன்னா துறைவி யரும்படர் களைமே.

திணையும் துறையும் அவை.

அவனை அவள்காரணமாக அவர் பாடியது.

இ - ள்.—மெல்லிய தகைமையையுடைய கரிய மயில் குளிரால் நடுங்குமென்று அருள்செய்து படாம்கொடுத்த அழியாத நல்ல புகழினை யுடைய மதம்பட்ட யானையையும் மனஞ்செருக்கிய குதிரையையுமுடைய பேக ! யாம் பசித்தும்வருவேமல்லேம்; எம்மாற் பரிக்கப்படுஞ் சுற்றமு முடையேமல்லேம்; களாப்பழம்போன்ற கரிய கோட்டையுடைய சிறிய யாழை [1]இசையின்பத்தை விரும்பியுறைவார் அவ்விசையின்பத்தால் தலையசைத்துக் கொண்டாடும்படி வாசித்து, அறத்தைச் செய்வாயாக

அருளை விரும்புவோயென இது, நின்பால் யாம் இரந்த பரிசில்: இற்றை யிரவின்கண் இனமாகிய மணியையுடைய உயர்ந்த தேரை ஏறிப்போய்க் காண்டற்கு இன்னாதாக உறைகின்றவள் பொறுத்தற்கரிய நினைவா லுண்டாகிய நோயைத் தீர்ப்பாயாக.—எ - று.

பேக! தேரேறி இன்னாதுறைவி அரும்படர் களை; யாழைப் பண்ணி யாம் இரந்த பரிசில் இதுவெனக் கூட்டுக.

இதுவென்றது, அப்படிப் படர்களைதலே.

'மடத்தகை மாமயில் பனிக்குமென்றருளிப், படாஅ மீத்த...... பேக' என்ற கருத்து: இவ்வாறு ஒருகாரணமின்றியும் அருள்பண்ணுகின்ற நீ நின்னால் வருந்துகின்ற இவட்கு அருளாதொழிதல் தகாதென்பதாம்.

இனி, அருள்வெய்யோய்! யாம் இரந்த பரிசில், அறஞ்செய்யவேண்டு மென்று கூறும் இது; அவ்வறந்தான் யாதென்று கேட்பின், நின்பால் அருள் பெருமையின் இன்னாதுறைவி அரும்படரை நீசென்று களைதல்; அதனைச்செய்வாயாகவெனக் கூட்டியுரைப்பினும் அமையும்.

'பனிக்குமென்றஞ்சி' என்பதூஉம் பாடம். (கசரு)

---

10. உறைவி: "நோநொந் துறைவி", "நோயுழந் துறைவி" குறுந். ககஉ : 2, சoo : 7.

11. முன்னிலைமுன்னர் ஏகாரம் அங்கிலைமாபின் மெய்யூர்ந்து வருதற்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. 52, தெய்வச்.

[1]"பண்வனப்புக், கேட்டார் நன்றென்றல்" (சிறுபஞ்ச. 9), "இசை பெறு திருவின் வேத்தவை" (மலைபடு. 39); 'இசையை எக்காலத்தும் கேட்கின்ற செல்வத்தினையுடைய அரசர்களுடைய அவைக்களம்' (ஷை. உரை) என்பவை இங்கே அறியற்பாலன.

(கசசா) அன்ன வாகநின் னருங்கல வெறுக்கை
அவைபெறல் வேண்டேன் அடுபோர்ப் பேக
சீறியாழ் செவ்வழி பண்ணிநின் வன்புல
நன்னாடு பாட வென்னை நயந்து
பரிசி னல்குவை யாயிற் குரிசினீ
*நல்கா மையி னைவரச் சாஅய்
அருந்துய ருழக்குநின் றிருந்திழை யரிவை
கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன
ஒலிமென் கூந்தற் கமழ்புகை கொளீஇத்
தண்கமழ் கோதை புனைய
வண்பரி நெடுந்தேர் பூண்கநின் மாவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவள்காரணமாக அரிசில்கிழார் பாடியது.

இ - ள்.—அத்தன்மையவாக; நின்னால் தரப்பட்ட பெறுதற்கரிய ஆபரணமும் செல்வமுமாகிய அவைபெறுதலை விரும்பேம்; கொல்லும் போரையுடைய பேக! சிறிய யாழைச் செவ்வழியாகப்பண்ணி வாசித்து நினது வலிய நிலமாகிய நல்ல மலைநாட்டைப் பாட, என்னைக் காதலித்துப் பரிசில் தருகுவையாயின், தலைவனே! நீ அருளாமையாற் கண்டார் இரங்க மெலிந்து அரிய துயரத்தான் வருந்தும் உன்னுடைய திருந்திய அணியை

யுடைய அரிவையது தழைத்த மயிலினது பீலியைக் காலொன்றக்

1. அருங்கல வெறுக்கை: புறநா. ௩௭அ : 11; அகநா. ௩௭உ : 5; பெருங். ௬. 3 : 141.

1 - 2. "அரும்பொருட் பரிசிலே னல்லேன்" சிலப். உஅ : 171.

3. புறநா. கசச : 2, கசஎ : 2.

7. துயருழத்தல்: மணி. பதி. 48.

8 - 9. "கலிமயிற் கலாவத் தன்னவிவள், ஒலிமென் கூந்தல்" (நற். உசுகு: 8 - 9); "கலிமயிற் கலாவத் தன்னவிவ, ளொலிமென் கூந்த லுரியவாம்" (குறுந். உஉகு); சிறுபாண். 14 - 5, அடிக்.

9 - 10. புறநா. கசஎ : 6 - 8, கசுச : 3; "பெறுகநின் செவ்வி பெருமகன் வந்தா, னறுமலர்க் கூந்த ஞளணி பெறுகென" சிலப். உஎ : 215 - 6.

7 - 11. "மாணிழை யரிவை காணிய வொருநாட், பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்" பதிற். அக: 31 - 2.

பி - ம். *நல்கா மையினீ வரச்.



குவித்தாற்போன்ற தழைத்த மெல்லிய கூந்தற்கண்ணே மணங்கமழும் புகையைக் கொள்ளுவித்துக் குளிர்ந்த மணங்கமழும் மாலையைச் சூட வளவிய செல்வையுடைய உயர்ந்த தேரை நின் குதிரைகள் பூண்பனவாக. —எ - று.

அன்னலாகவென்றது, இரவலர்க்கு அருங்கலவெறுக்கைகளை எளிதிற் கொடுப்பையன்றே ! அவ்வெறுக்கை எமக்கும் எளிதாகவென்ற வாறும். (கசுக)

(கசஎ) *கன்முழை யருவிப் பன்மலை நீந்திச்
சீறியாழ் செவ்வழி பண்ணி வந்ததைக்
கார்வா னின்னுறை தமியள் கேளா
நெருந லொருசிறைப் புலம்புகொண் டுறையும்
அரிமதர் மழைக்க ணம்மா வரிவை
நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்
மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்
புதுமலர் கஞல வின்று பெயரின்
அதுமனெம் பரிசி லாவியர் கோவே[1].

---

2. புறநா. கசச : 2, கசரு : 3.

3. "முடங்கிறைச் சொரிதரு மாத்திர ளருவி, இன்பல் லிமிழிசை யோர்ப்பனள்" முல்லை. 87 - 8.

6. "வாச வெண்ணெ யின்றி மாசொடு, பிணங்குபு கிடந்த பின்னுச்சேர் புறத்தொடு" பெருங். ச. 7 : 103 - 4.

6 - 7. பரி. க0 : 89. 8. புறநா. ககச : 3.

6 - 8. புறநா. கசரு : 9 - 10; "மாசற மண்ணுற்ற மணியேசு மிருங்கூந்தல், வீசேர்ந்து வண்டார்க்குங் கவின்பெறல்" (கலி. எஎ : 16 - 7); பெருங். க. 40 : 158, அடிக்.

9. "ஆவியர் பெருமகன், பெருங்க லுடன் பேகனும்" சிறுபாண். 86 - 7.

8 - 9. 'புதுமலர்...கோவே: இதனுள் மன்னென்பது ஆமென்பது குறித்து நின்றது' (தொல். இடை. சூ. 4, ந. தெய்வச்.); மன்னென்பது பெயர்ச்சொல்லை அடுத்து வந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 419, மயிலை.

1ழ. கைக்கிளைவகைப் பாடாண்பாட்டிற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 35, ந.

பி - ம். *கன்முழை யருவி.



திணையும் துறையும் அவை.

அவன்காரணமாக அவனைப் பெருங்குன்றூர்கிழார் பாடியது.

இ - ள்.—கன்முழைக்கணின்றும் விழும் அருவியையுடைய பல மலைகளை அரிதிற்கழித்துச் சிறிய யாழைச் செவ்வழியென்னும்பண்ணை வாசிக்கும்படியாகப் பண்ணி வாசித்துவந்ததற்குக் கார்காலத்து மழையினது இனியதுளி வீழ்கின்ற ஓசையைத் தமியளாகக் கேட்டு நெருநற்று ஒருபக்கத்துத் தனிமை கொண்டிருந்த அரிபரந்த மதர்த்த குளிர்ச்சியையுடைய கண்ணிணையும் அழகிய மாமைநிறத்தினையுமுடைய அந்த அரிவையது நெய்யால் துறக்கப்பட்ட மைபோலும் கரியமயிரை ஒப்பமிடப்பட்ட நீலமணியினும் மாசறக் கழுவிச் செவ்விமலர் நெருங்கும் பரிசு இன்று வருவையாயின், அதுவாகும் எம்முடைய பரிசில்; ஆவியருடைய வேந்தே!—எ - று.

உறை - துளி; என்பது ஆகுபெயரால் துளியினோசையை. மன்: அசை.

சீறியாழ் செவ்வழிபண்ணி வந்ததற்கு அரிவைகூந்தல் புதுமலர் கஞலும்படி அவள்பால் எம்மொடும் வரின் எம் பரிசில் அதுவெனக் கூட்டுக.

நெய்பூசுதலோடு பேணுதலைத் துறந்தவெனினும் அமையும்.

செவ்வழிபண்ணிவந்தது, புதுமலர்கஞலவென்று இயைத்துரைப் பாரும் உளர். (கசஎ)

---

(கசஅ) கறங்குமிசை யருவிப் பிறங்குமலை நள்ளிநின்
அசைவி ஞேன்று ணசைவள னேத்தி
நாடொறு நன்கலங் களிற்றொடு கொணர்ந்து
கூடுவிளங்கு வியனகர்ப் பரிசின்முற் றளிப்பப்

---

1. புறநா. கருஅ : 3; "நளிமலை நாட னள்ளியும்" சிறுபாண். 107.

2. புறநா. கசுக : 14 - 5; "மடியிலான் செல்வம்போன் மரநந்த" (கலி. நூ); "ஆக்க மதர்வினுய்ச் செல்லு மசைவிலா, ஊக்க முடையா னுழை" (குறள், 594); புறநா. உச : 29 - ஆம் அடியையும் அதன் குறிப் பையும் பார்க்க; " ஊக்க வேந்த னுக்கம் போல " பெருங். ந. 5 : 21.

3. புறநா. கஎக : 10.

3 - 4. புறநா. கருக : 8 - 9; "இருங்கண் யானையொ டருங்கலந் துறுத்து" (பதிற்.); "நன்கலங் களிற்றொடு நண்ணு ரேந்தி" அகநா. கஉச : 1.

பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்றெஞ் சிறுசெந் நாவே.

**திணை - பாடாண்டிணை; துறை - பரிசிற்றுறை.**

***கண்டீரக்கோப் பெருநள்ளியை வன்பரணர் பாடியது.**

இ - ள்.—உச்சிக்கணின்றும் †ஆலித்து இழிதரும் அருவியினை யுடைய உயர்ந்த மலையையுடைய நள்ளி ! நினது தளர்ச்சியில்லாத வலிய முயற்சியானாய நச்சப்படும் செல்வத்தை வாழ்த்தி நாடோறும் நல்ல அணிகலத்தைக் களிற்றோடே கொண்டுவந்து நெற்கூடு விளங்கும் அகலிய நகரின்கண் இருந்து சூழ்ந்திருந்த பரிசிலர்க்கு ‡அளித்து விடுத் தலால், [1]பிறர்க்கீயும் பெருமையில்லாத அரசரைப்புகழும் புகழ்ச்சியை விரும்பி அவ்வரசர் செய்யாதனவற்றைச் சொல்லி அவர்குணங்களைக் கூறுதலை அறியாததாயிற்று, எம்முடைய சிறிய செவ்விய நா.—எ - று.

[2]பொய்கூறாமையிற் 'செந்நா' என்றார்; [3]தற்புகழ்ந்தாராகாமற் 'சிறுசெந்நா' என்றார்.

அருவியவென்பது, விகாரம்.

நள்ளி ! நீ பரிசின்முற்றளித்தலான், எம் சிறுசெந்நா நின்நசைவள னேத்தி மன்னரைப் புகழ்ச்சிவேண்டிக் கிளத்தல் எய்யாதாகின்றெனக் கூட்டுக.

நின் நசைவளன் ஏத்திக் கொணர்ந்து முற்றளித்தலாலெனப் பரிசிலர்மேலேற்றி உரைப்பினும் அமையும். (கசஅ)

---

[1]புறநா. கஉஎ : 8 - 10.

[2]"வாழ்தல்வேண்டிப், பொய்கூறேன் மெய்கூறுவல்", " பொய்யாச்

சென்னா" புறநா. கருக: 5 - 6, கசுஅ : 19.

[3]புறநா. சஎ : 3, உரை.

பி - ம். *கண்டிற்கோப் பெருநற்கிள்ளி.
†ஒலித்து. ‡ஈந்து.

---

(கசகூ) நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலைக்
கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி

---

2 - 3. மாலையிற் செவ்வழிப்பண்ணும் காலையில் மருதப்பண்ணும் வாசித்தல் வேண்டுமென்பது இசைநூன்மரபு; இதனை, "சாயவென்



வரவெமர் மறந்தன ரதுநீ
புரவுக்கடன் பூண்ட வண்மை யானே.

திணை - அது; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—நள்ளி! வாழ்வாயாக; நள்ளி! நள்ளென்னும் ஓசையையுடைய மாலைப்பொழுதின்கண்ணே மருதமென்கின்ற பண்ணை வாசித்துக் காலைப்பொழுதின்கண் கைவழியாகிய யாழின்கட் செவ்வழியென்னும் பண்ணைவாசித்து வரலாற்றுமுறைமையை எம்முடைய பாணர்சாதியிலுள்ளோர் மறந்தார்; அவ்வாறு மறந்தது, நீ கொடுத்து ஓம்புதலைக் கடனாக மேற்கொண்ட வண்மையான்.—எ - று.

கையகத்து எப்பொழுதும் இருத்தலான், யாழைக் கைவழியென்றார், ஆகுபெயரான்.

'வரவவர் மறந்தனர்' என்பதூஉம் பாடம். (௧௪௯)

---

இளவிபோற் செவ்வழியா ழிசைநிற்ப . . . . . மாலையும் வந்தன் றினி" (கலி. ௧௪௫ : 38 - 41), "திவவுமெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணி", "யாழோர் மருதம் பண்ண" (மதுரை. 604, 658) என மாலைக்கும் காலைக்கும் உரியனவாக அப்பண்கள் கூறப்பெற்றிருத்தலால் அறிக.

2 - 5. புறநா. ௧௫௫ : 7 - 12.

---

(௧௫௦) கூதிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன
பாறிய சிதாரேன் பலவுமுதற் பொருந்தித்
தன்னு முள்ளேன் பிறிதுபுலம் படர்ந்தவென்
உயங்குபடர் வருத்தமு முலைவு நோக்கி
மான்கணந் தொலைச்சிய குருதியங் கழற்கால்
வான்கதிர்த் திருமணி விளங்குஞ் சென்னிச்
செல்வத் தோன்றலோர் வல்வில் வேட்டுவன்

---

2. இரவலர் பலவின்கீழ்த் தங்குதல் : புறநா. ௧௨௮ : 1 - 2.

1 - 2. "நீர்ப்படு பருந்தி னிருஞ்சிற கன்ன, நிலந்தின் சிதாஅர்"

பதிற். கஉ : 19 - 20.

6. "முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி, மின்னுற ழிமைப்பிற் சென்னிப் பொற்ப" முருகு. 84 - 5.

7. வல்வில் வேட்டுவன் : ஒரேகாலத்திற் பல பொருள்களை ஊடுருவிச் செல்லும்படி அம்பையெய்யும் விற்றொழிலையுடைய வீரனை வல்வில்லியென்றல் மரபு; இதனை, புறநா. கருஉ : 1 - 6-ஆம் அடிக ளாலும் அவற்றின் குறிப்புரையாலுமுணர்க.



தொழுதன னெழுவேற் கைகவித் திரீஇ
இழுதி னன்ன வானிணக் கொழுங்குறை
கானதர் மயங்கிய விளையர் வல்லே
தாம்வந் தெய்தா வளவை யொய்யெனத்
தான்ஞெலி தீயின் *விரைவனன் சுட்டுநின்
இரும்பே ரொக்கலொடு தின்மெனத் தருதலின்
அமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி
நன்மர னளிய நறுந்தண் சாரற்
†கன்மிசை யருவி தண்ணெனப் பருகி
விடுத்த றொடங்கினே னாக வல்லே
பெறுதற் கரிய வீறுசா னன்கலம்
பிறிதொன் றில்லைக் காட்டுநாட் டேமென
மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம்
மடைசெறி முன்கைக் கடகமோ டீத்தனன்

எந்நா டோவென நாடுஞ் சொல்லான்
யாரீ ரோவெனப் ‡பேருஞ் சொல்லான்
பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே
இரும்புபுனைந் தியற்றாப் பெரும்பெயர்த் தோட்டி
அம்மலை காக்கு மணிநெடுங் குன்றிற்

---

8. "கைகவியாச் சென்று" அகநா. ௯ : 21.

9. "இழுதி னன்ன வானிணஞ் செருக்கி" மலைபடு. 244.

12. ஞெலிதீ : புறநா. ௨௪௭ : 2.

13. புறநா. ௩௨0 : 14, ௩௭௮ : 23, ௩௩௧ : 19, ௩௩௩ : 10.

15. புறநா. ௧௩௯ : 12.

19. காட்டுநாடு : "வன்புலக் காட்டுநாட் டதுவே" (நற். ௫௯); பாண்டிநாட்டின் உள்நாடொன்றற்குக் காட்டுநாடென்று பெயர் வழங்கியதாகத் தெரிகின்றது; திருவால. ௪௪ : 54.

21. "மடைசெறி கடகத் தோளான்" சூடாமணி. ௧ : 10.

24. இசின், தன்மைக்கண் வந்தது; புறநா. ௨௨ : 36, ௧௫௧ : 7; "கேட்டிசி னல்லனே" நற். ௧௧௫.

25. "உயர்சிமைய வுழாஅ நாஞ்சிற் பொருந" (புறநா. ௧௩௯ : 8) என்பதும் இக்கருத்தே பற்றி வந்தது.

பி - ம். *விரைவினன். †கண்முகை யருவி. ‡பெயரும்.

நளிமலை நாட னள்ளியவ னெனவே.

திணை - அது; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—கூதிர்க்காலத்துப் பருந்தினது கரிய சிறகையொத்த துணியாகிய சீரையையுடையேனாய்ப் பலாவடியைப் பொருந்தி, தன்னையும் நினையேனாய் வேற்றுநாட்டின்கட்சென்ற எனது ஓய்ந்த செலவானுளதாகிய வருத்தத்தினையும் மிடியையும் பார்த்து மானினது திரளைத் தொலைத்த, குருதிதோய்ந்த அழகிய வீரக்கழலினையுடைய காலினையும் வாலிய ஒளியையுடைய அழகிய நீலமணிவிளங்கும் உச்சியையுமுடைய செல்வத்தையுடைய தலைவனாகிய ஒரு வலிய வில்லினையுடைய வேட்டுவன், தன்னை அஞ்சலி பண்ணினேனாய் எழுந்திருப்பேனைக் கைகவித்து இருத்தி நெய்யிழுதுபோன்ற வெள்ளிய நிணத்தையுடைய கொழுவிய தடியைக் காட்டுவழியின்கண் வழிமயங்கிப்போகிய இளையர்தாம் விரையவந்து பொருந்துவதற்குமுன்னே கடிதாகத் தான்கடைந்த தீயான் விரைந்து சுட்டு நினது மிகப்பெரிய சுற்றத்துடனே தின்மினென்று தருதலான் அதனை யாங்கள் அமிழ்துபோலத் தின்று சுடுகின்ற பசி தீர்ந்ததாக, நல்ல மரச்செறிவையுடைய நறிய குளிர்ந்த மலைச்சாரற்கண் மலையுச்சியினின்றும் வீழ்ந்த அருவிநீரைக் குளிரக் குடித்து விடைகொள்ளத் தொடங்கினேனாக, விரைய வந்து பெறுதற்கரிய பெருமையமைந்த நல்ல அணிகலங்கள் தருதற்கு வேறொன்றில்லை, யாம் காட்டுநாட்டின்கண்ணேமெனச்சொல்லித் தனது மார்பிற் பூணப்பட்ட விளங்கிய முத்தவடங்களையுடைய ஆரத்தைக் கொளுத்துச்செறிந்த முன்கைக்கு அணிந்த கடகத்துடனே தந்தனன்; நும்முடைய நாடு எந்நாடோவென்று கேட்ப நாடும்

சொல்லிற்றிலன்; நீர் யாரெனக் கேட்பப் பெயரும் சொல்லிற்றிலன்; அவன் நாடும் பெயரும் பிறர்பிறர் வழியின்கண்ணே சொல்லக்கேட்டேன் யான்; இரும்பாற் புனைந்து செய்யப்படாத மிக்க புகழையுடைய தோட்டி

---

27. புறநா. கஙஎ : 11 ; "பளிங்குசொரி வன்ன பாய்சுனை குடைவுழி" குறிஞ்சி. 57, அடிக்.

28. "நளிமலை நாட னள்ளியும்" சிறுபாண். 107.

'நளி' என்னும் உரிச்சொல் பெருமையையுணர்த்தியதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 24, சே.; ஷை. ஷை. ஷை. 26, தெய்வச். ஷை. ஷை. ஷை. 22, ந.; இ. வி. சூ. 284, உரை.





யாகிய அம்மலையைக் காக்கும், அழகிய பெரிய பக்கமலையினையும் பளிங்கை வகுத்தாற்போன்ற வெளிய நிறத்தையுடைய இனிய நீரையுமுடைய பெரிய மலைநாட்டையுடைய நள்ளி அவனென.—எ - று.

நீங்கி: நீங்க.

பலவுமுதற்பொருந்தித் தொழுதனனெனவும், மலைகாக்கும் நள்ளியெனவும் இயையும்.

அவன் நள்ளியெனப் பிறர்பிறர் கூற வழிக்கேட்டிசினெனக் கூட்டுக. (கடு0)

---

(௧௫௧) பண்டும் பண்டும் பாடுந ருவப்ப,
விண்டோய் சிமைய விறல்வரைக் கவாஅற்
கிழவன் சேட்புலம் படரி னிழையணிந்து
புன்றலை மடப்பிடி பரிசி லாகப்
பெண்டிருந் தம்பதங் கொடுக்கும் வண்புகழ்க்
கண்டீ ரக்கோ னாகலி னன்றும்
முயங்க லான்றிசின் யானே, பொலந்தேர்
நன்னன் மருக னன்றியு நீயும்
முயங்கற் கொத்தனை மன்னே, வயங்குமொழிப்
பாடுநர்க் கடைத்த கதவி னாடுமழை
அணங்குசா லடுக்கம் பொழியு நும்

---

2. "மாயோ னன்ன மால்வரைக் கவாஅன்" (நற். ௩௨); "மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்" பட்டின. 138.

3. இழை - ஒருவரால் இழைக்கப்பட்ட அணிகலங்கள்; தொல். களவு. சூ. 4, ந.

4. "இரும்பிடிப் பரிசிலர் போல" (அகநா. ௩௧௧); "பிடிக்கணஞ் சிதறும் பெயன்மழைத் தடக்கை" சிறுபாண். 124.

5. "உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன், றீவார்மே னிற்கும் புகழ்" குறள், 232.

7. இசின்: புறநா. ௧௫௦: 24, அடிக்.

11. புறநா. கஅ : 10 - 11; "அணங்குடைச் சாரல்.....இறும்பில்" பெரும்பாண். 494 - 5.



மணங்கமழ் மால்வரை வரைந்தன ரெமரே.

திணையும் துறையும் அவை.

இளங்கண்டீரக்கோவும் [1]*இளவிச்சிக்கோவும் ஒருங்கிருந்தவழிச் சென்ற பெருந்தலைச்சாத்தனார் இளங்கண்டீரக்கோவைப் புல்லி இளவிச்சிக்கோவைப் புல்லாராக, என்னை என்செயப் புல்லீராயினி ரென அவர் பாடியது.

இ - ள்.—முன்பேயும் முன்பேயும் பாடுவார் விரும்ப விசும்பைப் பொருந்திய உச்சியையுடைய சிறந்த மலைப்பக்கத்துத் தம் கணவன் நெடுந்தூரத்தே செல்லின் ஆபரணத்தை யணிந்து புல்லிய தலையையுடைய மெல்லிய பிடியைப் பரிசிலாகக்கொண்டு அவர்பெண்டிரும் தம் தரத்திலே பரிசில் கொடுக்கும் வள்ளிய புகழையுடைய கண்டீரக்கோனுதலாலே பெரிதும் தழுவிக்கொள்ளுதலை அமைந்தேன் யான்; பொன்னாற் செய்யப்பட்ட தேரினையுடைய நன்னன்மரபினுள்ளானுதலன்றியும் நீயும் தழுவுதற்குப் பொருந்தினையாயினும் விளங்கும் மொழியையுடைய பாடுவார்க்கு அடைத்த கதவுகாரணமாக, இயங்குமுகில் தெய்வம் அமைந்த அரை மலைக்கண்ணே சொரியும் நமது மணநாறும் உயர்ந்த மலையைப் பாடுதலை நீக்கினார், எம்முள்ளார்; ஆதலான், முயங்கிற்றிலேன்.—எ - று.

பெண்டிரும் தம்பதங்கொடுக்குமெனவே ஆடவரும் தம் தரத்தே களிறுகொடுத்தல் போந்தது.

'கிழவன்' என்பது, 'ஏவ லிளையர் தாய்வயிறு கறிப்ப' என்பது போலப் பன்மைசுட்டிநின்றது.

'நன்னன்மருகனன்றியும்' என்றதற்கு [2]"பெண்கொலை புரிந்த நன்னன் போல, வரையா நிரயத்துச் செலியரோ வன்னை" என்றமையின் அதுவும் வரைதற்கு ஒரு காரணமாக உரைப்பாரும் உளர்.

பதமென்றது, பரிசில்.

மன்: ஒழியிசைக்கண் வந்தது. (கடுக)

---

10 - 12. புறநா. கஎ௫ : 20 - 21.

5 - 12. கொடுப்போரேத்திக் கொடார்ப்பழித்தல்; தொல். புறத்திணை. சூ. 35.

[1]விச்சி - ஒருமலை; இதன்அரசன் விச்சிக்கோ (புறநா. உ00 : 8); "வில்கெழு தானை விச்சியர் பெருமகன்" (குறுந். கூஉஅ); "இருபெரு வேந்தரும் விச்சியும் வீழ" (பதிற். கூ-ஆம் பத்தின் பதிகம்); "விச்சி மலைச்சாரற் பட்டைகொண்டு பகடாடி" தே. ஐயாறு.

[2]குறுந்தொகை, உகஉ.

பி - ம். *இளவச்சிரக்கோ.



(கடுஉ) வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழிப்
பேழ்வா யுழுவையைப் பெரும்பிறி துறீஇப்
புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி யுரற்றலைக்
கேழற் பன்றி வீழ வயல

தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்,

---

1. யானையை அம்பாற் கொல்லுதல் : அகநா. கஎஉ : 7 - 9; பெருங். உ. 14: 48 - 9.

2. பேழ்வாயுழுவை: புறநா. ருரு: 9. பெரும்பிறிது: மணி. உரு: 28.

3. புகர்-மான்; "புகாருருவாகி முனிந்தவனே" பெரியதிருமொழி. உ. 4 : 7.

4. 'வேழக்கரும்பு, கேழற்பன்றியென்புழித் தொக்கனவில்லை யெனினும் தொகையென வேண்டப்படுமாகலான் அவற்றைத் தழுவுதற் கும், உருபு முதலாயின தொகுதலிற் றொகையென்பார்க்கும் ஒட்டி ஒரு சொன்னீர்மைப்படுதலும் தொகையிலக்கணமெனல் வேண்டும்' (தொல். எச்ச. சூ. 16, சே.); 'கேழற்பன்றி, வேழக்கரும்பென்பனவற்றிற்குத் தொக்கன இன்மையிற் றொகைச்சொல்லாமாறு என்னையெனின், அவற் றிற்கும் ஒன்றையொன்று விசேடித்து நிற்கின்ற தன்மையை உணர்த்து தற்கு வரும் ஆகிய என்னும் வாசகம் தொக்குநின்றதென்றே கோடும்' (ஷை. ஷை. சூ. 16, ந.); 'கேழற்பன்றி...கேழற்பன்றி முதலாயினவும் சாதிதொக்க பண்புடைமையின் ஈண்டு வேண்டினரென்க', 'பூமலர், பூம்போது, களிற்றுருத்தல், கேழற்பன்றி யென்றற்றொடக்கத்தன வோவெனின்,......கேழலென்பது எய்ப்பன்றி முதலானவற்றை நீக்குத லானும் பொருள்வேறுபாடுடைமையின் ஒருபொருட்பன்மொழி யாகா; பண்புத்தொகையுள் அடங்குமென்க' நன். சூ. 364, 367, மயிலை.

3 - 4. ஊற்றலைக்கேழற்பன்றி: "ஊற்றலை யுருவப் பன்றி யிடம் வலந் திரிய" சீவக. 2202.

5. வல்வில் வேட்டம் - மிக்க வன்மையையுடையதும் பலவற்றை

னூடுருவிச் செல்லும்படி அம்பை விரைவிற் செலுத்துவதுமாகிய வில் வேட்டம்; புறநா. கரு0 : 7; "அரக்கர் தலைவன்றன், வற்பார் திணிதோளைந்நான்குந் துணித்த வல்வி லிராமனிடம்" பெரியதிருமொழி, ரு. 1 : 4.

1 - 6. இவ்வடிகளுடன், "அலையுருவக் கடலுருவத் தாண்டகைத னீண்டுயர்ந்த, நிலையுருவப் புயவலியை நீயுருவ நோக்கையா, உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைத னூருருவி, மலையுருவி மாமுருவி மண்ணுருவிற்



புகழ்சால் சிறப்பி னம்புமிகத் திளைக்கும்
கொலைவன் யார்கொலோ கொலைவன் மற்றிவன்
விலைவன் போலான் வெறுக்கைநன் குடையன்
ஆரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்
சார லருவிப் பயமலைக் கிழவன்
ஓரி கொல்லோ வல்லன் கொல்லோ
பாடுவல் விறலியோர் வண்ண நீரும்
மண்முழா வமைமின் பண்யாழ் நிறுமின்
கண்விடு தூம்பிற் களிற்றுயிர் தொடுமின்
எல்லரி தொடுமி னாகுளி தொடுமின்
பதலை யொருகண் பையென வியக்குமின்
மதலை மாக்கோல் கைவலந் தமினென்

றிறைவ னாகலிற் சொல்லுபு குறுகி
மூவேழ் துறையு முறையுளிக் கழிப்பிக்
கோவெனப் பெயரிய காலை யாங்கது

---

றொருவாளி", "வெய்ய வாளியை யாளுடை வில்லியும் விட்டான்", "ஏழு மாமர முருவிக்கீ ழுலகமென் றிசைக்கும், ஏழு மூடுபுக் குருவிப்பின் னுடனடுத் தியன்ற, ஏழி லாமையின் மீண்டதவ் விராகவன் பகழி" (கம்ப. குலமுறை. 26; மாமர. 137, 138) என்பவை ஒப்புநோக்கற்பாலன.

8. கொலைவன் - கொல்லுதற்றொழில்செய்பவன்; "கொலைவ னல்லையோ கொற்றவ னாயினை" (மணி. ௨௫ : 174); கலி. ௧௨ : 1, ௧0௫ : 15, ௧௪௭ : 25.

10. மு. முருகு. 104.          14. புறநா. ௬௫ : 1.

15. "கண்ணறுத் தியற்றிய தூம்பு" (பதிற். ௪௧); "ஓய்களி றெடுத்த நோயுடை நெடுங்கை, தொகுசொற் கோடியர் தூம்பி னுயிர்க்கும், அத்தம்" (அகநா. ௧௧௧); "கண்ணிடை விடுத்த களிற்றுயிர்த் தூம்பின்" மலைபடு. 6.

17. "நொடிதரு பாணிய பதலையும்" (மலைபடு. 11) என்பதும், 'மாத்திரையைச் சொல்லுந் தாளத்தையுடைய ஒருகண்மாக்கிணையும்' என்னும் அதனுரையும் ஈண்டு அறியற்பாலன.

18. மாக்கோல்: "வெண்கடைச் சிறுகோ லகவன் மகளிர்" (குறுந். ௨௧௮); "தேமுதிர் சிமையக் குன்றம் பாடும், நுண்கோ லகவுநர் வேண்டின்" அகநா. ௨0௮: 2 - 3.

14 - 8. மலைபடு. 2 - 11.

20. "துறைபல முற்றிய" (மலைபடு. 40) என்பதன் உரையைப் பார்க்க.

தன்பெய ராகலி னாணி மற்றியாம்
நாட்டிட னாட்டிடன் வருது மீங்கோர்
வேட்டுவ ரில்லை நின்னொப் போரென.
வேட்டது மொழியவும் விடாஅன் வேட்டத்திற்
றானுயிர் செகுத்த மானிணப் புழுக்கோ
டானுருக் கன்ன வேரியை நல்கித்
தன்மலைப் பிறந்த தாவி னன்பொன்
பன்மணிக் குவையொடும் விரைஇக் கொண்மெனச்
சுரத்திடை நல்கி யோனே; விடர்ச்சிமை
ஓங்கிருங் கொல்லிப் பொருநன்.
ஓம்பா வீகை விறல்வெய் யோனே1.

திணை - அது; துறை - பரிசில்விடை.

வல்விலோரியை வன்பரணர் பாடியது.

இ - ள்.—ஆனையைக் கொன்றுவீழ்த்த சிறந்த தொடையையுடைய அம்பு, பெரிய வாயையுடைய புலியை இறந்துபாட்டையுறுவித்துத், துளை பொருந்திய கோட்டையுடைத்தாகிய தலையினையுடைய புள்ளிமான் கலையை உருட்டி, உரல்போலும் தலையையுடைய கேழலாகிய பன்றியை

---

22. ஆகலென்னும் வினைக்குறிப்புச்சொல் சார்ந்துநின்ற சொற்

பொருளையே உணர்த்தி நிற்றற்கு மேற்கோள்; தோல். இடை. சூ. 32, ந.

21 - 2. புறநா. கம0 : 22 - 3; "சான்றோர், புகழுமுன்னர் நாணுப, பழியாங் கொல்பவோ காணுங் காலே" (குறுந். உருஉ); "தம்புகழ் கேட்டார்போற் றலைசாய்த்து மரந்துஞ்ச" (கலி. கஉக); "பிறர்தன்னைப் பேணுங்கா ணாணலும்" திரி. 6.

25. புறநா. ககக : 29; "ஒன்றியான் பெட்டா வளவையின்" (பொருந. 73); "நீசில மொழியா வளவை" சிறுபாண். 235.

28. "தாவி னன்பொன் றைஇய பாவை" அகநா. உகஉ.

31 - 2. கொல்லிமலை ஓரிக்குரியதென்பது, "கொல்லி யாண்ட வல்வி லோரி" (புறநா. கடுஅ : 5), "ஓரி, பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி", "வல்வி, லோரிக் கொன்று சேரலற் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா. உ0அ, உகக) என்பவற்றாலும் விளங்கும்.

[1]மு. 'வேழம் வீழ்த்த விழுத்தொடைப்பகழி யென்னும் புறப்பாட்டு, இடைநிலத்திற் பரிசுபெற்றமை கண்டார்க்குக்கூறியது' தோல். புறத் திணை. சூ. 36, ந.



வீழச்செய்து அதற்கு அயலதாகிய ஆழ்தலையுடைய புற்றின்கட் கிடக்கின்ற உடும்பின்கட் சென்று செறியும் வல்வில்லாலுண்டாகிய வேட்டத்தை வென்றிப்படுத்தியிருந்தவன், புகழமைந்த சிறப்பினையுடைய அம்பு

ஏத்தொழிலிலே மிகச் சென்று உறுதற்குக் காரணமாகிய கொலைவன் யாரோதான்? கொலைவன் மற்றிவன், விலை ஏதுவாகக் கொன்ருனுகமாட்டான்; செல்வத்தை மிகவுடையனுயிருந்தான்; சந்தனம்பூசிப்புலர்த்திய அழகிய பரந்த மார்பினையுடைய, சாரற்கண்ணே அருவியையுடைய பயன் படுமலைக்குத் தலைவனாகிய ஓரியோ அல்லனோதான்? அவனுகத்தகும்; யான் பாடுவேன், விறலி! ஒருவண்ணம்; நீங்களும் முழாவின்கண்ணே மார்ச்சனையை யிடுமின்; யாழிலே பண்ணை நிறுத்துமின்; கண்திறக்கப் பட்ட தூம்பாகிய களிற்றினது கைபோலும் வடிவையுடைய பெருவங்கியத்தை இசையுங்கோள்; சல்லியை வாசியுமின்; சிறுபறையை அறையுங்கோள்; பதலையில் ஒருமுகத்தை மெல்லெனக் கொட்டுமின்; நமது [1]பிறப்புணர்த்தும் கரியகோலைக் கையின்கண்ணே தாருங்கோளென்று சொல்லி அணுகித் தலைவனுதலாலே இருபத்தொரு பாடற்றுறையையும் முறையாற் பாடி முடித்துப் பின்னர்க் கோவேயென்று அவன்பெயர் கூறிய காலத்து அவ்விடத்து அவ்வார்த்தை தன்பெயராதலால் நாணி, பின்னை யாங்கள் 'நாட்டிடந்தோறும் நாட்டிடந்தோறும் சென்றுவருவேம்; இவ்விடத்து ஒரு வேட்டுவரில்லை, நின்னை ஒப்போர்' என யாம் விரும்பியது கூறவும் அதற்குக் காலந்தாராஞய் வேட்டையின்கண் தான் எய்த மானினது நிணத்தையுடைய தசையினது புழுக்குடனே ஆவின் நெய்யை உருக்கினுற்போன்ற மதுவைத் தந்து தன்னுடைய மலையின்கட் பிறந்த வலியில்லாத நல்ல பொன்னைப் பல மணித்திரளுடனே கலந்து இதனைக் கொண்மினெனச்சொல்லிச் சுரத்திடத்தே எமக்குத் தந்தான்; மூழையையுடைத்தாகிய உச்சியையுடைய உயர்ந்த பெரிய கொல்லிக்குத் தலைவன், பாதுகாவாத வண்மையினையுடைய வென்றியை விரும்புவோன்.—

எ - று.

புழலென்றது ஆகுபெயராற் புழலையுடைய கோட்டை.

களிற்றுயிரென்றது, ஆகுபெயராற் களிற்றினது கைபோலும் வடிவையுடைய பெருவங்கியத்தை.

பாடுவல்விறலியோர் வண்ணமென்றது, நீயும் ஒன்று பாடுவாயாக வென்னும் நினைவிற்று.

நீருமென்றது, கூட்டத்தை.

---

1 'நுண்கோல் - பிறப்புணர்த்துங்கோல்' பதிற். சரு : 27, உரை.



[1]மூவேழ் துறையுமென்றது, [2]வலிவு மெலிவு சமம் என்னும் மூன்று தானத்திலும் ஒவ்வொன்றில் ஏழு தானம்முடித்துப்பாடும் பாடற்றுறையை; அன்றி, இருபத்தொருநரம்பாற் றொடுக்கப்படும் பேரியாழெனினும் அமையும்.

தம்மினென்றது, தமினெனக் குறைந்து நின்றது.

கொல்லிப்பொருநனாகிய விறல்வெய்யோன் கோவெனப் பெயரிய காலை, அது தன்பெயராகலின் நாணி வேட்டதுமொழியவும் விடானாய் நல்கியோனெனக் கூட்டுக. (கடுஉ)

---

[1]"ஏழேயேழே நாலேமூன் றியலிசை யிசையியல்பா வஞ்சத்தேய் வின்றிக்கே மனங்கொளப் பயிற்றுவோர்" (தேவாரம், திருத்தாளச்சதி) "பண்களுக்கு இன்றியமையாத மூவேழ்திறம்" (சிலப், டு : 35 - 7,

அடியார்.) என்பனவும் ஈண்டறியத்தக்கன.

[2]பொருந. 55, ந.

---

(கருங) மழையணி குன்றத்துக் கிழவ னாளும்
இழையணி யானை யிரப்போர்க் கீயும்
சுடர்விடு பசும்பூட் சூர்ப்பமை முன்கை
அடுபோ ரானா வாத னோரி
மாரி வண்கொடை காணிய நன்றும்
சென்றது மன்னெங் கண்ணுளங் கடும்பே
பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை
வானார்த் தொடுத்த கண்ணியுங் கலனும்
யானை யினத்தொடு பெற்றனர் நீங்கிப்
பசியா ராகன் மாறுகொல் விசிபிணிக்
கூடுகொ ளின்னியங் கறங்க
ஆடலு மொல்லார்தம் பாடலு மறந்தே.

திணை - அது; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

---

2. புறநா. கருக : 3 - 4.

3. சூர்ப்பு - வளைவு; ஆகுபெயராற் கடகத்திற்காயிற்று; "சூர்ப்புறு கோல்வளை செறிந்த முன்கை" அகநா. கசஉ.

5. புறநா. கசுசு : 6 - 7. 7. புறநா. சுசுச : 2 - 3.
8 - 9. புறநா. கசஅ : 3 - 4.



இ - ள்.—முகில்சூழ்ந்த மலைக்குத் தலைவன், நாடோறும் பட்டம் முதலாகிய பூண்களையணிந்த யானையை இரப்போர்க்குக் கொடுக்கும் கதிர்விடுகின்ற பசும்பொன்னாற்செய்த அணியினையும் விளங்கும் கடக மமைந்த முன்கையினையுமுடைய கொல்லும்போர் அமையாத ஆதன் ஓரி யது மழைபோலும் வள்ளிய கொடையைக் காண்டற்கு மிகவும்சென்றது எம்முடைய கூத்தச்சுற்றம்; அச் சுற்றத்தார் குளிர்ந்த நீரின்கட் பூவாத மணிமிடைந்த குவளைப்பூவை [1]வெள்ளிநாராற் றொடுக்கப்பட்ட பொன்னரி மாலையினையும் பிற அணிகலங்களையும் யானையணிகளுடனே பெற்றனராய் நீங்கிப் பசியாராகலானேகொல்லோதான், வாரால்வலித்துப் பிணிக்கப்பட்ட பல கருவியும் தொகுதிகொண்ட இனிய இயங்கள் ஒலிப்ப ஆடுதலும் மாட்டாராயினர், தமது பாடுதலையும் மறந்து.—எ - று.

சூர்ப்புடையதனைச் சூர்ப்பென்றார்.

[2]குடிமை ஆண்மைத்தொடக்கத்தன, நின்றாங்கே நின்று உயர்திணை முடிவும் பெறுதலின் இக்கடும்பென்பதும் பொருளுணர்க்கால் முடிவு பெற்றது.

கண்ணுளங்கடும்பென நின்றவழி, அம்: அல்வழிச்சாரியை. மன்: அசைநிலை.

ஓரி வண்கொடை காணிய கண்ணுளங்கடும்பு சென்றது; சென்ற பின்றை அக்கடும்பாயினோர் தமது [3]பாடலும் மறந்து ஆடலும் ஒல்லா

ராயினர்; அதற்குக் காரணம் பசியாராகன் மாறுகொலெனக் கூட்டி வினை முடிவுசெய்க.

‘நுண்பூண்’ என்று பாடமோதுவாரும் உளர். (௧௫௩)

---

[1]“வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே” புறநா. ௧௧ : 17.

[2]குடிமை ஆண்மை முதலியவை, “குடிமையாண்மை” (தொல். கிளவி. சூ. 57) என்பதனால் அறியலாகும்.

[3]பலநாளாகக் கற்ற கல்வியைப் புதிதாகப் பெற்ற செல்வம் மறப்பிக்குமென்று கூறுமுகத்தால், வல்விலோரியின் கொடைச்சிறப்பை இங்கே கூறிய வன்பரணரே இந்நூல், ௧௪௮-ஆம் பாட்டில் நள்ளியென்னும் வள்ளலின் கொடைச்சிறப்பையும் இங்ஙனமே பாராட்டினர்.

---

(௧௫௪) திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்
அறியுநர்க் காணின் வேட்கை நீக்கும்

---

1. நணி: “துறைநணி யூரனை” (ஐங்குறு. ௨0); “நணி நணித் தாயினும் சேஎய்ச் சேய்த்து” (பரி. ௧௭ : 25); “நீர்நணிப்பிரம்பின்” பெரும்பாண். 288.





சின்னீர் வினவுவர் மாந்த ரதுபோல்
அரச ருழைய ராகவும் புரைதபு
வள்ளியோர்ப் படர்குவர் புலவ ரதனால்

*யானும், பெற்ற தூதியம் பேறியா தென்னேன்*
*உற்றனெ ளுதலி னுள்ளிவந் தனனே*
*ஈயென விரத்தலோ வரிதே நீயது*
*நல்கினு நல்கா யாயினும் வெல்போர்*
*எறிபடைக் கோடா வாண்மை யறுவைத்*
*தூவிரி கடுப்பத் துவன்றி மீமிசைத்*
*தண்பல விழிதரு மருவியின்*
*கொண்பெருங் கானம் பாடலெனக் கெளிதே.*

திணை - அது; துறை - பரிசிற்றுறை.
கோண்கானங்கிழானை மோசிகீரனர் பாடியது.

---

1 - 3. புறநா. உ0ச : 5 - 9; "*கடல்சார்ந்து மின்னீர் பிறக்கும் மலை சார்ந்து, மூப்பீண் டுவரி பிறத்தலால்*" (நாலடி. 245); "*கடல் பெரிது, மண்ணீரு மாகா ததனருகே சிற்றூற, லுண்ணீரு மாகி விடும்*" மூதுரை, 12.

5. புறநா. சஎ : 1.

'*படர்*' *என்னும் உரிச்சொல் நினைத்தலும் செல்லுதலுமாகிய குறிப்பையுணர்த்துமென்பதற்கு மேற்கோள்*; தோல். உரி. சூ. 42, ந.

8. புறநா. உ0ச : 1; "*நல்லா றெனினுங் கொளல் தீது*" (குறள், 222); "*கொள்ளுத தீது கொடுப்பது நன்றால்*" கம்ப. வேள்வி. 29.

*ஈயென்கிளவி இழிந்தோன் கூற்றென்பது மேற்கோள்*; தோல். எச்ச. சூ. 49, ந.

10. புறநா. கசுரு : 15; "*ஓடாப் பூட்கை . . . அறுவையர்*", "*ஓடாப் பூட்கை மறவர்*" (பதிற். ௬ச, ௫எ); "*ஓடாப் பூட்கை வேந்தன்*" (அகநா. க00); "*ஓடாப் பூட்கைப் பிணிமுகம்*" (முருகு. 247); "*ஓடாப்*

பூட்கை யுறந்தையும் வறிதே" (சிறுபாண். 83); "விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி, னோட்டன்றோ வன்க ணவர்க்கு" குறள், 775.

11. மீமிசை : "நவிரத்து மீமிசை" மலைபடு. 579.

10 - 12. துகில் அருவிக்குவமம்; "வேறுபஃ றுகிலி னுடங்கி . . . இழிதருமருவி" (முருகு. 296 - 316); "அவிர் துகில் புரையு மவ்வெள் ளருவி" (குறிஞ்சி. 55, அடிக்.); "மாநீல மாண்ட துகிலுமிழ்வ தொத்தருவி, மாநீல மால்வரை நாடகேள்" திணைமாலை. 6.

13. கொண்பெருங்கானம் : புறநா. கடுரு : 7, கடுசு : 2; "பொன்படு கொண்கான நன்னன்" நற். ருகக.



இ - ள்.—திரையலைக்கும் கடலினது கரைக்கண் அணியவிடத்தே போகினும் அறிவாரைக் காணின் நீர்வேட்கையினைத் தணிக்கும் சிறிய நீரைக் கேட்பர், உலகத்துமக்கள்; அதுபோல, வேந்தரிடத்தாகவும், குற்றந்தீர்ந்த வள்ளியோரை நினைத்துச் செல்வர், அறிவுடையோர்; அதனால், யானும் பெற்றதனைப் பயனாகக்கொண்டு பெற்றபொருள் சிறிதாயினும் இவன்செய்தது என்னென்று இகழேன், வறுமையுற்றேனாதலின்; நின்னை நினைத்து வந்தேன்; எனக்கு [1]ஈயாயென்று இரத்தல் அரிது; நீ அப்பரிசிலைத் தரினும் தாராயாயினும் பூசலிடத்து எறியும் படைக்கலத்துக்குப் புறத்து அடியிடா ஆண்மையையும், துகிலினது தூயவிரியை யொப்ப நெருங்கி உச்சியினின்றும் பலவாய் இழியும் குளிர்ந்த அருவியையுடைய நினது கொண்கானத்தையும் பாடல் எனக்கு எளிது.—எ - று.

புரைதப வென்று பாடமோதிப் புரைதபப்பட்டார்குவரேனினும் அமையும்.

நீ அது நல்கினும் நல்காயாயினும் ஈயெனவிரத்தல் எனக்கு அரிது; நினது ஆண்மையையும் கொண்பெருங்கானத்தையும் பாடல் எனக்கு எளிதெனக் கூட்டி வினைமுடிவுசெய்க. (கருச)

[1]"ஈயா வெனக்கென் றிரப்பானே லந்நிலையே, மாயானோ மாற்றி விடின்" நாலடி. 308.

---

(கருரு) வணர்கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ
உணர்வோர் யாரென் னிடும்பை தீர்க்கெனக்
கிளக்கும் பாண கேளினி நயத்திற்
பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ
ஏர்தரு சுடரி னெதிர்கொண் டாஅங்

1. "வணரமை நல்யாழ்" பதிற். சக.
4. "பீரிவர் வேலிப் பாழ்மனை நெருஞ்சி" பதிற். உசு : 10.
5. "வலனேர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு" முருகு. 1 - 2.

4 - 5. நெருஞ்சிப்பூக்கள் சூரியனையே நோக்குதல் இயல்பு; "ஓங்குமலைநாடன், ஞாயி றனையனென் றோழி, நெருஞ்சி யனையவென் பெரும் பணைத் தோளே" (குறுந். கூகரு); "வாணிடைச், சுடரொடு திரிதரு நெருஞ்சி போல" (அகநா. கூகூசு); "வெஞ்சுடர் நோக்கு நெருஞ்சியில்" (இறை. சூ. 47, உரை, மேற். 296); "நீள்சுடர் நெறியை நோக்கு நிரையிதழ் நெருஞ்சிப் பூப்போல்" (சீவக. 461); "அருந்தவர்க் காயினுந் திருந்துமுக மிறைஞ்சாது, செங்கதிர் விரும்பும் பைங்கொடி நெருஞ்சிப், பொன்புனைமலர்" (பெருங். உ. 4 : 13 - 5); "எழுனைப் புரவியொ டெழுகதிர் நோக்கிய, சிற்றிலை நெருஞ்சிப் பொற்பூ வென்ன" கல்லாடம், சுரு : 14 - 5.

*கிலம்படு புலவர் மண்டை விளங்குபுகழ்க்*
*கொண்பெருங் கானத்துக் கிழவன்*
*தண்டா ரகல நோக்கின மலர்ந்தே.*

**திணை - அது; துறை - பாணாற்றுப்படை.**
**அவனை அவர் பாடியது.**

இ - ள்.—வளைந்த கோட்டையுடைய சிறிய யாழை உலர்ந்த மருங்கிலே தழுவிக்கொண்டு அறிவோர்யார்தான் எனது துன்பத்தைத் தீர்க்கவென்று நயத்திற் சொல்லும் பாண! யான் சொல்லுகின்றதனை இப்பொழுது கேட்பாயாக; பாழூரின்கண் நெருஞ்சியினது பொன்னிறத்தையுடைய வாலியபூ எழுகின்ற ஞாயிற்றை எதிர்கொண்டாற்போல, வறுமையுற்ற யாழ்ப்புலவரது ஏற்குமண்டை, விளங்கிய புகழையுடைய கொண்பெருங்கானங்கிழானது குளிர்ந்த தாரையுடைய மார்பத்தை மலர்ந்து நோக்கின.—எ - று.

'ஏர்தரு சுடரி னெதிர்கொண் டாங்கு' என்புழி, இன், சாரியை; அது, 1தோற்றம்வேண்டாத்தொகுதிக்கண் வந்தது; அன்றி, ஐகாரம், விகாரத்தால் தொக்கதெனினும் அமையும்.

நயத்திற்கிளக்கும் பாணவென இயையும்; நயத்தின் அகலம் நோக்கினவென இயைப்பினும் அமையும்.

மண்டை அகலநோக்கி மலர்ந்தவென்ற கருத்து: கொடுக்கும் பொருள் மார்பின் வலியான் உளதாமாகலின், அகலநோக்கினவென்றதாகக் கொள்க. (கரு௫)

6. "இலம்படு புலவ ரேற்றகை நெமர" (பரி. ௧௦ : 126); "இலம்படு புலவ ரேற்றகை நிறைய" (மலைபடு. 576.) மண்டை: புறநா. ௧௦௩ : 3, அடிக்.

7. புறநா. ௧௫௪ : 13.

6 - 8. மண்டைமலர்தல் : புறநா. ௧௦௩ : 3, ௧௭௩ : 2 - 3, ௩௩௩ : 4 - 5.

[1]"தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்" தொல். புணரியல். சூ. 30.

---

(௧௫௬) ஒன்றுநன் குடைய பிறர்குன்ற மென்றும்
இரண்டுநன் குடைத்தே கொண்பெருங் கானம்
நச்சிச் சென்ற விரவலர்ச் சுட்டித்
தொடுத்துணக் கிடப்பினுங் கிடக்கு மஃதான்று



நிறையருந் தானை வேந்தரைத்
திறைகொண்டு பெயர்க்குஞ் செம்மலு முடைத்தே.

திணை - அது; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—வண்மையாதல் வலியாதல் நன்மையொன்றுடைய

பிறருடைய மலைகள்; எந்நாளும் இரண்டு தன்மையையுடைத்து, பெரிய கொண்கானமென்னு மலை; அது, தன்பாற் பரிசில்நச்சிப்போன இரப்போர் காரணமாகத் தான், அவர்க்கு முன்பு [1]கடன் கொடுத்தோராலே வளைப் புண்ணப்பட்டுக் கிடப்பினுங் கிடக்கும்; அதுவன்றி, நிறுத்தற்கரிய படையையுடைய அரசரைத் திறைகொண்டு அவரை மீட்கும் தலைமை யையுமுடைத்து.—எ - று.

இரவலர்சுட்டி யென்று பாடமோதி, இரவலர்கருதிக்கொண்டு புகழ்களைத் தொடுத்துண்ணக்கிடக்கினும் கிடக்குமெனவும் [2]இரவலர் எமது எமதென்று கூறிட்டுண்ணக் கிடக்கினுங் கிடக்குமெனவும் உரைப் பினும் அமையும்.

இது, கொடைச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் கூறியவாறு. (கசுகூ)

5. "நிறையருந் தானை வெல்போர் மாந்தரம், பொறையன்" (அகநா. கசஉ); "நிறையருந் தானை வேந்தனு நேர்ந்து" (சிலப். உ௫ : 178); "நிறையருந் தானையொடு....நீங்கி" மணி. க : 26 - 7.

[1]கடன் கொடுத்தோர் - இரவலர்க்குக் கடன் கொடுத்தவர்; அவர் சூழ்வது இரவலர்பெறும் பரிசிலைத் தாம் வாங்கிக்கொண்டு செல்லுதற்கு.

[2]புறநா. கஙு : 16 - 7.

---

(கஙு எ) தமர்தற் றப்பி னதுநோன் றல்லும்
பிறர்கை யறவு தானா ணுதலும்
படைப்பழி தாரா மைந்தின ளுகலும்
வேந்துடை யவையத் தோங்குபு நடத்தலும்

1. "அன்பெனப் படுவது தன்கிளை செறாமை" (கலி. கசுங); "நண்பொன்றித் தம்மாலே நாட்டப்பட் டார்களைக், கண்கண்ட குற்ற

முளவெளினும் காய்ந்தியார், பண்கொண்ட தீஞ்சொற் பணைத்தோளா யாருளரே, தங்கன்று சாக்கறப் பார்" (பழ. 16); "குற்றம் பார்க்கிற் சுற்ற மில்லை" (கொன்றைவேந்தன், 18); "குற்றமது பார்க்குங்காற் சுற்ற மில்லை" வில்லி. பாரதம், கிருட்டினன் தூது. 17.



நும்மோர்க்குத் தகுவன வல்ல; எம்மோன்,
சிலைசெல மலர்ந்த மார்பிற் கொலைவேற்
கோடற் கண்ணிக் குறவர் பெருமகன்,
ஆடுமழை தவிர்க்கும் பயங்கெழு மீமிசை
எற்படு பொழுதி னினந்தலை மயங்கிக்
கட்சி காணாக் கடமா னல்லேறு
மடமா னாகுபிணை *பயிரின் விடர்முழை
இரும்புலிப் புகர்ப்போத் தோர்க்கும்
பெருங்க னாடனெம் மேறைக்குத் தகுமே.

திணையும் துறையும் அவை.

ஏறைக்கோனைக் குறமகள் இளவெயினி பாடியது.

இ - ள்.—தனக்குச் சிறந்தோர் தன்னைப் பிழைப்பின் அது பொறுத்தலும், பிறருடைய மிடிமைக்குத் தான் நாணுதலும், படை

யிடத்துப் பிறர்பழிக்கப்படாத வலியையுடையனுதலும், அரசுடைத்தாகிய அவைக்களத்தின்கண் மேம்பட்டுநடத்தலும் நம்மால் மதிக்கப்படுந் தலைவர்க்குத் தகுவனவல்ல; எம்முடைய தலைவன், வில்லைப் பூரணமாக வலித்தலான் அகன்ற மார்பினையும் கொல்லும் வேலினையும் காந்தட் பூவாற் செய்த கண்ணியினையுமுடைய குறவர்க்குத் தலைமகன், இயங்குகின்ற முகிலைத் தனது உயரத்தால் தடுக்கும் பயன்பொருந்திய மலையினது உச்சிக்கண் ஞாயிறு படுகின்ற காலத்தில் இனத்தினின்றும் தலைமயங்கித் தான்சேரும் சேக்கையைக் காணுத காட்டின்கண் மானினது நல்ல கலைமடப்பத்தினையுடைய மாணுகிய இளம்பிணையைப் பயிரான் அழைப்பின் அவ்வோசையை விடாராகிய முழையின்கட் கிடக்கின்ற பெரும்புலியாகிய புகர்நிறத்தினையுடைய ஏறு செவிதாழ்த்துக் கேட்கும் பெரிய மலைநாடனுகிய எம்முடைய ஏறைக்கோனுக்குப் பொருந்தும்.—எ - று.

'சிலைசெல மலர்ந்த மார்பு' என்பதற்கு மலைதோற்க மலர்ந்த மார்பெனினும் அமையும்.

தலைமயங்கி யென்பதனுள், தலை அசைநிலை. (கஙிஎ)

---

7. "கோடல், நீடிதழ்க் கண்ணி நீரலைக் கலாவ" (நெடுநல். 5 - 6); "மலைச்செங் காந்தட் கண்ணி" நற். கஎரு.

8. புறநா. கசுசு : 32, உ00: 4. 10. ஓ. புறநா. உ0உ : 2.
11. "மான்மறி விழுந்தது கண்டுமென மயங்கிப், பயிர்க்குரல் கேட்டதன் பான்மைய ளுகி" மணி. உரு : 115 - 6.

12. ஓர்க்கும் : புறநா. சுஅ : 17, அடிக்; உஅ0 : 6; குறுந். 96; முல்லை. 88; மலைபடு. 23.

பி - ம். *பயிரழைப்பின், பயிர்ப்பழைப்பின், பயிர்பழைப்பின்.

(கருஅ) முரசுகடிப் பிகுப்பவும் வால்வளை துவைப்பவும்
அரசுடன் பொருத வண்ணா னெடுவரைக்
கறங்குவெள் ளருவி கல்லலைத் தொழுகும்
பறம்பிற் கோமான் பாரியும், பிறங்குமிசைக்
கொல்லி யாண்ட வல்வி லோரியும்,
காரி யூர்ந்து பேரமர்க் கடந்த
மாரி யீகை மறப்போர் மலையனும்,
ஊரா தேந்திய குதிரைக் கூர்வேற்
கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழினியும்,
ஈர்ந்தண் சிலம்பி னிருடூங்கு நளிமுழை
அருந்திறற் கடவுள் காக்கு முயர்சிமைப்
பெருங்க னாடன் பேகனுந், திருந்துமொழி
மோசி பாடிய வாயு, மார்வமுற்
றுள்ளி வருந ருலைவுநனி தீரத்

---

1. "கடிப்பிகு கண்முரசம்" (நாலடி. 100); "கடிப்பிகு முரசே" சிலப். கஎ : "என்றியாம்".

'துவைத்தல்' என்னும் உரிச்சொல் இசைப்பொருள் உணர்த்திய தற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 60, ந.; இ. வி. சூ. 285, உரை.

1 - 2. அரசென்றது, சேர சோழ பாண்டியரை; பாரி, தன் மலையாகிய பறம்பை முற்றிய இவர்களோடு பொருதமை இந்நூல், கOகூ, ககO-ஆம் பாட்டுக்களாலும், அகநானூறு, எஅ-ஆம் பாட்டாலும் உணரப்படும்.

3 - 4. புறநா. ௨௦௧ : 4 - 5.

5. வல்விலோரி: புறநா. ௧௫௨ : 1 - 6, அடிக்.; அகநா. ௨௦௪ : 13 - 4. கொல்லியாண்ட ஓரி : புறநா. ௧௫௨ : 31 - 2, அடிக்.

7. புறநா. ௫௪ : 6 - 7, அடிக். ௫௫ : 15, அடிக்.

8. புறநா. ௧௬௮ : 14. "நெடுநெறிக் குதிரைக் கூர்வே லஞ்சி' அகநா. ௩௭௨.

8 - 9. கூர்வே லெழினி: "பல்வே லெழினி" (குறுந். ௮௦;) "உரவுச் சினங் கனலு மொளிதிகழ் நெடுவேல், அரவக் கடற்றானை யதிகன்" சிறுபாண். 102 - 3.

10. புறநா. ௧௨௬ : 6 - 7.

10 - 11. புறநா. ௧௫௧ : 11.

12. பெருங்கலுடன் பேகன் : சிறுபாண். 87.



தள்ளா தீயுந் தகைசால் வண்மைக்
கொள்ளா ரோட்டிய நள்ளியு மெனவாங்
கெழுவர் மாய்ந்த பின்றை யழிவரப்
பாடி வருநரும் பிறருங் கூடி
இரந்தோ ரற்றந் தீர்க்கென விரைந்திவண்
உள்ளி வந்தனென் யானே, விசும்புறக்
கழைவளர் சிலம்பின் வழையொடு நீடி

ஆசினிக் கவினிய பலவி னார்வுற்று
முட்புற முதுகனி பெற்ற கடுவன்
துய்த்தலை மந்தியைக் கையிடூஉப் பயிரும்
அதிரா யாணர் முதிரத்துக் கிழவ
இவண்விளங்கு சிறப்பி னியறேர்க் குமண
இசைமேந் தோன்றிய வண்மையொடு
பகைமேம் படுகநீ யேந்திய வேலே[1].

திணை - அது ; துறை - வாழ்த்தியல் ; பரிசில்கடாநிலையுமாம்.
குமணனைப் பெருஞ்சித்திரனார் பாடியது.

இ - ள்.—முரசு கடிப்பு அறையவும் வெள்ளிய சங்கு முழங்கவும் வேந்தருடனே பொருத தலைமையையுடைய நெடிய மலைக்கண் ஒலிக்கும் வெளிய அருவி கல்லை உருட்டியோடும் பறம்பிற்கு வேந்தனாகிய பாரியும், உயர்ந்த உச்சியையுடைய கொல்லிமலையை யாண்ட வலிய வில்லையுடைய ஓரியும், காரியென்னும் பெயரையுடைய குதிரையைச் செலுத்திப் [2]பெரிய

18 - 9. புறநா. ௫ : 24 - 6.
24. "துஞ்சுபதம் பெற்ற துய்த்தலை மந்தி" நற். ௯௭.
25. முதிரம் : புறநா. ௧௬0 ; 13, ௧௬௫ : 8.
27. புறநா. ௧௯௯ : 28.
28. புறநா. ௯௮ : 29.

1 மு. 'முரசுகடிப் பிகுப்பவும் வால்வளை துவைப்பவுமென்னும் புறப் பாட்டு, 'எழுவர் மாய்ந்த பின்றை' எனப் புறத்திணைத் தலைவர் பலராய் வந்தது', 'முரசுகடிப் பிகுப்பவும்......வேலே : இஃது இன்னோர்போல எமக்கு ஈயென்ற இயன்மொழிவாழ்த்து' தொல். அகத்திணை. சூ. 55,

டை. புறத்திணை. சூ. 35, ந.

2. பெரியபூசலென்றது, வல்விலோரியுடன் இவன் செய்த பூசலை; "முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி, செல்லா நல்லிசை நிறுத்த வல்வி, லோரிக் கொன்று சேரலர்க் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா. உ0க) என்பதனாலும் விளங்கும்.



பூசலை வென்ற மாரிபோலும் வண்மையையும் மிக்க போரினையுமுடைய [1]மலையனும், செலுத்தப்படாது உயர்ந்த குதிரையென்னுமலையையும் கூரிய வேலையும் கூவிளங்கண்ணியையும் வளைந்த ஆரத்தையுமுடைய எழினி அதியமானும், மிகக் குளிர்ந்த மலையின்கண் இருள்செறிந்த பெரிய முழை யினையும் மலைத்தற்கரிய வலியினையுமுடைய தெய்வங்காக்கும் உயர்ந்த சிகரங்களையுடைய பெரிய மலைநாடனாகிய பேகனும், திருந்திய சொல்லை யுடைய [2]மோசியென்னும் புலவனாற் பாடப்பட்ட ஆயும், ஆசைப்பட்டுத் தன்னை நினைந்து வருவாருடைய வறுமை மிகவுநீங்கத் தவிராதுகொடுக்கும் கூறுபாடமைந்த வண்மையினையுடைய, பகைவரைத் தூரத்திய நள்ளியு மெனச் சொல்லப்பட்ட [3]எழுவரும் இறந்தபின்பு கண்டார்க்கு இரக்கம் வரப் பாடிவருவாரும் பிறருங்கூடி இரந்தோரது துன்பத்தைத் தீர்க்கக் கடவேன் யானென்று நீ இருத்தலால் விரைந்து இவ்விடத்தே பரிசில் பெற நினைந்து வந்தேன், யான்; வானகத்தின்கண்ணே பொருந்த மூங்கில் வளரும் மலையின்கட் சுரபுன்னையோடு ஓங்கி ஆசினியோடு அழகுபெற்ற

[1]காரியென்பவன் இவனே ; இவனை மலையமான்றிருமுடிக்காரி யென்றுங் கூறுவர்.

[2]மோசியென்றது, உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரென்னும் புலவரை; புறநா. கஉஎ-ஆம் பாடல் முதலியவற்றின் பின்னுரைகளைப் பார்க்க.

[3]இச்செய்யுளிற்போலவே "வானம் வாய்த்த வளமலைக் கவாஅற், கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய, வருந்திற லணங்கி னாவியர் பெருமகன், பெருங்க லடன் பேகனுஞ் சுரும்புண, நறுவீ யுறைக்கு நாக நெடுவழிச், சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய, பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற், பறம்பிற் கோமான் பாரியுங் கறங்குமணி, வாலுளைப் புரவியொடு வையக மருள, ஈர நன்மொழி யிரவலர்க் கீந்த, வழறிகழ்ந் திமைக்கு மஞ்சவரு நெடுவேற், கழறொடித் தடக்கைக் காரியு நிழறிகழ், நீல நாக நல்கிய கலிங்க, மாலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த, சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோ, ளார்வ நன்மொழி யாயு மால்வரைக், கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி, யமிழ்துவிளை தீங்கனி யௌவைக் கீந்த, வுரவுச்சினங் கனலு மொளிதிகழ் நெடுவே, லரவக்கடற் றானை யதிகனுங் கரவாது, நட்டோ ருவப்ப நடைப்பரி கார, முட்டாது கொடுத்த முனை விளங்கு தடக்கைத், துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு, நளிமலை நாட னள்ளியு நளிசினை, நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத் துக், குறும்பொறை நன்னாடு கோடியர்க் கீந்த, காரிக் குதிரைக் காரியொடு மலைந்த, வோரிக் குதிரை யோரியு மெனவாங், கெழுசமங் கடந்த வெழுவுறழ் திணிதோ, ளெழுவர்" (சிறுபாண். 84 - 113) என வந்திருத் தல் காண்க.

பலாவின்கண் ஆசைப்பட்டு முள்ளைப் புறத்தேயுடைய முதிர்ந்த பலாப் பழத்தைப் பெற்ற கடுவன் பஞ்சிபோலும் மயிரையுடைத்தாகிய தலையினை யுடைய மந்தியைக் கையாற் குறிசெய்து அழைக்கும் தளராத புது வருவாயையுடைய முதிரமென்னுமலைக்குத் தலைவ! உலகமுழுவதிலும் விளங்குகின்ற தலைமையினையும் இயற்றப்பட்ட தேரினையுமுடைய குமணனே! புகழ் மேம்பட்ட வண்மையுடனே பகையிடத்து உயர்க, நீ எடுக்கப்பட்டவேல்.—எ - று.

ஆசினியொடும் கவினிய வென, ஒடு விரித்துரைக்கப்பட்டது.

ஆசினி யென்பது ஒருமரம்; ஈரப்பலாவென்பாரும் உளர்.

ஆர்வுற்றுப் பயிருமென்க.

பாடிவருநரும் பிறருங்கூடி இரந்தோரற்றம் தீர்க்கவேண்டுமெனக் கருதியென்று உரைப்பாரும் உளர். (கடுஅ)

---

(கருகூ) வாழு நாளோ டியாண்டுபல வுண்மையிற்
தீர்தல்செல் லாதென் னுயிரெனப் பலபுலந்து
கோல்கா லாகக் குறும்பல வொதுங்கி
நூல்விரித் தன்ன கதுப்பினள், கண்டுயின்று
முன்றிற் போகா முதிர்வினள் யாயும்,

பசந்த மேனியொடு படரட வருந்தி,
மருங்கிற் கொண்ட பல்குறு மாக்கள்
பிசைந்துதின வாடிய முலையள், பெரிதழிந்து
குப்பைக் கீரை கொய்கண் ணகைத்த
முற்றா விளந்தளிர் கொய்துகொண் டுப்பின்று
நீருலை யாக வேற்றி மோரின்

4 - 5. வினைப்பொருட்கண் வந்த வினையெச்சம் காரணகாரியப் பொருட்டாய் வினைமுதலோடு முடிந்ததற்கு மேற்கோள் ; தொல். வினை. சூ. 34, ந.; இ. வி. சூ. 248, உரை.

6. "பசந்த மேனியள் படர்நோ யுற்று" சிலப். கசு : 68.

படரென்னுமுரிச்சொல், உள்ளுதல் செல்லுதலென்னுங் குறிப்புக்களை உணர்த்து மென்பதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 42, ந.

7. குறுமாக்கள் : புறநா. கூச : 1, அடிக்.

7 - 8. புறநா. கசு௦ : 18 - 9.



றவிழ்ப்பத மறந்து பாசடகு மிசைந்து
மாசொடு குறைந்த வுடுக்கைய ளறம்பழியாத்
துவ்வா ளாகிய வென்வெய் யோளும்
என்றாங், கிருவர் நெஞ்சமு முவப்பக், கானவர்
கரிபுன மயக்கிய வகன்கட் கொல்லை

ஐவனம் வித்தி மையுறக் கவினி
ஈனல் செல்லா வேனற் கிழுமெனக்
கருவி வானந் தலைஇ யாங்கும்
ஈத்த நின்புக ழேத்தித், தொக்கவென்
பசிதினத் திரங்கிய வொக்கலு முவப்ப
உயர்ந்தேந்து மருப்பிற் கொல்களிறு பெறினும்
தவிர்ந்துவிடு பரிசில் கொள்ளலெ னுவந்துநீ
இன்புற விடுதி யாயிற் சிறிது
குன்றியுங் கொள்வல் கூர்வேற் குமண
அதற்பட வருளல் வேண்டுவல் விறற்புகழ்
வசையில் விழுத்திணைப் பிறந்த
இசைமேந் தோன்றனிற் பாடிய யானே.

**திணை - அது ; துறை - பரிசில்கடாநிலை.**

**அவனை அவர் பாடியது.**

---

6 - 12 “வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த, குப்பை வேளை யுப்பிலி வெந்ததை, மடவோர் காட்சி நாணிக் கடையடைத், திரும்பே ரொக்கலொ டொருங்குடன் மிசையு, மழிபசி” **சிறுபாண்.** 136 - 40. 14. என்வெய்யோளென்றது மனைவியை.

6 - 14. ‘பசந்த...வெய்யோளுமெனச் செய்தெனெச்சத்திடையே அவ்வினையெச்சமுற்றும் அதன்குறிப்பெச்சமும் உடனடுக்கி முடிந்தனவும் பிறவும் ‘பன்முறையானும்’ என்றதனாற் கொள்க’ தொல். வினை. சூ. 36, ந.

15. இருவரென்றது - தாயையும் மனைவியையும்; மிக்க மூப்பின ராய இருமுதுகுரவரும் கற்புடை மனைவியும் குழவியும் பசியான் வருந்தும் எல்லைக்கண் தீயனபலவும் செய்தாயினும் புறந்தருக வென்பது அறநூற் பொதுவிதி யாதலின் 'இருவர்நெஞ்சமுழுவப்ப' என்றார்; குறள், 656, பரிமேல்.

19. "கருவி வானந் துளிசொரிந் தாங்கு" (பெரும்பாண். 24); "கருவி மாமழை கனைபெயல் பொழிந்தென" சீவக. 2752.

18 - 20. புறநா. ௧௬௦ : 1 - 10. 21. புறநா. ௧௬௦ : 4.

28. புறநா. ௧௫௮ : 27.



இ - ள்.—தனக்குச் சென்ற ஆண்டுகள் பல உண்டாதலின், இன்னும் போகின்றதில்லை எனதுயிரென்று சொல்லிக்கொண்டு வாழு நாளோடு பலவாக வெறுத்துத் தான்பிடித்த தண்டே காலாகக்கொண்டு ஒன்றற்கொன்று அணுகப்பல அடியிட்டு நடந்து நூலை விரித்தாற்போலும் மயிரையுடையவளாய்க் கண்மறைந்து முற்றத்திடத்துப் புறப்பட மாட்டாத மூப்பையுடைய தாயும், பசப்புற்ற மேனியுடனே நினைவுவருத்த வருந்தி [1]மருங்கிலே எடுத்த பல சிறுபிள்ளைகள் பிசைந்து மெல்லுதலால் உலர்ந்த முலையினையுடையளாய் மிகவும் வருந்திக் குப்பையின்கண் படுமுத லாக வெழுந்த கீரையினது முன்பு கொய்யப்பட்ட கண்ணிலே கிளைத்த முதிராத இளைய தளிரைப் பறித்துக்கொண்டு உப்பின்றியே நீரை உலை யாகக் கொண்டு ஏற்றிக் காய்ச்சி மோரின்றி அவிழாகிய உணவை மறந்து பசிய இலையைத் தின்று [2]மாசோடு கூடித் துணிபட்ட உடையினளாய்

[3]அறக்கடவுளைப் பழித்து உண்ணாகிய என்னை விரும்பியோளுமென்று சொல்லப்பட்ட இருவருடைய நெஞ்சமும் காதலிப்ப, வேடர் சுடப்பட்டுக் கரிந்த புனத்தை மயங்கஉழுத அகன்ற இடத்தையுடைய கொல்லைக்கண் ஐவனநெல்லோடு வித்தி இருட்சியுற அழகுபெற்றுக் கோடைமிகுதியான் ஈன்றலைப் பொருந்தாத தினைக்கு இழுமெனும் அனுகரணவொலியுடனே [4]மின்னும் இடியுமுதலாகிய தொகுதியையுடைய மழை துளியைச் சொரிந்தாற் போலத் தந்த நினது புகழை வாழ்த்திப் பசிதினலால் வருத்த முற்ற ஈண்டிய எனது சுற்றமும் மகிழ, மேம்பட்டு ஏந்திய கோட்டையுடைய கொல்யானையைப் பெறினும் முகமாறித் தரும் பரிசிலைக் கொள்ளேன்; மகிழ்ந்து நீ யான் இன்புற விரையத் தந்து விடுவையாயிற் சிறிதாகிய குன்றியென்னும் அளவையுடைய பொருளாயினும் கொள்வேன்; கூரிய வேலையுடைய குமணனே! அவ்வின்புறுதற்கண்ணே பட அருளுதலை வேண்டுவேன், [5]வென்றிப்புகழையுடைய வசையில்லாத சிறந்த குடியின்கட் பிறந்த இசைமேம்பட்ட அண்ணலே! நின்னைப்பாடிய யான்.—எ - று.

---

[1]மருங்கு - ஒக்கலை; பழ. 46.

[2]" மாசித் திங்கண் மாசின சின்னத் துணிமுள்ளி, ஹாசித் துன்ன மூசிய வார்டை " சீவக. 2929.

[3]" அறனென்னு மடவோய் " சிலப். கஅ : 41.

[4]" மின்னு முழக்கு மிடியு மற்றின்ன " ஐந்திணையைம்பது, 3.

[5]" மறம்வீங்கு பல்புகழ் " (பதிற். கஉ : 8) என்பதனுரையைப் பார்க்க.

குமண ! இசைமேந்தோன்றல் ! நிற்பாடிய யான் கொல்களிறு பெறினும் தவிர்ந்துவிடுபரிசில் கொள்ளேன்; இருவர்நெஞ்சமு முவப்ப, ஒக்கலுமுவப்ப உவந்து இன்புறவிடுதியாயிற் குன்றியுங்கொள்வேன்; அதற்பட அருளல்வேண்டுவலெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

'வாழு நாளோ டியாண்டுபல வுண்மையின்' என்பதற்கு, இன்ப நுகர்ந்து கழிந்த இளமைநாளுடனே மூப்புவந்து துன்பமுற்ற யாண்டு பலவுண்மையினெனினும் அமையும்.

குன்றியுமென்பதற்குக் குறைந்துமென்று உரைப்பாரும் உளர்.

ஆங்குமென்னும் உம்மை, இசைநிறைவு. (கருகூ)

---

(கசுO) உருகெழு ஞாயிற் றொண்கதிர் மிசைந்த
முளிபுற் கானங் குழைப்பக் கல்லென
அதிர்குர லேறொடு துளிசொரிந் தாங்குப்,
பசிதினத் திரங்கிய கசிவுடை யாக்கை,
அவிழ்புகு வறியா தாகலின் வாடிய
நெறிகொள் வரிக்குடர் குளிப்பத் தண்ணெனக்
குய்கொள் கொழுந்துவை நெய்யுடை யடிசில்

மதிசேர் நாண்மீன் போல நவின்ற
சிறுபொ னன்கலஞ் சுற்ற விரீஇக்
கேடின் றாக, பாடுநர் கடும்பென
அரிதுபெறு பொலங்கல மெளிதினின் வீசி
நட்டோர் நட்ட நல்லிசைக் குமணன்
மட்டார் மறுகின் முதிரத் தோனே,

---

1. உருவென்னும் உரிச்சொல் உட்கென்னும் பொருளில் வருதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 4, ந.; இ. வி. சூ. 290, உரை.

4. புறநா. ௧௫௯ : 21.

2 - 4. "பெருவறங் கூர்ந்த கானங் கல்லெனக், கருவி வானந் துளிசொரிந் தாங்குப், பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கல்" பெரும்பாண். 23 - 5.

1 - 4. புறநா. ௧௭௪ : 23 - 8.

7. நெய்யுடை யடிசில் : புறநா. ௧௮௮ : 5.

8 - 9. பெரும்பாண். 477 ; "திங்கணலஞ் சூழ்ந்ததிரு மீன்களெனச் செம்பொற், பொங்குகதிர் மின்னுபுகழ்க் கலங்கள்பல பரப்பி" சீவக. 2025.



செல்குவை யாயி னல்குவன் பெரிதெனப்
பல்புகழ் நுவலுநர் கூற வல்விரைந்
துள்ளந் துரப்ப வந்தனெ னெள்ளுற்

றில்லுணாத் துறத்தலி னின்மறந் துறையும்
புல்லுளைக் குடுமிப் புதல்வன் பன்மாண்
பாலில் வறுமுலை சுவைத்தனன் பெறாஅன்
கூழுஞ் சோறுங் கடைஇ யூழின்
உள்ளில் வறுங்கலந் திறந்தழக் கண்டு
மறப்புலி யுரைத்து மதியங் காட்டியும்
நொந்தன ளாகி நுந்தையை யுள்ளிப்
பொடித்தநின் செவ்வி காட்டெனப் பலவும்
வினவ லானா ளாகி நனவின்
அல்ல லுழப்போண் மல்லல் சிறப்பச்
செல்லாச் செல்வ மிகுத்தனை வல்லே
*விடுதல் வேண்டுவ லத்தை படுதிரை
நீர்சூழ் நிலவரை யுயரநின்
சீர்கெழு விழுப்புக ழேத்துகம் பலவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

---

15. பல்புகழ் - கல்வி, ஆண்மை, கொடை முதலியவற்றால் உளவாய புகழ்; "மறம்வீங்கு பல்புகழ்" (பதிற். கஉ) என்பதனுரையையும், 231-ஆம் குறளின் பரிமேலழகருரையையும் பார்க்க.

16. "ஊக்கந் துரப்ப" புறநா. அ : 3.

14 - 6. புறநா. கசுக : 21.

18. "புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து" (அகநா. கஎசு : 19.) பன்மாண்: புறநா. ௲௬௫ : 9.

18 - 9. புறநா. கடுக : 7 - 8, ககூச : 3 - 5, உகக : 20 - 21.

21 - 2. "அழுகை மகளிர்க் குழுவை செப்ப" பரி. கச : 12, உரையைப் பார்க்க.

30. எத்துகம் பல : புறநா. கo : 13.

29 - 30. புறநா. ககூ : 23; "மண்டேய்த்த புகழினன்" சிலப். க: 36.

பி - ம். *விடுத்தல்.



இ - ள்.—உட்குப்பொருந்திய ஞாயிற்றினது ஒள்ளிய சுடர் தின்னப் பட்ட முளிந்த புல்லையுடைய காடு தளிர்ப்பக் கல்லென ஓசையுண்டாக நடுக்கத்தைச் செய்யும் ஓசையையுடைய உருமேற்றுடனே கூடித் துளி யைப் பொழிந்தாற்போலப் பசிதின்னப்பட்டு உலர்ந்த வேர்ப்புடைய உடம்பு அவிழ்புகுவது அறியாதாகலால் வாட்டமுற்ற முடக்கங்கொண்ட பலவரியையுடைய குடர் தன்கண்ணே மூழ்கும் பரிசு குளிரத் தாளிப்புச் சேரப்பட்ட கொழுவிய துவையோடுகூடிய நெய்புடைய அடிசிலைத் திங்களைச் சேர்ந்த நாளாகிய மீனையொப்பப் பயின்ற பொன்னாற் செய்யப்பட்ட சிறிய நல்ல கலங்களைச் சுழலைத்திருத்தி ஊட்டிக் கேடில்லையாக, பாடுவாரது சுற்றமெனச் சொல்லிப் பெறுதற்கரிய பொன்னாற்செய்யப்பட்ட அணிகலங்களை எளிதாக வழங்கித் தன்னுடைய

நட்டோரினும் எம்மோடு நட்புச்செய்த நல்ல புகழையுடைய குமணன், மதம்நிறைந்த தெருவினையுடைய முதிரமென்னும் மலையிடத்தான்; நீ அவன்பாற் செல்வையாயின், நினக்கு மிகவுந் தருவனென நினது பல புகழையும் சொல்லுவார்சொல்ல, அதுகேட்டுக் கடிதாக விரைந்து எனது உள்ளம் செலுத்துதலான் வந்தேன்; எனது மனை உண்ணப்படுவனவற்றைக் கைவிடுதலான் அம்மனையை இகழ்ந்து நினையாது உறைகின்ற புல்லிய உளமயிர்போலும் குடுமியையுடைய புதல்வன் பலபடியும் பாலில்லாத வறுவிய முலையைச் சுவைத்துப் பால் பெறுனய்க் கூழையும் சோற்றையும் வேண்டி முடுகி முறைமுறையே உள்ளொன்றில்லாத வறிய அடுகலத்தைத் திறந்து அங்கு ஒன்றுங் காணுது அழ, அதனைப் பார்த்து மறத்தையுடைய புலியை வரவுசொல்லி அச்சமுறுத்தியும் [1] அம்புலியைக் காட்டியும் அவற்றால் தணிக்க அருமையின் வருந்தினளாய் நின்பிதாவை நினைந்து வெறுத்த நின் செவ்வியைக் காட்டெனச்சொல்லிக் கேட்டல் அமையாளாய் மிகுதிப்பட நனவின்கண்ணும் துயரமுறுவோள் வளப்ப மிகத் தொலையாத செல்வத்தை மிகுத்தனையாய் விரையப் பரிசில் தந்து விடுத்தலை விரும்புவேன், யான்; ஒலிக்குந் திரையையுடைய நீராற் சூழப்பட்ட நிலவெல்லையிலே ஓங்க நினது சீர்மைபொருந்திய சிறந்த புகழைப் பலவாக வாழ்த்துவேம்.—எ - று.

அத்தை: அசைநிலை.

நன்கலமிரீஇ அடிசிலைக் குடர்குளிப்பத் தண்ணெனை ஊட்டியென்க. ஊட்டியென ஒருசொல் தரப்பட்டது.

'நட்டோர்நட்ட' என்பதற்கு நட்டோரை நாட்டிய வெனினும் அமையும்.

'செல்லாச் செல்வ மீத்தனை' என்பதூஉம், 'நிலவரை யுணர' என்பதூஉம் பாடம். (கசு0)

1. கலி. அ0 ; 19.



(கசுக) நீண்டொலி யழுவங் குறைபட முகந்துகொண்
டீண்டுசெலற் கொண்மூ வேண்டுவயிற் குழீஇப்
பெருமலை யன்ன தோன்றல சூன்முதிர்
புருமுரறு கருவியொடு பெயல்கட னிறுத்து
வளமழை மாறிய வென்றூழ்க் காலை
மன்பதை யெல்லாஞ் சென்றுணக் கங்கைக்
கரைபொரு மலிநீர் நிறைந்து தோன்றியாங்
கெமக்கும் பிறர்க்குஞ் செம்மலை யாகலின்
அன்பி லாடவர் கொன்றாறு கவரச்
சென்றுதலை வருந வல்ல வன்பின்று
வன்கலை தெவிட்டு மருஞ்சுர மிறந்தோர்க்
கிற்றை நாளொடும் யாண்டுதலைப் பெயரவெனக்
கண்பொறி *போகிய கசிவொ டுரனழிந்
தருந்துய ருழக்குமென் பெருந்துன் புறவின்
தாள்படு செல்வங் காண்டொறு மருளப்
பணைமரு டடக்கையொடு முத்துப்பட முற்றிய

1. "கடல்குறை படுத்தநீர் கல்குறை படவெறிந்து" (பரி. ௨0 : 1); "தடிந்தெழிலி, தானல்கா தாகி விடின்" குறள், 17.

4. புறநா. கஎச : 28; "உருமுரறு கருவிய பெருமழை" (அகநா. கஒஅ : 1); "உருமுரறு கருவிய பெருமலை பிற்பட" மலைபடு. 357.

4 - 5. புறநா. ௨0ரு : 1.

9 - 10. புறநா. கருசு : 10 - 14; "அற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாம், கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர், துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற், புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை" கலி. ச : 3 - 6.

11. தெவிட்டல் : "புரவி புல்லுணத் தெவிட்ட" (மதுரை. 660); "புரவி புல்லுணத் தெவிட்டும்" நெடுநல். 93 - 4.

13. பொறி - ஒளி; "பொறிவரிப் புகர்முகம்" பெரும்பாண். 448.

14. புறநா. கசசு : 7.

15. தாள்படு செல்வம் : (புறநா. கசஅ : 2); "தாளாற்றித் தந்த பொருள்" குறள், 212.

16. புறநா. ருசO : 7; "பணைக்கை மும்மத வேழ முரித்தவன்" தே.

பி - ம். *மாறிய,

உயர்மருப் பேந்திய வரைமரு ளேன்பக
டொளிதிக ழோடை பொலிய மருங்கிற்
படுமணி யிரட்ட வேறிச் செம்மாந்து
செலனசைஇ யுற்றனென் விறன்மிகு குருசில்
இன்மை துரப்ப விசைதர வந்துநின்
வன்மையிற் றொடுத்தவென் னயந்தனை கேண்மதி
வல்லினும் வல்லே னாயினும் வல்லே
என்னளந் தறிந்தனை நோக்காது சிறந்த
நின்னளந் தறிமதி பெரும வென்றும்
வேந்தர் நாணப் பெயர்வேன் *சாந்தருந்திப்
பல்பொறிக் கொண்ட வேந்தெழி லகலம்
மாணிழை மகளிர் புல்லுதொறும் புகல
நாண்முர சிரங்கு மிடனுடை வரைப்பினின்
தாணிழல் வாழ்நர் நன்கல மிகுப்ப

17. புறநா. ௩௮, ௪௨, ௧௨௫, ௧௪௦, ௧௩௭, ௨௩௮, ௩௮௭; மலைபடு. 572.

16 - 7. யானைக்கொம்புமுத்தம் : புறநா. ௧௭௦ : 10 - 11.

19. புறநா. ௩ : 10, ௭௨ : 3, ௧௬௫ : 6, ௩௫௧ : 1.

23. வல்லினும் - வல்லேனாயினும்; "உணர்த்த வல்லின்" (தொல். உரி. சூ. 94); வல்லேன் - வன்மையில்லேன்; "பரிசின் மாக்கள் வல்லா ராயினும்" பதிற். ௨௦ : 22; புறநா. ௫௭ : 1 - 3-ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

24 - 5. "சிரப்பான் மணிமவுலிச் சேரமான் றன்னைச், சுரப்பாடியான் கேட்பப் பொன்னுடொன் றீந்தா, னிரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர், தாமறிவர் தங்கொடையின் சீர்" (ஔவையார்பாடல்) என்பது இங்கே அறியற்பாலது.

27. பொறி - உத்தமஇலக்கணம்; புறநா. கூஅ : 5-ஆம் அடிக் குறிப்பைப் பார்க்க.

29. நாண்முரசு : ஐங்குறு. சசஅ; மதுரை. 232; சிலப். கச : 14, கஎ : 6; பு. வெ. 117.

30. தாணிழல் : "வீரன் றாணிழல்", "அடிநிழற் றருக வென்றெம் மானைவேந் தருளிச் செய்தான்" சீவக. 409, 1087.

பி - ம். *சாத்தருந்து.
40



வாளம ருழந்தநின் றானையும்
சீர்மிகு செல்வமு மேத்துகம் பலவே.

திணை - அது ; துறை - பரிசிற்றுறை.
அவனை அவர் பாடிப் பகடுபெற்றது.

இ - ள்.—பெரிதாய் ஒலிக்கின்ற பரப்பினையுடைய கடல்குறைபட நீரை முகந்துகொண்டு விரைந்த செலவையுடைய முகில்கள் வேண்டிய இடத்தே திரண்டு பெரிய மலைபோலுந்தோற்றத்தையுடையவாய்ச் சூல் முதிர்ந்து உருமேறிடிக்கும் மின்முதலாகிய தொகுதியுடனே கூடிப் பெயலை முறைமையாகப்பெய்து வளத்தைத்தரும் மழைநீங்கிய கோடைக்

காலத்து உயிர்ப்பன்மைகளெல்லாஞ்சென்று நீருண்டற்குக் கங்கையினது கரையைப் பொரும் மிக்க வெள்ளம் நிறைந்துதோன்றியவாறுபோல எங்கட்கும் பிறர்க்கும் தலைமையையுடையையாதலின், யாவரோடும் உறவில்லாத ஆறலைகள்வர் கொன்று வழிபோலே அடித்துப்பறித்தலாற் போய் முடிவனவல்ல அருஞ்சுரமாயிருக்கத் தம்முயிர்மேல் அன்பின்றி வலிய கலை கிடந்து அசையிடும் போதற்கரிய அச்சுரத்தின்கண்ணே அன்பின்றிப் பிரிந்தவர்க்கு இற்றைநாளோடேகூடி யாண்டு கழிகவெனச் சொல்லிக் கண்ணொளி மழுங்கிய இரக்கத்துடனே [1]வலிகெட்டுப் பொறுத்தற்கரிய துன்பமுறும் எனது பெரிய வறுமையுறுவோள் நினது [2]முயற்சியாலுண்டாகிய செல்வத்தைக் காணுந்தோறும் வியப்புடனையொக்கும் பெருங்கையுடனே முத்துப்படும்படி முதிர்ந்த உயர்ந்த கொம்பேந்திய மலையையொக்கும் வலிய களிற்றை ஒளிவிளங்கும் பட்டம் பொலியப் பக்கத்தேயொலிக்கும்மணி ஒன்றற்கொன்று மாறுயொலிப்ப ஏறித்தலைமை தோன்ற இருந்துபோதலை விரும்பினேன்; வென்றிமிக்க தலைவனே! எனது வறுமை பின்னே நின்று தூரத்த நின்புகழ் கொடுவரவந்து நினது கைவண்மையிலே சிலவற்றைத் தொடுத்த என்னைக் காதலித்துக் கேட்பாயாக; சிலவற்றைச் சொல்ல அறிவேனாயினும் அறியேனாயினும் விரைய என்கல்வியளவை ஆராய்ந்தறிந்தனையாய் ஆராயாது சிறந்த நின்னளவை அளந்திவாயாக, பெருமானே! எந்நாளும்; எனது மிகுதியைக் கண்டு அரசர் நாணும்படி பெயர்வேன்; சாந்து பூசப்பட்டுப் பல நல்ல இலக்கணத்தைப் பொருந்திய மேம்பட்ட அழகினையுடைய மார்பை மாட்சிமைப்பட்ட ஆபரணத்தையுடைய மகளிர் தழுவுந்தோறும் விரும்ப நாட்காலையே

31. புறநா. உச : 29.        32. புறநா. கO : 13, கசO : 30.

[1]புறநா. கசஅ: 2-ஆம் அடிக்குறிப்பையும், "ஊக்க வேந்த னூக்கம் போல" (பெருங். ௩. 5 : 20) என்பதையும் பார்க்க.

[2]"இம்மியன நுண்பொருள்க ளீட்டிநிதி யாக்கிக், கம்மியரு மூர்வர் களி றோடைநுதல் சூட்டி" சீவக. 495.



முரசு முழங்கும் இடனுடைத்தாய எல்லையின்கண் நினது தாணிழற்கண் வாழ்வார் நல்ல ஆபரணத்தை மிகுப்ப வாளாற் செய்யும் போரின்கண்ணே உழக்கப்பட்ட நினது படையையும் நினது சீர்மிக்க செல்வத்தையும் பல படப் புகழ்வேம்.—எ - று.

அருஞ்சுரம் சென்று தலைவருவனவல்லவென முற்றாக்கி, அவ்வருஞ்சுரமிறந்தோரெனவும், அன்பின்றி யிறந்தோரெனவுங் கூட்டுக.

நின்வண்மையிற் றொடுத்த வென்பதற்கு நின்வண்மையால் வளைத்துக் கொள்ளப்பட்டவெனினும் அமையும்.

புகல மிகுப்பவென்னும் செயவெனெச்சங்கள், வாளமருழந்த வென்னும் பிறவினையொடு முடிந்தன.

துன்புறுவி மருளப் பகடேறிச் செலல்நசைஇ உற்றனெனெனவும், மகளிர்புகலத் தாணிழல்வாழ்நர் நன்கலமிகுப்ப வாளமருழந்தநின் தானையும் செல்வமும் எத்துகமெனவுங் கூட்டுக. (கருக)

---

(கருஉ) இரவலர் புரவலை நீயு மல்லை

புரவல ரிரவலர்க் கில்லையு மல்லர்
இரவல ருண்மையுங் காணினி யிரவலர்க்
கீவோ ருண்மையுங் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் றோன்றல் செல்வல் யானே[1].

திணை - அது; துறை - பரிசில்விடை.

அவர் வெளிமானுழைச் சென்றார்க்கு வெளிமான் துஞ்சுவான் தம்பியைப் பரிசில்கொடுவென அவன் சிறிதுகொடுப்பக் கொள்ளாது போய்க் குமணனைப் பாடிக் குமணன் பகடுகொடுப்பக் கொணர்ந்துநின்று வெளிமானூர்க் கடிமரத்து யாத்துச்சென்று அவர் சொல்லியது.

---

5. *கடிமரம் - காவன்மரம்; அது பகைவரணுகாதவண்ணம் வளர்க்கப்படுவது.*

6. *யானைப்பரிசில்:* புறநா. ௧௫௧, ௧௪0, ௩௯௪.

5 - 6. *பகைவருடைய காவன்மரத்தை அல்லது காவற்சோலையை வெட்டுதலும் வெட்டாமல் அம்மரத்தில் தம்முடைய யானையைக் கட்டுதலும் அரசர்க்கியல்பு;* (புறநா. ௨௫ : 8 - 9, ௩௬ : 6 - 9, ௫௭ : 10 - 11, ௩௩௬ : 4, ௩௪௫ : 1) *என்பதனுலுணர்க; அனுமான் அசோகவனத்தை அழித்ததும் இங்கே அறிதற்குரியது.*

1ழ. *அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கத்துள், ஏற்றற்கு மேற்*

இ - ள்.—இரப்போர்க்கு ஈந்து பாதுகாப்பாய் நீயுமல்லே; புரப்போர் இரப்போர்க்கு இல்லையுமல்லர்; இனி இரப்போருண்டாதலையும் காண்பாயாக; இனி இரப்போர்க்கு இடுவோருண்டாதலையும் காண்பாயாக; நின்னுடைய ஊரின்கட் காவலையுடைய மரம்வருந்தக் கொடுவந்து யாம் கட்டிய உயர்ந்த நல்ல இலக்கணமுடைய யானை எமது பரிசில்; விரைந்த செலவினையுடைய குதிரையையுடைய தலைவனே! இனி யான்போவல்.—

எ - று.

யான்போவலென்றகருத்து : முன்சிறிதுகொடுப்பக் கொள்ளாத மிகுதிதோன்றநின்றது.

இரவலருண்மையுங்காணினியென்றகருத்து : இரப்போர்க்குப் பெருந்தன்மையுளதாதல் என்னளவிலே காணென்பதாம்.

'யாம்பிணித்த' என்னும் பன்மை [1]பெருமிதந்தோன்ற நின்றது.

[2]"நடைவயிற் றோன்று மிருவகை விடையும்" என்பதனால், இது பெறாது பெயர்ந்த பரிசில்விடை.

---

கோள்; ஏற்றலாவது, கொள்வோன் தனது சிறப்பிற் குன்றுமற் கொள்ளுதல்; (தொல். புறத்திணை. சூ. 16, இளம்.); "இரவலர்......யானே : இது பிறன்பாற் பெரிது பெற்றுச் சிறிது தந்தவற்குக் காட்டிய விடை" ஷை. ஷை. 36, ந.

[1]'யாம் என்றாள், தம்பிராட்டியாதலால், தன்பெருமிதந்தோன்ற' சிலப். ௨௦ : 13, அரும்பத.

[2]தொல். புறத்திணை. சூ. 36.

(க௬௩) நின்னயந் துறைநர்க்கு நீநயந் துறைநர்க்கும்,
*பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும்,
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்,
இன்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது

---

3. கடும்பு - சுற்றம்; (புறநா. உஉ: 27.) கடும்பசி - மிக்க பசி; புறநா. உ௬௦: 9.

4. "குறியெதிர்ப்பையாவது அளவுகுறித்து வாங்கி அவ்வாங்கிய வாறே எதிர்கொடுப்பது" (குறள், 221, பரிமேல்.); "கூற்றுங், குறி யெதிர்ப்பை கொள்ளுந் தகைமைத்தே...களிறு" முத்தோள்ளாயிரம்.

பி - ம். *மன்மாண்.



வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்
எல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமண னல்கிய வளனே[1].

திணை - அது; துறை - பரிசில்.

பெருஞ்சித்திரனார் குமணனைப் பாடிப் பரிசில்கொணர்ந்து மனையோட்குச் சொல்லியது.

இ - ள்.—நின்னைக்காதலித்துறையும் நின்சார்வாய மகளிர்க்கும் நீ அன்புசெய்தொழுகப்பட்ட மகளிர்க்கும் பல குணங்களும் மாட்சிமைப் பட்ட கற்பினையுடைய நினது சுற்றத்து மூத்தமகளிர்க்கும் நமது சுற்றத் தினது மிக்க பசி நீங்க நினக்கு நெடுநாட்படக் குறித்த எதிரட்பை தந் தோர்க்கும் மற்றும் இன்னதன்மையாரென்று கருதாது என்னொடுகூடி உசாவுவதுஞ் செய்யாது சதாப்படக் குடிவாழ்க்கைவாழக்கடவேமென்று கருதாது நீயும் யாவர்க்கும் வழங்குவாயாக, எனது மனைக்குரியோயே! பலாப்பழமுதலாயின தூங்கும் முதிரமென்னுமலைக்குத் தலைவனாகிய திருந்திய வேலையுடைய குமணன் நல்கிய செல்வத்தை.—எ - று.

மனைகிழவோய்! குமணன் நல்கிய செல்வத்தை நீயும் எல்லோர்க்குங் கொடுமதியெனக் கூட்டுக.

நின் பன்மாண்கற்பிற் கிளைமுதலோர்க்குமென இயையும்; நின்றாங் குரைப்பினும் அமையும்.

நீயுமென்ற உம்மை, யானுங்கொடுப்பேன் நீயுங்கொடுவென எச்ச வும்மையாய் நின்றது. (கசுரு)

---

6. வல்லாங்கு: புறநா. சஎ : 3.

[1]மு. அரசன் விடைகொடுப்பப் போந்தவன் கூற்றிற்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. சூ. 30, இளம்.); 'நின்னயந்துறைநர்க்கு......வளனே இது மனைக்கு மகிழ்ந்து கூறியது' தொ. தொ. தொ., 36, ந.

---

(கசுசு) ஆடுநனி மறந்த கோடுய ரடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புபசி யுழவாப்

---

1. கோடுயரடுப்பு : "பல்கோட் டடுப்பிற் பாலுலை தரீஇ" அகநா. கசுக : 15.

1 - 2. "புனிற்றுநாய் குரைக்கும் புல்லெ னட்டில், காழ்சோர் முதுசுவர்க் கணச்சித லரித்த, பூழி பூத்த புழற்கா ளாம்பி, யொல்குபசி யுழந்த...வளைக்கைக் கிணைமகள்" சிறுபாண். 132 - 6.



பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண
என்னிலை யறிந்தனை யாயி னிந்நிலைத்
*தொடுத்துங் கொள்ளா தமையலெ னடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
†மண்ணமை முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே[1].

திணை - அது; துறை - பரிசில்கடாநிலை.

தம்பியால் நாடுகொள்ளப்பட்டுக் காடுபற்றியிருந்த குமணனைப்

3 - 5. புறநா. உகக : 20 - 21. 7. புறநா. கஙக : 15, அடிக்.

1 - 7. "சாம்பல்கண் டறியா வாம்பி பூத்த, எலிதுயி லடுப்பிற் றலைமடுத் தொதுங்கிச், சிறுசிறு ரலறப் பெருமனைக் கிழத்தி, குடங்கை யிற் றுங்கிய கொடிற்றினள் குடங்கைக், கடங்கா வுண்க ணுறலைத் தொழுக, அழுகுரல் செவிசுட விழுமநோய் மிக்குக், களைகண் காணு தலமரு மேல்வையில்' காசிக்கலம். 57.

4 - 8. 'இல்லிதூர்ந்த...குமண என்புழி, முலைப்பசைகாணுது அழுகின்றது குழவியென்பது தன்கட்டோன்றிய வறுமைபற்றி அவலம் பிறந்தது; மகமுகநோக்கி அழுகின்றாள் என் மனைவியென்பது பிறர்கட் டோன்றிய வறுமையவலம்' தொல். மெய்ப்பாடு. சூ. 5, பேர்.

10. தொடுத்தும் - வளைத்தும்; புறநா. கஙஞ : 17, கஙசு : 4; "வளைத்துவாங்கு பொன்னிழவாதே யென்றார்" திருவால உஅ : 2.

11. பண்ணமை : புறநா. கஎ0 : 13. பச்சை - யாழின் தோற் போர்வை; "விளக்கழ லுருவின் விசியுறு பச்சை" (பொருந. 5); "புகழ் வினைப் பொலிந்த பச்சை" சிறுபாண். 226.

13. புறநா. ரு : 24 - 6.

10 - 13. "காப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின், றிரப்புமோ ரேஎ ருடைத்து" (குறள், 1053) என்பது இங்கே அறியற்பாலது.

1மு. வாகைத்திணையின் பகுதியாகிய பரிசில்கடைஇய கடைக்கூட்டு நிலைக்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. சூ. 30, இளம்.); 'ஆடுகளி மறந்த...குடிப்பிறந்தோயே : இது பரிசில்கடாநிலை' டை. டை.டை.36, ந.

பி - ம். *தடுத்தும். †மண்ணார்.

இ - ள்.—அடிதலை மிகவும் மறந்த புடையோங்கிய அடுப்பின்கட் [1]காளாம்பி பூப்ப உடம்புமெலியும் பசியான்வருந்திப் பாலின்மையால் தோலாந்தன்மையுடனே திரங்கித் துளைதூர்ந்த பொல்லாத வறியமுலையை வறிதே சுவைக்குந்தோறும் அழுகின்ற தனது பிள்ளையது முகத்தைப் பார்த்து நீரால் நிரம்பிய ஈரிய இமையையுடைய குளிர்ந்தகண்ணையுடைய என் மனைவியது வருத்தத்தைப் பார்த்து இந்தவருத்தந்தீர்த்தற்குரியாய் நீயென நினைந்து நின்பால் வந்தேன்; நல்லபோரையுடைய குமண! எனது வறுமைநிலையை நீ அறிந்தாயாயின், இவ்வாறு வறுமையுற்றுநின்ற நிலைமைக்கண் வளைத்தாயினும் பரிசில்கொள்ளாதுவிடேன்; பலவாக அடுக்கப்பட்ட பண்ணுதலமைந்த நரம்பினையுடைய தோலாற்போர்க்கப் பட்ட நல்ல யாழையும் மார்ச்சனை நிறைந்த மத்தளத்தினையுமுடைய கூத்தாது மிடியைக் கெடுக்கும் குடியின்கட்பிறந்தோயாதலால்.—எ - று.

அடிதலை மிகவும் மறத்தலால் தேய்பின்றி உயர்ந்த அடுப்பென்றாராம்.

குமண! நீ இன்மைதீர்க்குங்குடிப்பிறந்தோயாதலால் இந்நிலைத் தொடுத்தும் கொள்ளாது அமையலென் எனக் கூட்டுக. (கசுச)

---

[1]காளாம்பி - காளான்.

---

(கசுரு) மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே,

---

1. 'மன்னாமை' என்பது நிலையாமையையுணர்த்துவதற்கு மேற் கோள்; தொல். கிளவி. சூ. 34, ந.

2. “தம்புகழ் நிறீஇச் சென்றுமாய்ந் தனரே” புறநா. ௬௬௬: 5.

1 - 2. புறநா. கஅ : 3; “நின்றுநீ கெடாஅ நல்லிசை நிலைஇ” “நல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்து” (பதிற். கச, அசு); “மண்ணின் மேல் வான்புகழ் நட்டானும்,...சாவா வுடம்பெய்தினர்” (திரி. 16); “மண்ணியன் ஞாலத்து மன்னு புகழ்வேண்டிப், பெண்ணிய னல்லாய் பிரிந்தார்” (கார். 8); “நில்லா வுலகத்து நிலைமை தூக்கி, யந்நிலை யணுகல் வேண்டி” (பெரும்பாண். 466 - 7); “தொலையா நல்லிசை யுலகமொடு நிற்ப”, “இன்றிவட் செல்லா துலகமொடு நிற்ப” (மலைபடு. 70, 541); “ஒருவன திரண்டி யாக்கை யூன்பயி னரம்பின் யாத்த, வுருவமும் புகழு மென்றாங் கவற்றினுழ் காத்து வந்து, மருவிய வுருவ மிங்கே மறைந் துபோ மற்றை யாக்கை, திருவமர்ந் துலக மேத்தச் சிறந்துபின் னிற்கு மன்றே”, “பொன்று மிவ்வுட லின்பொருட், டென்று நிற்கு மிரும்புக



துன்னருஞ் சிறப்பி னுயர்ந்த செல்வர்
இன்மையி னிரப்போர்க் கீஇ யாமையிற்
றொன்மை மாக்களிற் றொடர்பறி யலரே.
தாடாழ் படுமணி யிரட்டும் பூநுதல்
ஆடியல் யானை பாடுநர்க் கருகாக்
கேடி னல்லிசை வயமான் றோன்றலைப்
பாடி நின்றனெ னாகக் கொன்னே
பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்

நாடிழந் ததனினு நனியின் னாதென
வாடந் தனனே தலையெனக் கீயத்,
தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையின்
ஆடுமலி யுவகையொடு வருவல்
ஓடாப் பூட்கைநின் கிழமையோற் கண்டே[1].

திணை - அது; துறை - பரிசில்விடை.

தம்பியால் நாடுகொள்ளப்பட்டுக் காடுபற்றியிருந்த குமணனைக் கண்டு அவன் தன்வாள்கொடுப்பக் கொண்டுவந்து இளங்குமணற்குக் காட்டிப் பெருந்தலைச்சாத்தனார் பாடியது.

பரிசில்விடையாவது:—

2 "வேந்தனுண் மகிழ வெல்புக ழறைந்தோர்க்
கீந்து பரிசி லின்புற விடுத்தன்று."

---

ழின்று நீர்கழிக் கீர்களாற், குன்றின் மேற்குடை வேந்திர்காள்" (சூளா. சீயவதை. 204; ஷை. அரசியல். 226); "மன்னு வுலகத்து மன்னியசீர்த் தஞ்சை வாணன்" (தஞ்சை. 21), "மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா, தேந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய், வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனு, மீந்தவ ரல்ல திருந்தவர் யாரே" கம்ப. வேள்வி. 30.

2 - 5. மலைபடு. 541 - 3.

6 - 7. புறநா. ௭௨ : 3 - 4, அடிக்.

11. "கடலங் கான லாய மாய்ந்தவென், நலமிழந் ததனினு நனியின் னாதே" குறுந். உ௬௬.

15. ஓடாப்பூட்கை : புறநா. கடுசு : 10, அடிக்.

[1]மு. வாகைத்திணைத் துறைகளுள் 'இடையில் வண்புகழ்க் கொடை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 17, இளம்.; ஷை. ஷை. ஷை. 21, ந.

[2]புறப்பொருள்வெண்பாமாலை, 214.



இ - ள்.—எப்பொருளும் நிலையாத இவ்வுலகத்தின்கண் நிலைபெறுதலைக் கருதினோர் தம்முடைய புகழைப் பூமியிடத்தே நிறுத்தித் தாங்கள் இறந்தார்; நணுகுதற்கரிய தலைமையையுடைய மிக்கசெல்வர், வறுமையால் இரப்போர்க்குக் கொடாமையிற் பழைய வண்மையையுடைய மாக்கள்போலப் பின்னும் தம்பெயரை நிறுத்தி உலகோடு தொடர்ந்துபோதலை அறியார்; தாளின்கண் தாழ்ந்த ஓசையையுடைய மணி ஒன்றற்கொன்று மாறியொலிக்கும் புகர்நுதலையுடைய வென்றியியன்ற யானையைப் பாவலர்க்கு மிகக்கொடுக்கும் அழிவில்லாத நல்ல புகழையுடைய வலிய குதிரையையுடைய தலைவனைப் பாடிநின்றேனாக, பயனின்றியே பெருமைபெற்ற பரிசிலன் வாடினனாகப் பெயர்தல் எனது நாட்டை இழந்ததனினும் மிக இன்னாதென நினைந்து வாளைத் தந்தான், தனது தலையை எனக்குத் தருவானாக, ஆங்குத் தருதற்குத் தன்னிற் சிறந்த பொருள் வேறொன்றில்லாமையின்; வென்றிமிக்க உவகையான் வந்தேன், புறக்கொடாத மேற்கோளையுடைய நின் தமையனைக் கண்டு.—எ - று.

வருவலென்பது, காலமயக்கம்.

மன்னுதல்குறித்தோர் புகழ்நிறுத்துதலும், புகழ்நிறுத்தாதோர் மன்னாதலும் இவ்வாறன்றோ வென்பது கருத்தாகக் கொள்க.

நின்கிழமையோற்கண்டு வருவலெனவும், வயமான்றோன்றலைப்பாடி நின்றேனாகப் பரிசிலன் கொன்னே பெயர்தல் இழந்ததனினும் இன்னாதெனத் தன்னிற்சிறந்தது பிறிதொன்றின்மையின், தலை எமக்கீய வாள் தந்தனன் ஆதலால், ஆடுமலியுவகையின் வருவலெனவும் கூட்டுக.

'இளமையோற் கண்டு' என்று பாடமோதுவாரும் உளர். (கசுரு)

---

(கசுசு) நன்றாய்ந்த நீணிமிர்சடை
முதுமுதல்வன் வாய்போகா
தொன்றுபுரிந்த வீரிரண்டின்
ஆறுணர்ந்த வொருமுதுநூல்
இகல்கண்டோர் மிகல்சாய்மார்
மெய்யன்ன பொய்யுணர்ந்து

---

1 - 2. புறநா. க : 13, ருசு : 1 - 2; "நிமிர்புன் சடையின் முடியாய்", "நீர்பரந்த நிமிர் புன்சடை மேலோர் நிலாவெண்மதி சூடி", "நிமிர் புன்சடை யெம்மிறைவன்", "நிமிர்புன்சடைப் பெருமான்" தேவாரம்.

2 - 3. "மறைமுது முதல்வன்" சிலப். கஉ : ப. 322.

பொய்யோராது மெய்கொளீஇ
மூவேழ் துறையு முட்டின்று போகிய
உரைசால் சிறப்பி னுரவோர் மருக
வினைக்குவேண்டி நீபூண்ட
புலப்புல்வாய்க் கலைப்பச்சை
சுவற்பூண்ஞாண் மிசைப்பொலிய
மறங்கடிந்த வருங்கற்பின்
அறம்புகழ்ந்த வலைசூடிச்
சிறுநுதற்பே ரகலல்குற்
சிலசொல்லிற் பலகூந்தனின்
நிலைக்கொத்தநின் றுணைத்துணைவியர்
தமக்கமைந்த தொழில்கேட்பக்
காடென்றா நாடென்றாங்
கீரேழி னிடமுட்டாது
நீர்நாண நெய்வழங்கியும்
எண்ணாணப் பலவேட்டும்
மண்ணாணப் புகழ்பரப்பியும்
அருங்கடிப் பெருங்காலை
விருந்துற்றநின் றிருந்தேந்துநிலை
என்றுங், காண்கதில் லம்ம யாமே குடாஅது
பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பிற்

13. தோல். தொகை. சூ. 15, ந.; ஷை. கிளவி. சூ. 1, ந.; இ - வி. சூ. 75, உரை, மேற்.

16. தோல். தொகை. சூ. 15, ந.; ஷை. கிளவி. சூ. 1, ந.; இ - வி. சூ. 75, உரை, மேற்.

21. மு. புறநா. ௩௮௪ : 17. 22. புறநா. ௧௫ : 20 - 21.

23. புறநா. ௧௩௦ : 29 - 30, ௩௮௪: 16.

22 - 3. தோல். மரபு. சூ. 73, பேர். மேற்.

28. "காவிரி புரக்கு நாடுகிழ வோனே" பொருந. 248.

26 - 8. "மலைத்தலைய கடற்காவிரி" (பட்டின. 6); "குடமலைப் பிறந்த தண்பெருங் காவிரி" (மலைபடு. 527); "குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு, கடல்வள னெதிரக் கயவாய் நெரிக்குங், காவிரி" சிலப். ௧௦ : 106 - 8.



தண்புனற் படப்பை யெம்மூ ராங்கண்
உண்டுந் தின்று மூர்ந்து மாடுகம்
செல்வ லத்தை யானே செல்லாது
மழையண் ணுப்ப நீடிய நெடுவரைக்
கழைவள ரிமயம் போல
நிலீஇய ரத்தைநீ நிலமிசை யானே.[1]

திணை - வாகை; துறை - பார்ப்பனவாகை.

சோணாட்டுப்* [2]பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் [3]கௌணியன் விண்ணந்தாயனை ஆவூர் மூலங்கிழார் பாடியது.

பார்ப்பனவாகையாவது :—

[4]"கேள்வியாற் சிறப்பெய்தியானை
வேள்வியான் விறன்மிகுத்தன்று."

இ - ள்.—பெரிதும் ஆராயப்பட்ட மிக்க நீண்ட சடையினையுடைய [5]முதிய இறைவனது வாக்கை விட்டு நீங்காது அறமொன்றையே மேவிய நான்கு கூற்றையுடைத்தாய் [6]ஆறங்கத்தாலும் உணரப்பட்ட ஒரு பழைய

---

30 - 31. எண்ணிடைச்சொல் வினைச்சொற்கண் வந்ததற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. 45, ந.

32. புறநா. கஎ : 8, அடிக்., ௩௬௮ : 1 - 3.

33 - 4. புறநா. உ : 20 - 24, அடிக்.

[1]மு. அந்தணன் வேட்டதற்கும் (தொல். புறத்திணை. சூ. 16, இளம்.); அந்தணன் வேட்டதற்கும் ஈதற்கும் (டை. டை. சூ. 20, ந.) மேற்கோள்.

[2]பூஞ்சாற்றூர் - சோழநாட்டில் முடிகொண்டானாற்றங்கரையில் உள்ளதோரூர்.

[3]கௌணியன் - கௌண்டின்னியகோத்திரத்திற் பிறந்தவன்.

[4]புறப்பொருள்வெண்பாமாலை, 163.

[5]முதிய இறைவன் - சிவபெருமான்.

[6]வேதத்தின் ஆறங்கங்களாவன:—வியாகரணம், சோதிடம், நிருத்தம், சந்தம், சிக்கை, கற்பமென்பன; "கற்பங் கைசந் தங்கா லெண்கண், டெற்ற நிருத்தஞ் செவிசிக் கைமூக், குற்ற வியாகா ணமுகம் பெற்றுச், சார்பிற் றோன்ற வாரண வேதக், காதி யந்த மில்லை" மணி. உஎ : 100 -

நூலாகிய வேதத்திற்கு மாறுபட்ட நூல்களைக் கண்டோராகிய புத்தர் முதலாயின புறச்சமயத்தோரது மிகுதியைச் சாய்க்கவேண்டி அவரது மெய்போன்ற பொய்யை உளப்பட்டறிந்து அப்பொய்ம்மையை மெய் யென்று கருதாமல் உண்மைப்பொருளை அவர்களுக்கு ஏற்பச்சொல்லி [1]இருபத்தொரு வேள்வித்துறையையும் குறைவின்றாகச் செய்துமுடித்த புகழமைந்த தலைமையையுடைய அறிவுடையோர் மரபிலுள்ளானே! வேள்வித்தொழிற்கு வேண்டி நீ போர்க்கப்பட்ட காட்டுநிலத்துவாழும் [2]புல்வாய்க்கலையினது உறுப்புத்தோல் நினது தோளின்கண் இடப்பட்ட பூணுநூன்மீதே சிறந்துதோன்றக் கொடுமையை நீக்கிய பெறுதற்கரிய கற்பினையும், அறநூல் புகழப்பட்ட [3]சாலகத்தைச்சூடி, சிறிய நுதலினை யும் பெரிய அகன்ற அல்குலையும் மெத்தென்ற சொல்லையும் பலவாகிய கூந்தலையுமுடைய நின்னுடைய நிலைமைக்கு மனமொத்த நின்னுடைய துணைவியராகிய [4]காதலிமார் தத்தமக்குப் பொருந்திய ஏவற்றொழிலைக் கேட்டுச் செய்யக் காடென்றும் நாடென்றுஞ் சொல்லப்பட்ட அவ்விடத் தின்கட் [5]காட்டுள் எழுவகைப்பட்ட பசுவானும் நாட்டுள் எழுவகைப்பட்ட பசுவானும் முட்டாது நீர் நாணும் பரிசுசெய்யை வழங்கியும் எண்ணிறப்பப் பலவேள்விகளை வேட்டும் மண்பொருமற் புகழைப் பரப்பியும் அவ்வாறு

[1] இருபத்தொரு வேள்விகளாவன:—ஸோமயஜ்ஞம், எ; ஹவிர்யஜ்ஞம், எ; பாகயஜ்ஞம், எ; அவற்றுள், ஸோமயஜ்ஞங்களேழாவன:—அக்கினிஷ்டோமம், அதியக்கினிஷ்டோமம், உக்தியம், ஷோடசி, வாஜபேயம், அதிராத்திரம், அப்தோர்யாமமென்பன. ஹவிர்யஜ்ஞங்களேழாவன:—அக்னியாதேயம், அக்கினிஹோத்திரம், தரிசபூர்ணமாசம், சாதுர்மாஸ்யம், நிரூடபசுபந்தம், ஆக்கிரயணம், ஸௌத்திராமணி யென்பன. பாகயஜ்ஞங்களேழாவன:—அஷ்டகை, ஆபார்வணம், சிராத்தம், சிராவணி, ஆக்கிரகாயணி, சைத்திரி, ஆச்வயுஜி யென்பன.

[2] யாகத்தலைவர்கள் யாகஞ்செய்யுங்காலத்துக் கலைமானின் உறுப்புத் தோலைப் போர்த்துக்கொள்ளுதல் மரபு; "கடகரி யுரிவை போர்த்த கண்ணுதற் கடவுண் மாறி, இடம்வல மாகப் பாகத் திறைவியோ டிருந்த வாபோ, லுடல்கலை யுறுப்புத் தோலி னொளித்திடப் போர்த்து வேள்விக், கடனினுக் குரிய வெல்லாங் கவினுறச் சார்த்தி னானே" வில்லி--பாரதம், இராசசூய. 104.

[3] சாலகம்-ஜாலகம்; இது யாகபத்தினிகள் அணியும் அணிவிசேடம்.

[4] யாகங்களுட் சிலவற்றிற் பணிவிடை செய்தற்குப் பத்தினிகள் மூவருக்குக் குறையாதிருத்தல் வேண்டுமென்பது விதி.

[5] காட்டுப்பசு ஆரண்யபசுவென்றும், நாட்டுப்பசு கிராமபசுவென்றும் வழங்கப்படும்.



பெறுதற்கரிய விளக்கமுற்ற வேள்விமுடிபாகிய பெரிய காலத்து விருந்தினரைப் பொருந்திய நினது இருந்திய மேம்பட்ட நிலைமையை எந்நாளும்

காண்பேமாக, யாங்கள்; மேற்றிசைக்கண் டோன்படுகின்ற நெடிய குடக மலைக்கண்ணே முகிலின்கண் இடியேறு முழங்கிற் பூப்பார்த்த புதுநீரை யுடைய காவிரி உலகத்தைப் பாதுகாக்கும் குளிர்ந்த புனற்பக்கத்தை யுடைய எம் ஊரிடத்தின்கண் உண்ணப்படுவனவற்றையுண்டும் தின்னப் படுவனவற்றைத் தின்றும் ஏறப்படுவனவற்றை யேறியும் கொண்டாடுவே மாகப் போவேன், யான்; போகாது, மழை தலையெடுப்ப உயர்ந்த நெடிய பக்கவரைகளையுடைத்தாய் மூங்கில்வளரும் இமயமலைபோல நிலைபெறுவா யாக, நீ நிலத்தின்மேலே.—எ - று.

முதுமுதல்வன் வாய்போகாதென்ற கருத்து: [1] அப்பெரியோனாலும் எக்காலமும் அத்தியயனம் பண்ணப்படுமென்றதாகக் கொள்க.

'வாய்போகாதொன்றுபுரிந்த' என்பதற்கு மெய்ம்மை நீங்காமல் வீடொன்றையுமே புரிந்தவென்றும், 'பொய்யோராது' என்பதற்குத் தாம் பொய்ம்மையை விசாரியாதென்றும், 'மூவேழ்துறை' என்பதற்கு இருபத் தொரு கூறுபட்ட தருக்கநூலென்றும், 'ஈரேழின்' என்பதற்குக் காட்டுள் ஏழுநாளும் நாட்டுள் ஏழுநாளுமென்றும், 'கற்பின்வலைசூடி' என்பதற்குக் கற்பினால் வலைசூடி யென்றுரைப்பினும் அமையும்.

உரவோர் மருக! பொலியக் கேட்ப வழங்கியும் வேட்டும் பரப்பியும் இவ்வாறு விருந்தற்ற நின் திருந்தேந்துநிலை என்றும் இன்றுபோலக் காண்பேமாக, யாமும்; எம்மூரிடத்து உண்டும் தின்றும் ஊர்ந்தும் இவ் வாறு செய்து நீ தந்த பரிசில்கொண்டு கொண்டாடுவேமாகச் செல்வேன் ; நீதானும் இமயம்போல நிலைபெறுவாயாகவென முடிக்க.

நன்றாய்ந்த ஒரு முதுநூலெனவும், கற்பையும் நுதலையும் அல்குலையும் சொல்லையும் கூந்தலையுமுடைய துணைவியர் வலைசூடித் தொழில் கேட்ப

வெனவும், செல்லாது நிலை இயலெனவும் இயையும்.

மூவேழ்துறையுமென்பதற்கு இருபத்தொரு கூறுபட்ட அருத்தநூ லென்பாரும் உளர்.

விருந்தென்றது, அதிதிகளை; அன்றி உறுப்புத்தோல்முதலியவற் றாற் புதுமையுற்றவெனினும் அமையும்.

தில்: விழைவின்கண் வந்தது.

'காவிரி பரக்கும்' என்பதூஉம் பாடம். (௧௬௬)

---

1"வேதநாவினர்", "பாடினார் சாம வேதம்", "சாமத்தினிசைவீணை தடவிக் கொண்டார்", "சாமவேத மோதி" தேவாரம்.



(௧௬௭) நீயே, அமர்காணி னமர்கடந்தவர்
படைவிலக்கி யெதிர்நிற்றலின்
வாஅள் வாய்த்த வடுவாழ் யாக்கையொடு
கேள்விக் கினியை கட்கின் னாயே.
அவரே, நிற்காணிற் புறங்கொடுத்தலின்
ஊறறியா மெய்யாக்கையொடு
கண்ணுக் கினியர் செவிக்கின் னாரே.
அதனா, னீயுமொன் றினியை யவருமொன் றினியர்
ஒவ்வா யாவுள. மற்றே வெல்போர்க்

கழல்புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி!
நின்னை வியக்குமிவ் வுலகமஃ
தென்னோ பெரும வுரைத்திசி னெமக்கே.

திணை - அது; துறை - அரசவாகை.

[1]ஏனாதி திருக்கிள்ளியைக் கோனாட்டு [2]எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியது.

இ - ள்.—நீதான், போரைக் காணின் அப்போரை வென்று அப் பகைவரது படையை விலக்கி எதிர்நிற்றலான் வாள்வாய்க்கத் தைத்த வடு அழுந்திய உடம்புடனே கேட்ட செவிக்கு இனியை, கண்ணுக்கு இன்னாய்; பகைவராகிய அவர்தாம், நின்னைக் காணிற் புறந்தருதலாற் புண்ணறியாத உடம்பாகிய வடிவுடனே கண்ணுக்கு இனியர், செவிக்கு இனியரல்லர்; அதனால், இங்ஙனம் நீயும் ஒன்றினியை; அவரும் ஒன்றினியர்; இனி அவரொவ்வாதன வேறு யாவை யுள; வெல்லும் போரினைச் செய்யும் வீரக் கழலணிந்த திருந்திய அடியினையும் கடிய செலவினையுடைய குதிரையு

3. புறநா. ௩௨௧ : 9.

1 - 3. புறநா. ௬௨ : 1 - 2, ௧00 : 2, அடிக்.

3 - 7. "காணிலும் முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வரந்தரா மிடுக்கிலாத தேவரை" திவ். திருச்சந். 69.

[1]"சோழிக வேனாதி தன்முக நோக்கி" மணி. ௨௨ : 205.

[2]புதுக்கோட்டையைச் சார்ந்த ஊர்களுள் 'எறிச்சி' என்று வழங்குமூர் இவ்வூர் போலும்; இது கோனாட்டைச் சார்ந்ததே. இதில், பஞ்ச பாண்டவர் சுனையென்று ஐந்து பழைய சுனைகளும் அவற்றின் பக்கத்தில் ஒரு பழைய சிவாலயமும் உள்ளன.



முடைய கிள்ளி! நின்னை மதித்திருக்கும் இவ்வுலகம்; அதற்குக் காரணம் யாதோ? பெருமானே! எமக்குச் சொல்லுவாய்.—எ - று.

நீ கட்கின்னாயெனப் [1]பழித்ததுபோலப் புகழ்தலும், அவர் கட்கினியரெனப் புகழ்ந்ததுபோலப் பழித்தலும் சில அணிதோன்றநின்றன.(௧௬௭)

---

[1] தண்டி. சூ. 64.

---

(௧௬௮) அருவி யார்க்குங் கழைபயி னனந்தலைக்
கறிவள ரடுக்கத்து மலர்ந்த காந்தட்
கொழுங்கிழங்கு மிளிரக் கிண்டிக் கிளையொடு
கடுங்கட் கேழ லுழுத பூழி
நன்னாள் வருபத நோக்கிக் குறவர்
உழாஅது வித்திய பரூஉக்குரற் சிறுதினை
முந்துவிளை யாணர் நாட்புதி துண்மார்
மரையான் கறந்த நுரைகொ டீம்பால்

மான்றடி புழுக்கிய புலவுநாறு குழிசி
வான்கே ழிரும்புடை கழாஅ தேற்றிச்
சாந்த விறகி னுவித்த புன்கம்
*கூதளங் கவினிய குளவி முன்றிற்

---

2. "கறிவள ரடுக்கத்து" (குறுந். ௨௮௮); "கறிவளர் சிலம்பில்" (ஐங்குறு. ௨௪௫; சிலப். ௨௮ : 114); "கறியிவர் சிலம்பின்" அகநா. ௧௧௨ : 14.

5 - 6. "நாளால், உறையெதிர்ந்து வித்தியவூ ழேனல்" திணைமாலை. 1.

3 - 6. "இழுங்ககழ் கேழ லுழுத சிலம்பிற், றலைவிளை கானவர் கொய்தனர்" (ஐங்குறு. ௨௭௦); "கேழ லுழுத கரிபுனக் கொல்லை" ஐந். ௭௨. 11.

4 - 8. "உய்யாமன் மலைந்தம ராருயிரை, மெய்யாக விராமன் விருந்திடவே, கையார முகந்துகொ டுத்தகனை, யையாபுதி தண்ட தறிந்திலையோ" கம்ப. சடாயுவுயிர். 96.

11. சாந்தவிறகு: புறநா. ௧௦௮ : 1 - 2. உவித்தல்: புறநா. ௩௨௫: 4. புன்கம் : "புன்க மிதவை பொம்மல் போனகம்" திவாகரம், ஆறுவது.

12. "நாறிதழ்க் குளவியொடு கூதளங் குழைய" (புறநா. ௩௮௦ : 7); "குல்லை குளவி கூதளங் குவளை" (நற். ௩௭௬); "குறுந்தாட் கூதளி

பி - ம். *கூதளங்கவினிய.

செழுங்கோள் வாழை யகலிலைப் பகுக்கும்
ஊராக் குதிரைக் கிழவ கூர்வேல்
நறைநார்த் தொடுத்த வேங்கையங் கண்ணி
வடிநவி லம்பின் வில்லோர் பெரும
கைவள் ளீகைக் கடுமான் கொற்ற
வையக வரைப்பிற் றமிழகங் கேட்பப்
பொய்யாச் செந்நா நெளிய வேத்திப்
பாடுப வென்ப பரிசிலர் நாளும்
ஈயா மன்னர் நாண
வீயாது பரந்தநின் வசையில்வான் புகழே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசிற்றுறை; இயன்மொழியும், அரசவாகையுமாம்.

பிட்டங்கொற்றனைக் கருவூர்க் கந்தப்பிள்ளைசாத்தனுர் பாடியது.

இ - ள்.—அருவி ஒலித்திழியும் வேய் பயின்ற அகன்றவிடத்து மிளகுகொடி வளரும் மலைச்சாரலினிடத்து மலர்ந்த காந்தளினது கொழு விய கிழங்குபிறழக் கிளறித் தன்னினத்தோடே கூடத் தறுகண்மையை யுடைய கேழலுழுத புழுதிக்கண்ணே நல்லநாள் வந்த செவ்வியைப் பார்த் துக் குறவர் அந்நிலமுழாதே அதுவே உழவாக வித்திய பரிய தோகையை யுடைய சிறிய தினை முற்பட விளைந்த புதுவருவாயாகிய கதிரை நல்ல

---

யாடிய நெடுவரை" (குறுந். ௯0); "குளவியொடு வெண்கூ தாளந் தொடுத்த கண்ணியன்" முருகு. 191 - 2.

14. ஊராக்குதிரை : புறநா. ௧௬௮ : 8; குதிரைமலை பிட்டனுக் குரியதென்பதை, "வசையில் வெம்போர் வானவன் மறவ, னசையின்

வாழ்நர்க்கு நன்கலஞ் சுரக்கும், பொய்யா வாய்வாட் புனைகழற் பிட்டன், மைதவ ழுயர்சிமைக் குதிரைக் கவா அன்'' (அகநா. ௧௪௩) என்பதனுலு முணர்க.

11 - 4. "சாந்த ளெகிழியி, னூன்புழுக் கயருங் குன்ற நாடன்'' அகநா. ௧௭௨.

15. நறைநார் - நறைக்கொடியிலிருந்து எடுத்த நார்; "நறைப்பவர்'' (நற். ௫); "தண்கமழ் நறைக்கொடி கொண்டு'' (ஐங்குறு. ௨௭௬); "நறை நார் வேங்கைக் கண்ணி'' அகநா. ௨௮௨.

18. தமிழகம்: பதிற். 2 - ஆம்பத்தின் பதிகம்; சிலப். ௫ : 37; மணி. ௧௭ : 62.

19. புறநா. ௫௫ : 11 - 2, ௧௪௮ : 6 - 7.



நாளின்கண்ணே புதிதுண்ணவேண்டி மரையாவைக் கறந்த நுரை கொண்ட இனிய பாலை மான்றடி புழுக்கப்பட்ட புலால்நாறும் பானையினது நிணந்தோய்ந்த வெளிய நிறத்தினையுடைய பெரிய புறத்தைக் கழுவாதே உலைநீராக வார்த்து ஏற்றிச் சந்தனவிறகான் உவிக்கப்பட்ட சோற்றைக் கூதாளி கவின்பெற்ற மலைமல்லிகை நாறுமுற்றத்து வளவிய குலையை யுடைய வாழையினது அகன்ற இலைக்கண்ணே பலருடனே பகுத்துண் ணும் ஊரப்படாத குதிரையென்னும் மலைக்குத் தலைவ! கூரிய வேலையும் நறைக்கொடியின் நாரால் தொடுக்கப்பட்ட வேங்கைப்பூமாலையினையும் வடித்தல்பயின்ற அம்பினையுமுடைய வில்லாட்களுக்குத் தலைவ! கையான்

வழங்கும் வள்ளிய கொடையினையும் கடிய குதிரையையுமுடைய கொற்ற! உலகத்தெல்லையுள் தமிழ்நாடு கேட்கப் பொய்யாத செவ்விய நா வருந்தும்படி வாழ்த்திப் பாடுவரென்று சொல்லுவர் பரிசிலர், நாடோறும்; கொடாத வேந்தர் நாணக் கெடாது பரந்த நினது வசையில்லாத வாலிய புகழை.—எ - று.

கிழவ! பெரும! கொற்ற! பரிசிலர் நின்புகழை ஏத்திப் பாடுப வென்ப; அதனால், யானும் நின்பாற் பரிசில் பெற்றுப் பாடுவேனாகவேண்டு மெனப் பரிசிற்றுறைக்கேற்பக் கூறியதாக்குக.

ஊராக்குதிரை: மலைக்குவெளிப்படை. நறை - [1]பச்சிலைக்கொடி.()

---

[1]'பைங்கொடி - பச்சிலைக்கொடி; எல்லாவற்றினும் பசுத்திருத்தலின், பச்சிலை யென்றுபெயர் பெற்றது' (முருகு. 190, ந.) என்பது இங்கே அறியற்பாலது.

---

(௧௬௯) நும்படை செல்லுங் காலை யவர்படை
எடுத்தெறி தானை முன்னரை யெனாஅ,
அவர்படை வரூஉங் காலை நும்படைக்
கூழைதாங்கிய வகல்யாற்றுக்
குன்று விலங்கு சிறையி னின்றனை யெனாஅ,
அரிதாற் பெருமநின் செவ்வி, யென்றும்

4 - 5. புறநா. உஅச, ௩௩0; "வருபுனற் கற்சிறை கடுப்ப விடைய்றுத், தொன்ளுேட்டிய செருப்புகன் மறவர்" (மதுரை. 725 - 6); "வருவிசைப் புனலைக் கற்சிறை போல, ஒருவன் ருங்கிய பெருமையானும்" (தொல். புறத்திணை. சூ. 8); "பொருபடையுட் கற்சிறைபோன், ஞெருவன் ருங்கிய நிலையுரைத்தன்று" பு - வெ. 54.





பெரிதா லத்தையென் கடும்பின திடும்பை
இன்னே விடுமதி பரிசில் வெண்வேல்
இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்
இகலின ரெறிந்த வகலிலை முருக்கின்
பெருமரக் கம்பம் போலப்
பொருநர்க் குலையாநின் வலன்வா ழியவே.

திணை - அது; துறை - பரிசில்கடாநிலை.
அவனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனுர் பாடியது.

இ - ள்.—நம்முடைய படை பகைவர்மேற் போங்காலத்து அவரது படையாகிய வேல்முதலாயவற்றை ஒக்கியெறியும் படைக்கு முன்னே நிற்பையாகலானும், அவர்படை அடர்த்துவருங்காலத்து நம்படையினது அணியைத் தாங்கவேண்டி அகன்ற ஆற்றின்கட் குறுக்கே தடுத்துக் கிடக்கின்ற மலையையொப்ப அதனைத் தடுத்துநின்ருயாதலானும் பெரும!

நின்னைக் காணலாங்காலம் பெறுதலரிது, எந்நாளும்; எனது சுற்றத்தினது இடும்பை பெரிதாதலால் நீ இப்பொழுதே எனக்குப் பரிசில் தந்து விடுவாயாக; வென்றிவேலையுடைய இளைய பல கோசர் விளங்கிய படைக்கலங்கற்பார் மாறுபட்டனராயெறிந்த அகன்ற இலையையுடைய முருக்காகிய பெரிய மரத்தாற் செய்யப்பட்ட தூணமாகிய இலக்கைப் போலப் பொருவார்க்குத் தொலையாத நினது வென்றி வாழ்வதாக.—எ-று.

'என' என்பன, எண்ணிடைச்சொல்.

'எளிதாலத்தை' என்று பாடமோதுவாரும் உளர். (கசுக)

---

8. புறநா. கசுச : 24. 6 - 8. புறநா. கருக : 6 - 15.

9. கோசர் - ஒருவகைவீரர்; புறநா. உஅரு, ருகசு; "நாலூர்க் கோசர் நன்மொழி", "ஒன்று மொழிக் கோசர" (குறுந். கடு, எரு); "மெய்ம்மலி பெரும்பூட் செம்மற் கோசர்", "வடுவுடை முகத்தர், கடுங்கட் கோசர்", "காப்புக்கை நிறுத்த பல்வேற் கோசர்", "ஒன்றுமொழிக் கோசர்", "வாய்மொழி நிலைஇப சேண்விளங்கு நல்லிசை, வளங்கெழு கோசர்", "பல்லிளங் கோசர்", "புனைதேர்க் கோசர்", "ஊர்முது கோசர்" (அகநா. கடு, கூO, ககரு, ககசு, உOடு, உககு, உடுக, உசுஉ); "அவையகம் விளங்க, நான் மொழிக் கோசர்", "கடந்தடு வாய்வா ளிளம் பல் கோசர்" (மதுரை. 508-9, 773); 'கொங்கிளங் கோசர் - குறும்பு செலுத்துவார் சிலவீரர்' (சிலப். உரைபெறு. 2, அரும்பத.) என்பவை இங்கே அறியற்பாலன.

9 - 11. புறநா. சு : 6, அடிக்.; சீவக. 995, ந.

(கஎ0) மரைபிரித் துண்ட நெல்லி வேலிப்
பரலுடை முன்றி லங்குடிச் சீறூர்
எல்லடிப் படுத்த கல்லாக் காட்சி
வில்லுழு துண்மார் நாப்ப ணொல்லென
இழிபிறப் பாளன் கருங்கை சிவப்ப
வலிதுரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி
புலிதுஞ்சு நெடுவரைக் குடிஞையோ டிரட்டும்
மலைகெழு நாடன் கூர்வேற் பிட்டற்
குறுக லோம்புமின் றெவ்வி ரவனே
சிறுகண் யானை வெண்கோடு பயந்த
ஒளிதிகழ் முத்தம் விறலியர்க் கீத்து
நார்பிழிக் கொண்ட வெங்கட் டேறல்

---

1. மரை-மரையா; ஒருவகைவிலங்கு; "மரையாமரல்கவர" கலி. சு.

1 - 2. நெல்லிக்காயை மரையா உண்ணும்; "நெல்லி, மரையின மாரு முன்றிற், புல்வேய் குரம்பை நல்லோ ரூரே", "புரிமட மரையான் கரு நரை நல்லேறு, தீம்புளி நெல்லி மாந்தி" (குறுந். உஙரு, ஙகஎ); "புல்லிலைப், பாரை நெல்லி யம்புளித் திரள்காய், கான மடமரைக் கணநிரை கவரும்", "பளிங்கி னன்ன தோற்றப், பல்கோ ணெல்லிப் பைங்கா யருந்தி, மெல்கிடு கவுள மடமரை யோர்க்கும்" அகநா. சுகூ, ஙகூகூ.

4. புறநா. ருகக : 2; "வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்", "வானம் வேண்டா வில்லே ருழவர்" (அகநா. ருடு, ககரு); "வில்லே ருழவர் பகை கொளினும்" குறள், 872.

6 - 7. புறநா. ருஎ0 : 6; "துடிக்குடிஞைக் குடிப்பாக்கத்து" (பொருந. 210); "ஆகுளி கடுப்பக், குடிஞை யிரட்டு நெடுமலை" (மலைபடு. 140 - 41); "உருடிடி மகுளியிற் பொருடெரிந் திசைக்கும், கடுங்குரற் குடிஞைய நெடும்பெருங் குன்றம்" அகநா. ககூ : 4 - 5.

8. பிட்டன் : புறநா. கஎஉ : 8; அகநா. எஎ, கசரு.

10 - 11. யானைக்கோடு முத்தம் பயத்தல்: புறநா. ககூக : 16 - 7; "முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற" (பதிற். ருஉ); "பெருங்களிற்று முத்துடை வான்கோடு" (முருகு. 304 - 5); "யானை, முத்தார் மருப்பு" (குறிஞ்சி. 35-6); "யானை, முத்துடை மருப்பின்" மலைபடு. 517 - 8.

12. புறநா. உருஉ : 3, ருகூஎ : 7; "நாரரி நறவம்" (பரி. கூ : 49); "நாரரி நறவுண் டிருந்த தந்தைக்கு", "பன்மீன் கொள்பவர் முகந்த விப்பி, நாரரி நறவின் மகிழ்தொடைக் கூட்டும்" அகநா. உககூ, உகூசு.



பண்ணமை நல்யாழ்ப் பாண்கடும் பருத்தி
நசைவர்க்கு மென்மை யல்லது பகைவர்க்
கிரும்புபயன் படுக்குங் கருங்கைக் கொல்லன்
விசைத்தெறி கூடமொடு பொரூஉம்
உலைக்கல் லன்ன வல்லாளன்னே.

திணை - வாகை; துறை - வல்லாண்முல்லை; தானைமறமுமாம்.
அவனை உறையூர் மருத்துவன் தாமோதரனார் பாடியது.

வல்லாண்முல்லையாவது:—

[1]"இல்லும் பதியு மியல்புங் கூறி
நல்லாண் மையை நலமிகுத் தன்று."

இ - ள்.—மரையாவாற் பிரித்துண்ணப்பட்ட நெல்லியாகிய வேலியையுடைத்தாய் அதனது விதையாகிய பரலுடைத்தாகிய முற்றத்தினையுடைய அழகிய குடியையுடைய சிறிய ஊரின்கட் பகற்பொழுதெல்லாம் வேட்டையாடித் திரிந்த கல்வியில்லாத காட்சியையுடைய வில்லாகிய ஏராலுழுதுண்பாருடைய நடுவே ஓசையையுடைத்தாக இழிந்த பிறப்பினையுடைய புலையன் தனது வலிய கை சிவப்ப வலியான் முடுக்கிக்கொட்டும் வலிய கண்ணையுடைய அச்சத்தைச் செய்யும் துடி புலி கிடக்கும் நெடிய மலையின்கட் பேராந்தையோடுகூடி யொலிக்கும் மலைபொருந்திய நாட்டையுடையனாகிய கூரிய வேலையுடைய பிட்டனை அணுகுதலைப் பாதுகாமின், பகைவீர்! அவன்றான் சிறுகண்ணையுடைய யானையினது வெளிய கோடு தரப்பட்ட ஒளிவிளக்கு முத்தத்தை விறலியருக்குக் கொடுத்து, நாரைப் பிழிந்து கொள்ளப்பட்ட விரும்பத்தக்க [2]கள்ளாகிய தெளிவைப் பண் பொருந்தின நல்ல யாழினையுடைய பாணர் சுற்றத்தை நுகர்வித்து, இவ்வாறு தன்பாற் பரிசில் நச்சிவந்தோர்க்கு மெல்லியனாயிருத்தலல்லது பகைவர்க்கு இரும்பைப் பயன்படுத்துகின்ற வலிய கையையுடைய கொல்லன் விசைத்தடிக்கப்பட்ட கூடத்தோடே யேற்று மாறுபடும் உலை

யிடத்து அடைகல் போலும் வலிய ஆண்மையையுடையன்.—எ - று.

பிட்டன் நசைவர்க்கு மென்மையல்லது பகைவர்க்குக் கல்லன்ன வல்லாளனாதலால், தெவ்விர் ! அவனைக் குறுகலோம்புமினெனக் கூட்டுக.

---

13. பண்ணமை நல்யாழ் : புறநா. கசுச : 11.

12 - 3. புறநா. கசு0 : 10 - 11. 17. உலைக்கல் : குறுந். கஉ.

14 - 7. புறநா. க0க : 11 - 8, கஎஅ : 6 - 11.

[1]பு. வே. 177. [2]புறநா. உஉச : 1 - 4.



வலிதுரந்தென்பதற்கு மாற்றார்வலியைக் கெடுத்தெனினும்அமையும். நார்பிழிக்கொண்டவென்பதற்குக் [1]கோதைப் பிழிந்து கொண்டவெனினும் அமையும். (கஎ0)

---

[1]புறநா. ககச : 4.

---

(கஎக) இன்று செலினுந் தருமே சிறுவரை
நின்று செலினுந் தருமே பின்னும்
முன்னே தந்தனெ னென்னாது துன்னி
வைகலுஞ் செலினும் பொய்யல னாகி
யாம்வேண்டி யாங்கெம் வறுங்கல நிறைப்போன்
தான்வேண்டி யாங்குத் தன்னிறை யுவப்ப

அருந்தொழின் முடியரோ திருந்துவேற் கொற்றன்.
இனமலி கதச்சேக் களனொடு வேண்டினும்
களமலி நெல்லின் குப்பை வேண்டினும்
அருங்கலங் களிற்றொடு வேண்டினும், பெருந்தகை
பிறர்க்கு மன்ன வறத்தகை யன்னே
அன்ன னாகலி னெந்தை யுள்ளடி
முள்ளு நோவ வுறாற்க தில்ல
ஈவோ ரரியவிவ் வுலகத்து
வாழ்வோர் வாழவவன் றாள்வா ழியவே.[1]

திணை - பாடாண்டிணை; துறை - இயன்மொழி.

அவனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியது.

இ - ள்.—இன்று போகினும் தருவன்; சிறிதுநாட் கழித்துப் போகினும் தருவன்; பின்னையும் முன்னே தந்தேனென்னாது பயின்று நாடோ

---

1 - 5. புறநா. ௧௪௨ : 5.

1 - 7. புறநா. ௪௨ : 1, ௧0௧ : 1 - 3, ௧௮0 : 1 - 7, ௨0௫ : 1 - 6.

10. புறநா. ௧௫௧ : 3 - 4, ௧௫௫ : 2.

12 - 3. 'உள்ளங்காலில் முள்ளுந் தையாமலிருக்கவேண்டும்' என்பது ஒரு பழமொழி.

15. புறநா. ௭0 : 19, அடிக்; ௫௮௨, ௫௮௬.

[1] மு. 'இன்று செலினும்...தாள்வாழியவே: இது படர்க்கையாகிய இயன்மொழிவாழ்த்து' தொல். புறத்திணை. சூ. 35, ந.

றும் செவினும் பொய்யாஞகி யாம் வேண்டினபடியே எம்முடைய வறிய கலத்தை நிரப்புவோன்; தான் விரும்பினபடியே தன்னுடைய அரசன் உவப்பச் செய்தற்கரிய போர்த்தொழில்களை முடிப்பாஞக, திருந்திய வேலையுடைய கொற்றன்; இனமாகிய மிக்க வெவ்விய சேக்களைத் தொழுவோடே வேண்டினும் களத்தின்கண் மலிந்த நெல்லின் குவையை வேண்டினும் பெறுதற்கரிய அணிகலங்களைக் களிற்றுடனே வேண்டினும், பெரிய தகைமையை யுடையான், பிறர்க்கும் அத்தன்மைய அறஞ்செய்யுங் கூற்றையுடையான்; அத்தன்மையஞதலால், எம்முடைய இறைவனது உள்ளடிக்கண் முள்ளுமுளப்பட நோவச் சென்று உறு தொழிய வேண்டும்; ஈவோரரிதாகிய இவ்வுலகத்தின்கண் உயிர்வாழ்வோர் வாழும் பரிசு அவனது தாள் வாழ்வதாக.—எ - று.

பிறர்க்குமென்பது, எச்சம். தில்: விழைவின்கண் வந்தது.

திருந்துவேற் கொற்றன், பெருந்தகை, சேக் களஞெடு வேண்டினும், நெல்லின் குப்பை வேண்டினும், அருங்கலம் களிற்றெடு வேண்டினும் நமக்கே யன்றிப் பிறர்க்கும் அத்தன்மைய அறஞ்செய்யும் தகுதியையுடையன்; யாம் வேண்டியாங்கு எம் வறுங்கலம் நிறைப் போன்; தான் வேண்டியாங்குத் தன் இறையுவப்ப அருந்தொழில் முடிப்பாஞக வேண்டுவது; எந்தை உள்ளடி முள்ளும் நோவவுறுக; வாழ்வோர் வாழ அவன் தாள் வாழியவெனக் கூட்டுக.

'வாழ்வோர் வாழ்வு' என்றேதி, வாழ்வோர் வாழும் வாழ்வெல்லாம்

அவன் தாள் வாழ்கவென் றுரைப்பினும் அமையும்.

தானே முயற்சியெனினும் அமையும். (கஎக)

---

(கஎஉ) ஏற்றுக வுலையே, யாக்குக சோறே,
கள்ளுங் குறைபட லோம்புக, வொள்ளிழைப்
பாடுவல் விறலியர் கோதையும் புனைக,
அன்னவை பிறவுஞ் செய்க, வென்னதூஉம்
பரியல் வேண்டா, வருபத நாடி
ஐவனங் காவலர் பெய்தீ நந்தின்
ஒளிதிகழ் திருந்துமணி நளியிரு ளகற்றும்

---

2 - 3. புறநா. கக : 11 - 3.

7. மணி இருளைப் போக்குமென்பதை, "இருள்பருகுமணி" (சீவக. 169) என்பதன் உரையாலும் உணர்க.



வன்புல நாடன் வயமான் பிட்டன்.
ஆரமர் கடக்கும் வேலு மவனிறை
மாவள் ளீகைக் கோதையும்

மாறுகொண் மன்னரும் வாழியர் நெடிதே.

திணையும் துறையும் அவை.

அவனை வடமவண்ணக்கன் தாமோதரனார் பாடியது.

இ - ள்.—உலையை ஏற்றுக; சோற்றை ஆக்குக; மதுவையும் நிறைய உண்டாக்குக; விளங்கிய அணிகலத்தையுடைய பாடுதல் வல்ல விறலியர் ! மாலையும் சூடுக; அத்தன்மையன மற்றும் செய்க; சிறிதும் இரங்குதல் வேண்டா; மேல் வரக்கடவ உணவை ஆராய்ந்து ஐயனை நெல்லைக் காப்பார் காவற்கிடப்பட்ட தீ அவ்விடத்துக் கெட்ட காலத்து ஒளி விளங்கும் திருந்தின மாணிக்கம் செறிந்த இருளைத் தூக்கும் வலிய நிலமாகிய மலைநாட்டையுடையவன், வலிய குதிரையையுடைய பிட்டன்; பொருதற்கரிய போரை வெல்லும் வேலும் அவன் தலைவனாகிய பெரிய வள்ளிய கொடையையுடைய கோதையும் அவனோடு பகைத்த வேந்தரும் நெடிதும் வாழ்க.—எ - று.

பிட்டன்வேலும் கோதையும் மாறுகொள்மன்னரும் நெடிது வாழியர்; அதுவே வேண்டுவது; மேல்வரும் உணவைத் தேடி என்னதூஉம் பரியல் வேண்டா; ஆதலால், ஏற்றுக; ஆக்குக; ஓம்புக; கோதையும் புனைக; பிறவும் செய்கவென மாறிக் கூட்டுக.

மாறுகொண் மன்னரும் வாழியரென்ற கருத்து : இவன் வென்று திறைகொள்வது அவருளராயினென்பதாம்.

விறலியரென்பது, ஈண்டு முன்னிலைக்கண் வந்தது.

வேண்டா வென்பது, வினைமேனின்றதொரு முற்றுச்சொல்.

---

8 - 10. பிட்டன் - சேரனுடைய வீரன்; புறநா. கஎ0 : 8;

"வானவன் மறவன் வணங்குவிற் றடக்கை, யாஞ நறவின் வண்மகிழ்ப் பிட்டன்", "வானவன் மறவ, னசையின் வாழ்நர்க்கு நன்கலஞ் சுரக்கும், பொய்யா வாய்வாட் புனைகழற் பிட்டன்" அகநா. எஎ, கசரு.

9. "கைவண் செழிய ஞலங் கானத், தமர்கடந் துயர்த்த வேல்" அகநா. கஎ௫.

10. "வான நாண வரையாது சென்ருேர்க், கானு தீயுங் கவிகை வண்மைக், கடுமான் கோதை" புறநா. ௫௪: 6 - 8.

9 - 10. "வானவன் மறவன் வணங்குவிற் றடக்கை, ஆஞ நறவின் வண்மகிழ்ப் பிட்டன், பொருந்தர் மன்ன ரருஞ்சமத் துயர்த்த, திருந்திலை யெஃகம் போல" அகநா. எஎ : 15 - 8.



அன்னவை பிறவுமென்பது, பூசுவன உடுப்பன பூண்பன முதலாயினவற்றை.

வருவது நாடி யென்ருேதி, ஐவனத்துக்கு வரும் இடையூறு நாடி யென்று அதனைக் காவலென்பதனுன் முடிப்பினும் அமையும். (கஎ௨)

---

(கஎ௩) யான்வாழு நாளும் பண்ணன் வாழிய
பாணர் காண்கிவன் கடும்பின திடும்பை.

யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன
ஊணொலி யரவந் தானுங் கேட்கும்.
பொய்யா வெழிலி பெய்விட நோக்கி
முட்டை கொண்டு வற்புலஞ் சேரும்
சிறுநுண் ணெறும்பின் சில்லொழுக் கேய்ப்பச்
சோறுடைக் கையர் *வீறுவீ றியங்கும்

---

1. "மைந்தநீ கோடி யெங்கள் வாழ்க்கைநாள் யாவு மென்பார்" கம்ப. கைகேசிசூழ்வினை. 88.

பண்ணன் : புறநா. எ0 : 13, கஅக : 6, ஙஅஅ: 10.

1. வாழ்த்துதற் பொருண்மைக்கண் வந்த யகரவீற்று வியங்கோள் வினை முற்றிற்கு மேற்கோள்; நன். சூ. 337, மயிலை; இ. வி. சூ. 239, உரை.

4. ஊணொலியரவம் : புறநா. ஙஙச : 7; மணி. கஎ : 97; "முட்டாது கடாஅ மட்டூண் கம்பலும்" (பெருங். உ. 2 : 87); "அட்டூண் மொனி" நன். சூ. 211, சங்கர. மேற்.

3 - 4. புறநா. சஎ : 1, ஙஎ0 : 11.

5 - 7. கருத்து : 'இனித் தெளிவு எ - து, எறும்பு முட்டை கொண்டு தெற்றியேறின் மழை பெய்தது மழை பெய்யு மென்பது' (தொல். வினை. சூ. 45, இளம்.); 'எறும்பு முட்டைகொண்டு தெற்றி யேறின் மழைபெய்தல் நூலாற்றெளிந்தான் அவை முட்டைகொண்டு தெற்றி யேறியவழி, மழை பெய்யாமுன்னும் மழை பெய்தது, மழை

பெய்யும் என்னும்; ஆண்டு எதிர்காலத்திற்குரிய பொருள் இறந்தகாலத்தானும் நிகழ்காலத்தானும் தோன்றியவாறு கண்டுகொள்க', 'எறும்பு முட்டைகொண்டு திட்டை யேறியது கண்டுழி மழை பெய்வதாமென்னுது மழைபெய்தது பெய்கின்றதெனக் கூறுதல் தெளிவு' தொ. சொ. வி. 48, சே; கல்; ந; நன். சூ. 383, மயிலை; நன். வி. சூ. 384.

பி - ம். * வீற்று வீற்று.



இருங்கிளைச் சிறாஅர்க் காண்டொறுங் கண்டும்
மற்று மற்றும் வினவுதுந் தெற்றெனப்,
பசிப்பிணி மருத்துவ னில்லம்
அணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே.

திணையும் துறையும் அவை.

சிறுகுடிகிழான் பண்ணனைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பாடியது.

இ - ள்.—யான் உயிர்வாழும் நாளையும் பெற்றுப் பண்ணன் வாழ்வானாக; பாணரே! காண்பீராக, இந்தப் பரிசிலனது சுற்றத்தின் வறுமையை. புதுவருவாயையுடைத்தாகிப் பழுத்த மரத்தின்கண்ணே புள்ளினம் ஒலித்தாற் போன்ற ஊணொலியுண்டாகிய ஆரவாரந்தானுங் கேட்கும்; காலந் தப்பாத மழை பெய்யுங்காலத்தைப் பார்த்துத் தம் முட்டைகளைக் கொண்டு மேட்டுநிலத்தினையடையும் மிகச் சிறிய எறும்பினது சிலவாகிய ஒழுக்கத்தை யொப்பச் சோறுடைக் கையினராய் வேறு வேறு போகின்ற பெரிய சுற்றத்தோடுங் கூடிய பிள்ளைகளைக் காண்பேம்; கண்டுவைத்தும் எம் பசிவருத்தத்தானும் வழிவரல் வருத்தத் தானும் பின்னரும் பின்னரும் [1]விதுப்புற்றுக் கேளாநின்றேம், தெளிய. பசிநோய் தீர்க்கும் மருத்துவனது மனை அணித்தோ? தூரித்தோ? எங்களுக்கு நீர் சொல்லுமின்.—எ - று.

காண்க இவனென்பது, காண்கிவனெனக் கடைக்குறைந்து நின்றது. தானென்பது, அசைநிலை.

இது, பரிசில்பெறப் போகின்றான் வருகின்றவரைக் கண்டு வினவுவான் பண்ணனது இயல்பு கூறி வாழ்த்தியவாறு.

இனி, பரிசிலன்றான், 'அரவமுங் கேட்கும்; சிறாரைக் காண்டும்; கண்டும் மற்றும் மற்றும் வினவுதும்; நீர் எமக்குப் பசிப்பிணி மருத்துவனில்லம் அணித்தோ சேய்த்தோ கூறுமின்' என்றுநின்றான்; இவன் கடும்பினது இடும்பையைப் பாணர் காண்க; இங்ஙனம் எம்போலும் இரவலர் வறுமையைத் தீர்க்கின்ற பண்ணன் வாழியவென்று பெறப் போகின்றானைக் கண்டு பெற்று வருகின்றான் பக்கப்பாணரை நோக்கிக்

---

11. "பசிப்பிணி யென்னும் பாவியது தீர்த்தோ, ரிசைச்சொலளவைக் கென்னுநிமிராது", "பசிப்பிணி மருந்து" மணி. கக : 80 - 81, உச : 217.

12. வினைக்குறிப்புச்சொல், பிறிதின் கிழமையாகிய உடைமைப் பொருள்பட நிற்றற்கு மேற்கோள் ; தொல். வினை. சூ. 23, சே; கல்; ந.

[1]விதுப்பு - மனத்தின் விரைவு.





கூறியதாக உரைப்பினும் அமையும். இதற்கு என்றுநின்றானென ஒரு சொல் வருவித்து உரைக்கப்பட்டது.

அன்றியும், பரிசிற்குச் செல்கின்றான், பசிப்பிணி மருத்துவ னில்லம் அணித்தோ சேய்த்தோவென்று பலகாலும் வினவ, அதனை உட்கொண்டு ஊணொலி யரவமுங் கேட்கும்; இருங்கிளைச் சிறார்க் காண்டும்; கண்டும் மற்றும் மற்றும் வினவுதுமெனச் சாதியொருமையாலுளப்படுத்திக் கூறிப் பின்பு இங்ஙனம் காணவும் கேட்கவும் படுவது நமக்கு ஏற அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கென்று அவரை நோக்கிக் கூறி, பின்பு இங்ஙனம் என் வறுமையும் தீர்த்து இவன் வறுமையுந் தீர்க்க விருக்கின்ற பண்ணன் யான் வாழுநாளும் பெற்று வாழ்வானாகவெனப் பரிசில் பெற்று வருகின்றான் தன் பக்கப்பாணரை நோக்கிக் கூறிய வாறாக உரைப்பாரும் உளர்.

இனி, செல்கின்றான் பக்கப்பாணருள் ஒருவனை ஆண்டு நிற்கின்ற பாணன் பக்கப்பாணரை நோக்கிக் கூறியதாக உரைப்பாரும் உளர்.

ஈண்டும் இவனென்றது, பரிசிலனை.

'மற்று மற்றும் வினவுந் தெற்றென' என்று பாடமோதுவாரும் உளர்.

(கஎச) அணங்குடை யவுணர் கணங்கொண் டொளித்தெனச்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணா
திருள்கண் கெடுத்த பருதி ஞாலத்
திடும்பைகொள் பருவர றீரக் கடுந்திறல்
*அஞ்சன வுருவன் றந்து நிறுத்தாங்
கரசிழந் திருந்த வல்லற் காலை
முரசெழுந் திரங்கு முற்றமொடு கரைபொரு
திரங்குபுன னெரிதரு மிகுபெருங் காவிரி
மல்ல னன்னாட் டல்ல றீரப்
பொய்யா நாவிற் கபிலன் பாடிய

---

6. "அரசுகெடுத் தலம்வரு மல்லற் காலை" சிலப். ச : 8, உஎ : 132.

7. "வள்வார் முரசங் கறங்கும்மணி முன்றில் வேந்தன்" நைடதம், அன்னத்தைத்தூது. 64.

10. "பொய்யாச் செந்நா" (புறநா. கசுஅ : 19); "மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவி, னுவலை கூராக் கவலையி னெஞ்சி, னனவிற் பாடிய நல்லிசைக் கபிலன்" பதிற். அரு.

பி - ம். *அஞ்சன வண்ணன்.

மையணி நெடுவரை யாங்க ணொய்யெனச்
செருப்புகன் மறவர் செல்புறங் கண்ட
எள்ளறு சிறப்பின் முள்ளூர் மீமிசை
அருவழி யிருந்த பெருவிறல் வளவன்
மதிமருள் வெண்குடை காட்டி யக்குடை
புதுமையி னிறுத்த புகழ்மேம் படுந
விடர்ப்புலி பொறித்த கோட்டைச் சுடர்ப்பூட்
சுரும்பார் கண்ணிப் பெரும்பெயர் நும்முன்
ஈண்டுச்செய் நல்வினை யாண்டுச்சென் றுணீஇயர்
உயர்ந்தோ ருலகத்துப் பெயர்ந்தன னாகலின்
ஆறுகொன் மருங்கின் மாதிரந் துழவும்
கவலை நெஞ்சத் தவலந் தீர
நீதோன் றினையே நிரைத்தா ரண்ணல்
கல்கண் பொடியக் கானம் வெம்ப
மல்குநீர் வரைப்பிற் கயம்பல வுணங்கக்
கோடை நீடிய பைதறு காலை

---

11. "மைபடு மால்வரை" (நற். ௩௭௩); "மைபடு மாமலை" அகநா. ௧௫௩.

12. செருப்புகன் மறவர் : புறநா. ௩௧ : 9, அடிக்.; "செருவேட்டுச் சிலைக்குஞ் செங்க ணாடவர்" (அகநா. ௧௫௭); "ஒன்னா ரோட்டிய செருப் புகன் மறவர்" மதுரை. 726.

10 - 13. முள்ளூர்மலை மலையனுடையதென்பதும் அதனைக் கபிலர் பாடியதும் இந்நூல் ௧௨௩ - ஆம் பாடல் முதலியவற்றாலும் விளங்கும்.

15. புறநா. ௩ : 1; "மதிமருள் வெண்குடை மன்னவன்", "மதிமருள் வெண்குடை மன்ன" (மணி. ௪ : 27, ௨௨ : 194); "மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத், தலைமிசைக் கொண்ட குடையர்" நாலடி. 21.

19 - 20. புறநா. ௩௮ : 12 - 6; "ஈண்டுச் செய்வினை யாண்டுநுகர்ந் திருத்தல், காண்டகு சிறப்பினும் கடவுள ரல்லது" (மணி. ௧௪ : 38 - 9); "புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க மென்னுமீ தருமறைப் பொருளே" கம்ப. நகர. 5.

20 - 23. "சுடர்வழக் கற்றுத் தடுமாறு காலையோ, ரிளவள ஞாயிறு தோன்றிய தென்ன, நீயோ தோன்றினை" மணி. ௧௦ : 10 - 12.

25 - 6. "உருகெழு மண்டிலங், கயங்கண் வறப்பப் பாஅய் நன்னிலம், பயங்கெடத் திருகிய பைதறு காலை" அகநா. ௨௬௩,



இருநில நெளிய வீண்டி
உருமுரறு கருவிய மழைபொழிந் தாங்கே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

மலையமான் சோழியவேனாதி * திருக்கண்ணனை மாறேக்கத்து நப்பசலையார் பாடியது.

இ - ள்.—பிறரை வருத்தும் அச்சத்தினையுடைய அசுரர்திரள் கொண்டுபோய் மறைத்தார்களாக, சேய்மைக்கண்ணே விளங்காநின்ற தலைமையினையுடைய ஞாயிற்றைக் காணாமையால் இருளானது உலகத்தாரது கண்ணை மறைத்த வட்டமாகிய உலகத்தினது நோய்கொண்ட துன்பம் நீங்கும்பரிசு மிக்கவலியையுடைய அஞ்சனம்போலும் நிறத்தையுடைய திருமேனியையுடைய கண்ணன் அந்த ஞாயிற்றைக்கொண்டுவந்து இவ்வுலகத்தின்கண் அந்தகாரம் நீங்கும்பரிசு ஆகாயத்தின்கண்ணே நிறுத்தினாற்போலப் பகைவேந்தரொடு பொருது உடைந்துபோதலால் தம் வேந்தனை இழந்துழலும் இன்னாமையையுடைய பொழுதின்கண் முரசு கிளர்ந்துமுழங்கும் செண்டுவெளியையுடைய கோயிலுடனே கரையைப் பொருது முழங்கும் நீராலே உடைந்து ஆழ்ந்தோடுகின்ற மிக்க பெரிய காவிரியையுடைய வளவிய நல்ல நாட்டினது துயரங்கெடப் பொய்யாத நாவினையுடைய கபிலனாற் பாடப்பட்ட முகிலணிந்த பெரிய மலையிடத்து விரையப் போரை விரும்புமறவர் ஓடுபுறங்கண்ட இகழ்ச்சியற்ற தலைமையினையுடைய முள்ளூரின் மலையுச்சியின்கண் பிறராற் காண்டற்கு அரிய இடத்தின்கணிருந்த பெரிய வென்றியையுடைய சோழனது திங்கள் போலும் வெண்குடையைத் தோற்றுவித்து அக்குடையைப் புதுமையுண்டாக நிலைபெறுவித்த புகழ் மேம்படுந! வரைமுழைஞ்சில் வாழும் புலியையெழுதப்பட்ட இலாஞ்சனையையுடைய கோட்டையையும் விளங்குதலையுடைய அணிகலத்தினையும் வண்டார்க்கப்பட்ட கண்ணியையும் பெரிய புகழினையுமுடைய நும்முன்னாகிய தந்தை இவ்வுலகத்துச் செய்யப்பட்ட நல்ல அறத்தின் பயனை ஆண்டாகிய தெய்வலோகத்துப்போய் நுகரவேண்டிப் போனதலின், நல்ல நெறியைக்கொன்ற பக்கத்தினையுடைய திசையெங்குஞ் சூழ்வரும் கவலையுற்ற மனத்தின்கண் வருத்தங்கெட நீ வந்து தோன்றினாய்; இணைந்த மாலையையுடைய தலைவ! மலையிடம்பொடியக் காடு தீமிக மிக்க நீரெல்லையையுடைய நீர்நிலைகள் பலவும் முளிய இவ்வாறு

கோடை நீடப்பட்ட பசுமையற்ற காலத்துப் பெரிய நிலங்குழியும்பரிசு

28. புறநா. ௧௬௪ : 4.

23 - 8. புறநா. ௧௬௦ : 1 - 3.

ஏ - ம். *திருக்கிள்ளியை.



திரண்டு உருமேறு முழங்கும் மின்முதலாயினதொகுதியையுடைய மழை சொரிந்தாற்போல.—எ - று.

முற்றமென்றது, அதனையுடைய கோயிலை.

வெளிமுற்றமொடு வெண்குடை காட்டியென இயைப்பினும் அமையும்.

கோட்டைவெளியாகிய சுடர்ப்பூவென்றுமாம்.

ஞாயிற்றை அஞ்சனவுருவன் தந்து நிறுத்தாங்கு முற்றமொடு காட்டி அல்லல் தீர வளவன் வெண்குடை காட்டி அக்குடை நிறுத்த புகழ் மேம்படுந! நிரைத்தாரண்ணல்! நம்முன் பெயர்த்தனையாகலின், நெஞ்சத்து அவலந் தீரப் பைதறு காலை மழைபொழிந்தாங்கு நீ தோன்றினை; ஆதலால், இவ்வுலகத்திற்குக் குறை என்னையெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

அவுணர் கணங்கொண்டொளித்தென ஞாயிறு காணாத பருவரல்தீர அஞ்சனவுருவன் தந்து நிறுத்தாங்கென்பது, தேவர்களும் அசுரர்களும் பொருவழிப் பகலும் இராப்போல இயங்கித் தாம் போர்செய்தற்

பொருட்டு அசுரர் ஞாயிற்றைக் காந்தார்கள்; ஞாலம் அதனால் உள்ள பருவரல்தீரத் திருமால் அதைக் கொண்டுவந்துவிட்டதொருகதை.

'விடர்ப்புலி பொறித்த கோட்டை' என்றதனால், சோழனோடு தொடர்புபட்டு [1]அவனுக்குத் துப்பாதல் தோன்றிநின்றது.

'ஆறுகொண் மருங்கின்' என்று பாடமோதுவாரும் உளர். (௧எ௪)

---

[1]"மூவரு ளொருவன் றுப்பா கியரென, ஏத்தினர் தரூஉங் கூழே" புறநா. ௧௨௨ : 5 - 6.

---

(௧எ௫) எந்தை வாழி யாத னுங்கவென்
நெஞ்சந் திறப்போர் நிற்காண் குவரே
நின்னியான் மறப்பின் மறக்குங் காலை
என்னுயிர் யாக்கையிற் பிரியும் பொழுதும்
என்னியான் மறப்பின் மறக்குவென் வென்வேல்
விண்பொரு நெடுங்குடைக் *கொடித்தேர் மோரியர்
திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த

---

1. ஆதனுங்கன் : புறநா. ௩௮௯ : 13.

பி - ம். *கொடித்தே ரோரியர்.



உலக விடைகழி யறைவாய் நிலைஇய

மலர்வாய் மண்டிலத் தன்ன நாளும்
பலர்புர வெதிர்ந்த வறத்துறை நின்னே.

திணை - பாடாண்டிணை ; துறை - இயன்மொழி.

ஆதனுங்கனைக் கள்ளில் ஆத்திரையனார் பாடியது.

இ - ள்.—என்னுடைய இறைவ! வாழ்வாயாக; ஆதனுங்க! யான் ஒன்றைச் சொல்ல நினைப்பின், நினது புகழல்லது சொல்லாமையான், எனது நெஞ்சை வெளிப்படுத்திக் காணலுறுவோர் ஆங்கு நின்னைக் காணுகிற்பர்; நின்னையுடைய யான் நின்னை மறப்பின் மறக்குங் காலமாவது சொல்லக் கேட்பாயாக; என்னுடைய உயிரானது என்னுடம்பை விட்டு நீங்குங் காலத்தும் என்னை யான் மறக்குங் காலம் உண்டாயின் அப்பொழுது மறப்பேனல்லது மறவேன். வென்றி வேலையுடைய , விசும்பைத் தோயும் நெடிய குடையினையும் கொடியணிந்த தேரினையுமுடைய நிலமுழுதும் ஆண்ட வேந்தரது திண்ணிய ஆர்சூழ்ந்த சக்கரம் இயங்குதற்குக் குறைக்கப்பட்ட வெள்ளிமலைக்கு அப்பாலாகிய உலகத்திற்குக் கழியும் இடைகழியாகிய அற்றவாயின்கண் தேவர்களால் நிறுத்தப்பட்டு இருபொழுதும் ஒருபெற்றியே நிலைபெற்று விளங்கும் பரந்த இடத்தையுடைய ஆதித்தமண்டிலத்தையொப்ப நாள்தோறும் இரவு பகலென்னாமல் பலரையும் காத்தலை ஏற்றுக்கொண்டு ஒருபெற்றியே விளங்கிய அறத்துறையாகிய நின்னை.—எ - று.

எந்தை! வாழி; ஆதனுங்கனே! மண்டிலத்தன்ன அறத்துறை நின்னை நின்னுடையேனாகிய யான் மறப்பின் மறக்குங் காலமாவது என் யான் மறப்பின் மறக்குவென் ; ஆதலால், என்னெஞ்சைத் திறப்போர் நிற்காண்குவரெனக் கூட்டி வினைமுடிக்க.

மோரியராவார் சக்கரவாளசக்கரவர்த்திகள்; விச்சாதரரும், நாகரு மென்ப.

---

8. "உலக விடைகழி யொருங்குட னீங்கி" சிலப். ௧௦ : 27.

6 - 8. "விண்பொரு நெடுங்குடை யியறேர் மோரியர், பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த, அறை", "வம்ப மோரியர், புனைதேர் நேமி யுருளிய குறைத்த, விலங்குமென் ளருவிய வறை", "மோரியர், தென் றிசை மாதிர முன்னிய வரவிற்கு, விண்ணுற வோங்கிய பனியிருங் குன்றத், தொண்கதிர்த் திகிரி யுருளிய குறைத்த வறை" அகநா. ௬௯, ௨௰௧, ௨௮௧.



'திகிரி திரிதரக் குறைந்த' என்றோதி, சக்கரவாளத்திற்கு அப்பாற் பட்ட உலகத்து மோரியர் திகிரி ஊடறுத்துச் சேறலிற் குறைந்த பிளவு பட்ட வாயிற்கு அப்பாலாகிய உதயகிரிக்கண் நிலைபெற்ற ஆதித்த மண்டல மென்று உரைப்பாரும் உளர். (௧௭௫)

---

(௧௭௬) ஓரை யாயத் தொண்டொடி மகளிர்
கேழ லுழுத விருஞ்சேறு கிளைப்பின்

யாமை யீன்ற புலவுநாறு முட்டையைத்
தேனூ ரும்பற் கிழங்கொடு பெறூஉம்
இழுமென வொலிக்கும் புனலம் புதவிற்
பெருமா விலங்கைத் தலைவன் சிறியாழ்
இல்லோர் சொன்மலை நல்லியக் கோடனை
உடையை வாழியெற் புணர்ந்த பாலே
பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
ஒரூ ருண்மையி னிகந்தோர் போலக்
காணாது கழிந்த வைகல் காணா

---

1. "விளையா டாயமொ டோரை யாடாது" (நற். ௬௮); "ஓரை யாயங் கூற", "ஓரை மகளிர்" குறுந். ௪௮, ௩௧௬, ௪0௧.

3. ஆமைமுட்டை : "நிறைச்சூ லியாமை மறைத்தீன்று புதைத்த, கோட்டுவட் டுருவின் புலவுநாறு முட்டை" அகநா. ௧௬0.

5. "புனலம் புதவின் மிழலை" புறநா. ௨௪ : 19.

6. "நெல்லமல் புரவி யிலங்கை கிழவோன்" புறநா. ௩௭௯ : 6.

7. "இல்லோர் செம்மல்" (சிலப். ௧௫ : 90); "அறிந்தோர் சொன்மலை" முருகு. 263.

6 - 7. "நன்மா விலங்கை மன்ன ருள்ளும்,...பல்லியக் கோடியர் புரவலன் பேரிசை, நல்லியக் கோடனை", "செல்லிசை நிலைஇய பண்பி னல்லியக் கோடனை" சிறுபாண். 120 - 26, 268 - 9.

8. "நல்லமன் றம்ம பாலே" குறுந். ௨௨௯.

9. மூ. புறநா. ௩௩௭ : 6.

9 - 10. "இனியே, பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர், தைஇத் திங்கட் டண்ணிய தரினும், வெய்ய வுவர்க்கு மென்றனிர்" குறுந். கஅசு.



வழிநாட் கிரங்குமென் னெஞ்சமவன்
கழிமென் சாயல் காண்டொறு நினைந்தே.

திணையும் துறையும் அவை.

[1]ஓய்மான் நல்லியக்கோடனைப் புறத்திணை நன்னாகனார்பாடியது.

இ - ள்.—விளையாட்டுத்திரட்சிக்கண் ஒள்ளிய வளையையுடைய மகளிர் கெழற்பன்றியுழுத கரிய சேற்றைக் கிளறின், அதன்கண்ணே ஆமையீனப்பட்ட புலால் நாறும் முட்டையைத் தேன் நாறும் ஆம்பலினது கிழங்குடனே பெறும் இழுமென்னும் அனுகரணமுண்டாக முழங்கும் நீர்வழங்கும் வாய்த்தலைகளையுடைய பெரிய மாவிலங்கை யென்னும் ஊர்க்குத் தலைவன், சிறிய யாழையுடைய வறியோர் தொடுக்கும் புகழ் மாலைசூடும் நல்லியக்கோடனைத் துணையாக நீ யுடையையாதலான், என்னைப் பொருந்திய விதியே ! நீ ஒரு குறையுடையையல்லை, வாழ்வாயாக ; பாரியது பறம்பின்கட் குளிர்ச்சியையுடைய சுனையிடத்துத் தெளிந்த நீர், போய்த்தேடிக்கொள்ள வேண்டாமல் ஓரூரின்கண்ணேயுண்டாதலின்

அதனை யாம் வேண்டியபொழுது உண்கின்றோமென்று நெகிழ்ந்திருந் தாரையொப்ப அவனைக் காணுதொழிந்த நாட்கள் [2]எனக்கு நாட்களாய்க் கழிந்தனவல்லவென்று உட்கொண்டு அவனோடுதொடர்ந்த [3]நட்பு இன்றே போல இடையறாதுசெல்லவேண்டுமென்று பின்வருநாளைக்கு இரங்கா நின்றது என்னுடைய நெஞ்சம், அவனது மிக்க மெல்லிய சாயலைக் காணுந்தோறும் நினைந்து.—எ - று.

என்னெஞ்சம் அவன்சாயலைக் காணுந்தோறும் நினைந்து வழிநாட் கிரங்கும்; என்னைப் புணர்ந்தவிதியே! நீ நல்லியக்கோடனை உடையை யாதலால், நீ என்ன குறையையுடையை; நீ வாழ்வாயாகவெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

'இல்லோர்சொன்மலை' என்பதற்கு இல்லோர்சொல்லைச் சூடு மென்றும், 'எற்புணர்த்தபாலே' என்றோதி என்னை அவனோடுகூட்டிய விதியேயென்றும், 'வழிநாட்கிரங்கும்' என்பதற்கு இன்னும் இவனொடு தொடர்ந்த நட்பு இடையற்றுக் கழியுங்கொலென்று இரங்குமென்றும் உரைப்பாரும் உளர். (௧எசு)

---

11 - 2. செய்யாவென்னும் வாய்பாட்டுவினையெச்சம் வினைமுதலும் இறந்தகாலமும் தழுவிவந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 343, மயிலை.

13. சாயல் ஆண்பாலார்க்கும் கூறப்படுதல், "நீரினு மினிய சாயற் பாரிவேள்" (புறநா. ௧0௫) என்பதனாலும் அதன் குறிப்பாலும் உணர லாகும்.

[1] இவன், பத்துப்பாட்டிலுள்ள சிறுபாணாற்றுப்படைத்தலைவன்.

[2] புறநா. சுரு : 12.

[3] "இன்றே போல்கநும் புணர்ச்சி" புறநா. ௫அ : 28.

(௧௭௭) ஒளிறுவாள் மன்ன ரொண்சுடர் நெடுநகர்
வெளிறுகண் போகப் பன்னாட் டிரங்கிப்
பாடிப் பெற்ற பொன்னணி யானை
தமரெனின் யாவரும் புகுப வமரெனிற்
றிங்களு நுழையா வெந்திரப் படுபுழைக்
கண்மாறு நீட்ட நணிநணி யிருந்த
குறும்பல் குறும்பிற் றதும்ப வைகிப்
புளிச்சுவை வேட்ட செங்க ணாடவர்
தீம்புளிக் களாவொடு துடரி முனையின்
மட்டற னல்யாற் றெக்க ரேறிக்
கருங்கனி நாவ லிருந்துகொய் துண்ணும்
பெரும்பெய ராதி பிணங்கரிற் குடநாட்
டெயினர் தந்த வெய்ம்மா னெறிதசைப்
பைஞ்ஞிணம் பெருத்த பசுவெள் ளமலை
வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய

---

1. "ஒளிறுவாட் பொருப்பன்" பரி. ௨௨: 1.

2. கண் வெளிறுபோதல்: "நீளிடை யத்த நோக்கி வாளற்றுக், கண்ணும் காட்சி தௌவின" (நற். ௫௧௭); "என் கண்ணே, நோக்கி

நோக்கி வாளிழந் தனவே" (குறுந். ௪௪); "கோலஞ் செய்பவர் கோல வெறிப்பினுன், மாலை வண்டின மாலைக்கண் கொண்டவே" (சீவக. 2397.) திரங்கல் - உலர்தல்; "நிழலிடம் பெறாது, மடமா னம்பிணை மறியொடு திரங்க" ஐங்குறு. ௩௨௯.

1 - 2. "அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்து நோக்கிப், புகத் தாம் பெறாஅர் புறங்கடை பற்றி, மிகத்தாம் வருந்தி யிருப்பரே மேலைத், தவத்தாற் றவஞ்செய்யா தார்" நாலடி. 31.

6. "நணிநணித் தாயினுஞ் சேஎய்ச் சேய்த்து" பரி. ௧௭ : 25.

9. "களவுப்புளி" (புறநா. ௩௯௨); "களவும் புளித்தன" அகநா. ௩௯௪.

10. புறநா. ௧௧௫ : 3 - 4.

11. "காவி னுதிர்ந்தன கருங்கனி நாவல்" மலைபடு. 135.

10 - 11. எக்கர்...நாவல் : மணி. ௧௭ : 25 - 30, 34.

14. "ஊன்சோற் றமலை" புறநா. ௩௩ : 14.

14 - 5. "செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்" குறள், 86.

44



இரும்பனங் குடையின் மிசையும்
பெரும்புலர் வைகறைச் சீர்சா லாதே.

திணையும் துறையும் அவை.

மலிகிழான் காரியாதியை ஆவூர் மூலங்கிழார் பாடியது.

இ - ள்.—விளங்கிய வாளையுடைய வேந்தரது ஒள்ளிய விளக்கத் தினையுடைய உயர்ந்த கோயிற்கண் கண்ணொளி கெடப் பலநாள் நின்று உலர்ந்து அவ்விடத்துப்பாடிப்பெற்ற பொற்படையணிந்த யானை, தமக்குச் சிறந்தாராயின் எல்லாரும் எளிதிற் புகப்பெறுவர், போராயின் திங்களாலும் நுழையப்படாத பொறிகளைப்பொருந்திய இட்டிய வாயிலையுடைத்தாய்க் கள்ளை ஒருவர்க்கொருவர் மாறுமாருக நீட்டிட ஒன்றற்கொன்று அணித்தா யிருந்த குறிய பல அரணின்கண்ணேயிருந்து அக்கள்ளை நிரம்பவுண்டு காலங்கழித்துப் பின்னைச் செருக்கினல் விடாய்மிக்குப் புளிச்சுவையை விரும்பிய மதத்தாற்சிவந்த கண்ணையுடைய ஆண்மக்கள் இனிய புளிப்பை யுடைய களாப்பழத்துடனே துடரிப்பழத்தைத் தின்று வெறுப்பிற் கரை மரத்துப் பைந்தேன் அரித்தொழுகுகின்ற நல்ல கான்யாற்றினது மணற் குன்றின்கண்ணேயேறிக் கரிய நாவற்பழத்தைப்பறித்து இருந்துண்ணும் பெரிய பெயரையுடையனாகிய ஆதியினது, பிணங்கிய அரில்பட்ட காட்டையுடைய குடநாட்டின்கண் மறவர் எய்து கொடுவரப்பட்ட எய்ப்பன்றியினது கடியப்பட்ட தசையினது செவ்வியையுடைய நிணமிக்க புதிய வெண்சோற்றுக்கட்டியை வருவார்க்கெல்லாம் ஒப்பக்கொடுவந்து சொரியப் பெரிய பனையோலையானியன்ற குடையிலே நுகரும் பெரிய புலர்ச்சியையுடைய விடியற்காலத்துச்சீருக்கு நிகரொவ்வாது.—எ - று.

எந்திரப்புழையையுடைய நணிநணியிருந்த குறும்பிற் கண்மாறு நீட்டத் ததும்ப உண்டு வைகிப் புளிச்சுவைவேட்ட ஆடவர் முனையின் எக்கரேறியிருந்து நாவற்கனி கொய்து உண்ணுமென வியையும்.

பாடிப்பெற்ற யானையும் பன்னாள்திரங்கிப் பெற்றமையிற் பனங் குடையின் மிசையும் வைகறைச்சீர் சாலாதென்றார்.

வெளிறுகண்போகப்பாடியெனக்கூட்டி, வெண்மை இடத்தினின் றும் நீங்கப் பாடியெனினும் அமையும்.

---

16. பனங்குடை - பனையோலையாற்செய்யப்பட்ட உண்கலம்; புறநா. ஙருஉ; "பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி" (நற். உருங : 7); "வேணீ ருண்ட குடையோ ரன்னர்" (கலி. உங); "ஆறுசென் மாக்கள் சோறு பொதி வெண்குடை" (அகநா. கஉக); "குடைகலனு, உப்பிலி வெந்தை தின்று" நாலடி. 289.



வைகறைச் சீர்சாலாதென்றது, அக்காலத்து அவன்செய்யும் சிறப்பினை நோக்கி.

'கைமாறு நீட்டி கணிகணி யிருந்து, குறும்பல் குறும்பிற் றதும்ப உண்டுவைகி' என்று பாடமோதுவாரும் உளர். (கஎஎ)

---

(கஎஅ) கந்துமுனிந் துயிர்க்கும் யானையொடு பணைமுனிந்து
காலியற் புரவி யாலு மாங்கண்
மணன்மலி முற்றம் புக்க சான்றோர்
உண்ணா ராயினுந் தன்னொடு சூளுற்
றுண்மென விரக்கும் பெரும்பெயர்ச் சாத்தன்
ஈண்டோ வின்சா யலனே வேண்டார்

எறிபடை மயங்கிய வெருவரு ஞாட்பிற்
கள்ளுடைக் கலத்த ருள்ளூர்க் கூறிய
நெடுமொழி மறந்த சிறுபே ராளர்
அஞ்சி நீங்குங் காலை
ஏம மாகத் தான்முந் துறுமே.

திணை - வாகை; துறை - வல்லாண்முல்லை.

*பாண்டியன் கீரஞ்சாத்தனை அவர் பாடியது.

---

1. புறநா. ௨௫ : 1 - 2.

2. "காலியக் கன்ன கதழ்பரி கடைஇ" மதுரை. 440.

1 - 2. "பணைநிலைப் புரவி யாலு மோதையும்" (சிலப். ௧௫ : 147); "பணைநிலைப் புரவி பலவெழுந் தால" மணி. ௭ : 117.

4 - 5. "உண்ணா நோன்பி தன்னொடு சூளுற், றுண்மென விரக்கு மோர் களிமகன்" மணி. ௫ : 102 - 3.

3 - 5. "இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி, வேளாண்மை செய்தற் பொருட்டு" குறள், 81.

7. மயங்கிய ஞாட்பு : புறநா. ௫௪௫ : 17; "மயங்கமர்" (கலி. ௫௧); "கழுமிய ஞாட்பு" களவழி. 11.

9. நெடுமொழி : புறநா. ௱௪ : 9, ௫௭௬ : 22. "சொல்லுத லியார்க்கு மெளிய வரியவாஞ், சொல்லிய வண்ணஞ் செயல்" குறள், 664.

11. "அழிபடை தாங்கல்" சிறுபாண். 211.

9 - 11. புறநா. ௱௪, ௧௭௦ : 14 - 7.

பி - ம். *பாண்டிக்குதிரைச்சாக்கையனை அவர் பாடியது.

இ - ள்.—கம்பத்தை வெறுத்து நெட்டுயிர்ப்புக் கொள்ளும் யானையோடு பந்தியை வெறுத்துக் காற்றுட்போலும் இயல்புடைய குதிரை ஆலிக்கும் அவ்விடத்து இடுமணல் மிக்க முற்றத்தின்கட் புக்க சான்றோர் அப்பொழுது உண்ணாராயினும் தன்னுடனே சார்த்திச் சூளுற்று உண்மினென்று அவரை வேண்டிக்கொள்ளும் பெரிய பெருமையுடைய சாத்தன் எம்போல்வாரிடத்து இனிய மென்மையையுடையன்; இங்ஙனம் மெல்லியனாயினும் விரும்பாதார் எறியும் படைக்கலம் தம்மிற்கலந்த அஞ்சத்தக்க போரின்கண் வீரபானத்தையுடைய கலத்தினராய் அதனையுடைய செருக்கான் ஊர்க்குள்ளே யிருந்து சொல்லிய வீரம் மேம்பட்ட வார்த்தையைப் போரின்கண் மறந்த சிறிய பேராண்மையை யுடையோர் போர்க்களத்து அஞ்சிப் புறங்கொடுத்து ஓடுங்காலத்து அவர்க்கு அரணாகத் தான் தன்வலியான் முந்துற்று நிற்டன்.—எ - று.

நெடுமொழி மொழிதலாற் பேராண்மையும், பின் அதனை மறத்தலாற் சிறுமையுமுடைமையின், சிறுபேராளரென்றார்.

'நெடுமொழி மறந்த' என்பதூஉம் பாடம். (களஅ)

---

(களக) ஞால மீமிசை வள்ளியோர் மாய்ந்தென
ஏலாது கவிழ்ந்தவென் னிரவன் மண்டை
மலர்ப்போர் யாரென வினவலின், மலைந்தோர்

விசிபிணி முரசமொடு மண்பல தந்த
திருவீழ் நுண்பூட் பாண்டியன் மறவன்,
படைவேண்டுவழி வாளுதவியும்
வினைவேண்டுவழி யறிவுதவியும்
வேண்டுப வேண்டுப வேந்தன் றேஎத்
தசைநுகம் படாஅ வாண்டகை யுள்ளத்துத்
தோலா நல்லிசை நாலை கிழவன்

---

1 - 3. புறநா. ௧0௫ : 3, அடிக்.

4 - 5. "நிலந்தந்த பேருதவிப், பொலந்தார் மார்பி னெடியோன்" (மதுரை. 60 - 61); "நிலந்தரு திருவிற் பாண்டியன்" தொல். சிறப்புப்.

6 - 8. "முறை வேண்டுநர்க்குங் குறைவேண்டு நர்க்கும், வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி" பெரும்பாண். 443 - 4.

10. தோலா நல்லிசை : புறநா. ௩௯ : 10.



பருந்துபசி தீர்க்கு நற்போர்த்
திருந்துவே லெகற் கூறினர் பலரே.

திணையும் துறையும் அவை.

நாலைகிழவன் நாகனை* வடநெடுந்தத்தனார் பாடியது.

இ - ள்.—உலகத்தின்மேல் வண்மையுடையோர் இரந்தாராகப் பிறர்பால் ஏலாது கவிழ்ந்த எனது இரத்தலையுடைய மண்டையை ஏற்கும் பரிசு இட்டு மலர்த்தவல்லார் யாரென்று கேட்டலின், தன்னொடு மாறுபட்டோரது வலித்துப் பிணிக்கப்பட்ட முரசத்தோடு மண் பலவற்றையும் கொண்ட திருமகள் விரும்பிய நுண்ணிய தொழில் பொருந்திய ஆபரணத்தையுடைய பாண்டியன் மறவன், அவனுக்குப் படைவேண்டிய விடத்து வாட்போரை யுதவியும் அரசியற்கேற்ற கருமச்சூழ்ச்சி வேண்டியவிடத்து அமைச்சியலோடு நின்று அறிவு உதவியும் இவ்வாறு வேண்டுவன அவ்வரசனிடத்து உதவித் தான் பூண்ட நுகம் ஒருபாற் கோடித் தளராமற் செலுத்தும் பகடுபோல ஆண்மையினும் சூழ்ச்சியினுந் தளராத ஆண்மைக்கூறுபாடு பொருந்திய ஊக்கத்தினையும் தொலாத நல்ல புகழையுமுடைய நாலைகிழவன், பருந்தினது பசிதீர்க்கும் நல்ல போரைச் செய்யும் திருந்திய வேலையுடைய நாகனைப் பலரும் சொன்னார்.—எ - று.

பருந்து பசிதீர்க்கும் வேலென இயையும். (கஎகூ)

---

பி - ம். *வடமநெடுநத்தனார், வடமநெடுந்தச்சனார்.

---

(க௮௦) நிரப்பாது கொடுக்குஞ் செல்வமு மிலனே
இல்லென மறுக்குஞ் சிறுமையு மிலனே
இறையுறு விழுமந் தாங்கி யமரகத்
திரும்புசுவைக் கொண்ட விழுப்பு ணோய்தீர்ந்து
மருந்துகொண் மரத்தின் வாள்வடு மயங்கி

2. புறநா. ௨௦௪ : 2; "இல்லென விரந்தோர்க்கொன் றீயாமை யிளிவு" (கலி. ௨); "உள்ள, திரப்போ னின்மை கண்டும், காப்போன் சிறுமை யானுறு கவ்வே" தகடூர். "கலிமாஞேயே" என்னும் பாடல்.

4. "இரும்புமேய்ந் தொழிந்த மிச்சில் வரைமார்பன்", "இரும்புண்டு மிகுத்த மார்பு", "இரும்பெச்சிற் படுத்தமார்பர்" சீவக. 1790, 2281, 2353.

5. "மரஞ்சா மருந்துங் கொள்ளார் மாந்தர்" (நற். ௨௨௬); "மரமுதல் சாய மருந்துகொண் டாங்கு" (பெருங். க. 37 : 188); "பால்கொண்ட வத்தி யெனவே யுடல்வடுப் பட்டவெமர்" வேங்கைக் கோவை, 99.

தொல். உவம. சூ. 20, பேர். மேற்.



வடுவின்றி வடிந்த யாக்கையன் கொடையெதிர்ந்
*தீர்ந்தை யோனே பாண்பசிப் பகைஞன்
இன்மை தீர வேண்டி னெம்மொடு
நீயும் வம்மோ முதுவா யிரவல
யாந்தன் னிரக்குங் காலைத் தானெம்
உண்ணா †மருங்குல் காட்டித் தன்னூர்க்
கருங்கைக் கொல்லனை யிரக்கும்
திருந்திலை நெடுவேல் வடிந்திசி னெனவே.[1]

திணையும் துறையும் அவை; துறை - பாணாற்றுப்படையுமாம்.

‡ஊர்ந்தூர்கிழான் தோயன்மாறனைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனூர் பாடியது.

இ - ள்.—நாடோறும் தொடர்ந்து கொடுக்கும் செல்வமு முடையானல்லன்; இங்ஙனம் வறிஞனாயினும் இரந்தோர்க்கு இல்லை

---

5 - 6. "அலகில் வெற்றியு முரிமையு மிவையென வவய வத்தினி லெழுதிய வறிகுறி யவையெனப்பல வடுநிரை யுடையவர்" (கலிங்கத். 340) ; "பயில்வடுப் பொலிந்த யாக்கை வேடர்தம் பதியா நாகற்கு" (பெரிய. கண்ணப்ப. 12); "கொடுஞ்சமரிற் பட்ட வடுத்துளைத்த கல்ல பிராமம்" தனிப்பாடல்.

7. புறநா. கஎரு : 11.

'ஈர்ந்தையோனே...ட்கைஞனென்புழி, ஈர்ந்தையோனென்னுமுற் றிற்கு முடிபாகிய பகைஞனென்னும் பெயரை இடையினின்றசொல் விசேடித்து நின்றது' தொல். எச்ச. சூ. 59, ந.

9. முதுவாயிரவல : புறநா. சஅ : 7, அடிக்.

11. உண்ணுமருங்குல் : புறநா. உகூ0 : 6.

12. புறநா. கஎ0 : 15.

12 - 3. புறநா. ருகஉ : 3.

[1]மு. தும்பைத் திணைக்குரிய துறைகளுள், 'தார்நிலை' என்பதற்கு மேற்கோள்காட்டி, 'இதனுள், டாணன் அதுதோன்றப் புகழ்ந்தவாறு காண்க' என்பர் (தொல். புறத்திணை. சூ. 14, இளம்); 'நிரப்பாது கொடுக்குமென்னும் புறப்பாட்டினுள் இறையுறு விழுமந்தாங்கியென்பதும் அது' டை. டை. டை. 17, ந.

பி - ம். * ஈரந்தையோன், ஈந்தையோன். † மருங்கு.

‡ஈரந்தூர்கிழான் கோயமான்.

யெனச் சொல்லி மறுக்கும் புன்மையுமுடையனல்லன்; தன் ஆகத்துக்கு வந்துற்ற போரானமைந்த இடும்பைகளைத் தான் பொறுத்து அந்தப் போரின்கட் படைக்கலங்கள் சுவைத்துக்கொண்ட சிறந்த புண்ணாகிய நோய் தீர்ந்து, மருந்துவாங்கிக் கொள்ளப்பட்ட மரம்போல வாளுற்ற வடு ஒன்றோடொன்று விரவி ஆண்மைக்குறைபாடின்மையின் வசையின்றி அழகுபெற்ற உடம்பையுடையனாய் வண்மையை ஏற்றுக்கொண்டு ஈர்ந்தை யென்னும் ஊரின்கண்ணேயிருந்தான், பாணரது பசிக்குப் பகைவனாய வன்; நினது வறுமை நீங்கவேண்டுவையாயின் எம்முடனே நீயும் வாராய், முதிய வாயையுடைய இரவல! யாம் தன்னை இரக்கும்பொழுது தான் எம்முடைய உண்ணாத மருங்கினைக் காட்டித் தன்னுடைய ஊரின் வலிய கையினையுடைய கொல்லனை வேண்டிக்கொள்ளாநிற்கும் அவன்; திருந்தின இலையையுடைய நெடிய வேலை வடிப்பாயாகவெனச் சொல்லி.—எ - று.

பாண்பசிப்பகைஞன் ஈர்ந்தையோன்; அவன் தன்னை யாமிரக்குங் காலைத் தான் எம்மருங்கைக்காட்டி வேலைவடித்திசினெனக் கொல்லனை யிரக்கும்; இரவல! இன்மை தீரவேண்டின், எம்மொடு நீயும் வருவாயாக வெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

இரக்குமென்று இழித்துக்கூறியது, பலகாலும் வடிக்கவேண்டுதலானும் பசிக்கு உதவவேண்டுதலானும். (௧௮௦)

(கஅக) மன்ற விளவின் மனைவீழ் வெள்ளில்
கருங்க ணெயிற்றி காதன் மகனொடு
கான விரும்பிடிக் கன்றுதலைக் கொள்ளும்
பெருங்குறும் புடுத்த வன்புல விருக்கைப்
*புலாஅ வம்பிற் போரருங் கடிமிளை

1. மன்றமரம் : புறநா. எசு, ௩௭க, ௩௭ச.

4. புறநா. உக : 6; "வன்புலக் காட்டுநாட் டதுவே" நற். ௫௯.

1 - 4. யானையின் கன்றும் குறத்திமகனும் : "முழந்தா ளிரும்பிடிக் கயந்தலைக் குழவி, நறவுமலி பாக்கத்துக் குறமக ளீன்ற, குறியிறைப் புதல்வரொடு மறுவந் தோடி" குறுந். ௩௯௪ : 1 - 3.

5. புலாவம்பு : "புலவுநுனைப் பகழி" (பெரும்பாண். 269); "புலவுக் கணை" (பு. வே. 10); பு. வே. 240. போரருங்கடிமிளை : "கடிமிளைக் குண்டுகிடங்கின், னெடுமதி னிரைஞாயி, லம்புடை யாரெயில்" (பதிற். ௨௦ : 17 - 9); "அருங்குழுமிளை" மதுரை. 64.

பி - ம். *புலாஅலம்பிற்.



வலாஅ ரோனே வாய்வாட் பண்ணன்
உண்ணு வறுங்கடம் புய்தல் வேண்டின்
இன்னே சென்மதி நீயே சென்றவன்
பகைப்புலம் படரா வளவைநின்
பசிப்பகைப் பரிசில் காட்டினை கொளற்கே.

திணையும் துறையும் அவை.

வல்லார்கிழான் பண்ணனைச் சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந் தும்பியார் பாடியது.

இ - ள்.—மன்றத்தின்கண்ணே நிற்கப்பட்ட விளாவினது மனை யிடத்து வீழ்ந்த விளாம்பழத்தைக் கரிய கண்ணையுடைய மறத்தி காதன் மகனுடனே காட்டுவாழுங் கரியபிடியினது கன்றுவந்து எடுக்கும் பெரிய அரண்சூழ்ந்த வலிய நிலத்தின்கண் ஊராகிய இருப்பையும் புலால்நாறும் அம்பினையும் பொருதற்கரிய காவற்காட்டினையுமுடைய வலாரென்கிற ஊரிடத்தான், வாய்த்தவாளையுடைய பண்ணன்; நினது உண்ணப்பெறாத வறிய சுற்றம் உண்டு பிழைத்தல் வேண்டுவையாயின், நீ இப்பொழுதே செல்வாயாக; போய் அவன் வேற்றுப்புலத்துச் செல்லாத எல்லையில் நினது பசிக்குப் பகையாகிய பரிசிலை நினது வறுமையைக் காட்டினை யாய்க் கொள்ளுதற்கு.—எ - று.

'அம்பிற் போரருங்கடிமிளை' என்பதற்கு அம்பாற் பொருதற்கரிய கடிமிளையெனினும் அமையும்.

காட்டிப் பரிசில் கொள்ளுதற்கு இன்னே சென்மதியெனக்கூட்டுக. மதி: முன்னிலை விளக்கும் அசை. (கஅக)

---

6. புறநா. கஅ௦ : 7.

7 - 8. "பாசம், பசிப்ப மடியைக் கொளலும்" திரி. 20.

9 - 10. புறநா. கசுக : 14 - 5.

---

(கஅஉ) உண்டா லம்மவிவ் வுலக மிந்திரர்

அமிழ்த மியைவ தாயினு மினிதெனத்

1. 'அம்ம' என்னும் இடைச்சொல் அசைநிலையாக வந்ததற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. 173, தெய்வச்.

1 - 2. "இந்திரர்க்கும் புகழ்வரிதே" சீவக. 173.

'இந்திர குமரர்' என்பதற்குத் தேவகுமரரென்று பொருள்கூறி இவ்வடிகளை மேற்கோள் காட்டினர்; சிலப். ௧௬ : 172, அடியார்,



தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே.[1]

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக்காஞ்சி.
கடலுண்மாய்ந்த இளம்பெருவழுதி பாட்டு.

இ - ள்.—உண்டேகாண், இவ்வுலகம்; இந்திரர்க்குரிய அமிழ்தம் தெய்வத்தானாதல் தவத்தானாதல் தமக்கு வந்துகூடிற்றாயினும் அதனை

2 - 3. "இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்" (பதிற். ௧௮); "மருந்தே யாயினும் விருந்தோ டுண்க" கொன்றைவேந்தன்.

4. "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ, தஞ்ச லறிவார் தொழில்" (குறள், 428) ; "அறிவ தறிந்தடங்கி யஞ்சுவ தஞ்சி, யுறுவ துலகுவப்பச் செய்து - பெறுவதனா, லின்புற்று வாழு மியல்பினா ரெஞ்ஞான்றுந், துன்புற்று வாழ்த லரிது" நாலடி. 74.

5 - 6. "வாணன் வைத்த விழுநிதி பெறினும், பழிநமக் கெழுக வென்னாய் விழுநிதி, ஈத லுள்ளமொ டிசைவேட் குவையே" (மதுரை. 203 - 5) ; "அடிபிறக்கிடி லமரர்த முலகொடிவ் வுலகு கைப்படு மெனினும தொழிபவர்.........உயிரை விற்றுறு புகழ்கொள வுழல்பவர்" கலிங்கத். 340.

8. "தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்" அகநா. ௫௪; மணி. ௫ : 73.

9. "பிறர்க்கற முயலும் பெரியோய்" மணி. ௧௧ : 63.

8 - 9. "தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு, மன்னுயிர் முதல்வன்" (மணி. ௨௫ : 116 - 7); "தனக்கென், றொன்றானு முள்ளான் பிறர்க்கே யுறுதிக் குழந்தான்" குண்டல. கடவுள்.

[1]மு. பகட்டினானும் ஆவினானும் துகட்டபு சிறப்பிற் சான்றோர் பக்கமென்பதற்கு இச்செய்யுளை மேற்கோள்காட்டி, நோன்றாட் பிறர்க் கென முயலுநர் வணிகவேளாளரென்பர் இளம்பூரணர் (தொல். புறத் திணை. சூ. 17) ; 'உண்டாலம்ம..............உண்மையானே : இது, வகைபடமுன்னோர் கூறிய செந்துறைப் பாடாண்பாட்டு; முனிவர் கூறு மாறுபோலக் கூறிப் பரவலும் புகழ்ச்சியுங் கூறாது மறுமைப்பயன் பிறர்க்கு உறுதி பயப்பக் கூறலிற் கைக்கிளைப்புறனாய்ப் பாடாணாயிற்று' ஷை. ஷை. ஷை. 27, ந.

45

இனிதென்று கொண்டு தனித்து உண்டலுமிலர்; யாரோடும் வெறுப்பிலர்; பிறர் அஞ்சத்தகும் துன்பத்திற்குத் தாமும் அஞ்சி அதுதீர்த்தற்பொருட்டு மடிந்திருத்தலுமிலர்; புகழ்கிடைக்கின் தம்முடைய உயிரையுங்கொடுப்பர்; பழியெனின் அதனுடன் உலகமுழுதும்பெறினும் கொள்ளார்; மனக்கவற்சி யில்லார்; அப்பெற்றித்தாகிய மாட்சிமைப்பட்ட அத்தன்மையராகித் தமக் கென்று முயலாத வலிய முயற்சியையுடைய பிறர்பொருட்டென முயல் வார் உண்டாதலான்.— எ - று.

அஞ்சித் துஞ்சலுமிலரென மாறிக்கூட்டுக.

இவ்வுலகம், பிறர்க்கெனமுயலுநருண்மையான் உண்டெனக்கூட்டுக.

ஆலும் அம்மவும், அசை. (கஅஉ)

---

(கஅங) உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே
பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே.[1]

திணையும் துறையும் அவை.
பாண்டியன் ஆரியப்படை *கடந்த நெடுஞ்செழியன் பாட்டு.

---

2. குறள், 395, பரிமேல். உரைநடை.

5 - 6. "ஒருகுடியிற், கல்லாது மூத்தானைக் கைவிடு கற்று, ளிளமைபா ராட்டு முலகு" நான்மணி. 65.

7. "அறிவுடை யொருவனை யரசனும் விரும்பும்" வெற்றிவேற்கை.

8 - 10. "தோணி யியக்குவான் றொல்லை வருணத்துக், காணிற் கடைப்பட்டா னென்றிகழார் - காணு, யவன்றுணையா வாறுபோ யற்றே நூல், கற்ற, மகன்றுணையா நல்ல கொளல்" நாலடி. 136.

'வேற்றுமை...படுமே: இது வேதமொழிந்த கல்வியோதல் கூறிற்று' தொல். புறத்திணை. சூ. 16, இளம்.

1ழ. "சிறப்பின் பாலார் மக்க ளல்லார், மறப்பின் பாலார் மன்னர்க்கு மணி. உரு : 31 - 2.

'உற்றுழி...படுமே: இது வேளாளர் ஓதலின் சிறப்புக் கூறியது' தொல். புறத்திணை. சூ. 20, ந.

பி - ம். *தந்த.



இ - ள்.—*தன்னுசிரியற்கு ஒருறுகட்டநேற்றவிடத்து அது தீர்த்தற்கு வந்து உதவியும் மிக்கபொருளைக் கொடுத்தும் வழிபாட்டுநிலைமையை வெறாது கற்றல் ஒருவற்கு அழகிது; அதற்கு என்னை காரணமெனின்: பிறப்பு ஒருதன்மையாகிய ஒருவயிற்றுப்பிறந்தோருள்ளும் கல்விவிசேடத்

தால் தாயும் மனம் வேறுபடும்; ஒருகுடியின்கட் பிறந்த பலருள்ளும் மூத்தோன் வருகவென்னாது அவருள் அறிவுடையோன் சென்ற நெறியே அரசனும் செல்லும்; வேறுபாடு தெரியப்பட்ட நாற்குலத்துள்ளும் கீழ்க்குலத்துள் ஒருவன் கற்பின் மேற்குலத்துள் ஒருவனும் இவன் கீழ்க்குலத்தானென்று பாராது கல்விப்பொருட்டு அவனிடத்தே சென்று வழிபடுவனாதலான்.—எ - று. (கஅங)

---

பி - ம். *தம்மாசிரியர்க்கு.

---

(கஅச) காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்;
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரி தகெடுக்கும்;
அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்;
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்

---

1. நெற்கவளம் : புறநா. சச : 2, அடிக்.

2. மா - ஒருவகையளவை; "மாமாவின் வயின்வயினெல்" பொருந. 180.

4. வேற்றுமைக்கண் யகரவீற்றின்முன் பகரம் இயல்பாயதற்கு மேற்கோள்; நன். சூ. 223, மயிலை; நன். வி. சூ. 224; இ. வி. சூ. 133, உரை.

5. "நல்லற நெறிநிறீஇ யுலகாண்ட வரசன்" கலி. கஉகூ : 4.

5 - 6. "குடியோம்பிக், கொள்ளுமா கொள்வோற்குக் காண்டுமே மாநிதியம், வெள்ளத்தின் மேலும் பல" நீதிநெறி. 29.

8. "கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்" (பெரும்பாண். 21); "கல்லென் சுற்றக் கடுங்குர லவித்து" குறிஞ்சி. 151.



யானை புக்க புலம்போலத்
தானு முண்ணு னுலகமுங் கெடுமே.[1]

*திணை - பாடாண்டிணை; துறை - செவியறிவுறூஉ.

பாண்டியன் அறிவுடைநம்பியுழைச்சென்ற பிசிராந்தையார் பாடியது.

இ - ள்.—காய்த்த நெல்லையறுத்துக் கவளமாகக் கொள்ளின் ஒரு மாவிற்குறைந்த நிலத்திற்கதிரும் பலநாளைக்காகும்; நூறுசெய்யாயினும் யானை தனித்துப்புக்கு உண்ணுமாயின் அதனது வாயின்கட்புகுந்த நெல்லி னும் கால் மிகவும் கெடுக்கும்; அப்பெற்றியே அறிவுடைய அரசன் இறை கொள்ளும் நெறியை அறிந்து கொள்ளின் அவன்நாடு கோடிபொருளினை ஈட்டிக்கொடுத்துத் தானும் மிகவுந் தழைக்கும்; வேந்தன் அறிவால் மெல் லியனாகி நாடோறும் தாமறியாத உறுதிகூறாது [2]அவன்விரும்புவதனையே தானுங் கூறும் ஆரவாரத்தையுடைய சுற்றத்தோடு கூடி அன்புகெடக் கொள்ளும் பொருட்டொகுதியை விரும்பின், அந்த யானை புக்க புலம் போலத் தானும் உண்ணப்பெறான், உலகமும் கெடும்.—எ - று.

பரிவுதவவென்றோதி, அக்குடிகட்கு வருத்தமிக வென்றுரைப்பாரும் உளர்.

'மெல்லியன் கிழவ னாகி' என்றும் பாடம். (கஅச)

---

5 - 11. புறநா. எகு.

[1]ம. "வாய்ப்படுங் கேடு மின்றாம் வரிசையி னறிந்து நாளுங், காய்த்தநெற் கவளந் தீற்றிற் களிறுதான் கழனி மேயின், வாய்ப்பட லின்றிப் பொன்றும் வல்லனாய் மன்னன் கொள்ளின், நீத்தநீர் ஞால மெல்லா நிதிநின்று சுரக்கு மன்றே" (சீவக. 2907); "மாநி ரப்புறாச் சிறு புலப் பயன்களும் வயக்கரி நிலைநாடித், தான ளித்திடி னடுபசி கெடுமது சார்ந்துபுக் குணின்வேலி,யான தென்னினும் வாலினுங் காலினு மழிந்து வாய் புகலின்றிப், போன தாமது போன்றதவ் விறைமகன் புவியெலாம் பொலிவற்றே" சீகாழித்தலபுராணம், பூதவிமோசனமானவத்தியாயம், 7.

வாயுறைவாழ்த்திற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 29, இளம்.; ஷை. ஷை. ஷை. 35, ந.

[2] "இகழி னிகழ்ந்தாங் கிறைமக னொன்று, புகழினு மொக்கப் புகழ்ப" நீதிநெறி. 44.

பி - ம். * திணையும் துறையுமவை.



(கஅரு) கால்பார் கோத்து *ஞாலத் திரிக்கும்
காவற் சாகாடு [1]கைப்போன் மாணின்
ஊறின் றாகி யாறினிது படுமே
உய்த்த றேற்றா னாயின் வைகலும்
பகைக்கூ ழள்ளற் பட்டு
மிகப்பஃ றீநோய் தலைத்தலைத் தருமே.[2]

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

தொண்டைமான் இளந்திரையன் பாட்டு.

இ - ள்.—உருளையையும் பாரையுங் கோத்து உலகின்கண்ணே செலுத்தும் காப்புடைய சகடந்தான் அதனைச் செலுத்துவோன் மாட்சிமைப்படின் ஊறுபாடில்லையாய் வழியை இனிதாகச் செல்லும்; அவன் அதனை இனிதாகச் செலுத்துதலைத் தெளியமாட்டானாயின் அது நாடோறும் பகையாகிய செறிந்த சேற்றிலே அழுந்தி மிகப்பல தீய துன்பத்தை மேன்மேலும் உண்டாக்கும்.—எ - று.

இஃது, உலகாளுமுறைமை கூறுதலேயுட்கொண்டு சகடம்செல்லுமாற்றைக் கூறினமையின், நுவலாநுவற்சியென்னும் அலங்காரமாயிற்று; ஒட்டென்று கூறுவாரும் உளர்.

அன்றி இதற்கு உலகத்தின்கண்ணே உலகியற்கையை நிறுத்தி அதனோடு ஞாலத்தின்கண்ணே செலுத்தப்படும் காப்பாகிய சகடம் தன்னைச் செலுத்துவோன் மாட்சிமைப்படின் தனக்கு ஓரிடையூறுமின்றாகி நெறிமுறைமையே நடக்கும்; அதனைச் செலுத்துதல் தெளியானாயின் அச்சாகாடு நாளும் மறுதலையென்னும் செறிந்த அள்ளலிலே அகப்பட்டுத் தனக்கும் தன்கீழ்வாழ்வார்க்கும் மிகப்பலவாகிய தீக்கேட்டினை மேன்மேலே தருமெனவும் பொருளுரைப்பர்; இப்பொருட்குப் பாலொன்றது, உலகியற்கையை.

கால் - உருளை. (கஅரு)

---

2. காவற்சாகாடுகைப்போன்: புறநா. ௬௦ : 7-9, உ௫௬ : 2; 'அவையாறனுள்ளும் காவற்சாகாடு கைத்தற்கண் அவ்வரசர்க்கு இணையாய அமைச்சனதியல்பு' குறள், 64 - ஆம் அதி. அவ.

[1]கைப்போன் - செலுத்துவோன்.

[2]மு. "ஆர்வலஞ் சூழ்ந்த வாழி யலைமணித் தேரை வல்லா, னேர்நிலத் தூரு மாயி னீடுபல் காலஞ் செல்லு, மூர்நில மறிந்த தேற்றா தூருமேன் முறிந்து வீழுந், தார்நில மார்ப வேந்தர் தன்மையு மன்ன தாமே" சீவக. 2909.

பி - ம். *ஞாலத்தியங்கும்.



(கஅசு) நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே

மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், *யா னுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே.1

திணையும் துறையும் அவை.

†மோசிகீரனார் பாடியது.

இ - ள்.—வேந்தனாகிய உயிரையுடைத்து, பரந்த இடத்தையுடைய உலகம்; அதனால், இவ்வுலகத்தார்க்கு நெல்லும் உயிரன்று; நீரும் உயிரன்று; யான் உயிரென்பதனை அறிகை வேலான் மிக்க படையை யுடைய அரசனுக்கு முறைமை.—எ - று.

மன்னனுயிர்த்தென்ற கருத்து: [2]உயிரையாக்கும் நெல்லும் நீரும் உளவாவது மன்னன் முறைசெய்து காப்பினென்றதாம். (கஅசு)

---

2. "உலகிற் கோருயிர்ப், பெற்றியான் பயாபதி யென்னும் பேருடைப், வெற்றிவேன் மணிமுடி வேந்தர் வேந்தனே" (சூளா. நகா. 16); "மன்னுயிர் ஞாலக் கின்னுயி ரொக்கு, மிறை" (பெருங். உ. 11 : 17 - 8); "உலகினுக் குயிரா யிருந்தன னிறைகுலோத் துங்கன்" திருவிளை. பழியஞ்சின. 44.

சிறப்பினால் உயர்திணை அஃறிணையானதற்கு மேற்கோள்; நன். சூ. 378, மயிலை; இ. வி. சூ. 299, உரை.

[1]மு. "நெல்லுயிர் மாந்தர்க் கெல்லா நீருயி ரிரண்டுஞ் செப்பிற், புல்லுயிர் புகைந்து பொங்கு முழங்கழ லிலங்கு வாட்கை, மல்லலஞ் சனிற்று மாலை வெண்குடை மன்னர் கண்டாய், நல்லுயிர் ஞாலந் தன்னு

ஞமவே ணம்பி யென்றான்" சீவக. 2908.

2. "இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட, பெயலும் விளையுளுந் தொக்கு" குறள், 545.

பி - ம்: * யாமுயிர். † மார்திமாதிரத்தனார்பாட்டு.

---

(௧௮௭) நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ

1. 'நாடாகொன்றோ காடாகொன்றோ வென்பனவற்றையும் நாடே யாக காடேயாக என இதன்பாற்படுத்துக; இவற்றுள் ஏவல் கண்ணாத தி இதுவெனவுணர்க' தொல். வினை. சூ. 29, ந.



எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே.

திணையும் துறையும் அவை.

ஔவையார் பாடியது.

இ - ள்.—நிலனே! நீ ஒன்றில் நாடேயாக; ஒன்றிற் காடேயாக; ஒன்றிற் பள்ளமேயாக; ஒன்றின் மேடேயாக; எவ்வாறாயினும் எவ்விடத்து நல்லர் ஆண்மக்கள் அவ்விடத்து நீயும் நல்லையல்லது, நினக் கென ஒரு நலமுடையையல்லை வாழி!—எ - று.

தீயநிலனேயாயினும் நல்லோருறையின் நன்றெனவும் நல்ல நிலனேயாயினும் தீயோருறையின் தீதெனவும், தன்னிடத்து வாழ்வோரியல் பல்லது தனக்கென ஓரியல்புடையதன்றென நிலத்தை இழித்துக் கூறுவதுபோல உலகத்தியற்கை கூறியவாறாயிற்று.

[1]ஒன்றேயென்பது, எண்ணிடைச்சொல். (௧௮௭)

---

3 - 4. "காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல், மீக்கூறு மன்ன னிலம்" குறள், 386.

[1] புறநா. ௩௨ : 2, ௭௧ : 16.

---

(௧௮௮) [1]படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்

---

1. படைப்பு : புறநா. ௨௨ : 30.

1 - 2. "தகைமாண் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப் பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க" (நாலடி. 2); 'இல்வாழ்க்கையைப் பல படைப்பாகிய செல்வத்தோடே நடத்தி', 'பலபடைப்பாகிய செல்வத்தோடே மிக்க கைப்பொருளையும் கொடுத்து' சிலப். ௨ : 84 - 90, கலி. ௯ : 54 - 75, அடியார்.

3. "தளர்நடைப் புதல்வனை" (ஐங். ௬௬); "தளர்பு தளர்போடும் பூங்கட் புதல்வன்", "குறுமொட்டு மூதாய் குறுகுறேடி" (அகநா. ௬௬)

௩௭௪); "குறுகுறு நடந்து செல்லும்" ஆனைக்கா. அகிலாண்ட. 8. ——'மொகு மொகு வென்பது இரட்டைக்கிளவி..... குறுகுறு நடந்து சிறுகை நீட்டி' (தக்க. 90, உரை. மேற்.); இரட்டைக்கிளவிக்கு மேற்கோள்; நன். சூ. 395, மயிலை; நன். வி. சூ. 396.



நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே[1].

திணையும் துறையும் அவை.

பாண்டியன் அறிவுடைநம்பி பாட்டு.

இ - ள்.—படைக்கப்படும் செல்வம் பலவற்றையும் படைத்துப் பலருடனே கூடவுண்ணும் உடைமை மிக்க செல்வத்தையுடையோராயினும் காலம் இடையே யுண்டாகக் குறுகக் குறுக நடந்துசென்று சிறிய கையை நீட்டிக் கலத்தின்கட் கிடந்ததனைத் தரையிலேயிட்டும் கூடப்பிசைந்து தோண்டியும் வாயாற் கவ்வியுங் கையால் துழாவியும் நெய்யையுடைய சோற்றை உடம்பின்கட்படச் சிதறியும் இங்ஙனம் அறிவை இன்பத்தான் மயக்கும் புதல்வரை இல்லாதார்க்குப் பயனாகிய முடிக்கப்படும் பொருளில்லை, தாம் உயிர்வாழும் நாளின்கண்.—எ - று.

தொட்டென்பதற்குக் கூடவாரிப்பிடித்தெனினும் அமையும்.

குறையென்பது, முடிக்கப்படுங்கால் முடிக்கப்படும்பொருள்.

இனிப் பயக்குறையுள்ளதென ஒருசொல் வருவித்துத் தாம் வாழும் நாளும் இல்லையென்று கூறுவாரும் உளர். (௧௮௮)

---

4 - 5. குறள், 64, பரிமேல். மேற்.

3 - 6. "முறியிளா முல்லை மெல்லரும் பன்ன மூரல்வெண் டயிரினை பொதிந்து, குறுகுறு நடந்து சிறுவர்வந் தீண்ட" பாகவத. ௬: விருந்தாவன. 9.

7. 'குறை - இன்றியமையாப்பொருள்; அது, 'பயக்குறையில்லைத் தாம் வாழு நாளே என்பதனானுமறிக' (குறள், 612, பரிமேல்.); 'பொருளைச் சொல் இன்றியமையாமையின், அதனைக் குறையென்றார்,...பயக் குறை...நாளே என்றாற்போல' தொல். உரி. சூ. 100, சே.

[1]மு. பொருளொடுபுணர்ந்தபக்கமென்பதில், 'புணர்ந்தபக்கமென்றதனாற் புதல்வர்ப்பெறுதலுங்கொள்க' என்று கூறி இதனை மேற்கோள் காட்டினர்; தொல். புறத்திணை. சூ. 17, இளம்.; ஷை. ஷை. ஷை. 21, ந.

---

(௧௮௯) தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்;

---

1. "திரைதரு முந்நீர் வளாஅக மெல்லாம்" கலி. ௧௪௬ : 28.

1 - 2. புறநா. ௮ : 1 - 5.

நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கும்
*உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே.

திணையும் துறையும் அவை.

மதுரைக் கணக்காயனார்மகனார் நக்கீரனார் பாடியது.

இ - ள்.—தெளிந்த நீராற் சூழப்பட்ட உலகமுழுதையும் பிற வேந்தர்க்குப் பொதுவாதலின்றித் தமக்கே உரித்தாக ஆண்டு வெண்கொற்றக் குடையால் நிழல்செய்த ஒருதன்மையையுடையோர்க்கும், இடையாமத்தும் நண்பகலும் துயிலானாய் விரைந்த செலவையுடைய மாக்களைப் படுக்கக் கருதிச் செல்லும் கல்வியில்லாத ஒருவனுக்கும் உண்ணப்படும்பொருள் நாழி, உடுக்கப்படுமவை இரண்டே; பிறவுமெல்லாம் ஒக்கும்; ஆதலாற் செல்வத்தாற் பெறும் பயனாவது கொடுத்தல்; செல்வத்தை யாமே நுகர்வேமென்று கருதின் தவறுவன பல.—எ - று.

பலவென்றது, அறம்பொருளின்பங்களை.

பகலை ஒருமாத்திரையென்றும், கடுமாவை யானையென்றும், கல்லாத ஒருவனைப் பாகனென்றும் உரைப்பாரும் உளர். (௧௮௯)

---

3. நடுநாள்யாமம்: "யாம நடுநாட் டுயில்கொண் டொளித்த" கலி. ௧௨௨ : 21.

“அரையிருள் யாமத்தும் பகலுந் துஞ்சார்” (சிலப். ௪ : 81, அடியார்.) என்பதற்கு மேற்கோள்.

5. “நாழி யரிசிக்கே நாம்”, “உண்பது நாழி யுடுப்பது நான்குமுழம்” நல்வழி. 19, 28.

வினைப்பெயர், செயப்படுபொருண்மேற் பெயராய்க் காலந் தோன்றி நின்றதற்கு மேற்கோள்; தொல். வேற்றுமை. சூ. 9, சல்; ந.

7 - 8. “வழங்கலுந் துய்த்தலுந் தேற்றுதான் பெற்ற, முழங்கு முரசுடைச் செல்வந் - தழங்கருவி, வேய்முற்றி முத்துதிரும் வெற்ப வதுவன்றோ, நாய்பெற்ற தெங்கம் பழம்” பழ. 151.

பி - ம். *உண்பவை நாழி யுடுப்பன.

---

(கஙo) விளைபதச் சீறிட நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டளை மல்க வைக்கும்





எலிமுயன் றனைய ராகி யுள்ளதம்
வளன்வலி யுறுக்கு முளமி லாளரொ
டியைந்த கேண்மை யில்லா கியரோ.
கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென

அன்றவ ணுண்ணா தாகி வழிநாட்
பெருமலை விடரகம் புலம்ப †வேட்டெழுந்
திருங்களிற் றொருத்த னல்வலம் படுக்கும்
புலிபசித் தன்ன மெலிவி லுள்ளத்
துரனுடை யாளர் கேண்மையொ
டியைந்த வைக லுளவா கியரோ.

திணையும் துறையும் அவை.

‡சோழன் நல்லுருத்திரன் பாட்டு.

இ - ள்.—விளைந்த செவ்வியையுடைய சிறிய இடத்தைப்பார்த்து விளைந்த கதிராகிய உணவைக்கொண்டு முழையின்கண்ணே நிறைய வைக்கும் எலிமுயன்றாற்போலும் சிறிய முயற்சியராகி உள்ள தம்முடைய செல்வத்தை நுகராது இறுகப் பிடிக்கும் உள்ளமிகுதியில்லாருடன் பொருந்திய நட்பு இல்லையாக; தறுகண்மையையுடைய கேழலாகிய பன்றி தனது இடப்பக்கத்தேபட வீழ்ந்ததாக, அன்று அவ்விடத்து உண்ணாதாகிப்

---

4 - 5. இவைபெண்ணுமரிச்சொல் கூட்டமென்னும் குறிப்புணர்த்துவதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 11, ந; இ. வி. சூ. 290, உரை.

10. புலிபசித்தாற் புல்லைத் தின்னாதென்பது ஒரு பழமொழி.

9 - 10. புறநா. உகஎ : 16 - 7; "நல்லா ரொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்தும், அல்லன செய்தற் கொருப்படார் - பல்பொறிய, செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னாவாம், பைங்கட் புனத்தபைங் கூழ்" நீதிநெறி. 61.

6 - 11. "தொடங்குவினை தவிரா வசைவி லனென்றட், கிடந்துயிர் மறுகுவ தாயினு மிடம்படின், வீழ்களிறு மிசையாப் புலியினுஞ் சிறந்த, தாழ்வி லுள்ளம்" (அகநா. ௨௧); "கடமா தொலைச்சிய கானுறை வேங்கை, யிடம்வீழ்ந்த துண்ணா திறக்கும்" (நாலடி. 300); "வாய்வ தாகிய பொருளினை வல்விரைந் தன்றே, ஆய்வ தாய்கில ராக்குவான் புகுந்தழிப் பார்போற், காய்வ தாகிய திறத்தினற் கதழ்ந்துதா யிடத்து, வீழ்வ தாக்கியுண் ணாதுபோ தவவிள வேங்கை" தணிகைப்புராணம். நாடு. 43.

பி - ம். *யுடையதம். †வேட்டெழுந் தாங்கிருங்களிற் றொருத்தல். ‡சோழனல்லுத்திரன்.



பிற்றைநாட் பெரிய மலையின்கண் தனது முழையிடம் தனிமைப்பட்ட உணவை விரும்பியெழுந்து பெரிய களிறாகிய ஒருத்தலை நல்லவலப்பக்கத்தே படப் படுக்கும் புலிபசித்தாற்போலும் குறைவில்லாத மேற்கோளையுடைய வலியையுடையோர் நட்போடு பொருந்திய நாட்கள் உளவாக.—எ-று.

சீறிடமென்றது, விளைந்து முற்றியபின் அறுப்பதற்கு முன்னாகிய இடத்தை.

இல்லாகியர், உளவாகியரென்பன ஈண்டு வியங்கோட்பொருளவாய் நின்றன. (௧௧0)

(கசுக) யாண்டுபல வாக நரையில வாகுதல்
யாங்கா கியரென வினவுதி ராயின்
மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்
யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கு மதன்றலை
ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழு மூரே.

திணையும் துறையும் அவை.

கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தானுழைச்சென்ற பிசிராந்தையாரை, 'கேட்குங்காலம் பலவாலோ? நரைநுமக்கில்லையாலோ?' என்ற சான்றோர்க்கு அவர் சொற்றது.

---

1 - 2. 'உலகின்புறத்தலாவது, இம்மிக்காரோடு தலைப்பெய்து அறியாதனவெல்லாம் அறியப்பெற்றேமென்றும், யாண்டு பலவாக நரையிலமாயினேமென்றும் உவத்தல்' குறள், 399, பரிமேல்.

3. மாண்டமனைவி: "மனைத்தக்க மாண்புடையளாகி", "மனைமாட்சியில்லாள்க ணில்லாயின்", "இல்லவள் மாண்பானால்" குறள். 51 - 3.

4. "மேகமே சேர்கொடை வேந்தமிர்து சேவகனும், ஆகவே செய்யி

ணமிர்து" (சிறுபஞ்ச. 4); "வெங்குருதி மல்க விழுப்புண் ணுகுதொறூஉ, மிங்குலிகஞ் சோரும் வரையேய்க்கும் - பைங்க, ணினம்போக்கி நின்று ரிகல்வாட்டி வேந்தன், மனம்போல வந்த மகன்" பு - வே 26.

5. "அல்லவை செய்தார்க் கறங்கூற்ற மாமென்னும், பல்லவை யோர் சொல்லும் பழுதன்றே" சிலப். ௨௦ : இறுதிவெண்பா, 1.

7. "நற்றவ முனிவருங் கற்றடங் கினரு, நன்னெறி காணிய தொன்னூற் புலவரு, மெங்கணும் விளங்கிய வெயிற்புற விருக்கையின்,... வஞ்சி" மணி. ௨௮ : 74 - 8.



இ - ள்.—நமக்குச் சென்ற யாண்டுகள் பலவாயிருக்க நரையில்லை யாகுதல் எப்படியாயினீரெனக் கேட்பீராயின், என்னுடைய மாட்சிமைப் பட்ட குணங்களையுடைய மனைவியுடனே புதல்வரும் அறிவுநிரம்பினர்; யான் கருதிய அதனையே கருதுவர், என்னுடைய ஏவல்செய்வாரும்; [1]அரசனும் முறையல்லாதன செய்யானாய்க் காக்கும்; அதற்குமேலே யான் இருக்கின்ற ஊரின்கண் நற்குணங்களால் அமைந்து பணியவேண்டும் உயர்ந்தோரிடத்துப் பணிந்து ஐம்புலனும் அடங்கிய கோட்பாட்டினை யுடைய சான்றோர் பலராதலான்.—எ - று.

'ஆன்றவிந்தடங்கிய' என்பதற்குக் கல்வியால் நிறைந்து அதற் கேற்பச் சுவைமுதலியவற்றிற்செல்லும் அறிவவிந்து மனமொழிமெய் களான் அடங்கியவெனினும் அமையும்.

‘யாங்காகியர்’ என்பதற்கு எவ்வாறாயிற்றென்றும், எப்படியாலாயிற்றென்றும் பொருள்கூறுவோரும் உளர். (௧௯௧)

[1]"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட், கிறையென்று வைக்கப் படும்" குறள், 388.

---

(௧௯௨) யாது மூரே யாவருங் கேளிர்
தீது நன்றும் பிறர்தர வாரா
நோதலுந் தணிதலு மவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்
இன்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கும்மல்லற் பேர்யாற்று

---

1. "யாதானு நாடாமா லூராமா லென்னொருவன், சாந்துணையுங் கல்லாத வாறு" குறள், 397.

முற்றும்மைக்கு, ‘யாதுமூரே’ என்பது மேற்கோள்; தொல். இடை. சூ. 7 கல்.; ந.

2. "பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங், கருமமே கட்டளைக் கல்" (குறள், 505); "பெருமையுஞ் சிறுமையுந் தாந்தர வருமே" வெற்றிவேற்கை.

4. "வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற், பொருந்துத றானே புதுமை" நன்னெறி, 12.

8. "கல்லலைத் தொழுகு மன்னே" (புறநா. கக௫ : 4); "கல்பொரு திரங்குங் கதம்வீ ழருவி" குறுந். கஉச : 5.



*நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்*
*முறைவழிப் படூஉ மென்பது திறவோர்*
*காட்சியிற் றெளிந்தன மாகலின், மாட்சியிற்*
*பெரியோரை வியத்தலு மிலமே*
*சிறியோரை யிகழ்த லதனினு மிலமே.*

**திணையும் துறையும் அவை.**

**கணியன் பூங்குன்றன் பாட்டு.**

**இ - ள்.**—எமக்கு எல்லாம் ஊர்; எல்லாரும் சுற்றத்தார்; கேடும் ஆக்கமும் தாமே வரினல்லது, பிறர் தர வாரா; நோதலும் அது தீர்தலும் அவற்றையொப்பத் தாமே வருவன; சாதலும் புதிதன்று; கருவிற் றோன்றிய நாளே தொடங்கியுள்ளது; வாழ்தலை இனிதென்று உவந்தது மிலம்; ஒரு வெறுப்பு வந்தவிடத்து இன்னாதென்றிருத்தலுமிலம்; மின்னுடனே மழை குளிர்ந்த துளியைப் பெய்தலான் அமையாது கல்லை யலைத்து ஒலிக்கும் வளவிய பேர்யாற்று நீரின்வழியே போம் மிதவை போல அரியவுயிர் ஊழின்வழியே படுமென்பது நன்மைக்கூறுபாடறிவோர் கூறிய நூலாலே தெளிந்தேமாகலான், நன்மையான் மிக்கவரை மதித்தலு மிலேம்; சிறியோரைப்பழித்தல் அம்மதித்தலினுமிலேம்.—எ - று.

*தலைஇயென்பதனைத் தலையவெனத் திரிக்க.*

'முனிவி னின்று தென்றலு மிலமே' என்றதற்கு முன்னே கூறிய வாழ்தலைவெறுப்பான் இன்றுதென்று இகழ்ந்திருத்தலுமில்லேமெனி னும் அமையும். (கசஉ)

---

9. "செல்யாற்றுத் தீம்புனலிற் சென்மரம் போல" (பரி. ௬ : 79); "நீர்வழிப் பட்ட புணை" நீதிநெறி. 44.

9 - 10. "முன்னே யொருவன் முடித்தான்றன் றுப்பெலாம்" அற நெறி. 114.

3 - 11. "சாதலும் பிறத்த லுனுந் தம்வினைப் பயத்தி னாகு, மாதலு மழிவு மெல்லா மவைபொருட் கியல்பு கண்டாய், நோதலும் பரிவு மெல்லா நுண்ணுணர் வின்மை யன்றே" சீவக. 269.

13. அதனினும் இலம்: "பிரியின் வாழ்த லதனினு மிலமே" குறுந். கசுஅ : 7.

---

(கசக) அதளெறிந் தன்ன நெடுவெண் களரின்
*ஒருவ னொட்டும் புல்வாய் போல

---

பி - ம். *ஒருவனோட்டும்.



ஓடி யுய்தலுங் கூடுமன்
ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே.

திணையும் துறையும் அவை.

1 ஓரேருழவர் பாட்டு.

இ - ள்.—தோலைப் புடைத்துவைத்தாற்போன்ற நெடிய வெளிய களரின்கண் ஒருவன் அலைக்கும் புல்வாய் எளிதின் ஓடிப் பிழைக்குமா போலே யானும் நன்னெறிக்கண்ணேயொழுகிப் பிழைக்கவுங்கூடும்; சுற்றத்தோடு கூடிவாழும் இல்வாழ்க்கை அதன்கட் செல்லவொட்டாது காலத் தளையாநிற்கும்; ஆதலான் உய்தல் கூடாது.— எ - று.

மன்: கழிவின்கண் வந்தது. மா: அசைநிலை. (கஙரு)

---

4. "உலோகமா பாலன்", "அநங்கமாதிலகன்" (சீவக. 385, 2001) என்னுமிடங்களில், 'மா, வியங்கோளசையன்றி இசைநிறைத்து நின்றது' எனக்கூறி இவ்வடியை மேற்கோள்காட்டுவர் நச்சினார்க்கினியர்; 'மா' என்பது முன்னிலையசையன்றி அசைச்சொல்லாக வந்ததற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. 47, ந.; இ - வி. சூ. 275, உரை.

1 - 4. "காட்டகத் தொருமகன் றாக்கு மாக்கலை, யோட்டைத் தாமெனி னுய்யு ஙங்களை, யாட்டியிட் டாருயி ரளைந்து கூற்றுவ, னீட்டிய விளைமதுப் போல வுண்ணுமே" சீவக. 2930.

1 "ஓரே ருழவன் போல" குறுந். கஙக.

பி - ம். *ஒன்றுருழவர்பாட்டு.

---

(கஙச) ஓரி னெய்தல் கறங்க,வோரில்

ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்
பைத லுண்கண் பனிவார் புறைப்பப்

1. "நெஞ்சு நடுக்குறூஉ நெய்த லோசையும்" மணி. சு: 71.

1 - 2. "நிறையுஞ் செல்வத் தெதிர்மனைக ளிரண்டி னிகழ்மங் கலவியங்க, ளறையு மொலியொன் றினிலொன்றி லழுகை யொலிவந் தெழுதலும்" பெரிய. வெள்ளானை. 5.

3. புறநா. கஎக: 7 - 10, கசுஎ: 8 - 9-ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க.



படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்.
இன்னா தம்மவிவ் *வுலகம்.
இனிய காண்கித னியல்புணர்ந் தோரே.[1]

திணை - அது ; துறை - பெருங்காஞ்சி.
பக்குடுக்கைநன் கணியார் பாடியது.

இ - ள்.—ஒருமனையின்கண்ணே சாக்காட்டுப்பறை ஒலிப்ப ஒரு மனையின்கண்ணே மணத்திற்குக்கொட்டும் மிகக்குளிர்ந்த முழவினது ஓசை மிக ஒலிப்பக் காதலரோடு கூடின மகளிர் பூவணியையணியப் பிரிந்த மகளிரது வருத்தத்தையுடைய உண்கண்கள் நீர்வார்ந்து துளிப்ப இப்பரிசு ஒத்து ஒவ்வாமைப்படப் படைத்தான் நிச்சிதமாக, அப்பண்பில் லாதோனாகிய நான்முகன் ; கொடிது இவ்வுலகினதியற்கை ; ஆதலான்,

இவ்வுலகினது தன்மையறிந்தோர் வீட்டின்பத்தைத்தரும் நல்ல செய்கைகளை அறிந்து செய்து கொள்க.—எ - று.

காண்கவென்பது, காண்கெனக் குறைக்கப்பட்டது.

இதன் இயல்புணர்ந்தோர் இவ்வின்னாமையை இனியவாகக் காண்கவென்றுரைப்பினும் அமையும். (கஙச)

---

5. படைத்தோன்: "ஐதே கம்மவிவ் வுலகுபடைத் தோனே" (நற். உசo : 1) ; "இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து, கெடுக வுலகியற்றி யான்" குறள், 1062.

ணகரவீற்றுவினைச்சொல்லின் ஈற்றயலினின்ற ஆகாரம் செய்யுளுள் ஓகாரமானதற்குமேற்கோள்; நன். சூ. 352, மயிலை; நன் - வி. சூ. 353.

[1]ம. "மன்றங் கறங்க மணப்பறை பாயின, அன்றவர்க் காங்கே பிணப்பறையாய்ப் - பின்றை, ஒலித்தலு முண்டாமென் றுய்ந்துபோ மாறே, வலிக்குமா மாண்டார் மனம்" நாலடி. 23.

பி - ம். *வுலகின தியற்கை, யினிய.

---

(கஙரு) பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்

---

1. புறநா. உசக : 1.

'பல' என்னும் சொன்முன் பிறவரின் அகரம் விகற்பித்து வருமென்பதற்கும், (நன். சூ. 169, மயிலை.); ரகரவீற்று உயர்திணைப்பெயரின் ஈற்றயலாகாரம் ஈகாரமாய் எற்றதற்கும் (நன் - வி. சூ. 309) மேற்கோள்.

2. "கரிந்தநீள் கயன்முள்ளி னரையும்" திருவிளை. விருத்த. 20.

பயனின் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
*நல்லது செய்த லாற்றீ ராயினும்
அல்லது செய்த லோம்புமி னதுதான்
எல்லாரு முவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉ † நெறியுமா ரதுவே.[1]

திணை - அது ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

நரிவெரூஉத்தலையார் பாடியது.

இ - ள்.—பல அமைந்த குணங்களையுடையீர் ! பல அமைந்த குணங்களையுடையீர் ! கயலினது முட்போன்ற நரைமுதிர்ந்த திரைந்த கதுப்பினையும் பயனில்லாத முதுமையையுமுடைய பல அமைந்த குணங்களையுடையீர் ! மழுவாகிய கூரிய படைக்கலத்தினையும் கடிய வலியினையுமுடைய ஒருவன் பாசத்தாற் கட்டிக்கொண்டு போங்காலத்து இரங்குவீர் நீர்; நல்வினையைச்செய்ய மாட்டீராயினும் தீவினையைச் செய்தலைப் பரிகரிமின் ; அதுதான் யாவரும் புகழ்வரென்றது ஒழியவும் நல்ல நெறியின் கண்ணே செலுத்தும் வழியும் அததான்.—எ - று.

[2]பலராகிய சான்றீரென்பது, பல்சான்றீரெனத் தொக்கது ; [3]"பல் குட்டுவர்" என்பதுபோல.

பலவாகிய குணங்களால் அமைந்தீரெனினும் அமையும்.

பயனின் மூப்பென்றுவைத்துப் பல்சான்றீரேயென்றது இகழ்ச்சிக் குறிப்பு; அடுக்கு, விரைவின்கண்வந்தது. (ககூடு)

---

1 - 3. சொல்லுவான் குறிப்பினாற் பொருளறியவந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 268, மயிலை; நன் - வி. சூ. 269.

6 - 7. "வறுமையா, லீத லிசையா தெனினு மிரவாமை, யீத லிரட்டி யுறும்" நாலடி. 95.

பாடாண்டிணைத்துறைகளுள், ஓம்படைபற்றி வந்ததற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 30, இளம்.

[1]மு. காஞ்சித்திணைத்துறைகளுள் 'கழிந்தோரொழிந்தோர்க்குக் காட்டியமுதுமை' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. 19, இளம்.); 'பல்சான்றீரே.........அதுவே : இது வீடு ஏதுவாகவன்றி வீடுபேற்றுநெறிக்கட் செல்லும் நெறியேதுவாகக் கூறியது' ஷை. ஷை. ஷை. 24, ந.

[2]தொல். தொகைமரபு, சூ. 11, ந. பார்க்க.

[3]மதுரைக்காஞ்சி, 105.

பி - ம். *நல்லவை. †நெறியுமற்றதுவே.



(ககூசு) ஒல்லுவ தொல்லு மென்றலும் யாவர்க்கும்
ஒல்லா தில்லென மறுத்தலு மிரண்டும்
ஆள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே
ஒல்லா தொல்லு மென்றலு மொல்லுவ
தில்லென மறுத்தலு மிரண்டும் வல்லே

இரப்போர் வாட்ட லன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயி லத்தை
அனைத்தா கியரினி *யிதுவே யெனைத்தும்
சேய்த்துக் காணாது கண்டன மதனால்
நோயில ராகநின் புதல்வர், யானும்
வெயிலென முனியேன் பனியென மடியேன்
கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை
நாணல தில்லாக் கற்பின் வாணுதல்
மெல்லியற் குறுமக ளுள்ளிச்
செல்வ லத்தை சிறக்கநின் னாளே.[1]

திணை - பாடாண்டிணை; துறை - பரிசில்கடாநிலை.

பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன் பரிசில் நீட்டித்தானை ஆலூர் மூலங்கிழார் பாடியது.

---

4 - 5. "இயைவது கரத்தலிற் கொடுமை யில்லை" முதுமொழிக் காஞ்சி, 55.

1 - 7. "இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும், வசையன்று வையத் தியற்கை", "நட்டார்க்கு நள்ளா தவர்க்கு முளவரையா, லட்டது பாத்துண்ட லட்டுண்ட - லட்ட, தடைத் திருந்த துண்டொழுகு மாவதின் மாக்கட், கடைக்குமா மாண்டைக் கதவு" (நாலடி. 111, 271); "இசைவ கொடுப்பதூஉ மில்லென் பதூஉம், வசையன்று வையத் தியற்கையஃ தன்றிப், பசைகொண் டவனிற்கப் பாத்துண்ணா னாயின், நசைகொன்றான் செல்லுலக மில்" பழ. 24.

13. "உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ், செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" (தொல். களவியல், சூ. 22); "உயிரினுஞ் சிறந்த

நாணும்" (நற். கஎ); "தாயிற் சிறந்தன்று நாண்டைய லாருக்கந் நாண்டை கைசால்...தோளிதிண் கற்பின் விழுமிதன்று" (திருச்சிற். 204.); பு. வெ. 278.

14 - 5. 'அத்தை' என்னும் இடைச்சொல் முன்னிலைக்கண் அசை நிலையாய் வந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 439, மயிலை; நன் - வி. சூ. 440.

[1]ழ. பாடாண்டிணைத்துறைகளுள் கொடார்ப்பழித்தற்கு மேற்

பி - ம். *யதுவே.

47



இ - ள்.—தம்மாற் கொடுக்க இயலும் பொருளை இயலுமென்று சொல்லிக்கொடுத்தலும், யாவர்க்கும் தம்மாற் கொடுக்க இயலாத பொருளை இல்லையென்றுசொல்லி மறுத்தலுமாகிய இரண்டும் தாளாண்மைப்பக்கத்து உளவாகிய நட்பின்கூற்றினுள்ளன; தனக்கு இயலாததனை இயலுமென்றலும் இயலும்பொருளை இல்லையென்று மறுத்தலுமாகிய இரண்டும் விரைய இரப்போரை மெலிவித்தலன்றியும் ஈவோர்புகழ் குறைபடும் வழியாம்; இப்பொழுது நீ எம்மளவிற்செய்த செய்தியும் அத்தன்மைத்தாகுக; இஃது எத்துணையும் எங்குடியிலுள்ளார் முன்பு காணாதது யாம் கண்டேம்; அத் தீங்கினால், நின்பிள்ளைகள் நோயின்றியே இருப்பாராக; யானும் வெயிலென்று நினைந்து போக்கை வெறேனாய்ப் பனியென்றுகொண்டு மடிந்திரேனாய் விட்டுநீங்காமையாற் கல்லாற்செய்தாற்போன்ற எனது நல்குரவின் மிகுதியான் வளிமறையாகிய மனையிடத்து நாணல்லது வேறில்லாத கற்பினையும் ஒளியையுடைத்தாகிய நுதலினையும் மெல்லிய இயலினையுமுடைய குறுமகளை நினைந்து போவேன்; நின் ஆயுள் மிகுவதாக.—எ - று.

'நோயிலாராக நின்புதல்வர்' என்பதூஉம், 'சிறக்கநின்னுள்' என்பதூஉம் குறிப்புமொழி.

அன்றி, பரிசில்மறுத்தலான் இவன் புதல்வர்க்கும் இவனுக்கும் [1]தீங்கு வருமென்றஞ்சி நோயிலாராகவெனவும், சிறக்கநின்னுளெனவும் கூறினாராக உரைப்பினும் அமையும்.

நல்குரவென்பது, நல்லெனக் குறைந்துநின்றது.

'கல்குயின் றன்னவென் னல்கூர் வளிமறை' என்பதற்குக் கல்லாற் செய்தாற்போன்ற பயன் கொள்ளாத யாக்கையையுடைய எனது நல்கூர்ந்த வளிமறையெனவும், கல்லைத் துளைத்தாற்போன்ற காற்றடை மாத்திரையாகச் செய்யப்பட்ட நல்கூர்ந்த என்மனையெனவும் உரைப்பாரும் உளர். (கசுசு)

---

கோள் (தொல். புறத்திணை. சூ. 29, இளம்; ஷை. ஷை. ஷை. 35, ந.); 'ஒல்லுவ தொல்லுமென்னும் புறப்பாட்டினுள், நோயிலாராக நின்புதல்வர் எனவும், சிறக்கநின் னுளே எனவும் வரும் மங்கலச்சொல் கெடுகவென்னும் பொருள் பட்டவாறு காண்க' ஷை. பொருளியல், சூ. 48, இளம்.

[1]"தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற், றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா—லும்மை, எரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று, பரிவதூஉஞ் சான்றோர் கடன்" நாலடி. 58.

(க௯ள) வளிநடந் தன்ன *வாச்செல லிவுளியொடு
கொடிநுடங்கு மிசைய †தேரின ரெனாஅக்
கடல்கண் டன்ன வொண்படைத் தானையொடு
மலைமாறு மலைக்குங் ‡களிற்றின ரெனாஅ
‡‡உருமுரற் றன்ன வுட்குவரு முரசமொடு
செருமேம் படூஉம் வென்றிய ரெனாஅ
மண்கெழு தானை யொண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ விலமே
எம்மால் வியக்கப் படூஉ மோரே
இடுமுட் படப்பை மறிமேய்ந் தொழிந்த
குறுநறு முஞ்ஞைக் கொழுங்கட் குற்றடகு
புன்புல வரகின் சொன்றியொடு பெறூஉம்
சீறூர் மன்ன ராயினு மெம்வயிற்
பாடறிந் தொழுகும் பண்பி னோரே
மிகப்பே ரெவ்வ முறினு மெனைத்தும்
உணர்ச்சி யில்லோ ருடைமை யுள்ளேம்

---

1. புறநா. கஎஅ : 2, அடிக். "காற்கடுப் பன்ன கடுஞ்செல லிவுளி" அகநா. உஉச : 5.

3. "கடன்மரு டானை" அகநா. உகஉ : 15.

1 - 4. 'வளிநடந்தன்ன......களிற்றின ரெனாஅ என்பதனுள் எனா என்பது எனாவென்று வந்து எண்ணுக்குறித்தது' தொல். இடை. சூ. 40, தெய்வச்.

5. "கடிப்பிகு முரசின் முழங்கி யிடித்திடித்துப், பெய்தினி வாழி யோ பெருவான்" (குறுந். ௨௭0); "உருமிடி முரசம்" முருகு. 121.

1 - 8. 'வளிநடந்தன்ன......இலமே : என்புழி வினைக்குறிப்பு எண்ணிவந்து தொகைபெறாது நின்றது' தொல். இடை. சூ. 44, தெய்வச்.

10. இடுமுட்படப்பை : "இடுமு ணெடுவேலி" கலி. ௧௨ : 1.
11. முஞ்ஞை. புறநா. ௩௨0 : 1, ௩௨௮ : 14.

10 - 11. "முன்றிலாடு முஞ்ஞை மூதிலை கறிக்கும்" தொல். செய். சூ. 31, பேர்; ந. மேற்.

14. "பண்ணெனப் படுவது பாடறிந் தொழுகல்" கலி. ௧௩௩ : 8.

பி - ம். *வாஅய்செலிவுளி. †தேரினமெனஅ. ‡களிற்றினமென. ╪ உருமுரன்றன்ன.



நல்லறி வுடையோர் நல்குர
வுள்ளுதும் பெருமயா முவந்துநனி பெரிதே.

திணையும் துறையும் அவை.

சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன் பரிசில் நீட்டித்தானைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் பாடியது.

இ - ள்.—காற்று இயங்கினாற்போலும் தாவுதலுடைத்தாகிய கதியை யுடைய குதிரையோடு கொடிநுடங்கும் உச்சியையுடைய தேரினையுடைய

ரெனவும், கடலைக் கண்டாற்போலும் ஒள்ளிய படைக்கலத்தையுடைய சேனையுடனே மலையோடு மாறுபட்டுப் பொரும் களிற்றினையுடையரென வும், இடிமுழங்கினாற்போலும் அஞ்சத்தக்க முரசத்தோடு போரின் மேம் படும் வெற்றியையுடையரெனவும் கருதி நிலத்தைப்பொருந்தின படை யினையுடைய ஒள்ளிய பூணினையுடைய அரசர் வெண்கொற்றக்குடை நிழற்றப்படுஞ் செல்வத்தை மதித்தலில்லேம்; எங்களால் மதிக்கப்படு வோர், இடப்பட்ட முள்வேலியையுடைய தோட்டத்து மறி தின்ன ஒழிந்து நின்ற குறிய நாற்றத்தினையுடைய முஞ்ஞையது கொழுவிய கண்ணிற் கிளைக்கப்பட்ட குறிய இலையைப் புல்லிய நிலத்தில் விளைந்த வர கினது சோற்றுடனே பெறுகின்ற சிறிய ஊரையுடைய வேந்தராயினும் எம்மிடத்துச் செய்யும் முறைமையை அறிந்து நடக்கும் குணத்தினை யுடையோர்காண்; யாம் மிகப்பெரிய துன்பமுறினும் சிறிதும் அறி வில்லாதோருடைய செல்வம் பயன்படாமையின் அதனைநினையேம்; நல்லறிவினையுடையோரது வறுமை பயன்படுதலின் அதனைப் பெரு மானே! யாம் உவந்து மிகப் பெரிதும் நினைப்பேம்.—எ - று.

எனவென்பது, எண்ணிடைச்சொல். (கசஎ)

---

16 - 8. "நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே, கல்லார்கட் பட்ட திரு" குறள், 408.

---

(கசஅ) அருவி தாழ்ந்த பெருவரை போல
ஆரமொடு பொலிந்த மார்பிற் றண்டாக்

1 - 2. "மணிமலைப் பணைத்தோண் மாநில மடந்தை, அணிமுலைத் துயல்வரூஉ மாரம் போலச், செல்புன லுழந்த சேய்வரற் கான்யாறு" (சிறுபாண். 1 - 3); "அலைநீ ராடை மலைமுலை யாகத், தாரப் பேரியாற்று மாரிக் கூந்தற், கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை" சிலப். கு: 1 - 3.



கடவுள் சான்ற கற்பிற் சேயிழை
மடவோள் பயந்த மணிமரு ளவ்வாய்க்
கிண்கிணிப் புதல்வர் பொலிகென் றேத்தித்
திண்டே ரண்ண னிற்பா ராட்டிக்
காதல் பெருமையிற் கனவினு மரற்றுமென்
காமர் நெஞ்ச மேமாந் துவப்ப
ஆலமர் கடவு ளன்னநின் செல்வம்
வேல்கெழு குருசில் கண்டே னாதலின்
விடுத்தனென் வாழ்கநின் கண்ணி தொடுத்த
தண்டமிழ் வரைப்பகங் கொண்டி யாகப்
பணித்துக்கூட் டுண்ணுந் தணிப்பருங் கடுந்திறல்
நின்னோ ரன்னநின் புதல்வ ரென்றும்
ஒன்னார் வாட வருங்கலந் தந்துநும்
பொன்னுடை நெடுநகர் நிறைய வைத்தநின்

முன்னோர் போல்கிவர் பெருங்கண் ணோட்டம்
யாண்டு நாளும் பெருகி யீண்டுதிரைப்
பெருங்கட னீரினு மக்கடன் மணலினும்
நீண்டுயர் வானத் துறையினு நன்றும்
இவர்பெறும் புதல்வர்க் காண்டொறு நீயும்
புகன்ற செல்வமொடு புகழினிது விளங்கி

---

3. "கடவுட் கற்பின் மடவோள்" அகநா. ௩௧௪.

4. "மணிபுரை செவ்வாய்" கலி. ௭௬, ௮௧; அகநா. ௧௬, ௬௬.

3 - 6. "கடவுட் கற்பொடு குடிக்குவிளக் காகிய, புதல்வர்ப் பயந்த புகழ்மிகு சிறப்பி, னன்ன ராட்டிக் கன்றியு மெனக்கு, மினிதா கின்றாற் சிறக்கநின் னாயுள்" அகநா. ௧௮௪.

7. கனவினரற்றல்: கலி. ௨௪ : 7 - 12.

8. ஏமாத்தல்: புறநா. ௧௦௪ : 9, அடிக்.

11. கண்ணியை வாழ்த்தல்: "வார்கழல் வேந்தே வாழ்கநின் கண்ணி" (மணி. ௫ : 28); "வாழ்கநுங் கண்ணி மாதோ" சீவக. 1890.

18 - 22. பன்மைக்கு மணலையும் நீர்த்துளிகளையும் உவமங்கூறுதலை, "எத்துணை யாற்று ளிடுமணல் நீர்த்துளி, புற்பனி யுக்க மரத்திலை நுண்மயி, ரத்துணை யும்பிற ரஞ்சொல்லி னார்மனம், புக்கன மென்று பொதியறைப் பட்டார்" (வளையாபதி) என்னுமிடத்துங் காண்க.

நீடு வாழிய நெடுந்தகை யானும்
கேளில் சேஎய் நாட்டினெந் நாளும்
துளிநசைப் புள்ளினின் னளிநசைக் கிரங்கிநின்
அடிநிழற் பழகிய வடியுறை
கடுமான் மாற மறவா தீமே.

**திணையும் துறையும் அவை.**

**பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனை வடம வண்ணக்கன் *பேரிசாத்தனார் பாடியது.**

இ - ள்.—அருவிதாழ்ந்த பெரியமலைபோல ஆரத்தோடு பொலிந்த மார்பின்கண் வேட்கைதணியாத தெய்வத்தன்மையமைந்த கற்பினையும் செய்ய ஆபரணத்தையுமுடைய உன்னுடைய மடவோள் பெறப்பட்ட பவழமணி போன்ற அழகிய வாயையும் கிண்கிணியையுமுடைய புதல்வர் பொலிகவென்று வாழ்த்தித் திண்ணிய தேரையுடையவேந்தே! நின்னைப் புகழ்ந்து பரிசின்மேல் அன்புபெரிதாகவிற் கனவின்கண்ணும் நின் புகழையே கூறும் எனது விருப்பத்தையுடைய நெஞ்சம் இன்புற்று மகிழ ஆலிலையின்கண் மேவிய திருமால்போலும் நின்னுடைய செல்வத்தை யெல்லாம் வேலையுடைய தலைவ! கண்டேன்; ஆதலால் விடைகொண் டேன்; வாழ்க, நினது கண்ணி! தொடர்புபட்ட குளிர்ந்த தமிழ் நாடெல்லை முழுதும் கொள்ளையாகக் கொண்டு நின்பகைவரைத் தாழ்த்து அவர்கள் பொருள்களையும் வாங்கிக்கொண்டுண்ணும் தணித்தற்கரிய மிக்க வலியையுடைய நின்னையொக்கும் வலியையுடைய நின்னுடைய மைந்தர் எந்நாளும் பகைவர் தேய அவருடைய பெறுதற்கரிய அணிகலத்தைக் கொண்டுவந்து நம்முடைய பொன்னுடைய நெடிய நகரின்கண் பொலிய வைத்த நின்னுடைய முன்னுள்ளோரைப்போல்க, இவருடைய பெரிய

கண்ணோட்டம்; யாண்டும் நாளும் மிக்குச் செறிந்த திரையையுடைய பெரியகடல்நீரினும் அக்கடல் கொழித்திடப்பட்ட மணலினும் நீண்டுயர்ந்த மழையிற்றுளியினும் பெரிதும் இவர் பெறும்பிள்ளைகளைக் காணுந்தோறும் நீயும் விரும்பியசெல்வத்துடனே புகழும் இனிதாக விளங்கி நெடுங்காலம்

23. புறநா. ௩௩ : 17, அடிக்.

25. "தற்பாடிய தளியுணவிற், புள்" (பட்டின. 3 - 4); (கலி. ௪௬ : 20 - 21, ௧௪௬ : 52 - 3); "மலையுறை பகைத்து வானுறைக் கணங்கும், புட்குலஞ் சூழ்ந்த பொருப்பு", "அளிகார்ப் பாடுங் குரனீர் வறந்த, மலைப் புட் போல" கல். ௩௫ : 10 - 11, ௯௩ : 11 - 2.

26. அடியுறை : புறநா. ௬௭ : 12, அடிக்.

பி - ம். *பெரியசாத்தன்.



வாழ்க! பெருந்தகாய்! யானும், உறவில்லாத அரிய நாட்டின்கண்ணே நாடோறும் துளியை நச்சுதலையுடைய வானம்பாடியென்னும் புட்போல நின்னுடைய வண்மைநசையான் இரங்கி நின்று அடிநீழற்கட் பழகிய அடியின் வாழ்வேன்; விரைந்த செலவையுடைய குதிரையையுடைய மாறனே! நீ செய்த செயலை மறவாதொழிவாயாக.—எ - று.

புதல்வர்மார்பிற் பொலிகெனக் கூட்டினும் அமையும்.

[1]'ஆலமர் கடவு ளன்னநின்' என்றதற்கு ஆலின்கீழ் அமர்ந்த முக்கட்

செல்வனாகிய கடவுளையொப்ப என்றும் நிலைபெற்றிருப்பேனென்றிருக் கின்ற நின்னென்றுரைப்பினும் அமையும்.

'நின்முன்னோர் போல்கிவர் பெருங்கண்ணோட்டம்' என்றது, அவரும் வழங்காதுவைத்தலிற் கண்ணோட்டமிலர்; இவரும் அவரை யொக்கக் கண்ணோட்டமிலராகவென்பதாயிற்று.

'முன்னோர்போல்கிவர்பெருங்கண்ணோட்டம்' எனவும், 'வாழ்கநின் கண்ணி' எனவும், 'நீவொழிய' எனவும் நின்றவை குறிப்புமொழி; [2]அன்றி, என்னிடத்து நீ செய்த கொடுமையால் நினக்குத் தீங்குவரும்; அது வாராதொழிகவென வாழ்த்தியதூஉமாம்.

மறவாதீமேயென்றது, என்னளவில் நீசெய்த செய்தியை மறவா தொழி யென்பதாயிற்று.

'யாண்டுநாளும் பெருகி' என்பதற்கு நின்னாளே திங்களனையவாக; அத்திங்கள் யாண்டோரனையவாக; யாண்டே ஊழியனைய வரம்பின வாக வென்பது கருத்தாகக் கொள்க. (கசுஅ)

---

[1]புறநா. கக : 5 - 6; "ஆலமர் செல்வ னணிசால் பெருவிறல்"; "ஆலமர்செல்வன்" (கலி. அக, அரு); "ஆல்கெழு கடவுள்" (முருகு. 256), "ஆலமர் செல்வன்" (சிலப் : உச); மணி. ரு : 144; சிறுபாண். 97.

[2]புறநா. ககசு: 10, உரை.

---

(கசுகூ) கடவு ளாலத்துத் தடவுச்சினைப் பல்பழம்
நெருந லுண்டன மென்னாது பின்னும்
செலவா னாவே கலிகொள் புள்ளினம்

1. "கடவு ளாலத்து" (நற். ருசரு); "அழல்புரை குழைகொழு

நிழறரும் பலசினை, ஆலமுங் கடம்பும்......வேறுவேறு பெயரோய்'' (பரி. ச : 66 - 9); "துறையு மாலமுந் தொல்வலி மராமு, முறையுளிப் பராஅய்", "ஆலுங் கடம்பு மணிமார்" கலி. க0க, க0கூ.

1 - 3. "புட்பயில் பழுமரப் பொலிவிற் றாகிய, மட்டிலா வளநகர்' சீவக. 93.



அனையர் வாழியோ விரவல ரவரைப்
புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் யாடவர்
உடைமை யாகுமவ *ருடைமை"
அவர், இன்மை யாகு மவரின் மையே.

திணையும் துறையும் அவை.

பெரும்பதுமனர் பாட்டு.

இ - ள்—தெய்வம் உறையும் ஆலமரத்தினது பெரியகொம்பின்கட் பலபழத்தை நென்னலுமுண்டேமென்னுவாய்ப் பின்னும் அவ்விடத்துப் போதலை அமையா, ஒலி பொருந்தின புள்ளினம்; அத்தன்மையினையுடையார் இரப்போர்; அவரைக் காத்தற்கு எதிர்ந்துகொள்ளும் மிக்க செய்கையையுடைய ஆண்மக்களது செல்வமாகும், அவ்விரப்போர் செல்வம்; அவ்வாண்மக்களுடைய வறுமையாகும், அவ்விரப்போருடைய வறுமை.—எ - று.

வாழியும், ஓவும் அசைநிலை. (கககூ)

---

1 - 4. இரவலருக்குப் புள்ளினமும் உபகாரிக்கு ஆலமரமும் உவமைகள்: "பழுமர முள்ளிய பறவையின்" (பொருந. 64) என்பதன்

அடிக்குறிப்பைப் பார்க்க.

ஏ - ம். *உடைமையின்மை.

---

(உ00) பனிவரை நிவந்த பாசிலைப் பலவின்
கனிகவர்ந் துண்ட கருவிரற் கடுவன்
செம்முக மந்தியொடு சிறந்துசேண் விளங்கி
மழைமிசை யறியா மால்வரை யடுக்கத்துக்
கழைமிசைத் துஞ்சுங் கல்லக வெற்ப!
நிணந்தின்று செருக்கிய நெருப்புத்தலை நெடுவேற்
களங்கொண்டு கனலுங் கடுங்கண் யானை
விளங்குமணிக் கொடும்பூண் விச்சிக் கோவே!
இவரே, பூத்தலை யறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி மகளிர்

---

4. புறநா. கசுக : 32, அடிக். 7. புறநா. இரு : 5, அடிக்.
8. புறநா. கரு0 : 1. 9 - 11. புறநா. உ0௪ : 2 - 3.
9 - 12. பாரி, முல்லைக்குத் தேர்கொடுத்தது : புறநா. ககஅ : 5, அடிக்.



யானே, பரிசிலன் மன்னு மந்தணை னீபே

வரிசையில் வணக்கும் வாண்மேம் படுநன்
நினக்கியான் கொடுப்பக் கொண்மதி, சினப்போர்
அடங்கா மன்னரை யடக்கும்
மடங்கா விளையு ணாடுகிழ வோயே.

திணை - அது; துறை - பரிசிற்றுறை.

பாரிமகளிரை விச்சிக்கோனுழைக் கொண்டுசென்ற கபிலர் பாடியது.

இ - ள்.—குளிர்ந்தமலையின்கண் ஓங்கிய பசிய இலையையுடைய பலாவினது பழத்தைக் கவர்ந்து உண்ட கரியவிரலையுடைய கடுவன் சிவந்த முகத்தையுடைய தனது மந்தியுடனே பொலிந்து சேய்மைக்கண்ணே விளங்கி முகிலாலும் உச்சியறியப்படாத உயர்ந்த மலைப்பக்கத்து மூங்கிலுச்சியின்கண் துயிலும் மலையகத்துத் தாழ்ந்த வரையையுடையோய்! நிணத்தைத் தின்று களித்த நெருப்புப்போலும் தலையையுடைய நெடிய வேலினையும் களத்தைத் தனதாக்கிக்கொண்டு காயும் தறுகண்மையையுடைய யானையினையும் விளங்கிய மணிகளாற்செய்யப்பட்ட வளைந்த ஆபரணத்தினையுமுடைய விச்சிக்கோவே! இவர்கள்தாம், பூவைத் தனது தலையின்கண் மாறாத அலங்கரித்தாற்போலும் கொடிமுல்லைதான் நாத்தழும்பேறப் பாடாதாயினும் ஒலிக்குமணியையுடைய நெடியதேரைக் கொள்கவென்று சொல்லிக் கொடுத்த பரந்து மேம்பட்ட தலைமையினையுடைய பாரிக்குமகளிர்; யான் பரிசிலன்; அதுவன்றியும் நிலைபெற்ற அந்தணன்; நீ, பகைவரைப் போர்செய்யுமுறைமையாற் பொருது தாழ்விக்கும் வாளான்மேம்படுபவன்; ஆதலால், நினக்கு யான்தரக் கொள்வாயாக; சினத்தையுடைய போராலே பகைவேந்தரை மிகையடக்கும்,

மடக்கப்படாத மிக்க விளைதலையுடைய நாட்டையுடையோய் !—எ - று.

மடக்குதல் - போகமொருக்குதல்.

[1]பலவின்கனிகவர்ந்துண்ட கடுவன் மந்தியொடு சிறந்து சேண் விளங்கிக் கழைமிசைத்துஞ்சுமென்றதனால், நீயும் இவரை வரைந்து கொண்டு இன்புற்று வாழ்தல் வேண்டுமென்பது தோற்றிநின்றது.

---

13. புறநா. ௧௨௬ : 11, ௨0௧ : 7.

9 - 17. பெருங். ௪. 15 : 23 - 80.

[1]"பந்தியின் வாய்ப்பல வின்சுளை பைந்தே னொடுங்கடுவன், மந்தியின் வாய்க்கொடுத் தோம்புஞ் சிலம்ப" சிற். 99.





'யானே பரிசிலன்' என்பதனால் நினக்கு என்குறை முடிக்கவேண்டு மென்பதூஉம், அந்தணனென்றதனால் யான், தருதற்குரியேனென்பதூஉம் கொள்ளப்படும்.

[1]உலகத்து மகட்பேசிவிடக் கொடுத்தலையன்றித் தாமே இவரைக் கொள்வாயாகவென்று இரந்து கூறினமையின், இது பரிசிற்றுறை யாயிற்று. (௨00)

---

[1]பெருங். ௪. 15 : 71 - 2.

---

(௨0௧) இவரியா ரென்குவை யாயி னிவரே

ஊருட னிரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி மகளிர் யானே
தந்தை தோழ னிவரென் மகளிர்
அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே
நீயே, வடபான் முனிவன் றடவினுட் டோன்றிச்
செம்புபுனைந் தியற்றிய சேணெடும் புரிசை
உவரா வீகைத் துவரை யாண்டு
நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே விறற்போ ரண்ணல்

---

1. புறநா. கரு : 1.  2. புறநா. கக௦ : 3 - 4.

4. "படுமணி யானை" புறநா. எஉ, கசுரு, ருகூக; நற். உஉஎ.

2 - 5. புறநா. உ௦௦: 9 - 12, அடிக்.

8. தடவு : இச்சொல் தடமெனவும் வழங்கும்; சிற். 202, கொளு, பேர். உரையைப் பார்க்க; "தடத் தெரியை" தக்க. 475.

விசுவபுராணசாரமென்னும் தமிழ்நூலின் பதிகத்தில் 15-ஆம் செய்யுளில், "சம்புமா முனிவன் வேள்வித் தழறரு மரபில் வந்தோன்" எனவும், இரட்டையர்களருளிச்செய்த ஏகாம்பரநாதருலாவில், "சம்பு குலத் தொருவன்" எனவும் வந்திருத்தலின், இதில், 'வடபான் முனிவன்' என்றது அச்சம்பு முனிவனாக இருத்தல் கூடுமோ வென்று ஊகிக்கப்படுகின்றது.

9. புறநா. கூஎ : 11, அடிக்.

10 - 12. துவரை - மைஸூரைச்சார்ந்த துவாரஸமுத்திரமென்னும் நகரம்; இந்நகரில் அரசர் பதினெண்மரும் பதினெண்குடிவேளிரும் இருந்தனரென்றும், அவர்களை அகத்தியமுனிவர் அழைத்துப் போந்து பல



தாரணி யானைச் சேட்டிருங் கோவே
ஆண்கட னுடைமையிற் பாண்கட னாற்றிய
ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்
யான்றர விவரைக் கொண்மதி வான்கவித்
திருங்கட லுடுத்தவிவ் வையகத் தருந்திறற்
பொன்படு மால்வரைக் கிழவ வென்வேல்
உடலுந ருட்குந் தானைக்
கெடலருங் குரைய நாடுகிழ வோயே.

திணையும் துறையும் அவை.

பாரிமகளிரை இருங்கோவேளுழைக் கொண்டுசென்ற கபிலர் பாடியது.

இ - ள்.—இவர் யாரென்று வினவுவாயாயின், இவர்தாம், ஊரெல்லாவற்றையும் இரப்போர்க்கு வழங்கித் தேரை ஏறுதற்கேற்பச் சமைத்த அணியோடும் புரவியோடும் கூட முல்லைக்கு வழங்கிய தொலையாத நல்ல

---

இடத்தும் தாபித்தனரென்றும், அவர்களுள் இருங்கோவேள் சிற்றரசனென்றும் தெரிகின்றது; இதனை, 'துவராபதிப்போந்து நிலங்கடந்த

நெடுமுடியண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண்குடி வேளிருள்ளிட்டாரையும்......கொண்டு போந்து', 'மலயமாதவன் நிலங் கடந்த நெடுமுடியண்ணலுழை நரபதியருடன் கொணர்ந்த பதினெண் வகைக்குடிப்பிறந்த வேளிர்' (தொல். பாயிரம்; அகத்திணை. சூ. 32) என வரும் நச்சினார்க்கினியர் வாக்கியங்களால் உணர்க.

14. புறநா. உ0௬ : 11.

15. மூ. புறநா. உ0௨ : 10; தபங்கரென்னுமுனிவர் ஒருகாட்டில் தவஞ்செய்கையில் ஒருபுலி அவர்மேற் பாய்தற்கு நெருங்க, அதுகண்ட அம்முனிவர் அங்கு வேட்டையாடிவந்த சளனென்னும் யாதவ அரசனை நோக்கி 'ஹொய்ஸள' என்று கூற, அவன் அப்புலியைத் தன் அம்பால் எய்துகடிந்தமையால் ஹொய்ஸளனென்றும் புலிகடிமாலென்றும் வழங்கப் பட்டானென்று சிலர் கூறுவர்; சசகபுரத்தையடுத்த காட்டிலுள்ள தன் குலதேவதையான வாஸந்திகாதேவியைச் சளனென்னும் அரசன் வணங்கச் சென்றபோது புலியால் தடுக்கப்பட்டு வருந்துகையில், அக் கோயிலிலிருந்த பெரியவர் அவனை நோக்கி 'ஹொய்ஸள' என்று கூறி ஓர் இரும்புத் தடியை அருள, அவன் அது கொண்டு அதனைக் கொன்றமை பற்றி 'ஹொய்ஸளன்' என்றும், 'புலிகடிமால்' என்றும் பெயர்பெற்றன னென்று வேறு சிலர் கூறுவர்.

71. புறநா. ௬௬ : 1.



புகழையும் ஒலிக்கும் மணியையுடைய யானையையுமுடைய பறம்பிற்குத்

தலைவனாகிய மிக்க பெரிய பாரியுடைய மகளிர்; யான், இவர்பிதாவின் தோழனாதலான் இவர் என்னுடைய மகளிர்; அந்தணனாகிய புலவன்யான் கொண்டு வந்தேன்; நீதான் வடபக்கத்து முனிவனுடைய ஓமகுண்டத் தின்கட் டோன்றிச் செம்பாற் புனைந்துசெய்தாலொத்த சேய்மையை யுடைத்தாகிய நெடிய மதிலையுடைய துவராபதியென்னும் படைவீட்டை யாண்டு வெறுப்பில்லாத கொடையினையுடையராய் நாற்பத்தொன்பது தலைமுறை தொன்றுபட்டுவந்த வேள்களுள்வைத்து வேளாயுள்ளாய்! வென்றிப்போரையுடைய தலைவ! தாரணிந்த யானையினையுடைய பெரிய இருங்கோவே! நீதான், ஆண்டன்மையைக் கடப்பாடாக உடைமையாற் பாணர்க்குச் செய்யக்கடவ முறைமையை உதவிய தழைத்த கண்ணியை யுடைய புலிகடிமாலே! யான் நினக்குத்தர இவரைக் கொள்வாயாக; வானாற் கவிக்கப்பட்டுப் பெருங்கடல் சூழ்தரப்பட்ட இவ்வுலகத்தின்கண் அணுகுதற்கரிய வலியையுடைய பொன்னுண்டாகும் பெரியமலைக்குத் தலைவ! வென்றிவேலையுடைத்தாகிய பகைவர் அஞ்சும் படையையுடைய கேடில்லாத நாட்டுக்குரியவனே!—எ - று.

உவராவீகை வேளிரெனக் கூட்டுக.

'வடபான் முனிவன் றடவினுட் டோன்றி' என்பதற்குக் கதை யுரைப்பிற் பெருகும்; அது கேட்டுணர்க.

புலிகடிமாலென்பது, இவனுக்கு ஒரு பெயர்.

வேளே! அண்ணல்! இருங்கோவே! புலிகடிமாஅல்! கிழவ! நாடுகிழ வோய்! நீ இப்படிப்பட்ட உயர்ந்தகுடியிற் பிறந்தவனாதலால், யான்தர இவரைக் கொண்மதியெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

யான் இவருடைய தந்தைதோழனாதலானும் அந்தணனாதலானும் யான்தர நீ இவரைக் கோடற்குக் குறையில்லையென்பது கருத்து. (உ0க)

(௨௦௨) வெட்சிக் கானத்து வேட்டுவ ராட்டக்
கட்சி காணாக் கடமா நல்லேறு
கடறுமணி கிளரச் சிதறுபொன் மிளிரக்
கடிய கதழு நெடுவரைப் படப்பை
வென்றி நிலைஇய விழுப்புக ழொன்றி
இருபாற் பெயரிய வுருகெழு மூதூர்க்

1. வெட்சிக்கானம்: குறுந். ௨௦௯ : 5.
2. மூ. புறநா. ௧௫௭ : 10. 1 - 2. புறநா. ௧௯௯ : 1 - 2.
6. மூ. மணி. பதி. 32, ௪ : 39.



கோடிபல வடுக்கிய பொருணுமக் குதவிய
நீடுநிலை யரையத்துக் கேடுங் கேளினி
நுந்தை தாய நிறைவுற வெய்திய
ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்
நும்போ லறிவி னுமரு ளொருவன்
புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை
இகழ்ந்ததன் பயனே யியறே ரண்ணல்
எவ்வி தொல்குடிப் படீஇயர் மற்றிவர்
கைவண் பாரி மகளி ரென்றவென்

தேற்றாப் புன்சொ னோற்றிசிற் பெரும
விடுத்தனென் வெலீஇயர்நின் வேலே யடுக்கத்
தரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மாத்தகட் டொள்வீ தாய துறுகல்
இரும்புலி வரிப்புறங் கடுக்கும்
பெருங்கல் வைப்பி னாடுகிழ வோயே.

**திணையும் துறையும் அவை.**

**இருங்கோவேள் பாரிமகளிரைக்கொள்ளானாகக் கபிலர் பாடியது.**

இ - ள்.—வெட்சியையுடைய காட்டின்நடுவண் வேட்டுவர் அலைப்பத் தனக்குப் புகலிடங் காணாத கடமாவினது நல்ல ஏறு வரைச்சாரன்மணி

---

10. புலிகடிமால் : புறநா. ௨0௧ : 15, அடிக்.

16. ‘தேற்றகில்லேமென்பது, தேற்றாப் புன்சொ னோற்றிசின்: என்பதுபோலத் தெளிதற்கண் வந்தது’ திருச்சிற். 45, பேர்.

18. “அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை” (நற். ௧௧௨ ; குறுந். ௨௯); “கருங்காற், பொன்னிணர் வேங்கை”, “கருங்கால் வேங்கை” நற். ௧௫௧, ௧௯௮, ௨௫௭.

18 - 20. வேங்கைப்பூப் பரந்த பாறை புலிபோற்றோன்றுமென்பது பின்வருவனவற்றாலும் விளங்கும்: “கருங்கால் வேங்கை வீயுகு துறுகல், இரும்புலிக் குருளையிற் றோன்றும்” (குறுந். ௪௭); “மெல்லிணர்

வேங்கை வியலறைத் தாயின, அழுகை மகளிர்க் குழுவை செப்ப" (பரி. கச : 11 - 2); "குறவ ரூன்றிய குரம்பை புதைய, வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம், புலிசெத்து" (அகநா. கஉ); "கருங்கா லினவேங்கை கான்றபூக் கன்மேல், இருங்கால் வயவேங்கை யேய்க்கும்" (திணைமாலை. 26); "நறமனை வேங்கையின் பூப்பயில் பாறையை நாகநண்ணி, மறமனை வேங்கை யெனநனி யஞ்சும்" திருச்சிற். 96.

21. தொல். விளிமரபு, சூ. 12, ந. மேற்.



மேலே கிளம்பவும் சிதறிய பொன் விளங்கவும் விரையவோடும் நெடிய மலைப்பக்கத்து வெற்றிநிலைபெற்ற சிறந்த புகழ்பொருந்திச் சிற்றரையம் பேரரையமென இருகூற்றாற் பெயர்பெற்ற உட்குப்பொருந்திய பழைய ஊரின்கட் பலகோடியாக அடுக்கப்பட்ட பொன்னை நுங்களுக்கு உதவிய நீடியநிலையையுடைய அரையத்தினது கேட்டையும் இனிக் கேட்பாயாக; அது கெடுதற்குக்காரணம்: நினது தாளால் தரப்பட்ட பொருளையன்றி நுந்தையுடைய உரிமையை நிறையப்பெற்ற தழைத்த கண்ணியையுடைய புலிகடிமாலே! நும்மையொக்கும் அறிவினையுடைய நும் குடியுள் ஒருவன், புகழ்ந்தசெய்யுளையுடைய கழாஅத்தலையாரென்னும் புலவரை அவமதித்ததனால்உண்டான பயன்; இயற்றப்பட்ட தேரையுடைய தலைவ! இவர் எவ்வியுடைய பழைய குடியிலே படுவார்களாக; பின்னை இவர் கைவண்மையையுடைய பாரிமகளிரென்று சொல்லிய எனது தெளியாத புன்சொல்லைப் பொறுப்பாயாக; பெருமானே! யான் நின்னை விடைகொண்டேன்; நின்வேல் வெல்வதாக; அரைமலையில் முகையற மலர்ந்த

கரிய காலையுடைய வேங்கையினது கரிய புறவிதழையுடைய ஒள்ளிய பூப் பரந்த பொற்றைக்கல் பெரும்புலியினது வரியையுடைய புறத்தை யொக்கும் பெரிய மலையிடத்து ஊர்களையுடைய நாட்டையுடையோய் !— எ - று.

புலிகடிமால் ! அண்ணல் ! நாடுகிழவோய் ! அரையத்துக் கேடும் கேள், இனி; அது கழாத்தலையை இகழ்ந்ததன்பயன் ; இப்பொழுது எவ்வி தொல்குடிப் படீஇயர், இவர் பாரிமகளிரென்ற புன்சொல்லைப் பொறுப்பாயாக; பெருமானே! நின்னைவிடுத்தேன்; நின்வேல் வெல்வதாக வெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

ஒலியற்கண்ணி - தளிர்மாலையெனினும் அமையும்.

நீடுநிலை யரையத்துக் கேடும் கழாத்தலையை இகழ்ந்ததன்பயனென்ற உம்மையான், இவ்விகழ்ச்சியும் உனக்குக் கேடுதருமென்பதாயிற்று.

அது கெடுதற்குக்காரணம், கழாத்தலையை நுமருள் ஒருவன் இகழ்ந்த தனால்; அவன் வாக்குத் தப்பாதாகலின், அவன் வசையாகப் பாடினு னென்று சொல்லுவர்; அதுவேயென்பதாம்.

'வெலீஇயர் நின்வேல்' என்றது குறிப்புமொழி.

'நுந்தை தாய நிறைவுற வெய்திய' என்பதூஉம், 'நும்போ லறிவின்' என்பதூஉம் இகழ்ச்சிதோன்ற நின்றன.

வேங்கைவீ தாய துறுகல் இரும்புலி வரிப்புறங் கடுக்குமென்ற கருத்து : ஏதம் செய்யாததூஉம் ஏதம்செய்வதுபோலக் கண்டார்க்கு அச்சம் வரத் தோன்றுமென்றமையான், இதுவும் இகழ்ச்சிதோன்ற நின்றது. (உ0உ)

(உ0கூ) கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்
தொல்லது *விளைந்தென நிலம்வளங் கரப்பினும்
எல்லா வுயிர்க்கு †மில்லால் வாழ்க்கை
இன்னுந் தம்மென வெம்மனோ ரிரப்பின்
முன்னுங் கொண்டிரென நும்மனோர் மறுத்தல்
இன்னா தம்ம வியறே ரண்ணல்
இல்லது ‡நிரப்ப லாற்று தோரினும்
உள்ளி வருநர் நசையிழப் போரே
அனையையு மல்லை நீயே யொன்னார்
ஆரெயி லவர்கட் டாகவு நுமதெனப்
பாண்கட னிறுக்கும் வள்ளியோய்
பூண்கட னெந்தைநீ யிரவலர் புரவே.[1]

திணையும் துறையும் அவை.

சேரமான் பாமளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் பாடியது.

---

1 - 2. 'தகரவுகரம், கழிந்தது......கரப்பினும் என்னும் புறப் பாட்டினுள், பொழிந்து எனவும், விளைந்து எனவும் இறந்தகாலம்பற்றி வந்தமையின் ஏனையவற்றிற்குஞ் சிறுபான்மை இறந்தகாலமுமுண்டென அறிந்துகொள்க', 'கழிந்தது......கரப்பினும் : என்புழிப் பொழிந்தென வும் விளைந்தெனவும் இறந்தகாலம் உணர்த்தின' (தொல். வினை. சூ. 6,

கல்; ந.); 'கழிந்தது...காப்பினும்: எனப் பொழிந்து விளங்தென்னும் தவ்வீற்றுத் தன்மையொருமைவினைமுற்றுக்கள் இறந்தகாலமும் சிற பான்மை காட்டுமெனவும் கொள்க' இ - வி. சூ. 50, உரை.

9 - 11. "பெரிய வாயினு மமர்கடந்து பெற்ற, அரிய வென்னு தோம்பாது வீசி" (பதிற். சச); "அரிய வெல்லா மெளிதி னிற்கொண், டுரிய வெல்லா மோம்பாது வீசி" மதுரை. 145 - 6.

[1]ழ. 'கொள்ளார் தேஎங்குறித்த கொற்றமும் - பகைவர் நாட்டினைத் தான் கொள்வதற்கு முன்னேயுங் கொண்டான்போல வேண்டியோர்க்குக் கொடுத்தலைக் குறித்தவெற்றியும்; தன்னையிகழ்ந்தோரையும், தான் இகழ்ந் தோரையும் கொள்ளாரென்ப......கழிந்தது பொழிந்தென என்னும் புறப்பாட்டினுள், ஒன்னர்...வள்ளியோய் என்பதுமது' தோல். புறத் திணை. சூ. 12, ந..

பி - ம். *விளைந்ததுநிலம். †யில்வாழ்க்கையேயின்னும். ‡நிரப்ப தாற்றுது.



இ - ள்.—கழிந்தகாலம் பெய்தேனெனக் கருதி மழை பெய்யாது மாறினும் முற்காலத்து விளைந்தேனெனக் கருதி நிலம் விளைவை ஒழியினும் எல்லாவுயிர்கட்கும் உயிர்வாழ்க்கையில்லை; அதுபோல இன்னமும் எமக்குப் பரிசில் தாருமென்று சொல்லி எம்போல்வார் இரப்பின் அவர்க்கு முன்னும் பரிசில் கொண்டீரென்று நம்போல்வார் மறுத்தல் இன்று; கேளாய்: இயற்றப்பட்ட தேரையுடைய அண்ணலே! இல்லாத பொருளைத் தேடி நிரப்பமாட்டாத வறுமியோரினும், அவராற் பரிசில் நினைந்து வரப்படுவோர் கொடாராயின் அவ் [1]விரப்போரால் நச்சப்படும்

இன்பத்தையிழப்பர் ; தம் வறுமையாற் கொடுக்கமுடியாமையின் நாணி அவரெதிர்முகம் நோக்கமாட்டாது இன்பமிழக்கும் மாந்தர் தன்மையையு மல்லை நீ, [2]இறந்துபடுவை; பகைவரது அரிய அரண் அவரிடத்த தாகவும் அதனை அழித்துக்கொள்ளுவதன்முன்னே நம்முடையதெனப் பாணர்க்குக் கடனாகக்கொடுக்கும் வென்றியோடுகூடிய வண்மையை யுடையோயாதலான் எம் இறைவ! நீ இரப்போரைப் பாதுகாத்தலை முறைமையாகப் பரிகரிப்பாயாக.—எ - று.

அனையையுமல்லையென்பதற்கு இரவலர்வேண்டுமளவும் பாணியாது முன்னே அளித்தலின், நசையிழப்போர்தன்மையையுடையாயல்லையென் றுமாம்.

எம்மனோரென்றது பிறரைநோக்கியன்றெனவுணர்க.

'பொழிந்தென', 'விளைந்தென' என்பனவற்றை வினையெச்சமாக்கி மாறினும் காப்பினுமென்னும் வினையோடு முடிப்பினும் அமையும். (உ0ரு)

---

[1]"ஈத்துவக்கு மின்பம்" குறள், 228.

[2]"இன்மை யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக்கால், றன்மெய் துறப்பான் மலை" கலி. சரு: 26 - 7.

---

(உ0சு) ஈயென விரத்த லிழிந்தன் றதனெதிர்
ஈயே னென்ற லதனினு மிழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர்
கொள்ளே னென்ற *லதனினு முயர்ந்தன்று

1 - 2. புறநா. கடுச : 8, கஅ0 : 2 - ஆம் அடிக்குறிப்புக்களைப் பார்க்க.

4. ‘அவர், வேண்டாவென்று மறுக்கவும் தாம் வலியப் போகவிட்டென்றவாறு’ மதுரை. 220, ந.

பி - ம். *லதனினுயர்ந்தன்று.



தெண்ணீர்ப் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கடல்
உண்ணா *ராகுப நீர்வேட் டோரே
ஆவு மாவுஞ் சென்றுணக் கலங்கிச்
†சேற்றொடு பட்ட சிறுமைத் தாயினும்
உண்ணீர் மருங்கி னதர்பல வாகும்
புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை
உள்ளிச் சென்றோர்ப் பழியல ரதனாற்
புலவேன் வாழிய ரோரி விசும்பிற்
கருவி வானம் போல
வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே.

திணையும் துறையும் அவை.

வல்வில் ஓரியைக் கழைதின்யானையார் பாடியது.

இ - ள்.—[1]இழிந்தோன்கூற்றால் ஈயெனச் சொல்லி இரத்தல் இழிந்தது; அவ்வீயென்றதனெதிர் ஈயேனென்று சொல்லி மறுத்தல் அவ்விரத்தலினும் இழிந்தது; ஒருவன் [2]இரப்பதன்முன்னே [3]அவன்குறிப்பை முகத்தானுணர்ந்து இதனைக் கொள்வாயாகவென்று சொல்லித் [4]தான்

இரந்துகொடுத்தல் ஒருவற்கு உயர்ந்தது; அதனை அவன் அவ்வாறு கொடுப்ப அதனெதிர் கொள்ளேனென்று சொல்லி மறுத்தல் அக்கொடையினும்

---

1 - 6. 'ஈயெனவிரத்தலென்னும் புறப்பாட்டினுள், தெண்ணீர்... வேட்டோரே என்றவழி, நின்செல்வம் கடல்போற் பெரிதேனும் பிறர்க்கு இனிதாய் நுகரப்படாதென வசையைச் செம்பொருளாகாமற் கூறியவாறு காண்க' தொல். செய். சூ. 126, ந.

5 - 9. புறநா. க௫௪ : 1 - 3.

10 - 11. புறநா. க௨௪ : 1 - 3.

13. புறநா. க௫க : 19; "கருவி மாமழை" (குறுந். ௪௨); "கருவி வானம்" சீவக. 725.

[1] "ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்றே" தொல். எச்ச. சூ. 49.

[2] இரப்பதன்முன்னே கொடுத்தல் : "இல்லது நோக்கி யிளிவரவு கூறாமுன், நல்லது வெஃகி வினைசெய்வார்" (பரி. க0 : 87 - 8); "இல னென்னு மெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணே யுள" குறள், 223.

[3] புறநா. ௯ : 25, அடிக்.

[4] "கவர்வனர் போலக் காதலி னுய்த்தும்" பெருங். க. 39 : 54.

பி - ம். *நாகுவர். †சேற்றொடு.





உயர்ந்தது ; தெளிந்த நீர்ப்பரப்பின் ஒலிக்கும் திரையையுடைய பெரியகடல்

நீரை உண்ணாரவர், தண்ணீரைவிரும்பினோர்; ஆவும் மாவுஞ்சென்று நீரை உண்ணக் கலங்கிச் சேற்றொடுகூடிய சிறுமையையுடைத்தேயாயி னும் உண்ணும் நீரையுடைய தாழ்ந்தவிடத்துச் செல்லும்வழி பலவாகும்; தாம் புறப்பட்டுச் செல்லப்பட்ட வழியிடத்து அப்பொழுதுசெய்யும் புள் நிமித்தத்தையும் புறப்பட்ட [1]முழுத்தத்தையும் பழித்தலல்லது தாம் பரிசில் பெறக்கருதிச் செல்லப்பட்டோரை அவர் ஈத்திலராயினும் பரிசிலர் பழி யார்; அதனால் நீ எனக்கு இன்னையாயினும் வெறேன், வாழ்வாயாக, ஓரி! ஆகாயத்தின்கண் மின்முதலிய தொகுதியையுடைய மழைபோல யாவர்க்கும் எப்பொருளையும் வரையாது வழங்கும் வண்மையையுடை யோய்! நின்னை.—எ-று.

ஓரி! வள்ளியோய்! பரிசிலர் புள்ளும் பொழுதும் பழித்தலல்லது உள்ளிச்சென்றோர்ப் பழியலர்; அதனால், யானும் நின்னைப் புலவேன்; வாழியரெனக் கூட்டுக.

மேற்கூறிய இரத்தல்முதல் நான்கிற்கும் ஈயெனவிரத்தலால் இழிபு பெற்றுக்கொள்ளேனெனும் உயர்பு யான்பெற்றிலேனென்பதூஉம், அவ்வா றிரப்பவும் ஈயேனென்றாற்போலப் பரிசில்நீட்டித்தலால் உள்ள இழிபு பெற்றுக்கொள்ளெனக் கொடுக்கும் உயர்ச்சி நீ பெற்றிலையென்பதூஉம் கருத்தாகக் கொள்க.

இதனால்; ஈயேனென்னும் இழிபினும் கொள்ளெனக் கொடுக்கும் உயர்பினும் நினக்குத் தக்கதறிந்து செய்யென்பது கூறினாராம்.

[2]'பெருங்கட லுண்ணா ராகுப நீர்வேட்டோர்' என்பதனாற் செல்வரே யாயினும் வள்ளியோரல்லார்பாற் செல்லேனென்பதும், 'உண்ணீர் மருங்கி னதர்பல வாகும்' என்பதனால் நீ வள்ளியையாகலின் நின்பால் வந்தேனென்பதும் கொள்ளப்படும். (உ0௪)

[1] முழுத்தம் - முகூர்த்தம்; சிலப். உ௬: 30.

[2] "உவர்க்கட லன்ன செல்வரு முளரே, கிணற்றூற் றன்ன நீயுமா ருளையே" (பழம்பாடல்); "கடல்பெரிது, மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல், உண்ணீரு மாகி விடும்" ஔவையார்.

---

(உ௦ரு) முற்றிய திருவின் மூவ ராயினும்
பெட்பின் றீதல் யாம்வேண் டலமே.

1 - 2. புறநா. ௧௫௧ : 22 - 5.



விறற்சினந் தணிந்த விரைபரிப் புரவி
உறுவர் செல்சார் வாகிச் செறுவர்
தாளுளந் தபுத்த வாண்மிகு தானை
வெள்வீ வேலிக் கோடைப் பொருந
சிறியவும் பெரியவும் புழைகெட விலங்கிய
மான்கணந் தொலைச்சிய கடுவிசைக் கதநாய்
நோன்சிலை வேட்டுவ நோயிலை யாகுக
ஆர்கலி யாணர்த் தரீஇய கால்வீழ்த்துக்

கடல்வயிற் குழீஇய வண்ணலங் கொண்மூ
நீரின்று பெயரா வாங்குத் தேரொ
டொளிறுமருப் பேந்திய செம்மற்
களிறின்று பெயரல பரிசிலர் கடும்பே.

திணையும் துறையும் அவை.

கடியநெடுவேட்டுவன் பரிசில் நீட்டித்தானைப் பெருந்தலைச்சாத்தனார் பாடியது.

இ - ள்.—நிறைந்த செல்வத்தையுடைய மூவேந்தராயினும் எம்மைப் பேணுதலின்றி ஈதலை யாங்கள் விரும்பேம்; வென்றியான் உளதாகிய சினந் தீர்ந்த விரைந்த செலவையுடைத்தாகிய குதிரையையுடைய அஞ்சி வந்தடைந்த பகைவர்க்குச் செல்லும் புகலிடமாய் அவ்வாறன்றிப் போர் செய்யும் பகைவருடைய முயற்சியையுடைய கிளர்ந்த உள்ளத்தைக்கெடுத்த வாட்போரின் மிக்க படையினையுடைய வெள்ளிய பூவையுடைத்தாகிய [1]முல்லைவேலியையுடைய கோடையென்னும் மலைக்குத் தலைவ! சிறியனவும் பெரியனவுமாகிய புழைகளைப் போக்கற விலக்கிய மானினதுதிரட்சியைத் தொலைத்த கடிய செலவையுடைய சினமிக்கநாயையும் வலியவில்லையு முடைய வேட்டுவ! நீ நோயின்றி இருப்பாயாக; இடியினது மிக்க ஓசையையுடைய புதுப்பெயலைத் தரவேண்டிக் கால்வீழ்த்துக் கடலிடத்தே திரண்ட தலைமையையுடைய முகில் நீரின்றி மீளாதவாறுபோலத் தேருடன், விளங்கிய கோடுயர்ந்த தலைமையையுடைய களிற்றையின்றி மீளா, பரிசிலரது சுற்றம்.—எ - று.

புரவியையுடைய விறற்சினந் தணிந்த உறுவரொன இயையும்.
செல்சார்வாகித் தாளுளந்தபுத்த பொருநவென இயையும்.

---

9. புறநா. உ0௯ : 14. 8 - 9. புறநா. ௬௯ : 1 - 2.

13. புறநா. கடு : 9. 14. புறநா. கசுச : 10,

1 புறநா. கசச : 14,



புழைகெட விலங்கிய மாவென இயையும்.

வெள்வீயென்றது அதனையுடைய முல்லையை.

மூவராயினுமென்ற உம்மை சிறப்பும்மை.

கோடைப்பொருந ! வேட்டுவ ! பெட்பின்றீதல் யாம் வேண்டலம்; பரிசிலர் கடும்பு களிறின்று பெயரல ; நீ நோயிலையாகுகவெனக் கூட்டுக.

யான் களிறின்றிப் பெயராநின்றேனென்பது கருத்தாகலின், நோயிலை யாகுகவென்பது இகழ்ச்சிக்குறிப்பு.

'புழைகெட விலங்கி' என்பதூஉம் பாடம். (உ0டு)

---

(உ0சு) வாயி லோயே வாயி லோயே
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்
உள்ளியது முடிக்கு †முர னுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க் கடையா வாயி லோயே
கடுமான் றோன்ற னெடுமா னஞ்சி

தன்னறி யலன்கொ லென்னறி யலன்கொல்
அறிவும் புகழு முடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே யதனாற்
காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை
‡மரங்கொஃ றச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே

---

1. மு. சிலப். ௨௦ : 24.

விளியேற்கும்பொழுது ஆனீறு ஏகாரம்பெற்று வந்ததற்கும் (தொல். விளி. சூ. 12, ந.), இறுதியவ்வொற்றாய் ஈற்றயலாகாரம் ஓகாரமாய் ஏகாரம் மிக்கதற்கும் (நன். சூ. 306, மயிலை.; நன். வி. சூ. 307.) மேற்கோள்.

2. புறநா. சசு : 3, உகூ௭ : 4 - 5. 4. மு. புறநா. ச௭ : 6.

2 - 5. புறநா. உகூ௭ : 4 - 5; கலி. கூ௮ : 3 - 5.

8 - 9. புறநா. உ௦௭ : 7.

10. "தேர்சேர் சுருக்கிக் காய கலப்பையிர்", "காஅய்க் கொண்டநும் மியம்" மலைபடு. 13, 365.

பி - ம். *முன்னியது †முரணுடை. ‡மாங்கொ றச்சர்.



எத்திசைச் செலினு மத்திசைச் சோறே.1

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமானஞ்சி பரிசில் நீட்டித்தானை ஔவையார் பாடியது.

இ - ள்.—வாயில்காப்போய்! வாயில்காப்போய்! வண்மையுடையோரது செவியிடத்தே விளங்கிய சொற்களை விதைத்துத் தாம் நினைந்த பரிசிலை விளைக்கும் வலியையுடைத்தாகிய நெஞ்சினையுடைய, மேம்பாட்டிற்கு வருந்தும் இப்பரிசிலான் வாழும் இல்வாழ்க்கையையுடைய பரிசிலர்க்கு அடையாத வாயில்காப்போய்! விரைந்த குதிரையையுடைய குருசிலாகிய நெடுமானஞ்சி தான் தன் தரமறியான்கொல்லோ? அது கிடக்க, என்தரமறியான்கொல்லோ? அறிவும் புகழுமுடையோர் இறந்தாராக வறிய இடத்தையுடைய உலகமுமன்றே; ஆகலாற் காவினேம் கலங்களை; கட்டினேம் முட்டுக்களை; மரத்தைத் துணிக்குந் தச்சன்பயந்த மழுவையுடைய கைத்தொழில் வல்லமகார் காட்டிடத்துச்சென்றால் அக்காட்டகம் பயன்படுமாறு அவர்க்கு எத்தன்மைத்து? எமக்கும் யாதொரு திசைக்கட் போகினும் அத்திசைக்கட் சோறு அத்தன்மைத்து.—எ - று.

கலம் - யாழுமாம்.

உள்ளத்தையுடைய பரிசிலரெனினும் அமையும்.

மழுவென்றது வாய்ச்சியை; தறிகையுமாம்.

காட்டகமென்றாரேனும் கருதியது அதன்கண் மரமாகக் கொள்க.

பரிசிலர்க்குச் சிறாரும், கல்விக்கு மழுவும், செல்லுந்திசைக்குக் காடும், சோற்றிற்குக் காட்டுள் மரமும் உவமையாகக் கொள்க. (உ0௬)

---

10 - 13. "ஆற்றவுங் கற்றா ரறிவுடையா ரஃதுடையார், நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை யந்நாடு, வேற்றுநா டாகா தமவேயா மாயினால்,

ஆற்றுணு வேண்டுவ தில்" பழ. 55.

[1]ழ. பாடாண்டிணைத்துறைகளுள், 'சேய்வரல் வருத்தம் வீட வாயில், காவலர்க் குரைத்த கடைநிலை' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. 29, இளம்.) ; 'வாயிலோயே......சோறே : இது தலைவனை எதிர்ப்பட்டுக் கூறாது வாயிலோனை நோக்கிக் கூறலிற் பரிசில் கடாயதன்றாம்' ஷை. ஷை. ஷை. 35, ந.

---

உ0எ) எழுவினி நெஞ்சஞ் செல்கம் யாரோ

1. "எழுவினி வாழியென் னெஞ்சே" குறுந். கக ; 4. ...



பருகு வன்ன வேட்கை யில்வழி
அருகிற் கண்டு மறியார் போல
*அகனக வாரா முகனழி பரிசில்
தாளி லாளர் வேளா ரல்லர்
வருகென வேண்டும் வரிசை யோர்க்கே
பெரிதே யுலகம் பேணுநர் பலரே
மீளி முன்பி னாளி போல
உள்ள முள்ளவிந் தடங்காது வெள்ளென

நோவர் தோன்வயிற் றிரங்கி
வாயா வன்கனிக் குலமரு வோரே.

திணையும் துறையும் அவை.

வெளிமான் துஞ்சியபின் அவன் தம்பி இளவெளிமானைப் பரிசில் கொடுவென அவன் சிறிது கொடுப்பக் கொள்ளாது பெருஞ்சித்திரனார் பாடியது.

இ - ள்.—எழுந்திருப்பாயாக, இனி எம்முடைய நெஞ்சமே ! யாம் போவோமாக ; யார்தாம், கண்ணாற் பருகுவது போலும் விருப்பமில்லாத விடத்துத் தம்மருகே கண்டுவைத்தும் கண்டறியாதார்போல உள்ளமகிழ வாராத [1]தம்முகம் மாறித் தாட்பட்ட பரிசிலைப் பிறிதோரிடத்துச் செல்ல

---

2. "பருகு வன்ன காத லுள்ளமொடு" (அகநா. ௯௯௯); "பருகு வன்ன வருகா நோக்கமொடு" (பொருந. 77); "பருகு வன்ன நோக்க மொடு" (பெருங். ௩. 7 : 80.); "பருகுவ னன்ன வார்வத்த னாகி" (நன். பாயிரம்); "பருகுவான் போல நோக்கும்", "பருகுவனள்போ னோக்கி" (பாக. ச. திருவன்பதம். 35; ஷை. 10. சகடமுதைத்த. 21); "மலர்த் தடங் கண்ணே வாயாப், பருகுவான் போல நோக்கி" கூர்ம. திருக்கல் யாண. 61.

7. இவ்வடியுடன், "காத மிருபத்து நான்கொழியக் காசினியை, ஓதக் கடல்கொண் டொளித்ததோ - மேதினியிற், கொல்லிமலை தேன் சொரியுங் கொற்றவா நீமுனிந்தால், இல்லையோ வெங்கட் கிடம்" (கம்பர் பாடல்) என்பது ஒப்புநோக்கற்பாலது.

8. "ஆளி நன்மா னணங்குடைக் குருளை, மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி" பொருந. 139 - 40.

11. "நற்றோண் மருவற் குலமரு வோரே" ஐங்குறு. ௪௬௪.
1"முகந்திரிந்து, நோக்கக் குழையும் விருந்து" குறள், 90.

பி - ம். * அக்னகு,



முயலும் முயற்சியில்லாதோர் விரும்பாரல்லர்? இங்ஙனம் வருவீராக வென்று எதிர்கோடல் வேண்டும் தாமுடையோர்க்கு, பெரிது உலகம்; விரும்புவோரும் பலர்; ஆதலால், மறம்பொருந்திய வலியையுடைய யாளியையொப்ப, உள்ளம் மேற்கோளின்றித் தணியாது, கண்டோர் யாவர்க்கும் தெரியத் தம்மைக் கண்டு இரங்காதவனிடத்தே நின்று திரங்கி உள்ளுறக் கனியாத வலிய பழத்தின்பொருட்டுச் சுழல்வோர்.—எ - று.

வன்கனியென்றது, நெஞ்சுநெகிழ்ந்து கொடாத பரிசிலை.

உலமரலும் அலமரல் போல்வதோர் உரிச்சொல்.

வாயா வன்கனிக்கு உலமருவோர் யாரோ? நெஞ்சமே! உள்ளம் உள்ளவிந்தடங்காது யாளிபோல இனி எழுவெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

வரிசையோர்க்கு யாளிபோல உள்ளம் உள்ளவிந்தடங்காதென மாற்றுக்கி உரைப்பாரும் உளர். (உ0எ)

---

(உ0அ) குன்று மலையும் பலபின் னொழிய

வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென
நின்ற வென்னயந் தருளி யீதுகொண்
டீங்கனஞ் செல்க தானென வென்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்
காணா தீத்த விப்பொருட் கியானோர்
வாணிகப் பரிசில னல்லேன் பேணித்
தினையனைத் தாயினு மினிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே.[1]

திணையும் துறையும் அவை.

அதியமான்நெடுமானஞ்சியுழைச் சென்ற பெருஞ்சித்திரனாரைக் காணாது இதுகொண்டுசெல்கென்று அவன் பரிசில்கொடுப்பக் கொள்ளாது அவர் சொல்லியது.

இ - ள்.—குன்றுகளும் மலைகளும் பல பின்கழிய வந்தேன் யான் பரிசில்கொண்டேனாய்ப் போதற்கெனச் சொல்லி நின்றவென்னை அன்புற்

---

1 - 2. "சேட்சென்று, நல்குவார் கட்டே நசை" நாலடி. 263.

9. புறநா. கஉக : ௩.

7 - 9. புறநா. க௫௯ : 22 - 5, உ0௫ : 1 - 2.

[1]மு. பரிசில்நிலை கூறியதற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை, சூ. 36, ந.

றருளி இப்பொருளைக் கொண்டு இவ்வாறு போக, தானெனச்சொல்ல, என்னை எப்பரிசறிந்தான் ட்கைவரால் தடுத்தற்கரிய வேந்தன்? என்னை யழைத்துக்காணாதே தந்த இப்பொருட்கு யான் ஓர் ஊதியமே கருதும் பரிசிலனல்லேன்; விரும்பித் தினைத்துணையளவாயினும் நன்று, அந்தப் பரிசிலாது கல்விமுதலாகிய பொருந்திய எல்லையையறிந்து கொடுத்து விடின்:—எ - று.

ஈங்கனஞ் செல்கவென்றது, காணாதே அவன் சொல்லிவிட்ட வார்த்தையை.

அவர் துணையளவறிந்து பேணி நல்கினர் விடின், தினையளவாயினும் இனிதெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

யான் தரங்கெடப் பொருள் கொடுபோமவன் அல்லேன்; அவனையின் இதவும் கொடுபோவன்; நீ எனக்குத் தரமறிந்து தரவேண்டுமென்பதாம்.

'அவர் துணையளவு' எனத் தம்மை உலகின்மேலிட்டுக் கூறினர். (௨0௮)

---

(௨0௯) பொய்கை நாரை போர்விற் சேக்கும்
நெய்தலங் கழனி நெல்லரி தொழுவர்
கூம்புவிடு மென்பிணி யவிழ்ந்த வாம்பல்
அகலடை யரியன் மாந்தித் தெண்கடற்
படுதிரை யின்சீர்ப் பாணி தூங்கும்
மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந

பல்கனி நசைஇ யல்குவிசும் புகந்து
பெருமலை விடரகஞ் சிலம்ப முன்னிப்
பழனுடைப் பெருமரந் தீர்ந்தெனக் கையற்றுப்
பெறாது பெயரும் புள்ளினம் போலநின்
நசைதர வந்துநின் னிசை நுவல் பரிசிலேன்
வறுவியேன் பெயர்கோ வாண்மேம் படுந

1. போர்வு - நெற்கதிர்ப்போர்; "கயலார் நாரை போர்விற் சேக்கும்" ஐங்குறு. கூ.

2. புறநா. உச : 1 ; "நெல்லரி தொழுவர்" நற். கசுரு.

3. மு. புறநா. கூஅகூ: 7; "ஆம்ப லாயிதழ் கூம்புவிட" குறிஞ்சி. 223.

6. மு. புறநா. சஉ: 18. 8. புறநா. கசு : 8.

9. கை, செய்வதென்னும் பொருளில் வந்ததற்கு மேற்கோள்; குறள், 925, பரிமேல்.

12. வினையெச்சத் தன்மைவினைக்குறிப்புமுற்றுக்கு மேற்கோள் ; தொல், எச்ச. சூ. 61, ந.



ஈயா யாயினு மிரங்குவெ னல்லேன்
நோயிலை யாகுமதி பெரும நம்முட்
குறுநணி காண்குவ தாக நாளும்

நறும்ப லொலிவெருங் கதுப்பிற் றேமொழித்
தெரியிழை மகளிர் பாணி பார்க்கும்
பெருவரை யன்ன மார்பிற்
செருவெஞ் சேஎய்நின் மகிழிருக் கையே.

திணை - அது; துறை - பரிசில்கடாநிலை.

[1]மூவன் பரிசில்நீட்டித்தானைப் பெருந்தலைச்சாத்தனார் பாடியது.

இ - ள்.—பொய்கைக்கண் மேய்ந்த நாரை போரின்கண்ணே யுறங்கும் நெய்தலையுடைய அழகியவயற்கண் நெல்லையறுக்கும் உழவர் மூகையவிழ்கின்ற மெல்லிய இதழ்கள் நெகிழ்ந்த ஆம்பலினது அகன்றஇலை யதனாலே மதுவையுண்டு தெளிந்த கடலினது ஒலிக்குந்திரையின் இனிய சீராகிய தாளத்தேயாடும் மென்புலத்தூர்களையுடைய நல்ல நாட்டுக்கு வேந்தே! பல பழத்தையும் நச்சித் தாம் வாழ்தற்கிடமாகிய ஆகாயத்தின் கண்ணே உயரப்பறந்து பெரியமலையின்முழை எதிரொலிமுழங்கச் சென்று அவ்விடத்துப் பழமுடைய பெரியமரம் பழுத்துமாறிற்றாக வருந்திப் பழம் பெறாதே மீளும் புள்ளினத்தையொப்ப நினது நச்சப்படுந்தன்மை கொடு வர வந்து நின்புகழைக் கூறும் பரிசிலேன் யான் வறியேனாய் மீளக்கட வேனோ? வாட்போரின்கண் மேம்படுவோய்! நீ ஒன்றை ஈத்திலையாயி னும் யான் அதற்கு வருந்துவேனல்லேன்; அதுநிற்க, கோயின்றியிருப்பா யாக; பெரும! நம்மிடத்து உளதாகிய அணிய அணுமையைக் காண்பதாக, நாடோறும் நறிய பலவாகிய தழைத்த மயிரையும் தேன்போலுஞ் சொல்லையும் ஆராய்ந்த ஆபரணத்தினையும் உடைய மகளிர் ஒருவரினொரு வர் புணர்தற்குக் காலம்பார்க்கும் பெரிய மலைபோலும் மார்பினையுடைய போரைவிரும்பும் சேயையொப்பாய்! நினது மகிழ்ச்சியையுடைய

நாளோலக்கம்.—எ - று.

பாணிபார்க்கும் மார்பு - பாணிபார்த்தற்கு ஏதுவாகிய மார்பு.

நம்முட் குறுநணி காண்குவதாகவென்றது, நீ என்மாட்டுச் செய்த அன்பின்மையை அவ்விருக்கையன்றிப் பிறரறியாதொழிவாராகவென்னும் நினைவிற்று.

---

14. புறநா. உ0௯ : 9.

1மூவனென்னும்பெயர் நற்றிணை, கஅ-ஆம் செய்யுளிலும் வந்துள்ளது
50



பொருந ! வாண்மேம்படுந ! சேஎய் ! நின் இசை நுவல்பரிசிலேன் வறுவியேன் பெயர்கோ? நீ ஈயாயாயினும் இரங்குவேனல்லேன்; பெரும! நோயிலையாகுமதி; நம்முட் குறுநணியை நின் இருக்கை காண்குவதாக; பிறர் காணுதொழிகவெனக் கூட்டுக.

நோயிலையாகென்பது, நீ செய்த தீங்கால் நோயுறுவை, அஃதுறு தொழிக வென்பதாம்; இனி, நின்மகிழிருக்கைக்கண் நம்முள் மிக அணித்தாகக் காணுங் காட்சி உளதாகவென்றுமாம்.

இதனாற் காட்சியுண்டாகாதென்பது குறிப்பு.

இனி, 'குறுநணி காண்குவ தாக' என்பதற்கு நம்மிடத்து மிகவும் மனத்தாற்காணுங் காட்சி உளதாகவென்பது கூடாது, நீ செய்த கொடுமையானென்றுரைப்பினும் அமையும். (உ0க)

(உகo) மன்பதை காக்குநின் புரைமை நோக்கா
தன்புகண் மாறிய வறனில் காட்சியொடு
நும்ம னோருமற் றினைய ராயின்
எம்ம னோரிவட் பிறவலர் மாதோ
செயிர்தீர் கொள்கை யெம்வெங் காதலி
உயிர்சிறி துடைய ளாயி னெம்வயின்
உள்ளா திருத்தலோ வரிதே யதனால்
அறனில் கூற்றந் திறனின்று துணியப்
பிறனா யினன்கொ லிறீஇயரென் னுயிரென
நுவல்வுறு சிறுமையள் பலபுலந் துறையும்
இடுக்கண் மனையோ டிரிய விந்நிலை

---

1. புறநா. எக : 17.

3. 'நும்ம னோருமற் றினையரா யி னென்புழி அன்னோரென்பது உவமவுருபாகிய இடைச்சொன் முதனிலையாகப் பிறந்த பெயர்' தொல். எச்ச. சூ. 18, ந.

3 - 4. தொல். எச்ச. சூ. 14, ந. மேற்.; 'நும்ம னோருமற் றினைய ராயி, னெம்ம னோரிவட் பிறவலர் மாதோ : என்புழி அன்னோரென்பது இடைச்சொன்முதனிலையாகப் பிறந்த குறிப்புப்பெயராகலானும், நும்மையன்னோர் எம்மையன்னோரென இரண்டாவது விரித்தற்கேற்புடைமையறிக' ஷை. ஷை. ஷை. 18, சே.

5. "செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ" புறநா. ௩ : 6.
8. மு. புறநா. ௨௧௭ : 9.



விடுத்தேன் வாழியர் குருசி லுதுக்காண்
அவல நெஞ்சமொடு செல்வனிற் கறுத்தோர்
அருங்கடி முனையரண் போலப்
பெருங்கை யற்றவென் புலம்புமுந் துறுத்தே.

திணையும் துறையும் அவை.

சேரமான் குடக்கோச்சேரலிரும்பொறை பரிசில் நீட்டித்தானைப் பெருங்குன்றூர்கிழார் பாடியது.

இ - ள்.—உயிர்ப்பன்மையைக்காக்கும் நினது உயர்ச்சியைப் பாராது காதல் கண்மாறிய அறமில்லாத பார்வையுடனேகூடி நம்போல்வார் யாவரும் இதற்கு ஒத்த அறிவையுடையராய் அருள்மாறுவாராயின் எம் போல்வார் இவ்வுலகத்துப் பிறவாதொழியக்கடவர்; குற்றந்தீர்ந்த கற்பினை யுடையளாய எம்மை விரும்பிய காதலி இறந்துபடாது உயிர்வாழ்வுடையா ளாகக் கூடின் எம்மிடத்து நினையாதிருத்தல் அரிது; அதனால், அறனில் லாத கூற்றம் திறப்பாடின்றி உயிர்கொளத் துணிய இறந்துபட்டான் கொல்லோ ? என்னுயிர் கெடுவதாகவென்று சொல்லுதலுற்ற நோயை யுடையாளாய்ப் பலபட வெறுத்துறையும் மனைவியது துன்பந் தீர்க்க வேண்டி இப்பொழுதே விடைகொண்டேன்; வாழ்வாயாக; இறைவ ! இதனைப் பாராய்: இன்னாமையையுடைய நெஞ்சத்துடனே போவேன்,

நின்னை வெகுண்டாரது அணுகுதற்கரிய காவலையுடைய மூனையிடத்து அரணைப்போலப் பெரிய செயலற்ற எனது வறுமையை முன்போகவிட்டு. —எ - று.

குருசிலே! நம்மனோரும் இனையராயின் எம்மனோர் இவட்பிறவார்; எம் காதலி உயிர் சிறிது உடையளாயின் நினையாதிருத்தல் அரிது; அதனால், அம்மனையோள் இடுக்கண் தீர்க்கவேண்டி இப்பொழுதே விடுத்தேன்; நிற் கறுத்தோர் மூனையரண்போலக் கையற்ற என் புலம்பு முந்துறுத்துச் செல்வேன்; வாழியரெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

'உதுக்காண்' என்றது அச்செலவை.

என்வறுமை என்னை விட்டு நீங்கப்போதலையொழியப் புலம்பை முந்துறுத்துக்கொண்டு போகாநின்றேனென இரங்கிக் கூறியவதனால், 'வாழியர் குருசில்' என்பது இகழ்ச்சிக்குறிப்பாயிற்று.

'உயிர்வெங் காதலி' என்று பாடமோதுவாரும் உளர். (௨௧0)

---

(௨௧௧) அஞ்சுவரு மரபின் வெஞ்சினப் புயலே
றணங்குடை யரவி னருந்தலை துமிய



நின்றுகாண் பன்ன நீண்மலை மிளிரக்
குன்றுதூ வெறியு மரவம் போல
முரசெழுந் திரங்குந் தானையொடு தலைச்சென்
றரைசுபடக் கடக்கு முரைசா ரோன்றனின்

உள்ளி வந்த வோங்குநிலைப் பரிசிலென்
வள்ளியை யாதலின் வணங்குவ னிவனெனக்
கொள்ளா மாந்தர் கொடுமை கூறநின்
உள்ளியது *முடித்தோய் மன்ற முன்னாட்
கையுள் ளதுபோற் காட்டி வழிநாட்
பொய்யொடு நின்ற புறநிலை வருத்தம்
நாணு யாயினு நாணக் கூறியென்
நுணங்கு செந்நா வணங்க வேத்திப்
பாடப் பாடப் பாடுபுகழ் கொண்டநின்
ஆடுகொள் வியன்மார்பு தொழுதனென் பழிச்சிச்
செல்வ லத்தை யானே வைகலும்
வல்சி யின்மையின் வயின்வயின் மாறி
இல்லெலி மடிந்த தொல்சுவர் வரைப்பிற்
பாஅ லின்மையிற் பல்பாடு சுவைத்து
முலைக்கோண் மறந்த புதல்வனொடு
†மனைத்தொலைந் திருந்தவென் வாணுதற் படர்ந்தே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—அஞ்சத்தக்க முறைமையையுடைய வெய்ய சினத்தை யுடைய மழையின்கணுள்ள இடியேறு, அச்சமுடைய பாம்பினது அணு குதற்கரிய தலை துணிய நிலவகலத்தை நின்று பார்ப்பதுபோன்ற நீண்ட மலை பிறழச் சிறுமலைதூவளறியும் ஓசைபோல வீரமுரசு கிளர்ந்தொலிக்

கும் படையுடனே மேற்சென்று வேந்தர் பட எதிர்நின்றுகொல்லும் புகழ

1 - 4. புறநா. கஎ : 38-9, அடிக்; ௬எ௩ : 20 - 21; "உருமெறிந் தெங்கும், பெருமலை தூவெறிந் தற்றே" களவழி. 6.

6. கலி. க०௫ : 1.

16. மார்பு தொழுதுபழிச்சுதல் : புறநா. க௫௫ : 8; பரி. க௩ : 12 - 3.

20 - 21. புறநா. க௬௪ : 3 - 5.

பி - ம். *செய்தோய். †மனைத்தொலை இந்திருந்த.



மைந்த தலைவ ! நீ வள்ளியையாதலான் எமக்குத் தாழ்ந்து பரிசில் நல்கு வன் இவனென்று நின்னைநினைந்துவந்த உயர்ந்த நிலைமையையுடைய பரிசி லேனாகிய யான் நினக்கு எம்மை எதிரேற்றுக்கொள்ளா மாந்தாது கொடுமையைச் சொல்லவும் நின்னுடைய நினைவேசெய்தாய், நிச்சயமாக; முன்னைநாட் பரிசில் கையிலே புகுந்ததுபோலக் காட்டிப் பிற்றைநாட் பொய்யைப் பெற்றுநின்ற நினது புறநிலைமைக்கு யான்வருந்திய வருத்தத் திற்கு நீதான் நாணுயாயினும் நீ நாணச் சொல்லி எனது நுண்ணிய ஆராய்ச் சியையுடைய செவ்விய நா வருந்தப் புகழ்ந்து நாடோறும் பாடப் பாடப் பின்னரும் பாடவேண்டும் புகழை ஏற்றுக்கொண்ட நினது வென்றி பொருந்திய அகன்றமார்பை வணங்கி வாழ்த்திப் போவேன் யான்; நாடோ றும் உணவில்லாமையான் இடந்தோறும் இடந்தோறும் மாறிமாறி அகழ்த லால் இல்லெலி மடிந்த பழையசுவராகிய எல்லையையுடைய, பாலில்லா மையாற் பலபடி சுவைத்து முலையுண்டலை வெறுத்த பிள்ளையுடனே மனையின்கண்ணே வறுமையுற்றிருந்த என்னுடைய ஒளிபொருந்திய நுதலையுடையாளை நினைந்து.—எ - று.

தோன்றல்! நின் உள்ளிவந்த பரிசிலேனாகிய நான் கூற, நின் உள்ளி

யது செய்தாயாதலான் வருத்தங் கூறி ஏத்தித் தொழுதனென்பழிச்சி வரைப்பின் மனைக்கண்ணே புதல்வனொடு தொலைந்திருந்த என் வாணு தலை நினைந்துசெல்வல் யானெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

நாணக்கூறியென்றதன்பின்னே ஏத்திப் பழிச்சிச் செல்வலென்றமை யான், அவை குறிப்புமொழி.

வரைப்பின் மனையென இயையும்.

'வள்ளிய னாகலின் வணங்குவ னிவனென' என்று பாடமாயின், வண்மையையுடையனாதலால் இவன் எமக்குத் தாழ்ந்து பரிசிலளிப்ப னெனக் கருதியென்க.

'வள்ளியை யாகலின் வணங்குவ னிவனெனக், கொள்ளா மாந்தர் கொடுமை கூற' என்றதற்கு வள்ளியையாதலின் இவனை வணங்குவே னென நினைந்து வணங்க அதுபாராது நின்பாற் பரிசில் பெறாத மாந்தர்...

தூவவெறியுமென்பது, தூவெறியுமென வகரங்கெட முடிதல் புற நடையாற்கொள்க; விகாரமெனினும் அமையும்.

'தூவவெறியும்' என்பதூஉம் பாடம்.

புறநிலை என்பதற்குப் புறங்கடை நின்றநிலையென்றுமாம்.

'இல்லெலி மடிந்த தொல்சுவர்' என்பதற்கு இல்லெலிதான் தொழில் மடிந்த தொல்சுவரென்று உரைப்பினும் அமையும்.

நின்னைக் கொடுமைகூறவென்று உரைப்பினும் அமையும். (உகக)



(உகஉ) நுங்கோ யாரென வினவி னெங்கோக்
களமர்க் கரித்த விளையல் வெங்கள்
யாமைப் புழுக்கிற் காமம் வீட வாரா

ஆரற் கொழுஞ்சூ டங்கவு ளடாஅ
வைகுதொழின் மடியு மடியா விழவின்
யாணர் நன்னாட் டுள்ளும் பாணர்
பைதற் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்
கோழி யோனே கோப்பெருஞ் சோழன்
பொத்தி னண்பிற் பொத்தியொடு கெழீஇ
வாயார் பெருநகை வைகலு *நக்கே.

திணை - அது; துறை - இயன்மொழி.

கோப்பெருஞ்சோழனைப் பிசிராந்தையார் பாடியது.

இ - ள்.—உம்முடைய இறைவன் யார்தானென்று கேட்பீராயின், எம்முடைய இறைவன் களமர்க்கு அரிக்கப்பட்ட முதிர்ந்த விரும்பத்தக்க மதுவை ஆமையிறைச்சியுடனே வேட்கைதீர அக்களமர் உண்டு ஆரன் மீனாகிய கொழுவியசூட்டை அழகிய கதுப்பகத்தேயடக்கி மதுவுண்ட மயக்கத்தால் வைகுந்தொழிலொழியும் நீங்காத விழவினையுடைய புது வருவாயுளதாகிய நல்ல சோழநாட்டுள்ளும் பாணருடைய வருத்தமுற்ற சுற்றத்தினது பசிக்குப்பகையாய் உறையூரென்னும் படைவீட்டிடத்திருந் தான், கோப்பெருஞ்சோழன்; புரையில்லாத நட்பினையுடைய பொத்தி யென்னும் புலவனோடு கூடி மெய்ம்மையார்ந்த மிக்கமகிழ்ச்சியை நாடோறும் மகிழ்ந்து.—எ - று.

நன்னாட்டுள்ளுமென்ற உம்மை சிறப்பும்மை.

கோழி - உறையூர்.

நுங்கோ யாரென வினவின், எங்கோக் கோப்பெருஞ்சோழன்,

அவன் பசிப்பகையாகிப் பொத்தியொடு வைகலும் நக்குக் கோழியிடத் திருந்தானெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

ஆகிக் கெழீஇ நக்கென்னுஞ் செய்தெனெச்சங்களைக் கோழியோ னென்னும் வினைக்குறிப்போடு முடிக்க. (உகஉ)

---

1. மு. பதிற். உo : 1.
3 - 4. புறநா. சஉ : 14 - 7.

பி - ம். * மகிழ்ந்தே.



(உகங) மண்டம ரட்ட மதனுடை நோன்றாள்
வெண்குடை விளக்கும் விறல்கெழு வேந்தே
பொங்குநீ ருடுத்தவிம் மலர்தலை யுலகத்து
நின்றலை வந்த விருவரை நினைப்பிற்
றொன்றுறை துப்பினின் பகைஞரு மல்லர்
அமர்வெங் காட்சியொடு மாறெதிர் பெழுந்தவர்
நினையுங் காலை நீயு மற்றவர்க்
கனையை யல்லை யடுமான் றோன்றல்

பரந்துபடு நல்லிசை யெய்தி மற்றுநீ
உயர்ந்தோ ருலக மெய்திப் பின்னும்

ஒழித்த தாய மவர்க்குரித் தன்றே
அதனால், அன்ன தாதலு மறிவோய் நன்றும்
இன்னுங் கேண்மதி யிசைவெய் யோயே
நின்ற துப்பொடு நிற்குறித் தெழுந்த
எண்ணில் காட்சி யிளையோர் தோற்பின்
நின்பெருஞ் செல்வம் யார்க்கெஞ் சுவையே
அமர்வெஞ் செல்வ நீயவர்க் குலையின்
இகழுந ருவப்பப் பழியெஞ் சுவையே
அதனால், ஒழிகதி லத்தைநின் மறனே வல்விரைந்
தெழுமதி வாழ்கநின் னுள்ள மழிந்தோர்க்
கேம மாகுநின் றாணிழன் மயங்காது
செய்தல் வேண்டுமா னன்றே வானோர்
அரும்பெற லுலகத் தான்றவர்
*விதும்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே.

திணை - வஞ்சி; துறை - துணைவஞ்சி.

அவன் மக்கண்மேற் சென்றானைப் புல்லாற்றூர் †எயிற்றியனார் பாடியது.

---

1. "மண்டம ரட்ட களிறன்னோன்" கலி. கக.

3. புறநா. கஅ : 11 - 2, கக : 11, உ0க : 17, ஙகங : 1.

9 - 10. புறநா. உஎ : 7 - 9, அடிக்.

10 - 11. புறநா. எகு : 1 - 2.

இ - ள்.—மடுத்தெழுந்த போரின்கட் கொன்ற மிகுதிபொருந்திய வலியமுயற்சியையுடைய வெண்கொற்றக்குடையான் உலகத்தை நிழல் செய்து புகழால் விளக்கும் வென்றியையுடைய வேந்தே! கிளர்ந்த நீரை யுடைய கடலாற் சூழப்பட்ட இப்பரந்தவிடத்தையுடைய உலகத்தின்கண் நின்னிடத்துப் போர்செய்யவந்த இருவரையும் கருதின், பழையதாய்த் தக்கப்பட்ட வலியையுடைய நின் பகைவேந்தாகிய சேரபாண்டியரு மல்லர், போரின்கண் விரும்பிய காட்சியுடனே நின்னொடு பகையாய் வேறுபட்டெழுந்த அவ்விருவர்தாம்; நினையுங்காலத்து நீயும் அவர்க்கு அத்தன்மையையாகிய பகைவனல்லை; பகையைக் கொல்லும் யானையினை யுடைய தலைவ! நீ பரந்துபட்ட நல்ல புகழை இவ்வுலகத்துப் பொருந்தித் தேவருலகத்தின்கட் போய்ப் பின்பு நீ ஒழித்த அரசாட்சியுரிமை அவர்க் குரித்து; ஆதலால், அப்பெற்றித்தாதலும் அறிவோய்! பெரிதும் இன்னமும் கேட்பாயாக ; புகழைவிரும்புவோய்! நிலைபெற்ற வலியோடு நின்னைக் கருதிப் போர்செய்தற்கு எழுந்திருந்த சூழ்ச்சியில்லாத அறிவையுடைய நின்புதல்வர் தோற்பின் நினது பெரியசெல்வத்தை அவர்க்கொழிய யாவர்க்குக் கொடுப்பை? போரைவிரும்பிய செல்வ! நீ அவர்க்குத் தோற் பின் நின்னையிகழும் பகைவர் உவப்பப் பழியை உலகத்தே நிறுத்துவை; ஆதலான், ஒழிவதாக நின்னுடைய மறன்; கடிதின்விரைந்தெழுந்திருப் பாயாக; நின்னுடைய உள்ளம் வாழ்வதாக ; அஞ்சினோர்க்கு அரணாகும் நினதடிநிழல் மயங்காமற் செய்தல்வேண்டும், நல்வினையை; விண்ணோரது பெறுதற்கரிய உலகத்தின்கண் அமைந்தவர் விரைந்த விருப்பத்தோடு

விருந்தாக ஏற்றுக்கொள்ள.—எ - று.

மற்று : அசை. தில் : விழைவின்கண் வந்தது.

வானோருலகென்றது, ஒட்டன்றி ஒருபெயராய் நின்றது.

வேந்தே! நின்மறனொழிக ; ஆன்றவர் விருந்தெதிர்கொளற்கு நன்று செய்தல்வேண்டும்; ஆதலால், அதற்கு விரைந்தெழுவாயாக; நின்னுள்ளம் வாழ்வதாகவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

செல்வமும் பழியும் சினைவினைப்பாற்பட்டு முதல்வினைகொண்டன.

எஞ்சுதல் - இவர்க்குப்பின்னும் நிற்றல்.

தாணிழல் மயங்காதென்பதற்கு நினக்கு ஒருதீங்கும் வாராமலென்ற தாகக்கொள்க.

இனி 'அதனு லன்ன தாதலு மறிவோய்' என்றதற்கு உயர்ந்தோ ருலகம் எய்துவதுகாரணத்தால் அத்தாயம் அவர்க்கு அப்படியேயுரித்து ; அன்னதாதல் நீயறிவையென முற்றாகவும், அழிந்தோர்க்கு ஏமமாகும்



நின்தாணிழலென முற்றாக்கி மயங்காது தெளிந்துநின்று நன்றுசெய்தல் வேண்டுமெனவும் உரைப்பாரும் உளர்.

'மாவெங் காட்சியொடு மாறெதிர்ந் தெழுந்தவர்' என்று

பாடம் ஓதுவாரும உளா.
(உகரு)

---

(உகசு) செய்குவங் கொல்லோ நல்வினை யெனவே
ஐய *மறாஅர் கசடீண்டு காட்சி
நீங்கா நெஞ்சத்துத் துணிவில் லோரே
யானை வேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே
அதனால், உயர்ந்த வேட்டத் †துயர்ந்திசி னோர்க்குச்
செய்வினை மருங்கி னெய்த லுண்டெனிற்
றொய்யா வுலகத்து நுகர்ச்சியுங் கூடும்
தொய்யா வுலகத்து நுகர்ச்சி யில்லெனின்
மாறிப் ‡பிறப்பி னின்மையுங் கூடும்
மாறிப் பிறவா ராயினு மிமயத்துக்
கோடுயர்ந் தன்ன தம்மிசை நட்டுத்
தீதில் யாக்கையொடு மாய்தறவத் தலையே.

திணை - பொதுவியல் ; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

அவன் [1]வடக்கிருந்தான் சொற்றது.

இ - ள்.— அறவினையைச்செய்வேமோ அல்லேமோவென்று கருதி ஐயப்பாடு நீங்கார், அழுக்குச்செறிந்த காட்சிநீங்காத உள்ளத்தினையுடைய தெளிவில்லாதோர்; யானைவேட்டைக்குப்போவோன் யானையையும்

எளிதாகப் பெறுவன்; குறும்பூழ் வேட்டைக்குப்போவோன் அதுபெறாது வறிய கையினனும் வருவன்; அதனால் உயர்ந்த விருப்பத்தையுடைய உயர்ந்தோர்க்குத் தாம் செய்யப்பட்ட நல்வினைக்கூற்றிலே அதனை

---

4 - 5. "பொருமால் கரிவேட்டும் பூழ்வேட்டும் போனார், உரியார் பெறுவ ரொழிந்தார் பெறாரே" தத்துவ. கலிமடல்.

7 - 8. புறநா. ௧௭௪ : 19 - 20, அடிக்.

6 - 9. புறநா. ௬௮ : 12 - 6.

[1]புறநா. ௬௫ : 9 - 11, அடிக்.

பி - ம் * மாறாஅர். †துயர்திசினோரே. ‡பிறப்பின் வன்மையும்.





அனுபவித்தலுண்டாமாயின் அவர்க்கு இருவினையும் செய்யப்படாத உம்ப ருலகத்தின்கண் இன்பம் அனுபவித்தலுங் *கூடும்; அவ்வுலகத்தின்கண் நுகர்ச்சியில்லையாயின், மாறிப் பிறத்தலிலேகூடும் பிறப்பின்கண் இன்மை எய்தவுங்கூடும்; மாறிப்பிறவாரென்று சொல்லுவாருளராயின் இமய மலையின் சிகரம் ஓங்கினாற் போன்ற தமது [1]புகழை நிலைபெறுத்தி வசையில்லாத உடம்போடு கூடிநின்று இறத்தல் மிகத் தலையாயது; அதனால் எவ்வாற்றானும் நல்வினைசெய்தல் அழகிது.—எ - று.

உயர்ந்திசினோர்க்கென்னும் நான்காவதன்றியும் உயர்ந்திசினோர் செய்வினைமருங்கின் எய்தலுண்டெனின், இவர்க்கு நுகர்ச்சியுங்கூடுமென் றுரைப்பினும் அமையும்.

'பிறவாராயினும்' என்னும் உம்மை அசைநிலை; உம்மையின்றி ஓதுவாரும் உளர்.

'காட்சியொடு நீங்கா நெஞ்சத்து' என்பதூஉம் பாடம். (உகச)

---

1"வசையிலா வண்பயன் குன்று மிசையிலா, யாக்கை பொறுத்த நிலம்" குறள், 239.

பி - ம். *கூட்டும்.

---

(உகரு) கவைக்கதிர் வரகி னவைப்புறு வாக்கல்
தாதெரு மறுகிற் போதொடு பொதுளிய
வேளை வெண்பூ வெண்டயிர்க் கொளீஇ
ஆய்மக ளட்ட வம்புளி மிதவை
அவரை கொய்யுந ரார மாந்தும்
தென்னம் பொருப்ப னன்னாட் டுள்ளும்
பிசிரோ னென்பவென் னுயிரோம் புநனே
செல்வக் காலை நிற்பினும்

---

1. "வரகி னவைப்புமா ணரிசி" (அகநா. ருகச.) கவைக் கதிர்வரகு: மலைபடு. 112 - 3; பெருங். க. 49 : 105.

2. "தாதெரு மறுகு" நற். ருசரு; அகநா. கசுரு.

3. "வேளை வெண்பூ" புறநா. உரு : 21.

3 - 4. "தயிர்மிதி மிதவை" அகநா. ருசo.

அல்லற் காலை நில்லலன் மன்னே.

திணை - பாடாண்டினை; துறை - இயன்மொழி.

கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார் வாராரென்ற சான்றோர்க்கு அவர் வருவாரென்று சொல்லியது.

இ-ள்.—கவர்த்த கதிரினையுடைய வரகினது குற்றுதலுற்ற வடிக்கப்பட்ட சோற்றையும் தாதாக உதிர்ந்த எருவையுடைய தெருவின்கண் போதொடு தழைத்த வேளையினது வெள்ளிய பூவை வெளிய தயிரின்கட் பெய்து இடைமகள் அடப்பட்ட அழகிய புளிங்கூழையும் அவரை கொய்வார் நிறையவுண்ணும் தென்றிக்கின்கட் பொதியின் மலையையுடைய பாண்டியனது நல்ல நாட்டினுள்ளும் செய்தாகிய பிசிரென்னும் ஊரிடத்தானென்று சொல்லுவார், என்னுயிரைப் பாதுகாப்போனை; அவன் எமக்குச் செல்வமுடைய காலத்து நிற்பினும் யாம் இன்னாமையுறுங் காலத்து ஆண்டு நில்லான்.—எ - று.

மன்: அசைநிலை. (உகரு)

---

(உகசா) கேட்டன் மாத்திரை யல்ல தியாவதும்
காண்ட லில்லா தியாண்டுபல கழிய
வழுவின்று பழகிய கிழமைய ராகினும்

அரிதே தோன்ற லதற்பட வொழுக்கலென்
றையங் கொள்ளன்மி னாரறி வாளீர்
இகழ்வில னினிய னியாத்த நண்பினன்
புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே
தன்பெயர் கிளக்குங் காலை யென்பெயர்
பேதைச் சோழ னென்னுஞ் சிறந்த
காதற் கிழமையு முடைய னதன்றலை
இன்னதோர் காலை நில்லலன்
இன்னே வருகுவ னொழிக்கவவற் கிடமே.

**திணையும் துறையும் அவை.**

**அவன்வடக்கிருந்தான் பிசிராந்தையார்க்கு இடனொழிக்கவென்றது.**

---

1 - 5. "புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான், நட்பாங் கிழமை தரும்" குறள், 785.

6. "யாத்தன்று நட்பே" குறுந். ௩௧௩.

7. "பொய்யாமை யன்ன புகழில்லை" குறள், 296.

பி - ம். *காண்ட லீயாது.



இ - ள்.—'நின்னை அவன் கேட்டிருக்கும் அளவல்லது சிறிது பொழுதும் காண்டல்கூடாது பல்யாண்டுசெல்லத் தவறின்றாக மருவிப்போந்த உரிமையையுடையோராயினும் அரிதே தலைவ! அவ்வழுவாத கூற்றிலே

படவொழுகுதல்' என்று கருதி ஐயப்படாதொழிமின்; நிறைந்த அறிவினை யுடையீர்! அவன் என்னை என்றும் இகழ்ச்சியிலனாய் இனிய குணங்களை யுடையன்; பிணித்த நட்பினையுடையன்; புகழ் அழியவரூஉம் பொய்ம்மை யை விரும்பான்; தனது பெயரைப் பிறர்க்குச் சொல்லும்பொழுது என்னுடைய பெயர் பேதைமையையுடைய சோழனென்று எனது பெயரைத் தனக்குப் பெயராகச் சொல்லும் மிக்க அன்புபட்ட உரிமையையு முடையன்; அதற்குமேலே இப்படி யான் துயருறுங்காலத்து ஆண்டு நில்லான்; இப்பொழுதே வருவன்; அவனுக்கு இடம் ஒழிக்க.—எ - று.

'அதற்பட' என்பதற்கு அவ்விறந்துபாட்டிலே படவென்றும், 'இகழ் விலன்' என்பதற்கு இகழப்படுவன குணமிலனென்றும் உரைப்பினும் அமையும்.

பேதைச்சோழனென்றது, தான் தன்னை இழித்துக்கூறியது. (உகசு)

---

(உகஎ) நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே
எனைப்பெருஞ் சிறப்பினோ டீங்கிது துணிதல்
அதனினு மருட்கை யுடைத்தே பிறனாட்டுத்
தோற்றஞ் சான்ற சான்றோன் போற்றி
இசைமர பாக நட்புக் கந்தாக
இனையதோர் காலை யீங்கு வருதல்
வருவ னென்ற கோனது பெருமையும்
அதுபழு தின்றி வந்தவ னறிவும்
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே

அதனால், தன்கோ லியங்காத் தேயத் துறையும்
சான்றோ னெஞ்சுறப் பெற்ற தொன்றிசை

4 - 6. "இடரொருவ ருற்றக்கா லீர்ங்குன்ற நாட, தொடர்புடையே மென்பார் சிலர்" (நாலடி. 113); "கட்டலர்தார் மார்ப கலியூழிக் காலத்துக், கெட்டார்க்கு நட்டாரோ வில்" பழ. 59.



அன்னோனை யிழந்தவிவ் வுலகம்
என்னா வதுகொ லளியது தானே.

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

அவன் வடக்கிருந்தானுழைச் சென்ற பிசிராந்தையாரைக் கண்டு பொத்தியார் பாடியது.

இ - ள்.—கருதுங்காலத்து வியக்குந் தன்மையையுடைத்து, எத்துணையும் பெரியதலைமையுடனே கூடியும் இவ்விடத்தே இவன் சிறப்புக்களைக் கைவிட்டுவரத் துணிதல்; இவன் இவ்வாறு துணிந்த அதனினும் வியக்குந் தன்மையையுடைத்து, வேற்றுவேந்தனது நாட்டின்கண் விளக்கம் அமைந்த சான்றோன் பாதுகாத்துப் புகழ்மேம்பாடாக நட்பே பற்றுக் கோடாக இத்தன்மைத்தாகிய ஓர் இன்னாக்காலத்து இவ்விடத்துவருதல்; இவ்வாறு வருவனென்று துணிந்துசொல்லிய வேந்தனது மிகுதியும் அவன் சொல்லிய சொற் பழுதின்றாக வந்தவனது அறிவும் வியக்குந்தோறும்

வியக்குந்தோறும் வியப்புக் கைமிக்கது; ஆதலால், தன்செங்கோல் செல்லாத தேயத்துறையும் அமைந்தோனது நெஞ்சைத் தன்னிடத்தேயுரித்தாகப்பெற்ற பழைய புகழையுடைய அப்பெற்றிப்பட்ட பெரியோனை இழந்த இத்தேயம் இடும்பையுறுங்கொல்லோ? [1]இதுதான் இரங்கத்தக்கது.—எ - று.

இதுவென்பது, அரசினைக் கைவிட்டு இறந்துபடத்துணிதலென்றுமாம். (உகள)

---

[1]'கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும்போல உணர்ச்சியொப்பின் அதுவே உடனுயிர்நீக்கும் உரிமைத்தாய நட்பினைப் பயக்கும்' (திருக்குறள், 785, பரிமேல்.); 'இதற்குக் கோப்பெருஞ்சோழன் துறந்துழிப் பிசிராந்தையாரும் பொத்தியாரும்போல்வார் துறந்தாரென்று கூறும் புறச்செய்யுட்கள் உதாரணம்' தொல். கற்பியல், சூ. 52, ந.

---

(உகஅ) பொன்னுந் துகிரு முத்து மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினுந் தொடைபுணர்ந்

---

1. பெருங். ௪. 17 : 75.

'தன்னின முடித்த லென்பதனால், பொன்னுந் துகிருமுத்து... மணியும் என எண்ணுங்காலும் இனமாயபொருளே எண்ணப்படுமென்பது கொள்க' தொல். கிளவி. சூ. 16, இளம்.; சே.; கல்.

2. "கல்லிற் பிறக்குங் கதிர்மணி" (நான்மணி. 7); "மலையிடைப் பிறவா மணியே யென்கோ" சிலப். உ : 77.


தருவிலை நன்கல மமைக்குங் காலை

ஒருவழித் தோன்றியாங் கென்றுஞ் சான்றோர்
சான்றோர் பால ராப
சாலார் சாலார் *பாலரா குபவே.

திணையும் துறையும் அவை.

†பிசிராந்தையார் வடக்கிருந்தாரைக் கண்ட கண்ணகனார் பாடியது.

இ - ள்.—பொன்னும் பவளமும் முத்தும் நிலைபெற்ற பெரிய மலை தரப்பட்ட விரும்பத்தக்க மணியும் ஒன்றற்கொன்று இடைநிலம்படச் சேய் நிலத்தினவாயினும் கோவைபொருந்தி அரிய விலையினையுடைய நல்ல அணிகலங்களைச் செய்யுங்காலத்து ஓரிடத்துத் தோன்றினாற்போல எந்நாளும் அமைந்தோர் அமைந்தோர்பக்கத்தாராவார்; அமைதியில்லார் அமைதியில்லார் பக்கத்தாராவர்.—எ - று.

சான்றோர்குழுவினைப் புகழுங்கருத்தாகலின், அவர்க்கேற்ற உவமம் கூறினார்; சாலாதார்க்கும் ஏற்றவுவமம் வருவித்துக்கொள்க.

தொடைபுணர்ந்து தோன்றியாங்கென இயையும். (உகஅ)

---

4. பெருங். ௧. 2 : 82.

5 - 6. "பண்காணுந் தமிழ்ப்புலவீ ரினத்தொடே யினஞ்சேரும் பரிசே போல" (தனிப்பாடல்); "நற்றா மரைக்கயத்தி னல்லன்னஞ் சேர்ந்தாற்போற், கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" மூதுரை, 24.

பி - ம். *பாலாரா குகவே. †பிசிராந்தையாரைக்கண்ட நத்தத்தனார் பாடியது.

---

(உகசு) உள்ளாற்றுக் கவலைப் புள்ளி நீழல்
முழூஉ வள்ளூர முணக்கு மள்ள
புலவுதி மாதோ நீயே

பலரா லத்தைநின் குறியிருந் தோரே.

**திணையும் துறையும் அவை.**

**அவன் வடக்கிருந்தானைக் கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார் பாடியது.**

---

1. “செல்லாற்றுக் கவலை” (குறுந். உசுரு : 2); “கனையெரி நிகழ்ந்த இலையி லங்காட், டுழைப்புறத் தன்ன புள்ளி நீழல்” அகநா. ருஎக.

2. புறநா. ருஉ0 : 13,



இ - ள்.—யாற்றிடைக்குறையுட் புள்ளிப்பட்ட மாநிழற்கண் இருந்து உடம்பாகிய முழுத்தசையை வாட்டும் வீர! நின் கருத்திற்கேற்ப நின்னோடு வடக்கிருந்தார் பலராதலான், யான் இதற்கு உதவாது பிற்பட வந்ததற்கு என்னை அவரோடு சொல்லி வெறுத்தி நீ.—எ - று.

யான் பிற்படவந்ததற்கு என்னைப் புலந்து என்னோடு சொல்லாடா திருந்தாய் நீயென்றும், இவனுடனே வடக்கிருந்தோர்களும் எதிரேற்றுக் கொள்ளாமைநோக்கி நின்குறிப்பிற்கு ஏற்பப் புலந்தார்பலரென்றும் உரைப்பினும் அமையும்.

‘உள்ளாற்றுக்கவலை’ என்பதற்கு வழிக்குள்ளாகிய நாற்றிசையுங் கூடிய இடமென்றுமாம்; கவர்த்தவழிக்குள்ளென்றுரைப்பாரும் உளர்.

[1]அரசுதுறந்து வடக்கிருந்து உயிர்நீத்த உள்ளமிகுதியான் மள்ள

[1]"திறைமன்ன ருய்ப்பத் திருவிற்பச் செங்கோ னடப்பக், குறைவின்றிக் கொற்ற முயரத் தெவ்வர் தேர்பணிய, உறைகின்ற காலத் தறங்கேட் டுருமுற்ற பாம்பின், அறிவன் னடிக்கீ ழரசஞ்சித் துறந்த வாறும்" சீவக. 27.

---

(உஉ0) பெருஞ்சோறு பயந்து பல்யாண்டு புரந்த
பெருங்களி றிழந்த பைதற் பாகன்
அதுசேர்ந் தல்கிய வழுங்க லாலை
வெளில்பா ழாகக் கண்டுகலுழ்ந் தாங்குக்
கலங்கினே னல்லனோ யானே பொலந்தார்த்
தேர்வண் கிள்ளி போகிய
பேரிசை மூதூர் மன்றங் கண்டே.

திணையும் துறையும் அவை.

அவன் வடக்கிருந்தானுழைச் சென்று மீண்டுவந்து உறையூர்கண்ட பொத்தியார் அழுது பாடியது.

இ - ள்.—பெரிய சோற்றையுண்டாக்கிப் பல்யாண்டு பாதுகாத்த பெரிய களிற்றை இழந்த வருத்தத்தினையுடைய பாகன் அவ்வியானை

---

1. பெருஞ்சோறு : புறநா. உ : 16, உகூ௬ : 5.
5. பொலந்தார் : புறநா. ௬ : 14, உஉ௪ : 4.
6. "தேர்வண் கிள்ளி" புறநா. ௪௯ : 10.

சேர்ந்து தங்கிய இரக்கத்தையுடைய கூடத்தின்கட் கம்பம் வறிதே நிற்கப் பார்த்துக்கலங்கின தன்மைபோல யான் இறந்துபடுதலின்றிக் கலங்கினேனல்லனோ? பொன்னான் இயன்ற மாலையையுடைய தேர்வண்மையைச் செய்யும் கிள்ளி போகப்பட்ட பெரியபுகழினையுடைய பழைய உறையூரின் மன்றத்தைப் பார்த்து?—எ - று.

மூதூர்மன்றங் கண்டு கலங்கினேனல்லனோவெனக் கூட்டுக.

மன்றம் - ஈண்டுச் செண்டுவெளி.

அழுங்கல் - முன்புள்ள ஆரவாரமுமாம்.

இறந்தவென்று சொல்லுதல் இன்னாமையால், போகியவென்றார். ()

---

(௨௨௧) பாடுநர்க் கீத்த பல்புக ழன்னே
ஆடுநர்க் கீத்த பேரன் பினனே
அறவோர் புகழ்ந்த வாய்கோ லன்னே
திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே
மகளிர் சாயன் மைந்தர்க்கு மைந்து
துகளறு கேள்வி யுயர்ந்தோர் புக்கில்
அனைய னென்னா தத்தக் கோனை
நினையாக் கூற்ற மின்னுயி ருய்த்தன்று

பைத லொக்கற் றழீஇ யதனை
வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்
நனந்தலை யுலக மரந்தை தூங்கக்
கெடுவி னல்லிசை சூடி

---

3 - 4. சிறுபாண். 207 - 18.

5. "மறவர் மறவ" பெரும்பாண். 455.

1 - 6. புறநா. ௨௯௧: 1 - 18.

8. புறநா. ௯ : 12, ௪௨ : 22.

7 - 8. "தவத்துறை மாக்கண் மிகப்பெருஞ் செல்வர், ஈற்றிளம் பெண்டி ராற்றுப் பாலகர், முதியோ ரென்னு ளிளையோ ரென்னுன், கொடுங்தொழி லாளன் கொன்றனன் குவிப்ப" மணி. ௮ : 97 - 100.

12. கெடு ; "கெடுவாக வையா துலகம்" குறள், 117.



நடுக லாயினன் புரவல னெனவே.[1]
திணையும் துறையும் அவை.
அவன் நடுகற்கண்டு அவர் பாடியது.

இ - ள்.—பாடுநர்க்குக்கொடுத்த பலபுகழினையும் உடையன்; கூத்தர்க்குக் கொடுக்கப்பட்ட மிக்க அன்பினையும் உடையன்; அறத்திறமுடையோர் புகழப்பட்ட நீதிநூற்குத்தக ஆராய்ந்து நடத்திய செங்கோலை உடையன்; சான்றோர் புகழப்பட்ட திண்ணிய நட்பினையுடையன்; மகளிரிடத்து மென்மையை யுடையன்; வலியோரிடத்து மிக்கவலியையுடையன்; குற்றமற்ற கேள்வியையுடைய அந்தணர்க்குப் புகலிடம்; அத்தன்மையையுடையோனென்று கருதாது அத்தகுதியையுடையோனை அவ்வாறு கருதாத கூற்றம் அவனது இனிய உயிர்கொடுபோயிற்று; அதனால், பையாப்புற்ற நம்முடைய சுற்றத்தை அணைத்துக்கொண்டு அக்கூற்றத்தை வைவோமாக வாரீர், மெய்யுரையையுடைய புலவீர்! *அகலிய இடத்தினையுடைய உலகம் துன்பமிகக் கேடில்லாத நல்ல புகழ்ச்சிமாலையைச்சூடி நடப்பட்ட கல்லாயினன் எம்மைப் பாதுகாப்போனெனச்சொல்லி.—எ - று.

ஈத்தபுகழ் ஈதலாலுளதாகியபுகழெனவும், ஈத்தவன்பு ஈத்தற்கு ஏதுவாகிய அன்பெனவும் கொள்க.

வாய்மொழிப்புலவீர்! அத்தக்கோனைக் கூற்றம் இன்னுயிருய்த்தது; அதனாற் புரவலன் கல்லாயினனென ஒக்கல் தழீஇ அதனை வைகம் வம்மோவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

சாயல், மைந்து, புக்கிலென்பன ஆகுபெயர். புக்கில்: வினைத்தொகை. [2]கேடென்பது கெடுவெனக் குறைந்துநின்றது. (உஉக)

---

12 - 3. புறநா. உகுசு : 1 - 4; "ஆடவர், பெயரும் பீடு மெழுதி யதர் தொறும், பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" (அகநா. கநுக); "செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட, கல்லேசு கவலை யெண்ணுமிகப் பலவே" மலைபடு. 388 - 9.

[1]மு. காஞ்சித்திணைத்துறைகளுள், மன் அடாது வந்த மன்னைக் காஞ்சிக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 24, ந.

[2]முதனிலைத் தொழிற்பெயரென்பர் பரிமேலழகர்; குறள், 117, உரை. பி - ம். * நல்ல.

(உஉஉ) அழலவிர் வயங்கிழைப் பொலிந்த மேனி
நிழலினும் போகாநின் வெய்யோள் பயந்த
புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வாவென்

3. “வீறுசால் புதல்வர்ப் பெற்றனை” பதிற். எச,





என்னிவ ணொழிந்த வன்பி லாள
எண்ணா திருக்குவை யல்லை
என்னிடம் யாதுமற் றிசைவெய் யோயே.

திணையும் துறையும் அவை.

அவனை, தன்மகன் பிறந்தபின் பெயர்த்துச்சென்று பொத்தியார் எனக்கு இடந்தாவென்று சொற்றது.

இ - ள். தீயால் விளங்கிய ஒளியையுடைய ஆபரணத்தாற் சிறந்த வடிவினையுடையளாய் நின் நிழலினும் ஒருபொழுதும் நீங்காத நீ விரும்பத்தக்க மனைவி பெறப்பட்ட புகழமைந்த பிள்ளையானவன் பிறந்தபின் வாவெனச் சொல்லி என்னை இவ்விடத்துநின்றும் போக்கிய என்னோடு உறவில்லாதவனே! உன்னோடு என்னிடை நட்பைக் கருதாதிருப்பை யல்லை; புகழைவிரும்புவோய்! நீ எனக்குக் குறித்த இடம் யாது? சொல்லுவாயாக.—எ - று.

மற்று : அசை.

அழல்போலப் [1]பாடஞ்செய்யும் மேனியெனினும் அமையும். (உஉஉ)

[1]பாடம் - ஒளி.

(உஉரு) பலர்க்குநிழ லாகி யுலகமீக் கூறித்
தலைப்போ கன்மையிற் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுக லாகியக் கண்ணும்
இடங்கொடுத் தளிப்ப மன்ற, வுடம்போ
டின்னுயிர் விரும்புங் கிழமைத்
தொன்னட் புடையார் தம்முழைச் செலினே.

திணையும் துறையும் அவை.

கல்லாகியும் இடங்கொடுத்த கோப்பெருஞ்சோழனை வடக்கிருந்த பொத்தியார் பாடியது.

இ - ள்.—பலர்க்கும் அருளுடைமையான் நிழலையொத்து உலகத்தார் மிகுத்துச் சொல்ல [1]உலகத்தையாளுந்தன்மை முடியச்செலுத்துதற்கு மறுமையை நினைத்தால் முடிவுபோகாமையின் வடக்கிருத்தற்கு வரைந்த சிறிய இடத்தின்கண் இருந்து உயிர்நீத்தலின் நிலைபெற நடப்பட்ட கல்லான இடத்தும் இடங்கொடுத்தளிப்பர் நிச்சயமாக; உடம்

3. நடுகல் : புறநா. உ௯௪ : 13.

[1]"தருமங் கைதா, மன்னுயிர்க் குறுவதே செய்து வைகினேன், என்னுயிர்க் குறுவதுஞ் செய்ய வெண்ணினேன்" கம்ப, அயோத்தி. மந்திர. 15.



போடு இனியவுயிர் விரும்புமாறுபோல விரும்பும் உரிமையையுடைய பழையதாகிய நட்பையுடையோர்தம்மிடத்தே செல்லின்.—எ - று.

மீக்கூறியென்பது மீக்கூறவெனத் திரிக்கப்பட்டது; ஆணைகூறியென்றுமாம்.

தொன்னட்புடையோர் தம்முழைச் செலின், இடங்கொடுத்தளிப் பவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

அவன் நட்பினை வியந்து கூறியது. (உஉங)

---

(உஉச) அருப்பம் பேணா தமர்கடந் ததூஉம்
துணைபுணர் ஆயமொடு தசும்புடன் றொலைச்சி
இரும்பா ணொக்கற் கடும்பு புரந்ததூஉம்
அறமறக் கண்ட நெறிமா ணவைபத்து
முறைநற் கறியுநர் முன்னுறப் புகழ்ந்த
தூவியற் கொள்கைத் துகளறு மகளிரொடு
பருதி யுருவிற் பல்படைப் புரிசை
எருவை நுகர்ச்சி யூப நெடுந்தூண்
வேத வேள்வித் தொழின்முடித் ததூஉம்
அறிந்தோன் மன்ற வறிவுடை யாளன்
இறந்தோன் றானே யளித்திவ் வுலகம்
அருவி மாறி யஞ்சுவரக் கடுகிப்
பெருவறங் கூர்ந்த வேனிற் காலைப்
பசித்த வாயத்துப் பயனிரை தருமார்
பூவாட் கோவலர் பூவுட னுதிரக்

---

1. "அரசுநிலை தளர்க்கு மருப்பமு முடைய" மலைபடு. 378.

7. "படையார் புரிசைப் பட்டினம்", "படையுடை நெடுமதில்" தேவாரம்.

8. "பொய்ப்பருந்துகா லொடுபறந்துபோய், மெய்ப்பருந்துடன் விண்ணிலாடவே" (தக்க. 507) என்பதையும், 'பொய்ப்பருந்தாவது யாகத்

துக்குச் செய்தபருந்து' என்னும் அதன் உரையையும் பார்க்க. "சுடுமனற் கலுழ னாகச் சுருதியின் படியே கோட்டி" வி. பா. இராசசூய. 91.

12 - 3. "அருவி மாமலை நிழத்தவு மற்றக், கருவி வானங் கடற் கோண் மறப்பவும், பெருவற னாகிய பண்பில் காலையும்" பொருந. 235-7.

15. பூ - கூர்மை; "பூவின்ற வேன்மன்னன்" (இறை. சூ. 17, மேற்.); "பூவெழு மழுவினாற் பொருது போக்கிய" (கம்ப. அயோத்தி. மந்திரப். 77); "அடைவாம்வை நிசிதம் பூவள் ளயில்வசி யாறுங் கூர்மை" சூடாமணி. எ : 16.



கொய்துகட் டழித்த வேங்கையின்
மெல்லியன் மகளிரு மிழைகளைந் தனரே.

திணையும் துறையும் அவை.
சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கருங்குழலாதனார் பாடியது.

இ - ள்.—அரிய அரண்களைப் பாதுகாவாது போரைச்செய்து அழித்ததுவும், துணையாய்க்கூடிய இனத்துடனேயுங்கூட மதக்குடங்களைச் சேரத்தகர்ந்து தொலைத்துப் பெரிய பாண்சுற்றமாகிய சுற்றத்தைப் பாதுகாத்ததுவும், அறத்தைத் தெளியவுணர்ந்த ஒழுக்கம் மாட்சிமைப்பட்ட அந்தணரது அவைக்களத்தின்கண் வேள்விக்குரிய முறைமையை நன்றாக அறியும் [1]சடங்கவிகள் அம்முறைமையை முன்னின்று காட்டப் பலரானும் புகழப்பட்ட தூய இயல்பையுடைத்தாகிய கற்பொழுக்கமாகிய கொள்கையையுடைய குற்றந்தீர்ந்த குலமகளிரோடு வட்டமாகிய வடிவினையுடைத்தாகிய பலபடையாகச் செய்யப்பட்ட மதிலாற் சூழப்பட்ட வேள்விச்சாலையுட் [2]பருந்துவிழுங்குவதாகச் செய்யப்பட்டவிடத்து

காட்டிய யூபமாகிய நெடிய கம்பத்து வேதத்தாற் சொல்லப்பட்ட வேள்வியினைச் செய்துமுடித்ததுவுமாகிய இவற்றுனுடைய பயனை நிச்சயமாக அறிந்த அறிவினையுடையோன்; அவன்றான் துஞ்சினன்; ஆதலால், இனி இவ்வுலகம் இரங்கத்தக்கது; அருவி நீர் மறுத்து உலகத்தார் அஞ்சும்பரிசு வெம்மையுற்றுப் பெரிய வற்கடமிக்க வேனிற்காலத்துப்பசித்த ஆயமாகிய பயன்படும் ஆனிரையை [3]இரக்கித்தல்செய்வாராகக் கூர்மைபொருந்திய கோடுவாளாற் கோவலரானவர்கள் பூக்களுடனேயுதிரக் கொம்புகளைக் கழித்து அதன்தழைச்செறிவையழித்த வேங்கையினையொப்ப மெல்லிய இயல்பினையுடைய உரிமைமகளிரும் அருங்கலவணிமுதலவாகிய அணிகளையொழித்தார்.—எ - று.

முறைநற்கறியுநர் முன்னுற வேள்வித்தொழின்முடித்ததூஉமென இயையும்.

எருவையென்றது, பருந்தாகச்செய்யப்பட்ட வடிவினை.

---

16 - 7. ஐங்குறு. உகூச.

[1]சடங்கவிகள் - ஷடங்கவித்துக்கள் ; ஆறங்கங்களையும் அறிந்தோர் ; "புத்தூர்ச் சடங்கவி மறையோன்" (பெரிய. தடுத்தாட் கொண்ட. 7) ; முறையைக் காட்டுவோர்க்கு உபதிருஷ்டாக்கள் என்பது பெயர்.

[2]பருந்துவடிவமாகச்செய்ததற்குக் கருடசயனம் என்று பெயர்.

[3]இரக்கித்தல் = ரக்ஷித்தல் - காத்தல்.

அறிவுடையாளன் இறந்தான்; மகளிரும் இழை களைந்தனர்; இவனை இழந்த உலகம் அளித்தெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

'எருவை நுவற்சி' என்று பாடமோதுவாரும் உளர்.

'ஆயத்துப் பயனிரை' என்பதற்கு ஆயத்திற்குப் பயனாகிய இரை யெனினும் அமையும். (உஉச)

---

(உஉரு) தலையோர் நுங்கின் றீஞ்சேறு மிசைய
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர், விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர
நிலமலர் வையத்து வலமுறை வளைஇ
வேந்துபீ டழித்த ஏந்துவேற் றானையொ
டாற்ற லென்பதன் றோற்றங் கேளினிக்
கள்ளி போகிய களரியம் பறந்தலை
முள்ளுடை வியன்காட் டதுவே நன்றும்
சேட்சென்னி நலங்கிள்ளி கேட்குவன் கொல்லென
இன்னிசைப் பறையொடு வென்றி நுவலத்
தூக்கணங் குரீஇத் தூங்குகூ டேய்ப்ப
ஒருசிறைக் கொளீஇய திரிவாய் வலம்புரி
ஞாலங் காவலர் கடைத்தலைக்
காலைத் தோன்றினு நோகோ யானே.

திணையும் துறையும் அவை.

சோழன் நலங்கிள்ளியை ஆலத்தூர்கிழார் பாடியது.

---

4. புறநா. ௬௧: 15.

7. மு. புறநா. உசுகு : 3 - 13, உ௬எ : 13.

9. சேட்சென்னிநலங்கிள்ளி : புறநா. உஎ : 10.

12 - 3. "வால்வெண் சங்கொடு வகைபெற் றோங்கிய, காலை முரசக் கனைகுர லியம்ப" (சிலப். கச : 13 - 4); "இயம்பும்வெண் சங்கெங்கும்", "குருகுக ளியம்பின வியம்பின சங்கம்" (திருவா. திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி); "புள்ளரையன் கோயில், வெள்ளை விளிசங்கின் பேரரவங் கேட்டிலையோ" திருப்பாவை, 6.



இ - ள்.—முன்செல்லும் [1] தூசிப்படையோர் பனையின்கண் உளதாகிய நுங்கினது இனிய செறிவை அயில, இடைச்செல்வோர் பழத்தினது செவ்விக்கனியை நுகர, பின்செல்வோர் நீங்கியவாயையுடைய பிசிருடனே சுடப்பட்ட கிழங்கினை நுகர இப்படி ஒழுங்குடைத்தாகி இடமகன்ற உலகத்து வலமுறையாகச் சூழ்ந்து மன்னரை வலிகெடுத்த மேம்பட்ட வேலையுடைய சேனையுடனே கூடிய வலியென்று சொல்லப்பட்டதன் விளைவை இனிக் கேட்பாயாக: கள்ளியோங்கிய களர்நிலமாகிய பாழ்பட்ட இடத்து முள்ளுடைத்தாகிய பெரிய புறங்காட்டின்கண்ணதாயிற்று, பெரிதும் சேட்சென்னிநலங்கிள்ளி கேட்பான்கொல்லோவென அஞ்சி, இனிய ஓசையையுடைய முரசுடனே வெற்றியைச் சொல்லாநிற்க முன்பு தூக்கணங்குருவியினது தூங்கப்பட்ட கூட்டையொப்ப ஒருபக்கத்தே

தூங்கப்பட்ட வலத்திலேபுரிந்த திரிந்த வாயையுடைய சங்கம்; இப்பொழுது உலகங்காக்கும் அரசாது வாயிலிடத்தே பள்ளியெழுச்சிக்காலத்தே தோன்றினும் அதனைக் கேட்டு இறந்துபடாது நோமளவினேனாயினேன்.
—எ - று.

முன்பு நலங்கிள்ளிசேட்சென்னி கேட்குவன்கொல்லென ஒரு சிறைக் கொளீஇய வலம்புரி இன்று வென்றி நுவலாநிற்கப் பறையொடு காலைத் தோன்றினும் யான் நோவேனெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

கேளினியென்றது நெஞ்சினை.

'வென்றிநுவலா' என்றும், 'காலைதோன்றின' என்றும் பாடமோதுவாரும் உளர். (உஉரு)

---

[1] தூசிப்படை - முன்படை ; சேனையின் முதலிற்செல்வோர் பனை நுங்கின் தீஞ்சேறுமிசையவென்றதும், இடையிற்செல்வோர் பனங்கனி மாந்தவென்றதும், கடையிற்செல்வோர் பனம்பிசிரையும் சுட்ட பனங்கிழங்கையும் நுகரவென்றதும் சேனையின் மிகுதியையும் அது செல்லுதற்குரிய காலநீட்சியையும் உணர்த்தி நின்றன.

---

(உஉசு) செற்றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்
உற்றன் றாயினு முய்வின் றுமாதோ
பாடுநர் போலக் கைதொழு தேத்தி
இரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்

---

3. "கைதொழூஉப் பரவி" முருகு. 252.

4. புறநா. உஉ0 : 5; "உயிரிக்கும் கொடுங்கூற்றி னுலையச் சொன்னான்" கம்ப. கையடை. 10.

மண்டமர் கடக்குந் தானைத்
* திண்டேர் வளவற் கொண்ட கூற்றே.[1]

திணையும் துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை மாறோக்கத்து நப்பசலையார் பாடியது.

இ - ள்.—தன்மனத்துள்ளே கறுவுகொண்டதாயினும் வெளிப்பட நின்று வெகுண்டதாயினும் உற்றுநின்று கையோடு மெய்தீண்டி வருத்திற்றாயினும் அதற்குப் பிழைத்தலுண்டாகாது; பாடுவாரைப்போலத் தோன்றி நின்று கையாற்றொழுது வாழ்த்தி இரந்து உயிர்கொண்டதாகல்வேண்டும்; பொன்னான் இயன்ற மாலையினையும் மண்டியபோரின்கண் எதிர்நின்று வெல்லும் படையினையும் திண்ணிய தேரினையுமுடைய வளவனைக் கொண்ட கூற்று.—எ - று.

பொலந்தார்வளவனென இயையும்.

கூற்றம் இரந்ததாகல்வேண்டும்; இம்மூன்றினுள் ஒன்றுசெய்யினும் பிழைப்பின்றெனக் கூட்டுக.

இஃது அவனாண்மைமிகுதியினையும் வண்மையினையும் வியந்து இரங்கிக் கூறியவாறு. (உஉசு)

5. புறநா. உகூ : 1.

[1]மு. காஞ்சித்திணைத்துறைகளுள், "கழிந்தோர் தேத்துக் கழிபடருறீஇ, ஒழிந்தோர் புலம்பிய கையறுநிலை" என்பதற்கும் (தொல். புறத்திணை. சூ. 19, இளம்.), மன் அடாது வந்த மன்னைக்காஞ்சிக்கும் (ஷை. ஷை. சூ. 24, ந.) மேற்கோள்.

பி - ம். *திண்டோள்.

---

(உஉஎ) நனிபே தையே நயனில் கூற்றம்
விரகின் மையின் வித்தட் டுண்டனை
இன்னுங் காண்குவை நன்வா யாகுதல்

---

1. உரிச்சொற்றொடருக்கும் (நன். சூ. 151, 259, 373, மயிலை.; நன். வி. சூ. 152, 374; இ. வி. சூ. 54, உரை), உரிச்சொல் பெயரை யடுத்துவந்ததற்கும் (நன். சூ. 441, மயிலை.), நனியென்னு முரிச்சொல் மிகுதியென்னும் பண்பை விளக்கியதற்கும் (ஷை. ஷை. 455; நன். வி. சூ. 456) மேற்கோள்.

2. புறநா. உ௬௦ : 13.



ஒளிறுவாண் மறவருங் களிறு மாவும்
குருதியங் குரூஉப்புனற் பொருகளத் தொழிய
நாளு மானான் கடந்தட் டென்றுநின்
வாடுபசி *யருத்திய பழிதீ ராற்றல்

நின்னோ ரன்ன பொன்னியற் பெரும்பூண்
வளவ னென்னும் வண்டுமூசு கண்ணி
இனையோற் கொண்டனை யாயின்
இனியார் மற்றுநின் பசிதீர்ப் போரே.

திணையும் துறையும் அவை.

அவனை ஆடுதுறை மாசாத்தனார் பாடியது.

இ - ள்.—மிகவும் அறிவுடையையல்லை, ஈரமில்லா கூற்றமே! நினக்குப் போவதொரு விரகில்லாமையினான் மேல் விளைந்து பயன்படும் விதையைக் குற்றியுண்டாய்; ஆயின் நினக்கு இவ்வாறுசொல்லிய வார்த்தை நல்லமெய்யாதல் இன்னமுங் காண்டை; ஒளிவிளங்கிய வாட்போரைவல்ல வீரரும் யானையும் குதிரையும் உதிரமாகிய நிறமுடைய அழகிய நீர்மிக்க போர்க்களத்தின்கண் மாய நாடோறும் அமையானாய் எதிர்நின்று கொன்று நாடோறும் நினதுமெய் வாடுதற்கேதுவாகிய பசிதீர்த்தற்கு ஊட்டிய வசையற்ற வலியையுடைய கொலைத்தொழிலுக்கு நின்னையொத்த பொன்னானியன்ற பேரணிகலத்தையுடைய வளவனென்று சொல்லப்படும் வண்டுகள் மொய்க்கப்படுங் கண்ணியையுடைய இத்தன்மையினையுடையோனை நீ கொண்டாயாயின், இனி நின்பசியைக் கெடுப்போர் யார்? சொல்லுவாயாக.—எ - று.

கூற்றமே! இத்தன்மையோனைக் கொண்டாயாயின், நின் பசியைத் தீர்ப்போர் இனி யார்? விரகின்மையின் வித்தட்டுண்டனை; நன்வாயாகுதல் இன்னுங் காண்குவையெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

நயன் - நியாயமுமாம். (உஉஎ)

4. "ஒளிறுவாண் மறவருந் தேரு மாவும், களிறுஞ் சூழ்தர" மணி. க : 68 - 9.

பி - ம். *யருக்கிய.

(உஉஅ) கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
இருடிணிந் தன்ன குரூஉத்திரட் பரூஉப்புகை
அகலிரு விசும்பி னூன்றுஞ் சூளை
நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே

1. மு. புறநா. உ௫௬ : 1.



அளியை நீயே யாங்கா குவைகொல்
நிலவரை சூட்டிய நீணெடுந் தானைப்
புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை
விரிகதிர் ஞாயிறு விசும்பிவர்ந் தன்ன
சேண்விளங்கு சிறப்பிற் செம்பியர் மருகன்
கொடிநுடங்கு யானை நெடுமா வளவன்
தேவ ருலக மெய்தின னாதலின்
அன்னோற் கவிக்குங் கண்ணகன் றாழி
வனைதல் வேட்டனை யாயி னெனையதூஉம்
இருநிலந் திகிரியாப் பெருமலை
மண்ணா வனைத லொல்லுமோ நினக்கே.

திணை - அது; துறை - ஆனந்தப்பையுள்.

அவனை *ஐயூர் முடவனார் பாடியது.

ஆனந்தப்பையுளாவது :—

[1]"விழுமங் கூர வேய்த்தோ ளரிவை
கொழுநன் வீயக் குழைந்தயங் கின்று."

இ - ள்.—அடுகலம்வனையும் வேட்கோவே! அடுகலம்வனையும் வேட்கோவே! இருள் நீங்கி ஓரிடத்தே செறிந்து நின்றாற்போன்ற நிறமுடைத் தாய்த் திரண்ட மிக்கபுகை அகலிய பெரிய ஆகாயத்தின்கட் சென்று தங் கும் சூளையையுடைய அகலிய இடத்தினையுடைய பழைய ஊரின்கட் கலம் வனையும் வேட்கோவே! இரங்கத்தகுவை; நீ என்ன வருத்தமுறுவைதான்? நிலவெல்லையின்கண் பரப்பிய மிக்க பெரிய சேனையினையுடைய அறிவு டையோர் புகழ்ந்த பொய்யாத நல்ல புகழினையும் பரந்த சுடரினையுமுடைய ஆதித்தன் வானத்தின்கண் பரந்தாலொத்த செய்மைக்கண்ணே விளங் கும் தலைமையையுடைய செம்பியர்மரபினுள்ளான், கொடிகள் நுடங்கா நின்ற யானையினையுடைய மிகப்பெரிய வளவன், அவன் தேவருடைய விண்ணுலகத்தை அடைந்தா னாகலான், அப்பெற்றிப்பட்டோனைக்

---

11 - 2. புறநா. உஉஅ, உடுசு, ஙகூச; "தாழ்வயி னடைப்போர் தாழியிற் கவிப்போர்" மணி. கூ : 67.

12 - 4. "மாயிருந் தாழி கவிப்பத், தாவின்று கழிகவெற் கொள்ளாக் கூற்றே" நற். உஎக.

[1]புறப்பொருள்வெண்பாமாலை, 266.

பி - ம். *உறையூர்.

கவிக்கும் இடமகன்ற தாழியை வனைதலை நீ விரும்பினையாயின் எப்படியும் பெரிய நிலவட்டம் உருளியாகப் பெரிய மேருமலை மண்ணாக வனைய இயலுமோ? இயலாதன்றே நினக்கு.—எ - று.

அடுக்கு விரைவின்கண் வந்தது.

கலஞ்செய்கோவே! வளவன் தேவருலகமெய்தினனாதலால், அன்னோற் கவிக்கும் தாழி வனைதல் வேட்டனையாயின் இருநிலம் திகிரியாக மாமேரு மண்ணாக வனைதலொல்லுமோ? ஒல்லாமையின் யாங்காகுவை? நீ இரங்கத்தக்காயெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இது சுற்றத்தார் இரங்கிக்கூறுதலின், ஆனந்தப்பையுளாயிற்று.

(உஉஅ)

---

(உஉகூ) ஆடிய லழற்குட்டத்
தாரிரு ளரையிரவில்
முடப்பனையத்து வேர்முதலாக்
கடைக்குளத்துக் கயங்காயப்
பங்குனியுய ரழுவத்துத்
தலைநாண்மீ னிலைதிரிய
நிலைநாண்மீ னதனெதி ரேர்தரத்

தொன்றுண்மீன் றுறைபடியப்
பாசிச் செல்லா தூசி முன்று

---

1. அழற்குட்டம் : "அழல்சேர் குட்டத் தட்டமி" (சிலப். உரு : 134); ஆடு - மேடராசி; அக்கினியை அதிதேவதையாகவுடைமையின் கார்த்திகைக்கு அழலென்பது பெயராயிற்று. அசுவதியின் நான்குகால் களும், பரணியின் நான்குகால்களும், கார்த்திகையின் முதற்காலும் மேட ராசிக்குரியன. பங்குனி மாதத்திற் கார்த்திகை நட்சத்திரமுள்ளதினம் பூர்வ ஷஷ்டி அல்லது ஸப்தமி யென்பது கணிதநூற்றுணிபாதலால், அத்தினத்தின் பாதிபிரவு நிறைந்த இருளையுடைத்தாயிற்று.

3. அனுடத்தின் வடிவமாகிய ஆறு நட்சத்திரங்களின் தொகுதி வளைந்த பனைமரம்போன்ற தோற்றமுடைமையின் அது முடப்பனை யெனப்பட்டது; 'அனுட மாறு முடப்பனை போலும்' என்பர்.

9. பாசி, ஊசியென்பன முறையே பிராசி, உதீசி யென்னும் வடமொழிச்சிதைவுகள் ; உச்சிமீனுக்கு முன் எட்டாவது மீன் அத்தமித்த லும் பின் எட்டாவது மீன் உதித்தலும் இயல்பு; 'உச்சி மீனுக் கெட்டாமீ னுதயமீன்' என்பர்.

தளக்கர்த்திணை விளக்காகக்
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி
ஒருமீன் விழுந்தன்றால் விசும்பி னானே
அதுகண், டியாமும் பிறரும் பல்வே றிரவலர்
பறையிசை யருவி நன்னாட்டுப் பொருநன்
நோயில னாயி னன்றுமற் றில்லென
அழிந்த நெஞ்ச மடியுளம் பரப்ப
அஞ்சின மெழுநாள் வந்தன் றின்றே
மைந்துடை யானை கைவைத் துறங்கவும்
திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவும்
காவல் வெண்குடை கால்பரிந் துலறவும்
காலியற் கலிமாக் கதியின்றி வைகவும்
மேலோ ருலக மெய்தின னாகலின்
ஒண்டொடி மகளிர்க் குறுதுணை யாகித்
தன்றுணை யாய மறந்தனன் கொல்லோ
பகைவர்ப் பிணிக்கு மாற்ற னசைவர்க்
களந்துகொடை யறியா வீகை
மணிவரை யன்ன மாஅ யோனே.[1]

திணையும் துறையும் அவை.

[2]கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை இன்னநாளிற்றுஞ்சுமென அஞ்சி, அவன் துஞ்சியவிடத்துக் கூடலூர் கிழார் பாடியது.

5 - 12. புறநா. உச : 24 - 5; பங்குனிமாதத்தில் நட்சத்திரம் வீழின், இராசபீடை என்பர்; "ஆடு கயறே டனுச்சிங்கத் தெழுமீன் விழுமே லரசழிவாம்" என்பது சோதிடநூல்.

14. புறநா. கஉகு : 8, அடிக்.

19. புறநா. கரு : 1.

22. புறநா. உகரு : 10, உஉஅ : 11, உசக : 11.

[1]ழ. பாடாண்டிணைத்துறைகளுள், 'அச்சமு முவகையு மெச்ச மின்றி, நாளும் புள்ளும் பிறவற்றி னிமித்தமுங், காலங் கண்ணிய ஓம்படை' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. 30, இளம்.); 'ஆடிய லழற் குட்டத்து...மாஅயோனே : இதனுள், பாடாண்டலைவனது நாண்மீனை வீழ்மீன் நலிந்தமைபற்றிக் கூறியது' ஷை. ஷை. சூ. 36, ந.

[2]புறநா. உஉ, கருத்தின் அடிக்குறிப்பு.



இ - ள்.—மேடவிராசிபொருந்திய கார்த்திகைநாளின் முதற்காலின்கண் நிறைந்த இருளையுடைய பாதியிரவின்கண் முடப்பனைபோலும் வடிவையுடைய அனுடநாளின் [1]அடியின்வெள்ளிமுதலாகக் கயமாகிய [2]குளவடிவுபோலும் வடிவையுடைய புனர்பூசத்துக் கடையின்வெள்ளி எல்லையாக விளங்கப் பங்குனிமாதத்தினது முதற்பதினைந்தின்கண் உச்சமாகிய உத்தரம் அவ்வுச்சியினின்றும் சாய அதற்கு எட்டாமீனாகிய மூலம் அதற்கெதிரே எழாநிற்க அந்த உத்தரத்திற்கு முன்செல்லப்பட்ட எட்டாம் மீனாகிய மிருகசீரிடமாகிய நக்கத்திரம் துறையிடத்தே தாழக் கீழ்த்திசையிற் போகாது வடதிசையிற் போகாது கடலாற் சூழப்பட்ட பூமிக்கு விளக்காக முழங்கா நின்ற தீப்பரக்கக் காற்றாற்பிதிர்ந்து கிளர்ந்து ஒரு மீன் வீழ்ந்தது வானத்தினின்றும்; அதனைப் பார்த்து யாமும் பிறருமாகிய

பல்வேறு வகைப்பட்ட இரவலர் எம்முடைய பறையொலிபோலும் ஒலியையுடைய அருவியையுடைய நல்ல மலைநாட்டுக்கு வேந்தனாகியவன் நோயையுடையனல்லனாகப்பெறின் அழகிதென இரங்கிய நெஞ்சத்துடனே மடிந்தவுள்ளம் பரப்ப யாம் அஞ்சினேம்; அஞ்சினபடியே ஏழாம் நாள் வந்ததாகலின் இன்று, வலியையுடைய யானை கையை நிலத்தே யிட்டுவைத்துத் துஞ்சவும், திண்ணிய வாராற் பிணிக்கப்பட்ட முரசம் கண்கிழிந்து உருளவும் உலகிற்குக் காவலாகிய வெண்கொற்றக்குடை கால் துணிந்து உலறவும் காற்றுப்போலும் இயலையுடைய மனஞ்செருக்கிய குதிரைகள் கதியின்றிக் கிடக்கவும் இப்படிக்கிடக்கத் தேவருலகத்தை அடைந்தான்; ஆகையாலே, ஒள்ளிய வளையையுடைய மகளிர்க்கு மேவப்பட்ட துணையாகித் தனக்குத் துணையாகிய மகளிரையும் மறந்தான் கொல்லோ? பகைவரைப் பிணித்துக்கொள்ளும் வலியையும் நச்சியோர்க்கு அளந்துகொடுத்தலறியாத வண்மையையுமுடைய நீலமலைபோலும் மாயோன்.—எ - று.

மன்னும், தில்லும் அசை.

கயத்துக் குளக்கடையென்க.

[3]நற்றிசையாகிய கிழக்கும் வடக்குஞ் செல்லாது தீத்திசையாகிய தெற்கும் மேற்குமாகிய இரண்டனுள் ஒருதிசைக்கண் வீழ்ந்ததென்றும்

---

[1] அடியின் வெள்ளி - முதல் நட்சத்திரம்.

[2] புனர்பூசம் கயமாகிய குளவடிவமுடையது; அதனால், அது கயமென்றும், குளமென்றும், எரியென்றும் பெயர்பெறும்; "அதிதி நாள் கழை யாவண மேரி, புனர்தம் கரும்பிவை புனர்பூச மாகும்" பிங்கலந்தை.

[3] 'இனி மங்கலமாபிற் காரியஞ்செய்வார் வடக்கும் கிழக்கும் நோக்கியும் சிந்தித்தும் நற்கருமங்கள் செய்வாராதலின் மங்கலமாகிய வட

திசையை முற்கூறினர்' (தொல். பாயிரம், ந.); தண்டி. சூ. 108, மேற்.



ஆம்; அன்றி வடக்குங்கிழக்குஞ் செல்லாதெனவே வடகிழக்கே வீழ்ந்த தென்றுமாம்.

படவென்றல் இன்னுமையிற் கைவைத்துறங்கவும் கண்கிழிந்துருள வும் கால்பரிந்துலறவும் கதியின்றிவைகவுமெனத் தகுதிபற்றிக் கூறப் பட்டன.

மாயோன் மகளிர்க்குறுதுணையாகித் தன்றுணையாயம் மறந்தனனோ? இல்லையோ? யாம் மறவாநிலைமையமாயினமென இரங்கிக் கூறியவாறு.

'அஞ்சின மெழுநாள் வந்தன் றின்றென' என்பதூஉம் பாடம். ( )

---

(உ௩௦) கன்றம ராயங் கானத் தல்கவும்
வெங்கால் வம்பலர் வேண்டுபுலத் துறையவும்
களமலி குப்பை காப்பில வைகவும்
விலங்குபகை கடிந்த கலங்காச் செங்கோல்
வையகம் புகழ்ந்த வயங்குவினை யொள்வாட்
பொய்யா வெழினி பொருதுகளஞ் சேர
ஈன்றோ ணீத்த குழவி போலத்
தன்னமர் சுற்றந் தலைத்தலை யினையக்

கடும்பசி கலக்கிய விடும்பைகூர் நெஞ்சமொடு
நோயுழந் து வைகிய வுலகினு மிகநனி
நீயிழந் தனையே யறனில் கூற்றம்
வாழ்தலின் வரூஉம் வயல்வள னறியான்
வீழ்குடி யுழவன் வித்துண் டாஅங்
கொருவ னுருயி ருண்ணு யாயின்
நேரார் பல்லுயிர் பருகி
ஆர்குவை மன்னோவவ னமரடு களத்தே.

திணை - அது; துறை - கையறுநிலை.

அதியமான் தகடூர் பொருதுவீழ்ந்த எழினியை அரிசில்கிழார் பாடியது.

---

6. எழினி : புறநா. கடுஅ : 8 - 9; அகநா. ருசு, கoரு, ககஎ, உகக.
7. புறநா. ச : 18, அடிக்.
11. புறநா. உகo : 8. 13. புறநா. உஉஎ : 2.



இ - ள்.—கன்றைமேவிய ஆனிரை மேய்ந்தகாட்டிடத்தே பிறிதொன்றால் ஏதமின்றிக் கிடப்பவும் சுரத்தில் நடத்தலால் வெம்மையுற்ற காலினையுடைய வழிபோவார் தாம்வேண்டியவிடத்தே தங்கவும் களத்தின்கண் நிறைந்த நெற்பொலி காவலின்றியே கிடப்பவும் எதிரில்நின்று தடுக்கும் பகையைத் துரந்த நிலங்கலங்காத செவ்விய ஆட்சியினையும்

உலகத்தார் புகழ்ந்த விளங்கிய போரைச்செய்யும் ஒள்ளிய வாளினையும் தப்பாத மொழியினையுமுடைய எழினி பொருது போர்க்களத்தின் கண்ணே வீழப் பெற்றதாயாற் கைவிடப்பட்ட உண்ணாத குழவியை யொப்பத் தன்னைமேவிய கிளை இடந்தோறும் இடந்தோறும் வருந்த மிக்க பசிவருத்திய கலக்கமுற்ற துன்பமிக்க நெஞ்சமோடு அவனை இழந்து வருத்தமுற்றுக்கிடந்த உலகத்து விதனத்தினும் மிகப் பெரிதாக நீ இழந் தாய், அறமில்லாத கூற்றமே! வாழ்தலேதுவாகவரும் வயலிடத்து விளையும் வருவாயையறியானாய்த் தளர்ந்த குடியையுடைய உழவன் விதையை உண்டாற்போல இந்த ஒருவனது பெறுதற்கரிய உயிரை உண் டிலையாயிற் பகைவருடைய பலஉயிரையும் பருகி நிறைவை, அவன் போரிற் பகைவரைக் கொல்லும் களத்தின்கண்.—எ - று.

மன் : கழிவின்கண் வந்தது.

உயிர் உண்ணவும் பருகவும் படுவதன்றாயினும் அவ்வாறு கூறுதல், [1]"அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப், பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பருதி" என்றாற்போல [2]ஓரணிகுறித்து நின்றது.

எழினி களஞ்சேர ஒருவனாருயிர் உண்ணாயாயின், அவன் அமரடு களத்துப் பல்லுயிரும் பருகி ஆர்குவை; அதுகழிந்ததேயெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

'கடும்பசி கலங்கிய' என்றும் பாடம். (உ௩0)

---

[1]பெரும்பாணாற்றுப்படை, 1 - 2.

[2]ஓரணியென்றது, சமாதியென்னும் அலங்காரத்தை.

---

(உ௩க) எறிபுனக் குறவன் குறைய லன்ன

கரிபுற விறகி னீம வொள்ளழற்
குறுகினுங் குறுகுக குறுகாது சென்று
விசும்புற நீளினு நீள்க பசுங்கதிர்த்
திங்க ளன்ன வெண்குடை

5. புறநா. ௩ : 1, ௨௨ : 11 - 2, ௩௩௨ : 1.



ஒண்ஞாயி றன்னோன் புகழ்மா யலவே.

*திணையும் துறையும் அவை.

†அதியமான் நெடுமானஞ்சியை ஔவையார் பாடியது.

இ - ள்.—வெட்டிச்சுட்ட கொல்லைநிலத்துக் குறவனால் தறிக்கப் பட்ட துண்டம்போன்ற கரிந்த புறத்தையுடைய விறகால் அடுக்கப்பட்ட ஈமத்தின்கண் எரிகின்ற ஒள்ளிய அழலின்கண் உடல் சுடச் சென்று அணுகினும் அணுகுக; அவ்வாறு அணுகாதுபோய் வறிதே ஆகாயத்தையுற ஓங்கினும் ஓங்குக; குளிர்ந்த சுடரையுடைய மதிபோலும் வெண்கொற்றக் குடையையுடைய ஒள்ளிய ஞாயிற்றையொப்போனது புகழ் மாயா. —எ - று.

ஈமமென்பது பிணஞ்சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு.

இனி, ஈமவொள்ளழல் இவனுடல் சிதையாமற் சிறுகினுஞ் சிறுகுக; அன்றிச் சிதையும்படி சென்று நீளினும் நீளுக; இவன் புகழ் மாயா வெனினும் அமையும்.

'எரிபுனக் குறவன்' என்று பாடமோதுவாரும் உளர். (உ௩௧)

2 - 6. புறநா. உ௩௧ : 20 - 21.

பி - ம். * திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை. † அவனை அவர் பாடியது.

---

(உ௩உ) இல்லா கியரோ காலை மாலை
அல்லா கியர்யான் வாழு நாளே
நடுகற் பீலி சூட்டி நாரரி
சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ
கோடுயர் பிறங்குமலை கெழீஇய
நாடுடன் கொடுப்பவுங் கொள்ளா தோனே.

* திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—அவனையின்றிக் கழிகின்ற காலையும் மாலையும் இனி இல்லை யாகுக; யான் உயிர்வாழுநாளும் எனக்கு ஒருபயன்படாமையின் அவை

1. இல்லாகியர் : புறநா. க௩0 : 5.
3. புறநா. உ௬௪ : 3 - 4.

பி - ம். * திணை : தும்பை; துறை - பாண்பாட்டு.

யல்லவாக; நடப்பட்ட கல்லின்கட் பீலியைச் சூட்டி [1]நாரால் அரிக்கப்பட்ட தேறலைச் சிறியகலத்தான் உகுப்பவும் அதனைக் கொள்வனோ, கொள்ளானோ சிகரமோங்கிய உயர்ந்த மலைபொருந்திய நாடுமுழுவதும் கொடுப்பவும் கொள்ளாதவன்?—எ - று.

நாடுடன் கொடுப்பவும் கொள்ளாதோன் நாரரி சிறுகலத்துகுப்பவும் கொள்வன் கொல்லோவெனக் கூட்டி வினைமுடிவு செய்க. (உஙஉ)

[1]புறநானூறு, உகஎ : 5 - 6.

---

(உஙங) பொய்யா கியரோ பொய்யா கியரோ
பாவடி யானை பரிசிலர்க் கருகாச்
சீர்கெழு நோன்றா ளகுதைகட் டோன்றிய
பொன்புனை திகிரியிற் பொய்யா கியரோ
இரும்பா ணொக்கற் றலைவன் பெரும்பூட்
போரடு தானை யெவ்வி மார்பின்
எஃகுறு விழுப்புண் பலவென
வைகுறு விடிய லியம்பிய குரலே.

திணையும் துறையும் அவை.

வேள் எவ்வியை வெள்ளெருக்கிலையார் பாடியது.

3. அகுதை : புறநா. கூசஎ : 5; "இன்கடுங் கள்ளி னகுதை" (குறுந். உகூஅ; அகநா. எசு); "நன்மா வீசும் வண்மகி ழகுதை", "வயங்கு பெருந் தானை யகுதை" அகநா. ககஉ, உ0அ.

5. "பாண ரொக்கல்" சிற். 400.

6. எவ்வி: புறநா. உச : 18, உ0உ : 14; "எவ்வி யிழந்த வறுமையாழ்ப் பாணர்" (குறுந். கக); "வாய்வாள், எவ்வி வீழ்ந்த செரு விற் பாணர், கைதொழு மரபின் முறித்திடூஉப் பழிச்சிய", "பயங்கெழு வைப்பிற் பல்வே லெவ்வி", "நீடூர் கிழவோன், வாய்வா ளெவ்வி யேவன் மேவார், நெடுமிடல் சாய்த்த பசும்பூட் பொருந்தில்......கள்ளுடைப் பெருஞ்சோற் றெல்லிமி ழன்ன, கவ்வையா கின்றாற் பெரிதே", "நரை மூ தாளர் கைபிணி விடுத்து, நனைமுதிர் தேற லுணீயர்க் கீயும், பொலம்பூ ணெவ்வி" அகநா. ககடு, கஉசு, உசுசு, ௩சுசு.

7. "விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள், வைக்குந்தன் னாளை யெடுத்து" குறள், 776.



இ - ள்.—பொய்யாகுக; பொய்யாகுக; பரந்த அடியினையுடைய யானையைப் பரிசிலர்க்குக் குறைவறக் கொடுக்கும் சீர்மைபொருந்திய வலிய முயற்சியையுடைய அகுதையிடத்து உளதாகிய பொன்னாற் செய்யப்பட்ட ஆழிபோலப் பொய்யாகுக; பெரிய பாண்சுற்றத்திற்கு முதல்வன், பேரணிகலத்தினையுடைய, போரின்கட் கொல்லும் படையினை யுடைய எவ்வியது மார்பின்கண் வேல் தைத்த சிறந்தபுண் பலவென வைகுதலுற்ற விடியற்காலத்துச் சொல்லிய வார்த்தை.—எ - று.

பெரும்பூண் மார்பென இயைபும்.

திகிரியென்றது, திகிரி தைத்ததென்று பிறந்த வார்த்தையை.

பொன் : ஈண்டு இரும்பு.

அடுக்கு விரைவின்கண் வந்தது.

இயம்பிய குரல் பொய்யாகியரெனக் கூட்டுக. (உ௩௩)

---

(உ௩௪) நோகோ யானே தேய்கமா காலை

பிடியடி யன்ன சிறுவழி மெழுகித்
தன்னமர் காதலி புன்மேல் வைத்த
இன்சிறு பிண்டம் யாங்குண் டனன்கொல்
உலகுபுகத் திறந்த வாயிற்
பலரோ டுண்டன் மரீஇ யோனே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—நோவக்கடவேனோ யான்? எனது வாழக்கடவ மிக்க நாள் மாய்வதாக; பிடியினது அடிபோன்ற சிறிய இடத்தினை மெழுகித் தன்னை மேவப்பட்ட காதலி புன்மேல் வைக்கப்பட்ட இனிய சிறிய பிண்டத்தை எவ்வாறு உண்டான்கொல்லோ? [1]உலகத்தார் யாவரும் புகும்பரிசு திறந்த வாயிலையுடைய பலரோடுங் கூடி உண்டலை மருவியோன்.—எ - று.

இன்சிறு பிண்டமென்றது இகழ்ச்சிக்குறிப்பு.

பலரோடுண்டலை மரீஇயோன் பிண்டம் யாங்கு உண்டனன் கொலெனக் கூட்டுக. (உ௩௪)

---

1. 'செய்கென்பது, நோகோ யானே யெனப் பெயரொடு முடிந்த தாலெனின் அவ்வாறு வருவனவுளவேனும் சிறுபான்மை; வினைகோடலே பெரும்பான்மை யென வுணர்க' (தொல். வினை. சூ. 7, கல். ந.) 'செய்கென்பது, நோகோ யானே யெனச்சிறுபான்மை பெயர்கோடல்

உரையிற்கொள்க' இ. வி. சூ. 237, உரை.

[1]"உலக விடைகழி" சிலப். ௧0 : 27.





(உ௩ரு) சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே
அம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்கு மன்னே
நரந்த நாறுந் தன்கையாற்

---

1. 'மன்' என்னும் இடைச்சொல் கழிவின்கண் வந்ததற்கு மேற்கோள் (தொல். இடை. சூ. 4, இளம். சே. தெய்வச். கல். ந.; நன். சூ. 431, மயிலை.; நன். வி. சூ. 432 ; இ. வி. சூ. 263, உரை); 'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே யென்புழி மன்னைச்சொல் இனி அது கழிந்ததென்னும் பொருள்குறித்து நின்றது காணென்றாற் பொருளுணராதானை அரிதாகப்

பெற்ற கள்ளை எக்காலமும் எமக்குத் தருகின்றவன் துறக்கத்துச் சேறலின் எமக்குக் கள்ளுண்டல் போயிற்றென்றல் இதன் பொருளெனத் தொடர் மொழிகூறிப் பொருளுணர்த்துக' (தொல். உரி. சூ. 94, ந.); 'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே யென்றது உளப்பாட்டுத்தன்மையும் படர்க் கையும்பற்றி வந்தது' (ஷை. எச்ச. சூ. 49, ந.); ஒரூஉவண்ணத்திற்கும் (தொல். செய். சூ. 228, பேர்.), அளவடிக்கும் (ஷை. ஷை. ஷை. 38, ந.) மேற்கோள்.

2. 'பெரியகட்பெறினே : என இருசீரடி வந்ததாலெனின், அதனைச் சொற்சீரடியென்று கொள்க', 'பெரியகட் பெறினே: என்பது சொற்சீராகி அகவலுட்பயிலாது வந்தது' தொல். செய். சூ. 69 ,215, பேர்.

1 - 2. ஒரூஉவண்ணத்திற்கு மேற்கோள்; தொல். செய். சூ. 227, ந.

1 - 3. 'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே: என்பதன்கண் முதலடி நாற்சீரான் வந்தது; இரண்டாமடி ஆசிரியத்தளையொடு பொருந்தி அறுசீரடியாகி வந்தது' தொல். செய். சூ. 60, இளம்.

4. நெடிலடிக்கு மேற்கோள்; தொல். செய். சூ. 38, ந.

4 - 5. 'சிறுசோற்றானும்......கலத்தன்மன்னே : என்பன ஐஞ் சீரான் வந்த ஆசிரியவடி' தொல். செய். சூ. 63, பேர்.

6 - 7. ஆசிரியத்துள் ஐஞ்சீரடி அருகி வந்ததற்கு மேற்கோள்; யா. வி. ஒழிபு. சூ. 2.

4 - 7. 'சிறுசோற்றானு நனிபல கலத்தன் மன்னே: என்பது முதலாக நான்கடி ஆசிரியத்துள் ஐஞ்சீரடுக்கி வந்தன' தொல். செய். 63, ந.



புலவு நாறு மென்றலை தைவரு மன்னே

*அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் †துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் ‡பாவை சோர
அஞ்சொ னுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன்
‡அருநிறத் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப், பாடுநரு மில்லைப் §பாடுநர்க்கொன் றீகுநரு மில்லைப்
பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்

---

8 - 9. 'நரந்தநாறும்...தைவருமன்னே : என முச்சீரடி இடையும் ஒன்று வந்ததாலெனின், தோற்றமென்றதனான் எருத்தடி முச்சீராய காலத்துக் குட்டம் பட்டும் இனிது விளங்கும்', 'நரந்தநாறும்...மன்னே: என்றவழி எண்சீராதலான் இரண்டு நாற்சீரடி வந்தனவென்று கோடு மன்றே தூக்கின்றாயி னென்பது' தொல். செய். சூ. 69, 87, பேர்.

1 - 9. 'இது பலவற்றின் நிலையாமைகூறி இரங்குதலின் மன்னைக் காஞ்சி என வேறு பெயர் கொடுத்தார்; இது பெரும்பான்மை மன் என்னும் இடைச்சொற்பற்றியே வருமென்றற்கு மன் கூறினார்......சிறிய கட்பெறினே...மன்னே: என இப்புறப்பாட்டு மன் அடுத்து அப்பொருள் தந்தது' தொல். புறத்திணை. சூ. 24, ந.

2 - 9. 'இருசீர்முதல் ஐஞ்சீர்காறும் பரந்து பட்ட அகவலோசையை, பெரியகட் பெறினே எனச் சொற்சீரடியாகவும், யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே என அளவடியாகவும்; நரந்த நாறுந் தன் கையால் எனச் சிந்தடியாகவும், சிறுசோற் றானு நனிபல கலத்தன்

மன்னே என நெடிலடியாகவும் தூக்குத்துணிந்தவாறு காண்க; இங்ஙனம் தூக்கின்றென, நாந்த நாறுந் தன்மையாற் புலவு நாறு மென்றலை தைவரு மன்னே என்றதனை இரண்டு நாற்சீரடியாக அலகிட அகவலோசை பிறவாமை யுணர்க' தொல். செய். சூ. 87, ந.

16. மு. புறநா. ௩௦௭ : 1; குறுந். ௧௭௬ : 5, ௩௨௫ : 4.

கொல் என்னும் இடைச்சொல் இரக்கங்குறித்து வந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 420, மயிலை.

18. பகன்றை: புறநா. ௧௬ : 14; "பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்" பதிற். ௭௬ : 12.

பி - ம். *அருங்கலை. †துளையிரப்போர். ‡பார்வை. ‡‡திருநிறத்திலங்கிய. §பாநெருக்கொன் றீயுகரும்.



சூடாது வைகியாங்குப் பிறர்க்கொன்
றீயாது வீயு முயிர்தவப் பலவே.[1]

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமானஞ்சியை ஔவையார் பாடியது.

இ - ள்.—சிறிய அளவினையுடைய மதுவைப் பெறின் எங்களுக்குத் தருவன்; அது கழிந்தது! பெரிய அளவினையுடைய மதுவைப் பெற்றானாயின் அதனை யாமுண்டு பாட எஞ்சிய மதுவைத் தான் விரும்பி நுகர்வான்; அது கழிந்தது! சோறு எல்லார்க்கும் பொதுவாதலாற் சிற்றளவினையுடைய சோற்றின்கண்ணும் மிகப்பல கலத்தோடுங்கூட உண்பன்; அது கழிந்தது!

18 - 9. "அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ வாயினும், கள்ளிமேற் கைந்நீட்டார் சூடும்பூ வன்மையால்" நாலடி. 262.

20. 'தவ' என்னும் உரிச்சொல் மிகுதியாகிய குறிப்பை யுணர்த்து வதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 93, சே.; ந. இ. வி. சூ. 281, 287, உரை.

18 - 20. "பொய்யாது வைகிய கோதை போல, மெய்சாயினை" நற். கக.

[1]ழ. காஞ்சித்திணைத்துறைகளுள் 'இன்னனென் றிரங்கிய மன்னை' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. 19, இளம்.); 'சிறியகட் பெறினே......தவப் பலவே : இப்பதினேழடி ஆசிரியத்துள் ஏழாமடியும் பன்னிரண்டாமடியும் மூச்சீரான் வந்தன; மூன்றும்அடி முதலாக ஆறும் அடி யீறாக நான்கடியும் பதினலாம் அடியும் ஐஞ்சீரான் வந்தன; இரண் டாம் அடியும் பதினொன்றும் அடியும் அறுசீரான் வந்தன; ஏனைய நான்கு சீரான் வந்தன; இவ்வாறு வருதலின் அடிமயக்காசிரியமாயிற்று' (தொ. செய். சூ. 112, இளம்.); 'சிறியகட் பெறினே...பலவே : இதனுள், நரந்த நாறுந்தன்கையால் எனவும், அருநிறத் தியங்கிய வேலே எனவும் தனித்து வந்தன; பெரியகட் பெறினே என்பது சொற்சீரடி; இதனைக் குறளடி யாக்கிக் குறளடியும் வருமென்பர் பின்பு நூல்செய்த ஆசிரியர்' (தொ. செ. செ. 69, ந.); 'சிறியகட் பெறினே......பலவே : இதனுள் இருசீரும் மூச்சீரும் இடையிடையே வந்தன' (யா. வி. செய். சூ. 19; யா. கா. செய். சூ. 3); 'சிறிய கட்பெறினேயென்னும் இணைக்குறளாசிரியப்பாவினுள் ஐஞ்சீரடியும் அருகிவந்தனவெனக் கொள்க' (யா. வி. செய். சூ. 40);

'இருசீரடியும் முச்சீரடியும் இடையிடை வந்த இணைக்குறளாசிரியப்பாவிற் குச் செய்யுள்:—சிறியகட் பெறினே......பலவே' (இ. வி. சூ. 734, உரை); இளம்பூரணர் கொண்ட பாடப்பகுதி அகப்படாமையால், இச்செய்யுளை அவர் கருத்தின்படி 17 - அடியாகப் பிரித்தற்கு இயலவில்லை.



உண்பன்; அது கழிந்தது! என்போடுகூடிய ஊன்றடியுளதாகிய இட முழுதும் எங்களுக்கு அளிப்பன்; அது கழிந்தது! அம்போடு வேல்தைத்து உருவும் இடமாகிய போர்க்களமுழுதும் தான் சென்றுநிற்பன்; அது கழிந் ததே! தான் காதலிப்பார்க்கு மாலை சூட்டுதலான் நரந்தப்பூ நாறும் தன்னுடைய கையால் தான் அருளுடைமையிற் புலால்நாறும் எம்முடைய தலையைத் தடவுவன்; அது கழிந்ததே! அரிய தலைமையையுடைய பெரிய பாணரது அகலிய மண்டையின்கண் துளையையுருவி இரப்பவர் கையுளும் தைத்துருவித் தன்னாற் புரக்கப்படும் சுற்றத்தாரது புல்லிய கண்ணிற்பாவை ஒளிமழுங்க அழகிய சொல்லை ஆராயும் நுண்ணிய ஆராய்ச்சியையுடைய அறிவினையுடையோர் நாவின்கண்ணே போய் வீழ்ந்தது, அவனது அரிய மார்பத்தின்கண் தைத்த வேல்; எமக்குப் பற்றா கிய எம்மிறைவன் எவ்விடத்துள்ளான்கொல்லோ? இனிப் பாடுவாரும் இல்லை; பாடுவார்க்கு ஒன்றீவாரும் இல்லை; குளிர்ச்சியையுடைய நீரை யுடைய துறையின்கட் பகன்றையினது தேனைப்பொருந்திய பெரிய மலர் பிறராற் சூடப்படாது கழிந்தாற்போலப் பிறர்க்கு ஒருபொருளைக் கொடுக்காது மாய்ந்துபோம் உயிர் மிகப்பல.—எ - று.

அவன்ிறத்து உருவிய வேல் அவனுக்கு இறந்துபாட்டைச்

செய்தலோடே பாணர் முதலாயினார்க்கும் இறந்துபாட்டினைச் செய்தலான் ஒருகாலத்தே யாவரிடத்தும் தைத்ததென்றாராகக்கொள்க.

மன் கழிவின்கண் வந்தது. (உஙரு)

---

(உஙசு) கலையுணக் கிழிந்த முழவுமருள் பெரும்பழம்
சிலைகெழு குறவர்க் கல்குமிசை வாகும்
மலைகெழு நாட மாவண் பாரி
கலந்த கேண்மைக் கொவ்வாய் நீயெற்
புலந்தனை யாகுவை, புரந்த யாண்டே
பெருந்தகு சிறப்பி னட்பிற் கொல்லா
தொருங்குவரல் விடாஅ தொழிகெனக் கூறி
இனையை யாதலி னினக்கு மற்றியான்
மேயினே னன்மை யானே யாயினும்
இம்மை போலக் காட்டி யும்மை

---

1. "முழவன பலவின் தீங்கனி" சீவக. 825.
2. "அரிப்பறை வினைஞ ரல்குமிசைக் கூட்டும்" ஐங்குறு. அச.

இடையில் காட்சி நின்னோ

டுடனுறை வாக்குக வுயர்ந்த பாலே.

திணை - அது; துறை - கையறுநிலை.

வேள்பாரி துஞ்சியவழி அவன் மகளிரைப் பார்ப்பார்ப்படுத்து வடக்கிருந்த கபிலர் பாடியது.

இ - ள்.—முசுக்கலை கிழித்துண்டலாற் பீறிய முழவுபோலும் பெரிய பலாப்பழம் வில்லையுடைய குறவர்க்கு அதன்பெருமையாற் சிலநாளைக்கு இட்டுவைத்துண்ணும் உணவாகும் மலையுடைய நாட்டையுடையோய்! பெரிய வண்மையையுடையபாரி! நீயும் யானுங்கலந்த நட்பிற்குப் பொருந்த ஒழுகாயாய் நீ என்னை வெறுத்தாயாகக் கடவை, நீ எனக்கு உதவிசெய்த யாண்டுகளும், பெருமைதக்க தலைமையினையுடைய நட்பிற்குப் பொருந்தாமல் யானும் நின்னோடு கூடப் போதுதற்கு இயையாது நீ ஈண்டுத் தவிர்கவெனச் சொல்லி இப்படி வேறுபட்ட தன்மையையுடையையாதலின், நினக்கு யான் பொருந்தினேனல்லாமையான்; இங்ஙனம்பொருந்திற்றிலேனாயினும் இப்பிறப்பின்கண் நீயும் யானுங் கூடி இன்புற்றிருந்தவாறுபோலக் காட்டி மறுபிறப்பினும் இடைவிடாத காட்சியினையுடைய நின்னோடு கூடிவாழ்தலை உயர்ந்த விதி கூட்டுவதாக.—எ - று.

'உலந்த யாண்டு' என்று பாடமாயின், கழிந்த யாண்டென்க.

மற்று: அசைநிலை. (உ௬௬)

---

(உ௬௭) நீடுவாழ் கென்றியா னெடுங்கடை குறுகிப்

பாடி நின்ற பசிநாட் கண்ணே
கோடைக் காலத்துக் கொழுநிழ லாகிப்
பொய்த்த லறியா வுரவோன் செவிமுதல்
வித்திய பனுவல் விளைந்தன்று நன்றென
நச்சி யிருந்த நசைபழு தாக
அட்ட குழிசி யழற்பயந் தாஅங்
களியர் தாமே யார்க வென்னு
அறனில் கூற்றந் திறனின்று துணிய
ஊழி னுருப்ப வெருக்கிய மகளிர்

4 - 5. புறநா. உ0கூ : 2 - 5; கலி. கூஅ : 2 - 5.

5 - 6. "இசை நவல் வித்தி னசையே ருழவர்" மலைபடு. 60.

10. புறநா. உ௬ : 10 - 12.



வாழைப் பூவின் வளைமுறி சிதற
முதுவா யொக்கற் பரிசில ரிரங்கக்
கள்ளி போகிய களரியம் பறந்தலை
வெள்வேல் விடலை சென்றுமாய்ந் தனனே
ஆங்கது நோயின் றாக வோங்குவரைப்
புலிபார்த் தொற்றிய களிற்றிரை பிழைப்பின்

எலிபார்த் தொற்ற தாகு மலிதிரைக்
கடன்மண்டு புனலி னிழுமெனச் சென்று
நனியுடைப் பரிசிற் றருகம்
எழுமதி நெஞ்சே துணிபுமுந் துறுத்தே.

திணையும் துறையும் அவை.

வெளிமானுழைச்சென்றார்க்கு அவன் துஞ்ச இளவெளிமான் சிறிது கொடுப்பக் கொள்ளாது பெருஞ்சித்திரனார் பாடியது.

இ - ள்.—நெடுங்காலம் வாழ்வாயாகவென்று யான் நெடிய வாயிலை அணுகிப் பாடிநின்ற பசியையுடைய காலத்தின்கண்ணே, கோடையான் வெம்மையுற்றபொழுதின்கண் அடைந்தார்க்குக் கொழுவியநிழலையொத்து யார்கண்ணும் பொய்கூறுதல் அறியாத அறிவையுடையோனது செவியிடத்து நல்லோர் விதைத்த கேள்வியாகிய பயிர் நன்றாக விளைந்ததென நினைத்துப் பரிசிலை விரும்பியிருந்த அவ்விருப்பம் பயனில்லையாக அடப்பட்ட பானையினின்றும் சோறின்றி எரி புறப்பட்டாற்போல அளிக்கத் தக்கார் உண்பாராகவென்று கருதாத அறமில்லாத கூற்றம் கூறுபாடின்றாகி அவனுயிரைக் கொள்ளத் துணிய முறையான் வெய்தாக மார்பின்கண் அறைந்துகொண்ட மகளிர் கையிலணிந்த வளைகளின் முறிகள் வாழைப்பூப்போலச் சிதற முதிய வாக்கினையுடைய சுற்றத்தொடு கூடிய பரிசிலர் இரக்கக் கள்ளியோங்கிய களர்நிலமாகிய பாழ்பட்ட புறங்காட்டின்கண் வெளியவேலையுடைய வீரன்போய் இறந்துபட்டான்; கூற்றம் நோயின்றியிருப்பதாக; உயர்ந்த மலையிடத்துப் புலிபார்த்து வீழ்த்த களிறாகிய இரை தப்பின் தனக்கு இரையாதற்குப் போதாத எலியைப்பார்த்து வீழ்த்தாதாகும்; மிக்க திரையையுடைய கடலின்கண்

மண்டிய ஆற்றுநீர்போல விரையப்போய் மிகுதியையுடைத்தாகிய பரிசிலைக் கொடுவருவேமாக, எழுந்திராய் நெஞ்சே? தெளிவை முன்னிட்டுக்கொண்டு.—எ - று.

13. மு. புறநா. உஉ௫ : 7, உ௪௫ : 3.
16 - 7. புறநா. ௧௧0 : 6 - 10.
18 - 9. புறநா. ௪உ ; 19 - 21.



நசைபழுதாக அழற்பயந்தாங்குக் கூற்றந்துணிய விடலைமாய்ந்தனனெனவும், மகளிர் வளைமுறி வாழைப்பூவிற் சிதறவெனவும், துணிபு முந்துறுத்து நெஞ்சமே எழுவெனவுங் கூட்டுக.

நோயின்றாகவென்றது குறிப்பிற்றோன்றல்.

'ஆங்கது நோயின்றாக' என்றது இளவெளிமான் சிறிது கொடுப்ப அதனை இகழ்ந்துகூறியதென்பாரும் உளர்.

'புலிபார்த் தொற்றிய களிற்றிரை பிழைப்பின், எலிபார்த் தொற்றாதாகும்' என்பதூஉம் இவன் பின்கொடுத்த பரிசிலின் சிறுமைநோக்கி நின்றது.

'ஊழை யுருப்ப வெருக்கிய மகளிர்' என்றோதி விதியை வெறுப்ப எருக்கிய மகளிரென்றுரைப்பினும் அமையும். (உ௩௭)

(உஙஅ) கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடிப்
பேஎ யாயமொடு பெட்டாங்கு வழங்கும்
காடுமுன் னினனே கட்கா முறுநன்
தொடிகழி மகளிரிற் றொல்கவின் வாடிப்

---

1. புறநா. உஉஅ : 12, அடிக்.

2. செவிசெஞ்சேவல் : புறநா. ஙஎ0 : 26, ஙஎங : 38; அகநா. எஎ.

1 - 2. *'கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த, செவிசெஞ் சேவலும் : என முறைமயங்கி வந்ததாலெனின், ஆண்டுச் செஞ்செவியென்பது மொழிமாறி நின்றது'* தோல். இளவி. சூ. 26, தெய்வச்.

3. மூ. புறநா. ஙசுஉ : 17.

1 - 3. *செய்யுட்கண் வண்ணச்சினைச்சொல் அடை சினை முதலெனு மூன்றும் முறைமயங்கி வந்ததற்கு மேற்கோள்* (தோல். இளவி. சூ. 26, சே., ந.; இ. வி. சூ. 314, உரை); *'கவிசெந்தாழிக்......கூகையுங் கூடி: எனவருவன, கொம்புகூர்மாடு, மடல்விரிதாழை என்றாற்போல வருதலின், உயர்திணைதொடர்ந்த பொருண்முதலாறும் என்னுஞ் சூத்திரத்துள் அஃறிணையொடு சார்த்தின் அஃறிணை முடிபினவாமென அமைத்த தன்பாற்படுமென்க'* நன். வி. சூ. 403.

6. புறநா. உசுக : 18 - 9, உஅ0 : 14.

பாடுநர் கடும்பும் பையென் றனவே
தோடுகொண் முரசுங் கிழிந்தன கண்ணே
ஆளில், வரைபோல் யானையு மருப்பிழந் தனவே
வெந்திறற் கூற்றம் பெரும்பே துறப்ப
எந்தை *யாகுல வதற்பட லறியேன்
அந்தோ வளியேன் வந்தனென் மன்ற
என்னா குவர்கொலெற் றுன்னி யோரே
மாரி யிரவின் மரங்கவிழ் பொழுதின்
ஆரா ருற்ற நெஞ்சமொ டொராங்குக்
கண்ணி லூமன் கடற்பட் டாங்கு
வரையளந் தறியாத் திரையரு நீத்தத்
தவல மறுசுழி மறுகலிற்
றவலே நன்றுமற் றகுதியு மதுவே.

திணையும் துறையும் அவை.

வேளிமான் துஞ்சியபின் அவர் பாடியது.

இ - ள்.—பிணமிட்டுப் புதைக்கப்பட்ட கவிக்கப்பட்ட செய்ய தாழியினது குவிந்தபுறத்தேயிருந்த செவிசிவந்த கழுகின்சேவலும் பொகுவலென்னும் புள்ளும் அஞ்சாவாய் வாய்வலிய காக்கையும் கோட்டானும் கூடிப் பேயினத்துடனே தாம் விரும்பியவழியே யியங்கும் சுடுகாட்டைத் தலைப்பட்டான், வீரபானத்தைக் காமுறுவான்; அவனுடைய வளைகழிக்கப்பட்ட உரிமைமகளிரைப்போலப் பழைய அழகு தொலைந்து பாடுவோரது சுற்றமும் ஒளிமழுங்கின; தொகுதிகொண்ட முரசங்களும் கண்கிழிந்தன; பாகர்முதலாயின ஆளில்லாத மலைபோன்ற யானைகளும் மருப்பிழந்து விட்டன; இவ்வாறு வெவ்விய திறலையுடைய கூற்றம் பெரிய இறந்து

பாட்டை எய்துவிப்ப என் இறைவன்.........அவ்விறந்துபாட்டிலே படுதலை அறியேனாய் ஐயோ! அளித்தலையுடையேன் வந்தேன்; நிச்சயமாக என்ன துயரமுறுவர்கொல்லோ என்னையடைந்த சுற்றத்தார்? மழையை

8. முரசங் கண்கிழிதல் : புறநா. ௨௨௧ : 19.

10 - 12. 'வெந்திறற் கூற்றம்...அந்தோவளியேன் வந்தனென் மன்ற : என்றவழி அந்தோவென்பது கேடுகுறித்து நின்றது' தொல். இடை. சூ. 33, தெய்வச்.

14. மரம் : பு. வெ. 111, உரை.

18 - 9. "சங்கடத்திற் சாவதே நன்று" தனிப்பாடல்.

பி - ம். *யாருத லதற்பட.

55



யுடைய இரவின்கண் மரக்கலம் கவிழ்ந்தகாலத்துப் பொறுத்தற்கரிய துன்பமுற்ற நெஞ்சுடனே ஒருபெற்றிப்படக் கண்ணில்லாத ஊமன் கடலின்கண் அழுந்தினாற்போல எல்லையளந்தறியப்படாத திரையரிதாகிய வெள்ளத்தின்கண் துன்பமாகிய மறுசுழியின்கட் பட்டுச் சுழலுமதனின் இறந்துபடுதலே நன்று; நமக்குத் தக்க செய்கையும் அதுவே.—எ - று.

யான் அது செய்யப்பெற்றிலேனென்னும் நினைவிற்று.

மன் கழிவின்கண் வந்தது.

வெருவா வழங்குமென இயையும்.

'முரசம் கண்கிழிந்தன, யானையும் மருப்பிழந்தன' என்ற கருத்து : அவற்றால் தொழில்கொள்வாரின்மையின், அவை பயனிழந்தனவென்பதாம். (௨௩௮)

---

(உ௩௯) தொடியுடைய தோண்மணந்தனன்
கடிகாவிற் பூச்சூடினன்
*தண்கமழுஞ் சாந்துநீவினன்
செற்றோரை †வழிதபுத்தனன்
நட்டோரை யுயர்புகூறினன்
வலியரென ‡வழிமொழியலன்
மெலியரென ╪மீக்கூறலன்
பிறரைத்தா னிரப்பறியலன்
இரந்தோர்க்கு மறுப்பறியலன்
வேந்துடையவைத் தோங்குபுகழ்தோற்றினன்
வருபடை யெதிர் §தாங்கினன்
பெயர்படை புறங்கண்டனன்

---

3. புறநா. ௧௬௬ : 26 - 7.

4 - 5. புறநா. ௩௮ : 5 - 6; பழ. 398; "நட்டவர் குடியுயர்க்குவை, செற்றவ ரரசுபெயர்க்குவை" மதுரை. 131 - 2.

6. "பகைவர்க் கஞ்சிப் பணிந்தொழு கலையே" மதுரை. 201.

6 - 7. 'வலியரென...மீக்கூறலன் : எனத் தன்கண்ணும் பிறன் கண்ணுந் தோன்றிய மென்மைபற்றி இளிவரல் பிறந்தன' தொல். மெய்ப் பாடு. சூ. 6, பேர்.; இ. வி. சூ. 578, உரை.

பி - ம். *நறைகமழ்சாந்த நீவினன். †வழிதேய்த்தனன். ‡வாய் மொழியலன். ╪மேற்செல்லலன் பிறரையொன்றிரப்பு. §சுழறினன்.

கடும்பரிய மாக்கடவினன்
நெடுந்தெருவிற் *றேர்வழங்கினன்
†ஓங்கியல களிறூர்ந்தனன்
‡தீஞ்செறி தசும்புதொலைச்சினன்
பாணுவப்பப் பசிதீர்த்தனன்
மயக்குடைய மொழிவிடுத்தனன், ஆங்குச்
செய்ப வெல்லாஞ் செய்தன னாகலின்
இடுக வொன்றோ சுடுக வொன்றோ
§படுவழிப் படுகவிப் புகழ்வெய்யோன் றலையே.[1]

**திணையும் துறையும் அவை.**

**நம்பிநெடுஞ்செழியனைப் பேரெயின்முறுவலார் பாடியது.**

இ - ள்.—இளைய மகளிரது வளையணிந்த தோளை முயங்கினன்; காவலையுடைய இளமரக்காக்களிற் பூவைச் சூடினன்; குளிர்ந்த மணநாறும் சாந்தைப் பூசினன்; பகைத்தோரைக் கிளையொடுங்கெடுத்தான்; நட்டோரை மிகுத்துக்கூறினன்; இவர் நம்மில் வலியரென்றுகருதி அவர்க்கு வழிபாடு கூறியறியான்; இவர் நம்மில் எளியரென்று கருதி அவரின் மிகுத்துச்சொல்லியறியான்; பிறரைத் தான் ஒன்றீயெனச் சொல்லி இரந்தறியான்; சூழ்ந்துநின்று இரந்தோருக்கு யாதும் இல்லையென்று மறுத்தலை அறியான்; அரசருடைய அவைக்களத்தின்கண் தனது உயர்ந்த புகழை வெளிப்படுத்தினன்; தன்மேல் வரும் படையைத் தன் எல்லையுட் புகுதாமல் எதிர்நின்று தடுத்தான்; புறக்கொடுத்துப் பெயரப்பட்ட படையினது

புறக்கொடைகண்டு அதன்பின் செல்லாது நின்றான்; விரைந்த செலவை யுடைய குதிரையைத் தன் மனத்தினும் விரையச் செலுத்தினான்; நெடிய வீதியின்கண் தேரைச்சூழ இயக்கினான்; உயர்ந்த இயல்பையுடையவாகிய களிற்றைச் செலுத்தினான்; இனிய செறிவையுடைத்தாகிய மதுவை யுடைய குடங்களைப் பலர்க்கும் வழங்கித் தொலைவித்தான்; பாணர் உவப்ப அவர் பசியை மாற்றினான்; நடுவுநிலைமையின் மயக்குதலையுடைய சொற்

---

19 - 21. "கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார், துரும்பெழுந்து வேங்காற் றுயராண் டுழவார், வருந்தி யுடம்பின் பயன்கொண்டார் கூற்றம், வருங்காற் பரிவ திலர்" நாலடி. 35.

[1]பு. ஈற்றயலடி நாற்சீரான் வந்த வஞ்சிப்பாவிற்கும் (தொல். செய். சூ. 67, இளம்.), பிரிந்திசைத்தூங்கற்குறளடிவஞ்சிப்பாவிற்கும் (யா. வி. செய். சூ. 37) மேற்கோள்.

பி - ம். *தேர்மறுங்கினன், தேரோட்டினன். †உடல்சினத்த களிறு. ‡தீஞ்சொற்றசும்பு. §படுகுழி.



களை அந்நடுவுநிலைமையிற் பிழையாதபடி மயக்கந்தீரக் கூறினான்; அப்படிச் செய்யத்தகுவனவெல்லாம் செய்தானாதலான், இப்புகழை விரும்புவோனது தலையை வாளான் அறுத்துப் போகடினும் போகடுக; அன்றிச் சுடினும் சுடுக; பட்டபடி படுக.—எ - று.

'நட்டோரை யுயர்புகூறினன்' என்றது, 1தான் உயர்த்திக்கூறவே யாவரும் உயர்த்துக்கூறுவரென்பதாம்.

'மயக்குடைய மொழிவிடுத்தனன்' என்பதற்கு உலகவொழுக்கத்தில் மயக்கமுடைய சொற்கள் தன்னிடைப் புகுதாமல் விடுத்தானென்றும், பொருண்மயங்கிய சொற்களைத் தன்னிடத்துப் புகுதாமல் விடுத்தானென்றும் உரைப்பினும் அமையும்.

ஒன்றோவென்பது எண்ணிடைச்சொல். (உங்க)

---

1"மாகஞ் சிறகக் குவித்த நிதிக்குவை, ஈகையி னேக்கமுத்த மிக்குடைய - மாகொல், பகைமுகத்த வென்வேலான் பார்வையிற் றீட்டும், நகைமுகத்த நன்கு மதிப்பு" நீதிநெறி. 39.

---

(உசo) ஆடுநடைப் புரவியுங் களிறுந் தேரும்
வாடா யாணர் நாடு மூரும்
பாடுநர்க் கருகா வாஅ யண்டிரன்
கோடேந் தல்குற் குறுந்தொடி மகளிரொடு
கால னென்னுங் கண்ணிலி யுய்ப்ப
மேலோ ருலக மெய்தின னெனாஅப்
பொத்த வறையுட் போழ்வாய்க் கூகை
சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிரும்
கள்ளியம் பறந்தலை யொருசிறை யல்கி
ஒள்ளெரி நைப்ப வுடம்பு மாய்ந்தது
புல்லென் கண்ணர் புரவலர்க் காணாது

5. "கூற்றின்பாற், கண்மையு முளதெனக் கருத லாகுமோ" கம்ப. கிளைகண்டு. 71.

7. புறநா. நசுச : 11 - 2.

7 - 8. "சாவோர்ப் பயிருங் கூகையின் குரலும்" மணி. சு: 75.

9. பறந்தலை : புறநா. உஉரு; உசரு; மணி. கஅ : 62.

10. "இறந்தெரி நையாமல்" கலி. கசஇ : 19.



வாடிய பசிய ராகிப்பிறர்
நாடுபடு செலவின ராயின ரினியே.

திணையும் துறையும் அவை.

ஆயைக் குட்டுவன்கீரனுர் பாடியது.

இ - ள்.—களத்திற்கேற்ப நடக்கும் அசைந்த நடையையுடைய குதிரைகளும் யானைகளும் தேர்களும் அழியாத புதுவருவாயையுடைய நாடும் ஊர்களும் பாடுவார்க்குக்குறையறக்கொடுக்கும் ஆயாகிய அண்டிரன் கோடேந்திய அல்குலினையும் குறிய கைவளைகளையுமுடைய உரிமைமகளி ரோடு காலனென்று சொல்லப்படாநின்ற கண்ணோட்டமில்லாதவன் கொண்டுபோகத் தேவருலகத்தை யடைந்தானுகக்கொண்டு பொந்தாகிய தான் வாழுமிடத்துப் போழ்ந்தாற்போலும் வாயலகையுடைய பேராந்தை சுட்டுக்குவியென்று செத்தோரை அழைப்பதுபோலக் கூவும் கள்ளியை

யுடைய பாழிடமாகிய புறங்காட்டின் ஒருபுடையிலே தங்கி ஒள்ளிய தீச்சுட உடம்பு மாய்ந்துவிட்டது; பொலிவழிந்த கண்ணினையுடையராய்த் தம்மைப் பாதுகாப்போரைக் காணாது ஆரவாரிக்குங் கிளையுடனே செயலற்று அறிவுடையோர் தம் மெய்யுணங்கிய பசியையுடையராய்ப் பிறருடைய நாட்டின்கண் தலைப்படும் போக்கையுடையராயினர் இப்பொழுது; இஃதொருநிலை இருந்தவாறு என்னை !—எ - று.

'மேலோ ருலக மெய்தின னெனவே' எனவும், 'ஒள்ளெரி நைப்ப வுடம்புமாய்ந் தனனென' எனவும் பாடமோதுவாரும் உளர். (உசo)

---

(உசக) திண்டே ரிரவலர்க் கீத்த தண்டார்
அண்டிரன் வரூஉ மென்ன வொண்டொடி
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுட்
போர்ப் புறு முரசங் கறங்க
ஆர்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே.

திணையும் துறையும் அவை.

[1]அவனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது.

இ - ள்.—திண்ணிய தேரை இரவலர்க்கு ஈத்த குளிர்ந்தமாலையை யுடைய ஆய் வருகின்றானென்று ஒள்ளிய தொடியினையும் வச்சிராயுதத்தையு

---

3 - 4. "வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்" மணி. க : 27.

[1]"மோசி பாடிய வாயும்" புறநா. கருஅ : 13.

முடைய விசாலமாகிய கையையுடைய இந்திரனது கோயிலுள்ளே போர்த்தலுற்ற முரசம் முழங்க வானத்தின்கண் ஓசை தோன்றிற்று.— எ - று.

இப்பெற்றிப்பட்ட வள்ளியோனை வானோர் எதிர்கோடல் தப்பாதென்றவாறு.

இது தற்குறிப்பேற்றமென்பதோர் அணிப்பொருட்டாய் நின்றது.

(௨௪௧)

---

(௨௪௨) இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான் பாடினி யணியாள்
ஆண்மை தோன்ற வாடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ வொல்லையூர் நாட்டே.

திணையும் துறையும் அவை.

[1]ஒல்லையூர் கிழான்மகன் பெருஞ்சாத்தனைக் *குடவாயிற் கீரத்தனார் பாடியது.

இ - ள்.—இளையவீரர் சூடார்; [2]வளையணிந்த இளையமகளிர் பறியார்; நல்ல யாழ்க்கோட்டின் மெல்லவளைத்துப் பாணன் பறித்துச் சூடிக்கொள்

ளான்; †பாடினி சூடாள்; தன்னுடைய ஆண்மைப்பாடு யாவர்க்கும் வெளிப்பட வீரரை எதிர்நின்று கொன்று வென்ற வலிய வேலையுடைய சாத்தன் இறந்துபட்டபின்பு முல்லையாய நீயும் பூக்கக்கடவையோ அவனது ஒல்லையூர் நாட்டின்கண் ?—எ - று.

அவனையிழந்து கொடியேனாய் வாழ்கின்ற யானேயன்றி நீயும் கொடியையாய்ப் பூக்கின்றாயோவென எச்சவும்மையாய் நின்றது; என்றது, பூச்சூடி நுகர்வாரின்மையிற் பயனில்லையென்றதாம். (௨௪௨)

---

1. புறநா. ௯௪ : 2.

4. ஆண்மை, ஆளுந்தன்மையெனப்பொருளுரைத்து இவ்வடியை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்; தொல். களவி. சூ. 57.

[1]இது கோனாட்டிலுள்ள ஒலியமங்கலமென்னும் ஊர்.

[2]'சில்வளை விறலியென்றது, பல்வளையிடுவது பெதும்பைப் பருவத்தாகலின், அஃதன்றிச் சில்வளையிடும் பருவத்தாளென அவள் ஆடல்முதிய துறைக்குரியளாதல் கூறப்பட்டது' பதிற். ௫௭ : 6, உரை.

பி - ம். *குடவாயினல்லாதனார். †பாணிச்சி.



(௨௪௩) இனிநினைந் திரக்க மாகின்று திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் *தூங்குவழித் தூங்கி
மறையென லறியா மாயமி லாயமொ

†உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
‡நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்துமணற் கொண்ட ‡கல்லா விளமை
அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்
றிருமிடை மிடைந்த சிலசொற்
பெருமூ தாளரே மாகிய வெமக்கே.[1]

திணையும் துறையும் அவை.

தொடித்தலை விழுத்தண்டினார் பாடியது.

---

1. 'இனியென்றது, இனிநினைந் திரக்கமாகின்று என்றாற்போல இப்பொழுது என்னும் பொருள் தந்தது' (கலி. க, ந.); 'இரங்கல்' என்னும் உரிச்சொல் இரக்கமென்றாகி ஒருபொருளது கழிவாற்பிறந்த வருத்தமாகிய குறிப்புணர்த்தி நிற்குமென்பதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 61, ந. 1 - 3. புறநா. கக : 1 - 4.

9. "நெடுநீர்த் தண்கயந் துடுமெனப் பாய்ந்து" நற். ஙகூ0.

'நெடுநீர்க்குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து என்பதும் இசை' (தொல். இடை. சூ. 10, ந.; நன். வி. சூ. 424); 'துடும்' என்னும் சொல் ஓசைப்பொருண்மேல் வந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 420, மயிலை.

6 - 9. "கரைசேர் மருத மேறிப், பண்ணை பாய்வோள்" ஐங். எசு.

14. "பெருமூ தாள ரேமஞ் சூழ" முல்லை. 54.

12 - 4. 'தொடித்தலை......எமக்கே : என்பது தன்கட்டோன்றிய

'மூப்புப் பொருளாக இளிவரல் பிறந்தது; என்னை ? இளமைக்காலத்துச் செய்தன செய்யமாட்டாது இளிவந்தனம் இக்காலத்து என்றமையின்' தொல். மெய்ப்பாடு. சூ. 6, பேர்.; இ. வி. சூ. 578, உரை.

[1]மு. காஞ்சித்திணைத்துறைகளுள், 'கழிந்தோரொழிந்தோர்க்குக் காட்டிய முதுமை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 24, ந.

பி - ம். *தங்குவழித் தங்கி. †பாசினமருத......தாழ்ந்த நீர்க்கணிப் படிந்த. ‡நிலையருங் குட்டம். ‡கள்ளாமை யிளிதோ.



இ - ள்.—இப்பொழுது நினைந்து இரக்கமாகாநின்றது: செறிந்த மணலிடத்துச்செய்யப்பட்ட வண்டற்பாவைக்குப் பறிக்கப்பட்ட பூவைப் பறித்துச் சூடிக் குளிர்ந்த பொய்கையின்கண் விளையாடும் மகளிரோடு கைகோத்து அவர் தழுவின இடத்தே தழுவி அசைந்தவிடத்தே யசைந்து ஒளித்துச்செய்யுமஃதறியாத வஞ்சனையில்லாத இளமைந்தருடனேகூட உயர்ந்தகோடுகளையுடைய மருதினது துறையிலே வந்து உறத்தாழ்ந்து நீர்க்கு அண்ணிதாகப்படிந்த கொம்பிலே ஏறி அழகுமிகக் கரையிடத்து நிற்போர் வியப்பத் திரையிடத்துத் திவலையெழ ஆழத்தால் நெடிய நீரையுடைய மடுவின்கண் துடுமென்று ஒலிப்பக் குதித்து மூழ்கி மணலமுகந்து காட்டிய கல்வியில்லாத இளமை இரங்கத்தக்கது; அவ்விளமை எவ்விடத்

தண்டு கொல்லோ? பூண்செறிந்த தலையையுடைய பரிய தண்டுக்கோலை யூன்றித் தளர்ந்து இருமல் இடையே நெருங்கின சிலவார்த்தையுடைய பெரிய முதுமையையுடையேமாகிய எங்களுக்கு ?—எ - று.

எமக்கு இளமை யாண்டுண்டுகொல்லோ? அதுதான் இரங்கத்தக்கதெனக் கூட்டுக.

இளமைகழிந்து இரங்கிக்கூறுதலான் இதுவும் கையறுநிலையாயிற்று. 'மறையென வறியார்' என்று பாடமோதுவாரும் உளர். (உசரு)

---

(உசச) பாணர் சென்னியும் வண்டுசென் றூதா
விறலியர் முன்கையுந் தொடியிற் பொலியா
இரவன் மாக்களு . . . . . . . . . . . .

இ - ள்.—.............................................................................................முசுக்கலையின்நீக்குதற்கு இரலையென விசேடித்தனர்......

...சாதலென்பது இன்னாதாதலிற் பெரும்பிறிதாயின்றேவென்றான். தானுறுகின்ற துன்பத்தைக் கலைமேல்வைத்துக் கூறியவாறு. (உசச)

1. புறநா. ௯எசு : 9; "கண்டோர் மருளும் வண்டூழ் நிலையும்" பொருந. 97.

---

(உசரு) யாங்குப்பெரி தாயினு நோயள வெனைத்தே
உயிர்செகுக் கல்லா மதுகைத் தன்மையிற்



கள்ளி போகிய களரியம் பறந்தலை
வெள்ளிடைப் பொத்திய விளைவிற கீமத்
தொள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி
ஞாங்கர் மாய்ந்தனள் மடந்தை
இன்னும் வாழ்வ லென்னிதன் பண்பே.[1]

திணையும் துறையும் அவை.

சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை தன் பெருங் கோப்பெண்டு துஞ்சியகாலைச் சொல்லிய பாட்டு.

இ - ள்.—எப்படிப் பெரிதாயினும் யானுற்ற நோயினது எல்லை எவ்வளவாயிற்று, என்னுயிரைப் போக்கமாட்டாத வலியையுடைத்தல்லாமையால்? கள்ளி வளரப்பட்ட புறங்காட்டுள் வெள்ளிடையின் மூட்டிய தீயை விளக்கும் சிறிய விறகையுடைய படுக்கையின்கண் ஒள்ளிய அழலாகிய பாயலின்கண்ணே பொருந்தப்பண்ணி மேலுலகத்தே போயினள், மடவாள்; அவள் மாயவும் இன்னமும் உயிரிருந்துவாழ்வேன்; இவ்வுலகியற்கை இருந்தவாறு என்னே!—எ - று.

எனைத்தென்றது, உயிரைப் போக்கமாட்டாமையின் நோயை

இகழ்ந்து கூறியவாறு.

'பாவை சேர்த்தி' என்றோதி அவளுடம்பை அழகுபடப் பள்ளியுட் கிடத்தியென்று உரைப்பாரும் உளர்.

உயிர்செகுக்கலாமைக்குக் காரணம் மதுகையுடைத்தல்லாமையென வுணர்க.

பாயல்சேர்த்தி இன்னும்வாழ்வலென இயையும்.

சேர்த்தவெனத் திரிப்பினும் அமையும்.

'ஞாங்கர் மாய்ந்தனள்' என்பதற்கு என்னை நீத்து முன்னே இறந்தாளென்றுமாம். (௨௪௫)

---

3. மூ. புறநா. ௨௨௫ : 7, ௨௩௭ : 13.

[1]மூ. "கழல்சேர்ந்த தாள்விடலை காதலிமெய் தீண்டும், அழல் சேர்ந்த தன்னெஞ் சயர்ந்தான்—குழல்சேர்ந்த, தாமந் தரியா தசையுந் தளிர்மேனி, ஈமந் தரிக்குமோ வென்று" தண்டி. சூ. 68, மேற்.

காஞ்சித்திணைத்துறைகளுள், 'காதலியிழந்த தபுதாரநிலை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 19, இளம்.; ஷை. ஷை. ஷை. 24, ந.





(௨௪௬) பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்

பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
அணில்வரிக் கொடுங்காய் *வாள்போழ்ந் திட்ட
காழ்போ னல்விளர் நறுநெய் தீண்டா
†தடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்
உயவற் பெண்டிரே மல்லே மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்
நுமக்கரி தாகுக தில்ல வெமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையுந் தீயுமோ ரற்றே.[1]

திணை - அது; துறை - ஆனந்தப்பையுள்.

பூதபாண்டியன்றேவி பெருங்கோப்பெண்டு தீப்பாய்வாள் சொல்லியது.

---

1. நன். சூ. 169, மயிலை. மேற்.

4. 'அணில்வரிக் கொடுங்காய் எனப் புறத்திலும் காட்டினாராதலின், கொடுங்காயென்பது பெயர்; வரி - அடை' (சிலப். கசு : 22 - 8, அடியார்.); குறில் செறியா ளகரம் வேற்றுமையில் வலிமுன் திரியாது இயல்பானதற்கு மேற்கோள்; நன். சூ. 228, மயிலை; நன். வி. சூ. 229; இ. வி. சூ. 139, உரை.

8. "கலந்தவனைக் கூற்றங் கரப்பக் கழியா, தலந்திளையு மவ்வளைத் தோளி – உலந்தவன், தாரொடு பொங்கி நிலனசைஇத் தான்மிசையும், காடகின் மேல்வைத்தாள் கை" பு. வெ. 257.

7 - 9. 'துன்புறுவன என்றூர், வெள்ளெட் சாந்தொடு............ வதியும் : என்பதனை ; இது புறம்' சிலப். கஅ : 34 - 6, அடியார்.

11 - 5. தோல். இடை. சூ. 5, தெய்வச். மேற்.

7 - 15. "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி, ஊதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா, தின்னுயி ரீவ ரீயா ராயின், நன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர், நளியெரி புகாஅ ராயி னன்பரோ, டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்" மணி. ௨ : 42 - 7.

[1]மு. காஞ்சித்திணைத்துறைகளுள், 'நல்லோள் கணவனொடு நளியழல்

பி - ம். *வாள்போந் தட்ட. †தடகிடை மிடைந்த, தடைகிடந்த.



ஆனந்தப்பையுளாவது:—

[1]"விழுமங் கூர வேய்த்தோ ளரிவை
கொழுநன் வீயக் குழைந்துயங் கின்று."

இ - ள்.—பலசான்றவிரே! பலசான்றவிரே! நின் தலைவனோடு இறப்ப நீ போவென்று கூறாது அதனைத் தவிர்கவென்று சொல்லி விலக்கும் பொல்லாத விசாரத்தையுடைய பலசான்றவிரே! அணிலினது வரிபோலும் வரியையுடைய விளைந்த வெள்ளரிக்காயை அரிவாளால்

அரிந்திடப்பட்ட விதைபோன்ற நல்ல வெள்ளிய நறிய நெய்தீண்டாமல் இலை இடையே பயின்ற கையாற் பிழிந்துகொள்ளப்பட்ட நீர்ச்சோற்றுத் திரளுடனே வெள்ளிய எள்ளரைத்த விழுதுடனே புளிகூட்டி அடப் பட்ட வேளையிலை வெந்த வேவையுமாகிய இவை உணவாகக்கொண்டு பருக்கைகளாற் படுக்கப்பட்ட படுக்கையின்கண் பாயும் இன்றிக் கிடக்கும் கைம்மைநோன்பால் வருந்தும் பெண்டிருள்ளேமல்லேம் யாம்; புறங் காட்டின்கண் உண்டாக்கப்பட்ட கரிய [2]முருட்டால் அடுக்கப்பட்ட பிணப்படுக்கை உங்களுக்கு அரிதாவதாகுக; எமக்கு எம்முடைய பெரிய தோளையுடையனுகிய கொழுநன் இறந்துபட்டானுக, முகையில்லையாக வளவிய இதழ்மலர்ந்த தாமரையையுடைய நீர்செறிந்த பெரிய பொய்கை யும் தீயும் ஒருதன்மைத்து.—எ - று.

தில் : விழைவின்கண் வந்தது.

எமக்குப் பொய்கையும் தீயும் ஒருதன்மைத்து; நுமக்கு அரிதாகுக வெனக் கூட்டுக. (உசசு)

---

புகீஇச்; சொல்லிடை யிட்ட மாலைநிலை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 19, இளம்.; ஷை. ஷை. ஷை. 24, ந.

[1]பு. வெ. 266.

[2]"வன்ப ராய்முரு டொக்குமென் சிந்தை" திருவா.

---

(உசஎ) யானை தந்த முளிமர விறகிற்

கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து

மடமான் பெருநிரை வைகுதுயி லெடுப்பி

1 - 2. புறநா. உ௧௧ : 5 - 6, அடிக்.
3. வைகுதல் - துயிலல்; சிலப். ௪0: 1.
4. "மந்தி சீக்கு மாதுஞ்சு முன்றில்" பெரும்பாண். 497.



நீர்வார் கூந்த லிரும்புறந் தாழப்
*பேரஞர்க் கண்ணள் பெருங்காடு நோக்கித்
தெருமரு மம்ம தானேதன் கொழுநன்
முழவுகண் டுயிலாக் கடியுடை வியனகர்ச்
சிறுநனி தமிய ளாயினும்
இன்னுயிர் †நடுங்குந்த னிளமைபுறங் கொடுத்தே.

திணையும் துறையும் அவை.

அவள் தீப்பாய்வாளைக் கண்டு மதுரைப்பேராலவாயார் சொல்லியது.

இ - ள்.—யானை கொண்டுவரப்பட்ட உலர்ந்த மரத்துவிறகால் வேடர் மூட்டப்பட்ட கடைந்துகொள்ளப்பட்ட எரியாகிய விளக்கினது ஒளியையுடைத்தாகிய மடவிய மானாகிய பெரியநிரை வைகிய உறக்கத்தை எழுப்பி மந்தி தூக்கும் அணங்குடைத்தேவியையுடைய முற்றத்து நீர் வடிந்த மயிர் மிக்கபுறத்தில் வீழப் பெரிய துன்பமேவிய கண்ணையுடையளாய்ப் புறங்காட்டைப் பார்த்துத் தான் சுழலும், தன் தலைவன் முழவினது கண் மார்ச்சனையுலராத காவலையுடைய அகலியகோயிலுள் மிகச் சிறிது பொழுது தனித்திருப்பினும் இனிய உயிர்தளரும் தன் இளமை புறங் கொடுத்து.—எ - று.

....................யானவற்கு அஞ்சி நடுங்குதல்......................

இளமைபுறங்கொடுத்துப் பெருங்காடு நோக்கித் தான் தெருமருமெனக் கூட்டுக.

அம்ம : அசை. (௨௪௭)

பி - ம். * பேரமர்க். † நீங்கும்.

---

(௨௪௮) அளிய தாமே சிறுவெள் ளாம்பல்
இளைய மாகத் தழையா யினவே
இனியே, பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுதமறுத்

1 - 2. "வயன்மல ராம்பற் கயிலமை நுடங்குதழை" (ஐங்குறு. ௭௨); "அயவெள் ளாம்பல் அம்பகை நெறித்தழை" (குறுந். ௨௯௩); "ஆம்பல ணித்தழை யாரந் துயல்வரும், தீம்புன லூரன் மகள்" திணைமொழி. 40.



தின்னா வைக லுண்ணும்
அல்லிப் படூஉம் புல்லா யினவே.[1]

திணை - அது; துறை - தாபதநிலை.

.........*ஒக்கூர் மாசாத்தனார் பாடியது.

தாபதநிலையாவது:—

[2] "குருந்தலர் கண்ணிக் கொழுநன் மாய்ந்தெனக்
கருந்தடங் கண்ணி கைம்மைகூ றின்று."

இ - ள்.—இரங்கத்தக்கன, சிறிய வெளிய ஆம்பல்; அவைதாம், யாம் இளையேமாயிருக்க முற்காலத்துத் தழையாயுதவின; இக்காலத்துப் பெரிய செல்வத்தையுடைய தலைவன் இறந்தானாக உண்ணுங்காலை மாறி இன்னாத வைகும்பொழுதின்கண் உண்ணும் தம் அல்லியிடத்துண்டாம் புல்லரிசியாய் உதவின.—எ - று.

தாம் இன்புறுங்காலத்தும் துன்புறுங்காலத்தும் துணையாய் உதவினவாதலான், அளியவாயினவென ஆம்பலைநோக்கிக் கூறியவாறாயிற்று.

[3]நெல்லலாவுணவெல்லாம் புல்லென்றல் மரபு. (உசஅ)

4 - 5. புறநா. உ௰ : 4 - 5. 1 - 5. புறநா. உஅ௦ : 12 - 4.

[1]மு. காஞ்சித்திணைத்துறைகளுள், 'காதலனிழந்த தாபதநிலை' என்பதற்கு மேற்கோள்; தோல். புறத்திணை. சூ. 19, இளம்.; ஷை. ஷை. ஷை. 24, ந.

[2] புறப்பொருள்வெண்பாமாலை, 257.

[3]'புல்லென்பது பலபொருளொருசொல்லாகலான் நெல்லென்னும் இனத்தானே வேறுபடுத்துப் புல்லென்பது உணவின் மேற்கொள்க' (தோல். மரபு. சூ. 25, பேர்.); "புல்லார் பவர்கணெற் சோறுபெற் றுங்கு" வேங்கைக். 18.

பி - ம். * எக்கூர்.

---

(உசகூ) கதிர்மூக் காரல் கீழ்ச்சேற் றொளிப்பக்
கணைக்கோட்டு வாளை மீநீர்ப் பிறழ
எரிப்பூம் பழன நெரித்துடன் வலைஞர்

அரிக்குரற் றடாரியின் யாமை மிளிரப்

2. "கணைக்கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாகு" குறுந். கசுச.
4. புறநா. எ0 : 2 - 3, அடிக்., ருசுக : 21.



பனை நுகும் பன்ன சினைமுதிர் வராலொ
டுறழ்வே லன்ன வொண்கயன் முகக்கும்
அகனாட் டண்ணல் புகாவே நெருநைப்
பகலிடங் கண்ணிப் பலரொடுங் கூடி
ஒருவழிப் பட்டன்று மன்னே யின்றே
அடங்கிய கற்பி னாய்நுதன் மடந்தை
உயர்நிலை யுலக மவன்புக . . லரி
நீருடு சுளகிற் சீறிட நீக்கி
அழுத லானாக் கண்ணள்
மெழுகு மாப்பிகண் கலுழ்நீ ரானே.[1]

திணையும் துறையும் அவை.

..................*தும்பிசேர்கீரனார் பாடியது.

இ - ள்.—கதிர்நுனைபோலும் மூக்கையுடைய ஆரன்மீன் சேற்றின் கீழே செருகத் திரண்ட (மிசையாகிய) கோட்டையுடைய வாளைமீன் நீர்

மேலே பிறழ எரிபோலும் நிறத்த பூவையுடைய பொய்கைகளை நெருங்கி உடனே வலைஞரானவர், ஒலிநரம்பால் ஓசையையுடைய இணையினது முகமேபோலும் யாமைபிறழப்பனையினது நுகும்பையொத்த சினைமுற்றிய வராலோடு மாறுபடும் வேல்போன்ற ஒள்ளிய கயலை முகந்துகொள்ளும் முன்னகன்ற நாட்டையுடைய குருசிலது உணவு நெருநலைநாளாற் பகுத்த இடத்தைக் கருதிப் பலருடனே இயைந்து ஒருவழிப்பட்டது; அது

---

5. தொல். மரபு. சூ. 86, பேர். மேற்; 'நுகும்பென்பது பனை வாழை மரல் புல் என்பவற்றிற்குரித்து' நன். சூ. 387, மயிலை.

6. புறநா. உ௪எ : 4. 11. புறநா. உ௨௯ : 22.

12. புறநா. உ௯௪ : 2.

14. சீவக. 2984.

தொல். எச்ச. சூ. 47, ந., இ. வி. சூ. 168, உரை, மேற்; 'மெழுகு மாப்பிகண் கலுழ்நீ ரானே : என்புழிக் கணவனை யிழந்தாள் அவற்குப் பலிக்கொடை கொடுத்தற்கு மெழுகுகின்றாளைக் கண்ணீரே நீராக மெழுகுகின்றாளென்றமையின் இது தன்கட்டோன்றிய இழவுபற்றிப் பிறந்த அவலச்சுவையாயிற்று' தொல். மெய்ப்பாடு. சூ. 5, பேர்.; இ. வி. சூ. 578, உரை.

[1]மு. காஞ்சித்திணைத்துறைகளுள், 'தாமே யேங்கிய தாங்கரும் பையுள்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 24, ந.

பி - ம். *தும்பிசேர் கீரனார்.

கழிந்தது; இன்று, தன்கண்ணேயடங்கிய கற்பினையும் சிறிய நுதலினையுமுடைய மடந்தை உயர்ந்த நிலைமையையுடைய விண்ணுலகத்தே அவன் சென்று புக அவனுக்கு உணவுகொடுத்தல்வேண்டிச் சுளகுபோலச் சிறிய இடத்தைத் துடைத்து அழுதலமையாத கண்ணையுடையளாய்த் தன்கண் கலுழ்கின்றநீராலே சாணகத்தைக் கொண்டு மெழுகுமளவிலே பட்டது.
—எ - று.

மெழுகுமளவாயிற்றென்றது பொருளெனவுரைக்க.

மன் கழிவின்கண் வந்தது.

இது, கண்டார் நிலையாமை கூறி இரங்கியவாறு. (உசக).

---

(உருo) குய்குரன் மலிந்த கொழுந்துவை யடிசில்
இரவலர்த் தடுத்த வாயிற் புரவலர்
கண்ணீர்த் தடுத்த தண்ணறும் பந்தர்க்
கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி
அல்லி யுணவின் மனைவியோ டினியே
புல்லென் றனையால் வளங்கெழு திருநகர்
வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்
முனித்தலைப் புதல்வர் தந்தை
தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே.

திணையும் துறையும் அவை.

.........தாயங்கண்ணியார் பாடியது.

இ - ள்.—தாளிப்போசை மிக்க கொழுவிய துவையோடுகூடிய அடிசில் இரவலரைத் தன்கண்ணே தகைத்த வாயிலினையும் தன்னாற் புரக்கப்படுவோர் கண்ணீரை மாற்றிய குளிர்ந்த நறிய பந்தரினையுமுடைய மனையிடத்து மயிரைக் குறைத்துக் குறியவளையைக் களைந்து அல்லியரிசியாகிய உணவையுடைய மனையர்களுடனே இப்பொழுது பொலிவழிந்தாய், செல்வம்பொருந்திய அழகாகிய நகரே! வான்சோற்றைக்கொண்டு இனியபாலை வேண்டும் வெறுப்பைத் தம்மிடத்தேயுடைய புதல்வர் தந்தை தனியிடத்தையுடைய புறங்காட்டை அடைந்தபின்.—எ - று.

---

4. புறநா. உ௫௩, உ௫௪, உ௬௧, உ௮௦.
5. புறநா. உ௪௮ : 4 - 5.
6. தொல். குற்றியலுகரப். சூ. 76, ந. மேற்.
7. புறநா. உ௬௧ : 19.
8. "முனித்தலைக் கண்ணி நெற்றிச் சிறார்" சீவக. 2541.



கொய்து நீக்கியென்னும் வினையெச்சங்களை உணவினையுடையவென்னுங் குறிப்புவினையோடு முடிக்க.

நகரே! நீ புதல்வர் தந்தை காடு முன்னியபின் புல்லென்றனையெனக் கூட்டுக.

முனித்தலை - குடுமித்தலையெனினும் அமையும். (உ௫௦)

---

(உருக) ஓவத் தன்ன விடனுடை வரைப்பிற்
பாவை யன்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகும்
கழைக்க ணெடுவரை யருவி யாடிக்
கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே.[1]

திணை - வாகை; துறை - தாபதவாகை.

.........மாற்பித்தியார் பாடியது.

---

1. மு. நற். கஅஉ : 2; "ஓவுக்கண் டன்ன வில்" (நற். உசுஅ: 1); "ஓவத் தன்ன வினைபுனை நல்லில்", "ஓவத் தன்ன வுருகெழு நெடுநகர்" (பதிற். சுக: 3, அஅ: 28); "ஓவத் தன்ன வினைபுனை நல்லில்" அகநா. கூஅ.

'ஓவத் தன்ன விடனுடை வரைப்பின் என்புழி அந்நகரினது செயற்கைநலந் தோன்றக் கூறினமையின் அதற்கு நிலக்களன் நலனுயிற்று' தொல். உவம. சூ. 4, இளம்.; பேர்.; இ. வி. சூ. 639; மாறன். 92, உரை.

2. "செய்வுறு பாவை யன்னவென், மெய்பிறி தாகுதல்" (குறுந். ககூ); "வல்லவன் றைஇய பாவைகொல்......செல்வமகள்" கலி. ருசு : 7 - 12.

5 - 6. புறநா. உசஎ : 1 - 2; தவஞ்செய்வோர்க்கு யானைகள் விறகுதருமென்பதை, “செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக், களிறுதரு விறகின் வேட்கும், ஒளிறிலங் கருவிய மலைகிழ வோனே” (பெரும்பாண். 498 - 500) என்பதனாலும் அதன் அடிக்குறிப்பாலும் அறிக.

[1]ழ. வாகைத்திணைத்துறைகளுள், ‘நாலிரு வழக்கிற் றாபதப் பக்கம்’ என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 16. இளம். ஷை. ஷை. ஷை. 20, ந.



இ - ள்.—ஓவியம்போலும் அழகினையுடைத்தாகிய இடமுடைய இல்லின்கண் [1]கொல்லிப்பாவைபோன்ற வடிவினையுடைய சிறிய வளையணிந்த மகளிருடைய அணிகலங்களை அவைநிற்கு நிலையினின்றும் கழலும்வகை ஆதாஞ்செய்தவனைக் கண்டேம்; மூங்கிலிடத்தையுடைய நெடியமலையிடத்து அருவிநீரை யாடிக் காட்டியானை கொண்டுவரப்பட்ட விறகால் மிக்க வெம்மையையுடைய செந்தீயை வேட்டு முதுகின்கண்ணே தாழ்ந்த புரிந்த சடையைப் புலர்த்துவோன்.—எ - று.

ஆடி வேட்டுப் புலர்த்துவோனென இயையும்.

முன்பு இழைநெகிழ்த்த மன்னற் கண்டேம், அவன் இப்பொழுது புறந்தாழ் புரிசடை புலர்த்தாநின்றோனென அவனைக் கண்டு வியந்து கூறியவாறு.

பாவையென்றது, பிறிது எவ்வுணர்வுமின்றிக் காமவேட்கையாகிய ஒரு குறிப்பினை.

கானயானை தந்த விறகென்றது, இவன் தவமிகுதியான் அதுவும்

[1]கொல்லிப்பாவை : நற். கஅ௫, ககூஉ, உ0௧; குறுந். அக, ௧00; அகநா. சுஉ, உ0௯.

---

(உருஉ) கறங்குவெள் ளருவி யேற்றலி னிறம்பெயர்ந்து
தில்லை யன்ன புல்லென் சடையோ
டள்ளிலைத் தாளி கொய்யு மோனே
இல்வழங்கு மடமயில் பிணிக்கும்
சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே.[1]

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—ஒலிக்கும் வெள்ளிய அருவிநீரை ஏற்றலாற் பழையநிறம் மாறித் தில்லந்தளிர்போன்ற புற்கென்ற சடையோடு கூடிநின்று செறிந்த

---

4 - 5. பிறன்கட்டோன்றிய அசைவுபற்றிய அவலச்சுவைக்கு மேற்கோள்; தொல். மெய்ப்பாடு. சூ. 5, பேர்.; இ. வி. சூ. 578, உரை.

[1]பு. வாகைத்திணைத்துறைகளுள், 'நாலிரு வழக்கிற் றாபதப் பக்கம்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 16, இளம்.

இலையையுடைய தாளியைப் பறிப்போன், மனையின்கண் இயங்கும் மடப்பத்தையுடைய மயிலை அகப்படுத்திக்கொள்ளும் சொல்லாகிய வலையையுடைய வேட்டைக்காரனாயினன் முன்பு.—எ - று.

இதுவும் அவன்நிலைமையைக் கண்டு வியந்து கூறியது. (உருஉ)

---

(உருங) என்றிறத் தவலங் கொள்ள லினியே
வல்வார் கண்ணி யிளையர் திளைப்ப
*நகாஅலென வந்த மாறே யெழாநெற்
பைங்கழை பொதிகளைந் தன்ன விளர்ப்பின்
வளையில் வறுங்கை யோச்சிக்
கிளையு ளொய்வலோ கூறுநின் னுரையே.

திணை - பொதுவியல்; துறை - முதுபாலை.

......... †குளம்பாதாயனார் பாடியது.

முதுபாலையாவது:—

[1]"காம்புயர் கடத்திடைக் கணவனை யிழந்த
பூங்கொடி யரிவை புலம்புரைத் தன்று."

இ - ள்.—நின்னைப் பிரிந்து ஆற்றேனாகின்றேன்; என்னுடைய திறத்து வருத்தங்கொள்ளாதொழிவாயாக, இப்பொழுது; சுற்றப்பட்ட

கண்ணியையுடைய நின்னோடு கூடி விளையாடப் போந்த இளையோர் விளையாடா நிற்ப அவரோடு நகுகின்றிலேனென்று கருதவந்த நின் இறந்து பாட்டை நெல் எழாத பசியமூங்கில் பட்டையொழித்தாற்போன்ற வெளுத்திருந்த வளையில்லாத வறிய கையைத் தலைமேலே ஏற்றிக்கொண்டு நின் சுற்றத்திடத்தே செலுத்தச் செல்வேனோ இன்னும், இறந்துபடினல்லது? நின்வார்த்தையை எனக்குச் சொல்லுவாயாக.—எ - று.

அவலமென்றது, பிரிந்தவழி ஆற்றேனென்று வருந்தும் அவலத்தை.

கூறும்நின்னுரையென அவன்சொற்கேட்டல் விருப்பினாற் கூறுவாள் போன்று மயங்கிக்கூறியவாறு. (உ௫௩)

---

1. சீவக. 1453, ந. மேற்கோள்.

5. புறநா. உ௫௪ : 4. 6. ஓய்தல் : பதிற். ௭௩, ௮௭.

[1]புறப்பொருள்வெண்பாமாலை, 254.

பி - ம். *நகாரென. †குளம்பாதயானார்.



(உ௫௪) இளையரு முதியரும் வேறுபுலம் படர
எடுப்ப வெழாஅய் மார்பமண் புல்ல
இடைச்சுரத் திறுத்த மள்ள விளர்த்த
வளையில் வறுங்கை யோச்சிக் கிளையுள்
இன்ன னாயின னிளையோ னென்று

நின்னுரை *செல்லு மாயின் மற்று
†முன்னூர்ப் பழுனிய கோளி யாலத்துப்
புள்ளார் யாணர்த் தற்றே யென்மகன்
வளனுஞ் செம்மலு மெமக்கென நாளும்
ஆனாது புகழு மன்னை
யாங்கா குவள்கொ லளிய டானே.[1]

திணையும் துறையும் அவை.
.........கயமனார் பாடியது.

இ - ள்.—இளையோரும் முதியோரும் வேற்றுநிலத்தே விலங்கிப் போக யான் எடுப்பவும் நீ எழுந்திராயாய் நினது மார்பம் நிலத்தைப் பொருந்தச் சாத்திடை மேம்பட வீழ்ந்த இளையோய்! வெளுத்த வளையில்லாத வறிய கையைத் தலைமேலே வைத்துச் சுற்றத்தின்கண் இத்தன்மையனாயினன் இளையனென்று யான் சொல்ல நின் இறந்துபாடுகூடிய வார்த்தை செல்லுமாயின், ஊர்முன்னர்ப் பழுத்த கோளியாகிய ஆலமரத்தின்கட் புள்ளுக்கள் மிகும் புதுவருவாயையுடைய அத்தன்மைத்து, என்னுடைய மகனது செல்வமும் தலைமையும் எமக்கென்று நாடோறும் அமையாது புகழும் நின்னுடைய மாதா எவ்வாறு ஆவாள் கொல்! அவள் இரங்கத்தக்கவள்தான்!—எ - று.

வளனும் செம்மலும் புள்ளார் யாணர்த்தற்றென்றது, [2]புள்ளெல்லாஞ் சென்று அணுக ஆலமரம் பயன்பட்டு நின்றாற்போல இவனும் தன் சுற்றத்தாரும் பிறரும் ‡கட்டாரும் நுகரும்படி நின்றமை தோன்றநின்றது.

---

4 - 5. புறநா. உ௫௫ : 5 - 6.
8. கோளியாலம்: புறநா. ௫அ : 2, அடிக்.

7 - 9. "பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம், நயனுடை யான்கட் படின்" குறள், 216.

[1]ழ. காஞ்சித்திணைத்துறைகளுள், 'தனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்து, தனிமகள் புலம்பிய முதுபாலை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 24, ந.

[2]நாலடியார், 202.

பி - ம். *சொல்லு மாயின். †முள்ளூர். ‡நாட்டாரும்.



'நின்னுரைசெல்லுமாயின் யாங்காகுவள்கொல்' என்ற கருத்து: யான் இறந்துபட்டவாறு சொல்லின் அன்றே அவள் வருத்தமுறுவள்; அது யான் மாட்டேனென்பதாம்.

முன்னூர்: முன்மொழிநிலையல். மற்று: அசைநிலை. (உருச)

---

(உருரு) ஐயோ வெனின்யான் புலியஞ் சுவலே
*அணைத்தனன் கொளினே யகன்மார் பெடுக்க வல்லேன்
என்போற் பெருவிதிர்ப் புறுக நின்னை
இன்னா துற்ற வறனில் கூற்றே
நிரைவளை முன்கை பற்றி

வரைநிழற் †சேர்க நடத்திசிற் சிறிதே.[1]

திணையும் துறையும் அவை.

................வன்பரணர் பாடியது.

இ - ள்.—ஐயோவென்று அரற்றுவேனாயின் அவ்வுரைவழியே வந்து நின் உடம்பாயினும் யான் காணப்பெறாமல் ஏதஞ்செய்யுமோவென்று புலியை அஞ்சுவேன்; இவ்விடத்தினின்றும் எடுத்துக்கொண்டு போவேனென்று நினைப்பின் நினது அகலிய மார்பை எடுக்கமாட்டேன்; என்னை யொப்பப் பெரிய நடுக்கத்தை உறுவதாக, உன்னை இறந்துபடும்பரிசு வந்து தாக்கிய அறமில்லாத கூற்றே. யாம் மலையினது நிழற்கண்ணே அடைவே

---

3. புறநா. உகக : 5.

3-4. 'என்போற் பெருவிதிர்ப் புறுக நின்னை, இன்னா துற்ற வறனில் கூற்றே : என்புழிப் போலவென்பது குறிப்புவினையெச்சமாய் நின்றது' தொல். எச்ச. சூ. 18, சே.

[1]மு. காஞ்சித்திணைத் துறைகளுள், நனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்து தனிமகள் புலம்பிய முதுபாலைக்கும் (தொல். புறத்திணை. சூ. 19, இளம்.), இழவுபற்றி வந்த அழுகைக்கும் (ஷை. மெய்ப்பாடு. சூ. 5, இளம்.), தன்கட்டோன்றிய இழவுபற்றிப் பிறந்த அவலச்சுவைக்கும் (ஷை. ஷை. ஷை. பேர்.) மேற்கோள்; 'ஐயோ.........சிறிதே: இதனுள் அழுகையாகிய மெய்ப்பாடு புலப்பட வந்தவாறு காண்க' தொல். செய். சூ. 194, இளம்.

பி - ம். *எடுத்தனன் கொளி னுய்த்தனென்-கோனே மார்பெடுக் கல்லேன். †சோநடத்தி.

மாக; எனது நிரைத்த வளையையுடைய முன்கையைப் பிடித்து மெல்ல நடப்பாயாக.—எ - று.

நடவாயென்னும் முன்னிலைவினைச்சொல் சின்னென்னும் இடைச் சொல்லான் அசைக்கப்பட்டு நின்றது. (உருரு)

---

(உருசா) கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய
சிறுவெண் பல்லி போலத் *தன்னொடு
சுரம்பல வந்த வெமக்கு மருளி
வியன்மல ரகன்பொழி லீமத் தாழி
அகலி தாக வனைமோ
நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே.

திணையும் துறையும் அவை.

......................................

இ - ள்.—கலம் வனையும் வேட்கோவே! கலம் வனையும் வேட் கோவே! சகடஞ் செலுத்தும் உருளின்கண் ஆரத்தைப் பொருந்திவந்த சிறிய வெளிய பல்லிபோல் நெருநலைநாளாற் பலசுரமும் தன்னோடு கழிந்துவந்த எமக்கும் அருள்பண்ணி (யாமும் அவனோடே கூடியிருக்கும் படி) பெரிய பரப்பினையுடைய அகலிய பூமியிடத்துக் காட்டின்கண்

மூதுமக்கட்டாழியை இடமுடைத்தாக வனைவாயாக, பெரிய இடத்தினை யுடைய பழைய ஊரின்கட் கலம்வனையும் வேட்கோவே!—எ - று.

'எமக்கும்' என்றது, பன்மையும் தலைமையும் கருதாது மயங்கக் கூறி நின்றது.

கோவே! கோவே! மூதூர்க்கலஞ்செய்கோவே! எமக்கும் அருளி அகலிதாக வனைகவெனக்கூட்டுக.

அடுக்கு, விரைவின்கண் வந்தது. (உ௫௬)

---

1. மு. புறநா. உ௨௮ : 1.
3 - 4. "பொருந்தலாற் பல்வி போன்றும்" சீவக. 1895.
5. புறநா. உ௨௮ : 12, அடிக்.
பி - ம். *தம்மொடு.



(உ௫எ) செருப்பிடைச் *சிறுபர லன்னன் கணைக்கால்
அவ்வயிற் றகன்ற மார்பிற் பைங்கட்
† குச்சி னிரைத்த குரூஉமயிர் மோவாய்ச்
செவியிறந்து தாழ்தருங் கவுளன் வில்லொ
டியார்கொலோ வளியன் றானே தேரின்
ஊர்பெரி திகந்தன்று மிலனே யரணெனக்
காடுகைக் கொண்டன்று மிலனே காலைப்

புல்லா ரினநிரை செல்புற நோக்கிக்
கையிற் சுட்டிப் பையென வெண்ணிச்
சிலையின் மாற்றி யோனே யவைதாம்
மிகப்பல வாயினு மென்னு மெனைத்தும்
வெண்கோ டோன்றாக் குழிசியொடு
நாளுறை மத்தொலி கேளா தோனே.[1]

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு.

..............................

உண்டாட்டாவது:—

[2]"தொட்டிமிழுங் கழன்மறவர்
மட்டுண்டு மகிழ்தூங்கின்று."

இ - ள்.—..........திரண்ட காலையும் அழகிய வயிற்றினையும் பரந்த மார்பினையும் பசிய கண்ணினையும் குச்சுப்புல் நிரைத்தாற்போன்ற நிறம்பொருந்திய மயிரினையுடைய தாடியினையும் செவியிறந்து முன்னே தாழ்ந்த கதுப்பினையுமுடையனாய் வில்லுடனே யார்தான் இவ்வளிக்கத் தக்கான்றான்? ஆராயின், ஊரைப் பெரிதும் ‡நீங்கினதும் இலன்; தனக்கு அரணெனக் கருதிக் காட்டைக் கைக்கொண்டதும் இலன்; இற்றைநாட் காலையே பொருந்தாதாரது இனமாகியநிரை போகின்ற இடத்தைப் பார்த்துத் தன் கையாற் குறித்து மெல்ல எண்ணிக் காந்தையார்செய்யும்பூசலை மாற்றி வில்லாலே கொடுபோந்தனன்; அந்நிரைதாம் மிகப்பலவேயாயினும் என்னபயன்படும் எத்தன்மைத்தும், பால்முதலியன பெய்யப்படாமையிற் சிறிதும் வெள்ளிய முகந்தோன்றாத பானையைக் காண்டலுடனே, நாட்காலத்து உறைதெறிப்பக் கடையும் மத்தின் ஒலியைக் கேளாதபடி §பிறருக்கு நேராகக் கொடுத்தல் வல்லனாயினன், அவனுக்கு?—எ - று.

[1]பு. வெட்சித்திணைத்துறைகளுள், 'நோயின் றுய்த்தல்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 3, இளம். [2]பு. வெ. 15.

பி - ம். *செறுபால். †குச்சிநிரை......மேவாய். ‡நீங்கின்றமலன். §பிறர்க்கு நோக்கிக் கொடுத்தல்.



[1]பகைவர் மேல்நடக்கவொட்டாது எதிரில் நின்று விலக்குதலின், 'செருப்பிடைச் சிறுபர லன்னன்' எனப்பட்டான்.

'அன்ன' என்று பாடமோதி, செருப்பிடைச் சிறுபரலோசைபோல நெடிய ஓசையையுடைய காலென்றுரைப்பாரும் உளர்.

யார்கொலென்றது அறியான்வினாதலன்றி வியப்பின்கண் வந்தது.

'ஊர்பெரி திகந்தன்று மிலனே' என்பது நிரைகோட்கமை.

சிறுபாலன்னன் கவுளனாகிய அளியனாவன்றான் யார்கொல்லோ? தேரின் வில்லோடு ஊர்பெரிது இகந்தன்றும் இலனாய்க் காடு கைக்கொண்டதும் இலனாய் நோக்கி எண்ணி மாற்றினான்; மாற்றிக் குழிசிகாண்டலோடு மத்தொலிகேளாதோனயினான்; அவனுக்கு அவைதாம் மிகப்பலவாயினும் என்னும் எனக்கூட்டுக.

கேளாதோற்கென உருபுவிரித்து உரைப்பினும் அமையும் (உ௫எ)

---

[1]"தருக்கி யொழுகித் தகவல்ல செய்தும், பெருக்க மதித்தபிற் பேணாத செய்தும், காப்புடை யுள்ளங் கனற்று பவரே, செருப்பிடைப் பட்ட பரல்" பழமொழி, 224.

(உருஅ) முட்காற் காரை *முதுபழ னேய்ப்பத்
தெறிப்ப விளைந்த †தீங்கந் தாரம்
நிறுத்த வாயந் தலைச்சென் றுண்டு
‡பச்சூன் றின்று பைந்நிணம் பெருத்த
எச்சி லீர்ங்கை விற்புறந் திமிரிப்
புலம்புக் கனனே புல்லணற் காளை

---

3. புறநா. கஎஎ : 14.

6. ஏழாம்வேற்றுமை வினையொடு முடியும்வழித் திரிந்ததற்கும் (தொல். தொகை. சூ. 15, இளம். ந.), வேற்றுமைக்கண் மகரவொற்றுப் பகரம்வந்துழிக் கெடாது நின்றதற்கும் (ஷை. புள்ளிமயங்கு. சூ.17, இளம். ந; இ. வி. சூ. 129, உரை) மேற்கோள்.

பி - ம். *முதுகனியேய்ப்ப. †தீங்கட்டாரம். ‡பைச்சூன்.



ஒருமுறை யுண்ணா *வளவைப் பெருநிரை
ஊர்ப்புற நிறையத் தருகுவன் யார்க்கும்
தொடுதே லோம்புமதி முதுகட் சாடி
†ஆதரக் கழுமிய துகளன்
காய்தலு முண்டக் கள்வெய் யோனே.[1]

திணையும் துறையும் அவை.

……………உலோச்சனார் பாடியது.

உண்டாட்டாவது:—

[2]"தொட்டிமிழுங் கழன்மறவர்
மட்டுண்டு மகிழ்தூங்கின்று."

இ - ள்.—முட்டாளையுடைய காரையினது முதிர்ந்த பழத்தை யொப்ப முற்ற விளைந்த இனிய கந்தாரமென்னும் பெயரையுடைய மது வையுடைய வேற்றுப்புலத்துத் தான்கொண்டுவந்து நிறுத்தின நிரையைக் கள்விலைக்கு நேராகக் கொடுத்து உண்டு செவ்வித்தசையைத் தின்று செவ்விநிணமிக்க எச்சிலாகிய ஈரமுடைய கையை வில்லினது புறத்தே இமிர்ந்து வேற்றுநாட்டின்கட் புக்கானே, புல்லிய தாடியையுடைய காளை; இவ்விருந்தமறவர் ஒருகால் உண்பதன்முன்னே பெரிய ஆனிரையை இவ் வூர்ப் புறமெல்லாம் நிற்பக் கொடுதருகுவன்; யாவர்க்கும் வாராது அதற் பொருட்டுத் தொடுதலைப் பாதுகாத்துவைப்பாயாக, முதிர்ந்த மதுவை யுடைய சாடியை; ஆவைக் கொண்டுவரக் கலந்த தூளியையுடையனாய் அம்மதுவை விரும்புவோன் விடாய்த்தலும் உண்டாம்.—எ - று.

தலைச்சென்றென்பது, தலைச்செலவெனத் திரிக்கப்பட்டது. இதற் குக் கள்விலையாட்டியிடத்தே செல்லவென்றுமாம்.

'தீங்கட்டாரம்' என்றோதிக் கள்ளாகிய இனிய பண்டமெனினும் அமையும்.

'காய்தலுமுண்டு' என்பதற்குக் கள்வெய்யோனாகலின், நின்னை வெகுளவுங்கூடுமென்பாரும் உளர்.

இவன் நிரைகொள்ளச் செல்கின்றமைகண்டார் கள்விலையாட்டிக் குக் கூறியது.

(உகஅ)

10. "கழுமிய துன்பமொடு கண்ணீ ருகுத்து" மணி. கூ : 18.

[1]மு. 'முட்காற் காரை......வெய்யோனே : இது வெட்சித்திணை பெயர்கொள்ளாது வந்தது' தொல். அகத்திணை. சூ. 54, ந.

[2]பு. வெ. 15.

பி - ம். *வளவை பெருநிரை. †ஆத்தர.



(உருகூ) ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயரா
திலைபுதை பெருங்காட்டுத் தலைகரந் திருந்த
வல்வின் மறவ ரொடுக்கங் காணாய்
செல்லல் செல்லல் சிறக்கநின் னுள்ளம்
முருகுமெய்ப் பட்ட புலைத்தி போலத்
தாவுபு தெறிக்கு மான்மேற்
புடையிலங் கொள்வாட் புனைகழ லோயே.[1]

திணை-கரந்தை; துறை - செருமலைதல்; பிள்ளைப்பெயர்ச்சியுமாம்.

.........கோடைபாடிய பெரும்பூதனார் பாடியது.

செருமலைதலாவது:—

[2]"வெட்சி யாரைக் கண்ணுற்று வளைஇ
உட்குவரத் தாக்கி யுளர்செருப் புரிந்தன்று"

இ - ள்.—தாம் கொள்ளப்பட்ட ஏற்றையுடைய பெரிய ஆனிரை முன்னே போக மீட்கவருவாரைக்குறித்து அந்நிரையோடு தாம் போகாது தழையால் மூடிய பெரிய காட்டின்கண் தலைகரந்திருந்த வலிய வில்லையுடைய மறவரது ஒடுங்கிய நிலையைக் கருதாய்; போகாதொழி, போகாதொழி, நினது மேற்கோள் சிறப்பதாக, தெய்வம் மெய்யின்கண் ஏறிய புலைமகளையொப்பத் தாவித் துள்ளும் ஆனிரைமேல்; மருங்கிலே விளங்கா நின்ற ஒள்ளிய வாளினையும் வீரக்கழலினையுமுடையோய்!—எ - று.

புனைகழலோய்! காணாய்; ஆன்மேற் செல்லல், செல்லல்; நின் உள்ளம் சிறப்பதாகவெனக் கூட்டுக.

செல்லலென்றது அவரைக் கண்டு பொருது கொன்றன்றிச் செல்லலென்பதாம். (உ௫௯)

---

[1]மு. வெட்சித்திணைத் துறைகளுள், 'ஆபெயர்த்துத்தருதல்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 5, இளம்.; ந.

[2]பு. வெ. 25.

---

(உ௬0) வளரத் தொடினும் வெளவுபு திரிந்து
விளரி யுறுதருந் தீந்தொடை நினையாத்
தளரு நெஞ்சந் தலைஇ, மனையோள்
உளருங் கூந்த னோக்கிக் களர
கள்ளி நீழற் கடவுள் வாழ்த்திப்

பசிபடு மருங்குலை கசிபுகை தொழாஅக்
காணலென் சொல்லென வினவினை வரூஉம்
பாண கேண்மதி யாணரது நிலையே
58



புரவுத்தொடுத் துண்குவை யாயினு மிரவெழுந்
தெவ்வங் கொள்குவை யாயினு மிரண்டும்
கையுள போலுங் கடிதண் மையவே
முன்னூர்ப் பூசலிற் றோன்றித் தன்னூர்
'நெடுநிரை தழீஇய மீளி யாளர்
விடுகணை நீத்தந் துடிபுணை யாக
வென்றி தந்து கொன்றுகோள் விடுத்து
வையகம் புலம்ப வளைஇய பாம்பின்
வையெயிற் றுய்ந்த மதியின் மறவர்
கையகத் துய்ந்த கன்றுடைப் பல்லான்
நிரையொடு வந்த வுரைய னாகி
உரிகளை யரவ மானத் தானே
அரிதுசெல் லுலகிற் சென்றன னுடம்பே
கானச் சிற்றியாற் றருங்கரைக் †காலுற்றுக்
கம்பமொடு துளங்கிய ‡விலக்கம் போல

அம்பொடு துளங்கி யாண்டொழிந் தன்றே
உயிரிசை வெறுப்பத் தோன்றிய பெயரே
மடஞ்சான் மஞ்ஞை யணிமயிர் சூட்டி
இடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்
படஞ்செய் பந்தர்க் கன்மிசை யதுவே.[1]

திணை - [§]அது; துறை - கையறுநிலை; ‡பாண்பாட்டுமாம்.

........................ [2]வடமோதங்கிழார் பாடியது.

---

15 - 9. "வாள்வாயு மின்றி வடிவெங்கணை வாயுமின்றிக், கோள்வாய் மதிய நெடியான்விடுத் தாங்குமைந்தன், தோள்வாய் சிலையினொலி யாற் றொறுமீட்டு மீள்வான், நாள்வாய் நிறைந்த நகைவெண் மதிசெல்வ தொத்தான்" சீவக. 454.

20 - 21. "படநாகந் தோலுரித்தாற் போற்றுறந்து", "பாம்புரி போன் முற்றத் துறந்து" சீவக. 1546, 3039.

23. புறநா. ௪ : 6, கசுக : 10 - 11.

25 - 8. புறநா. உசக : 12 - 4 ; உசுச : 1 - 4.

[1]மு. ஆபெயர்த்துத்தருதலென்னுந் துறைக்கு மேற்கோள்காட்டி, 'இதனுள் தன்னூரென்றலிற் குறுநிலமன்னன் நிரைமீட்டுப் பட்ட நிலையைப் பாணர் கையற்றுக்கூறியது' என்பர்; தொல். புறத்திணை. சூ. 5, ந.

[2]அகநானூறு, ருகள.

பி - ம். *நெடுவெறி. †காலுறக். ‡விலங்கு. §பாடாண்டிணை; துறை - செருவிடைவீழ்தல்; கையறுநிலையுமாம். ‡பாடாண்பாட்டுமாம்.

இ - ள்.—ஓசைமிகவேண்டுமென்று *எறியினும் ஓசையை உள்வாங்கி வேறுபட்டு இரங்கற்பண்ணாகிய விளரியைச் சென்று உறுகின்ற இனிய நரப்புத்தொடையினது தீங்கை நினைந்து நடுங்கும் நெஞ்சத்தைத் தலைப் பட்டுப் புறப்பட்டவளவின் நிமித்தவழியாக ஒருமனைவி விரித்துவருகின்ற மயிரைப் பார்த்துக் களர்நிலத்துள்ள கள்ளிமரத்தின் நிழற்கண் உண் டாகிய தெய்வத்தை ஏத்திப் பசிதங்கிய வயிற்றையுடையையாய் இரங்கிக் கையாற்றொழுது நம் குருசிலைக் காணமாட்டேன்கொல்லோவென்று எதிர்வருவாரைப் பார்த்துக் கேட்டுவருகின்ற பாண! கேட்பாயாக, நமது செல்வம்பட்ட நிலைமை: இனி நீ அவன் நமக்கு விட்ட விளைநிலங்களைக் கைப்பற்றி உண்பாயாயினும் அன்றி அவனோடேகூடி இன்புற்றிருந்த விடத்து அவனையின்றி உயிர்வாழ்தற்பொருட்டு இரக்கக்கடவோமென் றெழுந்திருந்துவருத்தங்கொள்வாயாயினும் இரண்டும் நினது கையகத்துள் ளன; மிக்க அணுமையையுடைய ஊர்முன்னாகச் செய்யப்பட்ட பூசலின் கட்டோன்றித் தன்னுடைய ஊரின்கண் மிக்க நிரையைக்கொண்ட மறத் தினையுடைய வீரர் எய்யப்பட்ட †அம்புவெள்ளத்தைத் தன்துடியே புணை யாகவென்று பகைவரைக் கொன்று அவர் கொண்ட நிரையை மீட்டு உலகம்தனிப்பச் சூழ்ந்துகொண்ட பாம்பினது கூரிய பல்லினின்றும் பிழைத்துப்போந்த திங்களைப்போல மறவருடைய கையினின்றும் பிழைத்துப்போந்த கன்றையுடைய பலவாகிய ஆனிரையுடனே வந்த சொல்லையுடையனாய்த் தோலுரித்த பாம்புபோலத் தான் ஒருவனுமேயாக அரிதாகச்செல்லப்படும் தேவருலகத்தின்கட்போயினான்; அவனதுஉடம்பு, காட்டுட் சிற்றியாற்றினது அரிய கரையிடத்துக் காலுற நின்று நடுக்கத் தோடுசாய்ந்த இலக்கத்தையொப்ப அம்பாற் சலித்து அவ்விடத்து வீழ்ந்

தது; உயர்ந்தகீர்த்திமிகவுந் தோன்றிய மறவன் பெயர் மென்மையமைந்த மயிலினது அழகிய மயிராகிய பீலியைச் சூட்டப் பிறர் இடங்கொள்ளப் படாத சிறியவிடத்துப் புடைவையாற் செய்யப்பட்ட பந்தர்க்கீழ் நட்ட கன்மேலது.—எ - று.

சூட்டியென்பது, சூட்டவெனத் திரிக்கப்பட்டது; சூட்டப்பட்டெனினும் அமையும்.

'மனையோள் கூந்தனோக்கி' என்பதற்கு 'பாண! என் மனைவியது சரியும் மயிரை நோக்கி' எனவும், 'புரவுத்தொடுத்து' என்பதற்கு 'அன்று உம்மைப் புரந்த பரிசைப் பாடி' எனவும் உரைப்பாரும் உளர். (உசுO)

---

பி - ம். *அறையினும். †அப்புவெள்ளம்.



(உசுக) அந்தோ வெந்தை யடையாப் பேரில்
வண்டுபடு நறவிற் றண்டா மண்டையொடு
வரையாப் பெருஞ்சோற்று *முரிவாய் முற்றம்
வெற்றியாற் றம்பியி னெற்றற் றாகக்
கண்டனென் மன்ற சோர்கவென் கண்ணே
வையங் காவலர் வளங்கெழு திருநகர்
மையல் †யானை யயாவுயிர்த் தன்ன
‡நெய்யுலை சொரிந்த மையூ னோசை

புதுக்கண் மாக்கள் செதுக்க ணாரப்
பயந்தனை மன்னன் முன்னே யினியே
§பல்லா தழீஇய கல்லா வல்வில்
உழைக்குரற் கூகை யழைப்ப ‡வாட்டி
நாகுமுலை யன்ன நறும்பூங் கரந்தை
விரகறி யாளர் மரபிற் சூட்ட
நிரையிவட் டந்து நடுக லாகிய
வென்வேல் விடலை யின்மையிற் புலம்பிக்
கொய்ம்மழித் தலையொடு ¶கைம்மையுறக் கலங்கிய
கழிகல மகடூஉப் போலப்
புல்லென் றனையாற் பல்லணி யிழந்தே.[1]

††திணையும் துறையும் அவை.

..................ஆலூர் மூலங்கிழார் பாடியது.

---

1. அந்நீற்று ஓ இரக்கக்குறிப்பு உணர்த்திநிற்றற்கு மேற்கோள்; தொல். இடை. சூ. 34, ந.

5. "கற்கொலோ சோர்ந்திலவெங் கண்" பு. வெ. 31.
6. வளங்கெழு திருநகர் : புறநா. ௨௫௦: 6.
7. "மையல் யானையின் மருட்டலு மருட்டினன்" கலி. ௫௪ : 14.
9. செதுக்கண் : கலி. ௬௮ : 3.

17. புறநா. ௨௫௦ : 4 - 5, ௨௮௦ : 11 - 4.
18. புறநா. ௨௬௮ : 6, ௨௮௦: 14. 19. புறநா. ௨௫௦ : 6.

[1]‘கரந்தையாவது தன்னுறு தொழிலாக நிரைமீட்டோர் பூச்சூடுதலிற் பெற்ற பெயராதலின் வெட்சித்திணைபோல ஒழுக்கமன்று; அந்தோ வெந்தையென்னும் புறப்பாட்டினுள், நாகுமுலை யன்ன நறும்பூங் கரந்தை, விரகறியாளர் மரபிற் சூட்ட, நிரையிவட் டந்து என்றவாறு காண்க’ தொல். புறத்திணை சூ. 5, ந.

பி - ம். *முரவுவாய் முற்றம் பெற்றியாற்று. †யானையவர். ‡நெய்யுலைச் சொரிந்த. §பல்லாத் தழீஇ. ‡‡ஆட்டி ஞெகுமுலை. ¶கைமிகக். ††திணை - கரந்தை; துறை - கையறுநிலை.



இ - ள்.—*அந்தோ! என் இறைவனது அடையாத பெரிய இல்லே! வண்டுகள் படியும் மதுவினால் ஒழியாத மண்டையுடனே யாவர்க்கும் வரையாமல் வழங்கும் மிக்க சோற்றையுடைய முரிந்த குறட்டையுடைத்தாகிய முற்றம் நீரற்ற யாற்றின் ஓடம் எத்தன்மைத்து அத்தன்மைத்தாகக் கண்டேன், நிச்சயமாக; என் கண்மணி சோர்ந்து வீழ்வனவாக; உலகத்தைக் காக்கும் வேந்தருடைய செல்வமிக்க திருநகரின்கண் மதத்தான் மயங்கிய யானை உயங்குதலான் நெட்டுயிர்ப்புக்கொண்டாற்போன்ற நெய் காய்கின்ற உலையின்கண் சொரியப்பட்ட ஆட்டிறைச்சியினது ஓசையுடைய பொரியலைப் புதுமாந்தருடைய ஒளிமழுங்கின கண்கள் நிறைய உண்டாக்கினாய் முன்பு; அது கழிந்தது! இப்பொழுது பல ஆனிரையைக் கற்கவேண்டாத வலிய விற்படையைத் தன்னிடத்தே குரலை மிகவுடைய கூகை தன் இனத்தை அழைக்கும்படி அலைத்து நாகினது முலைபோன்ற நறிய பூவையுடைய கரந்தையை அறிவுடையோர் சூட்டுமுறைமையிலே சூட்ட நிரையை இவ்வூரின்கண் மீட்டுத் தந்து நடப்பட்ட கல்லாகிய

வென்றிவேலையுடைய இறைவன் இல்லாமையால் தனித்துக் கொய்யப்பட்ட †மொட்டையாகிய தலையுடனே கைம்மைநோன்புமிகக் கலக்கமுற்ற ஒழிக்கப்பட்ட அணிகலத்தையுடைய அவன்மனைவியையொப்பப் பொலிவழிந்தனை, பல அழகும் இழந்து.—எ - று.

அம்பியினென்புழி, இன் அசைநிலை.

'அம்பியினற்றாக' என்று பாடமோதுவாரும் உளர்.

கண்: அசை; மன்: கழிவின்கண் வந்தது.

எந்தைபேரில்லே ! செதுக்கணாப் பயந்தனை முன்; இனி மகடூஉப் போலப் பல அணியும் இழந்து புல்லென்றனையாய் அம்பியற்றாகக் கண்டேன்; கண்ட என்கண் சோர்கவெனக் கூட்டுக.

ஓசையென்றது ஆகுபெயரான் ஓசையையுடைய கறியை; இஃது ஒரு திசைச்சொல்.

'செதுக்கணா' என்பதற்குச் செதுக்கின குடர்நிறையவென்றுமாம்; கைம்மிஞ்சவென்றுமாம். (உசுக)

---

பி - ம். *ஐயோ. †மட்டை.

---

(உசுஉ) நறவுந் தொடுமின் விடையும் வீழ்மின்

---

1. "மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடை" (முருகு. 232); "மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி" (பெரும்பாண். 143); "செங்கண் மழவிடை கெண்டிச் சிலைமறவர், வெங்கண் மகிழ்ந்து" (பெரும்பொருள் விளக்கம்); விடை - ஆட்டுக்கிடாய்.

பாசுவ லிட்ட *புன்காற் பந்தர்ப்
புனறரு மிளமண னிறையப் பெய்ம்மின்
ஒன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று
நிரையொடு வரூஉ மென்னைக்
குழையோர் தன்னினும் பெருஞ்சா யலரே.[1]

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு; தலைத்தோற்றமுமாம்.
.................மதுரைப் பேராலவாயார் பாடியது.

தலைத்தோற்றமாவது:—

[2]"உரவெய்யோ னினந்தழீஇ
வரவுணர்ந்து கிளைமகிழ்ந்தன்று."

இ - ள்.—மதுவையும் அலைத்துண்ணும்படி பிழிமின்; ஆட்டுவிடையையும் படுமின்; பசிய தழையாலே வேயப்பட்ட புல்லிய காலையுடைய பந்தரின்கண் நீர் †சொழித்துக் கொடுவரப்பட்ட இளைய மணலை நிரம்பப் பரப்புமின்; பகைவரது தூசிப்படையை முறித்துப் பெயர்ந்துபோகிற தனது படைக்குப்பின்னே நின்று நிரையுடனே வருகின்ற என் இறைவனுக்குப் பக்கமறவராய் நிரைகொண்டுவருவோர் அவன்றன்னினும் பெரிய இளைப்பையுடையர்.—எ - று.

சாயல் - விடாயாலுண்டான மென்மை.

என்னைக்கு உழையோர் தன்னினும் பெருஞ்சாயலர்; அவர்க்கு நறவும் தொடுமின்; விடையும் வீழ்மின்; பெய்ம்மினெனக்கூட்டுக. (உசுஉ)

---

2. "உவலிடு பதுக்கை" (அகநா. கoக); உவல், உவலையெனவும் வழங்கும்; முல்லை. 29; பு. வெ. 169.

6. உழையோர்: எழுவாய்.

[1]மு. வெட்சித்திணைத்துறைகளுள் 'நுவல்வழித் தோற்றம்' என்பதற்கும் (தொல். புறத்திணை. சூ. 3, இளம்.), 'உண்டாட்டு' என்பதற்கும் (ஷை. ஷை. ஷை. 3, ந.) மேற்கோள். [2]பு. வெ. 12.

பி - ம். *பைங்கால். †கழித்து.

---

(௨௬௩) [1]பெருங்களிற் றடியிற் றோன்று மொருகண்
இரும்பறை யிரவல!சேறி யாயிற்

---

1 - 2. புறநா. ௩௬௮ : 14 - 5, ௩௧௨ : 4 - 5.

[1]இதுமுதலிய மூன்றுபாட்டுக்களின் உரையும், ௨௬௬-ஆம் பாட்டும் அதனுரையும் மிதிலைப்பட்டி அழகியசிற்றம்பலக்கவிராயரவர்கள் வீட்டுப் பிரதியில்மட்டும் இருந்தன.



றொழாதனை கழித லோம்புமதி வழாது
வண்டுமேம் படூஉமிவ் வறநிலை யாறே
பல்லாத் திரணிரை பெயர்தரப் பெயர்தந்து
கல்லா விளையர் நீங்க நீங்கான்
வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்
கொல்புனற் சிறையின் விலங்கியோன் கல்லே.[1]

திணை - கரந்தை; துறை - கையறுநிலை.

......... ......... ......... ......... .........

இ - ள்.—பெரிய களிற்றின் அடிபோலத் தோன்றும் ஒரு கண்ணினை யுடைத்தாகிய பெரிய பறையினையுடைய இரவலனே! நீபோகின்றாயாயின் தொழாயாய்ப் போதலைப் பரிகரிப்பாயாக; தவறாதே.......யிடைவிடாது வண்டுகள் மேம்பட்டு வாழும், இக்கொடியவழி; பல ஆக்களாகிய திரண்ட நிரை மீண்டு தன்னோடு போதரப்போந்து இயல்பாகிய போர்த்தொழிலை யுடைய வீரர் இரிந்தோடத் தான்போகானாய் வில் உமிழப்பட்ட விரைந்த அம்பு குளிப்பக் கரையைக்கொல்லும் புனலின்கண் அணைபோல எதிர் நின்று விலக்கியவனது கல்லை.—எ - று.

புனற்சிறையின் விலங்கியோன்கல்லைத் தொழாததனை கழிதலை ஓம்பு; தொழவே அவ்வறநிலையாறு வண்டுமேம்படுமெனக் கூட்டுக.

தொழுது போகவே கொடுங்கானம் மழைபெய்தலாற் குளிரு மென்பான், காரியமாகிய வண்டு மேம்படுதலைக் கூறினான்.

வண்டென்பது, மறவருள் ஒருசாதியென்பாரும் உளர்.

ஆறு வண்டுமேம்படூஉமென இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்துமேல் ஏறிநின்றது. (உசரு)

8. புறநா. கசுகூ : 4 - 5, அடிக்.

[1]மு. கண்டோர் கையற்றுக் கூறியதற்கும், நடப்பட்ட கல்லினைத் தெய்வமாக்கி வாழ்த்தியதற்கும் மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 5, ந.

---

(உசுச) பரலுடை மருங்கிற் பதுக்கை *சேர்த்தி
மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொ

2. "தளிரொடு மிடைந்த காமர் கண்ணி, திரங்குமர னரிற் பொலி யச் சூடி" மலைபடு. 430 - 31.

பி - ம். *சேர்த்து.



டணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்
தினிநட் டனரே கல்லுங் கன்றொடு
கறவை தந்து பகைவ ரோட்டிய
நெடுந்தகை கழிந்தமை யறியா
தின்றும் வருங்கொல் பாணரது கடும்பே.[1]

திணையும் துறையும் அவை.

.........† உறையூர் இளம்பொன்வாணிகனார் பாடியது.

இ - ள்.—பருக்கைகளையுடைய ‡இடத்துத் திட்டையைச் சேர்த்தி ஆண்டுள்ள மரலைக்கீறித் தொடுக்கப்பட்ட சிவந்த பூவையுடைய கண்ணி யுடனே அழகிய மயிலினது பீலியைச் சூட்டிப் பெயரை யெழுதி இப் பொழுது நட்டார், கல்லையும்; கன்றுடனே கறவையையும் மீட்டுக்கொண்டு வந்து மறவரை ஓட்டிநோக்கிய நெடுந்தகை பட்டமை யறியாது இன்றும் வருங்கொல்லோ பாணரது சுற்றம்?—எ - று.

பட்டமையறிந்து வாராதொழியுமோ அறியாது வருமோ வென ஐய மாக்குக.

பதுக்கை சேர்த்ததேயன்றிக் கல்லும் நட்டனரென உம்மை எஞ்சி நின்றது. (உகூச)

3 - 4. புறநா. உசுO : 26 - 8; "நல்லமர்க் கடந்த நாணுடை மறவர் பெயரும் பீடு மெழுதி யதர்தொறும, பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்"; "பெயரும் பீடு மெழுதி யதர்தொறும், பீலிசூட்டிய பிறங்குநிலை நடுகல்" அகநா. கஎ, ககூக.

1 மூ. "இனிப், பாலுடை மருங்கிற் பதுக்கையென்னும் புறப்பாட்டினுள், அணிமயில்......கல்லும் எனக் கன்னாட்டுதல் பெரும்படைக்குப் பின்னாகக் கூறிற்றாலெனின் நீர்ப்படுத்த பின்னர்க் கற்படுத்துப் பெயர் பொறித்து நாட்டுதல் காட்டொட்டோர் முறைமையென்பது, சீர்த்தகு சிறப்பின் என்பதனாற் கொள்க' தொல். புறத்திணை சூ. 5, ந.

பி - ம். *அறியா நின்று மிவருங்கொல்.

†......ன் சாத்தன் கொற்றனார். ‡ பதுக்கைக்கல்லை.

---

(உசரு) ஊர்நனி யிறந்த பார்முதிர் பறந்தலை
ஓங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீப்
போந்தையந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்துப்



பல்லான் கோவலர் படலை சூட்டக்
கல்லா யினையே கடுமான் றோன்றல்
வானேறு புரையுநின் றாணிழல் வாழ்க்கைப்
பரிசிலர் செல்வ மன்றியும் விரிதார்க்

கடும்பகட் டியானை வேந்தர்
ஒடுங்கா வென்றியு நின்னொடு செலவே.[1]

திணையும் துறையும் அவை.

.........சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார் பாடியது.

இ - ள்.—ஊரை மிகவுங் கடந்த முரம்புநிலமாகிய முதிர்ந்த பறந்தலை யிடத்து உயர்ந்த நிலையையுடைய [2]வேங்கையினது ஒள்ளிய கொத்தாகிய நறிய பூவைப் பனையோலையால் அலங்கரித்துத் தொடுத்த..........(உசுரு)

4. படலை - தழைவிரவித் தொடுத்த மாலை.

[1]மு. 'ஊர்நனி......செலவே : இது கோவலர் படலைசூட்ட என்றலிற் கடவுளாகியபின் கண்டது' தொல். புறத்திணை. சூ. 5, ந.

[2]வேங்கைப் பூமாலை : புறநா. உக : 9, கசுஅ : 15. மலர்களைப் பனந்தோட்டில் தொடுத்தல்: "கொம்மைப் போந்தைக் குடுமி வெண்டோ, டத்த வேம்பி னமலை வான்பூச், சுரியா ருளைத்தலை பொலியச் சூடி' (குறுந். உஅக.)

(உசுசு) பயங்கெழு மாமழை பெய்யாது மாறிக்
கயங்களி முளியுங் கோடை யாயினும்
புழற்கா லாம்ப லகலடை நீழற்
கதிர்க்கோட்டு நந்தின் சுரிமுக வேற்றை
நாகிள வளையொடு பகன்மணம் புகூஉம்

1. 'கெழு' என்னுஞ் சாரியை, லகர னகரவீற்றுச்சொற்கள் ஒழிந்த பிறசொற்களிடத்து நிலைமொழி ஈற்றெழுத்துத் திரியவந்ததற்கு மேற்கோள்; தொல். குற்றியலுகரப். சூ. 76, ந.

3. தனிக்குறிலையொழித்த லகரம் வல்லினம் வர அல்வழியில் திரிந்துவந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 228, மயிலை.

4. கதிர் - பொற்கொல்லர்களின் கருவிவிசேடம்; புறநா. உ௬௬: 1.

5. 'நாகு' என்பது நந்தின் பெண்பாற்கு வருதல் மரபென்பதற்கு மேற்கோள்; தொல். மரபு. சூ. 63, பேர்.

59



# புறநானூறு மூலமும் உரையும்.

நீர்திகழ் கழனி நாடுகெழு பெருவிறல்
வான்றோய் நீள்குடை வயமான் சென்னி
சான்றோ ரிருந்த வவையத் துற்றோன்
ஆசா கென்னும் பூசல் போல
வல்லே களைமதி யத்தை யுள்ளிய
விருந்துகண் டொளிக்குந் திருந்தா வாழ்க்கைப்
*பொறிப்புண ருடம்பிற் றோன்றியென்
அறிவுகெட நின்ற நல்கூர் மையே.

திணை - பாடாண்டிணை; துறை - பரிசில்கடாநிலை.

சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியைப் பெருங்குன்றூர் கிழார் பாடியது.

இ - ள்.—பயன்பொருந்திய பெரிய முகில் பெய்யாது ஒழிதலால் நீர்நிலைகள் களியாய் முளியும் கோடைக்காலமாயினும் திளைபொருந்திய தாளையுடைய ஆம்பலினது அகலிய இலையின் நிழற்கண் கதிர்போலுங் கோட்டையுடைய நத்தையினது சுரிமுகத்தையுடைய ஏற்றை நாகாகிய இளைய சங்குடனே பகற்காலத்தே மணங்கூடும் நீர்விளங்கும் வயலையுடைத்தாகிய நாட்டையுடைய பெரிய வென்றியையுடையோய்! ஆகாயத்தைப் பொருந்தும் நெடிய குடையினையும் வலிய குதிரையினையுமுடைய சென்னி! அறிவானமைந்தோர் தொக்கிருந்த அவையின்கண் சென்று பொருந்தினன் ஒருவன் யானுற்ற துன்பத்திற்குத் துணையாய் எனக்கு நீர் பற்றுகவேண்டுமென்னும் ஆரவாரத்தை அவர் விரையத் தீர்க்குமாறு போல விரையத் தீர்ப்பாயாக, என்னைக் கருதிவரப்பட்ட விருந்தினரைக்

---

8 - 10. கலி. கஙக : 33 - 7.

13. "அழிபசி வருத்தம் வீட" (சிறுபாண். 140) என்பதும், 'அறிவு முதலியன அழிதற்குக் காரணமான பசியால் உளதாகிய வருத்தங்கள் விட்டுப் போம்படி' என்னும் அதன் உரையும், "அற்றா ரழிபசி தீர்த்தல்", "அறிவினை, நிச்ச நிரப்புக்கொன் றாங்கு", "தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக, நல்குர வென்னு நசை" (குறள், 226, 532, 1043), "குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும், பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம், நாணணி களையு மாணெழில் சிதைக்கும்............ பசிப்பிணி யென்னும் பாவி" (மணி. கக : 76 - 80), "மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை, தானந் தவமுயற்சி தாளாண்மை - தேனின், கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும், பசிவந் திடப்போம் பறந்து" (நல்வழி, 26) என்பனவும் ஈண்டு உணரத்தக்கன.

பி - ம். * பொறியுணர்.

கண்டுவைத்தும் அவர்க்கு விருந்தாற்றமாட்டாமல் ஒளிக்கும் நன்மையில்லாத இல்வாழ்க்கையையுடைய ஐம்பொறியும் குறைவின்றிப்பொருந்திய எனது யாக்கையின்கட்டோன்றி அவற்றானுய பயன்கொள்ளாதபடி எனது அறிவுகெட நிலைபெற்ற வறுமையை.—எ - று.

மதியும் அத்தையும், அசைநிலை.

பெருவிறல் ! சென்னி ! சான்றோரிருந்த அவையத்தற்றோன் பூசலை அவர் விரையக் களைந்தாற்போல எனது நல்கூர்மையை வல்லே களை யெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

நந்து வளையொடு பகன்மணம் புகூஉமென்றகருத்து: அவை தம் செருக்கினுல் சாதியறியாது மயங்கிப் புணருமென்று நாட்டின்மிகுதி கூறியதனுல் அவன் செல்வமிகுதி கூறியவாறு.

[1]'நாகிளந் தவளையொடு பகன்மணம் புகூஉம்' என்று பாடமோதி, நந்திளேற்றை நாகிளந்தவளையுடனே தத்தம் இனத்தொடு மணம்புகூஉ மென்று உரைப்பினும் அமையும்.

'ஆசாகு' என்பதனை இரங்கற்குறிப்புப்படுமொழி யென்பாரும் உளர்.

பெருவிறலையுடைய வயமான்சென்னியெனினுமாம்.

[2]'பொறிப்புண ருடம்பிற் றோன்றி' என்பதற்குப் பாவைபோலும் வடிவுமாத்திரையேதோன்றித் தோன்றிய பயன்கொள்ளாமையால் என் அறிவுகெட நின்ற நல்கூர்மையென்றும், 'விருந்துகண்டொளிக்கும்' என்பதற்கு வறுமைகண்டு, வந்தவிருந்து தாம் அது காணமாட்டாது ஒளிக்கு மென்றும் உரைப்பாரும் உளர்.

மாறியென்பது மாறவெனத் திரிக்கப்பட்டது. (உசுசு)

[1]"சேற்றவளை தன்கணவ னருகிருப்பச் சினந்திருகிச், சூற்றவளை நீருழக்குந் துறைகெழுநீர் வளநாடா" கம்ப. சூர்ப்பநகைப். 122.

[2] குறள், 410, பரிமேல்.

[1](உகஎ)........ ........ ........ ........




[1](உகஅ)........ ........ ........ ........

[1] இவ்வெண்களுக்குரிய பாட்டுக்கள், கிடைத்த கையெழுத்துப் பிரதிகளுள் ஒன்றிலும் காணப்படவில்லை.



(உகக) [1]குயில்வா யன்ன கூர்முகை *யதிரல்
பயிலா தல்கிய பல்காழ் மாலை
மையிரும் பித்தை பொலியச் சூட்டிப்
புத்தகற் கொண்ட புலிக்கண் வெப்பர்
ஒன்றிரு முறையிருந் துண்ட பின்றை
உவலைக் கண்ணித் துடியன் வந்தெனப்
பிழிமகிழ் வல்சி வேண்ட மற்றிது

†கொள்ளா யென்ப கள்ளின் வாழ்த்திக்
கரந்தை நீடிய வறிந்துமாறு செருவிற்
பல்லா னினநிரை தழீஇய வில்லோர்க்
கொடுஞ்சிறைக் குரூஉப்பருந் தார்ப்பத்
தடிந்துமாறு ‡பெயர்த்ததிக் கருங்கை வாளே.

திணை - வெட்சி; துறை - [2]உண்டாட்டு.

ஔவையார். (உசுக)

---

1. அதிரல் - புனலிக்கொடி; முல்லை. 51, குறிஞ்சி. 75; மோசி மல்லிகை, காட்டுமல்லிகை; சிலப். கரு : 156.

1 - 3. "கொய்குழை யதிரல் வைகுபுல ரலரி, சுரியிரும் பித்தை சுரும்புபடச் சூடி" அகநா. உகரு.

4. புதிய அகலிடத்திற்கொண்ட புலியினது கண்போன்ற நிறத்தை யுடைய சூடான உணவு; வெப்பர்=வெவ்வர் - வெம்மை; பதிற். சுக.

6. புறநா. உசுஉ : 2; உவலைக்கண்ணி-தழைவிரவித்தொடுத்த மாலை.

7. பிழி மகிழ் வல்சி - பிழிந்தெடுத்த மதுவாகிய உணவு.

8. என்ப : அசைநிலை. கள்ளின் வாழ்த்தல் : புறநா. ககசு : 1.

9. கரந்தை - ஒருவகைப் புதற்பூ; இப்பூவாற் றொடுத்த மாலையை நிரைமீட்போர் சூடுவது மரபு.

வாள் (12) கொள்ளாயென (8) முடிக்க.

[1] இதுமுதற் பின்வரும் பாடல்களுக்கு உரை அகப்படவில்லை; சில பாடல்கள் இடையிடையே சிதைந்தும் பொருளின் உண்மை காணக்கூடாதவண்ணம் பிறழ்ந்தும் போயிருக்கின்றன.

[2] உண்டாட்டு - கள்ளுண்டு களித்தாடல்.

பி - ம். *யதால். † கொள்ளா னென்ப. ‡ பெயர்த்தவிக்.



(உஎ0) பன்மீ னிமைக்கு மாக விசும்பின்
இரங்கு *முரசி னினஞ்சால் யானை
நிலந்தவ வுருட்டிய நேமி யோரும்
சமங்கண் கூடித் தாம்வேட் பவ்வே
நறுவிரை துறந்த நாறு நரைத்தலைச்
சிறுவர் தாயே பேரிற் பெண்டே
நோகோ யானே நோக்குமதி நீயே
மறப்படை நுவலு மரிக்குரற் றண்ணுமை
இன்னிசை கேட்ட துன்னரு மறவர்
வென்றிதரு வேட்கையர் மன்றங் கொண்மார்
பேரம ருழந்த வெருவரு பறந்தலை
விழுநவி பாய்ந்த மரத்தின்
வாண்மிசைக் கிடந்த வாண்மையோன் றிறத்தே.

திணை - கரந்தை; துறை - கையறுநிலை.

கழாத்தலையார்.

கண்டார் தாய்க்குச் சொல்லியது. (உஎ0)

---

1. மாகவிசும்பு : புறநா. ௩௫ : 18, அடிக்.

2 - 3. ஒலிக்கும் முரசினையும் இனமிக்க யானைகளை நிலத்தில் மிகச்செலுத்திய ஆஞ்ஞாசக்கரத்தையுமுடைய அரசர்களும்.

4. வேட்ப - விரும்புவார்.

5. நல்ல மணமுடைய பொருள்களை நீக்கியதனால் மணமில்லாத வெளுத்த தலைமயிரையுடையதாய் (6) எனக் கூட்டுக; புறநா. உஎ௬ : 1.

8. அரிக்குரற்றண்ணுமை : புறநா. உ௪௯ : 4, ௩௬௯ : 21, ௩௭௬ : 4.

12. நவி - கோடாலி. மரத்தின் - மரத்தைப்போல.

13. "கணையும் வேலுந் துணையுற மொய்த்தலிற், சென்ற வுயிரி னின்ற யாக்கை, இருநிலந் தீண்டா வகை" (தொல். புறத்திணை. சூ. 16); "அப்பணைக் கிடந்த காளை" தகடூர்யாத்திரை.

ஆண்மையோன்றிறத்தை (13) நேமியோரும் (3) வேட்ப (4) என்க; பு. வெ. 76-ஆம் பாடலைப் பார்க்க.

பி - ம். * முகிலி னினஞ்சால்.

(உஎக)* நீரற வறியா நிலமுதற் கலந்த
†கருங்குர னொச்சிக் கண்ணார் குரூஉத்தழை
‡மெல்லிழை மகளி ரைதக லல்குற்
றொடலை யாகவுங் கண்டன மினியே
வெருவரு குருதியொடு மயங்கி யுருவுகரந்
§தொறுவாய்ப் பட்ட தெரிய ╪லூன்செத்துப்
பருந்துகொண் டுகப்பயாங் கண்டனம்
மறம்புகன் மைந்தன் மலைந்த மாறே.[1]

திணை - நொச்சி; துறை - செருவிடை வீழ்தல்.
||வெறிபாடிய காமக்கண்ணியார். (உஎக)

---

1. நீரறவறியா : புறநா. க : 12.

2. புறநா. உஎஉ : 1; "மாக்குர னொச்சி" (நற். ௫0௬; அகநா. ககஎ); "கருங்குர னொச்சி" தகடூர்யாத்திரை.

1 - 4. புறநா. உஎஉ : 1 - 5; "ஐதக லல்குற் றழையணிக் கூட்டும், கூழை நொச்சி" அகநா. உஎ௩.

5 - 7. புறநா. ௫௫ : 12 - 4; "தீயி னன்ன வொண்செங் காந்தட், டூவற் கலித்த புதுமுகை யூன்செத், தறியா தெடுத்த புன்புறச் சேவல்" மலைபடு. 145 - 7.

[1]மு. உழிஞைத்திணைத்துறைகளுள், 'அகத்தோன் வீழ்ந்த நொச்சி' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 11, இளம்.

பி - ம். *நீனற வறியா நிலமுதற் கரந்த. †கருங்கா னொச்சிக் கண்ணர் குவவுத்தழை. ‡மெல்லி மகளிர்க்கல்குற். §தெற்றுவாய். ╪லூரன் செத்துப் பருந்துகண் வெப்பவும். ||வெறியாடிய.

(உஎஉ) மணிதுணர்ந் தன்ன மாக்குர னொச்சி!
போதுவிரி பன்மர னுள்ளுஞ் சிறந்த
காத னன்*மர நீமற் றிசினே
கடியுடை வியனகர்க் காண்வரப் பொலிந்த

---

1. நீலமணி பூத்தாற் போன்ற கரிய கொத்துக்களையுடைய நொச்சியே; "மணியேர் நொச்சி", "மணிக்குர னொச்சி" நற். கஅசு, உகூ.

1 - 3. நொச்சியே ! நீ காதல் நன்மரமென்க.
4. கடியுடை வியனகர்: புறநா. கூ௫ : 3.
பி - ம். *மரனீழற் றிசினே.



*தொடியுடை மகளி ரல்குலுங் கிடத்தி
காப்புடைப் புரிசை புக்குமா றழித்தலின்
ஊர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
பீடுகெழு சென்னிக் கிழமையு நினதே.[1]

திணையும் துறையும் அவை.
மோசிசாத்தனர். (உஎஉ.)

1 - 5. புறநா. உஎக : 1 - 4.

6 - 8. "எயில்காத்த நொச்சி" ("வெட்சிநிரைகவர்தல்" என்னுஞ் செய்யுள்); "கருங்குர னொச்சி மிலைந்த, திருந்துவேல் விடலை" தகடூர் யாத்திரை; "பல்சான்றீரே" என்னுஞ் செய்யுள்.

[1]மு. உழிஞைத்திணைத்துறைகளுள், 'அகத்தோன் வீழ்ந்தநொச்சி' என்பதற்கு இதனை மேற்கோள்காட்டி, 'இது சூடினநொச்சியைப் புகழ்ந்தது' என்பர்; தொல். புறத்திணை. சூ. 13, ந.

பி - ம். *கொடியணிமகளிர், தொடையுடை.

---

(உஎரு) மாவா ராதே மாவா ராதே
*எல்லார் மாவும் வந்தன வெம்மிற்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் றந்த
செல்வ னூரு மாவா ராதே
†இருபேர் யாற்ற வொருபெருங் கூடல்
விலங்கிடு பெருமரம் போல
‡உலந்தன்று கொல்லவன், மலைந்த மாவே.[1]

திணை - தும்பை; துறை - தகிரைமறம்.

எருமைவெளியனார். (உஎரு)

---

1. நெடுஞ்சீர்வண்ணத்திற்கு மேற்கோள்; தொல். செய். சூ. 220, பேரா.; ந.

3. புறநா. ஙகo : 7 - 8.

3 - 4. புதல்வற்றந்த செல்வனென்றது, கணவனை.

5. கடலென்றது, இரண்டாற்றுநீரும் கூடுமிடத்தை.

5 - 7. புறநா. உகூ0 : 22 - 4; "ஆற்றங் கரையின் மரமு மரசறிய, வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே" நல்வழி, 12.

[1]மு. தும்பைத்திணைத் துறைகளுள், 'குதிரைநிலை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 17, ந.

பி - ம். *எல்லா மாவும். †இரும்பே ராற்ற லொருபெருங் கடலை. ‡உலந்தின்று.



(உஎச) நீலக் கச்சைப் பூவா ராடைப்
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல்வருங் களிற்றொடு வேறுரந் தினியே
தன்னுந் *துரக்குவன் போலு மொன்னலர்
எஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்
கையின் வாங்கித் தழீஇ
மொய்ம்பி னூக்கி †மெய்க்கொண் டனனே.[1]

திணை - அது; துறை - எருமைமறம்.

உலோச்சனார். (உஎச)

---

1 - 2. "கொன்றைகமழ் முடியோனும் வேணியினைப் பின்னல்படு குஞ்சி யாக்கித், துன்றுமயிற் பீலிநெடுங் கண்ணிதிரு நெற்றியுறச் சுற்றி

ஞனே" (வி. பா. அருச்சுனன்றவநிலை. 82); "கானிறை குஞ்சிச் சூட்டிற் களிமயிற் கலாபஞ் சூடி", "வேடுரு வாகி நின்றான்", "குஞ்சிக் கங்குல்வாய்ச் சிலைபோல் வெட்சிக் கண்ணிசூழ் கலாபச் சூட்டும்" திரு விளை. உஉ : 25, ௬எ : 13 - 4.

3. "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன், மெய்வேல் பறியா நகும்" (குறள், 774); "மறவன் நெருப்பிமையாச், கைக்கொண்ட வெஃகங் கடுங்களிற்றின் மேற்போக்கி" பு. வெ. 140.

2 - 7. "கொல்லேறு பாய்ந்தழிந்த கோடுபோற் றண்டிறுத்து, மல்லேறு தோள்வீமன் மாமனைப்—புல்விக்கொண், டாறாத போர்மலைந்தா னங்கரசர் கண்டார்த்தார், ஏறாட லாய ரென" பாரதம்.

[1]மு. தும்பைத்திணைத் துறைகளுள், படையறுத்துப் பாழிகொள்ளு மேமமென்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 14, இளம்.; ஷை. ஷை. ஷை. 17, ந.

பி - ம். *தாக்குநன். †மெய்கொண்டனனே.

---

(உஎ௫) கோட்டங் கண்ணியுங் கொடுந்திரை யாடையும்
வேட்டது சொல்லி வேந்தனைத் தொடுத்தலும்

---

1. "கோட்டங்காழ் கோட்டி னெடுத்துக்கொண் டாட்டிய" கலி. கOஎ : 7.

'கோட்டப்பூ' என்பதற்கு, கோடுதலைச் செய்யும்மாலையென்று பொருள்கூறி, இவ்வடியை மேற்கோள் காட்டினர் பரிமேலழகர்; குறள், 1313.

ஒத்தன்று மாதோ விவற்கே செற்றிய
*திணிநிலை யலறக் கூழை போழ்ந்துதன்
வடிமா ணெஃகங் †கடிமுகத் தேந்தி
ஓம்புமி னோம்புமி னிவணென வோம்பாது
தொடர்கொள் யானையிற் குடர்கா றட்பக்
கன்றமர் கறவை மான
முன்‡சமத் தெதிர்ந்ததன் றோழற்கு வருமே.[1]

திணையும் துறையும் அவை.

ஒரூஉத்தனார். (உஎரு)

---

3. 'ஒத்தன்று' என்பதைக் கோட்டங்கண்ணி முதலிய மூன்றனோடும் தனித்தனியே கூட்டுக.

4. திணிநிலை - நெருங்கியிருந்த சேனையின் நிலை.

5. புறநா. உஅஉ : 1. எஃகம் - வாள்; முல்லை. 68, ந.

7. தொடர் - சங்கிலி. தட்ப - தடுக்க; "புள்ளிடை தட்ப" புறநா. கஉச.

8. "கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" (திருவாசகம், திருப்புலம்பல், 3); "ஈற்றா விருப்பிற் போற்றுபு நோக்கி" (பொருந. 151); "தாவா விருப்பொடு கன்றியாத் தழிச்செல்லும், ஆபோற் படர்தக நாம்", "கன்றுசேர்ந் தார்கட் கதவீற்றாச் சென்றாங்கு" கலி. அக : 37, ககஅ : 8.

9. எதிர்ந்த தோழற்கு - பகைவரை எதிர்த்த நண்பனைக் காத்தற்கு. இது பாரதப்போரில் அபிமன்னுவைப் பாதுகாத்தற்குச் சென்ற வீமன் செய்தியை நினைப்பிக்கின்றது.

8 - 9. "கன்றுசேர்ந் தார்கட் கதவிற்றாச் சென்றாங்கு, வன்கண்ண ளாய்வர லோம்பு" கலி. ககரு.

விரைவென்னும் மெய்ப்பாட்டிற்கு மேற்கோள்; தொல். மெய்ப்பாடு. சூ. 12, இளம்.

[1]பு. தும்பைத்திணைத் துறைகளுள், 'ஒருவனொருவனை யுடைபடை புக்குக் கூழை தாங்கிய வெருமை' என்பதற்கு மேற்கோள் (தொல். புறத் திணை. சூ. 14, இளம்.); இதனைத் தானைநிலைக்கு மேற்கோள் காட்டி, 'இஃது உதவியது' என்பர்; ஷை. ஷை. ஷை. 17, ந.

பி - ம். *திணிநிலை மலரக் கூழை. †கழிமுகத். ‡சமத் தொழிந்ததன்.





(உஎசு) நறுவிரை துறந்த நரைவெண் கூந்தல்
*இரங்கா ழன்ன திரங்குகண் வறுமுலைச்
செம்முது பெண்டின் காதலஞ் †சிறாஅன்
மடப்பா லாய்மகள் வள்ளுகிர்த் தெறித்த
குடப்பாற் சில்லுறை போலப்
படைக்குநோ யெல்லாந் தானா யினனே.[1]

திணை - அது; துறை - தானைநிலை.

மதுரைப் பூதனிளநாகனூர். (உளசு)

---

1. புறநா. உஎ0 : 5, உளஎ : 2.

2. இரங்காழ் - இரமரத்தின் விதை; இரவென ஒருமரமுண்டென்பர்; புறநா. உஅக : 1; "இரங்கா ழன்ன வரும்புமுதி ரீங்கை" (அகநா. கஉ௫ : 3); "இரவு மிண்டுங் குரவுங் கோங்கும்...வாகையும் பிறவும் வன்மர மொடுங்கி" (பெருங். க. 52 : 40 - 44); இப்பெயர், இரா, இரவு, இரவம் எனவும் நூல்களில் வழங்கும்.

3. செம்முதுபெண்டு : புறநா. உஅ0 : 7.

4. ஆய்மகள் - இடைச்சி.

5. குடம் நிறைய வுள்ளபாலிற் றெறித்த சிறிய மோர்த்துளியைப் போல.

5 - 6. புறநா. ௬உஅ : 7; "பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே" கம்ப. மிதிலை. 41.

2 - 6. இ. வி. சூ. 641, உரை, மேற்.

1மு. தும்பைத்திணைத்துறைகளுள், தானைநிலையின்பாற்படுமென்பர்; தொல். புறத்திணை. சூ. 14, இளம்.; ஷை. ஷை. ஷை. 17, ந.

பி - ம். *ஈர்ங்கா ழன்ன திரங்குதலை. †சிறுன் முட்பாற் சில.

---

(உளஎ) மீனுண் கொக்கின் றூவி யன்ன
வானரைக் கூந்தன் முதியோள் சிறுவன்
களிறெறிந் துபட்டன னென்னு முவகை

---

1 - 2. "குயிலொத் திருள்குஞ்சி கொக்கொத் திருமல், பயிலப் புகாமுன்ன நெஞ்சே" 11-ஆம் திருமுறை, க்ஷேத்திரத். 12.

3. புறநா உஎக : 4.

பி - ம். *வெண்சிறகன்ன.



ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்
*நோன்கழை துயல்வரும் †வெதிரத்து
‡வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே.[1]

திணை - அது; துறை - உவகைக் கலுழ்ச்சி.

§பூங்கணுத்திரையார். (உளஎ)

3 - 4. புறநா. உஎஅ : 9, உகூ௬ : 5 - 7; "ஈன்ற பொழுதிற் பெரி துவக்குந் தன்மகனைச், சான்றோ னெனக்கேட்ட தாய்" (குறள், 69); "மற்ற வன்சொன்ன வாசகங் கேட்டலு மகனைப், பெற்ற வன்றினும் பிஞ்ஞகன் பிடித்தவப் பெருவில், இற்ற வன்றினு மெறிமழு வாளவ னிழுக்கம், உற்ற வன்றினும் பெரியதோ ருவகைய னானான்" கம்ப. அயோத்தி. மந்திர. 42.

5. வலியமூங்கில் அசைகின்ற வெதிரத்தில்; வெதிரம் - ஒருமலை.

6. மேகம் மழைபொழிய வீழ்ந்த துளிகளிலும் பலவாகும்.

[1] மு. காஞ்சித்திணைத்துறைகளுள், 'பேரிசை, மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்ற, மாய்ந்த பூசன் மயக்கம்' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 19, இளம்.; டை. டை. டை. 24, ந.

பி - ம். *கோன்கழையலமரும். †வெதிரத்துச்சிமையத்து, வெதிர் ......வானவியற் றூங்கிய. ‡வான்பெயற் றூங்கிய. §பூங்கண்ணுத்திரை.

---

(உஎஅ) நரம்பெழுந் *துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறின னென்றுபலர் கூற
மண்டமர்க் †குடைந்தன னாயி னுண்டவென்

---

3. போரில் தோற்று மீண்டனனென்று.

4. மண்டமர் : புறநா. உகரு: 1.

பி - ம். * தாறிய. † குலைந்தனனாயின்.



*முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை †காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே.

திணையும் துறையும் அவை.

காக்கைபாடினியார் ‡நச்செள்ளையார். (உஎஅ)

---

5. சினைஇ - சினந்து.

2 - 5. 'நின்மகன் படையழிந்து......சினைஇ : என்பது குடிகோள் பற்றிவந்த வெகுளி; என்னை ? தன்மகன் மறக்குடிக்குக் கேடு சூழ்ந்தானென்று சினங்கொண்டாளாகலின்' தொல். மெய்ப்பாடு. சூ. 10, பேரா.; இ. வி. சூ. 578, உரை.

6. பெயரா - பெயர்த்து; புரட்டிப்பார்த்து.

7. புறநா. உகடு : 5; செங்களம் - உதிரத்தாற் சிவப்பாகிய போர்க் களம்; "செங்களம் படக்கொன்று" (குறுந். க.) துழவுதல் - கையாற் றடவுதல்.

6 - 7. படுபிணம் நீங்காத போர்க்களத்தைச் சூழ்பவளென்றுமாம்; துழவல் - சூழவருதல். "மாதிரந் துழவும், கவலை நெஞ்சத்து" புறநா. கஎச : 21 - 2.

9. புறநா. உஎஎ : 3 - 4, அடிக்.

8 - 9. 'ஊகாரம் பின்வரும் தொழிற்கு இடையின்றி விரைவு உணர்த்தி முன்வருந்தொழின்மேல் இறந்தகாலம் பற்றிவரும்' (தொல். வினை. சூ. 33, தெய்வச்.; ஷை. ஷை. ஷை. 31, ந.; இ. வி. சூ. 246, உரை); செய்யூ என்னும் வினையெச்சம் வினைமுதல் வினைகொண்டு முடிந்ததற்கு மேற்கோள்; நன். சூ. 343, மயிலை.; நன். வி. சூ. 344.

பி - ம். *முளையறுத்திடுகுவன். †காணுவீன்ற. ‡நெச்செளையார், நச்சென்னையார்.

---

(உஎகூ) கெடுக சிந்தை கடிதிவ டுணிவே
மூதின் மகளி ராத றகுமே

---

1. இவளென்றது, கோலஞ்செய்து மகனைப் போர்க்கனுப்புந் தாயை.

2. மூதின் மகளிர் - முதிய மறக்குடியிற் பிறந்த மகளிர்; புறநா. கக : 15; மறக்குடியை மூதிலென்றது, "கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளோடு, முற்றோன்றி மூத்த குடி" (பு. வெ. 35) என்பவாகலின்.



மேனா ளுற்ற செருவிற் கிவடன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தனனே
*நெருந லுற்ற செருவிற் கிவள்கொழுநன்
பெருநிரை விலங்கி யாண்டுப்பட் டனனே

இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று †மயங்கி
வேல்கைக் கொடுத்து ‡வெளிதுவிரித் துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.[1]

திணை - வாகை ; துறை - [2] மூதின்முல்லை.
ஒக்கூர் மாசாத்தியார். (உஎகூ)

---

3. தன்னை - தமையன்.

8. வெளிது - வெள்ளிய ஆடை; புறநா. உ௮௬ : 5, உ௯௧ : 2.

9. பாறுமயிர் - விரிந்த மயிர்; புறநா. ௩௭௪ : 3.

10. "ஒருமைந்தன் றன்குலத்திற் குள்ளானென் பதுமுணரான்" பெரிய. திருவாரூர்ச்.

[1]மூ. "கன்னின்றான்...ஏறு" பு. வே. 176.

வெட்சித்திணைத்துறைகளுள், மறங்கடைகூட்டிய குடிநிலைமகளிர் இயல் கூறியதற்கும் (தொல். புறத்திணை. சூ. 4, இளம்.), 'வாள் வாய்த்துக் கவிழ்தல்' என்பதற்கும் (ஷை. ஷை. ஷை. 5, ந.) மேற்கோள்.

[2] "வந்த படைநோனாள் வாயின் முலைபறித்து, வெந்திற லெஃகம் இறைக்கொளீஇ - முந்தை, முதல்வர்கற் றான்காட்டி மூதின் மடவாள், புதல்வனைச் செல்கென்றாள் போர்க்கு" பு. வே. 175.

பி - ம். *நெருநை யுற்ற. †முயங்கி. ‡வெளிறு.

(உஅ0) என்னை மார்பிற் புண்ணும் வெய்ய
நடுநாள் வந்து தும்பியுந் துவைக்கும்
நெடுநகர் வரைப்பின் விளக்கு நில்லா

---

1. தலைவனைத் தலைவி 'என்னை' எனப் புறத்திணைக்கட் கூறியதற்கு மேற்கோள்; தொல். பொருளியல், சூ. 52, ந.

2. தும்பி - ஒருவகை வண்டு.

பி - ம். * மார்பமாப் புண்ணும்.



துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்
அஞ்சுவரு குராஅற் குரலுந் தூற்றும்
நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்கும்
செம்முது பெண்டின் சொல்லு நிரம்பா
துடிய பாண பாடுவல் விறலி
என்னா குவிர்கொ லளியிர் நுமக்கும்
இவணுறை †வாழ்க்கையோ வரிதே யானும்
மண்ணுறு மழித்தலைத் தெண்ணீர் வாரத்
தொன்றுதா முடுத்த வம்பகைத் தெரியற்
சிறுவெள் ளாம்ப லல்லி யுண்ணும்
கழிகல மகளிர் போல
வழிநினைந் திருத்த லதனினு மரிதே.

திணை - பொதுவியல்; துறை - ஆனந்தப்பையுள்.

மாறேக்கத்து நப்பசலையார். (உ௮௦)

---

4. வேட்கும் - விரும்பும்.

5. கூரல் - கூகைப்பெடை; மதுரைக். 170, ந.; கோட்டானுமாம்.

6. விரிச்சி - நற்சொல்; புறநா. ௬௮ : 17, அடிக்.

7. செம்முதுபெண்டு : புறநா. உ௭௬ : 3.

6 - 7. "நெல்லொடு, நாழி கொண்ட நறுவீ முல்லை, அரும்பவி ழலரி தூஉய்க்கை தொழுது, பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப" முல்லை. 8-11.

10. இவண் - இவ்விடத்து.

13. புறநா. உ௪௮ : 1 - 5.

12 - 3. புறநா. உ௪௮; ஆம்பலல்லி - ஆம்பலாகிய அல்லிக்காயரிசி; சீவக. 355.

11 - 3. மழித்தலை - மழித்தலையுற்ற தலை; புறநா. உ௫௦ : 4 - 5; உ௬௧ : 17 - 9.

14. கழிகலமகளிர் - விதவைகள்; புறநா. உ௬௮ : 6.

15. வழிநினைந்து - பிற்காலவிளைவை எண்ணி. 'அதனினும்' என்றது, 'வாழ்க்கையோ வரிது' (10) என்றதைச் சுட்டியது. இவ்வடி 'அழிவுநினைந் திருத்த லதனினு மரிதே' என்றிருக்கலாம்போலும்.

பி - ம். *துஞ்சா கண்ண. †வாட்கையோ......வறிதே.

(உஅக)* தீங்கனி யிரவமொடு வேம்பு †மனைச் செரீஇ
வாங்குமருப் பியாழொடு பல்லியங் கறங்கக்
‡கைபயப் பெயர்த்து மையிழு திழுகி
ஐயவி சிதறி யாம்ப லூதி
இசைமணி யெறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்
§காக்கம் வம்மோ காதலந் தோழி
வேந்துறு விழுமந் தாங்கிய
பூம்பொறிக் ‡‡கழற்கா னெடுந்தகை புண்ணே.[1]

திணை - காஞ்சி; துறை - பேய்க்காஞ்சி.

அரிசில்கிழார். (உஅக)

---

1. இரவமொடு - இரவந்தழையோடு. செரீஇ - செருகி.
2. மருப்பு - யாழின் உறுப்புக்களுள் ஒன்றாகிய கோடு.
3. மையிழுது இழுகி - மையிட்டு.
4. ஐயவி - வெண்சிறுகடுகு. ஆம்பல் - ஆம்பலங்குழல்.
5. காஞ்சி - காஞ்சிப்பண்.
6. நறை புகைஇ - நறுநாற்றமுள்ள அகில் முதலியவற்றைப்

புகைத்து.

1 - 6. புறநா. உகக : 1 - 2.

5 - 8. "கொழுநர் மார்பின், நெடுவசி விழுப்புண் டணிமார் காப்பென, வறல்வாழ் கூந்தற் கொடிச்சியர் பாடல்" மலைபடு. 302 - 4.

[1]மு. "ஐயவி சிந்தி நறைபுகைத் தாய்மலர்தூய்க், கொய்யாக் குறிஞ்சி பலபாடி - மொய்யிணர்ப், பூப்பெய் தெரிய னெடுந்தகைபுண் யாங்காப்பப், பேய்ப்பெண் பெயரும் வரும்" பு. வெ. 79.

காஞ்சித்திணைத் துறைகளுள், 'இன்னகை மனைவி பேஎய் புண்ணோற், றுன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சி' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 19, இளம்.; ஷை. ஷை. ஷை. 24, ந.

பி - ம். தீங்கனி யரவமொடு, தீங்கண விரமொடு. †மனைசெரீஇ யாங்கு மருப்பியானை. ‡பையப் பெயர்த்து மைவிழுதிழுகி. §காக்க வம்மோ. ╪உடையநெடுந்.



(உஅஉ) எஃகுளங் கழிய விருநில மருங்கின்
அருங்கட னிறுத்த பெருஞ்செ யாளனை
யாண்டுள னோவென வினவுதி யாயிற்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
வருபடை தாங்கிய கிளர்தா ரகலம்
அருங்கட னிறுமார் *வயவ ரெறிய

உடம்புந் தோன்றா வுயிர்கெட் டன்றே
மலையுநர் மடங்கி மாறெதிர் †கழியத்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
அலகை ‡போகிச் சிதைந்துவே றாகிய
பலகை யல்லது களத்தொழி யாதே
சேண்விளங்கு நல்லிசை நிறீஇ
நாநவில் புலவர் வாயு ளானே.

திணை - ...................................

பாலைபாடிய பெருங்கடுங்கோ. (உஅஉ)

---

1. எஃகு - வேல்.

2. பெருஞ்செயாளனை - பெரிய செய்கையை ஆளும் வீரனை; "பெருஞ்செ யாடவர்" புறநா. கஙக : 5.

3. புறநா. அக : 2.

5. இறுமார் - முடித்தற்கு.

4 - 5. அகலம் - மார்பு. அகலத்தை எறிய.

6. படைக்கலங்களுக்குட் கிடக்கின்றமையின், உடம்பு தோன்றாதாயிற்று. கெட்டன்று - கெட்டது; நீங்கிற்று.

7. மடங்கி - மீண்டு.

9. பலகை - கேடகம்.

10. சேண் - நெடுந்தூரம்; "சேண்விளங்கும் புகழ்" (புறநா. கம: 11); "சேண்விளங்கு நல்லிசை" அகநா. உ0௫.

11. நவிலுதல் - கூறிப்பழகுதல்; "மறைநவி லந்தணர்" (புறநா. க : 6); "நவிறொறு நூனயம் போலும்" குறள், 783.

10 - 11. திறக்கத்தில் விளங்குதற்குக் காரணமாகிய நல்ல புகழென்றுமாம்; புறநா. உஎ : 7 - 9, அடிக்.

பி - ம். *வாய றெறிய. †கழறிய. ‡போற்கச்.



(உஅரு) ஒண்செங் *குரலித் தண்கயங் †கலங்கி
வாளை ‡நீர்நாய் நாளிரை பெறூஉப்
பௌவ வுறையள வா....வி மயக்கி
மாறுகொண் முதலையொ டூழ்மாறு §பெயரும்
அழும்பிலனடாங்காறகையுமென்றும்(?)
வலம்புரி கோச ரவைக்களத் தானும்
மன்று ளென்பது கெட....ரனே பாங்கற்
கார்சூழ் குறட்டின் வேணிறத் ||திங்க

---

1. குரலி - ஒருவகைக்கொடி; "சிறுசெங் குரலி" குறிஞ்சி. 72; பெருங். உ. 12 : 29.

2. நாளிரை - காலையுணவு; வாளையை நீர்நாய் நாளிரையாகப் பெறும்; "அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய், வாளை நாளிரை பெறூஉ மூரன்" (குறுந். ௬௯ : 1 - 2); "வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்", "நாளிரை தரீஇய வெழுந்த நீர்நாய், வாளையொ டுழப்ப", "பொய்கை நீர்நாய்ப் புலவுநா றிரும்போத்து, வாளை நாளிரை தேரு மூர" அகநா. ௬,

ஙஙசு, ஙஅசு.

4. மாறு - பகை; "கடுமுரண் முதலே" (புறநா. ஙஎ : 10); ஊழ் - முறை.

5. அழும்பில் : இப்பெயருள்ள ஊர் சோழநாட்டிலொன்றும் சேரநாட்டிலொன்றும் உண்டென்று தெரிகிறது; "பிணையலங் கண்ணிப் பெரும்பூட் சென்னி, அழும்பில்" (அகநா. சச); "மான விறல்வே ளழும்பில்" (மதுரை. 344 - 5); "அறைபறை யென்றே யழும்பில்வே ளுரைப்ப" சிலப். உ௫ : 177.

6. வலம் புரி - வெற்றியை விரும்பும்; கோசர் - ஒருவகை வீரர்; புறநா. கசுக : 9, அடிக். அவைக்களம் - பழையனென்னும் சிற்றரசனுடைய மோகூரிலுள்ள அவைக்களம்; "பழையன் மோகூ ரவையகம் விளங்க, நான்மொழிக் கோசர் தோன்றி யன்ன" மதுரை. 508 - 9.

7. பாங்கற்கு - தோழன்பொருட்டு.

8. ஆர் - ஆரக்கால்; குறடு - வண்டியுருளையின் குடம்; வேல் நிறத்து இங்க - வேற்படைகள் மார்பில் தங்க. வேற்படைகளால் தைப்புண்ட வீரனுக்கு ஆரக்கால் சூழ்ந்த குறடு உவமை; "நோன்குறட் டன்ன ஊன்சாய் மார்பின்" (மதுரை. 742); "வீரவே லுடம்பெலாஞ் சூழ வெம்புலால்,

பி - ம். *குரவித். †களைநீர் காய, களையுளானே. ‡மாநீரநாய் நாளிரைபெறூஉம வெளவவவுறையளவா. §கதிர்பெயருமழிம்பிலினண் டரங்காற்கையும். ||திங்கணுயிறுயிர்ப் படாஅ.

உயிர்புறப் படாஅ வளைவைத் தெறுவரத்
தெற்றிப் பாவை திணிமணை லயரும்
மென்றோண் மகளிர் நன்று புரப்ப
. . . . . . . . .ண்ட பாசிலைக்
கமழ்பூந் தும்பை நுதலசைத் தோனே.

திணை - தும்பை; துறை - †பாண்பாட்டு.
‡அடை நெடுங்கல்வியார். (உஅரு)

---

சோருஞ்செங் குருதியுண் மைந்தர் தோன்றுவார், ஒருமே லொண்மணிச் சூட்டு வைக்கிய, ஆரமே யமைந்ததேர்க் குழிசி யாயினர்'' (சீவக. 790); "நெடுவேல் பாய்ந்த மார்பின், மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே'' (புறநா. உகஎ) என்பன இங்கே கருதற்பாலன. இங்கல் - தங்கல்; "செம்பொ னிங்குவார் கழலினனும்'', "இங்குசுவை யின்னமிர்தம்'' சீவக. 1083, 2025.

8 - 9. புறநா. உகo : 4 - 5.
10. தெற்றி - திண்ணை.
13. தும்பை - தும்பைமாலையை. அசைத்தல் - கட்டுதல்.
பி - ம். *கவிழ். †பாடாண்பாட்டு. ‡அண்டநெடுங்க...யார்.

---

(உஅசு) வருகதில் வல்லே வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப

நூலரி மாலை *சூடிக் காலிற்

---

1. விரைவில் வருக விரைவில் வருகவென்று; "வருகதில் வம்ம வெஞ் சேரி சேர" அகநா. உஎசு.

நன். வி. சூ. 420, மேற்.

2. தூது - தூதர்.

1 - 2. சிறந்த வீரனைத் தமக்குத் துணையாக வரும்வண்ணம் அரசர் அழைத்தல் இந்நூல் கஉஉ - ஆம் பாடலாலும் விளங்கும்.

3. நூலரிமாலை - நூலை அரிந்து கட்டிய மாலை; காலின் - கால்களால்; காற்றைப்போலென்றுமாம்.

பி - ம். *சூட்டிநங் காலிற் றனியன்.



றமியன் வந்த மூதி லாளன்
அருஞ்சமந் தாங்கி முன்னின் றெறிந்த
ஒருகை யிரும்பிணைத் தெயிறு *மிறையாகத்
†திரிந்த வாய்வா டிருத்தாத்
‡தனக்கிரிந் தானைப் பெயர்புற நகுமே.[1]

திணையும் துறையும் அவை.

3 - 4. ஊர்தியின்றித் தனியே வந்த மறவன். மூதில் - மறக்குடி.

1 - 4. 'வருகதில்வல்லே...வந்த: இது காலங்குறித்தது' தோல். இடை. சூ. 5, ந.

5. தடுத்தற்கரிய போரைத் தடுத்து.

6. "தானால் விலங்காற் றனித்தாற் பிறன்வரைத்தால், யானை யெறித விளிவரவால் - யானை, ஒருகை யுடைய தெறிவலோ யானும், இருகை சுமந்துவாழ் வேன்" தோல். புறத்திணை. சூ. 5, ந. மேற்.

6 - 7. ஒருகையிரும்பிணத்தெயிறு - இறந்த யானையின் கொம்பு. மிறையாகத் திரிந்தவாள் - வளைவாக வேறுபட்ட கத்தியை; திருத்தா - திருத்தி; "புண்ணிடங் கொண்ட வெஃகம் பறித்தவிற் பொன்ன னார்தம், கண்ணிடங் கொண்ட மார்பிற் றடாயின காது வெள்வேல், மண்ணிடங் கொண்ட யானை மணிமருப் பிடையிட் டம்ம, விண்ணிட மள்ளர் கொள்ள மிறைக்கொளீஇத் திருத்தி னானே" (சீவக. 284); "வெந்திற லெஃக மிறைக்கொளீஇ" பு. வெ. 175.

8. தனக்குத் தோற்றோடியவனது முதுகை நோக்கிச் சிரிப்பான்; "போர்தொலைந் திருந்தாரைப் பாடெள்ளி நகுவார்போல்" கலி. கஉ0 : 14.

தாங்கித் (5)-திருத்தா (7) நகுமென்க (8.)

[1]மு. வஞ்சித்திணைத்துறைகளுள், 'அழிபடைதட்டோர் தழிஞ்சி' என்பதற்கும் (தோல். புறத்திணை. சூ. 7, இளம்.), 'வருவிசைப் புனலைக் கற்சிறை போல, வொருவன் றாங்கிய பெருமை' என்பதற்கும் (ஷை. ஷை.

டை. 8, ந.), 'திறப்பட வொருதான் மண்டிய குறுமை' என்பதற்கும் (டை. டை. டை. 12, ந.) மேற்கோள்.

ஏ - ம். பிறையாக. †திருந்த. ‡தனக்கிருந் தானை, தனக்கிரி தானை பெயர்.



(உஅ௫) பாசறை யீரே பாசறை யீரே
துடியன் கையது வேலே யடிபுணர்
வாங்கிரு மருப்பிற் நீந்தொடைச் சீறியாழ்ப்
பாணன் கையது தோலே காண்வரக்
கடுந்தெற்று மூடையின்......
வாடிய மாலை மலைந்த சென்னியன்
வேந்துதொழி லயரு மருந்தலைச் சுற்றமொடு
*நெடுநகர் வந்தென விடுகணை மொசித்த
†மூரி வெண்டோள்..........
சேறுபடு குருதிச் ‡செம்மலுக் கோஒ
மாறுசெறு நெடுவேன் மார்புளம் போக
நிணம்பொதி கழலொடு நிலஞ்சேர்ந் தனனே
அதுகண்டு, §பரந்தோ ரெல்லாம் புகழத் தலைபணிந்
திறைஞ்சி யோனே குருசில் பிணங்குகதிர்

2. துடியன் - துடிப்பறை கொட்டுபவன்.

3. விளைந்த கரிய கோட்டையும் இனிய நரப்புத் தொடையையு முடைய சிறிய யாழ்.

4. தோல் - கேடகம்.

3 - 4. "தேஎந் தீந்தொடைச் சீறியாழ்ப் பாண" புறநா. எ0 : 1.

5. கடுந்தெற்று மூடை - நெருங்கத் தெற்றின தானியக் கோட்டை; மூடை - குதிருமாம்; "கடுந்தெற்று மூடையி னிடங்கெடக் கிடக்குஞ், சாலி" பொருந. 245 - 6.

6. மலைந்த - சூடிய.

7. அரசகாரியத்தைச் செய்யும் அரிய தலைமையையுடைய சுற்றம்.

8. மொசிதல் - மொய்த்தல்; பதிற். கக : 12, சஅ : 8.

10. செம்மல் உக்கு ஒஒ.

11. பகைவரைக் கோபிக்கின்ற நெடியவேல் மார்பினுட் போதலால்; "எஃகுளங் கழிய" புறநா. உஅஉ : 1.

14. குருசிலென்பது, அவனென்னும் பொருளில் வந்தது.

13 - 4. புகழுக்கு நாணுதல் : புறநா. கடுஉ : 21 - 2, அடிக்.

பி - ம். *நடுநெகா. †முரி வெண்டோல். ‡செம்பறுக் கோஒ மாறுபடு நெடு. §பார்த்தோர்.

அலமருங் கழனித் தண்ணடை யொழிய
*இலம்பா டொக்கற் றலைவற்கோர்
கரம்பைச் †சீறூர் நல்கின னெனவே.

திணை - வாகை ; துறை - .........முல்லை.

அரிசில்கிழார். (உஅரு)

---

15. தண்ணடை ; மருதநிலத்தூர்; புறநா. உஅஎ : 10.

14 - 5. பிணங்குகதிர் அலமரும் கழனி - பின்னிய நெற்கதிர் சுழலும் வயல்; புறநா. கூகூஅ : 10.

16. வறுமையையுடைய சுற்றத்தார்க்குத் தலைவனென்றது, ஓரிரவலனை.

நல்கினனெனப் (17) பாங்தோரெல்லாம் புகழக் (13) குருசில் இறைஞ்சியோனென்க (14.)

பி - ம். *வலப்பாடு. †செறூா, களறூர்.

---

(உஅசு) வெள்ளை வெள்யாட்டுச் செச்சை போலத்
தன்னோ ரன்ன இளைய ரிருப்பப்
பலர்மீது *நீட்டிய மண்டையென் சிறுவனைக்
கால்கழி கட்டிலிற் கிடப்பித்
தூவெள் ளறுவை †போர்ப்பித் திலதே.1

திணை - கரந்தை ; துறை - வேத்தியல்.

ஔவையார். (உ அகூ)

1. யாட்டுச்செச்சை - ஆட்டுக்கிடாய்.

2. தன்னோரன்ன - தன்னையொத்த; ஓர்: அசைநிலை.

3. மண்டை - ஒருவகை உண்கலம்; எழுவாய்.

4. கால்கழிகட்டில் - பாடை; கிடப்பி - கிடத்தி; புறநா. கரு : 8.

5. தூவெள்ளறுவை - மிகவெண்மையான ஆடை; புறநா. உஎக : 8, உகூக : 2.

மண்டை (3) போர்ப்பித்திலதென்க (5.)

[1]மு. தொல். புறத்திணை. சூ. 8, ந. மேற்.

பி - ம். *நீட்டிப்பண்டையெண். †போர்ப்பித்திலனே, போர்ப் பித் திலவே,



(உஅஎ) துடியெறியும் புலைய
எறிகோல் கொள்ளு *மிழிசின
கால மாரியி னம்பு தைப்பினும்
வயற்கெண்டையின் வேல்பிறழினும்

பொலம்புனை யோடை யண்ணல் †யானை
இலங்குவான் மருப்பி னுதிமடுத் தூன்றினும்
ஓடல் செல்லாப் பீடுடை யாளர்
நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் ‡புரளும்

---

1. துடி - ஒருவகைப்பறை.

2. எறிகோல் - பறையை அடிக்குங் குறுந்தடி. இழிசின - புலையர்; புறநா. அஉ : 3, உஅக : 10.

3. கார்காலத்து மழை எய்யப்படும் அம்புகளுக்கு உவமை; "ஒடுங்கா ருடன்றவன் றானை வில்விசை, விடுங்கணை யொப்பிற் கதழுறை சிதறஉ" (பரி. உஉ: 5 - 6); "பெயலுறழக் கணைசிதறி" (மதுரை. 183); "மால்வரைத் தொடுத்து வீழ்ந்த மணிநிற மாரி தன்னைக், காலிரைத் தெழுந்து பாறக் கல்லெனப் புடைத்த தேபோன், மேனிரைத் தெழுந்த வேடர் வெந்நுனை யப்பு மாரி, கோனிரைத் துமிழும் வில்லாற் கோமகன் விலக்கி னானே" சீவக. 451.

4. வேலுக்குக் கெண்டை யுவமம்; புறநா. உ௪க : 6.

5. பொலம்புனையோடை - பொன்னாற் செய்யப்பட்ட பட்டம்; புறநா. ரு : 7 - 11.

5 - 6. வால்மருப்பு -வெண்மையான கொம்பு. யானை...ஊன்றினும்: "கூற்றம்போற் கொடிய யானைக் கோடுழ தகன்ற மார்பம், கீற்றுப்பட் டழகி தாகக் கிடக்கெனக் கொடுத்து நிற்பார்", "முளரிமுக நாகமுளை யெயிறுழுது கீற" சீவக. 782, 2870.

7. பீடு - பெருமை.

8. பொய்கையிற் பிறழ்ந்த வாளைமீன்

9. கூட்டுமுதல் - நெற்கூட்டிடத்தே.

ஏ - ம். *அறிசன, காலமளியினம்புகைப்பினும். †யாஅனை யிலங்கு வாண். ‡பிறழும்.



10 தண்ணடை பெறுதல் யாவது படினே
மாசின் மகளிர் *மன்ற னன்றும்
உயர்நிலை யுலகத்து நுகர்ப வதனால்
வம்ப வேந்தன் றானை
இம்பர் நின்றுங் காண்டிரோ வரவே.[1]

திணை - கரந்தை ; துறை - நீண்மொழி.
சாத்தந்தையார். (உஅஎ)

---

10. தண்ணடைபெறுதல் இயல்பென்றபடி; "தண்ணடை பெறுதலு முரித்தே" (புறநா. உகஎ : 8.) படின் - இறந்தால்.

11. தெய்வமகளிருடைய மணத்தை. நன்று - மிகுதியாக; உம்:

அசைநிலை.

12. சுவர்க்கத்தில் அனுபவிப்பார்.

13. பகையரசனுடைய சேனை.

14. வரவுகாண்டிர் - வருதலைப் பார்ப்பீராக.

[1]மு. வஞ்சித்திணைத்துறைகளுள், 'மாராயம்பெற்ற நெடுமொழி' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 7, இளம்.; ஷை. ஷை. ஷை. 8, ந.

பி - ம். [1]மண்ணைநன்று.

---

(உஅஅ) மண்கொள வரிந்த வைந் நுதி மருப்பின்
அண்ண னல்லே றிரண்டுடன் மடுத்து
வென்றதன் பச்சை சீவாது போர்த்த
திண்பிணி முரச மிடைப்புலத் திரங்க

---

1. மண்கொள வரிந்த - கோட்டுமண்கொள்ளுதலால் வரிபட்ட.

2. இரண்டு காளைகள்.

3. வென்றதன் - வென்ற ஏற்றினது. பச்சை - தோல்.

1 - 4. பச்சைபோர்த்த முரசம்: "ஓடா நல்லேற் றுரிவை தைஇய, பாடுகொண் முரசம்" (அகநா. ருருச); "கொல்லேற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த, மாக்கண் முரச மோவில கறங்க"

(மதுரை. 732 - 3); "ஏற்றுரி போர்த்த விடியுரு முழக்கின்,......முரசு" (மணி. க : 29 - 31); "ஏற்றுரி போர்த்த வள்வா ரிடிமுரசு", "புனை மருப் பழுந்தக் குத்திப் புலியொடு பொருது வென்ற, கனைகுர லுருமுச்



ஆரமர் மயங்கிய ஞாட்பிற் றெறுவர
நெடுவேல் பாய்ந்த நாணுடை நெஞ்சத்
*தருகுகை ...... ......மன்ற
குருதியொடு துயல்வரு மார்பின்
முயக்கிடை யீயாது மொய்த்தன பருந்தே.

திணை - தும்பை ; துறை - மூதின்முல்லை.

கழாத்தலையார். (உஅஅ)

---

சீற்றக் கதழ்விடை யுரிவைபோர்த்த, தனைகுரன் முரசம்" (சீவக. 2152, 2899); "சாற்றிடக் கொண்ட வேற்றுரி முரசம்", "ஏற்றுரி முரசி னிறைவன்" (பெருங். க. 38 : 100, 43 : 195); "ஏற்றுரியி னிமிழ் முரசம்" யா. வி. செய். சூ. 40; 'தாழிரும்' என்னுஞ் செய்யுள்.

"ஏற்றுரி முரச நாண" (சீவக. 2142) என்னும் பகுதிக்கு இவ்வடிகளை மேற்கோள் காட்டுவர் நச்சினார்க்கினியர்.

5. அமர் - போர். ஞாட்பு - போர்க்களம்.

9. மகளிர் வந்து தழுவுதற்கு இடங்கொடாமற் பருந்துகள் மொய்த்தன.

பி - ம். *தருகுறை.

---

(௨௮௯) ஈரச் செவ்வி யுதவின வாயினும்
பல்லெருத் துள்ளு நல்லெருது நோக்கி
வீறுவீ றாயு முழவன் போலப்
பீடுபெறு தொல்குடிப் பாடுபல தாங்கிய
*மூதி லாள ருள்ளுங் காதலிற்

---

1. ஈரச்செவ்வி - ஈரமாகிய பருவம்.

2. பல உழவெருதுகளுள்ளும்.

3. வீறு வீறு ஆயும் - அவ்வெருதின் குணங்களை வேறு வேறாக ஆராய்கின்ற.

4. குடிப்பாடு - குலத்திற்குப் பொருந்திய பழைய வழக்கம்.

5. மூதிலாளர் - மறக்குடியிற் பிறந்தவர். காதலின் - அன்பினால்.

பி - ம். *முரண்டலை களித்தமியருங், முளைதலை, கழிதமீஞருங்.



றனக்குமுகந் *தேந்திய பசும்பொன் மண்டை
†இவற்கீ கென்னு மதுவுமன் றிசினே

கேட்டியோ வாழி பாண பாசறைப்
‡பூக்கோ ளின்றென் றறையும்
மடிவாய்த் தண்ணுமை யிழிசினன் குரலே.[1]

திணை - .........; துறை......முல்லை.

கழாத்தலையார். (௨௮௧)

---

6. பசும்பொன் மண்டை யென்றது, பசிய பொன்னாற் செய்யப் பெற்ற கட்பெய்கலத்தை; மண்டை, அதனிலுள்ள கள்ளுக்கு ஆகுபெயர்.

6 - 7. இவற்கு ஈகென்னும் - இவ்வீரனுக்குக் கொடுவென்பான்; "இவற்கீத் துண்மதி கள்ளே" புறநா. ௨௯0 : 1.

8. பாசறை - படைவீட்டில்.

9. பூக்கோள் - பூவைக் கொள்ளுதல்; அஃதாவது, வெட்சிமுதலிய புறத்திணைக்குரிய பூக்களைத் தம் தொழிலுக்கேற்பச் சூடுதற்கு நல்ல நாளிற் கைக்கொள்ளல்; "பூக்கோ ளெனவேஎய்க் கயம்புக் கனனே" புறநா. ௩௪௧ : 9.

10. மடிவாய்த் தண்ணுமை - தோலை மடித்துப் போர்த்த வாயையுடைய மத்தளம்; "மடிவாய்த் தண்ணுமை நடுவ ணார்ப்ப" (நற். ௧௩0 : 2); "மடிவாய்த் தண்ணுமை நடுவட் சிலைப்ப" (பெரும்பாண். 144.) இழிசினன் : புறநா. ௨௮௭ : 2, அடிக்.

9 - 10. புறத்திணைக்குரிய பூக்களைக் கொள்ளுதற்குத் தண்ணுமை அறைதல் மரபென்பது, "பூக்கோ ளேய தண்ணுமை" (அகநா. ௧௭௪ : 4); "பூக்கோட் டண்ணுமை கேட்டொறுங் கலிழ்ந்தே" (தகடூர்யாத்திரை) என்பவற்றாலும் விளங்கும்.

[1]ழ. வெட்சித்திணைத்துறைகளுள், மறங்கடை கூட்டிய குடிநிலை கூறியதற்கு (தொல். புறத்திணை. சூ. 4, இளம்.) மேற்கோள்.

பி - ம். *தெய்திய. †இவற்கீதென்னுதறகுமனறிசினே. ‡பூக்கோளி

னறிரையும்.

---

## (உகூ௦) *இவற்கீத் துண்மதி கள்ளே சினப்போர்

1. " ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்றே" என்னுஞ் சூத்திர வுரையில் இவ்வடியை மேற்கோளாகக் காட்டி, 'இவனென்பது முன்னிலை யும் படர்க்கையுமென்று உணர்க' என்பர் நச்சினார்க்கினியர்; தொல். எச்ச. சூ. 49.

பி - ம். *எற்கீத்து.





இனக்களிற் றியானை *யியறேர்க் குருசில்
நுந்தை தந்தைக் கிவன்றந்தை தந்தை
எடுத்தெறி ஞாட்பி னிமையான் றச்சன்
அடுத்தெறி †குறட்டி னின்றுமாய்ந் தனனே
மறப்புகழ் நிறைந்த மைந்தினோ னிவனும்
‡உறைப்புழி யோலை போல
§மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே.[1]

---

2. களிற்றியானை - ஆண்யானை. இயல் தேர் - செல்லுகின்றதேர். குருசில்: விளி.

3. நுந்தை தந்தைக்கு - நின் பாட்டனுக்கு.

4. எடுத்தெறி ஞாட்பு - படைக்கலங்களை எடுத்தெறியும்

போரில். இமையான் - கண்ணிமையானுப்; "விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின், ஒட்டன்றோ வன்க ணவர்க்கு" குறள்,-775.

5. குறட்டின் - உருளையின் குடம்போல; புறநா. உகூ : 8.

6. மறப்புகழ் - வீரத்தால் வரும் கீர்த்தி; "மறம்வீங்கு பல்புகழ்" பதிற். கஉ.

7. உறைப்புழி ஓலைபோல - மழை பெய்யுமிடத்து அம்மழைத்துளி கள் மேலே வீழாதபடி காக்கும் குடையைப்போல; ஓலை - தாழை, தென்னை, பனை இவற்றின் மடல்; இங்கே குடைக்கு ஆகுபெயர்.

'உழி' என்பது இடப்பொருளுருபாய் வருதற்கு இவ்வடி மேற்கோள்; நன். சூ. 301, மயிலை. ; நன். வி. சூ. 302.

6 - 8. இவன் மறைக்குவன் - இவன் வேல் உன்மீது படாதபடி தடுத்தற்கு முயலுவான்; இதனை, "இலக்கு வற்குமுன் வீடணன் புகுமிரு வரையும், விலக்கி யங்கதன் மேற்செலு மவனையும் விலக்கிக், கலக்கும் வானரக் காவல னநுமன்முன் கடுக, அலக்க ணன்னதை யின்னதென் றுரைசெய லாமே" (கம்ப. வேலேற்று. 31) என்பதனாலும் உணர்க.

7 - 8. குடும்பத்தைக் குற்றமறைப்பானென்னும் இடத்துத் தன் குடியைத் துன்பமுறாமற் காக்க முயல்வானென்று பொருள்கூறி, 'உறைப் புழி......வேலே என்புழியும் மறைத்தல் இப்பொருட்டாயிற்று' என்பர் பரிமேலழகர்; குறள், 1029.

[1]மு. "முந்தை முதல்வர் துடிய ரிவன்முதல்வர், எந்தைக்குத் தந்தை யிவனெனக்கு - வந்த, குடியொடு கோடா மரபினோற் கின்னும்,

பி - ம். *யியற்றேர். †குடடினிதுனறுமநதனனே. ‡ உறைப் பெயலோலை. §மறைவல,...காந்தை.

திணை - கரந்தை; துறை - குடிநிலையுரைத்தல்.

ஔவையார். (உகூ0)

---

வடியுறு தீந்தேறல் வாக்கு" (பு. வெ. 19) என்பதை இச்செய்யுள் நினைப்பிக்கின்றது.

இது, கார்நிலையின்பாற்படுமென்பர் ; தொல். புறத்திணை. சூ. 17, ந.

---

(உகூக) சிறாஅர் *துடியர் பாடுவன் மகாஅர்
தூவெள் ளறுவை மாயோற் குறுகி
†இரும்புட் பூச லோம்புமின் யானும்
‡விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவென்
§என்போற் பெருவிதுப் புறுக வேந்தே
கொன்னுஞ் சாதல் வெய்யோற்குத் தன்றலை

---

1. சிறாஅர் - சிறுவர்களே. துடியர் - துடிப்பறை கொட்டுபவர்களே. பாடுவல் மகாஅர் - பாடுதலில் வல்ல பாண்மக்களே.

இவ்வடி, ரகாரவீற்று அளபெடைப்பெயர் மாத்திரைமிக்கு இயல்பாய் விளியேற்றற்கு மேற்கோள் ; தொல். விளி. சூ. 24, ந.

2. தூ வெள் அறுவை - மிகவும் வெள்ளிய ஆடை; புறநா. உஎக :

8, உஅகூ : 5; மாயோற் குறுகி - கரியநிறத்தையுடையோனை நெருங்கி.

3. இரும்புட்பூசல் - பறவைகளின் ஆரவாரத்தை ; பறவைகளைப் போலப் பெருமுழக்கஞ்செய்தல்; அவனுற்ற பெரும்புண்ணைக் குறித்து அழுதலைச் செய்த லெனினுமாம். ஓம்புமின் - பரிகரியுமின்.

4. விளரி - இரங்கற்பண். கொட்பு - சுழற்சி. கடிகுவென்-விலக்குவேன். இரங்கற்பண்ணைப் பருந்தின் சுழற்சிபோல வட்டமிட்டுப் பாடுதலால், அங்கே வரும் நரிகளை ஓட்டுவேன்; இந்த இசையொலியைக் கேட்டு நரிகள் ஓடுமென்றபடி.

5. அரசன் என்னைப்போலப் பெரிய நடுக்கத்தையடைவானாக; புறநா. உ௫௫: 3; நற். உகூ௬ : 5 - 6.

6. கொன்னுஞ்சாதல் வெய்யோற்கு - ஒருபயனின்றியும் போரிற் சாதலில் விருப்பமுள்ளவனுக்கு ; "மண்டமர் நசையொடு கண்படை பெறாஅது" (முல்லை. 67); "புட்பகைக், கேவா னாகலிற் சாவேம் யாமென", "பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை, வளிபொரு தெண்கண் கேட்பின், அதுபோ ரென்னு மென்னையு முளனே" (புறநா. , ௮௯ - ம். *துடியபாடு. †இரும்பூட்பூசல், இரும்பூட் பூசல். ‡விளரிக் கோடின வெண்ணரிகடிவென். §எம்போல்.



மணிமருண் மாலை சூட்டி யவன்றலை
ஒருகாழ் மாலை தான்மலைந் தனனே.1

திணை - அது; துறை - வேத்தியல்.

நெடுங்கழத்துப் பரணர். (உ௬௧)

சுஅ, அக) என்பவற்றால் வீரர்க்குப் போர்விருப்பமும் போரிற் சாதலில் விருப்பமும் உண்மை அறியலாகும்.

7. மணிமருள்மாலை சூட்டி - பலவகை மணிகள் விரவிய பலவடமுள்ள மாலையை அவ்வீரனுக்குச் சூட்டி ; மருளுதல் - கலத்தல்.

8. ஒருகாழ் - ஒற்றைவடம். மலைந்தனன் - சூடினான்.

1ம. 'கொடுத்த லெய்திய கொடைமை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 8, ந.

---

(உகஉ) *வேந்தற் கேந்திய தீந்தண் ணறவம்
யாந்தனக் குறுமுறை வளாவ விலக்கி
வாய் †வாள் பற்றி நின்றனெ னென்று
சினவ லோம்புமின் சிறுபுல் லாளர்

---

1. தீந்தண் நறவம் - இனிய குளிர்ந்த நறுநாற்றத்தையுடைய மதுவை; "தண்கமழ் தேறல்" புறநா. ௩௬ : 18.

2. உறுமுறை வளாவ - உற்ற முறையாற் கலந்துகொடுக்க.

3. வாய்வாள் - தப்பாத வாள்.

1 - 3. "ஆளமர் வெள்ளம் பெருகி னதுவிலக்கி, வாளொடு வைகு வேன் யானைக - நாளும், கழிமகிழ் வென்றிக் கழல்வெய்யோ யீயப், பிழிமகி ழுண்பார் பிறர்" (பு. வெ. 32) என்பது இவ்வடிகளின் பொருளை ஒருவாறு தழுவியது.

4. சினவல் ஓம்புமின் - கோபித்தலை ஒழிமின். சிறுபுல்லாளர்: விளி.
பி - ம். *வேந்தர்க்கு. †வாள மற்றி நின்றனன்,



ஈண்டே போல வேண்டுவ னாயின்
என்முறை வருக வென்னான் கம்மென
எழுதரு பெரும்படை விலக்கி
ஆண்டு நிற்கு மாண்டகை யன்னே.

திணை - வஞ்சி; துறை-பெருஞ்சோற்றுநிலை.
விரிச்சியூர் நன்னாகனார். (உகூஉ)

5. இவ்விடத்திற் செய்ததுபோலப் போர்செய்யவேண்டுவனாயின்.

6. என் முறைவருக என்னான் - யான் போர்செய்ய வேண்டிய முறைவருக வென்று நினையானாகி; போரில் முறையுண்டென்பதை, "விருந்தாயினை யெறிநீயென விரைமார்பகங் கொடுத்தாற், கரும்பூண ற வெறிந்தாங்கவ னினதுழினி யெனவே, எரிந்தாரயி விடைபோழ்ந்தமை யுணராதவ னின்றான், சொரிந்தார்மல ரமங்கையர் தொழுதார்விசும் படைந்தான்" (சீவக. 2265), "உணராநெடி துயிராவுரை யுதவாவெரி யுமிழா, இணையாருமி லவனேர்வர வெய்தாவலி செய்தாய், அணையாயினி

யெனதூழென வடாரவெளி படாரப், பணையார்புய முடையானிடை சிலவிம்மொழி பகர்ந்தான்" (கம்ப. முதற்போர். 180) என்பவற்றால் உணர்க. கம்மென - விரைய; தேய வழக்கென்பர்; அகநா. கக, உரை.

---

(உகூரு)* நிறப்புடைக் கொல்கா யானை மேலோன்
†குறும்பர்க் கெறியு மேவற் றண்ணுமை
நாணுடை மாக்கட் கிரங்கு மாயின்

---

1. குத்துக்கோலைக் காய்தலையுடைய யானையின் மேலுள்ளான்; வள்ளுவன்.

2. குறும்பர்க்கு - புறமதிலைச்சூழ்ந்த சிற்றரசரோடு போர்செய்தற் பொருட்டு. ஏவற்றண்ணுமை - காஞ்சிப்பூக்கொள்ளுகைக்கு வீரரை ஏவுதலைச் செய்யுந் தண்ணுமைப்பறை; புறநா. உஅகூ : 9 - 10.

3. போர்ப்பறை கேட்டவுடன் புறப்படாமற் பூக்கோட்பறை அறையப்படுங்காறும் தாமதித்துநிற்பவர்கள், 'நாணுடைந்தமாக்கள்' என்றிகழ்ந்து கூறப்பட்டனர்; "நாணுத்தக வுடைத்து", "நாண்முறை தபுத்தீர்" (புறநா. ருகூ, உகூச) என்பர்; "பல்லாக் கொண்டா ரொல்லா ரென்னும், பூசல்கேட்டுக் கையது மாற்றி" (பன்னிருபடலம்), "நிரைகோள் கேட்டுச்

பி - ம். *நிறப்புடைகலனை மேலோனதுவமபறகெறியும். †குறும்பற கெறியுமோவற், குறும்பறவெறியும்.

*எம்மினும் பேரெழி லிழந்து †வினையெனப்
பிறர்மனை ‡புகுவள் கொல்லோ
§அளிய டானே பூவிலைப் பெண்டே.

திணை - காஞ்சி ; துறை - பூக்கோட்காஞ்சி.

‡‡ நொச்சி நியமங்கிழார். (உகரு)

---

செய்தொழி லொழிய'' (பு. வெ. 23), "முரசெருக்கலு முண்டியையிடை நீத்துமொய்குழன் மாதரின், விரசியாட லிடைக்கணித்தும் விரோதநீத்து நடத்தொடு, பரசுபாடல்கணித்தும் வெய்துபல் வீரரும்படை நான்கொடும், அரசவீதியில் வந்துதொக்கன ராழிபோலொலி மிக்கதே'' (விநாயக. பிந்தியமயூரேசர். 405) என்பவற்றாற் போர்ப்பறை முதலியவற்றைக் கேட்டவுடன் வீரர் போருக்குப் புறப்பட்டமை அறியலாகும்.

7. அளியள் - இரங்கத்தக்காள். பூவிலைப்பெண்டு: "பூவிலை மகளிர் புலம்படர்ந் தனரே'' பழம்பாடல்.

பி - ம். *எம்மிநும். †விலையெனப். ‡புகுவர். §ஒளியடானே. ‡‡கொசசிநீயககிழார்.

---

(உகச) வெண்குடை மதிய மேனிலாத் திகழ்தரக்
*கண்கூ டிறுத்த கடன்மருள் பாசறைக்
குமரிப்படை †தழீஇய கூற்றுவினை யாடவர்

தமர்பிற ‡ரறியா வமர்மயங் கழுவத்

1. குடையாகிய பூரணசந்திரன் மேலிடத்து ஒளி வீச.

2. கண்கூடிறுத்த - சேர்ந்து தங்கின. கடல் மருள் பாசறை - கடலை யொத்த படைவீடு; கண்டோர் கடலென்று மயங்கத்தக்க போர்க் களமுமாம்; "கடலென வானீர்க் கூக்குந் தானை", "கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்" (புறநா. கள, உகூ௬); "படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி" (முல்லை. 28); மருள் : உவமவுருபு.

3. குமரிப்படை - அழியாப்படை; புதிய படையுமாம். கூற்று வினையாட்வர் - யமனைப்போலக் கொல்லுதற்றொழிலைச் செய்கின்ற வீரர்; கூற்று - உடலையும் உயிரையும் வேறுவேறாகப் பிரித்துக் கூறுபடுத்தும் கடவுள்.

4. தம்மவரென்றும் அயலாரென்றும் அறியாத போர் மயங்கிய களப்பரப்பில்; தமர்பிறரறியாமை படைமடமெனப்படும்.

பி - ம். *கண்கூடியத்த. †தழீஇக் கூற்று. ‡ரறியா தமர்.



5 திறையும் பெயருந் *தோற்றி நுமருள்
நாண்முறை †தபுத்தீர் வம்பி னீங்கெனப்
போர்மலைந் ‡தொருசிறை நிற்ப யாவரும்
அரவுமிழ் மணியிற் குறுகார்
§நிரைதார் மார்பினின் கேள்வனைப் பிறரே.[1]

திணை - தும்பை; துறை - தானைமறம்.
‡பெருந்தலைச்சாத்தனூர். (உ௬௪)

---

5. இறையும் பெயரும் தோற்றி - நம்முடைய தலைவன் பெயர் இன்னதென்பதையும் நம்பெயர் இன்னதென்பதையும் தோன்றச்செய்து; பெயர் - புகழுமாம். நுமருள் - உங்களுள்.

6. நாண் - நாணம்; நாள் - வாழ்நாளுமாம்.

5 - 6. 'இறையும்......ஈங்கு' என்றது ஒருவீரன் கூற்று.

7. போர்த்தொழிலை மேற்கொண்டு ஒருபக்கத்தே நிற்ப.

8. பாம்பு மணியை உமிழ்ந்து மேயச்சென்று அதனையே நினைத்திருக்குமென்பதும் அதனை அணுகுபவர்களைத் துன்புறுத்துமென்பதும் ஈண்டு அறியற்பாலன; "கொங்தொளி மாமணி யிட்டுப் போதுங் கோளரவிற்கருத் திட்டுப் போந்தார்" தணிகை. விடையருள். 7.

[1]மு. தும்பைத் திணைத்துறைகளுள் 'தானைநிலை' என்பதற்கு இது மேற்கோள் (தொல். புறத்திணை. சூ. 14, இளம்.; ஷை. ஷை. ஷை. 17, ந.); இப்பாட்டு, மறக்குடிமகளொருத்தியை நோக்கி ஒருவர் கூறியது.

பி - ம். *தோற்றினு நமரு ளுன். †தவத்தீர். ‡தொருதிற. §நிரைகாழ் மாலைபெய்கேள் வனை ‡பெருத்தலைச்சாத்தனார்.

---

(உ௬௫) கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்
வெந்துவாய் மடித்து வேறலைப் *பெயரித்
†தோடுகைத் தெழுதரூஉத் தூங்கெறி ஞாட்பின்

---

1. புறநா. உ௬௪ : 2, அடிக்.

2. வெந்து - மனம்புழுங்கி. வாய்மடித்து : புறநா. உகசு : 4, உகஅ : 5. பெயரி - பெயர்த்து; அசைத்து.

3. தோடு - சேனையின் தொகுதியை. உகைத்து - செலுத்தி; கைத்து - செலுத்தி என்றுமாம். எழுதரூஉ - எழுந்து. ஞாட்பின் - போரில்.

பி - ம். *பெயரதொழுகைத் தெழுதரு நடுதாரந்தேறி, பெயரித் தோறுவைத் தெழுதருந். †தோறுடைத்து, தோறணித்து.



வருபடை போழ்ந்து *வாய்ப்பட விலங்கி
இடைப்படை யழுவத்துச் சிதைந்துவே றாகிய
சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி
†வாடுமுலை யூறிச் சுரந்தன

ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே.

திணை - அது ; துறை - உவகைக் கலுழ்ச்சி.
ஔவையார். (உகரு)

---

4. முன்வருகின்ற படையைப் பிளந்து இடமுண்டாக விலக்கி; புறநா. உகக : 3.

5. அழுவம் - பரப்பு. "சிதைந்துவே றாகிய" புறநா. உஎஅ : 7.
6. சிறப்புடைமை - மறக்குடிக்கே யுரிய விசேடகுணம்; "பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா, செய்தொழில் வேற்றுமை யான்" குறள், 972.

7. வாடுமுலை : புறநா. உஎகூ : 2. ஊறுதல், பாலின்றெழில்.

6 - 7. புறநா. உஎஎ : 3 - 4.

8. பூட்கை - மேற்கோள்; ஓடாப்பூட்கை: "ஓடாப் பூட்கை யுறந்தை" சிறுபாண். 83.

5 - 8. "செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய, படுமகன் கிடக்கை காணூஉ, ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே" புறநா. உஎஅ : 7 - 9.

பி - ம். *வாய்ப்படை. †மாடு.

---

(உகூக) வேம்புசினை யொடிப்பவுங் காஞ்சி பாடவும்
நெய்யுடைக் கைய ரையவி புகைப்பவும்

---

1. சினை - தழையையுடைய கிளையை. காஞ்சி - காஞ்சிப்பண்; புறநா. உஅக : 5.

2. ஐயவி - வெண்சிறுகடுகு: "ஐயவி புகைப்பவுந் தாங்காது" புறநா. கூஅ : 15.

1 - 2. புண்பட்டோரைப் பேய்கள் அணுகாதிருத்தற் பொருட்டு வேப்பந்தழையை வீட்டின் முன்இறப்பிற்செருகுதலும் காஞ்சிப்பண்ணைப் பாடுதலும் ஐயவியைப் புகைத்தலும் மரபு; புறநா. கஅ : 15, உஅக : 1 - 6.



எல்லா மனையுங் *கல்லென் றனவே
வெந்துடன் றெறிவான் †கொல்லோ
நெடிதுவந் ‡தன்று னெடுந்தகை தேரே.[1]

திணை - வாகை; துறை - ஏறண்முல்லை.

வெள்ளைமாளர். (உகூசு)

---

5. நெடிது - நெடுநேரம்.

[1]போர்க்குச் சென்ற ஏனைவீரர் தம்மிடத்தை அடைந்தும் ஒருவீரன் வாராமலிருக்க அவன்தேர்மட்டும் தாமதித்து வந்ததைக் கண்ட அவன் தாய் கூறியது; கண்டோர் கூறியதுமாம்.

பி - ம். *கல்லென்றவ்வே. †கொல்லெனு. ‡தன்றுநெடுந்.

---

(உகூஎ) பெருநீர் மேவற் றண்ணடை யெருமை

இருமருப் புறழு *நெடுமா ணெற்றின்
பைம்பய றுதிர்த்த கோதின் †கோலணைக்
கன் றுடை மரையாத் துஞ்சுஞ் சீறூர்க்
கோளிவண் வேண்டேம் புரவே ‡நாரரி

---

1. மிக்க நீர் பொருந்துதலையுடைய மருதநிலத்தூரிலுள்ள எருமையின்.

2. இருமை - கருமை. மருப்பு - கொம்பு. நெற்றின் - நெற்றினுடைய.

3. கோது - சக்கை. கோலணை - வளைந்த படுக்கையில்.

1 - 3. பயற்றின் நெற்றினுக்கு எருமைக்கொம்பு உவமை.

4. மரையா - ஒருவகை விலங்கு; "பெற்றமு மெருமையு மரையு மாவே" (தொல். மரபு. சூ. 60) என்பதனால், மரையா' 'என்றார்; "மரையா மரல்கவர" (கலி. சு.) துஞ்சுதல் - கிடத்தல்.

5. கோள் - கொள்ளுதலை. புரவு - இறையிலி நிலம்; புறநா. உ௩0 : 9. நார் - பன்னாடை.

4 - 5. சிறிய ஊரைப் புரவாகக் கொள்ளுதலை இப்பொழுது விரும்பேம்.

பி - ம். *நெடுமா நெற்றின். †கோலணை குன் றுடை....துஞ்சூர்க் கோளி. ‡நாரிசிறைமுதிராடிநறபின.

63

நனைமுதிர் சாடி நறவின் வாழ்த்தித்
துறைநனி கெழீஇக் கம்பு ளீனும்
தண்ணடை பெறுதலு முரித்தே †வைந்நுதி
நெடுவேல் பாய்ந்த மார்பின்
மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே.[1]

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு.

.......................................

(உகஎ)

---

6. நறவின் வாழ்த்தி - கள்ளை வாழ்த்தி; புறநா. ஙகசு : 1.

5 - 6. நாராலரிக்கப்பட்டதும் பூவாலாக்கியதும் விளைந்ததும் சாடியிலுள்ளதுமாகிய மது; "நார்பிழிக் கொண்ட வெங்கட் டேறல்" (புறநா. கஎ0 : 1 - 2) என்பதையும் அதன் அடிக்குறிப்பையும், "நாரரி சிறுகலத் துகுப்பவும்", "நனைக்கள்ளின் மனைக்கோசர், தீந்தேற னறவுமகிழ்ந்து" (ஷை. உகூஉ : 3 - 4, ஙகூசு : 7 - 8), "தூம்பகம் பழுநிய தீம்பிழி" (பதிற். அக), "நெடுங்கணடைமைப் பழுநிய கடுந்திறற், பாப்புக்கடுப் பன்ன தோப்பி" "அம்பணை விளைந்த தேக்கட் டேறல்" (அகநா. ஙசஅ, ஙகூஅ), "நீடமை விளைந்த தேக்கட் டேறல்" (முருகு. 195), "வல்வாய்ச் சாடியின் வழைச்சற விளைந்த, வெந்நீ ரரியல் விரலலை நறும்பிழி" (பெரும்பாண். 280 8 - 1), "தேம்பிழி தேறன் மாந்தி" (குறிஞ்சி. 155), "வேய்ப்பெயல் விளையுட் டேக்கட் டேறல்", "திருந்தமை விளைந்த தேக்கட் டேறல்" (மலைபடு. 171, 522) என்பனவற்றையும் பார்க்க.

7. கம்புள் - நீர்வாழ்பறவையுள் ஒருசாதி; "கதிர்த்ததண் பூணிக் கம்புடாழ் பீலிக் கனைகுரனுரை வண்டான, மெதிர்த்ததண் புனல்சூழிந் நதிக்கரை" (சீவக. 2108) என்பதனுரையில், 'கம்புளென்பது இறந்த கால வழக்கு' என்பர் நச்சினார்க்கினியர்.

8. தண்ணடை - மருதநிலத்தூர்; நாடுமாம்; புறநா. உஅஎ : 10.

10. தன்வடிவு முழுதும் கருக்குமட்டைகளையுடைய வலிய பனை, தம்மார்பில் வேல்கள் ஊடுருவி நிற்பத்தோன்றும் வீரர்க்கு உவமை. நிற்குமோர் - நிற்போர்.

9 - 10. ஒரு வீரன் உடம்பில் வேல்கள் மொய்த்து நின்றதற்கு மேற்கோள்; தோல். புறத்திணை. சூ. 16, ந.

[1]மு. 'பெருநீர்......நிற்குமோர்க்கே : மடல்வன் போந்தைபோல் நிற்பவென நெடுமொழி தன்னொடு புணர்த்தவாறு காண்க; சீறூர் புரவாகக்கொள்ளேன்; தண்ணடை கொள்வேனெனத் தன்னுறு தொழில் கூறினன்' தோல். புறத்திணை. சூ. 5, ந.

பி - ம். *துறைநனிக் கொகந்ண். †...



(உகூஅ) எமக்கே கலங்க றருமே தானே
தேற லுண்ணு மன்னே நன்றும்
இன்னான் மன்ற வேந்தே யினியே
நேரா ராரெயின் முற்றி
வாய்மடித் *துரறிநீ முந்தென் ஞனே.

திணை - கரந்தை; துறை - நெடுமொழி.

†ஆலியார். (உகூஅ)

1 - 2. கலங்கிய கள்ளை எமக்கே கொடுப்பான்; தான் தெளிந்த கள்ளை யுண்பான் முன்பு; என்றது, தலைவன் எம்மை மேலாக மதித்து முன்பு இனியது செய்வானென்றபடி. 'எமக்கு' என்பது தன்போல்வாரையும் உளப்படுத்தி நின்றது. மன், கழிவுப்பொருளது.

3. வேந்து இனி இன்னன்-வேந்தன் இப்பொழுது இன்னதவனு யினன்; அதனைப் பின் கூறுவார்.

5. வாய்மடித்து : புறநா. உகரு : 2.

4 - 5. பகைவருடைய மதிலைச் சூழ்ந்து இதழைக் கவ்வி முழங்கிக் கொண்டு நீ முற்படுக வென்றுனாகித் தான் முற்படுவோன்; ஆதலால், இன்னனென்க.

பி - ம். *தூறிய நீமுந் தெனவே. †ஆனீயார், ஆவியார்.

---

(உஅசு) பருத்தி வேலிச் சீறூர் மன்னன்
*உழுத்தத ருண்ட வோய்நடைப் புரவி
கடன்மண்டு தோணியிற் படைமுகம் போழ

---

1. பருத்திவேலி : புறநா. ௩உச : 7; "பன்னல் வேலிப் பணைநல் லூரே" புறநா. ௩சரு : 20.

2. உழுத்ததர் - உழுந்தின் சக்கை; உழுத்தரென்ற பாடத்திற்கு உழுந்தென்று பொருள்கொள்க.

3. தோணியின் - தோணியைப்போல; போழ - பிளந்துசெல்ல; "வருபடை போழ்ந்து", "மான் மேல்......கரைபொரு முந்நீர்த் திமிலிற் போழ்ந்து" புறநா. உகரு : 4, ௩0௩ : 2 - 7.

புரவி (2) போழ (3.)

2 - 3. "நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி, பணைநிலைப் புரவியி

ணைமுதற் பிணிக்கும்" (பட்டினப். 30 - 31); "செறிதரு செருவிடை யெறிதொழி லிளையவர், நெறிதரு புரவியின் மறிதருந் திமில்" யா. வி. சூ. 86, மேற்.

பி - ம். *உழுத்த ருண்ட, உழுத்ததழுண்ட.



நெய்ம்மிதி *யருந்திய கொய்சுவ லெருத்திற்
†றண்ணடை மன்னர் தாருடைப் புரவி
அணங்குடை முருகன் கோட்டத்துக்
‡கலந்தொடா மகளிரி னிகழ்ந்துநின் றவ்வே.[1]

திணை - நொச்சி; துறை - குதிரைமறம்.

பொன்முடியார். (உகக)

---

4. நெய்ம்மிதி - நெய்யை வார்த்து மிதித்த உணவை; "நெய்ம்மிதி கவளம்" (பெரும்பாண். 394); குதிரை நெய்ம்மிதியருந்தல் : "கொய்ம் மயி ரெருத்தம் பிணர்படப் பெருகி, நெய்ம்மிதி முனைஇய கொழுஞ்சோற் றார்கை...வாமான்" (அகநா. ௪00.) "கொய்சுவற் புரவி" (அகநா. கஙச; சீவக. 3049.) எருத்து - புறக்கழுத்து.

5. தார் - கிண்கிணிமாலை.

6. அணங்குடைமுருகன் - வருத்துதலையுடைய முருகன்; "செவ்வேள்......மராத்தண்சாயை நின்றணங் குந்தைய னீங்ிற்க சாரலிலே" (தஞ்சை. 132.) கோட்டம் - கோயில்; முருகன்கோட்டம் - குமரகோட்டம்.

7. கலந்தொடாமகளிர் - பாண்டங்களைத் தொடுதற்குரிய தூய்மையில்லாத மகளிர்.

புரவிகள் (5) நின்ற (7.)

1மு. 'குதிரைநிலை' என்பர்; தொல். புறத்திணை. சூ. 17, ந.

பி - ம். *யருத்தகொய, யருந்தக்கொய். †தண்டை மன்னர் தாருடைக் கலிமான். ‡கலக்கொடா...நின்றனவே.

---

(நடOO) தோரு தோரு வென்றி தோலொடு
*துறுகன் மறையினு முய்குவை போலாய்

---

1. தோல் தா தோல் தா என்றி - கேடகத்தைக் கொடு, கேடகத்தைக் கொடு என்கின்றாய்.

2. துறுகல் - குண்டுக்கல்; ஐங்குறு. உகO, உருக; துறுகல்லிலே உன்னை மறைத்துக் கொள்வாயாயினும் பிழைப்பாய்.

'கு' என்பது சாரியையாக வந்ததற்கு 'உய்குவை போலாய்' என்பது மேற்கோள்; நன். சூ. 243, மயிலை.; நன். வி. சூ. 244.

பி - ம். *துறுகண்மறை.

நெருந லெல்லைநீ யெறிந்தோன் றம்பி
*அகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்
பேரு ரட்ட கள்ளிற்
†கோரிற் கோயிற் றேருமா னின்னே.

திணை - தும்பை; துறை - தானைமறம்.
அரிசில்கிழார். (௩00)

---

3. நெருநலெல்லை - நேற்றைப்பகலில்; "நெருந லெல்லை யேனற் றோன்றி" அகநா. ௩௨.

3 - 4. நேற்றுப்பகலில் நின்னாலே எறியப்பட்டவனுடைய தம்பி, அகலினிடத்துப் பெய்த குன்றிமணியைப்போலக் கோபத்தாற் சுழலுங் கண்களை யுடையவனாகி; "வென்றிக் கணத்தை விடுத்தானகன் மீது பெய்த, குன்றிக் கணம்போற் சுழல்கண்ணழல் கொப்பு ளிப்பச், சென்று" திருவிளை. ஞ : 30.

குடிகோள்பற்றி வந்தவெகுளிக்கு மேற்கோள்; தொல். மெய்ப்பாடு. சூ. 10, பேர்.

6. ஓரிற்கோயிற்...னின்னே - ஒருவீட்டினுள்ளே கட்கோயைத் தேடுவதுபோல நின்னைத் தேடுகின்றான்; கோய்- கள்முகக்கும் பாத்திரம்; "கோய்வாயிற் கீழுயிர்க்கீ துற்றுக் குரைத்தெழுந்த, நாய்வாயு ணல்ல

தசை" (சிறுபஞ்ச. 17); "சாத்துக் கோயும் பூத்தகைச் செப்பும்," "கோலக் கோயுட் கொண்டுநிறை யமைத்த, சூடமை சாந்தும்" (பெருங். ௩. 5 : 78, 9 : 43 - 4); "கோய்சொரி நறவ மென்னத் தண்புன லுகுக்குங் குன்றின்" கம்ப. சேதுபந்தன. 25.

5 - 6. தொல். உவம. சூ. 37, பேர். மேற்.

பி - ம். *கற்பெய். †போறரிற் கோரிற் றேரு, கோரிற்கோரிற்.

---

(௩0௧) பல்சான் றீரே பல்சான் றீரே
குமரி மகளிர் கூந்தல் புரைய

---

1. சான்றோர் - போர்வீரர்; "தேர்தர வந்த சான்றோ ரெல்லாம்" (புறநா. ௬௩) என்பதும், "சான்றோர் மெய்ம்மறை" (பதிற். ௧௪ : 12) என்னுமிடத்து 'ஈண்டுச் சான்றோரென்பது போரில் அமைதியையுடைய வீரரை' என்னும் அதன் உரையும் அறிதற்பாலன.



அமரி னிட்ட வருமுள் வேலிக்
கல்லென் பாசறைப் பல்சான் றீரே
முரசுமுழங்கு *தானை நு மரசு மோம்புமின்
ஒளிறேந்து மருப்பினுங் களிறும் போற்றுமின்
எனை† நாட் டங்குதும் போரே ‡யனைநாள்

எறியா ரெறிதல் யாவண தெறிந்தோர்
எதிர்சென் றெறிதலுஞ் §செல்லா னதனால்
‡அறிந்தோர் யாரவன் கண்ணிய பொருளே
பலமென் றிகழ்த லோம்புமி னுதுக்காண்
நிலனெளப் பன்ன நில்லாக் குறுநெறி
வண்பரிப் புரவிப் பண்புபா ராட்டி

---

2 - 3. மணஞ்செய்யப்பெறாத கன்னியரின் கூந்தல் ஓராடவராலும் தீண்ட வொண்ணாமையால், பகைவராற் றீண்டமுடியாத முள்வேலிக்கு அஃது உவமை கூறப்பெற்றது.

4. கல்லென்பாசறை - கல்லென்னும் ஓசைபட ஒலிக்கின்ற படைவீடு.

5. "முரசுமுழங்குதானை...மூவர்" புறநா. ௩௫ : 3 - 4, அடிக்.

6. "ஒளிறேந்து மருப்பிற் களிறு" (புறநா. ௩௩௫ : 10 ; நற். உ௮௪ : 9.) 7. எனைநாள் - எத்தனைநாள்.

8 - 9. தன்னை எறியாதாரை எறிவதென்பது எங்குள்ளது ? எதிர்ந்தோரையும் எதிர்த்து எறிதல் செய்யானாகச்செய்தே எறியாரை இவனெறிதல் யாண்டுளது? இல்லை யென்றபடி.

10. அவன் கருதிய காரியத்தை அறிந்தவர் யாவர் ?

11. பலம் - பலராகவுள்ளேம்; புறநா. ௭௩ : 5 - 6; 'வீரரல்லாதார் பலர்திரண்டு ஆர்த்தால் அதற்கு வீரனஞ்சான்' (குறள், 763, பரிமேல்.) என்பதும், "மறுமனத்த னல்லாத மாநலத்த வேந்த, னுறுமனத்த னாகி யொழுகிற் - செறுமனத்தார், பாயிரங் கூறிப் படைதொக்கா லென்

செய்ப, ஆயிரங் காக்கைக்கோர் கல்" (பழ. 165) என்பதும், "தடத்திடைக் காக்கை யொன்றே யாயிரங் கோடி கூகை, இடத்திடை யழுங்கச் சென்றாங் கின்னுயிர் செகுத்த தன்றே" (சீவக. 1927) என்பதும் இவ் வடியின் கருத்தை வலியுறுத்தும்.

13. பரி - நடை; "வளிதொழி லொழிக்கும் வண்பரிப் புரவி" புறநா. ௩௦௪ : 3.

பி - ம். *தானையு மரசும். †நாட்டாகு. ‡யனைநான். ǂசொல்லானதனால். §அறிந்தோராடவன்.



*எல்லிடைப் பட்டதந் தோனே கல்லென
வேந்தூர் யானைக் கல்ல
தேந்துவன் †போலான்ற னிலங்கிலை வேலே.[1]

திணையும் துறையும் அவை.
ஆவூர்மூலங்கிழார். (௩௦௧)

---

14. எல் - இரவு. 16. ஏந்துவன் போலான் - ஏந்தான்.

15 - 6. யானைப்போர்க்கு வேல் உரித்தென்பர்; "மேல்வருங் களிற்றொடு வேறுரந்து", "வேலினட்ட களிறு", "கறையடி யானைக் கல்ல, துறைகழிப் பறியா வேலோன்" (புறநா. ௨௭௪, ௩௦௨, ௩௨௫); "ஒன்றாயினும் பலவாயினு மோரோச்சினு ளறிய, வென்றாயின மதவேழமு முளவோவென வினவிப், பொன்றாழ்வரைப் புலிப்போத்தெனப் புனைதார் மிஞிறார்ப்பச், சென்றானிகல் களிறாயிர மிரியச்சின வேலோன்" சீவக. 2262.

13 - 6. "கரிமேலோன், தொட்டது கழலே கையது வேலே, சுட்டி யதுவுங் களிறே......யானை காமினவன் பிறிதெறி யலனே" இச்செய்யுள் புறத்திரட்டிற் கண்டது.

[1]மு. பொருளின்றியுய்த்த பேராண்பக்கத்தின்பாற் படுமென்பர்; தோல். புறத்திணை. சூ. 8, ந.

பி - ம். *எல்லிடப் பட்டாதந்தோனே. †போலா னினங்கிலே.

---

(கூ0உ) வெடிவேய் கொள்வது போல வோடித்

*தாவு புகளு மாவே பூவே

விளங்கிழை மகளிர் கூந்தற் கொண்ட

நரந்தப் பல்காழ்க் கோதை †சுற்றிய

---

1. வெடிகொள்ளல் - மேல் எழல்.

2. தாவுபு - தாவி. உகளும் - துள்ளும். மா - குதிரை. பூ - பொற் பூக்கள்.

1 - 2. வளைத்துவிட்ட மூங்கில் மேலேவிரைந்தெழுதல், குதிரை ஓடித் தாவிச்செல்லற்கு உவமம்; "விட்ட குதிரை விசைப்பி னன்ன, விசும்புதோய் பசுங்கழைக் குன்ற நாடன்" குறுந். எச.

3. மகளிர் - இங்கே விறலியர்.

2 - 3. பூக்கள் கூந்தலிற் கொள்ளப்பட்டன.

4. நரந்தம் - நாரத்தை மலர்; குறிஞ்சி. 94. காழ் - வடம்.

பி - ம். *தாவ வுகளும். †சுற்றி யையதமை.

ஐதமை பாணி வணர்கோட்டுச் சீறியாழ்க்
*கைவார் நரம்பின் பாணர்க் கொக்கிய
நிரம்பா வியல்பிற் கரம்பைச் சீறூர்
நோக்கினர்ச் செருக்குங் காளை †யூக்கி
‡வேலி னட்ட களிறுபெயர்த் தெண்ணின்
விண்ணிவர் விசும்பின் மீனும்
தண்பெய லுறையு முறையாற் றாவே.

திணை - அது; துறை - குதிரைமறம்.
§வெறிபாடிய காமக்கண்ணியார். (சுoஉ)

---

5. ஐது அமை - அழகிதாக அமைந்த. பாணி - தாளம். வணர் வளைவு. கோடு - மருப்பென்னும் உறுப்பு.

4 - 5. நரந்த மலர்களாலாகிய மாலைசுற்றிய யாழ். யாழின் கோட்டில் மாலையைச் சுற்றுதல் மரபு; "அன்ன மாலையை யாழிடைப் பிணித்தய னுலகம், கன்னி மீட்டலும்" கம்ப. அகலிகை. 6.

6. வார்தல் - எட்டுவகை இசைக்கரணங்களுள் ஒன்று; அது சுட்டுவிரலாற் செய்யப்படும் ஒருதொழிலென்பர் (சிலப். எ : 1, அரும்பத.); நரம்புகளைக் கூடத்தழுவலென்பர் நச்சினார்க்கினியர் (பொருந. 23.) ஒக்கிய - அறுதியாகக் கொடுத்தவை.

5 - 6. "வணர்கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ, உணர்வோர் யாரென் னிடும்பை தீர்க்கெனக், கிளக்கும் பாண" புறநா. கருரு : 1 - 2.

ஓக்கிய (6) சீறூர் (7.)

8. கோபித்துப்பார்த்த பகைவர்களைக் கொல்லுகின்ற வீரன்; "எள்ளுநர்ச் செருக்குங் காளை" (புறநா. ௩0௩ : 3.) ஊக்கி - மேற்கொண்டு.

9. வேலின் அட்டகளிறு : ௩0க : 15-6, அடிக்.

10. விண் - மேகம். இவர்தல் - பரத்தல். மீன் - நட்சத்திரம்.

11. உறை - மழைத்துளி.

10 - 11. மீன்களும் மழைத்துளிகளும் உறையிடப்போதா; புறநா. ௩௪ : 20 - 23, அடிக். "யானைத் தாமருப் பியன்ற வெண்செப், பந்தரத் தலர்ந்த பன்மீ னனைத்துள வனைத்து மாதோ" சீவக. 3048.

பி - ம். *கைகவர் நரம்பின். †யூக்கு. ‡வேலினிட்ட. §வெறிபா பாடிய காமக்கணியார்.



(௩0௩) நிலம்பிறக் கிடுவது *போற்குளம்பு கடையூஉ
உள்ள மொழிக்கும் †கொட்பின் மான்மேல்
எள்ளுநர்ச் செருக்குங் காளை கூர்த்த
‡வெந்திற லெஃக நெஞ்சுவடு விளைப்ப
§ஆட்டிக் காணிய வருமே நெருநை
உரைசால் சிறப்பின் ǂவேந்தர் முன்னர்க்
‖கரைபொரு முந்நீர்த் **திமிலிற் போழ்ந்தவர்
கயந்தலை மடப்பிடி புலம்ப

1. பிறக்கு - பின். கடையூஉ - செலுத்தி; "நிலம்பிறக் கிடுவ போலுங் கொய்சுவற் புரவி" சீவக. 3049.

2. மனத்தின் விசையையும் ஒப்பன்றென்று நீக்குகின்ற கதி விசேடத்தையுடைய குதிரையின்மேல்; "உள்ளம் போல வுற்றுழி யுதவும், புள்ளியற் கலிமா வுடைமை யான" (தோல். கற்பு. சூ .53); "மானுரு வாக நின் மனம்பூட் டினையோ" (அகநா. ௩அச); பகைவருடைய ஊக்கத்தை ஒழித்தற்குக் காரணமான சுழற்சியையுடைய குதிரையென்றலுமாம்.

3 - 4. கூர்த்த எஃகமெனக் கூட்டுக; எஃகம் - வேல்.

5. ஆட்டி - அசைத்து; திரித்தென்றுமாம். காணிய வரும் - காணும் பொருட்டு வருவான். நெருநை - நேற்று.

6. உரைசால் - புகழ் அமைந்த; "உரைசால் சிறப்பி னரைசுவிழை திரு", "உரைசால் சிறப்பின், மன்னன் மாறன்" சிலப். உ : 1, அ : 5 - 6.

7. திமிலின் - தோணிபோல. போழ்ந்து - படையைப் பிளந்து; புறநா. உகக : 3.

8. கயந்தலை - மெல்லிய தலை; "கன்றுடை மடப்பிடிக் கயந்தலை மண்ணிச், சேறுகொண் டாடிய வேறுபடு வயக்களிறு" (அகநா. கஉக); "கயந்தலை மடப்பிடி" அகநா. கசுபு, உ0உ; மலைபடு. 307.

'கய' என்னும் உரிச்சொல் மென்மையை உணர்த்துதற்கு இவ்வடி மேற்கோள்; தோல். உரி. சூ. 26, சே.

பி - ம். *போற்குளங்குடையூ. †கொடைபின் மான. ‡வெங்தெறல். §வாடிக் காணிய, வாட்டிடக்காணிய. ╪வேந்தன், வேந்தர்தா முன்னர்க் கரைபொரு முன்னர். ||கங்கரைபொருமுன்னீர். **திரையிற்.

64

*இலங்குமருப் பியானை யெறிந்த வெற்கே.[1]
திணையும் துறையும் அவை.

எருமைவெளியனார். (௩0௩)

---

9. "இலங்குமருப்பிற் களிறு" மதுரை. 142.

8 - 9. அவ்வரசருடைய பெண்யானைகள் துணையிழப்ப விளங்கு இன்ற கொம்பினையுடைய களிற்றியானைகளைக் கொன்ற என்பொருட்டு; புலம்ப - வருந்தவென்றலுமாம்; "புல்லார் பிடிபுலம்ப" முத். 28.

[1]மு. 'குதிரைநிலை' என்னுந் துறைக்கு மேற்கோள்; தொல். புறத் திணை. சூ. 14, இளம். ; ஷை. ஷை. ஷை. 17, ந.

பி - ம். * இடு மருப்பியானை.

---

(௩0௪) கொடுங்குழை மகளிர் கோதை *சூட்டி
†நடுங்கு ‡பனிக் களைஇயர் நாரரி பருகி
வளிதொழி லொழிக்கும் வண்பரிப் புரவி
பண்ணற்கு விரைதி நீயே நெருநை

---

1. சூட்டி - சூட்ட.

2. குளிர்நீங்க வீரபானமாகிய மதுவைக் குடித்து; மதுவுக்கு வெம்மைசெய்தல் இயல்பு; "வெப்புடைய மட்டுண்டு", "வெங்கட் டொலைச்சியும்", "இன்கடுங் கள்ளின்", "வெங்கட்டேறல்" (புறநா. உ௪ : 5, உ௧ : 15, ௮௰ : 1, ௧௭௰ : 12); "உண்ணமது", "உக்கிராஹுறல்" (பெருங். ௧. 38 : 60, உ : 2: 180); பரி. ௭ : 61 - 2.

3. காற்றைத் தொழிலொழியச் செய்கின்ற வளவிய செலவை யுடைய குதிரை; என்றது, அதனினும் விரைய நடக்கும் குதிரையென்ற படி; "காலியற் புரவி", "வளிநடந் தன்ன வாச்செல லிவுளி", "வெவ்வி சைப் புரவி வீசுவளி யாக" (புறநா. ௧௭௮ : 2, ௧௧௭ : 1, ௩௬௧ : 7); "காற்கடுப் பன்ன கடுஞ்செல லிவுளி", "வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ, மானுரு வாக" (அகநா. உ௨௪, ௩௮௪) ; "காலியக் கன்ன கதழ்பரி" மதுரை. 440.

4. பண்ணற்கு - சமைத்தற்கு. விரைதி - விரைவாய்.

பி - ம். *குடி. †நடுங்குமணி களையார் நாரி பருகி, நடுங்குமணி களையா நாளரிபருகி. ‡பனிக்கசாஅய்.



எம்முற் றப்பியோன் றம்பியொ டொராங்கு
*நாளைச் †செய்குவெ னமரெனக் கூறிப்
‡புன்வயி றருத்தலுஞ் செல்லான் §பன்மான்
கடவு மென்ப பெரிதே யதுகேட்டு
வலம்படு ⹀முரசின் வெல்போர் ||வேந்தன்

இலங்கிரும் பாசறை நடுங்கின்
றிரண்டா காதவன் கூறிய தெனவே.

**திணையும் துறையும் அவை.**

**அரிசில்கிழார்.** (கூ0௪)

---

5. எம்முன் தப்பியோன் தம்பியொடு - என் தமையனைக் கொன்றவனுடைய தம்பியுடன். ஓராங்கு - ஒருபடியாக; "நால்வேறு நனந்தலை யோராங்கு நந்த" பதிற். சுசு : 16.

6. நாளை யான் அமர்செய்து அவனைக் கொல்வேன்.

7. பன்மான் - ஆராய்ந்த குதிரை.

8. கடவும் - செலுத்தும். என்ப: அசை.

7 - 8. பகையை வென்றபின்பே உண்ணுங்கருத்தினனாதலால் இவ்வாறு கூறினர்; "காலை முரச மதிலியம்பக் கண்கனன்று, வேலை விறல் வெய்யோ னோக்குதலும் - மாலை, அடுக மடிசிலென் றம்மதிலு ளிட்டார், தொடுகழலார் மூழை துடுப்பு" (பு. வே. 117) என்பதையும், 'அம் மதிலுள் இட்டார், இதனை அழித்து இன்றுபோய் உண்பேமென்று' என்னும் அதன் விசேடவுரையையும் பார்க்க.

9. வலம்படுமுரசு - வெற்றியுண்டாதற்குக் காரணமாகிய முரசு; "வலம்படு வியன்பணை" (பதிற். கஎ : 5) என்பதும், 'போர்செய்து வருந்தாமற் பகைவர் வெருவியோட முழங்கி அரசனுக்கு வென்றி தன்பாலே படநின்ற முரசம்' என்னும் அதன் உரையும் ஈண்டு அறியற்பாலன.

11. கூறியது - சபதம்; வஞ்சினம்கூறுதல் ஒன்றுமொழிதலென்று கூறப்படுதலும், "வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று" (பதிற். கூ. பதி.) என்பதும் 'இரண்டாகாதவன் கூறியது' என்பது சபதமென்று பொருள் படுதலை வலியுறுத்தும்.

9 - 11. அவன் கூறியது இரண்டாகாதென்று அரசனது பெரிய பாசறை நடுங்கியது.

பி - ம். *நாடனைச். †செய்குவமமரெனக், செய்குவனமரெனக். ‡புன்மயிருகுத்தலுஞ் செய்யான் வன்மான், புன்மையிற். §பண்மாண். ╪முரசில் வெல். ‖வேந்த ரிலங்கிரும்.



(௩0௫) வயலைக் கொடியின் வாடிய *மருங்குல்
உயவ லூர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்
†சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே
ஏணியுஞ் சீப்பு மாற்றி
மாண்வினை யானையு மணி ‡களைந் தனவே.[1]

திணை - வாகை; துறை - பார்ப்பனவாகை.

1. வயலைக்கொடி - பசலைக்கொடி. மருங்குல் - இடை.

2. வருந்துதலையுடைய ஊர்ந்து செல்லுகின்ற நடையினையுடைய இளம்பருவத்து அந்தணன்; "ஒல்லெனீர் ஞாலத் துணர்வோ விழுமிதே, நல்லிசை முச்செந்தீ நான்மறையோன் - செல்லவும், வென்றன்றி மீளா விறல்வேந்தர் வெம்பகை, என்றன்றி மீண்ட திலர்" பு. வே. 172.

தன்மையென்னும் மெய்ப்பாட்டிற்கு இவ்வடி மேற்கோள்; 'தன்மை யாவது - சாதியியல்பு; பார்ப்பார் அரசர் இடையர் குறவரென்றின்னோர் மாட்டு ஒருவரையொருவர் ஒவ்வாமற் கிடக்கும் இயல்பு' தொல். மெய்ப் பாடு. சூ. 12, இளம்.

3. எல்வி - இரவு. நில்லாது புக்கு - வாயில்காவலனுற் சொல்லி விடாதே அரசனிடம் போய்; "அருமறை நாவி னந்தணர்க் காயினும், அடையா வாயிலவ னருங்கடை குறுகி" சிறுபாண். 204 - 5.

4. சொல்லிய சொல்லோ சில : "பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற, சிலசொல்ல றேற்ரு தவர்" குறள், 649.

5. சிப்பு - கதவுக்கு வலியாக உள்வாயிற்படியிலே நிலத்தேவீழ இடும் மரம் ; சிலப் கடு : 215, அடியார். இஃது ஒருவகைத் தாழ்.

6. மாண்வினையானை - மாட்சிமைப்பட்ட தொழிலையுடைய யானை; மாட்சிமையாவது, போரிலே எதிர்த்தாலன்றி மற்றஇடத்து ஒருயிரையும் துன்புறுத்தாமை; "வினைநவில் யானை", "தொழினவில் யானை" (பதிற். அஉ, அச.) மணி - யானையின் இருபக்கத்தும் அணியப்படும் மணி; "மணியிலாக் குஞ்சரம் வேந்தூர்த லின்ன" இன்ன. 14.

[1]மு. அந்தணன்தூது சென்றதற்கும் (தொல். அகத்திணை. சூ. 28, இளம் ; ஷை. ஷை. ஷை. 26, ந.; நம்பி. சூ. 75 ; இ. வி. 443, உரை), தூதுரைகேட்ட அகத்துழிஞையோன்திறம் கண்டோர் கூறியதற்கும் (தொல். புறத்திணை. சூ. 12, ந.) மேற்கோள்.

பி - ம். *மருங்கின், மருங்கினுயவமது வேளாசன். †சொல்லியது சொல்லோ. ‡களைந்தனனே, களந்தனனே.



(ந.Oசா) களிறுபொரக் *கலங்கு †கழன்முள் வேலி
அரிதுண் கூவ லங்குடிச் சீறூர்
ஒலிமென் கூந்த லொண்ணுத லரிவை
நடுகற் கைதொழுது பரவு மொடியாது
விருந்தெதிர் பெறுகதில் யானே யென்னையும்

ஓ..................வேந்தனொடு

நாடுதரு விழுப்பகை யெய்துக வெனவே.[1]

திணை - அது; துறை - மூதின்முல்லை.

அள்ளூர்நன்முல்லையார். (௩0௬)

---

1. கழல் - கழற்கொடி. முள்வேலி: பெரும்பாண். 154, 184 - 5; முல்லை. 27. 2. கூவல் - கிணறு.

1 - 2. யானை உழக்குதலாற் கலங்கிய கூவல்; முள்ளையுடைய கழற்கொடியாலாகிய வேலியையுடைய சீறூர்.

3. தழைத்த மெல்லிய கூந்தலையும் ஒள்ளிய நெற்றியையும் உடைய அரிவை; "ஒலிமென் கூந்தல்" புறநா. ௧௪௬: 9; குறுந். ௨௨௫.

4. நடுகல்லைத் தொழுதல் மாபு; "அடும்புகழ் பாடி யழுதழுது நோனு, இடும்பையுள் வைகிற் றிருந்த - கடும்பொடு, கைவண் குருசில்கற் கைதொழூஉச் செல்பாண, தெய்வமாய் நின்றான் றிசைக்கு" (பு. வெ. 252.) பரவும் - துதிப்பாள். ஒடியாது - ஒழியாது; தவிராது.

5. யான் விருந்தைப் பெறுவேனாக; இல், விழைவின்கண் வந்தது. என் ஐயும் - என் கணவனும்.

7. பகை எய்துக வென்று வேண்டியது, தன்கணவன் நிச்சயமாக வெல்லுவானென்று துணிந்து; புறநா. ௧௭௨: 11, உரை.

எனப் (7) பரவுமென்க (4.)

[1]இது கண்டோர் கூற்று.

பி - ம். *கலங்கி. †கன்முன்.

(௬௦எ) ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
குன்றத் தன்ன களிற்றொடு பட்டோன்

1. மு. புறநா. உ௬௫ : 17; குறுந். கஎ௬; பற்றுக்கோடாகிய என் தலைவன் எங்கே உள்ளானோ?

2. பட்டோனென்பது சுட்டுப்பொருளது.



...வம்பலன் போலத் தோன்றுமுதுக்காண்
வேனல் வரியணில் வாலத் தன்ன
கான வூகின் கழன்றுகு முதுவீ
அரியல் வான்குழற் சுரியற் றங்க
நீரும் புல்லு †மீயா துமணர்
யாருமி லொருசிறை முடத்தொடு துறந்த
வாழா வான்பக டேய்ப்பத் ‡தெறுவர்
§பேருயிர் கொள்ளு ǂமாதோ வதுகண்டு
வெஞ்சின யானை வேந்தனு மிக்களத்
தெஞ்சலிற் சிறந்தது பிறிதொன் றில்லெனப்
பண்கொளற் கருமை நோக்கி
நெஞ்சற வீழ்ந்த புரைமை யோனே.[1]

திணை - தும்பை; துறை - களிற்றுடனிலை.

........................

(௬௦எ)

3. வம்பலன் - அயலான். உதுக்காண் - அவ்விடத்தே பார்; "எவன்விரைந்து சேறி யுதுக்காண்" கலி. கOஅ.

4. வேனல் - வேனிற்காலம். வரியணில் - முதுகில் மூன்று வரிகளையுடைய அணிற்பிள்ளை; "மூவரி யணில்" (தொல். மரபு. சூ. 6.) வாலம் - வால்.

5. ஊகு - ஊகம்புல். வீ - பூ; எழுவாய்.

4 - 5. அணில்வால் ஊகம்புல்விற்கு உவமை.

7. உமணர் - உப்புவாணிகர்.

8. யாருமில் ஒருசிறை - ஒருவரும் இல்லாத ஒருபக்கத்தில்.

9. பகடு - எருது. தெறுவர் - பகைவர்.

10. பெரிய உயிர்களைக் கவருகின்றான்.

பட்டோன் (2) பேருயிர் கொள்ளும் (10.)

[1]மு. தும்பைத்திணைத்துறைகளுள், 'களிறெறிந் தெதிர்ந்தோர்பாடு' என்றதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 14, இளம்.

பி - ம். *வம்பல போலத். †மீயா துமன்ற. ‡தெறுவவர், தெறுவா. §பேருயிர்க். ‡‡மாதோவ......கெகள.



(௩Oஅ) பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்
நன்மை நிறைந்த நயவரு பாண

சீறூர் மன்னன் சிறியிலை யெஃகம்
வேந்தூர் யானை யேந்துமுகத் ததுவே
வேந்துடன் றெறிந்த *வேலே யென்னை
சாந்தா ரகல முளங்கழிந் தன்றே
உளங்கழி சுடர்ப்படை யேந்திநம் †பெருவிறல்
ஓச்சினன் றுரந்த காலை ‡மற்றவன்
புன்றலை மடப்பிடி நாணக்
குஞ்சர மெல்லாம் புறக்கொடுத் தனவே.[1]

**திணை - வாகை; துறை - மூதின்முல்லை.**

**கோவூர்கிழார்.** (௩0அ)

---

1 - 2. "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின், இன்குரற் சீறி யாழ்" (சிறுபாண். 34 - 5); "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பிற், றொடையமை கேள்வி" (பெரும்பாண். 15 - 6); "பொன்வார்ந் தனயாழி னரம்புளர்ந்து" பாகவதம், க0. கோவத்தன. 39.

1 - 3. பொற்கம்பியினை ஒத்த முறுக்கு அடங்கின நரம்பினையும், மின்னலை ஒத்த தோலினையும் மிஞிறென்னும் வண்டுச்சாதியின் குரல் போன்ற ஓசையையுமுடைய சிறிய யாழ்க்கல்வியின் நன்மை நிறைந்த விருப்பம்வந்த பாண !

4. சீறூர் மன்னன் - குறுநிலமன்னன். எஃகம் - வேல்; எழுவாய்.

5. வேந்தன் ஊருகின்ற. ஏந்துமுகம் - எடுத்தமுகம்.

4 - 5. எஃகம் முகத்தது: "வேந்தூர் யானைக் கல்ல, தேந்துவன் போலான்ற னிலங்கிலை வேலே" புறநா. ௩0௧ : 15 - 6.

6 - 7. அரசன் கோபித்தெறிந்த வேல் என் தலைவனது சந்தனம்

பூசிய மார்பினுள்ளே சென்றது; புறநா. சுரு : 9.

8 - 9. நம் பெருவிறல், தன் மார்பின் உட்சென்ற அவ்வொளி பொருந்திய வேற்படையைப் பறித்து எடுத்துச் செலுத்தி ஓட்டிய காலத்து; பெருவிறல் - மிக்க வலியை யுடையவன்.

9 - 11. பிடி - பெண்யானை; அது வேந்தனூர்தி. அவ்விடத்துப் புல்லிய தலையையுடைய பிடி நாணக் களிறுகளெல்லாம் புறங்கொடுத்து ஓடின.

[1]மு. ஆரமரோட்டலென்னுந் துறைக்கு மேற்கோள் காட்டி, 'இது சீறூர் மன்னன் வேந்தனைப் புறங் கண்டது' என்பர்; தொல். புறத்திணை. சூ. 5, ந.

பி - ம். *வேலேயன்னே. †பெருவ...வாபுன்றலைமடப்பிடி. ‡மற்றவர்.



(நடOசு) இரும்பு*முகஞ் சிதைய நூறி யொன்னார்
இருஞ்சமங் கடந்த லேஞேர்க்கு மெளிதே
நல்லரா வுறையும் புற்றம் போலவும்
கொல்லேறு திரிதரு மன்றம் போல்வும்
ஆற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை
†உளனென வெரூஉ மோரொளி
வலனுயர் நெடுவே ‡லென்னைகண் ணதுவே.[1]

திணை - தும்பை; துறை - தானைநிலை.

மதுரையிளங்கண்ணிக் கௌசிகனார்.

1 - 2. பகைவருடைய படைக்கலங்களின் முகஞ்சிதையும்படி

தங்கள் படைக்கலங்களால் அவருடையபோரை வெல்லுதல் மற்றவர்க்கும் எளிதாகிய காரியம். இரும்பு : படைக்கலத்துக்கு ஆகுபெயர். ஏனோர் : ஏனையோ ரென்பதன் விகாரம்.

3. நல்லரா - நாகம்; "நாம நல்லரா" (அகநா. எஉ) எனச் செய்யுளிலும், 'நல்ல பாம்பு' என வழக்கிலும் உண்மை அறிக. இஃது உறையுமிடத்தைப் பிறர் அஞ்சி யணுகாரென்பது, "வரிமிடற், றரவுறை புற்றத் தற்றே நாளும், புரவலர் புன்க ணோக்கா திரவலர்க், கருகா தீயும் வண்மை, உரைசா னெடுந்தகை யோம்பு மூரே" (புறநா. ஙஉக : 5 - 9) என்பதனாலும் விளங்கும்,

4. கொல்லுகின்ற இடபம் திரிகின்ற மன்றம்; மன்றம் - பசுக்கள் தங்கும் பொதுவிடம்; "கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும், புல்லாளே யாய மகள்" கலி. கOரு.

5 - 6. குணமடியாகத் தோன்றிய வினைக்குறிப்புச்சொற்கள் பல விகற்பப்பட்டுவருமென்று கூறி, "மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறையுளன்" என்பதை ஒருவகைக்கு மேற்கோளாகக் காட்டினர்; நன்.வி.சூ.321.

6. ஒளி - பிறர்க்கு அச்சமுண்டாதற்குக் காரணமான நன்மதிப்பு; ஒளியென்பதற்குப் பரிமேலழகர் (குறள், 698) எழுதிய விசேடக்குறிப்பும், "உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" (சீவக. 248) என்பதும் இங்கே அறியற்பாலன.

7. வென்றோர் வேலை யுயர்த்தல் மரபு; "வென்று......உயர்கநும் வேலே" (புறநா. ௬அ); "வெங்களத்து வேலுயர்த்த வேந்து" பு. வெ. 199.

5 - 7. மாற்றுதற்கரிய வலியொடு பகைவர் பாசறைக்கண்ணே இவன் இருக்கின்றானென்று வெருவுதற்குக் காரணமாகிய ஒப்பற்ற ஒளி, வெற்றியால் உயர்த்தும் நெடிய வேற்படையை யுடைய என் தலைவனிடத் தேயுள்ளது. 6 - 7. ஒளி என்னைகண்ணது.

[1]மு. "பெரும்பகைதாங்கும் வேலினானும்" என்பதனுரையில், சான்றோர் பெரும்பாலும் வேற்படையையே சிறப்பித்துக் கூறுவரென்றுகூறி, இதனை மேற்கோள் காட்டினர்; தொல். புறத்திணை. சூ. 21, ந.

பி - ம். *முகளு...யொன். †உளனேவரூஉம், உளனெனவெரூஉம். ‡லென்னைக்கண, லென்னைக் கண்ணதுவே.



(௩௱௰) பால்கொண்டு மடுப்பவு முண்ணா னாகலிற்
செறாஅ தோச்சிய சிறுகோ லஞ்சியொ
டுயவொடு வருந்து மன்னே யினியே
புகர்நிறங் கொண்ட களிறட் டானான்
முன்னாள் வீழ்ந்த வுரவோர் மகனே
உன்னில னென்னும் புண்ணொன் றம்பு
மானுளை யன்ன குடுமித்
தோன்மிசைக் கிடந்த *புல்லண லோனே.

திணையும் துறையும் அவை.
பொன்முடியார். (௩௱௰)

---

1. மடுப்ப - உண்பிக்க. 2. அஞ்சி-ஒருகுறுநிலமன்னன். ஒடு-ஆல்.
1 - 2. "பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால், விரிகதிர்ப் பொற்

கலத் தொருகை யேந்திப், புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோ, லுண் ணென் றோக்குபு புடைப்ப" நற். ௧௧௦ : 1 - 4.

3. உயவு - கவலை. இனி - இப்பொழுது.

4. ஆனுன் - அமையானாகி. 5. முன்னாள் - முதல்நாள்.

6. புண்ணில் ஒன்றிய அம்பை யான் உன்னிலனென்பான்.

7. புறநா. ௨௭௩ : 3; ஐங்குறு. ௨௦௨.

8. தோல் - யானை; கேடகமுமாம். அணல் - தாடி; "மையணற் காளை" புறநா. அ௩.

பி - ம். *புல்லனலோனே.

---

(௩௧௧) களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை

---

1. களர் - உவர்நிலம். கூவல் - கிணறு; "பூவற் படுவிற் கூவற் றோண்டிய" புறநா. ௩௧௯.

2. புலைத்தி - வண்ணாத்தி; "உடையோர் பான்மையிற் பெருங்கை தூவா, அறனில் புலைத்தி" (நற். ௯௦); "நலத்தகைப் புலைத்தி பசை தோய்த் தெடுத்துத், தலைப்புடை போக்கித் தண்கயத் திட்ட, நீரிற்பிரியா" (குறுந். ௩௩௦); "ஆடைகொண் டொலிக்குநின் புலைத்திகாட் டென்றாளோ" (கலி. ௭௨); "பசைகொன் மெல்விரற் பெருந்தோட் புலைத்தி", "பசைவிரற் புலைத்தி நெடிதுபிசைந் தூட்டிய, பூந்துகில்" (அகநா. ௩௪ :
65

தாதெரு *மறுகின் மாசுண விருந்து
பலர்குறை செய்த மலர்தா ரண்ணற்
கொருவரு மில்லை மாதோ செருவத்துச்
சிறப்புடைச் செங்கண் புகையவோர்
தோல்கொண்டு மறைக்குஞ் †சால்புடை யோனே.[1]

திணை - அது; துறை - பாண்பாட்டு.

ஔவையார். (௩௧௧)

---

11, ௩௮௭: 6 - 7.) தூவெள் ளறுவை - மிக வெள்ளிய ஆடை; "தூவெள் ளறுவை போர்ப்பித் திலதே" புறநா. ௨௮௯ : 5.

3. தாதெருமறுகு - எருப்பொடிகளையுடைய வீதி; "தாதெரு மறுகிற் பாசறை" புறநா. ௩௩ : 11.

2 - 3. அறுவை அழுக்குண்ணும்படி இருந்து. 4. குறை-காரியம்.

5. உதவி செய்தற்கு ஒருவருமில்லை. 7. தோல் - கேடகம்.

[1] தலைவனது ஆற்றல் கூறியதனாற் பாண்பாட்டாயிற்று.

பி - ம். *மறுகிறன. †சால்புடை யோரே.

---

(௩௧௨) ஈன்றுபுறந் தருத லென்றலைக் கடனே
சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே
*வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
†நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே

1. பெற்றுப்பாதுகாத்தல் என்னிடத்திலுள்ள கடமையாம்; "ஈன்றுபுறந் தந்த வெம்மு மூள்ளாள்" (அகநா. ௬௫.) தலைக்கடன் - முதன்மையான கடனுமாம்.

2. தன் குலத்துக்குரிய படைக்கலப்பயிற்சியாகிய கல்வி அதற்குரிய அறிவு அதற்குரிய செய்கைகள் ஆகிய இவற்றால் நிறைந்தவனாகச் செய்தல் தகப்பனுக்குக் கடமையாம்.

"உயர்மிக்க தந்தை" என்பதற்கு, 'பிள்ளை உயர்ச்சிமிகுதற்குக் காரணமான தந்தை' என்று பொருள்கூறி இவ்வடியை மேற்கோள் காட்டினர்; சீவக. 473, ந.

3. படைக்கலத்தைத் திருத்தமாகச் செய்துகொடுத்தல் கொல்லனுக்குக் கடமையாகும்; வடித்தல் - கூரிதாக்கலுமாம். 'கொல்லன்' என்பதற்கு வேல்வடிக்குங் கொல்லனென இவ்வடியை உட்கொண்டு அடியார்க்குநல்லார் பொருளெழுதியிருத்தல் ஈண்டு அறியற்பாலது; சிலப். கஉ : "இளமா வெயிற்றி".

பி - ம். *வேலடித்து. †தண்ணடை, ந......னணடை.



ஒளிறு *வா ளருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.[1]

திணை - வாகை; துறை - மூதின் முல்லை.
பொன்முடியார். (௩கஉ)

5 - 6. "செல்சம முருக்கி" (முருகு. 99); "பொருந்தா மன்ன ரருஞ்சம முருக்கி, யக்களத் தொழிதல் செல்லாய் மிக்க, புகர்முகக் குஞ்சர மெறிந்த வெஃகம், அதன்முகத் தொழிய நீபோந் தனையே" தகடூர்யாத்திரை, "வாதுவல்".

[1]மு. தொல். புறத்திணை. சூ. 24, ந. மேற்.

பி - ம். *வாள்வெஞ்சம.

---

(௩௧௩) அத்த நண்ணிய நாடுகெழு பெருவிறல்
கைப்பொருள் யாதொன்று மிலனே நச்சிக்
காணிய சென்ற விரவன் மாக்கள்
*களிறொடு நெடுந்தேர் வேண்டினுங் †கடவ
உப்பொய் சாகாட் டுமணர் காட்ட
கழிமுரி குன்றத் தற்றே
எள்ளமை வின்றவ னுள்ளிய பொருளே.[1]

திணை - அது; துறை - வல்லாண்முல்லை.
மாங்குடிகிழார். (௩௧௩)

---

1. அத்தம் - அரிய வழி. பெருவிறல் - தலைவன்.
2. நச்சி - விரும்பி. 3. காணிய - காண்பதற்கு.
4. கலி. ௬0 : 15 - 7; கடவ - ஈதற்குரியன.
5. உப்பைக் கொண்டுசெலுத்துகின்ற வண்டிகளையுடைய உப்பு வாணிகர்; ஒய்தல் - செலுத்துதல்; "உமணர், உப்பொ யொழுகை யெண்ணுப மாதோ" புறநா. ௧௧௬ : 7 - 8.

2 - 6. "ஒன்னார், ஆரெயி லவர்கட் டாகவு நுமதெனப், பாண்கட

னிறுக்கும் வள்ளியோய்" (புறநா. உ௱ரு: 9 - 11), "கிளைபொருளில் லான் கொடையே கொடைப்பயன்" (நாலடி. 65) என்பவற்றை இவ் வடிகளின் பொருள் நினைப்பிக்கின்றது.

7. அவன் கருதியபொருள் இகழற்பாலதன்று; எள்ளுதல் - இகழுதல்.

[1]மு. 'வேந்தன் சீர்சால் சிறப்பெடுத் துரைத்தல்' (தொல். புறத் திணை. சூ. 5, ந.) என்பதற்கு, 'வேந்தற்குரிய புகழமைந்த தலைமைகளை ஒருவற்குரியவாக அவன் படையாளரும் பிறரும் கூறல்' என்று பொருள்

பி - ம். *களிறொடு கடுந்தேர். †கடல, கடவு.



கூறி, இதனை மேற்கோள் காட்டி, இது படையாளர் கூற்றென்றும், இதற்கு முடிவேந்தன் சிறப்பெடுத்துரைத்தலென்று கூறின் அது பொது வியலிற் கூறலாகாதென்றுணர்கவென்றும் கூறுவர்.

---

(௩௱கச) மனைக்குவிளக் காகிய வாணுதல் கணவன்
முனைக்குவரம் பாகிய வென்வேல் நெடுந்தகை
நடுகற் பிறங்கிய வுவலிடு பறந்தலைப்
புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்
குடியு மன்னுந் தானே கொடியெடுத்து
*நிறையழிந் தெழுதரு தானைக்குச்
சிறையுந் தானேதன் னிறைவிழு முறினே.

திணையும் துறையும் அவை.
ஐயூர் முடவனார். (௩௧௪)

1. "மனைக்கு விளக்க மடவாள்" நான்மணி. 104.

2. முனை - போர். வென் - வெற்றி.

3. நடுகல் பிறங்கிய பறந்தலை, உவலிடு பறந்தலையெனக் கூட்டுக; உவலிடு - தழைகளைப் பெய்த; பறந்தலை - பாழ்பட்ட இடம்.

4. புல்லிய கொட்டையையுடைய நெல்லி. வன்புலம் - குறிஞ்சியும் முல்லையும்.

5. குடிமக்களுளொருவனும் தானே; மன், உம்: அசைநிலை.

6. நிறை-நிறுத்தப்படுதல்; "நிறையருந் தானை" சிலப். ௨௫ : 178.

7. சிறை - காவல். இறைவிழுமுறின் - அரசன் துன்பமுற்றால். "வேந்துவிழு முறவே" புறநா. ௩௧௬ : 12.

பி - ம். *நிறையறிந் தெழுந்தரும், நிறையறிந் தெழுதரு.

---

(௩௧௫) உடைய ளாயி னுண்ணவும் வல்லன்
கடவர் மீது மிரப்போர்க் கீயும்
மடவர் மகிழ்துணை நெடுமா னஞ்சி

---

3. மடவர் - அறிவில்லார்; புறநா. ௧௦௬ ; 4. நெடுமானஞ்சி - ஒரு தலைவன்.

2 - 3. கடவர் - படைவீரர் முதலியோர். மீதும் - மேற்பட்டும். ஈயும் அஞ்சி. 'மடவர் மகிழ்துணை' என்பது, "பாணரொக்கல்" (திருச்சிற். 400) என்பது போல்வது.

இல்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்
கான்றுபடு கனையெரி போலத்
தோன்றவும் வல்லன்றான் றோன்றுங் காலே.

திணையும் துறையும் அவை.

நெடுமானஞ்சியை *ஔவையார். (ருகடு)

---

4 - 5. அவன் வீட்டின் இறப்பிற் செருகப்பட்ட தீக்கடைகோலைப் போலத் தன்வலி வெளிப்பட வேண்டாத காலத்து அடங்கியிருக்கவும் வல்லன்.

5 - 7. ஞெலிகோலாலே கக்கப்பட்டுத் தோன்றுகின்ற காட்டுத் தீயைப்போல வெளிப்படத் தோன்றவேண்டிய காலத்துத் தோன்றவும் வல்லன்.

பி - ம். *ஔவையாரால்.

---

ருகசு) கள்ளின் வாழ்த்திக் கள்ளின் *வாழ்த்திக்
காட்டொடு மிடைந்த சீயா முன்றில்

நாட்செருக் †கனந்தர்த் துஞ்சு வோனே
அவனெம் ‡மிறைவன் யாமவன் பாணர்
நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்தன்
இரும்புடைப் பழவாள் வைத்தன வின்றிக்

---

1\. கள்ளினை வாழ்த்தி; புறநா. உகஎ : 6.

2\. சீத்தல் - தூத்தல்; பெருக்கல்; "மந்தி சீக்கு மணங்குடை முன்றிவில்" (புறநா. உசஎ : 4); "மந்தி சீக்கு மாதுஞ்சு முன்றில்" பெரும்பாண். 497.

3\. நாட்செருக்கு அனந்தர் - விடியற்காலத்துக் கள்ளைக் குடித்ததால்.

1 - 4. காட்டு - செத்தை; "துடைப்பர் துகட்காட்டுப் புல்லிதழ்", "காட்டுக் களைந்து" (ஆசார. 45 - 6.) ஒடு : அசை. தூவாத முன்வாயிலினிடத்தே தானுண்ட கள்ளைவாழ்த்தி நாட்கால அனந்தரால் துயில்வோன்; "முன்றிற்கிடந்த பெருங்களி யாளர்" (புறநா. ௬கஎ : 2.) தூங்குவோனாகிய அவனே எம் தலைவன்.

5 - 6. நேற்றுவந்த விருந்தினரை உபசரித்தற்காகத் தன்பழைய வாட்படையை ஈடாகவைத்தான். இன்று - இன்றைத்தினம்.

பி - ம்.*வாழ்த்திகள்ளின்...தசியா. †களந்தரத்துஞ்சு. ‡மிறையவன்.



கருங்கோட்டுச் சீறியாழ் பணைய மிதுகொண்
*டீவதி லாள னென்னாது நீயும்
†வள்ளி மருங்குல் வயங்கிழை யணியக்

கள்ளுடைக் கலத்தேம் யாமகிழ் தூங்கச்
‡சென்றுவாய் சிவந்துமேல் வருக
சிறுகண் யானை வேந்துவிழு முறவே.

திணையும் துறையும் அவை.

மதுரைக்கள்ளிற் §கடையந்தன் வெண்ணாகனார். (௩௧௬)

---

7. பணைபம் - ஈடு. 8. ஈயாதவனென்று கருதாமல் நீயும்.

9. பூங்கொடிபோன்ற இடையையுடைய நின் விறலி விளங்கிய அணிகலத்தை அணியவும்; வள்ளி - பூங்கொடி.

[1]ழ. 'மறவன் ஆரமரோட்டல் கூறியது' என்பர்; தொல். புறத்திணை. சூ. 5, ந.

பி - ம். *டிதவிலாளன். †வள்ளியலகு விளங்கிழை. ‡சென்றுநாசி வந்து மேவருசிறுகண், செறுவர்சிவந்து, செறுநர்சிவந்து. §கடையத்தனார் வெண்ணாகனார்.

---

(௩௧௭) வெவ்வேல்.............நது
முன்றிற் கிடந்த பெருங்களி யாளற்
கதனுண் டாயினும் பாயுண் டாயினும்
யாதுண் டாயினுங் கொடுமின் வல்லே
வேட்கை மீளப..............

---

2. முன்வாயிலிற் படுத்துக்கிடந்த மிக்க களிப்பினையுடையானுக்கு.

3. அதள் - தோல். இதிற் சிலசாதியார் படுத்தல் இயல்பு; அது, "மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி" (பெரும்பாண். 89), "உழைய தட்பள்ளி, உவலைக் கண்ணி வன்சொ லிளைஞர்" (மதுரை. 310 - 11), "வரியதட் படுத்த சேக்கைத் தெரியிழைத், தேனூறு கதுப்பிற் கொடிச்சியர் தந்தை" (அகநா. ருஅ: 4 - 5), "சீறூர் மரையத ளிற்றங்கு கங்குற் சிறுதுயிலே" (திருச்சிற். 398) என்பவற்றாலும் அறியலாகும்.

4. வல்லே - விரைவாக.



..................கு மெமக்கும் பிறர்க்கும்

யார்க்கு மீய்ந்து *துயிலேற் பினனே.

திணையும் துறையும் அவை.

†வேம்பற்றூர்க் குமரனூர். (ருகஎ)

---

7. துயிலேற்பினன் - துயிலேற்றலையுடையான். ஆதலால் அக்களியாளனுக்கு யாதுண்டாயினும் வல்லே கொடுமினென்க.

பி - ம். *துயலேற்பினனே. †வேட்பத்தூர்க்குமரன்.

---

(ருகஅ) கொய்யடகு வாடத் தருவிற குணங்க

மயிலஞ் சாயன் மாஅ யோளொடு
பசித்தன் றம்ம பெருந்தகை யூரே
மனையுறை குரீஇக் கறை*யணற் சேவல்
பாணர் †நரம்பின் சுகிரொடு வயமான்
‡குரற்செய் பீலியி னிழைத்த குடம்பைப்
பெருஞ் §செய் நெல்லி னரிசி யார்ந்துதன்
புன்புறப் பெடையொடு வதியும்

---

1. கொய்த இலைக்கறிகள் வாடவும் கொண்டுவந்த விறகு உணங்கவும்.

2. மாஅயோள் - மாமை நிறத்தினையுடையவள்; மனைவி. மாமை - அழகிய நிறம்; "மாமைக் கவினே" ஐங்குறு. ௩௫, ௧0௩, ௧௩௪.

3. பசித்தன்று - பசித்தது. ஊர் பசித்தது.

4. கழுத்திற் கறுப்பினையுடைய ஆண்குருவி; "உள்ளிறைக் குரீஇக் காரணற் சேவல்" நற். ௧௮௧.

5. வயமான் - சிங்கம். 6. குடம்பை - கூடு.

7. நெல்லின் அரிசி - நெல்லொடு கூடிய அரிசி. ஆர்ந்து - உண்டு.

8. வாடிய ஆம்பற்பூவைப்போன்ற சிறகுடைமையாற் புன்புறப் பெடை யென்றார்; "புன்புறப் புறவின் கணநிரை" பதிற். ௩௬ : 11.

4 - 8. "ஆம்பற் பூவின் சாம்ப லன்ன, கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ, முன்றி லுணங்கல் மாந்தி மன்றத், தெருவி னுண்டாது குடைவன வாடி, இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்" குறுந். ௪௬.

பி - ம். *யணற செலலப், பாண. †நரம்பிசைகீரொடு. ‡குரசை பிலியினிளமை மூத்தகுடம்பை, குரசெய்பீலியினிமைமூத்த, பூத்த. §செய்செல்லின்.



யாணர்த் தாகும் வேந்துவிழு முறினே.

திணையும் துறையும் அவை.

பெருங்குன்றூர்கிழார். (௩௧௮)

---

9. யாணர்த்து - புதுவருவாயினையுடையது. வேந்து - பகை வேந்தன். விழுமுறின்=விழுமமுறின் - துன்பமுற்றால்; "தன்னிறை விழுமுறினே" புறநா. ௩௧௪ : 7.

---

(௩௧௯) பூவற் படுவிற் கூவற் *றோண்டிய
செங்கட் சின்னீர் பெய்த சீறில்
முன்றி லிருந்த முதுவாய்ச் சாடி.
†யாங்கஃ துண்டென வறிது ‡மாசின்று
படலை முன்றிற் சிறுதினை யுணங்கல்
||புறவு மிதலு ‡மறவு முண்கெனப்
பெய்தற் கெல்லின்று பொழுதே யதனால்

முயல்சுட்ட வாயினுந் தருகுவேம் §புகுதந்
**தீங்கிருந் திமோ முதுவாய்ப் பாண

---

1. பூவல் - செம்மண்; "தருமணற் ஞெழப்பெய் தில்பூவலூட்டி" (கலி. ககச : 12); "புனைமா ணிஞ்சி பூவ லூட்டி" (அகநா. ககூ : 3); "பூவலங் குன்றம்" (களவழி. 12.) படு - மடு. தோண்டிய - தோண்டுதலால் உண்டாகிய; "களர்ப்படு கூவற் றோண்டி" புறநா. ருகக : 1.

'பூவல் - செம்மண்; பூவற் படுவிற் கூவற் றோண்டிய வென்றூர் புறத்தினும்' சிலப். கசு : 3 - 6, அடியார்.

2 - 3. பெய்த சாடி. 4. அந்நீர் மாசில்லாதது.

5. படலை - தழை; படலுமாம். உணங்கல் தினை - உலர்ந்த தினை.

6. இதல் - ஒருவகைப் பறவை; "இதல்கவர்ந் துண்டென" (புறநா. ருஉ0 : 11;) "இதன்முட் செந்நனை, நெருங்குகுலைப் பிடவம்" (அகநா. உரு: 3.) அறவும் - மிகவும்.

7. பொழுது எல்லின்று - சூரியன் ஒளிமழுங்கியது; "எகுதி மடந்தை யெல்லின்று பொழுதே" நற். உசுச.

9. இருந்திமோ - இரு. முது - பேரறிவு; "முதுவா யிரவல" புறநா. சஅ, கஅ0; பதிற். சுசு.

பி - ம். *ஞெடிய. †யாகஃடுண்டென, யாறுஃடுண. ‡மாகின்று. ‖புறவுமீதலு. ╪மறவுமுணடெனப். §புகுநீங்கிரு. **ஈங்கிருந்திமே. இருந்திரேமுது.



கொடுங்கோட் டாமா னடுங்குதலைக் குழவி

புன்றலைச் சிறாஅர் கன்றெனப் பூட்டும்
சீறூர் மன்ன னெருநை ஞாங்கர்
வேந்துவிடு தொழிலொடு சென்றனன் வந்துநின்
பாடினி மாலை யணிய
வாடாத் தாமரை சூட்டுவ னினக்கே.

**திணையும் துறையும் அவை.**

**ஆலங்குடி வங்கனார்.** (௩௧௯)

---

10. ஆமான்கன்றை. 11. புன்றலை - சிவந்த தலை.
12. மன்னன்: எழுவாய். நெருநை ஞாங்கர் - நேற்று.
13. பகைமேற் சென்றனன். 14. பாடினி - பாணிச்சி.
15. வாடாத்தாமரை - பொற்றாமரைப்பூ; "எரியகைந் தன்ன வேடி றாமரை, சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி" (பொருந. 159 - 60); "பைம்பொற் றாமரை பாணர்ச் சூட்டி" பதிற். ௪௮.
14 - 5. புறநா. ௧௧ : 11 - 7, அடிக்.

---

(௩௨௦) முன்றின் முஞ்ஞையொடு முசுண்டை பம்பிப்
பந்தர் வேண்டாப் பலர்தூங்கு நீழற்
கைம்மான் வேட்டுவன் கனைதுயின் மடிந்தெனப்
பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்
தீர்தொழிற் றனிக்கலை *திளைத்துவிளை யாட

1. முஞ்ஞை - முன்னை; "தாளிமுத வீடிய சிறுநறு முஞ்ஞை, முயல்வந்து கறிக்கு முன்றில்" (புறநா. ௩௨௮ : 14 - 5); "முன்றிலாடு முஞ்ஞை மூதிலை கறிக்கும்" (தொல். செய். சூ. 31, பேர். மேற்.) முசுண்டை - முசுட்டைக்கொடி. டம்பி - பாவி.

3. கைம்மான் வேட்டுவன் - யானைவேட்டையாடுபவன்; "யானை வேட்டுவன் யானையும் பெறுமே" (புறநா. ௨௧௪ : 4.) கனை - மிகுதி. துயில்மடிந்தென - தூங்க.

4. பார்வை - பார்வை மிருகம்; மிருகங்களை வேட்டையில் அகப்படுத்துவதற்காக வளர்த்துப் பழக்கஞ்செய்யப்படுவது; பெரிய. கண்ணப்ப. 3. பிணையை.

5. தொழில் தீர்ந்த ஆண்மான்.

பி - ம். *இனைத்துவிளையாட்.

66



இன்புறு *புணர்நிலை கண்ட மனையோள்
கணவ னெழுதலு மஞ்சிக் கலையே
பிணைவயிற் றீர்தலு மஞ்சி யாவதும்
இல்வழங் காமையிற் கல்லென வொலித்து
மானதட் பெய்த வுணங்குதினை வல்சி
கானக் கோழியோ டிதல்கவர்ந் துண்டென

ஆர நெருப்பி னார றுறத்
தடிவார்ந் திட்ட முழுவள் ளூரம்
இரும்பே ரொக்கலொ டொருங்கினி தருந்தித்
தங்கினை சென்மோ பாண தங்காது
வேந்துதரு விழுக்கூழ் பரிசிலர்க் கென்றும்
அருகா தீயும் வண்மை
†உரைசா னெடுந்தகை யோம்பு மூரே.

திணையும் துறையும் அவை.
வீரை வெளியனார். (௬உ0)

---

6. மான்களின் சேர்க்கையை.

6 - 9. கணவன் எழுதற்கும் கலை பிணையினின்றுந் தீர்தற்கும் அஞ்சி மனையோள் புடைபெயர்ந்து நடவாமையால். ஒலித்தல், கானக்கோழி முதலியவற்றின் ஒருழில்.

10. மான்றோலில் உலர்த்திய தினையாகிய உணவை.

11. இதல் - ஒருவகைப்பறவை; புறநா. ௬கக : 6, அடிக்.

12. ஆரம் - சந்தனம். ஆரல் - ஒருவகைமீன்.

13. தடிவு - தடிதல்; அறுத்தல்; தடி - துண்டமுமாம். வள்ளூரம்- இறைச்சி; "முழூஉவள் ளூரம்" புறநா. உகக : 2.

14. கரிய பெரிய சுற்றத்தாருடன் ஒருங்குண்டு. 15. தங்கிச்செல்.

16. கூழ் - பொருள்; "படைகுடி கூழமைச்சு" குறள், 381.

18. உரை - புகழ். ஊர்க்குச் (18) செல் (15.)

பி - ம். *புணராநிலை. †உரைசொல்.

(௩உக) *பொறிப்புறப் பூழின் போர்வல் †சேவல்
மேந்தோல் களைந்த தீங்கொள் வெள்ளெட்

1. பொறி - புள்ளி. பூழ் - குறும்பூழ்ப்பறவை.
2. மேந்தோல் - மேலேயுள்ள தோல்.

பி - ம். *பொரிப்புறப். †செலவன.



*சுளகிடை யுணங்கற் செவ்வி †கொண்டுடன்
வேனிற் ‡கோங்கின் பூம்பொகுட் டன்ன
குடந்தையஞ் செவிய கோட்டெலி யாட்டக்
கலியார் வரகின் பிறங்குபீ ளொளிக்கும்
வன்புல வைப்பி னதுவே சென்று
தின்பழம் பசீஇ........னனே பாண
வாள்வடு விளங்கிய சென்னிச்
செருவெங் குருசி லோம்பு மூரே.

திணையும் துறையும் அவை.
உறையூர் மருத்துவன் தாமோதரனார். (௩உக)

3. உணங்கல் - உலருகின்ற வெள்ளெள்ளை; செவ்வியுணங்கலை. கொண்டு உடன்.
4. செய்யுளிடத்து, காலத்தை அடையாக அடுத்துவருமொழி

இனத்தைக்காட்டாததற்கு மேற்கோள்; நன். சூ. 400, மயிலை.; நன். வி. சூ. 401; இ. வி. சூ. 312, உரை.

5. குடந்தை - வளைவு; "குடந்தையஞ் செவிய கோட்பவ ரொடுங்கி" (அகநா. உஅ௪.) கோடு - கரை. ஆட்ட - அலைத்தற்கு. சேவல் எலியை அலைக்க.

6. பீள் - கரு. வரகின் பீளிற் சேவல் ஒளிக்கும்; பீளென்றது கதிர்ப் போரை.

10. செரு வெங் குருசில் - போரை விரும்புதலையுடைய தலைவன்.

பி - ம். *களகிடை. †கொண்டென. ‡வேணிரகொண்.

---

(௩உஉ)*உழுதூர் காளை யூழ்கோ டன்ன
கவைமுட் கள்ளிப் பொரியரைப் பொருந்திப்
புதுவர கரிகாற் கருப்பை பார்க்கும்

---

1. காளையின் செவ்வியழிந்த கொம்பையொத்த.

2. பொருந்தியவர், சிறுர்.

1 - 2. கள்ளியின் முள்ளுக்குக் கோடு உவமை; "குண்டைக் கோட்ட குறுமுட் கள்ளி" அகநா. க௮௪ : 8.

3. வரகு அரிகால் - வரகம்பயிரின் அரிந்த தாள். கருப்பை - எலியை; "வேலிக் கருப்பை பார்க்கும்" புறநா. ௩உ௪ : 7.

பி - ம். *உழுதார்க்காளை.

புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்
பெருங்கட் குறுமுயல் கருங்கல னுடைய
*மன்றிற் பாயும் வன்புலத் ததுவே
கரும்பி னெந்திரஞ் சிலைப்பி †னயல
திருஞ்சுவல் வாளை பிறழு மாங்கட்
டண்பணை யாளும் வேந்தர்க்குக்
கண்படை யியா வேலோ னூரே.

திணையும் துறையும் அவை.
ஆவூர்கிழார். (சஉஉ)

---

3 - 4. எய்த சிறார் முழக்குவராயின்.

5. முயல் : எழுவாய். கருங்கலன் - மண்ணாற் செய்யப்பட்ட அடிசிற் பாண்டம்.

4 - 6. "தூமயிர்க் குறுந்தா ணெடுஞ்செவிக் குறுமுயல், புன்றலைச் சிறாஅர் மன்றத் தார்ப்பிற், படப்பொடுங் கும்மே" புறநா. கூகச : 2 - 4.

7. எந்திரம் - ஆலை; "கரும்பி னெந்திரம்" ஐங்குறு. ருரு.

8. சுவல் - பிடர்.

9. தண்பணை - மருதநிலத்தைச் சார்ந்த ஊர்கள்.

ஊர் (10) வன்புலத்ததுவே (6.)

பி - ம். *முனறினறபாயும். †னயலினிருஞ்சுவலி......யாளை பிறழுமாங்கட்.

(கூஉகூ) புலிப்பாற் *பட்ட வாமான் குழவிக்குச்
சினங்கழி மூதாக் கன்றமடுத் தூட்டும்
கா.........................க்
குள்ளியது சுரக்கு மோம்பா வீகை
வெள்வே †லாவ மாயி னொள்வாள்

1. புலியினிடத்தே அகப்பட்ட ஆமானினது கன்றினுக்கு.
2. மூதா - முதிய பசு. மடுத்து - சேர்த்து.
4. சுரக்கும் - இடைவிடாமல் அளிக்கும்.
பி - ம். *பட்டவிரமான். †லாப.



கறையடி யானைக் கல்ல
துறைகழிப் பறியா வேலோ னூரே.

.......................................
.......................................டார்கிழார். (கூஉகூ)

7. வேலும் உறையும்: "நெய்துடைத் தடையலர் நேய மாதர்கண், மைதுடைத் துறைபுகும் வயங்கொள் வேலினாய்", "பொய்யுரைத் துலகினிற் சினவினர் குலமறப் பொருது தன்வேல், செய்யுரைத் துறையினிட்டு" கம்ப. நகர்நீங்கு. 159; யுத்த. மந்திர. 84.

5 - 7. 'பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவும்' என்பதற்குத் தத்தம் பொருளுணர்த்தாது பெயர்ந்த நிலைமையையுடைய சொல்லான் வருஞ் செய்யுளுமெனப்பொருள்கூறி, 'ஒள்வாட....வேலோனாரே : என்புழி, வேலோனென்பது வேலையுடையோனென்னும் பொருள் பெயர்ந்து ஒரு பெயர்த்தன்மையாய் நின்றது' என்பர்; தொல். எச்ச. சூ. 53, ந.; இ. வி. சூ. 370, உரை.

---

(௩௨௪) வெருக்குவிடை யன்ன *வெருணோக்குக் கயந்தலைப்
புள்ளூன் றின்ற புலவுநா றுகயவாய்
வெள்வாய் †வேட்டுவர் வீழ்துணை மகாஅர்
சிறியிலை ‡யுடையின் சுரையுடை வான்முள்
ஊக நுண்கோற் செறித்த வம்பின்
வலாஅர் வல்விற் §குலாவரக் கோலிப்

---

1. வெருக்குவிடை - காட்டுப்பூனையின் ஆண். கயந்தலை - மெல்லிய தலை.

வெருகினை விடையென்று கூறுவதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். மரபு. சூ. 68, பேர்.

2. கயவாய் - மெல்லிய வாய். 2 - 3. கயவாய்மகார்.

4. சிறிய இலைகளையுடைய உடைமரத்தின் உட்டுளையையுடைய வெள்ளிய முள்ளை; "உடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித், தாமே யாண்ட" புறநா, ௩௬௩ : 2 - 3.

5. ஊகநுண்கோல் - ஊகம்புல்லின் ஈர்க்கில்.

4 - 5. உடைமுள்ளை ஊகங்கோலிற் கோத்த அம்பினை உடையாய்.

6. வலார் - வளார்; மலாரென வழங்கும். குலாவர - வளைய.

பி - ம். *வெருனோக்குக். †வேட்வென். ‡யுடையினை சுரையடை வானஞ்சநுண்கோற். §குலா புறக்.



பருத்தி *வேலிக் கருப்பை பார்க்கும்
புன்புலந் தழீஇய வங்குடிச் சீறூர்க்
குமிழுண் வெள்ளை †பகுவாய் பெயர்த்த
‡வெண்காழ் §தாய ‖வண்காற் பந்தர்
இடையன் பொத்திய சிறுதீ விளக்கத்துப்
பாணரொ டிருந்த நாணுடை நெடுந்தகை
வலம்படு தானை வேந்தற்
குலந்துழி யுலக்கு நெஞ்சறி துணையே.[1]

திணையும் துறையும் அவை.

ஆலத்தூர்கிழார். (கூஉச)

7. தொல். எச்ச. சூ. 17, ந. மேற்.

3 - 7. "ஆர்நாரின் றிண்கயிற்று லமைச்சிறுகோல் வளைத்த வில்லுங், கூர்வாய்முண் ணுனிபதித்த கோற்கோலுங் கைக்கொண்டு, கார்மேனி மைந்தரொடு கான்புகுந்து கொடுவிலங்கின், ஏர்வாய்மென் குருளைபல வெய்தல்செய்தான் விளையாட்டால்" (சீகாளத்திப். கண்ணப்ப. 29) என்பது இவ்வடிகளின் பொருளை ஒருவாறு தழுவி

வந்திருத்தல் காண்க.

7 - 8. "பருத்தி வேலிச் சீறூர்" புறநா. உகக : 1.

9. குமிழுண் வெள்ளை - குமிழம்பழத்தை உண்ணும் வெள்ளாடு.

10. காழ் - கொட்டை. தாய - பரந்த. பந்தரின்கீழ்.

11. இடையன் : புறநா. ருகக : 4 - 5. பொத்திய - மூட்டிய.

12. நாண் - மானம். 14. உலக்கும் - இறக்கும்.

நெடுந்தகை (12) துணை (14.)

[1]மு. வேந்தற்குத் துணையாகச் செல்வோரைக் கூறியதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 5, ந.

பி - ம். *வேலி கருபலிப்பார்க்கும். †மதுவாய், மறுகுவாய், மறுவாய். ‡வெண்காழ்ப்பத்தரிடை. §காய. ‖வன்காழ்ப்பந்தர்.

---

(ருஉரு) களிறுநீ றாடிய விடுநில மருங்கின்
வம்பப் பெரும்பெயல் வரைந்துசொரிந் திறந்தெனக்

---

1. நீறு - புழுதி; "நீறடங்கு தெரு" (சிறுபாண். 201); "கரம்பைப் படுநீ றாடி" பெரும்பாண். 93.

2. வம்பப்பெரும்பெயல் - புதிய மழை; "வம்ப மாரியைக் காரென மதித்தே" (குறுந். சுசு.) இறந்தென - போக.



குழிகொள் சின்னீர் குராஅ லுண்டலிற்
சேறுகிளைத் திட்ட கலுழ்கண் ணூறல்
முறையி னுண்ணு நிறையா வாழ்க்கை

*முளவுமாத் தொலைச்சிய முழுச்சொ லாடவர்
உடம்பிழு தறுத்த †வொடுங்காழ்ப் படலைச்
சீறின் முன்றிற் கூறுசெய் திடுமார்
கொள்ளி வைத்த கொழுநிண நாற்றம்
மறுகுடன் கமழு மதுகை மன்றத்
தலந்தலை யிரத்தி ‡யலங்குபடு நீழற்
கயந்தலைச் சிறாஅர் கணைவிளை யாடும்

---

3. குரால் - ஒருவகைப்பசு; கோட்டானுமாம்.

4. சேற்றைத் தோண்டுதலால் உண்டாகிய கலங்கிய ஊறல்நீரை; "மணற்கிளைக்க நீரூறும்" திருவள்ளுவமாலை, 31.

5. "ஊன்முறை யூட்டும்" புறநா. ௩௩௧ : 8.

6. முளவுமா - முள்ளம்பன்றியை; தொலைச்சிய - கொன்ற; "முளவுமா வல்சி" (ஐங்குறு. ௩௬௪); "முளவுமாத் தொலைச்சிய பைந் நிணப் பிளவை" மலைபடு. 176.

4 - 6. "கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல், வில்லேர் வாழ்க் கைச் சீறூர் மதவலி" புறநா. ௩௩௧ : 1 - 2.

7. உடம்பிழுது - உடம்பினது நிணத்தை; "உடம்பின் விழுக்கு நிணம்" (புறநா. ௩௨௬ : 9 - 10.) அறுத்த உடம்பிழுதையென்க. ஒடுங் காழ்ப்படலை - ஒடுமரத்தின் கழிகளாலாகிய கட்டுக்கதவு; படலுமாம்; ஒடு - ஒருவகை மரம்; "ஓடுமரக் கிளவி" தொல். உயிர். சூ. 60.

8. முன்றிலில். கூறுசெய்திடுமார் - பிறர்க்குப் பகுத்துக் கொடுப் பாராய்.

10. மன்றத்து - பொதுவிடத்துள்ள.

9 - 10. "நெய்க்கறைக் கொளீஇய மங்குன் மாப்புகை, மறுகுடன்

கமழும்" புறநா. ௩௨௧ : 3 - 4.

11. அலந்தலை : "அலந்தலை மராஅம்" (சிலப். ௧௧ : 75.) இரத்தி - இத்திமரம்; இலந்தையுமாம்; அலங்குதல் - அசைதல். நீழலில்.

10 - 11. "இரத்தி நீடிய வகன்றலை மன்றம்" புறநா. ௩௪ : 12.

12. வேட்டுவர் சிறாஅர் : புறநா. ௩௨௪ : 1 - 7.

பி - ம். *முழவுமா தொலைச்சிய. †கொடுங்காழ், தொடுங்காழ. ‡யிலங்குபடு.



*அருமிளை யிருக்கை யதுவே வென்வேல்
வேந்துதலை வரினுந் தாங்கும்
தாங்கா வீகை நெடுந்தகை யூரே.

திணையும் துறையும் அவை.

உறையூர் முதுகண்ணன் சாத்தனார். (௩௨௫)

13. மிளை - காவற்காடு; புறநா. ௩௨௬ : 7.

14. அரசன் தன்னிடத்தே வந்தாலும் தாங்குதற்குரிய.

14 - 5. "வாருகட னிரக்கு நெடுந்தகை, அரசுவரிற் றுங்கும் வல்லா ளன்னே" புறநா. ௩௨௭ : 7 - 8.

ஊர் (15) இருக்கையது (13.)

பி - ம். *அருமுனை.

---

(௩௨௬) ஊர்முது வேலிப் பார்நடை வெருகின்

இருட்பகை வெரீஇய நாகிளம் பேடை
உயிர்நடுக் குற்றுப் *புலாவிட் டரற்றச்
சிறையுஞ் செற்றையும் புடையுந ளெழுந்த
பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்துக்

1. வேலியைச் சார்ந்துள்ள காட்டுப்பூனையால்; பார் நடை வெருகு - தான் கவர்ந்துகொள்ளுதற்குரிய கோழிமுதலியவற்றைப் பார்த்து மெல்ல நடத்தலையுடைய வெருகு; "ஈர்முள் வேலிப் புலவுநாறு முன்றில், எழுதி யன்ன கொடிபடு வெருகின், பூனை யன்ன பொங்குமயிர்ப் பிள்ளை" (அகநா. உகள : 12 - 4) என்பதையும், "வெவ்வாய் வெருகினைப் பூசை யென்றலும்" (தொல். மரபு. சூ. 68) என்பதையும், 'படப்பை வேலியும் புதலும்பற்றி விடக்கிற்கு வேற்றுயிர்கொள்ளும் வெருகு' என்னும் பேராசிரியருரையையும் பார்க்க.

1 - 2. வெருகாகிய பகைக்கு அஞ்சிய கோழிப்பேடை; எழுவாய்.

3. புலா - புலாவை; வாயிலுள்ள தசையை; அகநா. எக : 14.

2 - 3. "மனையுறை கோழிக் குறுங்காற் பேடை, வேலி வெருகின மாலை யுற்றெனப், புகுமிட னறியாது தொகுபுடன் குழீஇப், பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்கு" குறுந். கருக : 1 - 4.

4. சிறை - பக்கம். செற்றை - சிறுதூறு; "செற்றை வாயில்" (பெரும்பாண். 149.) புடையுநள் - அடித்துத் தூத்தலையுடையளாய்.

5. பருத்திப்பெண்டின் - பருத்திநூற்கும் மங்கையின்; "பருத்திப் பெண்டின் பனுவ லன்ன" (புறநா. கஉரு: 1.) விளக்கத்தாற்காணப்பட்ட.

பி - ம். *புலாவிட்டியாற்றச்.

*கவிர்ப்பூ நெற்றிச் சேவலிற் †றணியும்
‡அருமிளை யிருக்கை யதுவே மனைவியும்
வேட்டச் சிறுஅர் சேட்புலம் படராது
§படமடைக் கொண்ட குறுந்தா ளுடும்பின்
விழுக்குநிணம் பெய்த தயிர்க்கண் விதவை
யாணர் நல்லவை பாணரொ டொராங்கு
வருவிருந் தயரும் விருப்பினள் கிழவனும்
அருஞ்சமந் ததையத் தாக்கிப் பெருஞ்சமத்
தண்ணல் யானை யணிந்த
பொன்செ யோடைப் பெரும்பரி சிலனே.

திணை - வாகை; துறை - மூதின்முல்லை.

‡தண்காற் பூட்கோல்லனார். (௩௨௬)

---

6. கவிர்ப்பூ - முள்ளுமுருங்கைப்பூ. சேவலின் - ஆண்கோழியால்; "கவிரலர் பூத்த சென்னி வாரணம்" (கல். பாயிரம், 2.) தணியும்-நீங்கும். கோழிப்பெடை (2) அந்நடுக்கந் தணியும் (6.)

7. "அருமிளை யிருக்கை யதுவே" புறநா. ௩௨௫ : 13.

8. சேட்புலம் - நெடுந்தூரமாகிய இடம்.

10. விழுக்காகியநிணம்; விழுங்குதற்குரிய நிணமுமாம்; "விழுக் கொடு வெண்ணஞ்சு" (சீவக. 1584.) விதவை - கூழ்.

9 - 10. பெரும்பாண். 132 - 3.

11. யாணர் - புதிது. நல்லவை - நல்ல உணவுகளை. ஓராங்கு -

ஒருபடியாக.

9 - 11. "உடும்பிழு தறுத்த வொடுங்காழ்ப் படலைச், சீறின் முன்றிற் கூறுசெய் திடுமார், கொள்ளி வைத்த கொழுநிண நாற்றம்" புறநா. ௩௨௫ : 7 - 9.

மனைவியும் (7) விருப்பினள் (12.)

12. கிழவன் - தலைவன்.

13. ததைய - சிதைய; "அருஞ்சமஞ்சிதையத் தாக்கி" (புறநா. எ௨ : 8); "ததைந்த காஞ்சியொடு" பதிற். ௨௩ : 19.

15. ஓடை - நெற்றிப்பட்டம். 14 - 5. புறநா. ௩௩௪ : 8 - 10.

ஏ - ம். *கதிர்ப்பூ. †தணிவும். ‡அருமனை. §படபடைக்.
‡‡தண்கார்ப்......பொற்கொல்லனுர், முடக்கொல்லனுர், தங்கான்முட கோலனை, தங்கால நாட் கோவலனுர்.





(௩௨எ) எருதுகா லுறாஅ திளைஞர் கொன்ற
*சில்விளை வரகின் புல்லென் குப்பை
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த பாண †ருண்டுகடை தப்பலின்
ஒக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்
சிறுபுல் லாளர் முகத்தவை கூறி
‡வரகுகட னிரக்கு நெடுந்தகை

அரசுவரிற் ருங்கும் வல்லா என்னே.[1]

திணையும் துறையும் அவை.

................................ (கூஉஎ)

---

1. கடாவிடுதலின்றி இளைஞர் அடித்த.

'எருதுகாலுரு அது' என்பது (தோல். மொழி. சூ. 8, இளம்.) மேற்.

2. சில்விளை - சிலவாக விளைந்த. குப்பை - பொலி.

3. தொடுத்த கடவர்க்கு - தன்னை வளைத்துக்கொண்ட கடன்காரர் களுக்கு; "தொடுத்துணக் கிடப்பினுங் கிடக்கும்" (புறநா. கஙிசு : 4.) கொடுத்த மிச்சில் - கொடுத்து மிஞ்சிய வரகை.

4. கடை - வாயில்.

5. ஒக்கல் ஒற்கம் சொலிய - சுற்றத்தாருடைய வறுமையை ஒழித்தற்கு.

'ஒற்கம்' என்னும் உரிச்சொல் வறுமையாகிய குறிப்புணர்த்துவதற்கு மேற்கோள்; தோல். உரி. சூ. 64, சே.; ஷை. ஷை. ஷை. 62, ந.; இ. வி. சூ. 281, உரை.

7 - 8. "வேந்துதலை வரினுந் தாங்கும், தாங்கா வீகை நெடுந்தகை" புறநா. கூஉஙி : 14 - 5.

[1]மு. வாகைத்திணைத்துறைகளுள், 'புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கம்' (தோல். புறத்திணை. சூ. 17, இளம்.) என்பதற்கும், 'அரும்பகை தாங்குமாற்றல்' (ஷை. ஷை. ஷை. 21, ந.) என்பதற்கும் மேற்கோள்.

பி - ம். *சில்வினை. †ருண்டுகென...தலொற்கஞ். ‡வாருகட வீர்க்கு.

---

(கூஉஅ) ....டைமுதற் புறவு *சேர்ந் திருந்த
புன்புலச் சீறூர் நெல்விளை யாதே

---

1. புறவு - முல்லைநிலம். 2. புன்புலம் - புன்செய்.
பி - ம். *சோர்ந்திருந்த.



வரகுந் தினையு முள்ளவை யெல்லாம்
இரவன் மாக்களுக் *கீயத் தொலைந்தன
......................டமைந் தனனே
அன்ன னாயினும் †பாண நன்றும்
‡வெள்ளத் திடும்பா லுள்ளுறை தொட....
களவுப் புளியன்ன விளை............
......................வாடூன் கொழுங்குறை
கொய்குர லரிசியொடு நெய்பெய் தட்டுத்
துடுப்பொடு சிவணிய களிக்கொள் வெண்சோ
றுண்டினி திருந்த பின்.................
......................தருகுவன் மாதோ
§தாளிமுத னீடிய சிறுநறு முஞ்ஞை
முயல்வந்து கறிக்கு முன்றிற்
சீறூர் மன்னனைப் பாடினை செலினே.

‡திணையும் துறையும் அவை.

பங்கு............................... (கூஉஅ)

3 - 4. "வரகுந் தினையு முள்ளவை யெல்லாம், இரவன் மாக்க ளுணக்கொளத் தீர்ந்தென" புறநா. ௩௩௩ : 9 - 10.

7. "குடப்பாற் சில்லுறை" புறநா. உஎ௬ : 5.

8. களவுப்புளி - களாப்பழத்தின் புளிப்பு. 10. குரல் - கதிர்.

14. தாளி - ஒருவகைக் கொடி. செலின் (16) தருகுவன் (13.)

14 - 5. புறநா. ௩௨௦ : 1.

பி - ம் *கியாததா...டமைந்த. †மன்ன. ‡வெள்ளத்திடும். §தாழி முதல். ‡‡இதுவுமது.

---

(௩௨௬) இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
புடைநடு கல்லி னாட்*பலி யூட்டி

---

1. வீட்டில் அட்ட கள்ளையுடைய; "இல்லடு கள்ளின் றோப்பி பருகி" பெரும்பாண். 142.

2. நடுகல்லிற்கு விடியற்காலப் பலியை ஊட்டி. புறநா. உ௩௨ : 3 - 4.

பி - ம். *பலியூட்டி நெய்ந்நறை.

*நன்னீ ராட்டி நெய்ந்நறைக் கொளீஇய
மங்குன் மாப்புகை மறுகுடன் கமழும்
அருமுனை யிருக்கைத் தாயினும் வரிமிடற்
றரவுறை புற்றத் தற்றே நாளும்
புரவலர் புன்க ணோக்கா திரவலர்க்
கருகா தீயும் வண்மை
உரைசா னெடுந்தகை யோம்பு மூரே.[1]

திணையும் துறையும் அவை.
மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார். (௩௨௯)

---

3. நறை - தூபம்; "நறையும் விரையும்" (குறிஞ்சி. 7.) கொளீஇய - கொளுத்திய; சேர்த்திய.

4. மங்குல் - மேகம். உடன் - ஒருங்கு.

5. முனை - முதன்மை. ஊர் இருக்கையை உடையதாயினும்.

6. அரவுறையும் புற்றைப்போல்வது ஊர்; "நல்லரா வுறையும் புற்றம் போலவும்" (புறநா. ௩௦௯ : 3); ஊர் அணுகுதற்கரியதென்றபடி.

8 - 9. புறநா. ௩௨௦ : 16 - 8, ௩௩௭ : 8.

[1]மு. கல்நட்டுக் கால்கொண்டதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 5, ந.

பி - ம். *நன்ன ராட்டி.

(௩௩௦) வேந்துடைத் தானை முனைகெட நெரிதர
ஏந்து *வாள் வலத்த னொருவ னாகித்
தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற்
காழி யனையன் மாதோ வென்றும்

1. முனை - சண்டை. நெரிதர - நெரிய.

3. அப்பகைவர் சேனையானது தன்னைக் கடந்து வாராதபடி தடுத்தலால். 4. ஆழி - கரை.

3 - 4. "கடல்விலக் காழியிற் கலக்க மின்றி, அடல்விலக் காளரார்த்தன ரடர்ப்பவும்" பெருங். க. 46 : 75 - 6.

குறள், 989, பரிமேல். மேற்.

பி - ம். *வாள் வல்லத்தன், வல்லத்தன்.



பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்
புரவிற் காற்றாச் சீறூர்த்
தொன்மை *சுட்டிய வண்மை யோனே.[1]

திணையும் துறையும் அவை.

மதுரைக் கணக்காயனார். (௩௩௦)

5. வாரி - வருவாய்.

6. புரவு - இறையிலி நிலம்; புறநா. உசுο : 9, ருஎக : 6.

[1]ம. வஞ்சித்திணைத்துறைகளுள், 'வருவிசைப் புனலைக் கற்சிறை போல, ஒருவன் றாங்கிய பெருமை' என்பதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 7, இளம்.; ஷை. ஷை. ஷை. 8, ந.

பி - ம். *குடிய வன்மை.

---

(ருருக) கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்
வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி
நனிநல் கூர்ந்தன னாயினும் பனிமிகப்
புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியும்
கல்லா விடையன் போலக் குறிப்பின்
இல்லது படைக்கவும் வல்ல னுள்ளது
தவச்சிறி தாயினு மிகப்பல ரென்னாள்

---

1. "வல்லூற் றுவரி தோண்டி" (பெரும்பாண். 97 - 8); "குடம்பு காக் கூவற் கொடுங்கானம்" (சிலப். உக : காவற்பெண்டுசொல்.) கூவல் - கிணறு.

2. விற்போராகிய உழவுத்தொழிலால் வாழும் வாழ்க்கையை யுடைய தலைவன்; "வில்லுழு துண்மார்" (புறநா. கஎο.) மதவென்பது வலியை யுணர்த்துவதோருரிச்சொல்; மதவலி - மிக்க வன்மையுடைய

தலைவன்; "மதவலி விடுப்ப வேகி" சீவக. 204.

3. மிக வறுமையையுற்றானாயினும்.

4. ஞெலியும் - கடையும்.

4 - 5. "இடையன் பொத்திய சிறுதீ விளக்கத்து" (புறநா. ௩௨௪: 11); "இடையன்......ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழிச், செந்தீ" பெரும்பாண். 175 - 8.



*நீணெடும் பந்த ரூண்முறை யூட்டும்
இற்பொலி மகடூஉப் போலச் சிற்சில
வரிசையி னளிக்கவும் வல்ல னுரிதினிற்
காவன் மன்னர் கடைமுகத் துகுக்கும்
போகுபலி வெண்சோறு போலத்
†தூவவும் வல்லனவன் றாவுங் காலே.

திணையும் துறையும் அவை.

‡உறையூர் முதுகூத்தனார். (௩௩௧)

8. பந்தரில். முறை - வரிசை; "முறையி னுண்ணு நிறையா வாழ்க்கை" புறநா. ௩௨௫ : 6.

9. மகடூஉ - மனைவி; புறநா. ௩௩௩ : 8.

6 - 9. "குடநீரட் டுண்ணு மிடுக்கட் பொழுதும், கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினும், கடனீர்மை கையாறாக் கொள்ளு மடமொழி, மாதர் மனைமாட்சி யாள்" நாலடி. 382.

9 - 13. புறநா. ௩௩௪ : 7 - 11.

பி - ம். *நீணெடுபெர்தருண். †தூஉவும். ‡உறையூர்முதுகூற்றன்.

---

(௩௩௨) பிறர்வேல் போலா தாகி யிவ்வூர்
மறவன் வேலோ பெருந்தகை யுடைத்தே
*இரும்புற நீறு மாடிக் கலந்திடைக்
†குரம்பைக் கூரைக் கிடக்கினுங் கிடக்கும்
மங்கல மகளிரொடு மாலை ‡சூட்டி
இன்குரல் §விரும்பை யாழொடு ததும்பத்
தெண்ணீர்ப் படுவினுந் தெருவினுந் திரிந்து
மண்முழு தழுங்கச் ╪செல்லினுஞ் ‖செல்லுமாங்

---

3. நீறு - புழுதி. 4. குரம்பை - சிறுகுடிலின்.
6. குரல் - மகளிர் இசை. இரும் பை - பெரிய பை; யாழுறை. ததும்ப - ஒலிக்க. 7. படு - மடு.

பி - ம். *இரும்புக நீருமாடிக் கலத்திடை. †குரம்பைக் கூரைக் கினுங் கிடக்கு. ‡சூடி. §விகும்பை யாழெடுத்தியம்ப, யிரும்பெயர். ╪சொல்லினுஞ். ‖செல்லுங் கண்ணுறின், செல்லுமாங்குகடற்றுனே.

இருங்கடற் றானை வேந்தர்
பெருங்களிற்று முகத்தினுஞ் செலவா னாதே.[1]

திணையும் துறையும் அவை.

*விரியூர் நக்கனார். (௫௫௨)

10. செலவு ஆனாது - செல்லுதல் தவிராது.

[1]மு. பாடாண்டிணைத்துறைகளுள், 'மாணார்ச்சுட்டிய வாண்மங்கலம்' என்பதற்கு இதனை மேற்கோள் காட்டினர் இளம்பூரணர் (தொல். புறத்திணை. சூ. 30); உழிஞைத்திணைத்துறைகளுள் 'வென்ற வாளின்மண்ணல்' என்பதற்கு 'ஒன்றெனமுடித்தலான் இருவர்வேற்குஞ் சிறபான்மை மண்ணுதல் கொள்க' என விசேடவுரை கூறி இதனை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்; ஷை., ஷை., ஷை. 13.

பி - ம். *விரியூகநக்கனார்.

---

(௫௫௩) நீருட் பட்ட மாரிப் பேருறை
மொக்கு ளன்ன பொகுட்டுவிழிக் கண்ண
கரும்பிடர்த் தலைய பெருஞ்செவிக் குறுமுயல்
உள்ளூர்க் குறும்புதற் றுள்ளுவன வுகளும்
தொள்ளை மன்றத் தாங்கட் படரின்
உண்கென வுணரா வுயவிற் றாயினும்
*தங்கினிர் சென்மோ புலவிர் நன்றும்

1. உறை - துளி. 2. மொக்குள் - சேற்றிலெழுந்த கொப்புளம்.
3. "நெடுஞ்செவிக் குறுமுயல்" புறநா. ௫௫௪ : 2, ௫௫௧ : 4;

பெரும்பாண். 115.

1 - 3. "சிறியிலை நெல்லிக் காழ்கண் டன்ன, குருவிழிக் கண்ண கூரலங் குறுமுயல்" அகநா. உஅச : 1 - 2.

4. புதல் - புதரில்.

5. தொள்ளை - துவாரம். மன்றம் - இரவலர் தங்குதற்குரியது.

6. உயவு - வருத்தம்.

7. சென்மோ - செல்லும்; செல்லுமென்னும் ஏவற்பன்மை உயிர் மெய் கெட்டு ஓகாரம் பெற்றுவந்தது; "வருங்குலக் கேண்மோ" (மணி. கரு : 93) என்றாற்போல.

பி - ம். *தங்கி நீர்.



சென்றதற் கொண்டு மனையோள் விரும்பி
வரகுந் தினையு முள்ளவை யெல்லாம்
இரவன் மாக்க ளுணக்கொளத் தீர்ந்தெனக்
குறித்துமா றெதிர்ப்பை பெறாஅ மையிற்
குரா லுணங்கு விதைத்தினை யுரல்வாய்ப் பெய்து
சிறிது *புறப்பட்டன் றோவில டன்னூர்
வேட்டக் குடிதொறுங் கூட்டு........
.......................... †உடும்புசெய்
பாணி நெடுந்தேர் ‡வல்லரோ ரோ
வம்பணி யானை வேந்துதலை வரினும்
உண்பது மன்னு மதுவே

பரிசின் மன்னும் குரிசில்கொண் டதுவே.

திணையும் துறையும் அவை.

...................................... (௩௩௩)

---

8. மனையோள் - தலைவி; புறநா. ௩௩௧ : 8, ௩௩௪ : 5. சென்றதற் கொண்டு - வந்ததனால்.

10. தீர்ந்தென - தீர்ந்தனவாக. குறித்துமாறெதிர்ப்பை - குறியெ திர்ப்பை; 'குறியெதிர்ப்பையாவது அளவுகுறித்து வாங்கி அவ்வாங்கிய வாறே எதிர்கொடுப்பது' என்பர் (குறள், 221, பரிமேல்.); "கூற்றும், குறியெதிர்ப்பை கொள்ளுந் தகைமைத்தே...களிறு" முத்தொள்ளாயிரம்.

9 - 10. "வரகுந் தினையு முள்ளவை யெல்லாம், இரவன் மாக்களுக் கீயத் தொலைந்தன" புறநா. ௩௨௮ : 3 - 4.

8 - 13. "இல்லது படைக்கவும் வல்ல னுள்ளது, தவச்சிறி தாயினு மிகப்பல ரென்னாள், நீண்டும் பந்த ரூண்முறை யூட்டும், இற்பொலி மகடூஉப் போலச் சிற்சில, வரிசையி னளிக்கவும் வல்லன்", "மனையோள், பாண ரார்த்தவும் பரிசில ரோம்பவும், ஊனுஞ் ஊணு மொல்லாது யரவமொடு கைதூ வாளே" புறநா. ௩௩௧ : 6 - 10, ௩௩௪ : 5 - 7.

14. வேட்டக்குடி - வேட்டுவர் வீடு.

15 - 6. உடும்புசெய் பாணி - உடும்புத்தோலாற் செய்த கைச்சரடு.

17. வம்பு - கச்சு.

19. கொண்டது பரிசில் - பகைவரோடு போர்செய்ததற்காக அரச ரிடம் பெற்றபொருளே பாணர்முதலியோர்க்கு அவன் கொடுக்கும் பரிசி லாகும்.

பி - ம். *புறப்படனரூவிலளே. †உழுமெபுசெய். ‡வலவரோடூ.

(௩௩௪) காமரு பழனக் கண்பி னன்ன
தூமயிர்க் குறுந்தா ணெடுஞ்செவிக் குறுமுயல்
புன்றலைச் சிறாஅர் மன்றத் தார்ப்பிற்
படப்பொடுங் கும்மே....பின்பு....
..................னூரே *மனையோள்
பாண ரார்த்தவும் பரிசில †ரோம்பவும்
ஊனொலி யரவமொடு ‡கைதூ வாளே
உயர்மருப் பியானைப் புகர்முகத் தணிந்த
பொலம்..........................ப்
§பரிசில் பரிசிலர்க் கீய
உரவுவேற் காளையுங் கைதூ வானே.

திணையும் துறையும் அவை.
மதுரைத் தமிழக்கூத்தனார். (௩௩௪)

---

1. கண்பு - ஒருவகைக் கோரை; "கண்பின், புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்" (பெரும்பாண். 220 - 21); "களிறுமாய் செருந்தியொடு கண்பமன் றூர்தர" (மதுரை. 172); "கண்பமல் பழனம் கமழ" (மலைபடு. 454); "கண்பகத்தின் வாரணமே" தே. திருஞா. தோணிபுரம், "வண்டரங்க" 3.

2. புறநா. ௩௩௩ : 3.

4. படப்பு=படப்பை - வைக்கோற்போர்.

3 - 4. "புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பின்......மன்றிற் பாயும் வன்புலத் ததுவே" புறநா. ௩௨௨ : 4 - 6.

6. ஆர்த்த - நிறைய உண்பிக்க; "ஏதிலா ராரத் தமர்பசிப்பர்" குறள், 837.

7. ஊஉணொலியரவம் - ஊணொலுண்டாகிய ஆரவாரம்; "புள்ளிமிழ்ந் தன்ன, வூணொலி யரவம்" (புறநா. ௧௭௩ : 3 - 4.) கைதூவாள் - கையொழியாள்; "கள்ளுண வாட்டியுங் கைதூ வாளே" புறத்திரட்டிற் கண்டது இது.

மனையோள் (5) கைதூவாள் (7.) 11. காளை - தலைவன்.

8 - 11. "ஒன்னார் யானை யோடைப் பொன்கொண்டு, பாணர் சென்னி பொலியத் தைஇ", "அண்ணல் யானை யணிந்த, பொன்செ யோடைப் பெரும் பரிசிலனே" புறநா. ௧௨௬ : 1 - 2, ௩௨௬ : 14 - 5.

பி - ம். *மனையோர். †ஓம்பும். ‡கைத்தூஉவாளே. §பரிசிலர்.





(௩௩௫) அடலருந் துப்பின்............

...................குருந்தே முல்லையென்
றிந்நான் கல்லது பூவு மில்லை
கருங்கால் வரகே யிருங்கதிர்த் தினையே
சிறுகொடிக் கொள்ளே பொறிகிள ரவரையொ

டிங்நான் கல்ல துணவு மில்லை
*துடியன் பாணன் பறையன் கடம்பனென்
றிங்நான் கல்லது குடியு மில்லை

---

1. துப்பு - வலி.

4. "வன்பாலாற் கருங்கால் வரகின்" புறநா. ௩அ௪ : 4.

7 - 8. 'இனிப் பலவயினானும்......முடிபின செய்யுளு ளெனவே, சிலவயினான் அஃறிணைவிராது உயர்திணையானெண்ணி அஃறிணை முடிபிற்றாகலும் உண்டு, செய்யுளகத்து; உ-ம்: பாணன்...குடியுமில்லை எனவரும்' (தொல். கிளவி. சூ. 51, இளம்.); 'பலவயினானு மென்றதனாற் சிலவயினாற்றிணைவிராது உயர்திணையானெண்ணி அஃறிணையான் முடிவனகொள்கவென்பது; உ-ம்; பாணன்......குடியுமில்லை: எனவரும்' (ஷை. ஷை. ஷை. 51, கல்.) 'பாணன்......குடியுமில்லை: என......உரையாசிரியர் கூறினாரெனின், பாணன் முதலாயினாரைக் குடியென்று சுட்டிய வழிக் குடிக்கு ஏற்ற தொகைகொடுத்தல் வழுவன்மையான், அவ்வுரை போலியுரை யென்க; குடியென்று சுட்டாதவழிப் பாணன் பறையன் றுடியன் கடம்பனென்று அந்நால்வருமல்லது குடியில்லை யென்றேயாம்' (ஷை. ஷை. ஷை. 51, சே.); 'பாணன் பறையன்......குடியு மில்லையென்றது பாண்குடி பறைக்குடியெனக் குடியைச் சுட்டிநில்லாது பாணன் பறையன் எனப் பால்காட்டி நிற்றலான் உயர்திணைப்பொருள் நின்று அஃறிணைமுடிபு கொண்டனவேயாம்' (ஷை. ஷை. ஷை. 51, ந.); 'பாணன் பறையன்......குடியுமில்லை: என்பது உயர்திணை அஃறிணையான் முடிந்தது; இவ்வழு யாண்டு அமைக்கப்படுமோவெனின், அது வழுவாயினன்றே அமைக்கவேண்டுவது; குடியென்பதனை எல்லாவற்றோடும் கூட்டியுரைக்கப்படுதலின் வழாநிலையாமென்க' (நன். சூ. 377, மயிலை.); 'பாணன்...குடியுமில்லை: என உயர்திணையெண்ணி அஃறிணைமுடிபினவாய் வழு யாண்டமைக்கப்படுமெனிற் குடியென்பதனைப் பாணன்முதல் நான்கோடும் கூட்டி யுரைக்கப்படுதலின் வழாநிலையாமென்க' (நன். வி. சூ. 378); 'பாணன்...குடியு மில்லை: எனத் திணைவிராது உயர்திணையானெண்ணி அஃறிணையான் முடிந்த இவ்வழு யாண்டமைக்கப்படுமோ

பி - ம். *பாணன் பறையன் றுடியன் கடம்பனென்று.

ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவி னல்லது
நெல்லுகுத்துப் பரவுங் கடவுளு மிலவே.

திணையும் துறையும் அவை.

*மாங்குடிகிழார். (௩௩௫)

---

வெனின், பாணன் முதலாயினாரைக் குடியென்று சுட்டியவழிக் குடிக்கு ஏற்ற தொகைகொடுத்தல் வழுவன்மையான் அமைத்தல் யாண்டைய தென்க' (இ. வி. சூ. 298, உரை); 'மக்கட்சுட்டென்புழி......அங்ஙன முணர்த்திற்றேல், பாணன்......குடியுமில்லை: என்புழிப் பாணன் முதலி யன போல மக்களென்பது ஆண்டு அஃறிணைச்சொல்லாதல் வேண்டும், வேண்டவே, 'அஃதல பிறவே யென அஃறிணைச்சுட்டுப்பெயராற் கூறாது அவரல பிறவென்றல் திணைவழுவாய் முடியுமாதலின் அஃதாசிரியர் கருத் தன்றென்றொழிக' தொல். சூத்திரவிருத்தி.

10. புறநா. ௩௦௪ : 6, அடிக்.

11 - 2. 'பரவுதல்' என்னும் உரிச்சொல் வழுத்துதலாகிய குறிப் புணர்த்தியதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. 86, சே.; ஷை. ஷை. ஷை. 84, ந.; இ. வி. சூ. 281, உரை.

பி - ம். *மாறுகுடிகிழார்.

(௩௩௬) வேட்ட வேந்தனும் *வெஞ்சினத் தினனே
†கடவன கழிப்பிவ டந்தையுஞ் செய்யான்
ஒளிறுமுகத் தேந்திய வீங்குதொடி மருப்பிற்
களிறு கடிமரஞ் சேரா சேர்ந்த
ஒளிறுவேன் மறவரும் ‡வாய்மூழ்த் தனரே
இயவரு மறியாப் பல்லியங் கறங்க

1. வேட்ட - மணஞ்செய்தற்கு விரும்பிய. 2. கழிப்பு - கழித்தலை.
1 - 2. புறநா. ௩௪௧ : 1 - 3.
4. கடிமரம்-காவன்மரம். 5. மூழ்த்தனர்-மூடினர்; முகிழ்த்தனர்.
6. இயவர் - வாச்சியக்காரர்.
பி - ம். *பெருஞ்சினத்தனனே. †கெடவனகறிபபிள். ‡வாய்மூழ்த்தனரே.


அன்னோ, பெரும்பே துற்றன் *றிவ் வருங்கடி மூதூர்
அறனிலண் மன்ற தானே விறன்மலை
வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின்
முகைவனப் பேந்திய முற்று விளமுலைத்
தகைவளர்த் தெடுத்த நகையொடு
பகைவளர்த் திருந்தவிப் †பண்பி லூயே.
திணை - காஞ்சி; துறை - மகட்பாற்காஞ்சி.
பரணர். (௩௩௬)

7. பெரும்பேதுற்றன்று - பெரிய மயக்கத்தை யடைந்தது.

8. மன்ற - நிச்சயமாக. விறன்மலை : "விறன்மலை வியலறை" கலி. ௫௩ : 2.

9 - 10. "முதிர்கோங்கின் முகையென............பெருத்தநின் னிளமுலை" கலி. ௫௬ : 23 - 4. முகை - அரும்பு.

11. நகை - மகிழ்ச்சி. தாய் (12) அறனிலள் (8.)

பி - ம். *இல்லங் கடிமூதா றனிலமன்ற. †பண்பிற்றே.

---

(௩௩௭)* ஆர்கலி யின்னே சோணாட் டண்ணல்
கவிகை மண்ணாள் செல்வ ராயினும்
வாள்வலத் தொழியப் †பாடிச் சென்றார்
வாறே கமலர......................
ஈத லாணு விலங்குதொடித் தடக்கைப்
பாரி பறம்பிற் பனிச்சுனை போலக்

---

1. அண்ணல் - தலைவன். 5. ஈதல் ஆனு - கொடுத்தல் தவிராத.

6. "பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்" (௧௭௬) என முன் னும் இச்சுனை பாராட்டப்பட்டுள்ளது.

2 - 6. அரசராக இருந்தாலும் போர்செய்தலையொழித்துப் புகழ்ந்து பாடிக்கொண்டு வருவாராயின், அவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுக்கும் இயல்பினனென்று பாரியின் கொடைச்சிறப்புக் கூறினர்; புறநா. ௧௦௯ - ஆம் பாட்டாலும் விளங்கும்.

பி - ம். *ஆர்கலிவினனே சேணுட்டண்ணல். †பாடிச் சேரார்.



காண்டற் கரிய ளாகி மாண்ட
பெண்மை நிறைந்த பொலிவொடு மண்ணிய
துகில்விரி கடுப்ப நுடங்கித் தண்ணென
அகிலார் நறும்புகை யைதுசென் றடங்கிய
கபில *நெடுநகர்க் கமழு நாற்றமொடு
மனைச்செறிந் தனளே வாணுத லினியே
அற்றன் றாகலிற் றெற்றெனப் போற்றிக்
காய்நெற் கவளந் தீற்றிக் காவுதொறும்
கடுங்கண் யானை காப்பன ரன்றி
வருத லானார் வேந்தர் †தன்னையர்
பொருசமங் கடந்த வுருகெழு நெடுவேற்
குருதி பற்றிய வெருவரு ‡தலையர்
மற்றிவர் மறனு மிற்றாற் றெற்றென
யாரா குவர்கொ றாமே நேரிழை
§உருத்த பல்சுணங் கணிந்த
மருப்பிள வனமுலை ஞெமுக்கு வோரே.

திணையும் துறையும் அவை.

கபிலர். (௩௩௭)

6 - 7. "மன்னுயி ரறியாத் துன்னரும் பொதியிற், சூருடை யடுக்கத் தாஅங் கடுப்ப, வேனி லானே தண்ணியள்" (குறுந். ௩௭௬ : 1 - 3); "பொன்னணி திகிரியஞ் செல்வன் பொற்புடைக், கன்னிய மகளிரிற் காண்டற் கரியன, நன்மணி புரித்தன வாவி நான்குள" சீவக. 1203.

8. பெண்மை - அமைதித்தன்மை; சீவக. 356, ந.

9 - 10. விரிந்த துகில் புகைக்கு உவமை; முருகு. 138.

11. பாடினோர்பெயர் இதிற் குறிப்பிக்கப்பெற்றுள்ளது.

12. வாணுதல் - கன்னி.

14. நெற்கவளம் : புறநா. ௪௪ : 2, அடிக்.; தீற்றி - உண்பித்து; சீவக. 3105.

16. வேந்தர்-மணம்பேசவந்த அரசர். தன்னையர்-தமையன்மார்.

21. உருத்தல் - தோன்றல்.

22. ஞெமுக்குவோர் - அழுத்துவோர்; சீவக. 2552.

பி - ம். *நெடுநககா. †தன்னையலர். ‡தலைய. §உரித்தல்பல.



(௩௩௮) ஏர்பரந் தவய னீர்பரந் தசெறுவின்
நென்மலிந் தமனைப் பொன்மலிந் தமறுகிற்
படுவண் *டார்க்கும் பன்மலர்க் காவில்
நெடுவே ளாதன் போந்தை யன்ன
பெருஞ்சீ ரருங்கொண் டியளே கருஞ்சினை
வேம்பு மாரும் போந்தையு மூன்றும்

மலைந்த †சென்னிய ரணிந்த வில்லர்
கொற்ற வேந்தர் வரினுந் தற்றக
வணங்கார்க் கீகுவ னல்லன்வண் டோட்டுப்
பிணங்குகதிர்க் கழனி நாப்ப ணேமுற்
‡றுணங்குகல னாழியிற் றோன்றும்
ஓரெயின் மன்ன னொருமட மகளே.

திணையும் துறையும் அவை.

குன்றூர்கிழார்மகனார். (௩௩௮)

---

4. போந்தை - ஓரூர்.

5. கொண்டிச்சீரள் - மிகுதியான சீரையுடையவள்; "அன்பதாய்க், கொண்டி யாயின வாறென்றன் கோதையே" தே. திருநா. திருவாரூர். 'கொக்கரை' 7.

6. ஆர் - ஆத்தி. போந்தை - பனை.

5 - 6. கருஞ்சினைவேம்பு: "கருஞ்சினை, யரவாய் வேம்பு" பொருந. 143 - 4.

8. கொற்றம் - அரசுரிமை. தற்றக - தனக்குத் தக.

6 - 9. விரும்புவோர் பாண்டியன்முதலிய முடிமன்னர் மூவரா யிருப்பினும் தன்னை வணங்கார்க்குத் தன்மகளை ஈவானல்லன் இவன்.

10. கதிர் - நெற்கதிர்.

11. உணங்குதல் - உலர்தல். கலன் - கப்பல். ஆழி - கடல்.

12. எயில் - மதில். ஓரெயின்மன்னன் : அகநா. ௩௭௫ : 18.

10 - 12. சூழ்ந்த கழனிக்குக் கடலும் எயிலுக்குப் புறமுலர்ந்த கப்பலும் உவமம். 'மருதநிலத்து மதிலாதல்...அகநாடுபுக்கவருப்பம் வெளவி எனப் பாட்டிற் கூறியவாற்றானும், பிணங்குகதிர்க் கழனி... மன்னனென்றமையானும்...உணர்க' தொல். புறத்திணை. சூ. 9, ந.

பி - ம். *டார்க்குங்காவிற்பஃளி, நெடுவேலாதன். †சென்னியா ரணிந்த. ‡றுணங்குக ளுழியிற, றுணங்குகாழியிற்.



(௩௩௧) வியன்புலம் படர்ந்த பல்லா *நெடுவேறு
மடலை மாணிழ லசைவிடக் கோவலர்
வீதைை முல்லைப் பூப்பறிக் குந்து
குறுங்கோ லெறிந்த நெடுஞ்செவிக் குறுமுயல்
நெடுநீர்ப் பரப்பின் வாளையொ டுகளுந்து
தொடலை யல்குற் றொடித்தோண் மகளிர்
கடலாடிக் கயம்பாய்ந்து
கழிநெய்தற் பூக்குறாஉந்து
பைந்தழை துயல்வருஞ் செறுவிறற....
......................லத்தி
வளர வேண்டு மவளே யென்றும்
†ஆரம ருழப்பது மமரிய ளாகி
முறஞ்செவி யானை வேந்தர்

மறங்கெழு நெஞ்சங் கொண்டொளித் தோளே.

திணையும் துறையும் அவை.

................................. (ருருக)

---

1. புலம் - மேய்தற்குரிய நிலம்.

2. அசைவிட - அசையிட.

1 - 2. ஏறு அசைவிட.

3. பூப்பறிக்குந்து - பூக்களைப் பறிக்கும்; "புதன்முல்லைப் பூப்பறிக் குந்து" புறநா. ருஉ : 4.

4. கோலாலெறிந்த முயல்; "மாலை வெண்காழ் காவலர் வீச, நறும்பூம் புறவி னொடுக்குமுய லிரியும்" ஐங்குறு. சஉக.

5. உகளுந்து - துள்ளும்.

6. தொடலை - மணிக்கோவைகளால் தொடுக்கப்பட்ட மேகலை.

8. பூக்குறூஉந்து - பூக்களைப் பறிக்கும்; குறுதல் - பறித்தல்.

12. அமரியளாகி - விரும்பியவளாய்.

13. முறம்போலும் காதுகளையுடைய யானை; "முறஞ்செவி வாரணம்" (கலி. சஉ; சிலப். க0 ; 248); "முறஞ்செவி யானையுந் தேரு மாவும்" மணி. கக : 121.

பி - ம். *வெறுழ், மடலை. †ஆரமரொழிப்பதுவுமமரிய.

(௩௪௦) அணித் *தழை நுடங்க வோடி †மணிப்பொறிக்
‡குரலங் குன்றி கொள்ளு மிளையோள்
மாமகள் ....................
..............லென வினவுதி கேணீ
5 §வெடுப்பவெ ..............
................மைந்தர் தந்தை
ǂஇரும்பனை யன்ன பெருங்கை யானை
கரந்தையஞ் செறுவிற் பெயர்க்கும்
பெருந்தகை மன்னர்க்கு வரைந்திருந் தனனே.

திணையும் துறையும் அவை.

அ.........................

(௩௪௦)

---

1. தழை - தளிர்களாலும் பலவகைப் பூக்களாலும் அமைக்கப்பட்ட
ஒருவகை ஆடை; "அம்பூந் தொடலை யணித்தழை" (புறநா. ௩௪௧ : 2); "தழையுங் கோதையு மிழையு மென்றிவை, தைஇயினர் மகிழ்ந்து திளைஇ விளையாடும், மடமொழி யாயத் தவருள்" கலி. ௧௦௨ : 5 - 7.

2. குரலங்குன்றி - குன்றிமணிக் கொத்திணை.

7. "பனைக்கை மும்மத வேழ முரித்தவன்" தே. திருநா.கோயில். 'பனைக்கை' 1.

8. கரந்தை - ஒருவகைப்பூடு. செறு - வயல்.

7 - 8. "காய்த்த கரந்தை மாக்கொடி விளைவயல், கொண்டன்று தானை" பதிற். ௪௦ : 5 - 6.

வந்திறை பி - ம். *தழைத்துடங்க. †பணிப்பொரி.
§யெடுப்ப. ‡மிருபனை, இருபனை.
‡கூறலங்குன்றி.

---

(௩௪௧) வேந்துகுறை யுறவுங் கொடாஅ னேந்துகோட்
டம்பூந் தொடலை *யணித்தழை யல்குல்
செம்பொறிச் சிலம்பி †னிளையோ டந்தை

---

1. வேந்து - அரசன். குறையுறவும் - கேட்பவும். கோடு - பக்கம்.

2. தொடலை - மாலை; "தொடலைக் குறுந்தொடி" (குறள், 1135.) தழை : "அணித்தழை நுடங்க வோடி" புறநா. ௩௪௦ : 1.

தந்தை (3) கொடான் (1.)

பி - ம். *யணிந்ததழை. †னிளையோ டாதை.



எழுவிட் டமைத்த திண்ணிலைக் கதவின்
5 அரைம ணிஞ்சி நாட்கொடி * நுடங்கும்

........................

புலிக்கணத் தன்ன கடுங்கட் சுற்றமொடு
மாற்ற மாறான் மறலிய சினத்தன்
†பூக்கோ ளெனவேஎய்க் கயம்புக் கனனே
‡விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு §வைக லாகுத லொன்றோ
ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின்
╪நீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு

4. 'எழு' இன்னதென்பது "எழுவுஞ் சீப்பும்" (சிலப். கடு : 215) என்பதன் உரைகளால் அறியப்படும்; "சீப்புள் ளுறுத்துத் திண்ணெழுப் போக்கிக், காப்புள் ளுறுத்த கடிமதில் வாயில்" பெருங். க. 43 : 163 - 4.

5. அரைமண் இஞ்சி - அரைத்த மண்ணால் அமைக்கப்பட்ட மதில். நாட்கொடி - நல்லநாளிலே கட்டினகொடி; நாடோறுஞ்செய்த வெற்றிக்குக் கட்டின கொடியுமாம்; "நாட்கொடி நுடங்கும் வாயில்" (சிலப். கடு: 217 - 8); "நாடோ றெடுத்த நலம்பெறு புனைகொடி" மதுரை. 368.

7. கடுங்கட்சுற்றம் - வீரச்சுற்றம்; "வயப்புலி போலத், துஞ்சாக் கண்ணர்" (மதுரை. 643 - 4), "கொடுவரி கூடிக் குழூஉக்கொண் டனைத்தால்......நிணநிரை வேலார் நிலை", "புலிக்கணமுஞ் சீயமும் போர்க்களிறும் போல்வார்", "குயவரி வேங்கை யனைய—வயவர்" (பு. வே. 9, 25, 58), "மைதோய் வரையி னிழியும் புலிபோல மைந்தன், பெய்தாம மாலைப் பிடியினிழிந் தேகி" (சீவக. 2135) என்பவற்றிலும் வீரர்க்குப் புலி உவமிக்கப்பட்டிருத்தல் காண்க.

8. மாற்றம் - மாறுபட்டுச் சொல்லுஞ் சொல். மறலிய - போர்

செய்தற் கெழுந்த.

9. போர்க்குரிய பூவை அணிந்துகொண்டு போருக்குப் புறப்படுகவென்று தன் வீரரை ஏவிவிட்டுத் தான் நீராடுதற்குப் பொய்கையின்கட் புகுந்தான்; போர்செய்தற்குப் புறப்படுமுன் அரசர் நீராடல் மரபு; புறநா. எக : 1, அடிக்.

10. வேளா - மணஞ்செய்யப்படாத.

14. எஃகம் - வேல்.

பி - ம். *நடங்கப. †பூக்கொளெனபகயமபுக. ‡வயங்கிழைப் பொலிந்த வே...ர. §வைகலாகுக வொன்றே. ╪நேரிலையெஃகம்.





*வாரா வுலகம் புகுத லொன்றெனப்
படைதொட் டனனே குருசி லாயிடைக்
†களிறுபொரக் கலங்கிய தண்கயம் போலப்
‡பெருங்கவி னிழப்பது கொல்லோ
§மென்புனல் வைப்பினித் தண்╪பணை யூரே.[1]

திணையும் துறையும் அவை.

பரணர். (ருசக)

15. வாராவுலகம் - வீரசுவர்க்கம்.

12 - 5. ஒன்றே, ஒன்று : எண்ணிடைச்சொல்; புறநா. ருசச : 4 - 6.

ஊர் (19) கவினிழப்பது கொல்லோ (18.)

[1] இச்செய்யுளின் பொருள், நொச்சித்திணைக்கண்ணதாகிய மகண் மறுத்துமொழிதல் என்னுந்துறைக்கும் இடனாகின்றது.

பி - ம். *ஓராவுலகம். †களிறுபொற கலங்கிய மதகயம். ‡பெரு மகவனிழப். §மென்புல வைப்பின். ‡கணையூர்.

---

(௩௪௨) கானக் காக்கைக் கலிச்சிற கேய்க்கும்
மயிலைக் கண்ணிப் பெருந்தோட் குறுமகள்
ஏனோர் மகள்கொ லிவளென விதுப்புற்
றென்னொடு வினவும் வென்வே னெடுந்தகை
5 திருநயத் தக்க பண்பினிவ ணலனே
பொருநர்க் கல்லது பிறர்க்கா காதே
பைங்காற் கொக்கின் பகுவாய்ப் பிள்ளை
*மென்சேற் றடைகரை †மேய்ந்துண் டதற்பின்

---

1. கலிச்சிறகு - தழைத்தலையுடைய சிறை.

2. மயிலை - இருவாட்சி.

3. ஏனோர் மகள்கொல் - யாவருடைய மகளோ ? விதுப்புற்று - விரைந்து; "கண்விதுப்பழிதல்" (குறள், அதி. ௧௧௮) என்பதன் பொருளால் உணர்க. 4. நெடுந்தகை : விளி.

5. நயத்தக்க - விரும்பத்தக்க. நலன்: எழுவாய்.

6. பொருநர் - போர்வீரர்.

7 - 8. கொக்கின்பிள்ளை மேய்ந்தபின்.

பி - ம். *மென்சொற்றடைகரை. †மேயத்தூண்கற்பினால், மேய்ந்துண்ட கற்பினஅலின்ற.

ஆர லீன்ற வையவி முட்டை
*கூர்ந லிறவின் பிள்ளையொடு பெறூஉம்
தண்பணைக் கிழவனிவ ணந்தையும் வேந்தரும்
†பெறாஅ மையிற் பேரமர் செய்தலிற்
கழிபிணம் பிறங்குபோர் பழிகளி றெருதா
‡வாடக வைகலு §முழக்கும்
மாட்சி யவரிவ டன்னை மாரே.

திணையும் துறையும் அவை.

அரிசில்கிழார். (௩௪௨)

---

9. ஆரல் - ஒருவகைமீன். ஐயவி - வெண்சிறுகடுகு. ஆரல்மீன் முட்டைக்கு ஐயவியுவமை. 10. இறவு - இருமீன்.

11. தண்பணை - மருதநிலம். கிழவன் - உரியவன்.

13. போர்பு - போர். களிறு எருதாக; "படுபிணப் பல்போர் பழிய வாங்கி, எருதுகளி றாக வாண்மட லோச்சி" புறநா. ௩௭௦ : 15 - 6.

14. வாள் தக. 15. தன்னைமார் - தமையன்மார்.

பி - ம். *கூனலிறவு. †பெறாமையின்மையிறபேரமர். ‡வாடகை வைகலு. §முழக்கிமாட்சியிலர்.

(ந-சா ந) மீனொடுத்து நெற்குவைஇ
மிசையம்பியின் மனைமறுக்குந்து
*மனைக்குவைஇய கறிமூடையாற்

---

1. நொடுத்து - விற்று; "விலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள், வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள், யாண்டுகழி வெண்ணெ னிறைக்கு மூர", "அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள், சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்" ஐங்குறு. 48, 49.

'நொடை - விலை; மீனொடுத்து நெற்குவைஇ யென்றார் புறப்பாட்டினும்' சிலப். ரு : 24, அடியார்.

2. அம்பி - தோணி. மறுக்குந்து - மறுகச்செய்யும்.

3. கறிமூடை - மிளகுபொதி; "பொதிமூடைப் போரேறி" பட்டின. 137.

பி - ம். *மனைமறுக்குவைஇய.



கலிச் *சும்மைய கரைகலக்குறுந்து
கலந்தந்த பொற்பரிசம்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
மலைத்தாரமுங் கடற்றாரமும்
தலைப்பெய்து வருநர்க்கியும்

புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
†முழங்குகடன் முழவின் ‡முசு றி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்
புரைய ரல்லோர் ‡‡வரையல ளிவளெனத்
தந்தையுங் கொடாஅ னாயின் வந்தோர்
வாய்ப்பட விறுத்த வேணி யாயிடை
வருந்தின்று §கொல்லோ தானே பருந்துயிர்த்

---

4. கலிச்சும்மைய - மிக்க முழக்கத்தையுடைய. கலக்குறுந்து - கலக்கும்.

5. கலம் - கப்பல். பொன்பரிசத்தை.

6. தோணி - ஓடம். சேர்க்குந்து - சேர்க்கும்.

7. தாரம் - பலபண்டம்.

8. தலைப்பெய்து - கலந்து.

9. புனலங்கள்ளென்றது கள்ளின் மிகுதிபற்றி. குட்டுவன் - குட்டநாட்டை யுடையவன்; "போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ" பதிற். உரு : 9.

'பொன்' என்பது 'பொலம்' என்று செய்யுட்கண் வருமென்பதற்குப் பொலந்தார்க் குட்டுவனென்பது மேற்கோள்; தொல். புள்ளி. சூ. 61, ந.

10. முசுறி - சேரநாட்டிலுள்ளதோர் ஊர்.

9 - 10. கள்ளினையுடைய முசுறி.

12. புரையர் - ஒத்தவர். வரையலள் - மணஞ்செய்யப்படாள்; "நிரலல் லோர்க்குத் தரலோ வில்லென" புறநா. ருசடு : 14.

14. வாய்ப்பட - வழிப்பட. எணி - மதிலிற் சார்த்தி ஏறுதற்குரியது; எல்லையுமாம்.

பி - ம். *சும்மையகுறுந்து, சும்மையக்குந்து. †முழங்கடன். ‡முசிறி. ╪வரையலனி வனலனே. §கொல்லெதானே.



திடைமதிற் சேக்கும் புரிசைப்
படைமயங் காரிடை நெடுநெ லூரே.

திணையும் துறையும் அவை.
பரணர். (ருசரு)

---

15 - 6. பருந்து உயிர்த்து இடைமதில் சேக்கும் - பருந்துகள் இடைமதிலில் தங்கி இளைப்பாறும்; "பருந்துபறக் கல்லாப் பார்வற் பாசறை", "பருந்திருந் துகக்கும் பன்மா ணல்லில்" மதுரை. 231, 502.

17. "எறிபடை மயங்கிய வெருவரு ஞாட்பின்" (புறநா. கஎஅ : 7); "மயங்கமர் மாறட்டு மண்வௌவி வருபவர்" கலி. கக : 9.

---

(௩சச) செங்கோ லுண்ட பைந்தோட்டு மஞ்ஞை
*செறிவளை மகளி ரோப்பலிற் பறந்தெழுந்து
†துறைநணி மருதத் திறுக்கு மூரொடு
நிறைசால் விழுப்பொரு டருத லொன்றோ
புகைபடு கூரெரி பரப்பிப் பகைசெய்து
பண்பி லாண்மை தருத லொன்றோ
இரண்டினு ளொன்றா காமையோ வரிதே
காஞ்சிப் பனிமுறி யாரங் கண்ணி..
கணிமே வந்தவ ளல்குலவ் வரியே.

‡திணையும் துறையும் அவை.

....................அடை நெடுங்கல்வியார். (௩சச)

---

1. மஞ்ஞை - மயில்.

2. ஓப்பலின் - ஓட்டுதலால்.

3. துறைநணிமருதம் - நீர்த்துறைக்கு அண்ணிதான மருதமரம்; புறநா. ௧௫௪ : 1, உசரு : 6 - 7; "மருதிமிழ்ந் தோங்கிய பெருந்துறைத், ததைந்த காஞ்சி", "துறைநணி மருத மேறி" (பதிற். உரு : 18, உஎ : 6.) இறுக்கும் - தங்கும்.

4, 6. ஒன்றோ : எண்ணிடைச்சொல்; புறநா. ௩சக : 12 - 5.

7. இரண்டனுள் ஒன்று ஆகும்.

8. காஞ்சிமுறி - காஞ்சித்தளிர்.

பி - ம். *செற்றிவளை மகளிரோம்ப விற்பிறந் தெழுத்து. †துறை களி. ‡திணை - வாகை; துறை - மூதின்முல்லை.



(ஙசரு) களிறணைப்பக் கலங்கின, காஅ
தேரோடத் துகள்கெழுமின, தெருவு
*மாமறுகலின் மயக்குற்றன, வழி
கலங்கழாஅலிற், றுறை, †கலக்குற்றன
‡தெறன்மறவ ரிறைகூர்தலிற்
பொறைமலிந்து நிலனெளிய
வந்தோர் பலரே வம்ப வேந்தர்
பிடியுயிர்ப் பன்ன கைகவ ரிரும்பின்
ஓவுற ழிரும்புறங் காவல் கண்ணிக்
கருங்கண் கொண்ட §நெருங்கல் வெம்முலை
மைய னோக்கிற் றையலை நயந்தோர்
அளியர் தாமேயிவ டன்னை மாரே
செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி
‖நிரலல் லோர்க்குத் தரலோ வில்லெனக்

1. "வினைநவில் யானை பிணிப்ப, வேர்துளங் கினநம் மூருண் மரனே", "செந்நுதல் யானை பிணிப்ப, வருந்தல மன்னெம் பெருந்துறை மரனே" புறநா. ஙசஎ : 12 - 3, ஙசஅ : 8 - 9.

1 - 2. இவை சீர்கூனாய் வந்ததற்கு மேற்கோள்; யா. வி. ஒழிபு. சூ. 2.

3. இவ்வடி வஞ்சியடியினிறுதியில் 'வழி' எனத் தனிச்சொல் வந்ததற்கு மேற்கோள்; யா. வி. ஒழிபு. சூ. 1; இ. வி. சூ. 751, உரை.

4. கழாலின் - கழுவுதலால்.

வஞ்சியடியின் நடுவில் 'துறை' என்பது தனிச்சொல்லாகியும் கூனாகியும் வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; யா. வி. ஒழிபு. சூ. 1, 2; இ. வி. சூ. 751, உரை.

5. இறைகூர்தல் - தங்குதல். 6. பொறை - பாரம்.

7. வம்பவேந்தர் - புதிய அரசர்.

6 - 7. சேனைப்பாரத்தால் நிலம்நெளிதல் : புறநா. உரு : 15; "கார்விளை மேக மன்ன...நிலனெளி பரந்த வன்றே" சீவக. 433.

8. கைகவரிரும்பு - உலைத்துருத்தியின் வாயிரும்பு.

13. செருப்புகல் வேண்டி - போரை விரும்பி; "போரொனிற் புகலும் புனைகழன் மறவர்" புறநா. கக : 9.

14. நிரல் - வரிசை. தருதலில்லையென்று; புறநா. கசரு : 12.

பி - ம். *மாவழங்கவின். †கலக்கானுதே. ‡செறன்மறவர். §நெருங்கண் வெம்முலை, நெடுங்கண் மென்முலை. ‡‡நிரல்லோர்க்குந்தரல்.



15 கழிப்பிணிப் பலகையர் *கதுவாய் வாளர்

குழாஅங் கொண்ட குருதியம் புலவொடு
கழாஅத் தலையர் கருங்கடை நெடுவேல்
†இன்ன மறவர்த் தாயினு மன்னோ
என்னா வதுகொ றானே
‡பன்னல் வேலிப் பணைநல் லூரே.[1]

திணையும் துறையும் அவை.
அவனை அவர். (௩௪௫)

---

15. கழிகளாற் கட்டப்பட்ட கேடகத்தை யுடையர்; "வள்ளித்தண்டை" (சீவக. 2218.) கதுவாய் - வடு; "எறிந்திலை முறிந்த கதுவாய் வேலின்" புறநா. ௩௪௭ : 4.

17. கழாத்தலையர் - கழுவாத தலையினையுடையர்.

19. மு. புறநா. ௩௪௭ : 9.

18 - 9. 'அன்னோ' என்பது இரக்கக்குறிப்புணர்த்தியதற்கு இவ்வடிகள் மேற்கோள்; தொல். இடை. சூ. 34, ந.

20. பன்னல் - பருத்தி; "பருத்தி வேலிச் சீறூர்", "பருத்தி வேலி ...அங்குடிச் சீறூர்" புறநா. ௨௯௯ : 1, ௩௨௪ : 7 - 8.

[1]மு. காஞ்சித்திணைத்துறைகளுள், மகட்பாற்காஞ்சிக்கு மேற்கோள் காட்டி, 'நிரலல்லோர்க்குத் தரலோவில்லென வென்றலின், அரசர்க்கு மகட்கொடைக்குரியரல்லாத அனைநிலைவகையோர்பாற்பட்டது' என்பர்; தொல். புறத்திணை. சூ. 24, ந.

பி - ம். *ததுவாய். †இன்னம்பிறவாததாயினும். ‡பன்னெல் வேலி.

(௩௪௬) பிற..........ளபாலென மடுத்தலின்
ஈன்ற தாயோ வேண்டா ளல்லள்
*கல்வியெ னென்னும் வல்லாண் சிறாஅன்
†ஒல்வே னல்ல னதுவா யாகுதல்
அழிந்தோ ரழிய வொழிந்தோ ரொக்கற்

3 - 4. தன்மையின்கட் படர்க்கை வந்ததற்கு இவ்வடிகள் மேற்கோள்; நன். சூ. 379, மயிலை.; நன். வி. சூ. 380; இ. வி. சூ. 300, உரை.

பி - ம். *கல்வியென்னும் வல்லான். †ஒல்வ...ாதகுடியே.



பேணுநர்ப் பெறாஅது விளியும்
புன்றலைப் பெரும்பாழ் செயுமிவ ணலனே.

திணையும் துறையும் அவை.
அண்டர்மகன் குறுவழுதி.

(௩௪௬)

(௩௪௭) உண்போன் றானறுங் கள்ளி னிடச்சில

நாவிடைப் *பஃறேர் கோலச் சிவந்த
ஒளிறொள் வாடக் குழைந்தபைந் தும்பை
எறிந்திலை முறிந்த †கதுவாய் வேலின்
மணநாறு மார்பின் மறப்போ ‡ரகுதை
குண்டுநீர் வரைப்பிற் கூட லன்ன
குவையிருங் கூந்தல் §வருமுலை சேப்ப

. . . . . . . . . . . . . . . . . . . .
வென்று வதுகொ ளூனே. . . .
விளங்குறு பராரைய வாயினும் வேந்தர்
வினைநவில் யானை பிணிப்ப
வேர்துளங் கினநம் ‖ஊருண் மரனே.

திணையும் துறையும் அவை.

கபிலர்.

(௩௪௭)

---

4. கதுவாய்வேல் - வடுப்பட்ட வேல்; "கதுவாய் போகிய துதிவா யெஃகமொடு" புறநா. ௩௫௩ : 15.

5. அகுதை - ஓர் உபகாரி; புறநா. ௨௩௩ : 3, அடிக்.

6. கூடல் - மதுரை. 9. ஒ. புறநா. ௩௪௫ : 19.

12 - 3. யானை கட்டின மரம்; புறநா. ௩௪௫ : 1, ௩௪௮ : 8 - 9.

பி - ம். *பஃறொகொலச். †கதுவாய்நேமி, கதுவாய்வாளர். ‡ரஃதை. §வருமமம வேநதாவினை நவிலயானை பிறணிப்ப, மணநாறு மாரபின மறபபொராலசெபப. ‖ஊருனே மானே.

(௩௪௮) வெண்ணெல் லரிஞர் தண்ணுமை *வெரீஇக்
†கண்மடற் கொண்ட தீந்தே னிரியக்

1. "வெண்ணெ லரிநர் தண்ணுமை வெரீஇப், பழனப் பல்புள் ளிரிய" (நற். ௩௫௦); "வெண்ணெ லரிநர் பின்றைத் ததும்பும்,

பி - ம். *வெரீஇப்பக். †கண்ணகொண்ட.



*கள்ளரிக்குங் குயஞ் †சிறுசின்
மீன்சீவும் பாண்சேரி
வாய்மொழித் ‡தழும்ப னூணூ ரன்ன
குவளை யுண்க ணிவளைத் தாயே
╪ஈனு ளாயின ளாயி னானது
நிழறொறு நெடுந்தேர் நிற்ப வயின்றொறுஞ்
செந்நுதல் யானை பிணிப்ப
§வருந்தல மன்னெம் பெருந்துறை மரனே.

திணையும் துறையும் அவை.
பரணர். (௩௪௮)

தண்ணுமை வெரீஇய தடந்தா ணாரை", "வெண்ணெ லரிநர் மடிவாய்த் தண்ணுமை, பன்மலர்ப் பொய்கைப் படுபு ளோப்பும்" (அகநா. ௪௦, ௨௦௪); "வெண்ணெ லரிநர் தண்ணுமை வெரீஇச், செங்க ணெருமை

யினம்பிரி யொருத்தல்" மலைபடு. 471 - 2.

4. மு. மதுரைக். 269.

5. வாய்மொழி - மெய்ம்மொழி. தழும்பன் - ஓர் உபகாரி; வழுதுணைப்பெரும்பெயர்த்தழும்பனென்றும் இவன் வழங்கப்படுவன்; "பெரும்பு, ணேஎர் தழும்ப னூணூ ராங்கண்" (நற். ௩00); "பிடிமிதி வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன், கடிமதில் வரைப்பி னூணூர்" அகநா. ௨௨௭.

பி - ம். *கள்ளிரிக்குஞ் சிறுகனவும். †சிறுமீன். ‡தழும்பனூரனன. ╪சனள். §வருந்தின.

---

(௩௪௯)* நுதிவேல் கொண்டு † நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே தந்தையும்
நெடிய வல்லது பணிந்துமொழி யலனே
இஃதிவர் படிவ மாயின் வையெயிற்
‡றரிமதர் மழைக்க ணம்மா வரிவை

---

4. படிவம் - விரதம்.

பி - ம். *நுதிபல. †நுதலவிளையா துடை. ‡தெரிமதர்.

மரம்படு *சிறுதீப் போல
அணங்கா யினடான் பிறந்த வூர்க்கே.[1]

திணையும் துறையும் அவை.

மதுரை மருதனிளநாகனுர். (ருசக)

---

6 - 7. "முளைஎிள நெருப்பின் முதக்குறைந் தனளே" தொல். அகத். சூ. 54, ந. மேற். 4 - 7. தக்கயாகப்பரணி, 304, மேற்.

[1]பு. காஞ்சித்திணைத்துறைகளுள், நிகர்த்துமேல்வந்த வேந்தனொடு முதிகுடி, மகட்பாடு அஞ்சிய மகட்பாற்காஞ்சியென்னுந் துறைக்கு மேற்கோள்காட்டி, 'இது பெருஞ்சிக்கல்கிழான் மகட்கொடை மறுத்தது' என்பர்; தொல். புறத்திணை. சூ. 19, இளம்.; ஷை. ஷை. ஷை. 24, ந.

பி - ம். *செநதீபபோலடி.

---

(ருடுO) தூர்ந்த கிடங்கிற் சோர்ந்த ஞாயிற்
சிதைந்த விஞ்சிக் கதுவாய் மூதூர்
யாங்கா வதுகொ றுனே தாங்காது
படுமழை யுருமி னிரங்கு முரசிற்
கடுமான் வேந்தர் காலை வந்தெம்
நெடுநிலை வாயிற் கொட்குவர் மாதோ
*பொருதா தமருவ ரல்லர் போருழந்
தடுமுரண் முன்பிற் றன்னைய ரேந்திய

வடிவே லெஃகிற் †சிவந்த வுண்கட்
டொடிபிறழ் முன்கை யிளையோள்
அணிநல் லாகத் தரும்பிய சுணங்கே.

திணையும் துறையும் அவை.

மதுரையோலைக்கடைக் ‡கண்ணம்புகுந்தாராயத்தனார். (௩௫௰)

2. கதுவாய் : புறநா. ௩௪௫ : 15, ௩௪௭ : 4.

3. யாங்கு - எப்படி ?

4. "இடிமுர சியம்ப" பரி. ௪ : 19.

9. "அமருண்கண், ஏந்துகோட் டெழில்யானை யொன்னாதார்க் கவன் வேலிற், சேந்து" (கலி. ௫௭ : 9 - 11); "அடையார்த் துரந்த வருந்திற லயிலவன், படைதலைப் பெயர்த்த கறையெஃகம் போலக், கடைசிவந் தனவே கருங்கயன் மழைக்கண்" நம்பி. சூ. 147, மேற்.

பி - ம். *பொருந்தாது. †சிவந்தபுணகட்டொடிமருள் முனகை. ‡கண்ணம் புகுதநாராயதனார்.



(௩௫௧) படுமணி மருங்கின பணைத்தாள் யானையும்
கொடிநுடங்கு மிசைய தேரு மாவும்
படையமை மறவரொடு துவன்றிக் கல்லெனக்
கடல்கண் டன்ன கண்ணகன் றானை
வென்றெறி முரசின் வேந்த ரென்றும்

வண்கை யெயினன் வாகை யன்ன
இவணலந் தாரா தமைகுவ ரல்லர்
என்னு வதுகொ ளுனே தெண்ணீர்ப்
பொய்கை மேய்ந்த செவ்வரி நாரை
தேங்கொண் மருதின் பூஞ்சினை முனையிற்
*காமரு காஞ்சி துஞ்சும்
ஏமஞ்சால் சிறப்பினிப் பணைநல் லூரே.

திணையும் துறையும் அவை.
மதுரைப் படைமங்கமன்னியார். (ருடுக)

---

1. "படுமணி யிரட்டு மருங்கின்" முருகு. 80.

1 - 3. புறநா. இஇ : 7 - 8, அடிக்.

4. "கடலென, வானீர்க் கூக்குந் தானை" புறநா. கள : 36 - 7.

5. "வென்றெறி முரசின் வேந்தர்" புறநா. ககஉ : 4.

6. எயினன் - ஒருபகாரி ; வாகை - அவனுடைய ஊர்.

7. தருதல், தந்தையின் தொழில்.

வேந்தர் (5) அமைகுவரல்லர் (7.)

8. என்னுவது கொளுனே : புறநா. சுரு : 11, ருசுடு : 19, ருசுஎ : 9.

10. தேம் - இனிமை. முனையின் - வெறுத்தால்.

11. காஞ்சி - ஒருவகைமரம்.

ஊர் (12) என்னுவதுகொல் ? (8.)

பி - ம். *காமர் காஞ்சில்.

(௩௫௨) தேஎங்கொண்ட வெண்மண்டையான்
வீ....................கறக்குந்து

1. தேம் - கள்.



அவல்வகுத்த பசுங்குடையாற்
புதன்முல்லைப் பூப்பறிக்குந்து
ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
குன்றேறிப் புனற்பாயிற்
புறவாயாற் புனல்வள..........
............நொடைநறவின்
மாவண் டித்தன் வெண்ணெல் வேலி
உறந்தை யன்ன வுரைசா னன்கலம்
கொடுப்பவுங் கொளாஅ னெ............
...........ர்தந்த நாகிள வேங்கையிற்
கதிர்த்தொளி திகழு நுண்பல் சுணங்கின்
மாக்கண் மலர்ந்த முலைய டன்னையும்
சிறுகோ லுளையும் புரவிெ..........

. . . . . . . . . . . . . . . . . . . . . யமரே.

திணையும் துறையும் அவை.

பரணர். (௬௫௨)

---

3. அவல் - பள்ளம். குடை - பனமட்டையாற் செய்யப்பட்ட ஒரு கருவி; பனம்பட்டையெனத் தென்னாட்டில் வழங்கும்; "மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை, இரும்பனம் பசுங்குடைப் பலவுடன் பொதிந்து" குறுந். ௧௬௮ : 1 - 2.

4. புதற்றளவின் பூ : புறநா. ௩௧௫.

5. மு. புறநா. ௬௩ : 12. வள்ளி - வளை.

6. குன்று - மணற்குன்று ; எக்கர்.

8. நொடை - விலை.

10. கலம் - ஆபரணம்.

9 - 10. தித்தன் - ஒரு சோழன். உறந்தை - உறையூர்; புறநா. ௩௩௫ : 18 - 9; "நொச்சி வேலித் தித்த னுறந்தை" அகநா. ௧௨௨.

12 - 3. சுணங்கிற்கு வேங்கைப்பூ உவமை: "நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சிக், களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கிற்" (சிறுபாண். 23 - 4); "வேங்கை வென்ற சுணங்கின்" (ஐங். ௩௨௪); "வேங்கை, ஊழுறு நறுவீ கடுப்பக் கேழ்கொள, ஆகத் தரும்பிய மாசறு சுணங் கின்", "பொன்வீ வேங்கைப் புதுமலர் புரைய, நன்னிறத் தெழுந்த சுணங் கணி வனமுலை" (அகநா. ௧௫௪ : 10 - 12, ௩௧௧ : 8 - 9) ; "வேங்கைவீ, முற்றெழில் கொண்ட சுணங்கணி பூணகம்" கலி. ௬௪ : 26 - 7.

14. மா - கருமை. தன்னை - தமையன்.

(௩௫௩) ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த
பொலஞ்செய் பல்கா சணிந்த வல்குல்
ஈகைக் கண்ணி யிலங்கத் தைஇத்
தருமமொ டியல்வோள் சாய னோக்கித்
தவிர்த்த தேரை விளர்த்த கண்ணை
வினவ லானா வெல்போ ரண்ணல்
யார்மக ளென்போய் கூறக் கேளினிக்
குன்றுகண் டன்ன நிலைப்பல் போர்பு
நாட்கடா வழித்த நனந்தலைக் குப்பை
வல்வி லிளையர்க் கல்குபத மாற்றாத்
தொல்குடி மன்னன் மகளே முன்னாட்
கூறி வந்த மாமுது வேந்தர்க்கு

. . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . யுழக்கிக் குருதி யோட்டிக்
கதுவாய் போகிய *துதிவா யெஃகமொடு
பஞ்சியுங் களையாப் புண்ணர்
அஞ்சுதக வுடையரிவ டன்னை மாரே.

திணையும் துறையும் அவை.

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார். (௩௫௩)

---

1. கம்மியன் - பொற்கொல்லன்.
3. ஈகைக்கண்ணி - பொன்னாலாகிய மாலையை; " ஈகையங்

கண்ணிபோற், பிணிநெகி ழலர்வேங்கை விரிந்தபூ" (கலி. ௩௨.) தைஇ - அணிந்து.

5. நிறுத்திய தேரையுடையையாய்; வெளுத்த கண்ணையுடையை யாய்.

6. அண்ணல்; விளி. 8. போர்பு - போர், குன்று - சிறுமலை.

8 - 9. காலையிற் போரையழித்துக் கடாவிட்ட தானியக்குப்பைகளை.

10. அல்குபதம் - இட்டுவைத்துண்ணும் உணவு; "சிலைகெழு குறவர்க் கல்குமிசை வாகும்" (புறநா. ௨௩௬ : 2.) மாற்று - இல்லை யென்றது. 12. கூறி - மணம்பேசி.

15. கதுவாய் - வடு. துதி - நுதி. எஃகம் - வேல்.

16. பஞ்சி - துகில்; "நெய்க்கிழி வைக்கப்பட்டார்", "புண்மேற் கிழிபோற் றுறத்தல்" சீவக. 818, 2960.

17. தன்னைமார் - தமையன்மார்.

பி - ம். *நுதிவாய்.



(௩௫௪) அரைசுதலை வரினு மடங்க லானா
நிரைகா ழெஃக நீரின் மூழ்கப்
புரையோர் சேர்ந்தெனத் தந்தையும் பெயர்க்கும்
வயலமர் கழனி வாயிற் பொய்கைக்
கயலார் நாரை *யுகைத்த வாளை
புனலாடு மகளிர் வளமனை யொய்யும்
ஊர்கவி னிழப்பவும் வருவது கொல்லோ

சுணங்கணிந் தெழிலிய †வணர்ந்தேந் திளமுலை
வீங்கிறைப் பணைத்தோள் மடந்தை
மான்பிணை யன்ன மகிழ்மட நோக்கே.

திணையும் துறையும் அவை.

பரணர். (௫௬௪)

---

1. அடங்கல் ஆறு - அடங்குதலமையாத.

2. காழ் - காம்பு.

2 - 3. மூழ்குதற்கு எஃகத்தையும் தந்தைபெயர்ப்பான்; மூழ்கல் இங்கே மண்ணுமங்கலமெனப்படும்; இதுபின் நிகழ்வது; "நீரேந்தி நெய்ம் மிதந்து நிணம்வாய்ப்பில்கி யழல்விம்மிப், போரேந்திப் பூவணிந்து புலவு நாறும் புகழ்வேலோன்" (சீவக. 2599) என்பதனாலும் அறியலாகும்.

4. கழனி வாயிலினும் பொய்கையிலும் ; வாயில் - வழி.

5. கயல் ஆர் - கயல்மீனை உண்ணுகின்ற. நாரையை உகைத்த வாளை மீனை.

6. ஒய்யும் - கொண்டுசெல்லும். 8. அணந்து - அண்ணாந்து.

9. இறை - சந்து; கலி. ௫௮ : 26.

10. "பிணையெழின் மானோக்கு" கலி. ௬௮ : 2.

மடநோக்கு (10) ஊர்கவினிழப்பவும் வருவதுகொல்லோ (7.)

பி - ம். *யுதைத்த. †வனைந்தேந்து.

---

(௱௫௫) மதிலு ஞாயி லின்றே கிடங்கும்
நீஇ ரின்மையிற் கன்றுமேய்ந் துகளும்

1. ஞாயில் - மதிலின்மேலுள்ள எப்புழைக்கு நடுவாய் எய்து மறையும் சூட்டு; சீவக. 105, ந.



ஊரது நிலைமையு மிதுவே[1]

.................................

..........................................
.......................................... (௱௫௫)

[1]இதன்பின், ௱௭௬ - ஆம் பாட்டுமுழுவதும் ஆசிரியர் பெயருடன் சில பழைய ஏட்டுப் பிரதிகளில் தவறி வரையப்பெற்றுள்ளது.

(௱௫௬) களரிபரந்து *கள்ளி போகிப்
பகலுங் †கூவுங் கூகையொடு ‡பிறழ்பல்
ஈம விளக்கிற் பேஎய் மகளிரொ
டஞ்சுவந் ‖தன்றிம் மஞ்சுபடு முதுகாடு
நெஞ்சமர் [1]காதல ரழுத கண்ணீர்
என்புபடு சுடலை வெண்ணீ றவிப்ப
§எல்லார் புறனுந் தான்கண் டுலகத்து
மன்பதைக் கெல்லாந் தானாய்த்

தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே.[2]

திணையும் துறையும் அவை.

||தாயங்கண்ணனார். (௩௫௬)

---

1. களரி - காடு.
2. புறநா. ௩௬௨ : 17 - 8 ; "நன்பகலுங் கூகை நகும்" பு. வே. 39.
3. ஈமவிளக்கு - பிணஞ்சுடும் விறகின் அழல்.
4. அஞ்சுவந்தன்று - அச்சம் வரப்பெற்றது. முதுகாடு - மயானம்.
5. அமர்காதலர் - விரும்பிய காதலையுடைய மகளிர்.
6. என்பு - எலும்பு.
7. எல்லாருடைய பிற்காலத்தையும் தான்கண்டு.
8. மன்பதை - மக்கட்டொகுதி. தானாய் - தானே இருப்பிடமாகி; "மக்கட் பிணத்த சுடுகாடு" நாலடி. 121.

[1]இந்நூலின் முதற்பதிப்பில் இதன் முன்பிருந்த பகுதி சிலபிரதிகளில் ௩௫௫ - ஆம் பாட்டின் முதலில் வரையப்பட்டிருந்தமையாலும், இச்செய் யுள் பழையவுரைகளில் இந்த அளவிலேயே மேற்கோளாகக் காட்டப்பட் டிருந்தமையாலும், பொருண் முடிபாலும் இங்ஙனம் பதிப்பிக்கலாயிற்று.

[2]மு. இச்செய்யுள் காடுவாழ்த்தென்னுந் துறைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. 19, இளம்.; ஷை. ஷை. ஷை. 24, ந.

பி - ம். *கள்ளிபொங்கிப. †கூஉங். ‡பிறழ்வால. ╪தன்றிமஞ்சு. §எல்லாப். ||கதையங்கண்ணனார்.

(௫௬௭) குன்றுதலை மணந்த மலைபிணித் தியாத்தமண்
பொதுமை சுட்டிய மூவ ருலகமும்
பொதுமை யின்றி யாண்டிசி னோர்க்கும்
ஆண்ட வன்றே யாண்டுக டுணையே
வைத்த தன்றே வெறுக்கை வி......
..............................ணை
புணைகை விட்டோர்க் கரிதே துணையழத்
தொக்குயிர் வெளவுங் காலை
இக்கரை நின்றிவர்ந் தக்கரை *கொளலே.

திணை - அது ; துறை..............பெருங்காஞ்சியுமாம்.

பிரமனார். (௫௬௭)

---

1. குன்று - சிறுமலை. பிணித்து யாத்த - மிக உறுதியாக யாக்கப் பெற்ற.

2. சுட்டிய - நன்கு மதிக்கப்பெற்ற. மூவருலகம் - சேரசோழபாண்டியருடைய நாடுகள்; 'உலகம்' என்பது பூமியின் ஏகதேசத்திற்கும் வழங்கும்; "மாயோன் மேய காடுறை யுலகமும்" தொல். அகத்திணை. சூ. 5.

3. பொதுமையின்றி-சிறப்பாக. ஆண்டிசினோர்க்கும்-ஆண்டோர்க்கும்.

4 - 5. ஆண்டுகள் - வாழ்நாட்கள். வெறுக்கை துணை வைத்ததன்றே - பொற்குவியல் துணையாக வைக்கப் பெற்றதன்று; அழியுந் தன்மையதென்றபடி.

7. புணை - தெப்பம். துணை - மனைவி.

8. கூற்றுவன்தமர் வந்து கூடி உயிரை வெளவுங்காலத்தில்.

9. உக்கரை - அக்கரை; வீட்டுலகம்.

கொளல் (9) அரிது (7.)

பி - ம். *கொளவே.

---

(நருஅ) பருதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநிலம்
ஒருபக லெழுவ ரெய்தி யற்றே

---

1. பருதி - சூரியன். பயம் - பிரயோசனம்.

2. பகல் - நாள்; ஒரு முகூர்த்தமுமாம். எழுவரைத் தலைவராக எய்திய அத்தன்மையையுடையது.



வையமுந் தவமுந் *தூக்கிற் றவத்துக்
†கையவி யனைத்து மாற்றா தாகலிற்
கைவிட் டனரே காதல ரதனால்
விட்டோரை ‡விடாஅ டிருவே
§விடாஅ தோரிவள் விடப்பட் டோரே.[1]

திணை - அது ; துறை - மனையறம் துறவறம்.

‡வான்மீகியார். (நருஅ)

3. வையம் - பூமி. தூக்கின் - சீர்தூக்கினால்.

4. ஐயவி - வெண்சிறுகடுகு. ஆற்றாது - சீர் நில்லாது.

3 - 4. தவத்திற்கு வையம் ஐயவியளவும் நிறையொவ்வாது; "ஏமநீ ருலகமோ ரிம்மிப் பாலென, நாமவே னரபதி நீக்கி நன்கலம், தூமமார் மாலையுந் துறக்கின் றனரோ" சீவக. 3027.

5. காதலர் - வீட்டில் விருப்பமுடையோர்.

6. பற்றுவிட்டோரை; "நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான், றன்னையே தான்வேண்டுஞ் செல்வம்" திவ். பெருமாள். ௩ : 9.

7. விடாதோர் - விருப்பமொழியாதவர்கள்.

[1]மு. தொல். புறத்திணை. சூ. 21, ந. மேற்.

பி - ம். * தூக்கிறறவத்திறகைவினையவினைத்தும். †ஐயவித் துணையும். ‡விடாது திருவே. §விடாதோரிவண். ╪வான்மீகையார்.

---

(௩௫௬) பாறுபடப் பறைந்த பன்மாறு மருங்கின்
வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு
பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல
*பேஎய் மகளிர் பிணந்தழூஉப் பற்றி
விளரூன் றின்ற வெம்புலான் †மெய்யர்
களரி மருங்கிற் கால்பெயர்த் தாடி
ஈம விளக்கின் வெருவரப் பேரும்
காடுமுன் னினரே நாடுகொண் டோரும்

1. பாறுபட - கெட. பறைந்த - தேய்ந்த. 2. கூகை - கோட்டான்
3. பல்ல - பல்லையுடையனவாய். 4. தழூஉப்பற்றி - தழுவி.
5. விளர் - வெண்மை; "விளரூன் றின்ற வீங்குசிலை மறவர்" "விளரூன் றின்ற வேட்கை" அகநா. அக : 10, உகு : 15.

8. காடு - மயானம்.

பி - ம். *பேஎமகளிர். †மெயயகளரி.



நினக்கும் வருதல் வைக லற்றே
வசையு நிற்கு மிசையு நிற்கும்
அதனால், வசைநீக்கி யிசைவேண்டியும்
நசைவேண்டாது நன்றுமொழிந்தும்
*நிலவுக்கோட்டுப் பலகளிற்றொடு
பொலம்படைய †மாமயங்கிட
இழைகிளர் நெடுந்தே ரிரவலர்க் கருகாது
கொள்ளென ‡விடுவை யாயின் வெள்ளென
ஆண்டுநீ பெயர்ந்த பின்னும்
ஈண்டுநீடு விளங்குநீ யெய்திய புகழே.

திணை - அது ; துறை - பேருங்காஞ்சி.

அந்துவன்கீரனைக் காவட்டனார். (௩௫௯)

9. வைகல் - கழிதல். நினக்கும் வைகல் வருதல் அற்று.

10. வசை - பழி. இசை - புகழ்.

10 - 12. "கெடுவ லெனப்பட்டக் கண்ணும் தனக்கோர், வடுவல்ல செய்தலே வேண்டு - நெடுவரை, முற்றுநீ ராழி வரையகத் தீண்டிய, கற் றேயுந் தேயாது சொல்" பழ. 394. 14. பொலம்படை - பொற்கலனை.

15. இழைகிளர் நெடுந்தேர் : புறநா. கஉங : 4, அடிக்.; அருகாது - குறையாமல்.

16. விடுவையாயின் - கொடுப்பாயாயின்; 'இடுவை' என்று பிரிப் பினும் பொருந்தும். வெள்ளென - யாவர்க்கும் தெரிய; புறநா. உ0எ : 9.

18. புகழ் நீடுவிளங்கும்.

பி - ம். *நிலவுதடோடு. †மாமயங்கி. ‡விடுகையாயின. ‡‡அந்த பன கிரனைத தகா நட்டனர்.

---

(நஉகூ0) *பெரிதாராச் சிறுசினத்தர்
சிலசொல்லாற் பலகேள்வியர்
நுண்ணுணர்வினாற் †பெருங்கொடையர்

---

2. "பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற, சிலசொல்ல றேற்றா தவர்" (குறள், 649.) சொல்லால் - சொல்லோடு.

பி - ம். *பெரிதாராற சிறு சினததா. †பருங்கொடை.

கலுழ்நனையாற் றண்டேறலர்
கனிகுய்யாற் கொழூந்துவையர்
*தாழுவந்து தழூஉமொழியர்
†பயனுறப்பப் பலர்க்காற்றி
ஏம மாக விந்நில மாண்டோர்
சிலரே பெரும கேளினி நாளும்
பலரே தகையஃ தறியா தோரே
அன்னோர் செல்வமு மன்னி நில்லா
தின்னு மற்றதன் பண்பே யதனால்
நிச்சமு ‡மொழுக்க முட்டிலை பரிசில்
நச்சுவர் கையி ╪னிரப்ப லோம்புமதி யச்சுவரப்
§பாறிறை கொண்ட பறந்தலை மாகத
கள்ளி ||போகிய களரி மருங்கின்
வெள்ளி னிறுத்த பின்றைக் கள்ளொடு
**புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி
புலைய னேவப் புன்மே லமர்ந்துண்
டழல்வாய்ப் புக்க பின்னும்
பலர்வாய்த் திராஅர் பருத்துண் டோரே.

††திணையும் துறையும் அவை.

‡‡தந்துமாறனைச் சங்கவருணரென்னும் நாகரியர் பாடியது. (௩௬௦)

4. கலுழ் நனை - கலங்கிய கள்.

5. குய் - நறுமணப்புகை. துவை - துவையல்.

6. தாழ் உவந்து - வணங்குதலை விரும்பி. 7. ஆற்றி - கொடுத்து.

10. தகையஃது - மேற்கூறிய தன்மையை.

13. முட்டிலை - குறைபாடில்லாயாய்.

14. இரப்பல் ஓம்பு - இரப்புதலைப் பாதுகாப்பாயாக.

16. புறநா. ௨௨௫ : 7, ௨௪௫ : 3, ௩௫௬ : 1.

17. வெள்ளில் - பாடை. நிறுத்த - நிறுத்திய.

18. புல் - தருப்பை. அவிழ் - பருக்கை. வல்சி - உணவு.

19. "உப்பிலிப் புழுக்கல் காட்டுட் புலைமக னுகுப்ப வேகக், கைப்பலி யுண்டு" (சீவக. 2984) என்பதற்கு இவ்வடி மேற்கோள்.

16 - 9. புறநா. ௩௬௩ : 10 - 14.

பி - ம். *தாழுவநதழுஉம். †பானுறுப்ப. ‡ஒழுக்கமும். ‡இரப்ப வோமபுமதியஞ்சுவரப். §பாறிரை. ||பொதியகளரி. **புகலகலத்திடட. ††இதவமது. ‡‡தாதுமாரனை.



(௩௬௧) காரெதி ருருமி னுரறிக் கல்லென
ஆருயிர்க் கலமரு மாராக் கூற்றம்

நின்வர வஞ்சலன் மாதோ நன்பல
கேள்வி முற்றிய வேள்வி யந்தணர்க்
கருங்கல நீரொடு சிதறிப் பெருந்தகைத்

தாயினன்று பலர்க்கீத்துக்
தெருணடை மாகளிறொடு *தன்
அருள்பாடுநர்க்கு நன்கருளியும்
உருணடை..............ன்றதன்
தாள்சேருநர்க் கினிதீத்தும்
புரிமாலையர் பாடினிக்குப்
பொலந்தாமரைப் பூம்பாணரொடு
†கலந்தளைஇய நீளிருக்கையாற்
பொறையொ.................மானோக்கின்
வில்லென ‡விலங்கிய புருவத்து வல்லென
நல்கி னுவஞ்சு முள்ளெயிற்று மகளிர்
அல்கு றுங்கா வசைஇ மெல்லென
...............பொலங்கலத் தேந்தி
அமிழ்தென மடுப்ப மாந்தி யிகழ்விலன்

---

2. உயிர்க்கு - உயிரைக் கைக்கொண்டு செல்லுதற்கு. ஆரா - தெவிட்டாத. கூற்றம்: விளி.

3. அஞ்சலன் - அஞ்சான். 5. கலம் - ஆபரணம். நீர் - தாரைநீர்.

4 - 5. "ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப், பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து" புறநா. கூகஎ : 4 - 5.

6. நன்று - மிக. 7. மா - குதிரையை.

12. பொலந்தாமரை - பொற்றாமரை.

13. இருக்கையால் - இருக்கையின்கண்.

15. வல்லென - விரைய; வற்கெனவுமாம். 16. நல்கின் - பேசின்.

15 - 6. பல்லின் கூர்மைக்கு அஞ்சி நா விரையப் பேசாதென்பது : "அமிழ்துபொதி செந்நா வஞ்ச வந்த, வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவை" குறுந். கசு.

பி - ம். *தனருளபாடுநாகரு. †கலந்தலேஇய. ‡விலங்கியவருவத்து.



நில்லா வுலகத்து..............மைநீ
சொல்ல வேண்டா........முந்தறிந்த

..........................
..............................ஓர். (௩௬௧)

---

(௩௬௨) ஞாயிற் றன்ன வாய்மணி மிடைந்த
*மதியுற ழார மார்பிற் புரளப்
பலிபெறு முரசம் பாசறைச் சிலைப்பப்
பொழிலகம் பரந்த பெ..........
..........குமட விசய †வெண்கொடி
அணங்குருத் தன்ன கணங்கொ டானைக்

கூற்றத் தன்ன மாற்றரு முன்பின்
ஆக்குரற் காண்பி ‡னந்த ணாளர்
நான்மறைக் குறி...................யின்
அறங்குறித் தன்று பொருளா குதலின்
மருடீர்ந்து மயக்கொரீஇக்
கைபெய்தநீர் கடற்பரப்ப

---

1. ஆய்மணி - ஆராய்ந்தெடுத்த மாணிக்கம்; அழகிய மணியுமாம்

2. வட்டப்பூண் புரள; மதியுறழ் ஆரம் - பிறைவடமுமாம்.

3. முரசு பலிபெறுதல், இந்நூல் ௫௦-ஆம் பாட்டாலும் அதன் குறிப்பாலும், "கடம்பறுத் தியற்றிய வலம்படு வியன்பணை, ஆடுநர் பெயர்ந்து வந் தரும்பலி தூஉய்" (பதிற். கஎ), "கோற்றொழில் வேந்தன் கொற்ற முரசம், பெரும்பணைக் கொட்டிலு ளரும்பலி யோச்சி" (பெருங். உ. 2 : 29 - 30) என்பவற்றாலும் அறியலாகும்.

5. வெற்றியைப் புலப்படுத்தும் வெள்ளிய கொடி; "விசயம் வெல் கொடி யுயரி" (முல்லை. 91); "புலப்படக் கொன்று மிகைதோ லோட்டிப், புகழ்செய் தெடுத்த விறல்சா னன்கொடி" (மதுரை. 370 - 71); "மலை நீர், வென்றெழு கொடியிற் றோன்றும்" (மலைபடு. 581 - 2); "வான்றோய் வெல்கொடி" பதிற். சுசு : 1.

6. அணங்கு உருத்தன்ன தானை - தெய்வங்கள் உருக்கொண்டு வந்தாற்போன்ற சேனை ; உருத்தன்ன - கோபித்தாற் போன்றவென்றுமாம்.

7. புறநா. ௫சு: 11; "கூற்றத்தன்ன மாற்றரு மொய்ம்பின்" முருகு.81.

12. தானநீர் கடலிற் சென்று பாவ.

பி - ம். *மணியுற ழாரம்... †வெனகொடி. ‡னந்தணளிர்.

ஆமிருந்த வடைநல்கிச்
சோறு *கொடுத்து மிகப்பெரிதும்
வீறுசான ..............நன்றும்
சிறுவெள் ளென்பி னெடுவெண் களரின்
வாய்வன் காக்கை கூகையொடு கூடிப்
பகலுங் கூவு மகலு ளாங்கட்
காடுகண் மறைத்த கல்லென் சுற்றமொ
டில்லென் றில்வயிற் பெயர மெல்ல
இடஞ்சிறி தொதுங்க லஞ்சி
உடம்பொடுஞ் சென்மா ருயர்ந்தோர் நாட்டே.

திணை - பொதுவியல்; துறை - பெருங்காஞ்சி.
அவனைச் சிறுவெண்டேரையார். (கூசுஉ)

---

13. ஆம் - நீர். அடை - தண்ணடை; மருதநிலத்து ஊர்.

17. வாய்வன் காக்கை - வலிய வாயையுடைய காகம்; கூகை - கோட்டான்; மு. புறநா. உகூஅ : 3.

17 - 8. புறநா. கூடுகூ : 2; "பேஎ ரகநாட்டு, நன்பகலுங் கூகை நகும்" பு. வே. 39. 19. சுற்றத்தின் மிகுதி கூறியபடி.

20. இல்லென்று - இல்லையென்று.

பி - ம். *கொடுக்குமிகப்.

(௩௬௩) *இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் †மாநிலம்
உடையிலை ‡நடுவண திடை §பிறர்க் கின்றித்
தாமே யாண்ட வேமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்

---

1. "இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் ஞாலம்" பெருங். உ. 17:105.

2. உடைமரத்தின் இலை மிகச்சிறியது; "சிறியிலை யுடை" புறநா. ௩௨௪ : 4.

3. "ஒருதா மாகிய பெருமையோர்" (புறநா. ௩௬௬ : 4); "ஒருநீ யாகித் தோன்ற" முருகு. 294.

1 - 3. "இருங்கட லுடுத்த, மண்ணார் செல்வத்து மன்னவ ரேறே" மணி. உஉ: 80 - 81.

4. புறநா. ௫௫ : 21, அடிக்.

பி - ம். *கருங்கடலுடுத்த, இருங்கடற்றானையோடு பெருநிலங் கவைஇ. †மாநிலத்து. ‡நடுவுபிற.........கின்றி. §பெறகொழியத்.



காடுபதி யாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் *சென்றுமாய்ந் தனரே
அதனால், நீயுங் கேண்மதி †யத்தை வீயா
துடம்பொடு நின்ற வுயிரு மில்லை
மடங்க லுண்மை மாயமோ வன்றே
‡கள்ளி வேய்ந்த §முள்ளியம் புறங்காட்டு

வெள்ளில் போகிய வியலு ளாங்கண்
உப்பிலா அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
‡இழிபிறப்பினோ னீயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா ||முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே.[1]

---

3 - 6. புறநா. ௩௬௩ : 1 - 5.

7 - 8 'வீயாது.... இல்லையென்புழியும், வீயாமை நீங்காமைக்கண் வந்தது' குறள், 207, பரிமேல்.

9. மு. புறநா. ௩௬௩ : 23. மடங்கல் - யமன், "வருங்காலன் றிண்ணிதே" சிறுபஞ்ச. 26. 14. சீவக. 2984, ந. மேற்.

10 - 14. புறநா. ௩௬௦ : 16 - 9.

14 - 5. 'இழிபிறப்பினோன்...மிசையுமென்புழிப் பெற்றென்னுஞ் செய்தெனெச்சத்திற்கு முடிபாகிய மிசையுமென்னும் வினையை இடைநின்ற சொற்கள் விசேடித்து நின்றன' தொல். எச்ச. சூ. 59, ந.

16 - 8. முடிந்தது போன்று முடியாதாகிய புறப்பாட்டு வண்ணத்திற்கு (தொல். செய். சூ. 225, பேர். ந.) இவ்வடிகள் மேற்கோள்.

[1] இச்செய்யுள், 'மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமை' (தொல். புறத்திணை. சூ. 19, இளம்.) என்னுந் துறைக்கும், 'வீடேதுவாக வன்றி வீடுபேற்று நெறிக்கட் செல்லும் நெறியேதுவாகக்கூறியது' (தொல். புறத்திணை. சூ. 24, ந.) என்பதற்கும், 'வாயுறைவாழ்த்து' என்னும் பகுதிக்கும்

(தொ. செய். சூ. 107, இளம்.; தொ. 112, பேர். ந.) மேற்கோள்; 'இருங்

பி - ம். *சென்று மாயகதோரே, சென்று பாயந்தோரே. †அக்கை. ‡களரிவேயநத. §முளரிய புறங்காட்டு, முளிசுடலை நளிசுடலை முள்ளிக்கள்ளிநள்ளிருஞ் சுடலை. ‡இப்பிறப பிறெஎன். ||இன்ன செய்தி நீ முன்னியவினையே.



*திணையும் துறையும் அவை.
.....................ஐயாதிச்சிறு †வெண்டேரையார். (ருசு௩)

கடலுடுத்த......துறந்தே: இதனுள், உப்பிலாஅ வவிப் புழுக்க லென்பது முதலாக மூன்றடி வஞ்சியடி' (தொல். செய். சூ. 112) என்பது இளம்பூரணம்; 'உப்பிலாஅவவிப் புழுக்கல், கைக்கொண்டு பிறக்குநோக்காது' எனவும் காட்டுப; இவை வஞ்சியடியெனப்படுமென்பது. வெண்சீரான் வஞ்சியடி வருமோவெனின் வாரா, வஞ்சிச்சீர்விரவினல்லது. உப்பிலாஅ வவிப் புழுக்கல்: என்பதோவெனின், அது மற்றை இருசீரடியொடு கூட்டத்துக் காட்டலானும் வஞ்சியடி போன்றது', 'உப்பிலாவவிப் புழுக்கல் முதலியன வஞ்சியடி' (தொல். செய். சூ. 69. பேர். ந.) ; 'இருங்கடல்..........
.........துறந்தே: இதனுள் உப்பிலாஅ வவிப்புழுக்கல்: எனவும், கைக்கொண்டு பிறக்குநோக்காது, இழிபிறப்பினோ னீயப்பெற்று' எனவும் வஞ்சியடி விரவி வந்தவாறு" யா. வி. அடியோத்து, சூ. 7; யா. கா. ஒழிபு. சூ. 4, உரை; இ. வி. சூ. 745, உரை.

பி - ம். *இதுவுமது. †வெண்டரையார்.

(௩௬௪) வாடா மாலை பாடினி யணியப்
பாணன் சென்னிக் *கேணி பூவா
எரிமரு டாமரைப் பெருமலர் †தயங்க
மைவிடை யிரும்போத்துச் செந்தீச் சேர்த்திக்
காயங் கனிந்த கண்ணகன் கொழுங்குறை

---

1. வாடாமாலை - பொன்னரிமாலை. பாடினி - விறலி.

1 - 3. புறநா. ௧௧: 16 - 7-ஆம் அடிகளையும், அவற்றின் குறிப்பையும், "மங்குல் வானத்துத் திங்க ளேய்க்கு, மாகவெண் டிமிரா வழலவிர் தாமரை, நீடிரும் பித்தை பொலியச் சூட்டி, உரவுக்கடன் முகந்த பருவ வானத்துப், பகற்பெயற் றுளியின் மின்னுநிமிர்ந் தாங்குப், புனையிருங் கதுப்பகம் பொலியப் பொன்னின், தொடையமை மாலை விறலியர் மலைய" (பெரும்பாண். 480 - 86) என்பதையும் பார்க்க.

2 - 3. கேணி பூவாத்தாமரை - பொற்றாமரைப்பூ; "பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை" (புறநா. ௧௫ : 7; கலி. ௫௪ : 2.); பு. வெ. 216.

4. மைவிடையிரும்போத்து - ஆட்டுக்கிடாய்; "விடைவீழ்த்துச் சூடு கிழிப்ப" (புறநா. ௩௬௬ : 20) என்பதையும், புறநா. ௨௬௨-ஆம் பாட்டின் முதலடியையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க.

பி - ம். *தெணிபூவா. †கயங்க.



நறவுண் செவ்வாய் நாத்திறம் பெயர்ப்ப
உண்டுந் தின்று மிரப்போர்க் *கீய்ந்தும்
†மகிழ்கம் வம்மோ மறப்போ ரோயே

அரிய வாகலு முரிய பெரும
நிலம்பக வீழ்ந்த வலங்கற் பல்வேர்
முதுமரப் பொத்திற் கதுமென வியம்பும்
‡கூகைக் கோழி யானுத்
தாழிய பெருங்கா §டெய்திய ஞான்றே.

திணையும் துறையும் அவை.

அவனைக் கூகைக்கோழியார். (௩௬௪)

---

8. மகிழ்கம் - மகிழ்வேமாக. 10. அலங்கல் - அசைதல்.

11. பொத்து - பொந்து. கதுமென இயம்பும் - கேட்போர் திடுக்கிட்டு அஞ்சும்படி சுட்டுக்குவியென்று ஒலிக்கும்; "சாவோர்ப் பயிரும் கூகையின் குரலும்" மணி. ௬ : 75.

12. கூகை - பேராந்தை; கோட்டானுமாம். கோழி - காட்டுக்கோழி; "கூகைக் கோழி வாகைப் பறந்தலை" (குறுந் ௩௯௩.) இவ்வடியால் ஆசிரியருடைய பெயர்க்காரணம் புலப்படுகின்றது.

13. தாழிய பெருங்காடு - பிணங்களைக் கவிக்கும் தாழிகளையுடைய மயானம்; புறநா. ௨௨௮ : 11, அடிக்.; பெருங். ௧. 46 : 83 - 5. பெருங்காடு : புறநா. ௨௫௦ : 9.

11 - 3. "பொத்த வறையுட் போழ்வாய்க் கூகைச், சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிரும், கள்ளியம் பறந்தலை" புறநா. ௨௪௦ : 7 - 9, அடிக்.

எய்திய ஞான்று (13) அரியவாகலு முரிய (9) வெனக் கூட்டுக.

பி - ம். *கிந்தும். †மகிழகவமமோ. ‡கூகை கோழியானுர். §டெயதியதஞான்று.

(௩௬௫) மயங்கிருங் *கருவிய விசும்புமுக னாக
இயங்கிய விருசுடர் கண்ணெனப் †பெயரிய
‡வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம்

1. கருவி - மின் முதலியவற்றின் தொகுதி.
2. இருசுடர் - சூரிய சந்திரர். 3. வளி - காற்று.

பி - ம். *கருவி விசுமபுதகனக. †பெரிய. ‡வழியிடை.





வயிரக் *குறட்டின் †வயங்குமணி யாரத்துப்
பொன்னந் திகிரி முன்சமத் ‡துருட்டிப்
பொருநர்க் காணச் செருமிகு முன்பின்
முன்னோர் செல்லவுஞ் ⧧செல்லா தின்னும்
§விலைநலப் பெண்டிரிற் பலர்மீக் கூற
||உள்ளேன் **வாழியர் யானெனப் பன்மாண்
நிலமக ளழுத காஞ்சியும்
உண்டென ††வுரைப்பரா லுணர்ந்திசி னோரே.[1]

திணை - காஞ்சி; துறை - பெருங்காஞ்சி.
‡‡மார்க்கண்டேயனார். (௩௬௬)

5. பொன்னந்திகிரி - சக்கரம்; "பொன்னணி திகிரியஞ் செல்வன்" சீவக. 1203.

தொல். குற்றியலுகரப். சூ. 78, ந. மேற்.

6. பொருநர் - போர்செய்யும் பகைவரை. முன்பு - வலி.

7. முன்னோர் - முன்பு ஆண்ட அரசர்கள். செல்ல - வேறு உலகத்தை யடைய.

8. விலைநலப் பெண்டிர் - விலைமாதர் ; பரத்தையர்.

9. பன்மாண் - பலகால் ; கலி. எஎ : 8.

10. காஞ்சி - நிலையின்மை.

"நிலமக ணெஞ்சுகை யெறிந்து நையவும்" (சீவக. 2221) என்பதற்கு இவ்வடி மேற்கொள்.

[1]மு. தொல். புறத்திணை. சூ. 23, ந. மேற்.

பி - ம். *குாட்டின. †வயிரமணியாரதுப. ‡உருட்டிய. ╪சொல்லாது. §விலைநற். ||உளனேவாழிய. **வாழியனெனனப. ††உரைப்பருணாங். ‡‡மாாககணடயனுர்.

---

(நடசுசு)*விழுக்கடிப் பறைந்த முழுக்குரன் முரசம்
ஒழுக்குடை மருங்கி னொருமொழித் தாக
அரவெறி யுருமி †னூர றுபு சிலைப்ப
ஒருதா மாகிய பெருமை யோரும்

1. கடிப்பு - குறுந்தடி. 3. ஊரறுபு சிலைப்ப - மிகமுழங்க.

1-3. மேக முழக்கிற்கு முரசு உவமை; புறநா. ருஅ : 6 - 7, அடிக்.

4. புறநா. கஅ : 3 - 4, ௯சுரு : 2 - 3.

பி - ம். *விழுக்கடிபபடைந்த. †னூரறுபரிலைபப.

தம்புகழ் நிறீஇச் சென்றுமாய்ந் தனரே
அதனால், அறவோன் மகனே மறவோர் செம்மால்
..........உரைப்பக் கேண்மதி
நின்னாற்றம் பிறரறியாது
பிறர்கூறிய மொழிதெரியா
ஞாயிற் றெல்லை யாள்வினைக் குதவி
இரவி னெல்லை வருவது நாடி
உரை.................
உழுவொழி பெரும்பக டழிதின் றாங்குச்
செங்கண் மகளிரொடு சிறுதுனி யளைஇ
அங்கட் டேற *லாய்கலத் துருப்பக்
†கெடலருந் திருவ................
மடை ‡வேண்டுநர்க் கிடையருகா
தவிழ்வேண்டுநர்க் கிடையருளி
விடைவீழ்த்துச் சூடுகிழிப்ப
நீர்நிலை பெருத்த வார்மண லடைகரைக்
காவு தோறும்..........
மடங்க லுண்மை மாயமோ வன்றே.

திணையும் துறையும் அவை.

5. "தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே" புறநா. ௧௬௫ : 1 - 2.

6. செம்மால் - செம்மலே; தலைவனே.

9. ஊற்றம் - வலி. 10. தெரியா - தெரிந்து.

11. பகற்காலத்தை முயற்சிக்கு உதவி.

12. வருவது - பின்வருங் காரியத்தை.

14. உழுத பெரிய பகடு வைக்கோலைத் தின்றாற்போல; "உழுத நோன்பக டழிதின் றாங்கு" புறநா. ௧௨௫ : 7, அடிக்.

15. அளைஇ - கலந்து. 16. கட்டேறல் - கள்ளின் தெளிவை.

18. இடை - சமயம். அருகாது - குறையாமல்.

19. அவிழ் - சோற்றுப்பருக்கை.

20. விடை - ஆட்டுக்கிடாய்; புறநா. ௩௬௪ : 4. சூடு - சூட்டிறைச்சி.

23. மடங்கல் - யமன்; மு. புறநா. ௩௬௫ : 9.

பி - ம். *ஆயகளதது. †கெடிலருநதிவே. ‡வேண்டுநாகடையருதாதிவிழ்.



(௩௬௭) நாகத் தன்ன பாகார் மண்டிலம்
தமவே *யாயினுந் தம்மொடு செல்லா
வேற்றோ ராயினு நோற்றோர்க் கொழியும்
ஏற்ற பார்ப்பார்க் கீர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து

பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
நாரரி †தேறன் மாந்தி மகிழ்சிறந்
திரவலர்க் கருங்கல மருகா.து வீசி
வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்
வாழச் செய்த ‡நல்வினை யல்ல
தாழுங் §காலைப் புணைபிறி தில்லை

---

1. நாகம் - தேவலோகம்; பவணலோகமுமாம்; தக்கயாகப் பரணியில், "மாலைநாக மார்பர்" (510) என்னுந் தாழிசைக்கு இவ்வடி மேற்கோள். பாகு - பகுதி. மண்டிலம் - நாடு.

2. தம - தம்முடையன.

3. நோற்றோர்க்கு ஒழியும் - தவஞ்செய்தோர்க்கே உரியனவாகும்.

4. ஏற்ற - யாசித்த. ஈர்ங்கை - குளிர்ந்த கை; புறநா. உகூஅ : 5, ௩௧௩ : 10.

5. புனல் - தாரைநீர்.

4 - 5. "அந்தணர்க், கருங்கல நீரொடு சிதறி" புறநா. ௩௬௧ : 4 - 5.

7. நாரரி தேறல் - பன்னாடையால் வடிக்கப்பட்ட கள்ளின் தெளிவை; புறநா. கஎ0 : 12, அடிக்.

6 - 7. "ஒண்டொடி மகளிர் பொலங்கலத் தேந்திய, தண்கமழ் தேறல் மடுப்ப மகிழ்சிறந்து" புறநா உச : 31 - 2, அடிக்.

8. "பரிசிலர்க் கென்று, மருகா தீயும் வண்மை", "இரவலர்க், கருகா தீயும் வண்மை", "இரவலர்க் கருகாது, கொள்ளென விடுவை" புறநா. ௱௨0 : 16 - 7, ௱௨௧ : 7 - 8, ௱௫௧ : 15 - 6.

9. மதுரை. 781 - 2; "தெரிகோதை யந்நல்லாய் தேறியல் வேண்டும்" கலி. ௬௮ : 9.

'வேண்டுமென்பது உம்மீற்றான் வந்ததோர் ஏவல் கண்ணிய வியங்கோள்; வாழ்தல்......வைகல்' சீவக. 201, ந.; தோல். வினை. சூ. 29, ந.; இ. வி. சூ. 46, 50, 239, உரை, மேற்.

பி - ம். *யாயினுநதமவேயனறி. †தெறறவாது நனமகிழநது, தெறறநாணமகிழதாங்குநது. ‡நாலவினே. §காலத்துத் துனேபிறிது.



ஒன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர்
முத்தீப் புரையக் காண்டக விருந்த
கொற்ற *வெண்குடைக் கொடித்தேர் †வேந்திர்
யானறி யளவையோ ‡விதுவே வானத்து
வயங்கித் தோன்று மீனினு §மிம்மென
இயங்கு மாமழை யுறையினும்
உயர்ந்துமேந் ‖தோன்றிப் பொலிகநுந் நாளே.

திணை - பாடாண்டிணை ; துறை - வாழ்த்தியல்.

சேரமான் மாரி ||வெண்கோவும், பாண்டியன் கானப்பேர் **தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கிருந்தாரை ஔவையார். (௱௬௭)

---

12 - 3. "*அந்தண ருங்கட னிறுக்கு, முத்தீ*" (புறநா. ௨ : 22 - 3) என்பதையும் அதன் கீழ்க்குறிப்பையும், "*ஒன்றுபுரி கொள்கை யிருபிறப் பாளர், முத்தீச் செல்வத்து*" (சிலப். ௨௫ : 67 - 8) என்பதையும் பார்க்க.

13. *காண் தக - அழகுதக.*

14. *கொற்றம் - அரசவுரிமை.*

16 - 8. "*இமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக், கொண்டன் மாமழை பொழிந்த, நுண்பஃ றுளியினும் வாழிய பலவே*" (புறநா. ௱௬ : 21 - 3); புறநா. ௱௭௧ : 24 - 5.

பி - ம். *நீள்குடை. †வேந்தர். ‡விலவெ. §இமமெனபபாரதியங் குமாமழை. ╪தொணமெபொலிக. ||வெள்கோவும். **கடந்த.

---

(௱௬௮) களிறு முகந்து பெயர்குவ மெனினே
ஒளிறுமழை தவிர்க்குங் குன்றம் போலக்
கைம்மா வெல்லாங் கணையிடத் தொலைந்தன
*கொடுஞ்சி நெடுந்தேர் முகக்குவ மெனினே
கடும்பரி நன்மான் வாங்குவயி னொல்கி
நெடும்பீ டழிந்து நிலஞ்சேர்ந் தனவே
கொய்சுவற் புரவி முகக்குவ மெனினே

1 - 2. புறநா. ௧௯௭ : 4, ௩௯௧ : 24 - 7.

4. "செல்வுறு திண்டேர்க் கொடிஞ்சினை கைப்பற்றி" கலி. ௭௫:18.

7. சுவல் - பிடரி.

பி - ம். *கொடிஞ்சி.



*மெய்நிறைந்த வடுவொடு பெரும்பிறி தாகி
வளிவழக் கறுத்த வங்கம் போலக்
குருதியம் பெரும்புனல் கூர்ந்தனவே யாங்க
†முகவை யின்மையி னுகவை யின்றி
இரப்போ ரிரங்கு மின்னா வியன்களத்
தாளழிப் படுத்த வாளே ருழவ
கடாஅ யானைக் ‡கால்வழி யன்னவென்
தெடாரித் தெண்கண் டெளிர்ப்ப வொற்றிப்
பாடி வந்த தெல்லாங் ‡‡கோடியர்
முழவுமரு டிருமணி §மிடைந்தநின்
||அரவுற ழார முகக்குவ **மெனவே.

திணை - வாகை ; துறை - மறக்களவழி.

சேரமான் குடக்கோநெடுஞ்சேரலாதன் சோழன் ††வேற்பஃறடக் கைப்பெருநற்கிள்ளியோடு போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்தாரங்கழத் தன்னதாக உயிர்போகாது கிடந்தானைக் கழாத்தலையார். (௬௨அ)

---

8. பெரும்பிறிது - மரணம்.

9. காற்றால் போக்குதலொழிக்கப்பெற்ற கப்பல்போல.

"வழக்கு மாறு கொண்டு" (கலி. ௧0௧) என்பதற்கும், "வழக்குநெறி மாயம்" (சீவக. 2873) என்பதற்கும் இவ்வடி மேற்கோள்.

11. முகவை - முகந்துசெல்லும் பரிசில்; புறநா. ௬௬௬ : 27; உகவை - உகத்தல்.

13. வீரர்களாகிய வைக்கோற்போரைக் கடாவிட்ட வாளாகிய எரு யுடைய வீரனே; புறநா. ௬௭௧ : 15 - 6; "ஆளழி வாங்கி யதரி திரித்த, வாளே ருழவன்" சிலப். ௨௬ : 233 - 4.

14 - 5. கால்வழி - காலிடம்; காற்சுவடுமாம். தெடாரி - தடாரிப்பறை; புறநா. ௬௭௬ : 4. தெளிர்ப்ப - ஒலிப்ப; "பெருங்களிற் றடியிற் றோன்று மொருகண், இரும்பறை", "பணைமரு ணெடுந்தாட் பல்பிணர்த் தடக்கைப், புகர்முகம்" புறநா. ௨௬௬ : 1 - 2, ௬௭௧ : 19 - 20.

16. கோடியர் - கூத்தர்.

18. ஆரத்திற்கு அரவு உவமை; "விரவுமணி யொளிர்வரு மரவுற ழாரமொடு" புறநா. ௬௬அ : 26.

பி - ம். *மெய்சிறைகதூ வாடுபெரும பிரிதாகி வழகக றுத்த. †முவையினமையினறி. ‡காலகழிவனனவென, காலகழியனனவென். ╪கொடியார். §மிடைந்த நிரையுறுமாரம. ‖அறையுறும். **மெனினே. ††வெல்பஃறடக்கை.

(௩௬௯)* இருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பிற்
†கருங்கை யானை கொண்மூ வாக
நீண்மொழி மறவ ரெறிவன ருயர்த்த
வாண்மின் னாக வயங்குகடிப் ‡பமைந்த
குருதிப் பலிய முரசுமுழக் காக
அரசராப் பனிக்கு மணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநா ╪ணுகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
§ஈரச் செறுவயிற் றேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்

---

1. மு. புறநா. ௩௭௦ : 20. இரும்பு - தந்தப்பூண் ; கோளகை : ஆகு பெயர்.

2. கருங்கை - பெரியகை ; கருமை - பெருமை ; "பெருங்கை யானை" (புறநா. ௩: 11.) கொண்மூ - மேகம்.

3. நீண்மொழி - சபதம். மறவர் - வீரர்.

4. வாளாயுதம் மின்னலாக. கடிப்பு - குறுந்தடி.

5. குருதிப் பலிய முரசு - இரத்தமாகிய பலியையுடைய வீரமுரசு; "குருதி வேட்கை யுருகெழு முரசம்" புறநா. ௫௦ : 5, அடிக்.

2 - 5. "உருமிசை முரச முழக்கென விசைப்பச்,

செருநவில் வேழங் கொண்மூ வாக" புறநா. ௩௭௩ : 1 - 2.

6. அரசு அரா - பகையரசர்களாகிய பாம்புகள்.

7. குதிரை காற்றாக ; "காலியற் புரவி" புறநா. ௧௭௮ : 2.

8. வல்வில் : புறநா. ௧௫௨ : 6, அடிக்.

9. கணைத்துளி - அம்பாகிய மழைத்துளி.

1 - 9. "பெரும்படைச் செற்றத் திருங்கடன் மாந்திக், குஞ்சரக்
கொண்மூக் குன்றடைந்து குழீஇக், காலிய லிவுளிக் கடுவளி யாட்ட,
வேலிடை மிடைந்து வாளிடை மின்னக், கணைத்துளி பொழிந்த கார்
வரைச் சாரல்" பெருங். ௩. 27 : 117 - 21.

10. ஈரச்செறுவயின் - ஈரத்தையுடைய போர்க்களமாகிய வயலின்
கண்; பு. வெ. 159.

9 - 10. கிடக்கையாகிய வயலில்.

ப்ர - ம். *இரும்பு. †பெருங்கையானை. ‡படைகத.
‡‡னுழைதத்த.
§ஈசசசெறுவவியிற், ஈசசசெறுவிற்.

செருப்படை மிளிர்த்த திருத்துறு *பைஞ்சாற்
பிடித்தெறி †வெள்வேல் கணையமொடு வித்தி
‡விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
§பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு
கணநரி யோடு ╪கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள
தேய்வை ||வெண்காழ் புரையும் விசிபிணி
வேய்வை காணா விருந்திற் போர்வை
அரிக்குரற் றடாரி யுருப்ப **வொற்றிப்

---

12. படை மிளிர்த்த - ஆயுதமாகிய படைவாளால் கீழ்மேலாக மறிக்கப்பட்ட; "படைமிளிர்ந் திட்ட" (புறநா. ௪௨ : 14); "உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி" (பெரும்பாண். 92); படை : சிலேடை. சால் - படைச்சாலில்.

13. கணையம் - கணையமரமென்னும் ஆயுதம். கணையமொடு வேலை வித்தி.

14. கூழ் - பயிர். 15. போர்பு : சிலேடை.

16. கழுது - பேயில் ஒருசாதி; "கூற்றக் கொஃறேர் கழுதொடு கொட்ப" மதுரை. 633.

18. பாடுநர்க்கு - பாடிவருபவர்களுக்கு ஈதற்பொருட்டு.

19. தேய்வை வெண்காழ் - சந்தனக்கட்டை. விசி பிணி - விசித்த வார்க்கட்டு.

20. வேய்வை - குற்றம். "வேய்வை போகிய விரலுளர் நரம்பு" (பொருந். 17.) விருந்து - புதுமை.

19 - 20. "விசிப்புறத் தமைத்த புதுக்காழ்ப் போர்வை" புறநா. ௩௧௧ : 24.

21. அரிக்குரற்றடாரி - அரித்தெழுகின்ற ஓசையையுடைய தடாரிப் பறை; ஒலிநரம்பால் ஓசையையுடைய கிணைப்பறை யென்றுமாம். உருப்ப - சூடு பிறக்க; புறநா. உ௪௧ : 4, அடிக். "அகன்கட் டடாரி தெளிர்ப்ப வொற்றி", "அரிக்குரற் றடாரி யிரிய வொற்றி" புறநா. ௩௭௦ : 18, ௩௯௦ : 7.

பி - ம். *செஞுசாற். †வைவேற்கணையொடு. ‡இருந்தலை சாய்த்த. §பேஎயள். ╪கழுகு. ||வெணகாள். **வொறறப்.



பாடி வந்திசிற் பெரும பாடான்
றெழிலி தோயு மிமிழிசை யருவிப்
பொன்னுடை நெடுங்கோட் டிமயத் தன்ன
ஓடை நுதல வொல்குத லறியாத்
துடியடிக் குழவிய பிடியிடை மிடைந்த

வேழ முகவை நல்குமதி

தாழா வீகைத் தகைவெய் யோயே.[1]

திணையும் துறையும் அவை; துறை - ஏர்க்கள உருவகமுமாம்.

சேரமான் கடலோட்டிய *வேல்கெழுகுட்டுவனைப் பரணர். (௬௬௧)

---

22. வந்திசின் - வந்தேன்; "காண்கு வந்திசிற் பெரும", "நிற்காண்கு வந்திசினே", "மன்னெயின் முகவைக்கு வந்திசிற் பெரும" (புறநா. ௧௭ : 33, ௧௨௫: 4, ௩௭௩ : 34.) பாடு ஆன்று - ஓசை நிறைந்து.

22 - 3. "பாடான் றிரங்கு மருவி" புறநா. ௧௨௬ : 4.

24. "பொற்கோட் டிமயம்" புறநா. ௨ : 24, ௩௯ : 14 - 5.

26. துடியடிக் குழவிய பிடி - உடுக்கையின் கண்போன்ற அடியை யுடைய கன்றை நீங்காத பெண்யானை; "துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரை" கலி. ௧௧ : 8.

27. முகவை - ஏற்றுக்கொள்ளும் பரிசில்.

26 - 7. "மன்றுபடு பரிசிலர்க் காணிற் கன்றொடு, கறையடி யானை யிரியல் போக்கும்.........ஆஅய்", "வரைமருண் முகவைக்கு வந்தனென்", "புகர்முக முகவைக்கு வந்திசின்" (புறநா. ௧௩௫ : 11 - 3, ௩௭௦ : 21, ௩௭௧ : 20); "துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு, பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கென" (பொருந. 125 - 6); "இருபெயர்ப் பேராயமொ, டிலங்குமருப்பிற் களிறுகொடுத்தும்" (மதுரை. 101 - 2); 'கன்றும் பிடியுமென்னும் இரண்டு பெயரையுடைய பெரிய திரளுடனே விளங்குகின்ற கொம்பினையுடைய களிறுகளைக் கொடுத்தும்' ஷை. உரை.

[1]மு. தொல். புறத்திணை. சூ. 17, இளம்; ஷை. ஷை. சூ. 21, ந.; ஷை. உவம. சூ. 9, இளம். மேற்.

பி ம். *வேல்கெழு.

(௩௭0) ..............................ளி
நாரும் போழுஞ் செய்துண் டோராங்குப்

2. நார் - மரங்களின் நார். போழ் - பனங்குருத்து. உண்டு - சுவைத் துண்டு; புறநா. ௩௭௫ : 5.

73



*பசிதினத் திரங்கிய விரும்பே ரொக்கற்
கார்பதங் கண்ணென மாதிரந் துழைஇ
வேருழந் துலரி மருங்குசெத் தொழியவந்
தத்தக் குடிஞைத் துடிமரு ளின்குரல்
உழுஞ்சிலங் கவட்டிடை யிருந்த பருந்தின்
பெடைபயிர் குரலொ டிசைக்கு மாங்கட்
கழைகாய்ந் துலறிய வறங்கூர் நீளிடை
வரிமரற் றிரங்கிய கானம் பிற்படப்
பழுமர முள்ளிய பறவை போல

3. பசிதினத் திரங்கிய இரும்பேரொக்கற்கு - பசிதின்னலால் வருத்தமுற்ற கரிந்த பெரிய சுற்றத்தார்பொருட்டு; "பசிதினத் திரங்கிய

வொக்கல்", "பசிதினத் திரங்கிய கசிவுடை யாக்கை", "இலம்பா டுழந்த வென் னிரும்பே ரொக்கல்", "இரும்பே ரொக்கல் பெரும்புலம் பகற்ற", "பசித்தென, வீங்குவந் திறுத்தவென் னிரும்பே ரொக்கல்", "இரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினும்" (புறநா. கடுகூ : 21, கசுo : 4, ருஎஅ : 13, ருகூo : 18, ருகக : 7 - 8, ருகூச : 16); "பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கலொடு" பெரும்பாண். 25.

4. ஆர்பதம் - உண்ணும்உணவு; "தேரிற் றந்தவர்க் கார்பத நல்கும்... இசைசா றோன்றல்", "நெல்லின், அம்பண வளவை விரிந்துறை போகிய, வார்பத நல்கு மென்ப" (பதிற். ருடு : 11 - 2, கூசு : 7 - 9); 'ஆர்பதமிக்கு நீரும் நிழலும் பெறுதலிற் களிசிறந்து மாவும் புள்ளும் துணையோடின் புற்று விளையாடுமென' (தொல். அகத்திணை. சூ. 6, ந.) மாதிரம் - திசை. துழைஇ - துழாவி; தேடி.

6. அத்தம் - அருஞ்சுரம். குடிஞை - கோட்டான். குடிஞைக் குரலுக்குத் தடியோசை உவமை; (புறநா. கஎo : 6 - 7, அடிக்.) மருள் : உவமவுருபு. குரல் : எழுவாய்.

7. உழுஞ்சில் - ஒருவகை மரம்; கவடு - கிளை; "கோடலங் கவட்ட குறுங்கா லுழுஞ்சில்" (அகநா. கடுக : 8); உழுஞ்சிலை வாகை யென்பர்; சிலப். கக : 76, அடியார்.

8. பயிர் - அழைத்தல். 9. வறம் - வறுமை; நீரின்மை.

10. வரிமரல்திரங்கிய - வரியையுடைய மரல் நீர்வற்றித் திரங்கிய; "வரிமரற் றிரங்கிய கரிபுறக் கிடக்கை" (சிலப். கக : 77) மரல், மரு ளென்று வழங்கும்.

11. பழுத்த மரத்தை நினைத்துச் செல்கின்ற வௌவாலைப் போல; புறநா. சஎ : 1, அடிக்.

பி - ம். *பரிதினத்.



ஒண்படை மாரி வீழ்கனி பெய்தெனத்
துவைத்தெழு குருதி நிலமிசைப் பரப்ப
விளைந்த செழுங்குர லரிந்துகால் குவித்துப்
படுபிணப் பல்போர் பழிய வாங்கி
எருதுகளி றாக வாண்மட லோச்சி
அதரி திரித்த வாளுகு கடாவின்
அகன்கட் டடாரி *தெளிர்ப்ப வொற்றி
வெந்திறல் வியன்களம் பொலிகென் றேத்தி
இருப்புமுகஞ் செறித்த வேந்தெழின் மருப்பின்
வரைமருண் முகவைக்கு வந்தனென் பெரும
வடிநவி லெஃகம் பாய்ந்தெனக் கிடந்த
தொடியுடைத் தடக்கை யோச்சி வெருவார்
இனத்தடி விராய வரிக்குட ரடைச்சி

---

13. துவைத்து - முழங்கி.

14. குரல் - கழுத்து, தானியக்கதிர்; சிலேடை.

15. பிணப்பல் போர்பு - பலவகைப்பட்ட பிணங்களாகிய போர்கள்; போர்பு - தானியக்கதிர்ப்போர்; புறநா. உ0கூ : 1 ; "பிணனெதிர்ப் போர்

பழித்து", "அஞ்சா மறவ ராட்போர் பழித்து" (புறநா. ௩௭௧ : 14, ௩௭௫ : 25); "நீர்சூழ் வியன்களம் பொலியப் போர்பழித்து" அகநா. ௩௬௬ : 2.

16. வாளாகிய மடலைச் செலுத்தி; மடல் - பனங்கருக்கு.

15 - 7 "கழிபிணம் பிறங்குபோர் பழிகளி றெருதா", "யானை யெருத்தின் வாண்மட லோச்சி, அதரி திரித்த வாளுகு கடாவின்", "குடபுலத் ததரி பொலிக" (புறநா. ௩௬௨ : 13, ௩௭௧ : 15 - 6, ௩௭௫ : 26 - 7); "கோட்டுமாப் பூட்டி வாட்கோ லாக, ஆளழி வாங்கி யதரி திரித்த" சிலப். உ௬ : 232-3.

18. "தொடாரித் தெண்கண் டெளிர்ப்ப வொற்றி", "அரிக்குரற் றடாரியுருப்ப வொற்றி", "அகன்கட் டடாரிப் பாடுகேட் டருவி" புறநா. ௩௬௮ : 15, ௩௬௯ : 21, ௩௯௦ : 4. 20. புறநா. ௩௬௯ : 1.

21. முகவை : புறநா. ௩௬௮ : 11, ௩௬௯ : 27, ௩௭௧ : 20.
போல (11) வந்தனென் (21.)

22. வடி நவில் - வடித்தல் பயின்ற ; புறநா. உ௫ : 8.

23. தொடியுடைத் தடக்கை - வளையையுடைய பெரிய கையை.

24. வரிக்குடர் - பலவரியையுடைய குடர்; "நெறிகொள் வரிக்குடர்" (புறநா. க௬௦ : 6.) அடைச்சி - சேர்த்து.

பி - ம். * தெளிர்ப்பவே யொற்றி.



அழுகுரற் *பேய்மக ளயரக் கழுகொடு
செஞ்செவி யெருவை திரிதரும்
அஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே.

திணையும் துறையும் அவை.

சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியை ஊன்போதி பசுந்துடையார்.

(௩௭0)

---

26. செஞ்செவி யெருவை : புறநா. ௨௩௮ : 2; "செஞ்செவி யெருவைச் சேவல்" அகநா. ௧௩௧ : 5 - 6.

27. போர்க்களம் வென்றோர்க்கு உரித்தாதலால், 'களங்கிழவோய்' என்றார்; புறநா. ௩௭௧ : 27, ௩௭௩ : 39.

பி - ம். *பேஎய்மகள்.

---

(௩௭௧) அகன்றலை வையத்துப் *புரவலர்க் காணாது
†மரந்தலைச் சேர்ந்து பட்டினி வைகிப்
போதவி ழலரி நாரிற் றொடுத்துத்
தயங்கிரும் பித்தை பொலியச் சூடிப்
பறையொடு தகைத்த கலப்பையென் முரவுவாய்
ஆடுறு குழிசி பாடின்று தூக்கி
மன்ற வேம்பி னொண்பூ வுறைப்பக்

---

1. புரவலர் - பாதுகாப்போர்.

2. மரந்தலை - இங்கே மரத்தின் கீழிடம்.

3. அலரிப் பூவை நாராற் றொடுத்து.   4. பித்தை - தலைமயிர்.

3 - 4. "அலரி, சுரியிரும் பித்தை சுரும்புபடச் சூடி" (அகநா. ௨௯ : 4 - 5), "தாமரை, சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி" (பொருந. 159 - 60), "தாமரை, நீடிரும் பித்தை பொலியச் சூட்டி" பெரும்பாண். 481 - 2.

5. தகைத்த - கட்டிய. கலப்பை - சமைத்தற்குரிய கருவிகளை யடக்கிய பை; "காவினெம் கலனே சுருக்கினெம் கலப்பை" (புறநா. ௨0௬ : 10.) மூரவு - சிதைவு; "மூரவுவாய்க் குழிசி முரியடுப் பேற்றி" பெரும்பாண். 99.

6. ஆடு - சமைத்தல். குழிசி - பானை. பாடின்று - கெடாதபடி.

7. மன்றம் - பொதுவிடம்; "மன்ற வேம்பு" (புறநா. ௭௬ : 4, ௭௧ : 2.) உறைப்ப - உதிர.

பி - ம். *புரவறகாணாத், பாவறகாணாது. †மறநதலைசோநது.



குறைசெயல் வேண்டா நசைய விருக்கையேன்
அரிசி யின்மையி னாரிடை நீந்திக்
கூர்வா யிரும்படை நீரின் மிளிர்ப்ப
*வருகணை வாளி........யன்பின்று தலைஇ
†இரைமுர சார்க்கு முரைசால் பாசறை
வில்லே ‡ருழவினின் னல்லிசை யுள்ளிக்

குறைத்தலைப் படுபிண னெதிரப் போர்பழித்
தியானை யெருத்தின் வாண்மட லோச்சி
அதரி திரித்த வாளுகு கடாவின்
மதியத் தன்னவென் விசியுறு தடாரி
அகன்க ணதிர வாகுளி §தொடாலிற்
பணைமரு ணெடுந்தாட் ‡பல்பிணர்த் தடக்கைப்

8. குறை - காரியம்.

9. ஆரிடை நீந்தி - அரிய இடங்களைக் கடந்து.

10. படை - படைவாள்; பாரை. மிளிர்ப்ப - கீழ்மேலாகப் புரளச் செய்ய. 12. உரைசால் - புகழ்மிக்க.

13. வில்லேருழவின் - வில்லை ஏராகக்கொண்டு உழுதலையுடைய; உழவன் - வீரன் ; "வில்லே ருழவர்" (குறள், 872); "மாரி வளம்பெறு வில்லே ருழவர்" சிலப். கக : 210.

14. குறைத்தலைப் படுபிணன் - கவந்தம். போர்பு - போர்; புறநா. ௩௭0 : 15. 15. யானையாகிய உழும் எருது.

14 - 6. "படுபிணப் பல்போர் பழிய வாங்கி, எருதுகளி றாக வாண் மட லோச்சி, அதரி திரித்த வாளுகு கடாவின்" புறநா. ௩௭0 : 15 - 7.

17. "மதிபுரை மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி", "மாக விசும்பின் வெண்டிங்கண்,......கடனவேட் கண்டன்னவென், னியம்" புறநா. ௩௯௯ : 20, ௪00 : 1 - 4.

18. ஆகுளி - சிறுபறை; "நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கி" (புறநா. ௬௪ : 1.) தொடாலின் - கொட்டுதலுடன்; "துடிக்கண் புலையன் றொடும்" பு. வெ. 62.

17 - 8. தடாரியின்கண் அதிர.

19. பணை - ஒருவகைப்பறை. மருள் : உவமவுருபு ; புறநா. ௩௬௮ : 17.

பி - ம். *இருகணை. †உரை சுரும்பார்க்கும், இரைசுரும்பு. ‡குழவகின். §தொழாலிற. ‖பகலபிணர்.



புகர்முக *முகவைக்கு வந்திசிற் பெரும
களிற்றுக்கோட் டன்ன வாலெயி றழுத்தி
விழுக்கொடு விரைஇய வெண்ணிணச் சுவையினள்
குடர்த்தலை †மாலை சூடி யுணத்தின
ஆனாப் பெருவளஞ் செய்தோன் வானத்து
வயங்குபன் மீனினும் வாழியர் பலவென
உருகெழு ‡பேய்மக ளயரக்
குருதித்துக ளாடிய களங்கிழ வோயே.

திணையும் துறையும் அவை.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைக் கல்லாடனார்.

(௩௭௧)

---

20. புறநா. ௩௬௮ : 11, ௩௬௯: 27, ௩௭௦: 21. வந்திசின் - வந்தேன். "முகவைபாடுதல் - பொலிபாடுதல்; 'முகவை என்றார், நெல்லு முகந்து கொடுக்கப்படுதலாலே; புகர்முக முகவை போல" சிலப். ௧௦ : 137, அரும்பத.

நீந்தி (9) வந்திசிற் பெரும (20.)

22. விழுக்கு - ஊன்விசேடம் ; "பருத்திப் பெண்டின் பனுவ லன்ன, நெருப்புச்சினந் தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை", "கொழுநிணங் கிழிப்பக், கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த, மூடைப் பண்ட மிடை நிறைந் தன்ன, வெண்ணிண மூரி" (புறநா. கஉ௯ : 1 - 2, ௩௯௩ : 11 - 4) என்பவற்றையும், "விழுக்கொடு வெண்ணஞ்சு" (சீவக. 1584) என்பதை யும், 'விழுக்கும் வெண்ணஞ்சும் ஊன்விசேடம் ; வெண்ணஞ்சு - நிணமு மாம்' என்னும் அதன் விசேடவுரையையும் பார்க்க.

23. "குடர்த்தொடர் மாலை பூண்பா னல்லன்", "குடர்த் தொடர் மாலை சூழாது" (மணி. ௬ : 13, ௨௰ : 72.) உணர்த்தின : "உண்டுந் தின்று மூர்ந்து மாடுகம்" புறநா. ௧௬௯ : 30.

24 - 5. புறநா. ௩௬௭ : 16 - 8.

26. உரு - அச்சம்.

27. "அஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே" புறநா. ௩௭௦ : 27, ௩௭௩ : 39.

21 - 7. பின்றேர்க்குரவைக்கு இவ்வடிகள் மேற்கோள் ; தொல். புறத்திணை. சூ. 17, இளம்.; ஷை. 21, ந. மேற்.

பி - ம். *முகவை வந்திசிற். †மாலைதுயல்வரச்சூடி, மாலைசூடி யுணத்தின மானுப். ‡பேஎயமகளயா.



(௩௭௨) விசிபிணித் தடாரி விம்மென வொற்றி

ஏத்தி வந்த *தெல்லா முழுத்த
இலங்குவா ளவிரொளி வலம்பட மின்னிக்
கணைத்துளி பொழிந்த கண்கூடு பாசறைப்
பொருந்தாத் தெவ்வ ரரிந்ததலை யடுப்பிற்
கூவிள விறகி †ஞெக்குவரி நுடங்கல்
ஆனா மண்டை வன்னியந் துடுப்பின்
ஈனா வேண்மா ளிடந்துழந் தட்ட
மாமறி பிண்டம் ‡வாலுவ னேந்த
வதுவை விழவிற் புதுவோர்க் கெல்லாம்
வெவ்வாய்ப் பெய்த பூதநீர் சால்கெனப்
புலவுக்களம் பொலிய வேட்டோய்நின்

---

1. தடாரி விம்மென - கிணைப்பறை ஒலிப்ப ; "வார்வலந்த துடிவிம்ம" பு. வே. 13.

4. கணையாகிய நீர்த்துளி; "கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை" புறநா. ருசுக : 9.

5. தெவ்வர் தலையடுப்பில் - பகைவருடைய தலைகளாகிய அடுப்பில்; "ஆண்டலை யணங்கடுப்பு" மதுரை. 29.

9. வாலுவன் - மடையன்.

5 - 9. "முடித்தலை யடுப்பிற் பிடர்த்தலைத் தாழித், தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன்சோறு, மறப்பேய் வாலுவன் வயினறிந் தூட்ட" சிலப். உசு : 242 - 4.

12. களம்வேட்டோய் - களவேள்விசெய்தோய்; களவேள்வி இன்ன

தென்பதை, 'நெற்கதிரைக் கொன்று களத்திற் குவித்துப் போரழித்து அதரி திரித்துச் சுற்றத்தொடு நுகர்வதற்கு முன்னே கடவுட்பலிகொடுத்துப் பின்னர்ப் பரிசிலர் முகந்துகொள்ள வரிசையின் அளிக்குமாறுபோல அரசனும் நாற்படையையுங் கொன்று களத்திற்குவித்து எருது களிறாக வாண்மடலோச்சி அதரி திரித்துப் பிணக்குவையை நிணச்சேற்றொடு உதிரப்பேருலைக்கண் ஏற்றி, ஈனாவேண்மாள் இடந்துழந்தட்ட கூழ்ப்பலியைப் பலிகொடுத்து எஞ்சிநின்ற யானை குதிரைகளையும் ஆண்டுப்பெற்றன பலவற்றையும் பரிசிலர் முகந்துகொள்ளக் கொடுத்தலாம்' (தொல். புறத்திணை. சூ. 21, ந.) என்பதனால் உணர்க.

வந்ததெல்லாம் (2) முகக்குவமென (13.)

பி - ம். *தெல்லாமழுத்த. †னுக்குவதிதுடங்கல. ‡வலவனேந்த.



நிலவுத்திக ழார முகக்குவ மெனவே.

திணை - வாகை; துறை - மறக்களவேள்வி.

அவனை *மாங்குடிகிழார். (கஎ௨)

பி - ம். *மாந . . கிழார்.

---

(கஎ௩) உருமிசை *முழக்கென முரச மிசைப்பச்
செருநவில் வேழங் கொண்மூ வாகத்
தேர்மா வழிதுளி தலைஇ நாமுறக்

கணைக்காற் றெடுத்த கண்ணகன் பாசறை
இழிதரு குருதியொ டேந்திய வொள்வாட்
பிழிவது போலப் †பிட்டையூ றுவப்ப
மைந்த ராடிய மயங்குபெருந் தானைக்
கொங்குபுறம் பெற்ற கொற்ற வேந்தே
..................தண்ட மாப்பொறி

---

1. உருமிசை முழக்கு - மேகமுழக்கு; மேககர்ச்சனை முரச ஒலிக்கு உவமை; "படுமழை யுருமி னிரங்கு முரசு" (புறநா. ௩௫0 : 4); "தாழிரு டுமியமின்னித் தண்ணென, வீழுறை யினிய சிதறி யூழியிற், கடிப்பிகு முரசின் முழங்கி" (குறுந். ௨௭0: 1 - 3); "முரசதிர் பவைபோன் முழங்கிடி பயிற்றி" (பரி. ௨௨ : 4); "கொண்மூ, இருண்டுயர் விசும்பின் வலனேர்பு வளைஇப், போர்ப்புறு முரசி னிரங்கி", "இடியுமிழ் முரசம் பொருகளத் தியம்ப" (அகநா. ௧௮௮ : 1 - 3, ௩௫௪ : 2); "உருமிடி முரசமொடு" (முருகு. 121); "மூரிவான முழங்கிவாய் விட்டதொப்ப, அதிர்குரன் முரசம்", "இடியுமிழ் முரசம்" (சீவக. 543, 2900); "உருமி னிடிமுர சார்ப்ப" (முத்.); "இடியார் பணைதுவைப்ப" (பு. வெ. 121); "முழங்கின முகிலென முரசமே" தக்க. 530.

2. "கருங்கை யானை கொண்மூ வாக" புறநா. ௩௬௯ : 2.

3 - 4. "மால்வரைத் தொடுத்து வீழ்ந்த மணிநிற மாரி தன்னைக், காலிரைத் தெழுந்து பாறக் கல்லெனப் புடைத்த தேபோல், மேனிரைத் தெழுந்த வேடர் வெந்நுனை யப்பு மாரி, கோனிரைத் தமிழும் வில்லாற் கோமகன் விலக்கி னானே" (சீவக. 451, ந.) என்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்.

7. ஆடிய - வென்ற. 8. கொங்கு - கொங்கநாட்டு வீரர்களை.
பி - ம். முழககெயிசைய. †பிட்டயூறுவபய.



மடக்கண் மயிலியன் மறலி யாங்கு
நெடுஞ்சுவர் நல்லில் புலம்பக் கடைகழிந்து
மென்றோண் மகளிர் மன்றம் பேணார்
புண்ணுவ..................
.........யணியப் புரவி வாழ்கெனச்
சொன்னிழ லின்மையி னன்னிழற் சேர
நுண்பூண் மார்பிற் புன்றலைச் சிறாஅர்
*அம்பழி பொழுதிற் றமர்முகங் காணா
.....................ற் றெருக்கான
வேந்துபுறங் கொடுத்த வீய்ந்துகு பறந்தலை
மாட மயங்கெரி மண்டிக் கோடிறு
புருமெறி மலையி னிருநிலஞ் சேரச்
சென்றோன் மன்ற சொ.........
...........ண்ணறிநர் கண்டுகண் ணலைப்ப
வஞ்சி முற்றம் வயக்கள னாக
அஞ்சா மறவ ராட்போர் பழித்துக்
கொண்டனை பெரும குடபுலத் ததரி

பொலிக வத்தைநின் பணைதனற....ளம்
விளங்குதிணை வேந்தர் களந்தொறுஞ் சென்று
புகர்முக முகவை பொலிகென் றேத்திக்
†கொண்டன ரென்ப பெரியோர் யானும்

---

11. புலம்ப - தனித்து வருந்த.

12. மன்றம் - பொதுவிடம். 16. புன்றலை - சிவந்த தலை.

16 - 7. "புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி" புறநா. சசு : 6.

20. இறுபு - ஒடிந்து. 20 - 21. புறநா. உசக : 1 - 4.

24. வஞ்சி - சேரர் இராசதானி; "வஞ்சி முற்ற நீங்கிச் செல்வோன்" சிலப். உகு : 6.

25. ஆள் போர்பு அழித்து - வீரர்களுடைய பிணங்களாலாகிய போரை அழித்து; புறநா. ளஎக : 14.

26. குடபுலம் - குடநாடு. அதரி கொண்டனை - கடாவிட்டனை.

28. திணை - குலம்.

29. புகர்முக முகவை - யானைப்பரிசில்; புறநா. ளஎக : 20.

பி - ம். *அமபாழிலொழிதிறறமா. †தொண்டரெனப்.





அங்கண் மாக்கிணை யதிர வொற்ற

. . . . . . . . . . . . . லென்னுயி னுங் காதலி னேத்தி
நின்னோ ரன்னோர் *பிறரிவ ணின்மையின்
†மன்னெயின் முகவைக்கு வந்திசிற் பெரும
பகைவர் புகழ்ந்த வாண்மை ‡நகைவர்க்குத்
தாவின் றுதவும் பண்பிற் பேயொடு
கணநரி §திரிதரு மாங்க ணினனருந்து
செஞ்செவி யெருவை குழீஇ
அஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே.

திணை - அது. துறை - மறக்களவழி; ஏர்க்கள உருவகமுமாம்.
சோழன் குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன் கருவூரேறிந் தானைக் கோவூர்கிழார். (கஎந)

31. கிணை - தடாரிப்பறை.

33. நின்னோர் அன்னோர் - உன்னைப்போன்றோர்.

34. சீவக. 323, ந. மேற்.

33 - 4. தொல். உவம. சூ. 24, இளம். மேற்.

35. நகைவர்க்கு - நட்பினர்க்கு; "நகைவர்க் கரண மாகிப் பகைவர்க் குச், சூர்நிகழ்ந் தற்றுநின் றூனே" (பதிற். கக : 33 - 4); "நகைவ ரார நன் கலஞ் சிதறி" ஷை. கஎ : 4, சுக : 20.

38 - 9. "செஞ்செவி யெருவை திரிதரு, மஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே" புறநா. கஎ0 : 26 - 7.

பி - ம். *பிறரிவர். †மின்னெயில். ‡நசைவாக்கு.
§திரிதருஉமாங்கண.

(௩எச) கானன் மேய்ந்து வியன்புலத் தல்கும்
புல்வா யிரலை நெற்றி யன்ன
பொலமிலங்கு சென்னிய பாறுமயி *ரவியத்

1. கானல் - மலைப்பக்கம். அல்கும் - தங்கும்.

2. புல்வாய் - ஒருவகைமான்.

'இரலை' என்னும் ஆண்பாற்பெயர் புல்வாய்ச் சாதிக்குரியதென்ப தற்கு இவ்வடி மேற்கோள் ; தொல். மரபு. சூ. 44, பேர்.

3. பொலம் - பொன்; பொற்றாமரைப்பூ; ஆகுபெயர். பாறுமயிர் அவிய - சிதரிய மயிர் அடங்கும்படி.

பி - ம். *ரவியபத.



தண்பனி *யுறைக்கும் புலரா ஞாங்கர்
மன்றப் பலவின் மால்வரை பொருந்தியென்
தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
இருங்கலை யோர்ப்ப விசைஇக் காண்வரக்
கருங்கோற் குறிஞ்சி யடுக்கம் பாடப்
புலிப்பற் றாலிப் புன்றலைச் சிறாஅர்
மான்கண் மகளிர்க் கான்றே ரகன்றவா
சிலைப்பாற் பட்ட முளவுமான் கொழுங்குறை

4. உறைக்கும் - துளிக்கும்.

3 - 4. "பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி", "பனிபழுநிய பல்யாமத்துப், பாறுதலை மயிர்நனைய" புறநா. உ௭௬ : 9, ௩௭௭ : 1 - 2.

5. மன்றப்பலவு - பொதுவிடத்திலுள்ள பலா; பொருநர் முதலிய இரவலர் பொதுவிடத்தில் வந்து தங்குதலும் அங்குள்ள மரத்தில் தம் வாச்சியங்களைத் தொங்கக்கட்டுதலும் மரபு; புறநா. ௧௨௮ : 1; ஐந்திணை யெழுபது, 4.

6. புறநா. ௩௮௧ : 12 - 3, ௩௩௭ : 10.

7. ஓர்ப்ப - செவிசாய்த்துக் கேட்கும்படி; புறநா. ௧௫௭ : 12; "பாடலோர்த்து நாடக நயந்தும்" (பட்டின. 113.) இசைஇ - முழக்கி.

8. கருங்கோல் - பெரிய தண்டு; "கருங்கோற் குறிஞ்சி மதனில் வான் பூ", "பெருங்கோற் குறிஞ்சி" (நற். உ௬௮ : 3, ௩0௧ : 1); "கருங்கோற் குறிஞ்சிப்பூ" (குறுந். ௩ : 4); "கருங்கோற் குறிஞ்சி" (அகநா. ௩0௮ : 16.) அடுக்கம் - மலைப்பக்கம்; குறிஞ்சியையுடைய அடுக்கம்; தலைவனையும் அவனுடைய மலைமுதலியவற்றையும் பாடுதல் மரபு; புறநா. ௧௩0 : 3, அடிக்; ௧௬௩ : 12, அடிக்.

9. புலிப்பல் தாலி - புலியின் பல்லைக் கோத்துச்செய்த கழுத்தணி; "புலிப்பற் றாலிப் புதல்வர்" (குறுந். ௧௬௧ : 3); "புலிப்பற் கோத்த புலம்பு மணித் தாலி" (அகநா. ௭ : 18); "மறங்கொள் வயப்புலி வாய்பிளந்து பெற்ற, மாலை வெண்பற்றாலி" சிலப். ௧௨ : 27 - 8.

11. முளவுமான் கொழுங்குறை - முள்ளம் பன்றியின் கொழுவிய தசை; "முளவுமாத் தொலைச்சிய" (புறநா. உ௩௯ : 6); "முளவுமாவல்சி"

(ஐங்குறு. ௩௯௪ : 1); "முளவுமாத் தொலைச்சுக்குன்றம்" (அகநா. ௧௭௨ : 8); "முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை" மலைபடு. 176.

பி - ம். *யிறைக்கும்.



விடர்முகை யடுக்கத்துச் சினைமுதிர் *சாந்தம்
புகர்முக வேழத்து மருப்பொடு மூன்றும்
இருங்கேழ் வயப்புலி வரியதட் குவைஇ
விருந்திறை நல்கு நாட னெங்கோன்
கழறொடி யாஅ யண்டிரன் போல
வண்மையு முடையையோ ஞாயிறு
கொன்விளங் குதியால் விசும்பி னானே.

திணை - பாடாண்டிணை ; துறை - பூவைநிலை.

ஆய் அண்டிரனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார். (௩௭௪)

12. விடர்முகை - வெடிப்பையுடைய குகை; "விடர்முகை முழங்கும்" (ஐங்குறு. ௩௯௩ : 2); "விடர்முகை யடுக்கம் பாய்தலின்", "விடர் முகை முழங்கும்", "அஞ்சுவரு விடர்முகை" அகநா. ௭௭ : 6, ௧௪௩ : 7, ௨௭௨ : 4.

13. புகர்முகவேழம் : புறநா. ௩௭௩ : 29. மூன்று : குறை, சாந்தம், மருப்பு என்பன.

14. புலித்தோலில் மேற்கூறிய மூன்றையும் குவித்து.

15. இறைநல்கும் - திரையாகக் கொடுக்கும்.

16. ஆயாகிய அண்டிரன்; “கழறொடி யாஅய் மழைதவழ் பொதியில்”, (புறநா. ௧௨௮ : 5; குறுந். ௮௪ : 3); “ஆஅ யண்டிர னடுபோ ரண்ணல்”, “வழைப்பூங் கண்ணி வாய்வா ளண்டிரன்”, “தண்டாரண்டிரன்” புறநா. ௧௨௯ : 5, ௧௩௧ : 2, ௨௪௧ : 1 - 2.

17. ஞாயிறு : விளி. 18. கொன் - பயனின்மை.

16 - 8. புறநா. ௮ - ஆம் பாடலின் கருத்து.

பி - ம். *சாகதப்.

---

(௩௭௫) அலங்குகதிர் சுமந்த கலங்கற் சூழி
நிலைதளர்வு தொலைந்த வொல்குநிலைப் பல்காற்
பொதியி லொருசிறை பள்ளி யாக
முழாவரைப் போந்தை யரவாய் மாமடல்

---

1. கதிர் - வெயில். சூழி - ஒருவகை நீர்நிலை.

3. பொதியில் ஒருசிறை - மன்றத்தி னொருபக்கம்.

4. மத்தளத்தைப் போன்ற அரையையுடைய பனையின் அரம்போன்ற வாயினையுடைய மடல்; “முழாவரைப் போந்தைப் பொருந்தி”, “மடல் வன் போந்தை” (புறநா. ௮௫ : 7, ௨௯௭ : 10); “முழவுத்தா ளெரிவேங் கை” கலி. ௪௪ : 4.



நாரும் *போழுங் கிணையொடு சுருக்கி

ஏரின் வாழ்நர் குடிமுறை புகாஅ
ஊழிரந் துண்ணு முயவல் வாழ்வைப்
புரவெதிர்ந்து கொள்ளுஞ் சான்றோர் யாரெனப்
பிரசந் தூங்கு மறாஅ †யாணர்
வரையணி படப்பை நன்னாட்டுப் பொருந
பொய்யா வீகைக் கழறொடி யாஅய்
யாவரு மின்மையிற் ‡கிணைப்பத் தாவது
பெருமழை கடற்பரந் தாஅங் கியானும்
ஒருநின் னுள்ளி வந்தனெ னதனாற்
புலவர் புக்கி லாகி நிலவரை
நிலீஇய ரத்தை நீயே யொன்றே
நின்னின்று வறுவி தாகிய வுலகத்து
நிலவன் மாரோ புரவலர் துன்னிப்
§பெரிய வோதினுஞ் சிறிய வுணராப்

---

5. "நாரும்போழுஞ் செய்துண்டு" புறநா. ௱௭0 : 2.

6. புகாஅ - புகுந்து. 7. ஊழ் - முறையே. உயவல் - வருத்தம்.

8. புரவு எதிர்ந்துகொள்ளும் - பாதுகாத்தலை ஏற்றுக்கொள்ளும்.

9. பிரசம் - தேன்கூடு; "பிரசந்தூங்கு சேட்சிமை" (அகநா. உ௪உ : 21.) அறாஅ யாணர் - இடையறாத செல்வ வருவாயையுடைய; பொருந. 1, ந.

10. படப்பை - தோட்டம். 11. ஆஅய் : விளி.

13. மழை - மேகம். 14. நின்னுள்ளி - உன்னை நினைத்து.

15. புக்கில் - எப்பொழுதும் இருத்தற்குரிய வீடு ; "புக்கி லமைந் தின்று கொல்லோ" குறள், 340.

16. நிலீஇயர் - நிற்பாயாக; அத்தை : அசை.

18 - 9. "துன்னி.........உணராவென்புழிப் பெரிய சிறியவென் பன பெருமை சிறுமைப்பண்படியாக வந்தமையின், இவ்வெச்சத்தின் குறிப்பென்றலு மொன்று; இவ்வெச்சப் பொருள்படும் உரிச்சொலென் றலு மொன்று", "பெரியவோதினு மென்பதற்குச் சிறிய வோதினுமெனக் குறிப்பும் மறைவிகற்பமும் அறிக" (தொல். வினை. சூ. 30, 38, கல்.); "துன்னி...உணராவென அகரம் வினைக்குறிப்புப்பற்றி வருவன வும்" ஷை. ஷை. ஷை. 31, ந.

பி - ம். *போருவ். †யாணாவரையணிப். ‡கினபப. பெரியவேத்தினுஞ்.



பீடின்று பெருகிய திருவிற்
*பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே.

திணை - பாடாண்டிணை; துறை - வாழ்த்தியல்.

அவனை அவர். (கஎரு)

---

21. பாடன்மார் - பாடுதலைத் தவிர்வாராக ; தொல். வினை. சூ. 10, கல்.; ந. மேற்.

20 - 21. தொல். வினை. சூ. 10, சே.; இ - வி. சூ. 232, 239, உரை.

மேற்.

19 - 21. தோல். இடை. சூ. 8, கல்.; நன். சூ. 326, மயிலை; நன். வி. சூ. 327, மேற்.

பி - ம். *பாடிமன்னரை.

---

(௩௭௬)*விசும்பு நீத்த மிறந்த ஞாயிற்றுப்
பசுங்கதிர் †மழுகிய சிவந்துவாங் ‡கந்தி
சிறுநனி பிறந்த பின்றைச் செறிபிணிச்
§சிதாஅர் வள்பினென் றெடாரி தழீஇப்
பாண ராரு மளவை யான்றன்
‖யாணர் நன்மனைக் கூட்டுமுத லின்றனென்

---

1. விசும்பு நீத்தம் - விசும்பாகிய நீத்தத்தை; 'நீத்தம்' என்றார் கடத்தற்கு அருமையின். இறந்த - கடந்த.

2. மழுகிய - ஒளி குறைந்த. அந்தி - மாலைக்காலம்.

1 - 2. "சுடர்கெழு மண்டில மழுக ஞாயிறு, குடகடல் சேரும் படர்கூர் மாலை" அகநா. ௧௭௮ : 14 - 5.

4. தெடாரி: மோனைநோக்கி எகரமாயிற்று; புறநா. ௩௯௮ : 15. "சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி" புறநா. ௩௮௧ : 12.

5. ஆரும் - உண்ணும்.

6. யாணர் நன்மனை - புதுவருவாயை யுடைய நல்ல வீடு. கூட்டு முதல் - தானியக் கூட்டின் அடியில் ; புறநா. ௩௱௯ : 19.

பி - ம். *விசும்பினீத்தமிறந்த, விசும்பிணியத்தமிறந்த. †மழுங்கிய, பழுனிய, மழகிய. ‡கந்திச் சிறுநனியிறந்த. §சிதாஅவளபின். ╪பாணர்நன்......நினறென.



இமைத்தோர் விழித்த மாத்திரை ஞெரேரெனக்
குணக்கெழு திங்கள் *கனையிரு ளகற்றப்
பண்டறி வாரா வுருவோ டென்னரைத்
தொன்றுபடு துளையொடு பருவிழை †போகி
நைந்துகரை பறைந்தவென் னுடையு நோக்கி
விருந்தின னளிய னிவனெனப் பெருந்தகை
நின்ற ‡முரற்கை நீக்கி நன்றும்
அரவுவெகுண் டன்ன தேறலொடு சூடுதருபு
நிரயத் தன்னவென் §வறன்களைந் தன்றே
இரவி னானே யீத்தோ னெந்தை
அன்றை ╪ஞான்றினொ டின்றி னூங்கும்
இரப்பச் சிந்தியே னிரப்படு புணையின்

7. இமைத்தோர் - இமைகொட்டுவோர். மாத்திரை - அளவு. ஞெரேரென - விரைவாக. 8. குணக்கு - கிழக்கு. கனை - செறிவு.

9. "மாலே யன்னதோர் புன்மையுங் காலைக், கண்டோர் மருளும் வண்டுசூழ் நிலையும்" (பொருந. 96 - 7). 10. பரு இழை-பரிய நூலிழை.

11. பறைந்த - தேய்ந்த; புறநா. ௩௰௧ : 1.

9 - 11. "அரையது, வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅ, ரோம்பி யுடுத்த வுயவற் பாண", "கூருகிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன, பாறிய சிதாரேன்" (புறநா. ௬௯ : 2 - 4, ௧௫௰ : 1 - 2); "ஈரும் பேனு மிருந்திறை கூடி, வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த, துன்னற் சிதாஅர்", "பாசி வேரின் மாசொடு குறைந்த, துன்னற் சிதாஅர்" பொருந. 79 - 81, 153 - 4.

13. மூரற்கை - தாளம்; எங்களைப் பாடாதவாறு செய்தென்றபடி.

14. புறநா. ௩௰௨ : 16; "பாப்புக் கடுப்பன்ன தோப்பி" (அகநா. ௩௪௮ : 7); "பாம்புவெகுண் டன்ன தேறல்" (சிறுபாண். 237.) சூடு - சுட்டிறைச்சி; புறநா. ௩௪, ௩௰௧, ௩௰௫, ௩௰௭.

15. நிரயத்தன்ன வறன் - நரகவேதனை போன்ற துன்பத்தைச் செய்விக்கும் வறுமை.

17 - 8. "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல், குலனுடை யான் கண்ணே யுள" (குறள், 223) என்பதையும் அதற்குப் பரிமேலழகர் எழுதிய விசேடவுரையையும், விநாயக புராணம், அரசியற்கைப்படலம், 38 - ஆம் பாடல் முதலியவற்றையும் பார்க்க. நிரப்படுபுணை - வறுமையைக் கடத்தற்குரிய தெப்பம்.

பி - ம். *மறையிருள். †போக்கி. ‡மூரற்கை மிக்குநன்று. §வறங். ǂகான்றிஞெடு.

உளத்தி னளக்கு மிளிர்ந்த தகையேன்
நிறைக்குளப் புதவின் மகிழ்ந்தனெ னாகி
ஒருநாள், இரவலர் வரையா வள்ளியோர் கடைத்தலை
ஞாங்கர் நெடுமொழி பயிற்றித்
தோன்றல் செல்லாதென் சிறுகிணைக் குரலே.[1]

திணை - அது ; துறை - இயன்மொழி.

*ஓய்மான் நல்லியாதனைப் புறத்திணை நன்னாகனார். (ஙஎசு)

---

20. நிறைக்குளப்புதவு - நீர்நிறைந்திருத்தலையுடைய குளத்தின் வாய்த்தலை; புறநா. உச : 19.

21. இரவலர் வரையா - யாசகரை நீக்காத. வள்ளியோர் - வரையாது கொடுப்போர். கடைத்தலை - தலைவாயில்.

22. ஞாங்கர் - பக்கம். நெடுமொழி - தனது மேம்பாட்டைக் கூறுமொழி.

18 - 23. இவ்வடிகளின் பொருள், "செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம், பெருமான் முகம்பார்த்த பின்னர் - ஒருநாளும், பூதலத்தோர் தம்மைப் பொருணசையாற் பாராவாம், காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்" (தண்டி. உரை, மேற்.) என்னும் வெண்பாவை நினைப்பிக்கின்றது.

[1]மு. புறநா. கூஅ : 19, கசஅ.

பி - ம். *ஆய்மானல், ஓய்மான் வில்லியாதனைப், ஓய்மான் நல்லியக் கோடனைப்.

(௩௭௭) பனிபழுனிய பல்யாமத்துப்
பாறுதலை மயிர்நனைய
இனிது துஞ்சுந் திருநகர் வரைப்பின்
இனைய லகற்றவென் கிணை *தொடாக் குறுகி

---

1. பழுனிய - முதிர்ந்த.
2. பாறுமயிர் - பரந்து மேல்நோக்கிய மயிர்.

1 - 2. "பாறுமயி ரவியத், தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்" புறநா. ௩௭௪ : 3 - 4.

4. இனையல் - வருந்தல். கிணைதொடா - தடாரிப்பறையை வாசித்து.

பி - ம். *தாடகுறுகி.



அவியுணவினோர் புறங்காப்ப
அற *நெஞ்சத்தோன் வாழநாளென்
றதற்கொண்டு வரலேத்திக்
கரவில்லாக் கவிவண்கையான்
வாழ்கவெனப் பெயர்பெற்றோர்
பிறர்க்குவமந் தானல்லது
தனக்குவமம் பிறரில்லென

அதுநினைந்து மதி †மழுகி
ஆங்குநின்ற வெற்கா ணூஉச்
சேய்நாட்டுச் செல்கிணைஞனை
நீபுரவலை யெமக்கென்ன
‡மலைபயந்த மணியுங் கடறுபயந்த பொன்னும்
கடல்பயந்த கதிர்முத்தமும்
வேறுபட்ட வுடையுஞ் சேறுபட்ட தசும்பும்
கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப

---

5. அவியுணவினோர் - தேவர்; "அவியுணவி னான்றோர்" (குறள், 413.) தேவர் புறங்காப்ப.

5 - 6. வாழும்படி நாடோறும் புறங்காப்பவென்று.

8. கவி வண்கையான் - கொடையாற் கவிந்த கையோடு.

9 - 10. பெற்றோராகிய பிறர்க்கு.

10 - 11. "பிறர்க்குநீ வாயி னல்லது நினக்குப், பிறருவம மாகா வொருபெரு வேந்தே" (பதிற். ௭௩), 'பொருநனென்றது தான் பிறர்க்கு உவமிக்கப்படுவானென்னும் பொருட்டு' மதுரை. 42, ந.

12. அது - உவமமின்மையை. மழுகி : "நிறையுமதி யிரவுமழுகி நிலைகெட நகைத்து" தக்க. 36.

13. எற்காணூஉ - என்னைக்கண்டு.

14. கிணைஞனை - கிணைஞனாகிய நீ; ஐ : முன்னிலையை விளக்கி நின்றது. [சொல்லி.

15. புரவலை - எம்மாற் பாதுகாத்தற்குரியாய். என்ன - என்று

16. கடறு - காடு. 18. சேறுபட்ட தசும்பு - கட்குடம்.

19. "கனவென மருண்டவென் னெஞ்சே மாப்ப" பொருந. 98.

பி - ம். *நெஞ்சத்தோனுளென்று. †பழகி. ‡மலைபெயர்ந்த பொன்னும்...பயந்தமணியும்.

75



நனவி *னல்கியோ னசைசா ரோன்றல்
நாடென மொழிவோரவ னுடென மொழிவோர்
வேந்தென மொழிவோரவன் †வேந்தென மொழிவோர்
............பொற்கோட் டியானையர்
கவர்பரிக் கச்சைநன்மான்
வடிமணி வாங்குருள
........நற்றேர்க்குழுவினர்
கதழிசை வன்கணினர்
வாளின் வாழ்ந ரார்வமொ டீண்டிக்
கடலொலி கொண்ட தானை
அடல்வெங் குருசின் மன்னிய நெடிதே.

திணை - அது ; துறை - வாழ்த்தியல்.

சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளியை உலோச்சனார். (ருஎஎ)

---

19 - 20. "கனவென மருள வல்லே நனவின், நல்கி யோனே நசைசா ரோன்றல்" புறநா. ருஅஎ : 26 - 7.

23. பொன் - கிம்புரி ; ஆகுபெயர்.

24. கவர்பரி - பகுந்து விரையும் செலவு; "கவர்பரிப் புரவியர்" (சிலப். ரு : 159.) மான் - குதிரை. [வாள்வீரர்.

27. கதழிசை - விரைதல் பொருந்திய. 28. வாளின் வாழ்நர் -

30. மன்னிய நெடிது - நெடுங்காலம் வாழ்வாளுக.

பி - ம். *னல்கியோனென்கை. †வேந்தன.

---

(கஎஅ) தென்பரதவர் மிடல்சாய
வடவடுகர் வாளோட்டிய

---

1. மிடல் - வலி.

2. வடுகர் - வடுகவீரர் ; இவர் வடநாட்டினருள் ஒருவகையார் ; "கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்" (நற். உகஉ : 5), "குல்லைக் கண்ணி வடுகர்" (குறுந். கக : 5), "கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்", "வானிணப் புகவின் வடுகர்", "முரண்மிகு வடுகர்", "தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர்", "வம்ப வடுகர் பைந்தலை சுவட்டி", "கதநாய் வடுகர்" (அகநா. கOஎ : 11, உகரு : 8, உஅக : 8, உகூ௫ : 15, ரூஎ௫ : 14, ரூஅக : 7.) ஓட்டிய - ஓட்ட.

1 - 2. "பரதவர் - தென்றிசைக்கட் குறுநில மன்னர்; அது, 'தென் பரதவர்.........வாளோட்டிய' என்னும் புறப்பாட்டானும் உணர்க" மதுரை. 144, ந.

*தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
கடுமா †கடைஇய விடுபரி ‡வடிம்பின்
நற்றார்க் கள்ளின் சோழன் கோயிற்
புதுப்பிறை யன்ன சுதைசெய் மாடத்துப்
பனிக்கயத் தன்ன நீணகர் நின்றென்
அரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி
எஞ்சா மரபின் வஞ்சி பாட
எமக்கென ǂவகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பி னருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே யதுகண்
டிலம்பா டுழந்தவென் னிரும்பே ரொக்கல்

---

3. தொடை அமை கண்ணி - கட்டுதலமைந்த தலைமாலை. வேலுக்கு மாலைசூட்டல் மரபு; புறநா. ௩௩௨ : 1 - 5

4. கடைஇய - செலுத்திய. வடிம்பு - இங்கே காலின் விளிம்பு; "மாவுடற்றிய வடிம்பு" பதிற். ௭0 : 2.

5. கோயில் - அரண்மனை.

6. சுதை - சுண்ணச்சாந்து; "வெள்ளி வெண்சுதை யிழுகிய மாடத்து" (மணி. ௬ : 43); "திங்களுங் கரிதென வெண்மை தீட்டிய, சங்கவெண் சுதையுடைத் தவள மாளிகை" (கம்ப. நகரப்.); "வெண்சுதை தீற்றியமாடம்" நைடத. நகர. 5.

7. பனிக்கயம் - குளிர்ந்த நீரையுடைய குளம்; நகருக்குக் குளம் உவமை; "கயங்கண் டன்ன வயங்குடை நகரத்து" (மதுரைக். 484); "நிழற்கயத் தன்ன நீணகர்" அகநா. ௧௦௫ : 7.

8. அரிக்கூடுமாக்கிணை - அரித்தெழும் ஓசையையுடைய பெரிய தடாரிப்பறை; "அரிக் கூடின்னியம்" மதுரைக். 612.

9. வஞ்சி - பகைமேற் செலவு; புறநா. ௧௫ : 24, ௩௩ : 10.

11. அருங்கல வெறுக்கை - பெறுதற்கரிய ஆபரணமும் செல்வமும்; புறநா. ௧௪௬ : 1.

13. இலம்பாடு - இல்லாமை உண்டாதல்; ஒக்கல் - சுற்றம்; "இலம்படு காலை யாயினும், புலம்பல் போயின்று பூத்தவென் கடும்பே", "இரும்பே ரொக்கல் பெரும்புலம் பகற்ற", "இரும்பே ரொக்கல் பெரும் புலம் புறினும்" புறநா. ௩௮௦ : 15 - 6, ௩௯௦ : 19, ௩௯௪ : 16.

பி - ம். *தொடையமைக்கண்ணி. †குடைஇய. ‡வடிம்பின நறைகிளிசொழர். ╪வகுதகுவல்ல. §னழுஙகலவெறுக்கை.



விரற்செறி மரபின செவித்தொடக் குநரும்
செவித்தொடர் மரபின *விரற்செறிக் குநரும
†அரைக்கமை மரபின மிடற்றியாக் குநரும்

மிடற்றமை மரபின வரைக்கியாக் குநரும்
‡கடுந்தெற லிராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய §ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை ╪இழைப்பொலிந் தாஅங்
கறாஅ ||வருநகை யினிதுபெற் றிகுமே
இருங் **கிளைத் தலைமை யெய்தி
அரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே.[1]

திணை - அது ; துறை - இயன்மொழி.

சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னியை ††ஊன்பொதி பசுங்குடையார். (௩௭௮)

---

14 - 5. விரலிற் செறித்தற்குரிய மோதிரமுதலியவற்றைக் காதிலும், காதிற் செறித்தற்குரிய குழை முதலியவற்றை விரலிலும் செறித்துக் கொண்டாரென்றபடி.

16. அரை - இடை. யாக்குநர் - கட்டுகின்றவர். மிடறு - கழுத்து.

18. வடசொற் சிதைந்து பொருத்தமுடையனவாகச் சான்றோர் செய்யுளில் வந்ததற்கு இவ்வடி மேற்கோள்; தொல். எச்ச. சூ. 6, ந.; இ. வி. சூ. 175, உரை.

19. அரக்கன் - இராவணன். ஞான்றை - சமயம் ; ஐ : சாரியை.

20. மதரணி - கதிர்த்த ஆபரணங்கள்.

20 - 21. குரங்கின் செம்முகப் பெருங்கிளை - செவ்விய முகத்தை யுடைய பெரிய குரங்கின் குழு ; சுக்கிரீவனைச் சேர்ந்த குரங்குகள் ; "செம்முக மந்தி") நற். கருக : 8); "தய்த்தலைச், செம்முக மந்தி யாடும்" (அகநா. உசக : 14 - 5.) இழை - ஆபரணம் ; இழைக்கப்படுதலான் வந்த பெயர். 22. அருஅ - நீங்காத. பெற்றிசும் - பெற்றேம்.

24. அரும்படரெவ்வம் - நினைவாலுண்டாகும் நோயின் வருத்தம் ; புறநா. கசுகூ : 10.

[1]மு. பாடாண்டிணைத் துறைகளுள், 'பெற்ற பின்னரும் பெருவள னேத்தி, நடைவயிற் றோன்றிய இருவகை விடை' (தொல். புறத்திணை. சூ. 30, இளம்.; ஷை. ஷை. ஷை. 36, ந.) என்பதற்கு இது மேற்கோள்.

பி - ம். *விரறசெறிகுநருரு. †மணக்கமைமரபினமிடறு. ‡கடுந்தேர். §ஞான்றுநிலஞ். ǂமிழைப்பொலிந். ||வருநதை. **கிணைத்தலைமை. ††மொழி...திபசுங்குடையநர்.



(ருஎகூ) யானே பெறுகவன் றாணிழல் வாழ்க்கை
அவனே பெறுகவென் னாவிசை நுவறல்
நெல்லரி தொழுவர் கூர்வாண் மழுங்கிற்
*பின்னை மறத்தோ டரியக் கல்செத்
தள்ளல் யாமைக் கூன்புறத் துரிஞ்சும்
†நெல்லமல் புரவி னிலங்கை கிழவோன்

வில்லி யாதன் கிணையேம் பெரும
குறுந்தா ளேற்றைக் கொழுங்க ணவ்விளர்
நறுநெய் யுருக்கி நாட்சோ றீயா
வல்ல னெந்தை பசிதீர்த் தல்லெனக்
‡கொன்வரல் வாழ்க்கைநின் கிணைவன் கூறக்

---

1. "திருந்துகழ் னோன்றாட் டண்ணிழ லேமே" (புறநா. ருகஎ : 27.) வாழ்க்கையை யான் பெறுவேன்.

2. இசை - கீர்த்தி. நுவறலை அவன் பெறுக.

3. தொழுவர் - தொழிலைச் செய்வோர்; "நெல்லரியு மிருந்தொழுவர்", "நெல்லரி தொழுவர்" (புறநா. உச : 1, உ0க : 2); "நெல்லரி தொழுவர்" (நற். ககூ : 6.) வாள் - அரிவாள்.

இவ்வடி, தொல். எச்ச. சூ. 19, ந. மேற்.

4. அரிய - அரிதற்கு. கல் செத்து - தீட்டுங் கல்லாக அறிந்து.

5. அள்ளல் - சேறு. புறம் - முதுகு. உரிஞ்சும் - தீட்டும்.

6. அமலுதல் - நெருங்குதல்; "கண்பமல் பழனம்" (மலைபடு. 454.) புரவு - விளைநிலம்; (புறநா. உசு0 : 9.) இலங்கை - மாவிலங்கை யென்னுமூர் ; புறநா. கஎசு : 6 ; "தொன்மா விலங்கைக் கருவொடு பெயரிய, நன்மா விலங்கை மன்ன ருள்ளும், மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள், உறுபுலித் துப்பி னோவியர் பெருமகன்" சிறுபாண். 119 - 22.

3 - 6. "அன்னந் துயிலெழுப்ப வந்தா மரைவயலிற், செந்நெ லரிவார் சினையாமை - வன்முதுகிற், கூனிரும்பு தீட்டுங் குலக்கோ சலநாடன்" நள. சுயம்வர. 143.

8. குறுந்தாளேற்றை - ஆண்பன்றி. விளர் - வெண்மை; "விளரூன்" புறநா. கூடுக : 5, அடிக்.

9. நாட்சோறு ஈயா - காலையுணவை அளித்து.

9 - 10. ஈயாப் பசிதீர்த்தல்வல்லன்.

11. கொன்வரல் வாழ்க்கை - விடியற்காலத்தில் வந்து தடாரி வாசித்தலாலுண்டாகிய செல்வம்; கொன் - விடியற்காலம் (சீவக. 173.) விடியற்காலத்துக் கிணைப்பறைகொட்டித் தலைவன் புகழைப் பாடுதல் பொருநர்க்கியல்பு.

பி - ம். *பிள்ளைமறத்தோடு. †கெலலமல். ‡கொனவல்.



கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது
விண்டோய் தலைய குன்றம் பின்பட
..........ரவந்தனென் யானே தாயில்
தூவாக் குழவி போல வாங்கத்
திருவுடைத் திருமனை யைதுதோன்று கமழ்புகை
வருமழை மங்குலின் மறுகுடன் மறைக்கும்
*குறும்படு குண்டகழ் நீண்மதி லூரே.

திணை - அது; துறை - பரிசிற்றுறை.
ஓய்மான் வில்லியாதனைப் புறத்திணை †நன்னாகனார். (கஎக)

---

12. தண்டாது - அமையாமல்.

13. விண் தோய் - ஆகாயத்தை அளாவிய. 15. தூவா - உண்ணாத.

14 - 5. "தாயி றாவாக் குழவி போல" புறநா. ௪ : 18, அடிக்.

16. ஐது - மெல்லிது.

17. மங்குலின் - மேகம்போல. உடன் - ஒருங்கு.

ஊர் (18) வந்தனென் (14.)

பி - ம். *குறுமபடுநதொடகழிநீண். †நன்றுதன்.

---

(௩௮௦) தென்பவ் வத்து முத்துப் பூண்டு
வடகுன் றத்துச் சாந்த முரீஇ
..............ங்கடற் றூனை
இன்னிசைய விறல்வென் றித்

---

1. பவ்வம் - கடல்; "தென்கடன் முத்தும்" (பட்டினப். 189); "தென்கடன் முத்தும்" (சிலப். அ : 19); "வெண்டிரைத் தென்கடன் முத்தும்" தஞ்சை. 93.

2. வடகுன்றம் - இமயம். சாந்தம் - சந்தனம். உரீஇ - உரிஞ்சி; "வடவர் தந்த வான்கேழ்ச் சந்தம்" அகநா. ௩௪௦ : 16.

4. விறல் வென்றி - வென்றிவகை பலவற்றுட் போர்வீரத்தாலுண் டாகிய வெற்றி.

தென்னவர் *வயமறவன்
மிசைப்பெய்தநீர் கடற்பரந்து முத்தாகுந்து
நாறிதழ்க் குளவியொடு †கூதளங் குழைய
வேறுபெ. . . . . . . . . . . . .த்துந்து
தீஞ்சுளைப் பலவி னாஞ்சிற் பொருநன்
துப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மையன்
நட்பெதிர்ந் தோர்க்கே ‡யங்கை நண்மையன்
வல்வேற் கந்த னல்லிசை யல்ல
. . . . . . . . . . . . . . .த்தார்ப் பிள்ளையஞ் சிறாஅர்

---

5. தென்னவர் வயமறவன்: "திருவீழ் மார்பிற் றென்னவன் மறவன்" அகநா. கரு.

6. முத்தாகுந்து - முத்தாகும்; இஃது உம்மீற்றுப்பெயரெச்சம்; உம், உந்தாயிற்று.

7. குளவி - மலைமல்லிகை. கூதளம் - கூதாளி; இந்த இரண்டும் சேர்த்து வழங்கப்படும்; "கூதளங் கவினிய குளவி முன்றில்" (புறநா. கசாஅ : 12) என்பதையும் அதன்குறிப்பையும் பார்க்க.

9. தீஞ்சுளைப் பலவு : "தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே", "தீஞ்சுளைப் பலவின் மாமலைக் கிழவன்" (புறநா. கoகூ : 5, கருo : 4); "மன்றப் பலவின் நீஞ்சுளை" (ஐந். எழு. 4.) நாஞ்சில் - ஒருமலை; "நாஞ் சிற் பொருநன்" புறநா. கஙஎ, கஙகூ, கசo.

5 - 9. நாஞ்சில்வள்ளுவன் மறச்சாதியினனென்றும் பாண்டியர்

களுக்குரிய படைவீரனென்றும் தெரிகிறது.

10. துப்பெதிர்ந்தோர்க்கு - வலியோடு எதிர்த்த பகைவர்க்கு; "வெப்புடைய வரண்கடந்து, துப்புறுவர் புறம்பெற்றிசினே", "கடுமான் கோதை துப்பெதிர்ந் தெழுந்த, நெடுமொழி மன்னர்" (புறநா. ௧௧ : 8-9, நிச : 8-9.) உள்ளாச் செய்மையன் - நினைத்தற்கும் எட்டாத மிக்க தூரத்துள்ளான்.

11. நட்பு எதிர்ந்தோர்க்கு - அன்பால் அடைந்தவர்க்கு.

10-11. "துப்புப் பகையுமாதல், 'துப்பெதிர்ந்தோர்க்கே.... நண்மையன்' என்பதனானும் அறிக" குறள், 1165, பரிமேல்.

12. கந்தனென்பது, நாஞ்சின்மலைத்தலைவர்பாம்பரையில் உள்ளானும் இப்பாட்டுடைத் தலைவனுமாகிய ஒருவன்பெயர்.

பி - ம். *வயன்மறவர். †கூதளங். ‡யங்கையநன்மையன், யங்கை யண்மையன், யாங்கனீ நன்மையை.



'அன்ன னாகன் மாறே யிந்நிலம்
†இலம்படு காலை யாயினும்
புலம்பல்போ யின்று பூத்தவென் கடும்பே.

திணை - அது; துறை - இயன்மொழி.
நாஞ்சில்வள்ளுவனைக் கருவூர்க்கதப்பிள்ளை. (௩௮௦)

---

14. ஆகன்மாறு - ஆதலால்; "அனையை யாகன் மாறே" புறநா.

: 17, உ0 : 20; பதிற். அ0 : 12.

15. வற்கடக் காலம் வரினும்.

16. போயின்று - நீங்கப்பெற்றது. பூத்த - பலவாற்றானும் பொலிவு பெற்ற.

15 - 6. புறநா. ருஎஅ : 12, அடிக்.

பி - ம். *அள்ளனுகன். †இளம்படுகோளையாயினும்.



(ந-அக) ஊனு மூனு *முனையி னினிதெனப்
†பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
அளவுபு கலந்து மெல்லிது பருகி
விருந்துறத் தாற்றி யிருந்தனெ மாகச்
சென்மோ பெருமவெம் விழவுடை நாட்டென

1. ஊன் - இறைச்சி; ஊண் - அடிசில். முனையின் - வெறுத்தால்.

2. பாகு - வெல்லப்பாகு; "காரகற் கூவியன் பாகொடு பிடித்த, விழைசூழ் வட்டம்" பெரும்பாண். 377 - 8.

3. அளவுபு கலந்து - நன்றாகக்கலந்து. [107 - 8.

1 - 3. "சுவைய, வேறுபல் லுருவின் விரகுதந் திரீஇ" பொருந.

4. விருந்து - புதுமை. ஆற்றி - பசியைத் தணித்துக்கொண்டு.

5. சென்மோ - வருவாயாக.

1 - 5. "ஊனு மூனு முனையினென்னும் புறப்பாட்டினுள் 'சென்மோ பெருமவெம் விழவுடை நாட்டென' என்பதனையும் தன்மைக் கண் 'மோ' வருமென இவ்வாறு அமைத்தலுமொன்று ; அன்றிப் பெரும! எம்விழவுடை நாட்டே நீ செல்லென்று சுற்றத்தார் தலைவனை நோக்கிக்கூற அப்பொருநனும் பாட்டுடைத்தலைவனை நோக்கிப் பின்னும் கூறினானாகப் பொருள் கூறுதலுமொன்று" தொல். இடை. சூ. 27, ந.

பி - ம். *முனைஇயவினிதென. †பாஅறபெய்தவும்.



யாந்தன் னறியுந மாகத் தான்பெரி
தன்புடை மையி னெம்பிரி வஞ்சித்
*துணரிய துகொளாஅ வாகிப் பழமூழ்த்துப்
†பயம்பகர் வறியா மயங்கரின் ‡முதுபாழ்ப்
பெயல்பெய் தன்ன செல்வத் §தாங்கண்
ஈயா மன்னர் ╪புறங்கடைத் தோன்றிச்
||சிதாஅர் வள்பிற் சிதர்ப்புறத் தடாரி
**ஊன்சுகிர் வலந்த தெண்கண் ணொற்றி
விரல்விசை தவிர்க்கு மரலையில் பாணியின்
இலம்பா டகற்றல் யாவது புலம்பொடு
தெருமர லுயக்கமுந் தீர்க்குவோ மதனால்
இருநிலங் கூலம் பாறக் கோடை
வருமழை முழக்கிசைக் கோடிய பின்றைச்
சேயை யாயினு மிவணை யாயினும்

இதற்கொண் ††டறிநை வாழியோ கிணைவ
சிறுநனி, ஒருவழிப் படர்கென் றோனே யெந்தை
ஒலிவெள் ளருவி வேங்கட நாடன்
உறுவருஞ் சிறுவரு மூழ்மா றுய்க்கும்

---

6. அறியுநமாக - அறிவேமாக.

6 - 7. "நயந்தனிர் சென்ற நும்மினுந் தான்பெரி, துவந்த வுள்ளமோ டமர்ந்தினிது நோக்கி" மலைபடு. 559 - 60.

8. துணரியது - குலைகொண்டது; "பைம்பாகற் பழந்துணரிய, செஞ்சுளைய கனி" (பொருந. 191 - 2.) ஊழ்த்து - செவ்வியழிந்து.

9. பகர்வு - கொடுத்தல். அரில் - சிறுதூறுகள். முதுபாழில்.

12. சிதாஅர் வள்பு - துண்டித்த வார்; "சிதாஅர் வள்பினென் றெடாரி" புறநா. ௱௭௬ : 4.

14. அரலை - குற்றம். பாணியின் - பாட்டால்.

17. கூலம் - பலபண்டம். 19. இவணை - இவ்விடத்துள்ளாய்.
23. உறுவர் - பெரியோர்.

பி - ம். துணரியதுளவாகி. †பயம்பகர்பறியா. ‡முதுபாட். §தாங்கினிதியா. ǂபுறங்கடைக்கொன்றி. ‖சிதாஅரளமபிற...தடாரிடை. **ஊனுகிர்வலர்ததென்கண். ††டறிகை.





அறத்துறை யம்பியின் மான *மறப்பின்
றிருங்கோ ளீராப் பூட்கைக்

கரும்ப னூரன் காதன் மகனே.[1]

திணையும் துறையும் அவை.

கரும்பனூர் கிழானை நன்னாகனார். (ஙஅக)

---

24. அறத்துறையம்பி - தருமவோடம்; "பிறவி யென்னும் பெருங் கடல் விடூஉம், அறவி நாவாய்" மணி. கக : 24 - 5.

மகன் (26) படர் சென்றோனே (21.)

[1]ழ. தொல். புறத்திணை. சூ. 30, இளம்.; ஷை. ஷை. சூ. 36, ந. மேற். பி - ம். *பிறபினறிருககொளளாப.

---

(ஙஅஉ) கடற்படை யடற்கொண்டி
*மண்டுற்ற மலிர்நோன்றாட்
டண்சோழ நாட்டுப் †பொருநன்
அலங்குளை யணியிவுளி
நலங்கிள்ளி நசைப்பொருநரேம்
பிறர்ப்பாடிப் பெறல் ‡வேண்டேம்
அவற்பாடுது மவன்றாள் வாழியவென
நெய்குய்ய வூனவின்ற
பலசோற்றாற் §னின்சுவைய
நல்குரவின் பசித்துன்பினின்
முன்னாள் விட்ட மூதறி சிறாஅரும்

1. கொண்டி - பொருளின்மிகுதி; "கொண்டி பெறுகென் றோனே" புறநா. ௩௯௦ : 23.

2. மலிர் - நீரூற்று; "மணலாடு மலிர்நிறை" ஐங்குறு. ௧௫.

3. பொருநன் - உவமிக்கப்படுபவன்; "போர்மிகு பொருந" (முருகு. 276); "வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந" (மதுரை. 42); அரசனுமாம்.

5. பொருநரேம் - பொருநர்க உள்ளேம். 6. பிறரைப் பாடி.

7. வாழியவென அவனைப்பாடுவேம். 9. சோற்றான் - சோற்றோடு.

பி - ம். *மண்டற்ற மற்றொன்றுட, மண்டற்ற மலிற்றொன. †பொருநன வலங்குனே. ‡வேணடேமயறபாடுதும். §னினைஞ்சுவையநல் குரவின பசித்துன்பவென்பநின்.



*யானும், ஏழ்மணியங் கேழணியுத்திக்
கட்கேள்விக் கவை †நாவின்
நிறனுற்ற வராஅப்போலும்
வறனொரீஇ ‡வழங்குவாய்ப்ப
விடுமதியத்தை கடுமான் றோன்றல்
நினதே, முந்நீ ருடுத்த §வியனுலக றிய
எனதே, ╪கிடைக்கா ழன்ன தெண்கண் மாக்கிணை
கண்ணகத் தியாத்த நுண்ணரிச் சிறுகோல்

எறிதொறு நுடங்கி யாங்குநின் பகைஞர்
கேட்டொறு நடுங்க ||வேத்துவென்
வென்ற தேர்பிறர் வேத்தவை யானே.

திணை - அது; துறை - கடைநிலை.

சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார். (௩௮௨)

---

12. ஏழ்மணி - எழுச்சியையுடைய மணி. உத்தி - படப்பொறி.

13. கட்கேள்வி - கண்ணாற்கேட்டல். கவைநா - பிளவுபட்ட நாக்கு.

15. வறன் - வறுமை. வழங்கு வாய்ப்ப - பிறர்க்கு யாம் கொடுத்தல் கைகூடும்படி.

14 - 15. வறுமைக்கு அராவின் விடம் உவமம்.

16. மதியும் அத்தையும் அசைநிலைகள். தோன்றல்: விளி.

17. நினதாகிய உலகறிய.

18. கிடைக்காழ் - நெட்டியின் காம்பு. எனதாகிய கிணையென்க.

18 - 9. கிணையினிடத்து அதனையடிக்கும் சிறுகோல் கட்டப்பட்டிருக்கும்; "நுண்கோற் சிறுகிணை" புறநா. ௩௮௩ : 3.

21. கேட்டொறும் - கேட்குந்தோறும்.

22. வென்ற தேர் - ஏனையோரை வென்ற தேரையுடைய. பிறர் - அயலரசர். வேத்தவையான் - இராசசபைக்கண்.

அறிய (17) ஏத்துவென் (21.)

பி - ம். *யானுமெமணி. †நாவிறறாநிறத்தவராஅப், நாவிறறா

கிறத்தவாஅப். ‡வயங்குவாயபப, வமஙகுவாயபப. §விலவயினுலகு.
╪கிடைகாழனனவென்றெண்கண். ‖வெந து, வோ துவென்.



(௩௮௩) ஒண்பொறிச் சேவ லெடுப்பவேற் றெழுந்து
தண்பனி யுறைக்கும் புலரா ஞாங்கர்
நுண்கோற் சிறுகிணை சிலம்ப வொற்றி
நெடுங்கடை நின்று பகடுபல வாழ்த்தித்
*தன்புக ழேத்தினெ னாக வூன்புலந்
தருங்கடி வியனகர்க் †குறுகல் வேண்டிக்
கூம்புவிடு மென்பிணி யவிழ்த்த வாம்பற்
றேம்பா யுள்ள தங்கமழ் மடருளப்
‡பாம்புரி யன்ன வடிவின காம்பின்
கழைபடு சொலியி னிழையணி வாரா
ஒண்பூங் கலிங்க முடீஇ நுண்பூண்
வசிந்துவாங்கு நுசுப்பி னவ்வாங் குந்திக்

1. சேவல் - ஆண்கோழி. எடுப்ப - எழுப்ப. ஏற்றெழுந்து - துயிலுணர்ந்தெழுந்து; "தூமலர்க்க ணேற்க துயில்" (பு. வெ. 197); "துயிலிடைக் கண்ட துணைநலத் தேவியை, இயல்புடை யங்க ணேற்றபிற் காணுது" பெருங். ௪. 7 : 91 - 2.

2. மு. புறநா. ௬௭௪ : 4. உறைக்கும் - துளிக்கும்.

3. நண்கோற் சிறுகிணை : புறநா. ௬௮௨ : 18 - 9. சிலம்ப ஒற்றி - முழங்க அடித்து.

4. பகடு - உழும் எருது; எருமைக்கடாவுமாம்.

1 - 4. புறநா. ௬௮௫ : 1 - 2. 6. குறுகல் - அடைதல்.
குறுகல்வேண்டி (6) எத்திளெனுக (5.)
7. மு. புறநா. ௨0௬ : 3.

10 - 11. கலிங்கம் - ஒருவகை நல்லாடை. "நோக்குநுழை கல்லா நுண்மைய பூக்கனிர், தரவுரி யன்ன வறுவை" (பொருந. 82 - 3); "காம்புசொலித் தன்ன வறுவை யுடீஇ" (சிறுபாண். 236); "கண்பொரு புகூஉ மொண்பூங் கலிங்கம்" மதுரைக். 433.

9 - 11. காம்பின் கழை படு சொலியின் - மூங்கிலாகிய கோலின் உட்புறத்தே பெயர்த்தெடுக்கப்படும் வெள்ளிய தோல்போல. இழையணி வாரா - செய்யப்பட்டுள்ள இழைகளின் வரிசை கண்ணுக்குப் புலப்படாத. சொலி, கலிங்கத்திற்கு உவமை.

12. வசிந்து - தலைவனை வயமாக்கி. உந்தி - கொப்பூழ்.

பி - ம். *தான் புகழ்ந்து. †குறுகல்வேண்டி. ‡பாம்பு பயனாகுதன னவடிவின சாமபின.

கற்புடை மடந்தை தற்புறம் புல்ல . . .
எற்பெயர்ந்த நோக்கி....................
..............................கற்கொண்
*டழித்துப் பிறந்தன னாகி யவ்வழிப்
பிறர், பாடுபுகழ் பாடிப் †படர்பறி யேனே
குறுமுலைக் கலமரும் பாலார் வெண்மறி
நரைமுக வூகமொ டுகளுஞ்சென................
.... ....................‡கன்றுபல கெழீஇய
கான்கெழு நாடன் கடுந்தே ரவியனென
ஒருவனை யுடையேன் மன்னே யானே
அருனெவன் §பரிகோ வெள்ளியது நிலையே.

திணையும் துறையும் அவை.

................மாறேக்கத்து ╪நப்பசலையார். (௩அ௩)

16. அழித்து - மீட்டும். 17. படர்பு - செல்லுதல்.
18. மறி - ஆட்டுக்குட்டி. 20. ஊகம் - ஒருவகைக் குரங்கு.

21. அவியன் - ஒருபகாரி; "களிமலி கள்ளி னற்றே ரவிய, னாடிய விளமழை சூடித் தோன்றும், பழந்தூங்கு விடரகம்" அகநா. உஎக: 12-4.

23. அருன் - மேற்கூறிய தலைவன் தனது நிலைமை குன்றுன். வெள்ளியதுநிலை எவன்பரிகோ - சுக்கிரனுடைய நிலைமைக்குச் சிறிதும் வருந்தேன்; புறநா. ௩அச: 20, ௩அசு: 24.

பி - ம். *டளித்துப். †படர்பறிவோனே. ‡தன்று பலகெழீஇய

காழகெழு. §பரிசொவெள்ளி. ╪நபபாலையார்.

---

(ந-அச) மென்பாலா னுடனணை இ
வஞ்சிக்கோட் *டுறங்குநாரை
†அறைக்கரும்பின் பூவருந்தும்
‡வன்பாலாற் கருங்கால்வரகி

1. மென்பால் - மருதநிலம். 2. வஞ்சிக்கோடு - வஞ்சிமரத்தின்கிளை. 4. வன்பால் - முல்லைநிலம்.

பி - ம். *டுறவங்குநாரை. †வாடைக்கரும்பின, அடைக்கரும்பின. ‡வனபாலாற்குக் கருங்.



.......................
னங்கட் குறுமுயல் வெருவ வயல
கருங்கோட் டிருப்பைப் பூவுறைக் குந்து
விழவின் *றுயினு முழவர் மண்டை
இருங்கெடிற்று மிசையொடு பூங்கள் வைகுந்து
....................... †துணையேம் பெரும
‡நெல்லென்னு பொன்னென்னு

||கனற்றக்கொண்ட நறவென்ன ....
......................மனையென்ன வவைபலவும்
§யான்றண்டவுந் தான்றண்டான்
நிணம்பெருத்த கொழுஞ்சோற்றிடை
மண்ணுணப் புகழ்வேட்டு
நீர்நாண நெய்வழங்கிப்
‡புரந்தோ னெந்தை யாமலந்தொலை.........
அன்னோனை யுடையே மென்ப.......வறட்
கியாண்டு நிற்க வெள்ளி மாண்ட

---

7. இருப்பைப்பூ உறைக்குந்து - இருப்பைப்பூ உதிரும்; "முள்ளரை யிலவத் தொள்ளிணர் வான்பூ...இருநிலத் துறைக்கும்" ஐங்குறு. ௩௨௦.

8. மண்டை - ஒருவகை உண்கலம் (வாணுய்.)

9. கெடிற்றுமிசை - கெடிற்றுமீனாகிய உணவு; "அரிப்பறை வினைஞ ரல்குமிசைக் கூட்டும்" (ஐங்குறு. அக); மிசை, மிசைவெனவும் வழங்கும்; "குறவர்க் கல்குமிசை வாகும்" புறநா. உ௬௬ : 2.

11. நெல்லும் பொன்னும் : "நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க" (ஐங்குறு. க); "பொன்னு நெல்லும் புரிவின் வழங்குகென்று" பெருங். க. 37 : 196. 12. கனற்ற - வெதுப்ப.

14. யான் தண்டவும் - யான் நீங்கவும்; "தண்டாக் களிப்பி னாடுங் கூத்து" மணி. ௬ : 126.

17. "நீர்நாண நெய்வழக்கியும்" புறநா. கசுசு : 21.

19. என்ப: அசை. வறட்கு - வற்கடகாலத்தைத் தரும்பொருட்டு.

20. வெள்ளி யாண்டு நிற்க - மழைக்கோளாகிய சுக்கிரன் எங்கே நின்றாலென் ? புறநா. ருஅரு : 24, ருஅசு : 20 - 24.

பி - ம். *ருயுனுழவா. †கிளையேம். ‡நெல்லென்னும் பொன் னென்னும். ||கன்னற்கொண்ட. §யானறண்டவுமதூன்றண்டா. ‡புரதெனெந்தை.



உண்ட நன்கலம் பெய்து நுடக்கவும்
தின்ற *நண்ப லூன்றோண்டவும்
வந்த வைக லல்லது
சென்ற வெல்லைச் செலவறி யேனே.

திணையும் துறையும் அவை.

கரும்பனூர்கிழானைப் புறத்திணைநன்னாகனார். (ருஅச)

22. நண்பல் - பல்லின்நடு.

பி - ம். *நன்பலூண்டோண்டவும்.

(௩அரு) வெள்ளி தோன்றப் புள்ளுக்குர லியம்பப்
புலரி விடியற் பகடுபல வாழ்த்தித்
தன்கடைத் தோன்றினு மிலனே பிறன்கடை
அகன்கட் டடாரிப் பாடுகேட் டருளி
வறனியா னீங்கல் வேண்டி யென்னரை
*நீனிறச் சிதாஅர் களைந்து
†வெளிய துடீஇயென் பசிகளைந் தோனே
‡காவிரி யணையுந் தாழ்நீர்ப் படப்பை
நெல்விளை கழனி §யம்பர் கிழவோன்
நல்லரு வந்தை வாழியர் புல்லிய

---

1. புள் - கோழிச்சேவல்; பறவைப்பொதுவுமாம்; "வெள்ளியு மிரு விசும் பேர்தரும் புள்ளும், உயர்சினைக் குடம்பைக் குரற்றோற் றினவே" புறநா. ௩௯௭ : 1 - 2.

4. பாடு - ஓசை. 5. வறன் - வறுமை.

6. நீலநிறமுள்ள கந்தையை நீக்கி.

7. வெளியது - வெள்ளாடையை.

8. காவிரியென்றது இங்கே அரிசிலாற்றை. படப்பை - தோட்டம்.

9 - 10. அம்பர் - சோழநாட்டிலுள்ளதோர் ஊர். அருவந்தை - ஓர் உபகாரி; "கற்ற நாவினன் கேட்ட செவியினன், முற்ற வுணர்ந்த மூதறி வாளன், நாகரிக நாட்டத் தாரிய னருவந்தை", "நாடே பிறர்நாட்டிற்

பி - ம். *நிலந்தினக் குறைந்தசிதாஅர், நிலந்தினசிதாஅர். †வெளி துடீஇக்களைந்தோனேபசி. ‡காவிரியங்கணையுங், காவிரிகணையுங். §யம்பல்.

வேங்கட விறல்வரைப் பட்ட
ஓங்கல் வானத் துறையினும் பலவே.

திணை அது; துறை - வாழ்த்தியல்.
*அம்பர்கிழான் அருவந்தையைக் கல்லாடனார். (௩அ௫)

---

குவமை யாறே, காலமறிந் துதவுங் காவிரி தானே, யாடவர் திலக னம்பர் மன்ன, னீடிசைத் தலைவ னருவந்தை", "வருநற் கங்கை வடதிசைப் பெருமையுந், தென்றிசைச் சிறுமையு நீக்கிய குறுமுனி, குண்டிகைப் பழம்புனற் காவிரிப் பெரும்பதி, யம்பர்க் கதிபதி" (திவாகரம்) என்பவற்றிற் காவிரியும் அம்பரும் அருவந்தையும் பாராட்டப்பெற்றிருத்தல் காண்க.

பி - ம். *அம்பல கிழான வெ:நதையை.

---

(௩அ௬) நெடுநீர *நிறைகயத்துப்
படுமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறைமுக்கவும்
சூடு கிழித்து வாடூன் மிசையவும்
ஊன்கொண்ட வெண்மண்டை
ஆன்பயத்தான் முற்றழிப்பவும்
வெய்துண்ட வியர்ப்பல்லது

செய்தொழிலான் வியர்ப்பறியாமை
ஈத்தோ னெந்தை யிசைதன தாக
வயலே, †நெல்லின் வேலி நீடிய கரும்பின்

---

1. கயம் - பள்ளமான நீர்நிலை.

3. வறை - வறையல்; ஒருவகைஉணவு. முகக்க - முகந்துகொள்ள.

1 - 3. சுட்ட நெய்யில் வேகும் வறையின் முழக்கத்திற்குக் கயத்தில் வீழும் மாரித்துளியின் முழக்கம் உவமம்.

4. சூடு - சுடப்பட்ட இறைச்சி.

5. புறநா. கூஅசு : 8 - 9. 6. ஆன்பயம் - பசுப்பால்.

7. உண்டமையாலுண்டான வேர்வையல்லாமல்.

8. அறியாதபடி.

10 - 11. கரும்பின்பாத்தி: "கரும்புநடு பாத்தியிற் கலித்த வாம்பல்" ஐங்குறு. கூ௰.

பி - ம். *நிறையககயத்துப. †நெலலி வேயி னீடிய.



பாத்திப் பன்மலர்ப் *பூத்த தும்பின
புறவே, புல்லருந்து பல்லாயத்தான்
வில்லிருந்த வெங்குறும்பின்று
கடலே, காறந்த கலனெண்ணுவோர்

கானற் புன்னைச் சினை †நிலைக் குந்து
கழியே, சிறுவெள் ளுப்பின் ‡கொள்ளை சாற்றிப்
§பெருங்கனன் னாட் டுமணொலிக்குந்து
அன்னநன் னாட்டுப் பொருநம் யாமே
பொராஅப் பொருநரேம்
‡குணதிசை நின்று குடமுதற் செலினும்
குடதிசை நின்று குணமுதற் செலினும்
வடதிசை நின்று தென்வயிற் செலினும்
தென்றிசை நின்று குறுகாது நீடினும்
யாண்டு ||நிற்க வெள்ளியாம்
வேண்டிய துணர்ந்தோன் றாள்வா ழியவே.

திணையும் துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைக் கோவூர் கிழார். (௩௮௬)

---

11. ததும்பின - நிறைந்தன.
12. புறவு - முல்லைநிலம். ஆயத்தான் - ஆயத்தோடு கூடி.
13. குறும்பு - சிற்றரண்கள்.
14. கால் தந்த - காற்றாற்கொண்டுவரப்பட்ட.
15. சினை - கிளை. நிலைக்குந்து - நிலைக்கும்.
17. உமண் - உப்புவிற்குஞ்சாதி.
16 - 7. "சில்பத வுணவின் கொள்ளை சாற்றிப், பல்லெருத் துமணர்

பதிபோகு நெடுநெறி" பெரும்பாண். 64 - 5.

19. பொராஅப் பொருநர் - கூத்தர்; வெளிப்படை; பொராஅ - ஒப்பில்லாதவெனினுமாம். 20. செலினும் - சுக்கிரன்சென்றாலும்.

24. வெள்ளி - சுக்கிரன். 25. வேண்டியது - யாம்வேண்டியதை.

பி - ம். *பூத்ததுமபினனுறவேபுலலருந்து. †நிலகருந்து. ‡கொளளைச்சாறறி. ‡‡பெருங்கனனட்டு. §குடதிசை,...செலினும் வடதிசை. ||நிறகவெனறியாம்.





(நஅஎ)வள்ளுகிர வயலாமை

*வெள்ளகடு கண்டன்ன
வீங்குவிசிப் புதுப்போர்வைத்
†தெண்கண் மாக்கிணை யியக்கி யென்றும்
மாறுகொண்டோர் மதிலிடறி
நீருடிய நறுங்கவுள
பூம்பொறிப் பணையெருத்தின
வேறுவேறு ‡பரந்தியங்கி
§வேந்துடைமிளை யயல்பரக்கும்
ஏந்துகோட் டிரும்பிணர்த்தடக்கைத்
திருந்துதொழிற் பலபகடு

பகைப்புல மன்னர் பணிதிறை தந்துநின்
╪நகைப்புல வாணர் நல்குர வகற்றி
மிகப்பொலியர்தன் சேவடியத்தையென்
றியானிசைப்பி னனிநன்றெனப்
பலபிற வாழ்த்த விருந்தோ ||ரென்கோ......
**மருவவினைக ரகன்
திருந்துகழற் சேவடி குறுகல் வேண்டி

---

1. வள் - கூர்மை; "வள்ளணி வளைநாஞ்சிலவை" பரி. கரு : 57.

2. அகடு - வயிறு.

1 - 4. கிணைப்பறை ஆமையின் அகடுபோல்வது; "ஆமை, கம்பு ளியவ னுக விசிபிணித், தெண்கட் கிணையிற் பிறழும்" (அகநா. கூருசு); பு. வெ. 186, 206.

7. எருத்து - பிடரி. 9. மிளை - காவற்காடு.

11. பகடு - யானை. 13. நகைப்புலவாணர் - புலவர்.

12 - 3. பகைவர் அளித்த திறையைத் தம்மைச்சார்ந்த இரவலர்க்குக் கொடுத்தல் அரசர்க்கியல்பு.

14. தன் சேவடி மிகப்பொலிக. 16. என்கோ - என்பேனோ

17. மருவுதற்கு இனிய நகரம்.

பு - ம். *வெளகெொணடனன. †தென்கண். ‡பாநதியயங்கி §வேந்துடையிளை. ╪நகைபபல வாழ்நர்...மிபபொலியாத செவடிபொல யாதனதயென்றனியானிசப பினனினனனிநன றனிற பலபிறன்.

||ரெலகோ. **மிருவ.



*வென்றிரங்கும் விறன்முரசினோன்
†என்சிறுமையி னிழித்துநோக்கான்
தன்பெருமையின் றகவுநோக்கிக்
‡குன்றுறழ்ந்த களிறென்கோ
கொய்யுளைய மாவென்கோ
மன்றுநிறையு நிரையென்கோ
§மணைக்கலமரொடு கலமென்கோ
ஆங்கவை, கனவென மருள வல்லே நனவின்
≠நல்கி யோனே நசைசா ன்றோன்றல்
ஊழி வாழி பூழியர் பெருமகன்
பிணர்மருப் பியானைச் செருமிகு நோன்றாட்
செல்வக் கடுங்கோ வாழி யாதன்
||ஒன்னாத் தெவ்வ ருயர்குடை **பணித்திவன்
விடுவர் மாதோ நெடிதே நி . . . . . .

---

19. வென்று - போர்க்களத்தில் வஞ்சியாது பகைவர்க்கு முன்னே நின்று. புறநா. ககஉ :4, அடிக்.

20. என்னை இழித்து நோக்கானாகி.

21. தன்னுடைய மேம்பாட்டை அறிந்து. 23. மா - குதிரை.

22 - 3. ஓகாரம் எண்ணுப்பொருளில் வந்ததற்கும், அதன்பின் வல்லினம் இயல்பாயதற்கும் இவ்வடிகள் மேற்கோள்; தொல். உயிர்மயங்கு. சூ. 88, இளம். ; ந.

24. நிரை - பசுக்கூட்டம்.

26. "கனவென மருண்டவென் னெஞ்சே மாப்ப" (பொருந. 98.) புறநா. ௧௪௦ : 5 - 8, அடிக்.

26 - 7. "கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப, நனவி னல்கியோ னசைசா ன்றோன்றல்" புறநா. ௩௭௭ : 19 - 20.

30. இப்பாட்டுடைத்தலைவன் பெயர் இவ்வடியில் அமைந்துள்ளது.

31. பணித்து - தாழ்த்தி.

பி - ம். *வெனறிரகசு முரசினுனெனச சிலமபினிழித்து. †எனசசிறுமை. ‡குன்றகழகளிறு. §மகனைககளமரொடுகலமெனை. ╪நலகியோனெநதை நகைசானறோன்றல். ||என்னுத்தெவ்வர். **பணிததிவணிவிடுவர்.



புல்லிலை வஞ்சிப் புறமதி லலைக்கும்
கல்லென் பொருநை *மணலினு மாங்கட்
பல்லூர் சுற்றிய கழனி
எல்லாம் விளையு நெல்லினும் பலவே.

திணையும் துறையும் அவை.

சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதனைக்

33. வஞ்சியென்னும் மரவிசேடத்திற்கு உரிய 'புல்லிலை' என்னும் அடை அதன் பெயரையுடையதாகிய நகருக்கும் ஆயிற்று.

34. பொருநை - ஓராறு. "தார்முற்றி யதுபோலத் தகைபூத்த வையைதன், நீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லா னோரதார், போர் முற்றொன் றறியாத புரிசை" கலி. ௬எ : 3 - 5.

33 - 4. "ஒளிதிக ழுத்தி யுருகெழு நாகம்" (பரி. கஉ : 4, பரிமேல்.) என்பதற்கு இவ்வடிகள் மேற்கோள்.

34 - 6. "மண்ணான் வேந்தே நின்வா ணாட்கள், தண்ணான் பொருநை மணலினுஞ் சிறக்க" சிலப். உஅ : 125 - 6.

பி - ம். * மணலினுமாக்கட்.

---

(௩அஅ) வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயனில் காலை

1. வெள்ளிக்கோள் தென்திசையில் எழுதல் தீய நிமித்தம். இந் நிகழ்ச்சி மழை பெய்யாமைக்கும் வற்கடம் உண்டாவதற்கும் காரண மென்பர்; "மைம்மீன் புகையினுந் தூமந் தோன்றினும், தென்றிசை மருங் கின் வெள்ளி யோடினும்" (புறநா. ககஎ: 1 - 2), "வசையில்புகழ் வயங்கு வெண்மீன், திசைதிரிந்து தெற்கேகினுந், தற்பாடிய தளியுணவிற், புட் டேம்பப் புயன்மாறி, வான்பொய்ப்பினுந் தான்பொய்யா, மலைத்தலைய

கடற்காவிரி" (பட்டின. 1-6), "வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி, பயங்கெழு பொழுதோ டாநிய நிற்ப", "நிலம்பயம் பொழியச் சுடர்சினந் தணியப், பயங்கெழு வெள்ளி யாநிய நிற்ப" (பதிற். உச, சுக), "கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும், விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்,...காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை" சிலப். கo : 102 - 8.



*இரும்பறைக் கிணைமகன் சென்றவன் பெரும்பெயர்
....................................பொருந்தித்
தன்னிலை †யறியுந ணுக வந்நிலை
இடுக்க ணிரியல் ‡போக வுடைய
கொடுத்தோ னெந்தை கொடைமேந் தோன்ற
...............................ணுமருப்பாக
வெல்லும் வாய்மொழிப் புல்லுடைவி.......
§பெயர்க்கும் பண்ணற் கெடுமரொமககிரென
‡விளைப்பக டேற்ற மேழி ||கிணைத்தொடா
நாடொறும் **பாடே னயி னை
††மணிகிளர் முன்றிற் றென்னவன் மருகன்
பிணிமுர சிரங்கும் பீடுகெழு தானை
அண்ணல் ‡‡யானை வழுதி

கண்மா றிலியரென் பெருங்கிளைப் புரவே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

சிறுகுடிகிழான் பண்ணனை மதுரை அளக்கர்ஞாழார் மகனர் மள்ளனர். (நூஅஅ)

---

3. கிணைமகன் - கிணைப்பறை வாசிப்பவன்; கிணையன். பெரும் பெயர் - பெரும்புகழ்.

5. தன்னிலை - தன்னுடைய மேம்பட்ட நிலை.

6. இரியல் போக - கெட. உடைய - தன்பால் உள்ளனவற்றை.

10. பண்ணன் - இப்பாட்டுடைத்தலைவன்.

11. வினைப்பகடு - உழவுத்தொழிற்குரிய எருது; கடா. ஏற்றம் - நீர் இறைத்தற்குரியது; இப்பெயர் ஏத்தமெனவும் வழங்கும்.

13. மணி - ஆராய்ச்சிமணி; "வாயிற் கடைமணி நடுநா நடுங்க, ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத், தான்ற, னரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன்" (சிலப். உ0 : 53 - 5.) மருகன் - வழித்தோன்றல்.

14. பிணித்தல் - கட்டுதல்.

16. கண்மாறிலியர் - கண்ணோட்டம் ஒழிவானாக. புரவு - காத்தல்.

பி - ம். *இரும்பிறை கிணைமகன். †யறியினாக. ‡போத. §பெயாகுமபணணறகெடடீரொ மககிரென. ǂவினைப்கடெதுமேனி தினைதொடர், வினைப்பகடெததுமெந்திணைநதொடா. ‖திணைத்தாடா. **பாடெனுபினெனைகாண. ††மணிகிளாழுககிறறெனனவன. ‡‡யானைவழுகணமாறிலியா.

(௩௮௯) நீர் நுங்கின் *கண்வலிப்பக்
கானவேம்பின் காய்திரங்கக்
கயங்களியுங் கோடையாயினும்
ஏலா வெண்பொன் †போருறு காலை
எம்மு முள்ளுமோ பிள்ளையம் ‡பொருநன்
என்றீத் தனனே யிசைசா னெடுந்தகை
இன்றுசென் றெய்தும் வழியனு மல்லன்
செலினே காணா வழியனு மல்லன்
புன்றலை மடப்பிடி யினையக் கன்றுதந்து
குன்றக நல்லூர் மன்றத்துப் பிணிக்கும்
கல்லிழி யருவி வேங்கடங் கிழவோன்

---

1. நீர்நுங்கு - நீரையுடைய பனநுங்கு. வலிப்ப - நீரின்றி வற்ற.
2. திரங்க - உலர ; "திரங்குமா ணரிற் பொலியச் சூடி" மலைபடு. 431.

3. கயம் - ஆழமான நீர்நிலை. களியும் - நீர்வற்றிக்களிமயமாதற்குரிய.

4. வெண்பொன் - வெள்ளிக்கோள். போர் - மற்றைக் கோள்களோடு அது செய்யும் யுத்தம். இது கிரகயுத்தமென்று சொல்லப்படும்; "ஆதி சான்ற மேதகு வேட்கையின், நாளுங் கோளு மயங்கிய ஞாட்பின், மதியமு ஞாயிறும் பொருவன போல" (பாரதம்) ; "தேரோடு தேரேய்த் தலிற்றென்னிலந் தாங்க லாற்றுத், தாளோடு தாடேய்த்தலிற் றந்த தழற்பி றங்கல், வாளோடு மின்னே யெபோனெடு வானிேனும், கோளோடு கோளுற் றனவொத்தடர்ந் தார்கொ தித்தார்" (கம்ப. வாலிவதை. 38) என்பது இங்கே அறியற்பாலது.

5. எம்மும் உள்ளுமோ - எம்மையும் நினைப்பானோ.

7. காட்சிக்கு எளியனுமல்லன்.

8. காணுதற்கு அரியனுமல்லன்.

9. புன்றலை - சிவந்த தலை; "புன்றலை மகாரோடு" (மலைபடு. 253, ந.) இனைய - வருந்த.

9 - 11. "கறையடி மடப்பிடி கானத் தலறக், களிற்றுக்கன் றொழித்த வுவகையர் கலிசிறந்து, கருங்கான் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து, பெரும்பொளி வெண்ணா ரழுந்துபடப் பூட்டி, நெடுங்கொடி நுடங்கு நியம மூதூர், நறவுநொடை நல்விற் புதவுமுதற் பிணிக்கும், கல்லா விளையர் பெருமகன் புல்லி, வியன்றலை நன்னாட்டு வேங்கடம்" அகநா. அக : 3 - 10.

பி - ம். *கவைசிறபக. †போகுறு....பொருநவென்று. ‡பொருநவென்று.

செல்வுழி யெழாஅ நல்லேர் முதியன்
*ஆத னுங்கன் போல நீயும்
†பசித்த வொக்கற் பழங்கண் வீட
வீறுசா னன்கல நல்குமதி ‡பெரும
ஐதக லல்குன் மகளிர்
நெய்தல்கே ளன்மார் நெடுங்கடை யானே.

திணையும் துறையும் அவை.
ஆதனுங்கனைக் கள்ளிலாத்திரையனார். (ஙஅக)

12. பகைவர் புறங்கொடுத்துச் செல்லும்போது பின்செல்லாத; மதுரை. 177, ந. ; பதிற். கூ0 : 27, உரை.

13. ஆதனுங்கன் - இப்பாட்டுடைத் தலைவன்.

14. ஒக்கல் - சுற்றம். பழங்கண் - துன்பம்.

17. நெய்தல் - நெய்தற்பறை; சாப்பறை.

பி - ம். *ஆறுநுஙகன், ஆகுநுங்கன. †பசிதது வொஙககறபழங. ‡பெருமவைததல.

---

(ஙகூ0) அறவை நெஞ்சத் தாயர் வளரும்
மறவை நெஞ்சத் *தாயி வாளர்
அரும்பலர் †செருந்தி நெடுங்கான் மலர்கமழ்

. . . . . . . . . . . . . . . . . . . . . .மன்னமுற்றத்
தார்வலர் குறுகி னல்லது காவலர்
‡கனவினுங் குறுகாக் கடியுடை வியனகர்
§மலைக்கணத் தன்ன மாடஞ் சிலம்பவென்
அரிக்குரற் றடாரி யிரிய வொற்றிப்
பாடி நின்ற ǂபன்னா ளன்றியும்

---

1. அறவைநெஞ்சம் - அறத்தையுடைய நெஞ்சம் ; "அறவை யாய ரகன்றெரு வடைந்தன" (சிலப். உஉ : 116); 'அறவை நெஞ்சத் தாயர்' என்பதை, "ஆகாத் தோம்பி யாப்பய னளிக்குங்,கோவலர் வாழ்க்கையொர் கொடும்பா டில்லை" (சிலப். கரு : 120 - 21) என்பது விளக்குகின்றது.

1 - 2. புறநா. சச : 11 - 3. செருந்தி - ஒரு பூமரம்.

5. ஆர்வலர் - பரிசிலர். காவலர் - அரசர். 6. கடி - காவல.

5 - 6. "புலிதுஞ்சு வியன்புலத் தற்றே, வலிதுஞ்சு தடக்கை யவ னுடை நாடே" புறநா. ருச : 13 - 4.

7. சிலம்ப - முழங்க ; முழக்கம், இங்கே எதிரொலி.

பி - ம். *தாயிவிளா. †செநதிநெடுநகாமலாகமழு. ‡தாவலர் §மழைகளத. ǂபனனாளையும்.



சென்ற ஞான்றைச் சென்றுபட ரிரவின்

வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற
புன்றலைப் பொருந னளியன் றானெனத்
தன்னுழைக் குறுகல் வேண்டி யென்னரை
முதுநீர்ப் பாசி யன்ன *வுடைகளைந்து
திருமல ரன்ன புதுமடிக் கொளீஇ
மகிழ்தரன் மரபின் மட்டே யன்றியும்
†அமிழ்தன மரபி னூன்றுவை யடிசில்
வெள்ளி வெண்கலத் தூட்ட லன்றி
முன்னூர்ப் பொதியிற் சேர்ந்த மென்னடை
இரும்பே ரொக்கல் ‡பெரும்புலம் பகற்ற
╪அகடுநனை வேங்கை வீகண் டன்ன
§பகடுதரு செந்நெல் போரொடு நல்கிக்
கொண்டி பெறுகென் றோனே யுண்டுறை
மலையல ரணியுந் தலைநீர் நாடன்

---

10. சென்றஞான்று - முதல்நாள்.

12. அளியன் - அளிக்கத்தக்கான்.

14. "ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி, வேர்புரை சிதாஅர் நீக்கி" (புறநா. ௩௯௨ : 13 - 4); "பாசி வேரின் மாசொடு குறைந்த, துன்னற் சிதாஅர் நீக்கி" (பொருந. 153 - 4); "பாசி யன்ன சிதர்வை நீக்கி" பெரும்பாண். 468.

15. மலரென்றது, பகன்றைப்பூவை; புறநா. ௩௯௩ : 17 - 8, அடிக்.

17. துவை - துவையல்.

18. வெள்ளிக்கலம் : பெரும்பாண். 477 - 80, ந.

19. முன்னூர் - ஊர்முன். பொதியில் - அம்பலம்.

20. "இரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினும்" புறநா. ருகச : 16.

21. அகடுநனை - உள்ளிடம்நனைந்த. வேங்கைவீ-வேங்கைமரத்துப்பூ.

22. பகடுதரு செந்நெல் - எருது முதலியவைகள் உழுதுண்டாக்கிய செவ்விய நெல்; "பகடுதரு பெருவளம் வாழ்த்தி" (புறநா. ருகக : 4); "பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க" நாலடி. 2.

21 - 2. மலைபடு. 434 - 5.

23. கொண்டி - பொருளின் மிகுதி; புறநா. ருஅஉ : 1.

பி - ம். *வுடைகளைநதிருமவானனன. †அமிரதானமரபின. ‡பொருமபுகறறத்தடுகண்வேங்கை. ╪தகடுநனைவேங்கை. §படுதரு செநநெற்.



*கண்டாற் கொண்டுமனை திருந்தடி வாழ்த்தி
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
வானறி யலவென் பாடுபசி போக்கல்
அண்ணல் யானை வேந்தர்
உண்மையோ வறியல் காண்பறி யலரே.

திணையும் துறையும் அவை.

அதியமான்நெடுமானஞ்சியை ஔவையார். (ருகO)

27. வான் - மேகம்.

பி - ம். கணடாககொணடுமெவனதிருநதடி.

(௩௯௧) தண்டுளி பலபொழிந் தெழிலி யிசைக்கும்
விண்டு வனைய *விண்டோய் பிறங்கல்
முகடுற வுயர்ந்த †நெல்லின் மகிழ்வரப்
பகடுதரு பெருவளம் வாழ்த்திப் பெற்ற
திருந்தா மூரி பரந்துபடக் கெண்டி
அரிய லார்கைய ருண்டினி துவக்கும்
வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென
ஈங்குவந் திறுத்தவென் னிரும்பே ரொக்கல்
தீர்கை விடுக்கும் ‡பண்பில முதுகுடி
நன..............வினவலின்
முன்னும் வந்தோன் மருங்கில னின்னும்
அளிய னாகலிற் பொருந னிவனென
நின்னுணர்ந் தறியுந ரென்னுணர்ந்து கூறக்

2. விண்டு - திருமால். பிறங்கல் - மலை; இங்கே தானியப்போர்.
3. முகடு - உச்சி. 2 - 3. "விண்டு வனைய வெண்ணெற் போர்வின்" ஐங்குறு. ௫௮.
4. புறநா. ௩௯௦ : 22, அடிக்.
5. கெண்டி - கிண்டி.
6. அரியல் - கள்.
7. பசித்தென - பசித்ததாக.
8. இரும்பேரொக்கல் - வறுமையாற்கரிந்த பெரிய சுற்றங்கள்.
9. பண்பில - பண்பில்லாதன.
11. மருங்கு - சுற்றம்.
12. ஆதலின் இவன் அளியன்.

12 - 3. முருகு. 282 - 5.

பி - ம். *விணைபெறபயயிறைகன. †நெலவினகிழவர். ‡பண்பின.

78



காண்கு வந்திசிற் பெரும.........
.........பெருங்கழி *நுழைமீ னருந்தும்
துதைந்த தூவியம் புதாஅஞ் சேக்கும்
†ததைந்த புனனின் செழுநகர் வரைப்பின்
நெஞ்சமர் காத ‡னின்வெய் யோளொ
டின்றுயி.................ஞ்சால்
துளிபத னறிந்து பொழிய
வேலி யாயிரம் விளைகநின் வயலே.

திணை - அது; துறை - கடைநிலை.

பொறையாற்று கிழானைக் ‡கல்லாடனார். (கூகக)

---

15. நுழைமீன் - ஒருவகைமீன்; நுழைந்து செல்லுகின்ற மீனுமாம்.

16. புதா - ஒருவகைநாரை; இப்பெயர் போதாவெனவும் வழங்கும்; "உள்ளூ ராரலும் புள்ளும் புதாவும்" சிலப். கo : 117.

18. நின்வெய்யோளொடு - நின்னால்விரும்பப்பட்ட மனைவியோடு.

20. பதனறிந்து - காலமறிந்து.

21. ஆயிரம்விளைக - ஆயிரக்கலம் விளைக; "வேலி, யாயிரம் விளையுட் டாகக், காவிரி புரக்கு நாடு" பொருந. 246 - 8.

பி - ம். *துழைமீன. †தநதைதநத புனயாணின செழுநகாவனப பின். ‡காதனீவெயயொடு. ‡காலலனுர்.

---

(௩௯௨) மதியேர் வெண்குடை *யதியர் கோமான்
கொடும்பூ ணெழினி நெடுங்கடை நின்றியான்
பசலை நிலவின் பனிபடு விடியற்
பொருகளிற் றடிவழி யன்ன வென்கை

---

1. ஏர் - ஒப்பு; "இலவம் போதே ரெழிற்றகைய சிறடிகள்" சீவக. 1588.

2. கொடும்பூண் - வளைந்த ஆபரணம் ; "விளங்குமணிக் கொடும் பூண் விச்சிக் கோவே" புறநா. ௨00 : 8.

3. பசலைநிலவு - இளநிலவு.

பி - ம். *உதியர்.



5 ஒருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ
உருகெழு மன்ன ராரெயில் *கடந்து
நிணம்படு †குருதிப் பெரும்பாட் டீரத்

தணங்குடை ‡மரபி னிருங்களந் தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் §பூட்டி
வெள்ளை வர்குங் கொள்ளும் வித்தும்
வைக லுழவ ╪வாழிய பெரிதெனச்
சென்றியா ||னின்றனெ னாக வன்றே

---

5. கொடா - திறைகொடாத.

4 - 5. "பெருங்களிற் றடியிற் றோன்று மொருகண், இரும்பறை யிரவல" புறநா. உகூரு : 1 - 2.

3 - 5. "இருணிலாக் கழிந்த பகல்செய் வைகறை, ஒருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி" புறநா. ருககச : 6 - 7.

7. குருதிப்பெரும்பாட்டீரத்து - இரத்தப் பெருக்காலுளதாகிய ஈரத்தையுடைய.

8. களம் - தானியக்கதிரை அடிக்குங்களமும் போர்க்களமும்.

10. வெள்ளைவாகு - கவடி. கொள் - குடைவேல்.

6 - 10. பகைவருடைய அரண்களையழித்துக் கழுதையோால் உழுது அந்நிலத்தில் வெள்ளைவாகும் கொள்ளும்வித்துதல் அரசர்க்கியல்பு.

9 - 11. "வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப், பாழ்செய் தனை யவர் நனந்தலை நல்லெயில்" (புறநா. கரு : 2 - 3), "வடதிசை மன்னர் மன் னெயின் முருக்கிக், கவடி வித்திய கழுதையே ருழவன்" (சிலப். உஎ : 225 - 6), "எழுதெழின் மாடத் திடனெலா நூறிக், கழுதையேர் கையொ ளிர்வேல் கோலா - உழுததற்பின், வெள்வரகு கொள்வித் திடினும் விளி யாதாற், கள்விரவு தாரான் கதம்" (பு. வெ. 120), "இடித்துவெளி செய்து நக ரெங்கணு நுழைந்தாங், கடுத்தமட வார்வயி றலைத்தன ரிரங்கக் கொடுத்திடு வளங்கள்பல கொள்ளைகொடு மண்ணின், எடுத்துவரு வெள் வரகு கொள்ளுட னிறைத்து" (காஞ்சிப். நாட்டுப். 28) என்பவைகள் இவ்

வடிகளோடு ஒப்பிடற்பாலன.

10 - 12. "இன்னும் துறையென்றதனானே புறத்தோன் கவடி வித்துதலும் தொகைநிலைப்பாற்பட்டுழி அகத்தோர்க்குச் செல்லாமை கொள்க. அது, 'மதியேர் வெண்குடை' என்னும் புறப்பாட்டினுள் 'வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும், வைக லுழவ வாழிய பெரிதெனச், சென்றியா னின்றனெ னாக' எனவரும்" தொல். புறத்திணை. சூ. 13, ந.

பி - ம். *கடந்த. †குருதிபெரும். ‡மார்பின. §பூட்டி...வெள்ளை. ‡வாழியபலவென. னின்றனெனாதக.



ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
நுண்ணூற் கலிங்க முடீஇ *யுண்மெனத்
தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்
கோண்மீ னன்ன †பொலங்கலத் தளைஇ
‡ஊண்முறை யீத்த லன்றியுங் கோண்முறை
விருந்திறை நல்கி யோனே யந்தரத்
தரும்பெற லமிழ்த மன்ன
கரும்பிவட் டந்தோன் பெரும்பிறங் கடையே.[1]

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமானஞ்சிமகன் பொகுட்டெழினியை ஔவை யார்.

(௬௧௨)

---

13. பகட்டிலை - பெரிய இலை. "ஊருண் கேணி யுண்டுறைத் தொக்க, பாசி" குறுந். ௩௯௯.

14. சிதாஅர் - கந்தைத்துணி; "தன்னற் சிதாஅர் துவர நீக்கி" பொருந. 81.

13 - 4. புறநா. ௩௪௦ : 13; "பாசி வேரின் மாசொடு குறைந்த, துன்னற் சிதாஅர் நீக்கி" பொருந. 153 - 4.

16. புறநா. ௩௭௬ : 14, அடிக்.

இவ்வடி, பொருந. 157 - 8-ஆம் அடிகளின் உரையில் மேற்கோளாக வந்துள்ளது.

17. கோள்மீன் - கோள்களாகிய மீன்களை; சிறுபாண். 242 - 4.

18. கோள்முறை - கொள்ளும் முறை.

21. பிறங்கடை - வழித் தோன்றல்; "டடிகாத்தவர், பிறங்கடைப் பெரியோய்" கம்ப. தாடகைவதை. 63.

20 - 21. "அரும்பெறன் மாபிற் கரும்பிவட் டந்தும்" புறநா. ௯௯ : 2.

[1]மு. இச்செய்யுள், கடைநிலையென்னுந்துறைக்கு மேற்கோளாகக் காட்டப் பட்டுள்ளது; தொல். புறத்திணை. சூ. 36, ந.

பி - ம். *புண்ணென. †பொலங்கலத்தருள...விடுத்தல். ‡ஊனமுறை, ஊழமுறை.



(௩௯௩) பதிமுதற் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்
குறுநெடுந் துணையொடு கூமை வீதலிற்
குடிமுறை பாடி யொய்யென வருந்தி
அடனசை மறந்தவெங் குழிசி மலர்க்கும்
கடனறி யாளர் பிறநாட் டின்மையின்
*வள்ளன் மையினெம் வரைவோர் யாரென
உள்ளிய வுள்ளமொ †டுலைநசை துணையா
....கவக மெல்லா மொருபாற் பட்டென
மலர்தா ரண்ணனி னல்லிசை யுள்ளி
ஈர்ங்கை ‡மறந்தவெ னிரும்பே ரொக்கல்
§கூர்ந்த வெவ்வம்விடக் கொழுநிணங் கிழிப்பக்
கோடைப் பருத்தி ‖வீடுநிறை பெய்த
மூடைப் பண்ட மிடைநிறைந் தன்ன
வெண்ணிண மூரி யருள நாளுற

1. பழங்கண் - துன்பம். 2. துணை - மனைவி.

4. குழிசி - சமைத்தற்குரிய கலம். மலர்க்கும் - நிமிரச்செய்யும்.

6. எம்வரைவோர் - எம்மை ஏற்றுக்கொள்வோர்.

4 - 6. குழிசி மலர்க்குங் கடனறியாளர் - அரிசி முதலியன இல்லாமையாற் கவிழ்த்துவைக்கப்பட்டுள்ள கலத்தைச் சமைத்தற்பொருட்டு அடுப்பில் நிமிர்த்துவைக்கச் செய்யும் வண்மையையுடையார்; "கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச், சுரன்முத லிருந்த சில்வளை விறலி", "ஞால மீமிசை வள்ளியோர் மாய்ந்தென, வொலாது கவிழ்ந்தவென் னிரவன் மண்டை, மலர்ப்போர் யார்"(புறநா. ௧0௩ : 3 - 4, ௧௭௩ : 1 - 3) என்பவை இங்கே அறியற்பாலன.

7. உலைநசை - உலைதற்குக் காரணமான இச்சை. 9. அண்ணல் : விளி.

10. ஈர்ங்கை - உண்டு பூசிய கை; "ஈர்ங்கை விதிரார் கயவர்" குறள், 1077.

11. கூர்ந்த எவ்வம் - மிக்க துன்பம்.

12. பருத்திவீடு - பருத்தியின் சுகிர்ந்த பஞ்சு.

13. மூடைப்பண்டம் - பொதியாகிய பொருள்கள்; "பொதிமூடைப் போரேறி" (பட்டின. 137); மூடை மூட்டையென வழங்கும்.

14. நிணமூரி - நிணத்தின் திண்டம்.

12 - 4. நிணத்திற்குப் பருத்திப்பஞ்சு உவமை; "பருத்திப் பெண்டின் பனுவ லன்ன, நெருப்புச்சினந் தணிந்த நிணந்தயங்கு கொழுங்குறை" புறநா. ௧௨௫ : 1 - 2.

பி - ம். *வளளனமெனவவரை. †டுறுநசை. ‡மறைந்த. §கூர்ந்த வேவம்வீட. ‡‡விடுநிறை.

*ஈன்ற வரவி னாவுருக் கடுக்குமென்
†தொன்றுபடு சிதாஅர் துவர நீக்கிப்
போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன
அகன்றுமடி கலிங்க முடீஇச் செல்வமும்
கேடின்று நல்குமதி பெரும மாசில்
மதிபுரை மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
ஆடுமக ளல்கு லொப்ப வாடிக்
‡கோடை யாயினுங் கோடி........
காவிரி புரக்கு நன்னாட்டுப் பொருந
வாய்வாள் §வளவன் வாழ்கெனப்
பீடுகெழு நோன்றாள் பாடுகம் பலவே.

திணையும் துறையும் அவை. [(௩௯௩)

சோழன் குளமுற்றத் துத்துஞ்சிய கிள்ளி வளவனை நல்லிறையனார்.

---

16. தொன்றுபடுசிதார் : புறநா. ௪00 : 10. துவர - முற்ற; "துவர முடித்த துகளறு முச்சி" முருகு. 26.

17 - 8. கலிங்கத்திற்குப் பகன்றைமலர் உவமை; "திருமல ரன்ன புதுமடிக் கொளீஇ" (புறநா. ௩௯0 : 15); "நலத்தகைப் புலைத்தி பசை தோய்த் தெடுத்துத், தலைப்புடைப் போக்கித் தண்கயத் திட்ட, நீரிற் பிரியாப் பரூஉத்திரி கடுக்கும், பேரிலைப் பகன்றைப் பொதியவிழ் வான் பூ" (குறுந். ௩௩0); "பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல், கழுவுறு கலிங்கங் கடுப்பச் சூடி" பதிற். ௭௬ : 12 - 3.

20. கிணைப்பறைக்கு முழுமதி உவமை; "மதியத் தன்னவென் விசியுறு தடாரி", "மாகவிசும்பின் வெண்டிங்கள், மூவைந்தான் முறைமுற்றக், கடனவெட் கண்டன்னவென் னியம்" புறநா. ௩௭௪ : 17, ௪௦௦ : 1-4.

23. "காவிரி புரக்கு நாடுகிழ வோனே" (பொருந. 248); "காவிரி புரக்கும் நாடு கிழவோற்கு" சிலப். ௨௭ : 171.

பி - ம். *ஈன்றவாவினாருககடுசெகும். †தொனறுபடி. ‡கொடியாயினும். §வளருவன.

---

(௩௯௪) *சிலையுலாய் நிமிர்ந்த சாந்துபடு மார்பின்
†ஒலிபுனற் கழனி வெண்குடைக் கிழவோன்

---

1. வில் உலாவி நிமிர்ந்த மார்பு; "சிலையுலாய் நிமிர்ந்த மார்பன்" சீவக. 2976.

பி - ம். *சிந்தியுலாநிவாநத. †ஒலிகதிர்க்கழனி.



வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் *குட்டுவன்
†வள்ளிய னாதல் வையகம் புகழினும்
‡உள்ள லோம்புமி னுயர்மொழிப் புலவீர்

யானும், இருணிலாக் கழிந்த பகல்செய் வைகறை
ஒருகண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றிப்
பாடிமிழ் முரசி னியறேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினே னாக
அகமலி யுவகையொ டணுகல் வேண்டிக்
கொன்றுசினந் தணியாப் புலவுநாறு மருப்பின்
வெஞ்சின வேழ நல்கின னஞ்சி
யானது பெயர்த்தனெ னாகத் தானது
சிறிதென §வுணர்ந்தமை நாணிப் பிறிதுமோர்
பெருங்களிறு நல்கி யோனே ‡யதற்கொண்
டிரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினும்
துன்னரும் பரிசி றருமென

3. வலிதுஞ்சு தடக்கை - வன்மை நிலைபெற்ற பெரிய கையை யுடைய. வாய்வாள் - குறிதப்பாத வாள்.

தடவென்னும் உரிச்சொல் பெருமையை யுணர்த்துமென்பதற்கு இவ்வடிமேற்கோள்; தோல். உரி. சூ. 24, சே. ; ஷை. ஷை. ஷை. 22, ந. ; இ. வி. சூ. 284, உரை.

4. வள்ளியனுதல் - பெருங்கொடையை யுடையானுதலை.

5. உள்ள லோம்புமின் - நினைத்தலைத் தவிர்மின். 6. வைகறையில்.

7. "ஒருகண் மாக்கிணை யொற்றுப்" புறநா. ருகஉ : 5.

8. பாடு - ஒலி. தந்தை - பாட்டுடைத் தலைவன் தந்தை.

9. வஞ்சி - பகைமேற் செல்லுதலை.

11 - 2. "இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர், பெருங்களிறு நல்கி யோனே யன்னதோர், தேற்ரு வீகையு முளதுகொல்" புறநா. ௧௫௦ : 7 - 9.

13. பெயர்த்தனெனுக - பெயர்க்க.

15. அதற்கொண்டு - அதனால்.

16. "இரும்பே ரொக்கல் பெரும்புலம் பகற்ற" புறநா. ௩௯௦ : 20.

பி - ம். *குடவன். †வளையிழுதல, வளனியெழுதல. ‡உள்ளமோம்புமின். §வுணரமை. ‡‡பகறகொண்டு, பதற்கொணடு.



என்றுஞ் செல்லேனவன் குன்றுகெழு நாட்டே.[1]

திணையும் துறையும் அவை.

கடைநிலை யாயினவெல்லாம் பாடாண்டிணை.

சோழிய ஏனதி திருக்குட்டுவனைக் [2]கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார். (௩௯௪)

---

1ழ. புறநா. ௧௫௦.

இப்பாட்டினைப் பொருநராற்றுப்படைக்கு மேற்கோளாகக்காட்டினர்; தொல். புறத்திணை. சூ. 30, இளம். ; ஷை. ஷை. ஷை. 36, ந.

இப்பாட்டு, புகழாப்புகழ்ச்சியென்னும் அணியின்பாற்படும்.

[2]புதுக்கோட்டைக்குத் தெற்கே கோனாட்டில் எறிச்சியென்று பழையதோர் ஊருள்ளது ; அதிற் பஞ்சபாண்டவர்சுனைகளென்று ஐந்து சுனைகளும் ஒரு சிவஸ்தலமுமுள்ளன. இங்கே எறிச்சிலூரென்றது அவ்

லூரென்று கருதப்படுகின்றது.

---

(௩௯௫) மென்புலத்து வயலுழவர்
வன்புலத்துப் பகடுவிட்டுக்
குறுமுயலின் *குழைச்சூட்டொடு
நெடுவாளைப் பல்லுவியற்
பழஞ்சோற்றுப் †புகவருந்திப்
புதற்றளவின் பூச்சூடி
....................................
................அரியலாருந்து
மணைக்கோழிப் பைம்பயிரினனே

---

1. மென்புலம் - மருதநிலம்.

2. வன்புலம் - முல்லைநிலம். விட்டு - மேய்தற்குவிட்டு.

3. குழைச்சூடு - குழைதலையுடைய சூட்டிறைச்சி.

4. உவியல் - அவியல்; "சாந்த விறகி னுவித்த புன்கம்" புறநா. ௧௬௮ : 11.

5. புகவு - உணவு; "வானிணப் புகவிற் கானவர்" (அகநா. கரூஉ); இச்சொல் புகாவெனவும் வழங்கும்: "அகனாட் டண்ணல் புகாவே" (புறநா. ௨௪௧ : 7); "புலிபுகா வுறுத்த புலவுநாறு கல்லளை" குறுந். உடுரு.

6. "புதன்முல்லைப் பூப்பறிக்குந்து" புறநா. ருடுஉ : 4.

8. அரியல் - கள். ஆருந்து - உண்ணும்.

பி - ம். *காழைச்சூட்டொடு நெடுவாளைபல்லுவியற். †புகவருத்திப்.



கானக்கோழிக் கவர்குரலொடு
நீர்க்கோழிக் *கூய்ப்பெயர்க் குந்து
வேயன்ன மென்றோளால்
மயிலன்ன †மென்சாயலார்
கிளிகடியினனே
அகலள்ளற் ‡புள்ளிரீஇயுந்து
யாங்கப், பலநல்ல புலனணியும்
சீர்சான்ற விழுச்சிறப்பிற்
சிறுகண் யானைப் பெறலருந் தித்தன்
செல்லா நல்லிசை யுறந்தைக் குணஅது
§நெடுங்கை வேண்மா ╪னருங்கடிப் பிடவூர்
அறப்பெயர்ச் சாத்தன் கிளையேம் பெரும

10. புறநா. ௩௨௦ : 16.

11. 'உம்' உந்தாதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். இடை. சூ. 44, இளம்.; சே.; ந.; நன். சூ. 340, மயிலை.; நன். வி. சூ. 341; இ. வி. சூ. 244, உரை. 12. தோளால் - தோளோடு.

13. சாயல் - மென்மை; "களிமயிற் சாயலுங் கரந்தன ளாகி" சிலப். ௮ : 87.

15. இரீஇயுந்து - கெட்டு ஓடும். 16. புலன் - இடங்கள்.

17. சீர்சான்ற - தலைமையமைந்த ; "சீர்சான்ற வுயர்நெல்லினூர்" மதுரை. 87 - 8.

18. தித்தன் - ஒரு சோழன். 17 - 8. புறநா. அ0 : 6, அடிக்.

19. செல்லாநல்லிசை - கெடாத நல்லபுகழ்; "செல்லா நல்லிசைப் பெயரொடு நட்டகல்" (மலைபடு. 388 - 9.) உறந்தை - உறையூர். குணுது - கிழக்கின்கண்ணுள்ளது.

18 - 9. "மாவண் டித்தன் வெண்ணெல் வேலி, யுறந்தை யன்ன வுரைசா னன்கலம்" புறநா. நூஉ : 9 - 10.

20. நெடுங்கை வேண்மானென்பது உழுவித்துண்போரில் ஒருபகாரியின் பெயர்.

தொல். அகத்திணை. சூ. 30, ந, மேற்கோள்.

21. அறப்பெயர் - அறத்தாலுளதாகிய புகழ்.

20 - 21. பிடவூரென்பது சோழநாட்டிலுள்ளதொரு வைப்புத் தலம். அதில் மாசாத்தனுர் கோயில் ஒன்று உண்டு. அவர் பெயரே

பி - ம். *கூப்பெயர்க்குந்து. †மென்சாயலாற். ‡புள்ளுநீஇயுந்து. இருங்கோவெணமான். ǂனருமகடலபபிடவூர்.





முன்ஞு *ணண்பகற் சுர னுழந்து வருந்திக்
கதிர்நனி செ.....................மாலைத்
†தன்கடைத் தோன்றி யென்னுற விசைத்தலிற்
றீங்குரல்........கி னரிக்குரற் றடாரியோ
டாங்குநின்ற வெற்கண்டு

சிறிதுநில்லான் பெரிதுங்கூறான்
‡அருங்கலம் வரவே யருளினன் வேண்டி
....யென வுரைத்தன்றி நல்கித் தன்மனைப்
பொன்போன் மடந்தையைக் காட்டி யிவனை
என்போற் போற்றென் றோனே யதற்கண்
டவன்மறவ லேனே பிறருள்ள லேனே
அகன்ஞாலம் பெரிதுவெம்பினும்
மிகவானு §ளெரிதோன்றினும்
குளமீனொடுந் ‡தாட்புகையினும்

---

இப்பாட்டுடைத் தலைவனுக்கு அமைந்துள்ளதுபோலும்; கழறிற்றறிவார் நாயனார் திருக்கயிலாயத்தில் பரமசிவன்திருமுன்பு விண்ணப்பஞ்செய்து அரங்கேற்றிய திருவுலாப்புறத்தைக் கேட்டறிந்துவந்த மாசாத்தனார் அந்நூலை வெளிப்படுத்திய இடம் இவ்வூரே யென்பர். இவ்வூரும் இத்தலைவன்பெயரும் பழையநூல் உரைகளிற் காணப்படுகின்றன; "தெய்வப் புனற்கெடில வீரட்டமுஞ் செழுந்தண் பிடவூரும்.......... தம்முடைய காப்புக்களே", "பேரருளாளன் பிடவூரன்றம்மானே" (தேவாரம்); "சேரர் காவலர் விண்ணப்பஞ் செய்தவத் திருவுலாப் புறமன்று, சாரல் வெள்ளியங் கயிலையிற் கேட்டமா சாத்தனார் தரித்திந்தப், பாரில் வேதியர் திருப்பிட வூர்தனில் வெளிப்படப் பகர்ந்தெங்கும், நார வேலைசூ ழுலகினில் விளங்கிட நாட்டினர் நலத்தாலே" (பெரிய. வெள்ளானை. 52); 'அவருள், உழுவித்துண்போர், மண்டிலமாக்களும் தண்டத்தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும் அழுந்தூரும்......... முதலியோருமாய் முடியுடை வேந்தர்க்கு மகட்கொடைக்குரிய வேளா

ளராம்' தோல். அகத்திணை. சூ. 30, ந.

22. நண்பகல் - நடுப்பகல். 23. மாலை - மாலைக்காலத்தில்.

27. சிறிதும் - சிறிதுநேரமும்.

34 - 35. எரி, குளமீன், தாள் என்பன வான்மீன் விசேடங்கள். இவை முறையே தோன்றுதலும் புகைதலும் உலகவறுமைக்கு ஏதுக்கள்.

பி - ம். *ணன்பகற். †நன்கடை. ‡அயருமகலம். §ஒளிததொனகரினும். ‖காட்புரையினும்.



*பெருஞ்செய் நெல்லின் கொக்குகிர் நிமிரல்
பசுங்கட் †கருனைச் சூட்டொடு மாந்தி
விளைவொன்றோ வெள்ளங்கொள்கென
உள்ளது மில்லது மறியா
தாங்கமைந் தன்றால் வாழ்கவன் றாளே

திணையும் துறையும் அவை. (௩௯௫)

சோழநாட்டுப் பிடவூர்கிழார்மகன் பெருஞ்சாத்தனை மதுரை நக்கீரர்.

---

36. செய் - தொழில்; "பெருஞ்செய் நெல்லின் முகவைப் பாட்டும்" (சிலப். ௧0 : 137; நன். சூ. 289, மயிலை. மேற்.) கொக்குகிர் நிமிரல் - கொக்கின் நகம்போன்ற நீட்சியையுடைய அவிழ்; "கொக்குகிர் நிமிர லொக்க லார" (புறநா. ௩௯௮ : 25); "கொக்குகிர் நிமிரல் வெண்சோறாட்டுறு கறி" (சீவக. 2972) ; நற். உ௫௮ : 6.

பி - ம். *பெரும்பெய். †கருனைச்சூளைசுடகமாமொந்தி.

(நசுகா) கீழ்நீரான் மீன்வழங்குந்து
மீநீராற் கண்ணன்ன *மலர்பூக்குந்து
கழிசுற்றிய விளைகழனி
அரிப்பறையாற் புள்ளோப்புந்து
†நெடுநீர்கூஉ மணற்றண்கான்
மென்பறையாற் ‡புள்ளிரியுந்து
நனைக்கள்ளின் மனைக்கோசர்

---

1. வழங்குந்து - செல்லாநிற்கும்.

2. மேனீரில் கருங்குவளைமலர் பூக்கும்.

4. அரிப்பறை - ஒருவகைப்பறை; அரித்தெழும் ஓசையையுடையது; "அரிப்பறை வினைஞர்" (ஐங்குறு. அக); "அரிக்கூட் டின்னியங் கறங்க வாடுமகள்" (குறிஞ்சி. 193); "அரிப்பறை யனுங்க வார்க்கும் மேகலை", "அரிப்பறை மேகலை யாகி யார்த்தவே" சீவக. 2082, 2688.

6. மென்பறை - மெல்லிதாகப் பறத்தலையுடைய குஞ்சு; "வெண்டலைக் குருகின் மென்பறை விளிக்குரல்" ஐங்குறு. அசு.

7. கோசர் - ஒருவகை வீரர்.

பி - ம். *மலர்ப்பூவகுந்து. †உண்டுநீர்கூறுமணற். ‡புள்ளிரிவுந்து.

தீந்தேற னறவுமகிழ்ந்து
தீங்குரவைக் கொளைத்தாங்குந்து
உள்ளிலோர்க்கு வலியாகுவன்
கேளிலோர்க்குக் கேளாகுவன்
*கழுமிய வென்வேல் வேளே
வளநீர் வாட்டாற் றெழினி யாதன்
கிணையேம் பெரும
கொழுந்தடிய சூடென்கோ
வளநனையின் மட்டென்கோ
குறுமுயலி †னிணம்பெய்தந்த
நறுநெய்ய சோறென்கோ
திறந்து ‡மறந்து கூட்டுமுதல்
முகந்துகொள்ளு முணவென்கோ
அன்னவை பலபல............
........................ருநதய
இரும்பே §ரொக்க விருளுசெளுசிய
அழித்துவப்ப வீத்தோனெந்தை
எம்மோ ╪ராக்கக் கங்குண்டே
மாரிவானத்து ||மீனுப்பண்
விரிகதிர வெண்டிங்களின்
விளங்கித் தோன்றுகவவன் கலங்கா நல்லிசை

---

8. கள்ளின் தெளிவை உண்டு.

10. உள் - ஊக்கம். 13. வாட்டாறு - ஓரூர்.

15. கொழுந்தடிய சூடு - கொழுவிய துண்டமாகிய சூட்டிறைச்சி.

19. கூடு - நெல் முதலிய தானியங்கள் வைத்துள்ள சேர்.

24. உவப்ப அழித்து ஈத்தோன் - மகிழும்படி மீட்டுங் கொடுத்தோன்; "அழித்துப் பிறந்தனெ னாகி" புறநா. ௩௮௫ : 16.

25. கங்கு - எல்லை. 27. திங்களின் - சந்திரன்போல.

27 - 8. புகழுக்குத் திங்களுவமை. 31. உரை செல - புகழ்பரக்க.

பி - ம். *கழுமியவெளவெலியிவளநீகிர வாடடெடறறெழுனியா கென கிணெவெமபெருயகழுமியவெளளாயி. †னிணமபெயதாதுறு. ‡மறந்த. §ரொகெல. ≠ராகககணகணடெ, ராககககயங குணடே. ||மீஞலபபண.



யாமும் பிறரும் வாழ்த்த நாளும்
நிரைசா னன்கல னல்கி
உரைசெலச் சிறக்கவவன் பாடல்சால் வளனே.

திணையும் துறையும் அவை.

வாட்டாற்றெழினியாதனை மாங்குடிகிழார். (௩௯௬)

(௩௯௭) வெள்ளியு மிருவிசும் பேர்தரும் புள்ளும்
உயர்சினைக் குடம்பைக் *குரற்றோற் றினவே
பொய்கையும் போதுகண் விழித்தன †பைபயச்
சுடருஞ் சுருங்கின் றொளியே ‡மாடெழுந்
§திரங்குரன் முரசமொடு வலம்புரி யார்ப்ப
இரவுப் ╪புறங்கண்ட காலைத் தோன்றி
எஃகிரு ளகற்று மேமப் பாசறை
வைகறை யரவங் கேளியர் பலகோட்
செய்தார் மார்ப வெழுமதி துயிலெனத்
தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
நெடுங்கடைத் ||தோன்றி யேனே யதுநயந்
துள்ளி வந்த பரிசில னிவனென
நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு

---

1. ஏர்தரும் - எழும். 2. குடம்பை - கூடு.

1 - 2. "வெள்ளி தோன்றப் புள்ளுக்குர லியம்ப", "மதிநிலாக் கரப்ப வெள்ளி யேர்தர" புறநா. ௩௮௫ : 1, ௩௯௮ : 1.

3. கண்விழித்தன - மலர்ந்தன.

4. சுடர் ஒளிசுருங்கின்று - சந்திரன் ஒளிகுறைந்தது; புறநா. ௩௯௮ : 1. 5. இரங்குரல் - இரங்குகுரல்.

6. "இரவுப்புறம் பெற்ற வேம வைகறை" (புறநா. ௩௯௮ : 6); "இரவுத்தலைப் பெயரு மேம வைகறை" மதுரைக். 686.

7. எஃகிருள் - குறைந்த இருட்டு. ஏமம் - இன்பம்.

8. கேளியர் - கேட்க. பலகோள் - பலவகை.

10. மு. புறநா. ௩௭௪ : 6. 11. நயந்து - விரும்பி.

13. குய் - தாளிப்பு.

பி - ம். *குரற்றோன்றினவே. †பைபபய. ‡பாடெழுந்து. §திரங்குரான். ╪பிறங்கண்ட. ‖தோன்றியோனே.



மணிக்கல னிறைந்த மணநாறு தேறல்
பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு
மாரி யன்ன *வண்மையிற் சொரிந்து
வேனி லன்னவென் வெப்பு நீங்க
அருங்கல நல்கி யோனே யென்றும்
செறுவிற் பூத்த சேயிதழ்த் தாமரை
அறுதொழி லந்தண ரறம்புரிந் தெடுத்த
தீயொடு விளங்கு நாடன் வாய்வாள்
வலம்படு தீவிற் பொலம்பூண் வளவன்
எறிதிரைப் பெருங்கட லிறுதிக்கட் செலினும்
தெறுகதிர்க் கனலி தென்றிசைத் தோன்றினும்
என்னென் றஞ்சலம் யாமே வென்வேல்
அருஞ்சமங் கடக்கு மாற்றலவன்

திருந் துகழ ஞேன்றூட் டண்ணிழ லேமே.

திணை - அது ; துறை - பரிசில்விடை ; கடைநிலைவிடையுமாம். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை [1]எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார். (ருகள)

15. கலிங்கத்திற்குப் பாம்பின் தோல் உவமம்; "அரவுரி யன்ன வறுவை நல்கி"(பொருந. 83); "கூரெயிற் றரவி னுரிவை யன்ன வானுண் டுகில்" (பாகவத. கo : கோவியர்துகில். 9); "பாழிவா யரவி னுரிநிக ராடை" (இலிங்க. அம்பரீடனை. 56); "அரவினுரியன்ன பட்டாடை" (வாயுசங். கிரியா. 13); "பையரா வுரியி னன்ன நடைப்படாம்" திருவிளை. திருமண. 147.

16. "பொழிபெயல் வண்மையான்", "சுரந்தவான் பொழிந்தற்றாச் சூழநின் றியாவர்க்கும், இரந்தது நசைவாட்டா யென்பது கெடாதோ தான்" கலி. ௫ள : 12, கoo : 11 - 2.

15 - 6. பொருந. 82 - 7.

18. கலம் - ஆபரணம். 19. செறு - வயல். 21. தீ - வேள்வித்தீ.

22. தீவொன்றிற் பொன் உண்டாகுமென்பா; "பைம்பொன் விளை தீவினிதி தடிந்து", "நன்பொன் விளை தீவமடைந் தஃதே" சீவக. 106, 503.

23. இறுதி - ஊழிக்காலம். 24. கனலி - சூரியன்.

27. "யானே பெறுகவன் றாணிழல் வாழ்க்கை" புறநா. ருஎக : 1.

[1]திருவாரூர்க்குத் தென்மேற்கில் எருக்கங்காடென ஒரூருள்ள தென்பர்.

பி - ம். *வண்மைநிற்.

(௩௬௮) மதிநிலாக் கரப்ப வெள்ளி யேர்தர
வகைமா ணல்லிற்..........
பொறிமயிர் வாரணம் பொழுதறிந் தியம்ப
பொய்கைப் பூமுகை மலரப் பாணர்
கைவல் சீறியாழ் கடனறிந் தியக்க
இரவுப்புறம் பெற்ற வேம வைகறைப்
பரிசிலர் விசையெ..........
வரிசையி னிறுத்த வாய்மொழி வஞ்சன்
நகைவர் குறுகி னல்லது பகைவர்க்குப்
புலியின மடிந்த கல்லளை போலத்
*துன்னல் போகிய பெரும்பெயர் மூதூர்
மதியத் தன்னவென் னரிக்குரற் றடாரி
இரவுரை நெடுவா ரிப்ப வட்டித்
துள்ளி வருநர் கொள்கல நிறைப்போய்
தள்ளா †நிலையை யாகிய ரெமக்கென
என்வர ‡வறீஇச்
சிறிதிற்குப் பெரிதுவந்து
விரும்பிய முகத்த னாகி யெனதரைத்
துரும்புபடு சிதாஅர் நீக்கித் தன்னரைப்

---

1. புறநா. ௩௬௭ : 1.

2. வகைமாணல்லில் - கட்டுக்களால் மாட்சிமைப்பட்ட நல்ல வீடு.
3. வாரணம் - கோழி; "பொறிமயிர் வாரணங் குறுங்கூ விளிப்ப" மணி. ௭ : 116.
4. பூமுகை - மலரும் பருவமுள்ள அரும்பு.
6. புறநா. ௱௧௭ : 6, அடிக்.
8. வரிசை - முறை. வஞ்சன் - இப்பாட்டுடைத்தலைவன் பெயர்.
9. நகைவர் - நண்பர்; புறநா. ௱௭௫ : 35, அடிக்.
11. துன்னல்போகிய - அணுகுதற்கரிய.
10 - 11. புறநா. ௫௪ : ழ.
9 - 11. புறநா. ௧௭௦ : 14 - 7. 13. புறநா. ௱௧௧ : 25.
15. ஆகியர் - ஆகுக. என - என்று யான்கூற.
16. அறீஇ - அறிந்து.
பா - ம். *துன்னலமபோகிய. †நினையை. ‡வறிய.



புகைவிரிந் தன்ன பொங்குதுகி லுடீஇ
அழல்கான் றன்ன வரும்பெறன் மண்டை
நிழல்காண் டேற னிறைய வாக்கி
யானுந வருள லன்றியுந் தானுண்
*மண்டைய கண்ட மான்வறைக் கருனை
கொக்குகிர் நிமிர லொக்க லார
வரையுறழ் மார்பின் வையகம் விளக்கும்
விரவுமணி யொளிர்வரு †மரவுற ழாரமொடு

புரையோன் மேனிப் பூத்தசல. . . . . .
முரைசெல வருளி யோனே
. . . . . . . . . . . . . . . . . . யருவிப் பாயற் கோவே.

திணை - அது ; துறை - கடைநிலை.

சேரமான் வஞ்சனைத் திருத்தாமனார். (௩௯௮)

---

20. "புகைமுகந் தன்ன மாசி றூவுடை" (முருகு. 138.) உடீஇ - உடுத்தி. 25. புறநா. ௩௯௦ : 36, அடிக்.

27. "அரவுற ழார முகக்குவ மெனவே" புறநா. ௩௯௮ : 18.

பி - ம். *மண்டை. †முழாவுறழாரமொடு, பிறையுறழாரமொடு.

---

(௩௯௯) அடுமகண் முகந்த வளவா வெண்ணெற்
*றொடிமா ணுலக்கைப் பரூஉக்குற் றரிசி
காடி வெள்ளுலைக் கொளீஇ நீழல்
ஓங்குசினை மாவின் றீங்கனி நறும்புளி
மோட்டிரு வராஅற் கோட்டுமீன் கொழுங்குறை
செறுவின் †வள்ளை சிறுகொடிப் பாகற்
பாதிரி யூழ்முகை யவிழ்விடுத் தன்ன
மெய்களைந் தினனொடு விரைஇ. . . . . . . . .

---

2. தொடி - பூண்.

4. மாங்கனியின் புளி; "வண்டளிர் மாஅத்துக், கிளிபோற் காய கிளைத்துணர் வடித்துப், புளிப்பத னமைத்த புதுக்குடம்" அகநா. ௩௭.

5. கோட்டுமீன் - சுறாமீன்; "கோட்டுமீன் குழாத்தின் மள்ள ரீண்டினர்" (சீவக. 2325.) குறை - குறைக்கப்பட்ட இறைச்சி.

பி - ம். *றொருமோண். †வாளைச்சிறுகொடி.



மூழ்ப்பப் பெய்த *முழுவலிழ் புழுக்கல்
†அழிகளிற் படுநர் களியட வைகிற்
பழஞ்சோ ‡றயிலு முழங்குநீர்ப் படப்பைக்
காவிரிக் கிழவன் மாயா நல்லிசைக்
கிள்ளி வளவ னுள்ளி யவற்படர்தும்
செல்லேன் செல்லேன் பிறர்முக நோக்கேன்
நெடுங்கழைத் தூண்டில் விடுமீ னொடுத்துக்
கிணைமக ளட்ட §பாவற் புளிங்கூழ்
பொழுதுமறுத் துண்ணு முண்டியே னழிவுகொண்
டொருசிறை யிருந்தே னென்னே யினியே
அறவ ரறவன் மறவர் மறவன்
மள்ளர் மள்ளன் றொல்லோர் மருகன்
இசையிற் கொண்டா னசையமு துண்கென
மீப்படர்ந் திறந்து வன்கோன் மண்ணி

வள்பரிந்து கிடந்த........மணக்க
விசிப்புறத் தமைந்த புதுக்காழ்ப் போர்வை
அலகின் மாலை யார்ப்ப வட்டித்துக்
கடியு முணவென்னக் கடவுட்குந் தொடேன்
‡கடுந்தே ரள்ளற் கசாவா நோன்சுவற்
பகடே யத்தையான் வேண்டிவந் ததுவென
ஒன்றியான் பெட்டா வளவை யன்றே
ஆன்று விட்டன ||னத்தை விசும்பின்

9. மூழ்ப்ப - மூடும்படி; புறநா. ருகச : 5.

15. நொடுத்து - விற்று. 16. பாவல் - பரவல்.

17. பொழுதுமறுத்துண்ணல் : "பொழுதுமறுத் தின்னுஞ்சிறுமதுகையளே" (நற். கஉ0 : 13.) உண்ணவேண்டிய காலத்தில் உண்ணுத லைத் தவிர்த்துண்ணும் உணவையுடையேனுய் வருந்துதலை அடைந்து ; தன்வறுமையைத் தெரிவித்தபடி.

25. புறநா. ருகஅ : 13. 27. அசாவா - தளராத.

29. ஒன்று யான்பெட்டா வளவை - ஒன்றை யான் விரும்பிக் கேட்பதற்கு முன்னே; "ஒன்றியான் பெட்டா வளவையின்" பொருந. 73.

பி - ம். *முழுவவிநாம பபுகலரி. †அரிகளறபடு. ‡கொகனி றயருமுடஙகு. §பாஅறபுளியுஙகூழ. ‡கடுநதெர்பபளளறகசாவா. ||னத்தைய.

80

மீன்பூத் தன்ன வுருவப் பன்னிரை
ஊர்தியொடு நல்கி யோனே சீர்கொள
இழுமென விழிதரு மருவி
வான்றோ யுயர் *சிமைத் தோன்றிக் கோவே.

திணை - அது ; துறை - பரிசில்விடை.
†தாமான்தோன்றிக்கோனை ஐயூர் முடவனார். (௩௯௯)

---

31. நிரை - பசுக்கூட்டம்; பசுக்களுக்கு விண்மீன்கள் உவமை; "காயமீ னெனக் கலந்து கானிரை மேய" சீவக. 421.

33. "இழுமென விழிதரு மருவிப், பழமுதிர்சோலை" முருகு. 316-7.

பி - ம். *சிமையத். †தாமானதருனறிகனோனை.

---

(௪00) மாகவிசும்பின் வெண்டிங்கள்
மூவைந் தான் முறைமுற்றக்
கடனுவெட் கண்டன்னவென்
இயமிசையா மரபேத்திக்
5 கடைத்தோன்றிய கடைக்கங்குலாற்
பலர் துஞ்சவுந் தான்றுஞ்சான்
உலகுகாக்கு முயர்செ . . . . . . . . . . . க்

கேட்டோ னெந்தையென் றெண்கிணைக் குரலே
கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது
தொன்றுபடு †சிதாஅர் மருங்கு நீக்கி
மிகப்பெருஞ் சிறப்பின் வீறு......

....................லவான
கலிங்க ‡மளித்திட் டென்னரை நோக்கி

---

1. மாகவிசும்பு - மாகமாகிய விசும்பு (புறநா. ௩௫ : 18); மாகமாவது பூமிக்கும் சுவர்க்கத்திற்கும் நடு; பரி. க : 47, பரிமேல்.

2. மூவைந்து - பதினைந்துதிதி.

4. இயம் - வாச்சியம். இசையா - இசைத்து.

1 - 4. புறநா. ௩௯௩ : 20.        5. கங்குலின் கடையில்.

8. குரலைக் கேட்டான்.

பி - ம். *உலகுக்காக்கும். †சிதாறருங்கு. ‡மழித்ததோட்டென்னரை, மழித்தொடடொனனரை.



நாரரி நறவி னுண்மகிழ் தூங்குந்து
போதறியேன் பதிப்பழகவும்
†தன்பகை கடிதலன் றியுஞ் சேர்ந்தோர்
‡பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ
மறவர் மலிந்தத................

கேள்வி மலிந்த வேள்வித் தூணத்
திருங்கழி யிழிதரு......கலிவங்கம்
தேறுநீர்ப் பரப்பின் §யாறுசீத் துய்த்துத்
துறைதொறும் பிணிக்கு நல்லூர்
உறைவின் யாணர்......கிழவோனே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார். (௪00)




புறநானூறு மூலமும் உரைவகையும்

முற்றுப்பெற்றன.

14. தோல். இடை. சூ. 44, சே.; ந. மேற்.

17. "பசிப்பிணி மருத்துவன்" புறநா. கஎக : 11, அடிக்.

19. வேள்வித்தூணம் - யூபத்தம்பம் ; புறநா. கயு : 21.

பி - ம். *நாரரித்தநறவமகிழ்ந்து. †தன்பகைக்கடிதல். ‡பசிப்ப பகைககடிதல். §யாறறசித்துத்.

உ

புறநானூறு

# அரும்பதமுதலியவற்றின் அகராதி.

---

[எண் - செய்யுளெண்.]

* அதிகமான், அதிகன், அதிகைமான், அதியமான், அதியன்: இவ்

வைந்தும் சேரவம்சத்தைச் சேர்ந்த ஓரரசனைக்குறிக்கும் ஒருபொருட் பல பெயரென்று தோற்றுகின்றன. அதிகன் என்று சொல்லப்பட்ட ஓர் அரசன் புகழ்ச்சோழ நாயனாருடன் யுத்தம் செய்ததாகப் பெரியபுராணத்திலிருந்து அறியலாம். சித்தூரைச்சார்ந்த போளூருக்கடுத்த திருமலையென்ற சமணக்கிராமத்திலுள்ள ஒரு கல்வெட்டால் அதிகைமான் அதிகன் என்று கூறப்பட்டுள்ள கேரளதேசத்தரசனொருவன் இருந்தானென்பதும் அவனுக்கு இராசஇராசனென்று மற்றொரு பெயருண்டென்பதும் அவன் வம்சத்தில் எழினி அல்லது யவநிகா என்ற ஓரரசனிருந்தானென்பதும் இராசராசனுடைய குமாரனை விடுகாதழகியபெருமாள், தகடா என்று சொல்லப்பட்ட ஊரை ஆண்டானென்பதும் தெரிகின்றன. வடமொழியில் தகடா என்று சொல்லப்பட்ட இந்த ஊர் தமிழில் தகடூர் என்று வழங்கிவந்ததாகத் தோற்றுகின்றது. மைஸூர் இராச்சியத்தில் தகடூர் என்று சொல்லப்பட்ட ஊர் ஒன்றிருக்கிறது : நெடுஞ்சடையன் என்று பெயர்பெற்ற பாண்டிய அரசனாற் கொடுக்கப்பட்டுள்ள ஒரு வட்டெழுத்துத் தாம்பிரப்பட்டயத்தில், அப்பாண்டியன் அதியன் என்ற சிற்றரசனைக் காவிரியின் வடகரையிலிருக்கும் ஆயிரவேலி, அயிரூர், புகழியூர் என்ற ஊர்களில் யுத்தஞ்செய்து ஜயித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (ராவ் பகதூர் வி. வெங்கையரவர்கள் எழுதியது.)



அம்பர் - ஓரூர் (அம்பல்) ; பாடல் பெற்ற சிவஸ்தலங்களில் இப் பெயரையுடையது ஒன்றுண்டு; அரசர் ஒருபக்கம் சார்தலாகாதென்பது, 6.

அரசர்களில் யுத்தத்திலிறவாமல்

*காஞ்சிநகரம், எயிற்கோட்டத்தைச் சேர்ந்திருந்ததென்று கல்வெட்டுக்களினால் வெளிப்படுகின்றது. தென்ஆர்க்காடு ஜில்லா திண்டிவனம் தாலூகாவில் எயில் என்ற கிராமம் ஒன்றுண்டு (ராவ்பகதூர் வேங்கையரவர்கள் குறிப்பு.)

82

*ஒல்லையூர் : இப்பெயருள்ள ஊரொன்று பட்டுக்கோட்டைத் தாலுகா மணன்மேற்குடியின் பக்கத்துள்ளது.

* கரிகால்வளவன் : இப்பெயர் வடமொழியில் 'கரிகால' என்று வழங்கியதாகத் தெரிகிறது. 'கரிகால' என்பது 'யானை அல்லது யானைச்சேனைகளுக்கு நமன் என்று பொருள்படும் ; கால் கறுத்திருந்ததனால் இவன் கரிகால் வளவன் என்று பெயர்பெற்றானென்று சிலர் கூறுவர் [வளவன்-சோழன்.] சோழராஜாக்களில், கரிகாலன் என்று பெயர்பெற்றவரிருவர்; முதல்வன், பட்டினப்பாலை கொண்டவன் ; இரண்டாங்கரிகாலன், சிறுபிராயத்தில் வீரபாண்டியனோடு போர்செய்தவன் ; இவன், தஞ்சைக்கோயிலெடுப்பித்த ராஜ ராஜ சோழனுடைய தமையன் ; பொருநராற்றுப்படையில், "தாய்வயிற்றிருந்து தாயமெய்திப் பிறந்து" என்று கரிகால்வளவனை முடத்தாமக்கண்ணியார் சிறப்பித்திருக்கிறார் ; இதே விஷயம் பெரியபுராணத்தில் கோச்செங்கட்சோழநாயனார் புராணத்திற் சொல்லப்பட்டிருக்கிறது; ராவ்பகதூர் வி. வெங்கையரவர்கள் எழுதியது.

*பாண்டிநாட்டிற் பாடல்பெற்ற சிவஸ்தலங்களிற் கானப்பேரென்ற ஊர் ஒன்றுண்டு (தஞ்சாவூர்க்கல்வெட்டு ஒன்றிற் பாண்டிநாட்டைச் சேர்ந்த திருக்கானப்பேர்க்கூற்றம் கூறப்பட்டுள்ளது. பாளூர் என்ற ஊர் இக் கூற்றத்தைச்சேர்ந்தது. இது ஈழத்தரசன் பராக்கிரமபாகு என்பவனுடைய சேனாதிபதியின் கைவசத்திற் சிலகாலம் இருந்ததாக மகாவம்சத்திலிருந்து தெரியவருகிறது (ராவ்பகதூர் வி. வெங்கையரவர்கள் எழுதியது.)

* தென்கன்னடம் ஜில்லாவில் குதிரைமூக்குமலை யென்ற ஒருமலை உண்டு (ராவ்பகதூர் வி. வெங்கையரவர்கள் எழுதியது.)

சோழன்செய்தலங்கானலிளஞ்சேட்சென்னி, 10.

தகடூர் - ஓரூர்; இது மைஸூர் ராஜ்யத்திலுள்ளது; விடுகாதழகிய

---

* சோழன் செங்கணன் - கோச்செங்கட்சோழன்; இவன் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவன்; நன்னிலம் அம்பர்முதலான ஃதலங்களில் எடுப்பித்த சிவாலயங்கள் இவனால் எடுப்பிக்கப்பட்டனவென்று தேவாரத்திற் கூறப்பட்டுள்ளன; "களவழிக்கவிதை பொய்கையுரை செய்ய வுதியன், கால்வழித்தளையை வெட்டியரசிட்டவவன்" என்று கலிங்கத்துப்பரணியிற் சிறப்பிக்கப்பட்டவன் இவனே. திருமங்கை மன்னன் பாடிய பெரிய திருமொழியில் ஆரம்பத்தில் ஆறுந்திருமொழியிற் செங்கணன் சிறப்பிக்கப்பட்டிருக்கிறான் (ராவ் பகதூர் வி. வேங்கையரவர்கள் எழுதியது.)

---

* துஞ்சிய : காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி, சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை, சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோவாழியாதன், சோழன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளிசேட்சென்னி, சோழன் குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், பாண்டியன் கூடாகாரத்துத் துஞ்சிய மாறன்

வழுதி, பாண்டியன் சித்திரமாடத்துத்துஞ்சிய நன்மாறன், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி: இவற்றிலுள்ள 'துஞ்சிய' என்னுஞ் சொல்லின் பொருள் 'இறந்த' என்பதே. சிலப்பதிகாரம் மதுரைக்காண்டமுடிவில் 'அரசு கட்டிலிற்றுஞ்சிய பாண்டியன் நெடுஞ் செழியன்' என்று இளங்கோவடிகள் கூறியிருத்தல் காண்க; இன்னும் ஸ்ரீ சுந்தரமூர்த்திநாயனார் திருத்தொண்டத்தொகையில், "கருவூர்த்துஞ்சிய புகழ்ச்சோழர்" என்று எடுத்தோதியதுங் காண்க. அக்காலத்தரசர் புறநாட்டைக் கைப்படுத்தி மாற்றரசரைப் போர்க்களத்தில் முறிய அடித்திருந்ததால் அதனை விளக்கும் தொடர்ச்சொற்களைச் சேர்த்து, 'பாண்டியன் ஆரியப்படைதந்த நெடுஞ்செழியன்' என்றும், 'பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்' என்றும், 'பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப்பெருவழுதி' என்றும் அவர் பெயரைப் பிற்காலத்தார் வழங்கிவந்ததுபோலவே, மேலே கூறப்பட்ட இடங்களில் அவ்வவ்வரசர் இறந்ததனால் அதனையே விசேடணமாக்கி அவர்கள் பெயரைப் பிற்காலத்தார் வழங்கி வந்தார்களென்று தோற்றுகின்றது (ராவ்பகதூர் வி. கனகசபைப் பிள்ளையவர்கள் எழுதியது); இப்படியே, அரசர்கள் இறந்த இடத்தை அவர்கள் பெயருக்கு விசேடணமாக்கிக் கூறுதல், கோழிக்கோட்டு ஸாமூதிரி அரசரின் பரம்பரை வழக்கமென்று தெரிகிறது.

---

*தொண்டைமான்: (தொண்டைமானென்பதற்குப் பொருள் பெரும்பாணாற்றுப்படையுரையிற் காண்க): ஒரு சோழன் சிறப்புப்பெயராகிய ஆதொண்டை யென்னும் பதத்திலிருந்துண்டான காரணப்பெயரென்று சிலர் கூறுவர். சோழர் பல்லவர்களை ஜயித்து அவர்களுடைய நாட்டைக் கைக்கொண்டபின், பல்லவகுலத்தைச் சேர்ந்த மன்னவர்கள் தொண்டைமானென்ற பட்டப்பெயரைப் பெற்றுச் சோழராஜாக்களின்கீழ்ச் சிற்றரசராய்க் காஞ்சிமண்டலத்தையும் அதனைச் சூழ்ந்த நாட்டையும் ஆண்டு வந்தார்கள். கலிங்கத்துப்பரணியிற் சிறப்பிக்கப்பட்ட கருணாகரத் தொண்டைமான் என்பவன் இத்தன்மையையுடைய சிற்றரசர்களில்

ஒருவன்; தஞ்சாவூரில் சாமந்தநாராயண விண்ணகர் என்று ஒரு விஷ்ணு கோயில் எடுப்பித்துச் சாமந்தநாராயணச் சதுர்வேதி மங்கலமென்று ஒரு கிராமம் உண்டாக்கி அந்தக் கிராமத்தில், வியாக்கியாதாக்களா யிருந்த சதுர்வேதிப்பட்டர்கள் நூற்றுறுபேருக்கு விருத்திகளை நியமித் தானென்று தஞ்சாவூர்ப் பெரியகோயிற் கல்வெட்டுக்களுள் ஒன்றிற் கூறப்பட்டுள்ள சாமந்தநாராயணத் தொண்டைமான் என்பவன் மற்றொ ருவன். சேக்கிழார் நாயனார் சகோதரருக்கு அநபாயச் சோழமகாராஜன் தொண்டைமான் என்னும் பட்டப்பெயர் கொடுத்ததாகச் சேக்கிழார் நாயனார் சரித்திரத்தால் தெரியவருகிறது. தொண்டைநாடு என்பது முற்காலத்தில் பல்லவர்கள் அரசாட்சிசெய்த நாட்டின் பெயர்; இந்நாட் டுக்கு ஜயங்கொண்ட சோழமண்டலமென்று மற்றொருபெயருண்டு. (ராவ்பகதூர் வி. வெங்கையரவர்கள் எழுதியது.)

†திண்டுக்கல்லுக்குத் தென்மேற்கே 20-மைலில் தான்றிக்குடி யென்று ஒரு மலையும், மேற்கே 14-மைலில் தோணிமலையென்று ஒரு மலை யும், கரூர்க்கு மேற்கே மூன்று மைலில் தான்றோன்றிமலையென்று ஒரு மலையும் உண்டு.

*இவன் மலைபடுகடாமென்ற பாட்டிற் சிறப்பிக்கப்பட்டவன்; இவன் ஆண்ட பல்குன்றக்கோட்டமென்ற நாடு வடஆர்க்காடு தென்னார்க்காடு ஜில்லாக்களில் அடங்கியிருக்கின்றது. (ராவ்பகதூர் வி. வேங்கையரவர்கள் எழுதியது.)

---

* இம்மலை போதல என்றும் போதகை என்றும் பூர்வகாலத்திற் கூறப்பட்டுள்ளது. அவலோகிதேசுவரன் என்ற பௌத்தமுனி இம்மலையின்மீது இருந்ததாகச் சொல்வதுண்டு (ராவ்பகதூர் வி. வேங்கையரவர்கள் எழுதியது.)

பொலம்படைக்கலிமா, 116, 359.
பொலம்பூந் தும்பை, 2.
பொலிந்த - சிறந்த, 1.
பொலியர் - பொலிக, 387.
பொழிந்து - பொழிந்தேன், 203.
பொழுதமறுத்தண்ணல், 248, 399.
பொற்கம்பு, 135.
பொற்கலத்தில் உண்ணல், 160.
பொற்படையால் அலங்கரித்த குதிரை, தேர், யானை, 123, 135, 177.
பொற்பூந்தும்பை, 2.
பொற்றளிர் உழிஞை, 50.
போந்தைமடல் - பனைமடல், 375.
போர்க்களக்காட்சி, 63. [ள்ளல், 53.
போர்க்களத்தைத் தனதாக்கிக்கொ
போர்க்களம், 26, 35, 62, 64, 87, 98, 227, 235, 373, 392.
போர்செய்ய விழாவெடுத்தல், 84,88.
போர்ப்பறை, 76, 78, 279.
போர்ப்புறம், 74. [369 - 71, 373.
போர்பு - தானியப்போர், 342, 353,
போர்வீரர் பகைவர்வரவைப் பார்த்துக்கொண்டு பார்வலிருக்கையில் இருத்தல், 3.

மதுரை ஓலைக்கடைக்கண்ணம்புகுந் தாராயத்தனார் : ஒரு புலவர், 350.
மரீஇய - மருவிய, 64.
மரீஇயோர் - மருவியவர், 13.

*இக்கூற்றம் தஞ்சாவூர்ப் பெரியகோயிற் கல்வெட்டு ஒன்றிலும் திருப்பூவணத்துத் தாம்பிரப்பட்டயத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. திருப்பெருந்துறை, துஞ்சலூர், தண்டலை என்ற ஊர்கள் இக்கூற்றத்தைச் சேர்ந்தவை (ராவ்பகதூர் வி. வெங்கையரவர்கள் எழுதியது.)

*இது திருப்பூவணத்துத் தாம்பிரப்பட்டயத்தில் அடிக்கடி கூறப்பட்டுள்ளது. கயலூர் என்ற ஊர் இதைச் சேர்ந்தது. (ராவ்பகதூர் வி. வேங்கையரவர்கள் எழுதியது.)

*வெண்ணிக்கூற்றமென்பது அடிக்கடி தஞ்சாவூராக தில்லெட்டுக்

களிற் சொல்லப்படுகின்றது; பெருநங்கைமங்கலம், பூவனூர் என்ற ஊர்கள் இக்கூற்றத்தைச் சேர்ந்தவை (ராவ்பகதூர் வி. வெங்கையரவர்கள் எழுதியது.)

——:o:——

இந்நூலிலுள்ள சிறந்த பாடல்களையும்

சிறந்த பாடற்பகுதிகளையும் காட்டும்

எண்கள் வருமாறு:—

(௧)
(௨) ௧ - ௮; ௧௭ - ௨௦
(௩) ௧௪; ௨௪ - ௬
(௫) ௫ - ௮
(௬)
(௮) ௪ - ௧௦
(௯) ௧ - ௬
(௧௦)
(௧௨) ௩ - ௫
(௧௮) ௧௩ ௩௦
(௨௦) ௭ - ௨௦
(௨௨) ௩௧ - ௬
(௨௬) ௧௨ - ௫
(௨௭)
(௨௮) ௧ - ௬; ௧௫ - ௭
(௨௯) ௧௧ - ௨; ௨௩ - ௬
(௩௦) ௮ - ௧௦
(௩௧) ௧ - ௪; ௯
(௩௪) ௧ - ௭; ௧௯ - ௨௪
(௩௫) ௧௫ - ௬; ௨௫-௯;
௩௧ - ௪
(௩௬) ௧ - ௨
(௩௮) ௫ - ௧௮
(௩௯)
(௪௦) ௬ - ௧௧
(௪௧) ௧௨ - ௬
(௪௨ - ௩)
(௪௪) ௧௦ - ௧௬
(௪௫ - ௫௬)
(௫௭) ௧௦ - ௧௧
(௫௮)

(௬௭) ௧௧ - ௪
(௬௮) ௧ - ௪; ௧௧ - ௩
(௬௯) ௫ - ௬
(௭௦) ௬ - ௭
(௭௧ - ௪)
(௮௪) ௧ - ௨
(௮௭)
(௮௯) ௫ - ௯
(௯௦ - ௯௫)
(௧௦௧)
(௧௦௬ - ௭)
(௧௦௯ - ௧௦)
(௧௧௨)
(௧௧௯) ௫ - ௭
(௧௨௧ - ௪)
(௧௨௫) ௭ - ௮
(௧௨௭) ௭ - ௧௦
(௧௨௮) ௫ - ௭
(௧௩௦ - ௩௪)
(௧௩௬) ௨௦ - ௨௨
(௧௩௯) ௫ - ௧௫
(௧௪௦)
(௧௪௧) ௧௦ - ௧௫
(௧௪௨)
(௧௪௮ - ௫௦)
(௧௫௧) ௧௦ - ௧௨
(௧௫௨) ௧ - ௬
(௧௫௩) ௭ - ௧௨
(௧௫௫) ௪ - ௯
(௧௫௬ - ௬௪)
(௧௬௫) ௧௦ - ௧௨

(௧௮௦ - ௬௭)
(௧௯௯)
(௨௦௩ - ௭)
(௨௦௮) ௬ - ௯
(௨௧௪)
(௨௧௫) ௮ - ௯
(௨௧௮)
(௨௨௦ - ௨௨௭)
(௨௩௦) ௧௦ - ௧௬
(௨௩௪ - ௫)
(௨௩௭)
(௨௩௯)
(௨௪௨ - ௩)
(௨௫௧ - ௨)
(௨௬௧)
(௨௭௫ - ௬)
(௨௭௮ - ௯)
(௨௯௪) ௩ - ௪
(௨௯௬)
(௩௧௨)
(௩௨௦) ௧ - ௨
(௩௨௪) ௧௩ - ௪
(௩௨௯) ௫ - ௯
(௩௩௭) ௬ - ௭
(௩௫௬)
(௩௬௭) ௪ - ௫
(௩௭௫) ௧௭ - ௨௧
(௩௭௬) ௧௫
(௩௮௧) ௨௩ - ௭
(௩௮௬) ௨௦ - ௨௫
(௩௮௭) ௧௯ - ௨௭

